# முதலாம் நெப்போலியன்
## (கி.பி. 1769—1821)

ஆசிரியர்

ப. சு. கருப்பையா, எம். ஏ.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# முதலாம் நெப்போலியன்

## (கி.பி. 1769—1821)

ஆசிரியர்

ப. சு. கருப்பையா, எம்.ஏ. (வரலாறு),

எம்.ஏ. (அரசியல்), எம்.ஏ. (ஆங்கிலம்), பி.டி.,

வரலாற்றுப் பேராசிரியர்,

அரசினர் கலைக் கல்லூரி, கரூர்.





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — September, 1972

T.N.T.B.S. (C. P.) No. 359





# NAPOLEON THE FIRST (1769—1824 A.D.

P. S. KARUPPIAH



**Price Rs. 13.75.**



'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

**Printed at :**

**Caxton Press,**

**(C. Coomarasawmy Naidu & Sons,)**

**34, Chinnathambi Street, Madras-1**

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி—உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'முதலாம் நெப்போலியன்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 359ஆவது வெளியீடாகும். இதுவரை 394 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப் படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# உள்ளுறை

பக்கம்

# கால அட்டவணை

கி.பி.

1769 — ஆகஸ்ட், 15 — நெப்போலியனது பிறப்பு.
1779 — பிரைன் பள்ளிப்படிப்பு.
1784 — பாரிஸ் இராணுவப் பள்ளிப்படிப்பு.
1785 — அக்டோபர், 28 — பீரங்கிப் படையின் உதவி அதிகாரி.
1789 — கார்சிகாவுக்குப் பயணமாதல்.
1791 — ஏப்ரல் — வேலென்ஸ் படையின் அதிகாரியாகப் பதவி யேற்றல்.
1791 — அக்டோபர் — கார்சிகா பயணம்.
1792 — கார்சிகாவினின்று நாடு கடத்தப்படல்.
1793 — தௌலான் முற்றுகை.
1794 — பிப்ரவரி — படைப்பகுதித் தளபதி.
1794 — ஆகஸ்ட் — சிறை பிடிக்கப்படுதல்.
1795 — அக்டோபர் — பாரிஸ் கலகத்தை அடக்குதல்.
1795 — அக்டோபர் உள்நாட்டுப் படையின் தளபதியாகப் பதவி ஏற்றல்.
1796 — மார்ச், 2, — இத்தாலியப் படையின் தளபதியாக நிய மிக்கப்படல்.
1796 — மார்ச், 6, — நெப்போலியன் — ஜோசபைன் திருமணம்.
1796 — 97 — மிலெசிம்மோ, கேஸ்டிக்கிளியன், ஆர்கோலா, ரிவோலி, மாண்டுவா ஆகியகளங்களின் வெற்றிகள்.
1797 — அக்டோபர், 17 கேம்போ ஃபோர்மியோ உடன்பாடு.
1798 — மே — பாரிஸ் நகரில் பணிபுரிதல்.
1798 — மே, 19 — எகிப்துப் பயணம்.
1798 — ஜூலை — பிரமிடுகள் போர்.
1799 — அக்டோபர், 7 — ஃபிரான்சு வந்தடைதல்.
1799 — டிசம்பர், 24 — முதல் கான்சல்.
1800 — ஜூன், 14 — மாரெங்கோ வெற்றி.
1801 — பிப்ரவரி, 9 — லூன்வில் உடன்பாடு.
1801 — ஜூலை, 15 — போப் ஏழாம் பயசுடன் ஒற்றுமைப்பத் திரம்.
1802 — இங்கிலாந்துடன் அமைதி உடன்பாடு.
1802 — ஆகஸ்ட், 4 — வாழ்நாள் முழுதும் கான்சல்.
1804 — மார்ச், 21 — டியெங்கியன் கோமகன் படுகொலை.
1804 — டிசம்பர், 2 — பேரரசராக முடிசூட்டப்படல்.
1805 — அக்டோபர், 21 — டிராபல்கர் களம்.
1805 — நவம்பர் — வியென்னு பிடிபடல்.

1805 — டிசம்பர், 2 — ஆஸ்டர்லிட்ச் வெற்றி.
1805 — பிரஸ்பர்க் உடன்பாடு.
1805 — இரைன் நதி நாடுகளின் கூட்டிணேவு.
1806 — ஜோசப், நேப்பிள்ஸ் மன்னராதல்.
1806 — லூயி ஆலந்து மன்னராதல்.
1806 — அக்டோபர், 14 — ஜீனு (Jena)க்களம்.
1806 — நவம்பர், 26 — கண்டத்திட்டம்.
1807 — ஜூன், 7 — டில்சிட் உடன்பாடு.
1807 — ஜெரோம் (Jerome) வெஸ்ட்பேலியா மன்னராதல்.
1808 — ஜோசப் ஸ்பெயின் மன்னராதல்.
1808 — முராட் நோபிள்ஸ் மன்னராதல்.
1809 — வேக்ரம், வியன்ன சண்டைகள்.
1810 — ஜனவரி — ஜோசபைன் திருமண விலக்கு.
1810 — ஏப்ரல் — நெப்போலியன் — மரியலூயிசா — திருமணம்.
1811 — மார்ச், 20 — நெப்போலியனது மகன் — பிறப்பு.
1812 — இரஷ்யப் படையெடுப்பு.
1812 — டிசம்பர், பாரிஸ் திரும்புதல்.
1813 — ஏப்ரல் — லூட்சன், பாட்சன் போர்கள்.
1813 — ஜூலை — டிரெஸ்டென் போர்.
1813 — அக்டோபர் 16, 17, 18 — லிப்சிச் போர்.
1814 — ஏப்ரல், 6 — பேரரசர் பதவி இழத்தல்.
1814 — ஏப்ரல், 20 — எல்பா செல்லல்.
1815 — பிப்ரவரி, 26 — எல்பாவிலிருந்து திரும்புதல்.
1815 — மார்ச், 20 — பாரிஸ் வந்தடைதல்.
1815 — ஜூன், 18 — வாட்டர்லூ போர்
1815 — ஜூன், 23 — இரண்டாம் முறை பதவி இழப்பு.
1815 — ஜூலை, 31 — நெப்போலியன் சிறைக்கைதி—யாக அறிவிக்கப்படுதல்.
1815 — அக்டோபர், 17 — செயின்ட் கெலினு வந்தடைதல்.
1821 — மே, 5 — இயற்கையெய்துதல்.
1832 — ஜூலை, 29 — நெப்போலியனது மகன் இறப்பு.
1833 — ஜூன், 30 — பேரரசரின் உருவச்சிலை நிறுவல்.
1840 — மே, 9—'பேரரசர் நெப்போலியன்' என்ற—பட்டத்தை இங்கிலாந்து அங்கீகரித்தல்.
1840 — அக்டோபர், 15 — பேரரசரின் உடல் தோண்டி எடுக்கப்படல்.
1840 — அக்டோபர், 18, பேரரசரின் உடல் செயின் கெலினுவை விட்டு எடுத்துச் செல்லப்படல்.
1840 — டிசம்பர், 15—ஃபாரிசருகே சீன் நதிக்கரையில் பேரரசர் நெப்போலியனின் உடல் அடக்கம் செய்யப்படல்,

# 1. சூழ்நிலைகள்

உலக வரலாற்றை உருவாக்கிய உன்னத நிகழ்ச்சிகளின் கோவையில் முன்னணியில் நிற்பது ஃபிரெஞ்சுப் புரட்சியாகும். அப் புரட்சி தோன்றியவுடனே, ' ஐரோப்பாவின் வரலாறு ஒரே ஒரு நாட்டின் வரலாற்றுடனும், ஒரே ஒரு நிகழ்ச்சியுடனும், ஒரே ஒரு மனிதனுடைய வரலாற்றுடனும் இரண்டறக் கலந்து விடுகின்றது. அந்த ஒரே ஒரு நாடுதான் ஃபிரான்சு ; அந்த ஒரே ஒரு நிகழ்ச்சிதான் ஃபிரெஞ்சுப் புரட்சி ; அந்த ஒரே ஒரு மனிதன் தான் நெப்போலியன்.' மக்களின் அடிப்படை உரிமைகளை நிலை நாட்டவும், மக்களாட்சியின் மகத்தான நெறிமுறைகளைப் பேணிக் காக்கவும், மமதைமிக்க மன்னர்களின் கொடுங்கோலாட்சியை மாய்க்கவும், மக்களால் நடாத்தப்பெற்ற மாபெரும் புரட்சிதான் ஃபிரெஞ்சுப் புரட்சி. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவையே அப் பெரும் புரட்சியின் முக்கிய முழக்கங்களாகும். 'புரட்சிக் கருத்துகளின் காவலன்', 'புரட்சியின் குழந்தை', 'புரட்சி யின் வாரிசு' என்றெல்லாம் போற்றப்படும் நெப்போலியனின் வரலாற்றை வரைவதற்குமுன் அந்த மாவீரனை உருவாக்கிய சூழ் நிலைகளையும், அவன் பிறப்பின்போழ்து ஐரோப்பாவின் அரசியல் நிலையினையும் ஈண்டு ஆய்தல் அவசியமாகும்.

பொதுவாக, பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஐரோப்பாவின் அரசுகளனைத்தும் உயர்குடிமக்களின் நலன் கருதிய அமைப்புகளாகும். முடியரசாயினும், குடியரசாயினும் மேட்டுக் குடியினரின் மேன்மைக்காகவே அமைந்திருந்தன. பாமரமக்களின் நலனில் அவை நாட்டங்கொள்ளவில்லை. மக்களிடம் இறைமை அதிகாரம் இடம்பெற்றிருக்கவில்லை. நாட்டின் நிர்வாகத்தில் மக்கள் உரிய பங்கினை வகிக்கவில்லை. புகழ்பெற்ற குடியரசுகள் என்று கருதப்பட்ட வெனிஸ், சுவிட்சர்லாந்து அரசுகளிலும் அதி காரம், பணபலமிக்க ஒரு குழுவின் பிடியில் சிக்கியிருந்தது. வலிமை மிக்க பாராளுமன்றத்தைப் பெற்றிருந்த இங்கிலாந்திலும் இறைமை அதிகாரம் மக்களிடத்தில் இல்லை. மாறாக, நிலப்

பிரபுக்களிடமிருந்தது. இரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா, ஃபிரான்சு, ஸ்பெயின், போலந்து போன்ற ஏனைய ஐரோப்பிய நாடுகளிலும் உயர்குடியினரின் நலன் கருதிய மன்னராட்சி களே அமைந்திருந்தன. மக்கள் பெரும்பாலும் உரிமையற்றவர் களாகவே வாழ்ந்தனர். ஐரோப்பாவில் பண்ணையாள் அடிமை முறையும், கொத்தடிமைத்தனமும் குடிகொண்டிருந்தன.

'இனி இந்த உலகையாள யார் இருக்கின்றார்?' என்று வருந் திக் கூறினான் உழவன் ஒருவன், பிரஷ்யநாட்டு மாமன்னர் ஃபிர டெரிக் இறந்த நேரத்தில். நாற்பத்தாறு ஆண்டுகாலம் ஐரோப்பிய அரசியலரங்கில் தன்னிகரற்று விளங்கிய ஃபிரடெரிக், உணர்வுஒளிர் வல்லரசர்களில் (**Enlightened Despots**) மிகவும் போற்றிப் புகழப் படுகின்றவர். அவரது உணர்வு ஒளிர் வல்லரசுக் கோட்பாட்டின் வழிமுறைகளைப் போற்றிப் புகழ்ந்து ஏற்றுப் பின்பற்றிய ஐரோப் பிய மன்னர்கள் பலராவர். அவர் தம்மை 'அரசின் முதல் பணி யாள்' என்று அறிமுகப்படுத்தியவர். அவர் ஃபிரெஞ்சுப் புரட்சி தோன்றுவதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன் இயற்கையெய்தினார். அப்போது பிரஷ்ய நாட்டின் அளவு இரண்டு மடங்காக உயர்ந் திருந்தது. அத்தகைய சிறப்பு வாய்ந்த பெருமன்னர் ஃபிரடெரிக் கூட அரசியலில் நேர்மை, நாணயம், ஒழுக்கம் ஆகியவற்றைப் புறக்கணித்தார். நாடுபிடிக்கும் ஆசையால் உந்தப்பட்ட அவர் அரசியலில் ஒழுக்கக் கேடராக, வாக்குத் தவறியவராகக் கருதப் படுகின்றார். ஏனெனில் ஆஸ்திரியப் பேரரசர், ஆறாம் சார்லஸ் அவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியைப் புறக்கணித்து அவரு டைய மகள் மரியதெரசா ஆஸ்திரிய நாட்டு அரியணை யேறியவுட னேயே, அவருக்குச் சொந்தமான சைலீசியாவைத் தம் நாட்டுடன் இணைத்துக் கொண்டார். 'நேர்மையின் மூலம் அரசியலில் இலாபம் கிடைக்குமாயின், நாம் நேர்மையாளர்களாக இருப்போம்; நேர் மை தவறி, ஏமாற்றுவதன் மூலம் அரசியலில் ஆதாயம் கிடைக் மானால் நாம் நேர்மை குன்றியவர்களாக மாறுவது அவசியமே' என்று அவர் வலியுறுத்தியுள்ளார். அகிலமெல்லாம் கட்டியாள வேண்டும் என்ற ஆசையால் வலிய நாடுகள் எளிய நாடுகளின் மீது பாய்ந்து தாக்குதலும் அடிக்கடி ஐரோப்பாவில் நிகழ்வதுண்டு. இரஷ்யா, பிரஷ்யா ஆஸ்திரியா ஆகிய பெருநாடுகள் போலந்து நாட்டைக் கூறுபோட்டு அழித்தொழிக்கச் சதிசெய்தன. சிறு நாடுகளைப் பெருநாடுகள் இணைத்துக்கொள்ளுகின்ற வேளைகளில் சிறு நாடுகளின் இன உணர்வுக்கோ, தேசிய எல்லைகளுக்கோ மதிப் பளிப்பதில்லை.

ஐரோப்பிய அரசியலரங்கில் முதலிடம் பெற்றுத் திகழும் வகையில் ஐரோப்பிய நாடுகள் ஒன்றோடொன்று மோதிக்கொள்

ளத் தலைப்பட்டன. ஜெர்மனி 360 தன்னாட்சி பெற்ற நாடுகளாகப் பிரிந்திருந்தது. அந்த நாடுகளின் இணைப்பாக இருந்த ஒரே அமைப்பு புனித ரோமானியப் பேரரசாகும். ஆனால், அந்த அமைப்பு ஜெர்மானிய ஒற்றுமையை நிலைநாட்டும் வகையில் பயனுள்ள பணிகளை ஆற்றும் வலிவினைப் பெற்றிருக்கவில்லை. புனித ரோமானியப் பேரரசராக ஆஸ்திரிய நாட்டுப் பேரரசரே பல நூற்றாண்டுகளாக இருந்துவந்தார். வால்டேர் குறிப்பிடுவதைப் போல 'புனித ரோமானியப் பேரரசில், புனிதத்தன்மையோ, ரோமானியத் தன்மையோ, பேரரசுத்தன்மையோ இல்லை.' ஜெர்மனியின் பகைநாடுகளான ஆஸ்திரியாவும் பிரஷ்யாவும் ஜெர்மானிய அரசியலில் ஆதிக்கம் செலுத்திவந்தன.

இரஷ்யாவில் பேரரசி கேதரைன் சிறந்த உணர்வு ஒளிர் வல்லரசியாகப் பணியாற்றினார். பெரும் பீட்டரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி இரஷ்யாவைச் சிறந்த வலிமைமிக்க நாடாக்க அயராது உழைத்தார். அவரது ஆட்சியில் இரஷ்யா ஒவ்வொரு துறையிலும் பீடுநடை போட்டது. 1795 ஆம் ஆண்டு ஏற்பட்ட போலந்துப் பிரிவினையில் பிரஷ்யா, ஆஸ்திரியா நாடுகளைவிட இரஷ்யா அதிக அளவு பங்கினைப் பெற்றது. 'நான் ஓர் ஏழைச் சிறுமியாக இரஷ்யாவிற்கு வந்தேன் ; இரஷ்யா எனக்கு விலையுயர்ந்த சீதனப்பொருள்களை நல்கியது. ஆனால், நான் கைம்மாறாக அஜாவ், கிரிமியா, உக்கிரைன் ஆகியவற்றை இரஷ்யாவிற்குத் தேடித்தந்தேன்' என்ற பேரரசியாரின் கூற்று அவரது சாதனையின் சிறந்த படப்பிடிப்பு. இருப்பினும், அவரது ஆட்சியில் மக்கள் எவ்வித உரிமையும் பெற்று வாழவில்லை. அடக்குமுறை அவரது ஆட்சியி லதிகம். அரசியாரின் சொல்லே ஆட்சியின் சட்டம்.

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கிலாந்தில் பாராளுமன்றம் வலிமைபெற்று விளங்கியது. காபினெட் ஆட்சி முறையும் ஒரு நிலையான இடத்தினைப் பெற்றுத் திகழ்ந்தது. அனோவரியன் மரபில் தோன்றிய மூன்றாம் ஜார்ஜ் மன்னராக 1760 முதல் 1820 வரை பணியாற்றினார். அவரது காலத்தில் அமெரிக்க விடுதலைப் போர் மூண்டது. அதன் பயனாக அமெரிக்கா ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்து விடுபெற்றுத் தனிச் சுதந்திர நாடாக ஆயிற்று. 1789-ல் ஃபிரெஞ்சுப் புரட்சி தோன்றியபோது இளைய பிட் என்பவர் இங்கிலாந்தின் சிறந்த பிரதமராகப் பணியாற்றினார். தொழிற் புரட்சியும் வேளாண்மைப் புரட்சியும் இக்காலத்தில் இங்கிலாந்தில் தோன்றின. அவற்றின் பயனாக இங்கிலாந்து ஒவ்வொரு துறையிலும் மகத்தான வளர்ச்சியைப் பெற்று முன்னேற்றப் பாதையில் சென்றுகொண்டிருந்தது. உலகத்தின் பட்டறை என்று வழங்கப்பெற்ற இங்கிலாந்து ஐரோப்

பாவில் தொழில்துறையிலும், உழவுத்துறையிலும் முதலிடம் வகித்தது. ஃபிரான்சு நாட்டை ஒவ்வொரு துறையிலும் எதிர்த்து வீழ்த்தும் ஆற்றலை இங்கிலாந்து பெற்றிருந்தது.

ஆஸ்திரிய அங்கேரியை ஆப்ஸ்பர்க் (Habsburg) மரபினைச் சார்ந்த மன்னர்கள் ஆண்டு வந்தனர். ஆஸ்திரியப் பேரரசரே, புனித ரோமானியப் பேரரசருமாவார். இனத்தால், சமயத்தால், மொழியால் வேறுபட்ட பல்வேறு மக்கள் அங்கு வாழ்ந்துவந்த காரணத்தால் ஆஸ்திரியாவில் ஒற்றுமையும் ஒருமைப்பாடும் நீடித்து நிலைபெற்றிருக்கவில்லை. இருப்பினும் மரியதெரசா அந் நாட்டினைச் சிறப்பாக ஆண்டுவந்தார். அவரது திறமைமிக்க ஆட்சியில் ஆஸ்திரியாவின் புகழ் ஓங்கியது. அவரது படைத்துறைச் சீர்திருத்தம் பலராலும் இன்றும் பாராட்டப்படுவதாகும். ஆனால், அவர் தம்நாட்டின் சிறந்த செழிப்பான பகுதியாகிய சைலீசியாவை நிரந்தரமாக இழந்தார். பிரஷ்யாவிடமிருந்து அதனை மீண்டும் பெற அவர் எடுத்துக்கொண்ட முயற்சிகள் பலிக்கவில்லை. 1780-ல் அரசியார் இறந்தவுடன் அவரது மகன் இரண்டாம் ஜோசப் ஆஸ்திரிய மன்னரானார். அவரே 1765 முதல் புனித ரோமானியப் பேரரசர். இரண்டாம் ஜோசப் சிறந்த மேதை ; நாட்டு மக்களின் நலனில் நாட்டங் கொண்டவர் ; அயராது நாட்டுக்குழைப்பதில் வல்லவர். இனத்தால், மொழியால், சமயத்தால் பிளவுபட்டிருந்த ஆஸ்திரியாவைத் தேசிய அடிப்படையில் ஒரே நாடாக்கும் பணி யினை அவர் மேற்கொண்டார். தமது பேரரசைப் பதின்மூன்று மாநிலங்களாகப் பிரித்து ஒவ்வொன்றையும் ஒரு படைத்தளபதி யின் பொறுப்பில் ஒப்படைத்தார். மாநிலங்களில் ஒரே மாதிரியான நிர்வாக முறை கடைப்பிடிக்கப்பட்டது. பேரரசு முழுமைக்கும் ஜெர்மன் மொழியே ஆட்சிமொழியாக அறிவிக்கப்பட்டது. ஊழல் மலிந்திருந்த நீதித்துறையைச் சீர்திருத்தியமைத்தார். நாடு முழுமைக்கும் ஒரே மாதிரியான சட்டத்தொகுப்பு நடை முறைக்கு வந்தது. நாட்டு மக்களுக்கும் நல்ல பல உரிமைகள் வழங்கப்பட்டன. சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்று அறிவிக்கப்பட்டது. பேச்சுரிமை, எழுத்துரிமை போன்ற பல்வேறு உரிமைகளும் வழங்கப்பட்டன. சமயச் சகிப்புத் தன்மை பெரிதும் வலியுறுத்தப்பட்டது. பள்ளிகள் பல திறக்கப்பட்டன. கல்வித்துறையில் சமயவாதிகளின் பிடி தளர்த்தப்பட்டது. உயர் குடியினரின் சலுகைகளும் ஒழிக்கப்பட்டன. சமயக் குழுக்களின் தனிச் சலுகைகளும் குறைக்கப்பட்டன. நிலவுடைமையாளர் அனைவருக்கும் ஒரே சீரான வரி விதிக்கப்பட்டது. சமயத்துறை யில் போப்பின் கட்டுப்பாட்டைத் தளர்த்தித் திருச்சபையை அரசின் பிடியில் கொண்டுவர ஜோசப் பெருமுயற்சி மேற்

கொண்டார். மேலும், தமது பேரரசில் கொத்தடிமை (serfdom) முறையை முற்றிலும் ஒழித்தார். ஆனால், அவரது சிறந்த சீர்திருத்தங்களுக்கு ஒவ்வொரு முனையிலும் எதிர்ப்புக் கிளம்பியது. உயர்குடியினர், சமயவாதிகள், சலுகைகள் பெற்று வாழ்ந்தோர் ஆகிய அத்தனை பேரும் எதிர்க்கத் தலைப்பட்டனர். எந்தப் பாமர மக்களின் நன்மைக்காக நல்ல பல திட்டங்கள் அறிமுகப்படுத்தப் பட்டனவோ அந்த மக்களையும் கிளர்ச்சிக்குத் தூண்டினர் அவரது உழைப்பை உறிஞ்சி வாழும் உலுத்தர்கள். எதிர்ப்புகளுக்கு ஈடுகொடுக்க இயலாத காரணத்தால் மன்னர் தாம் கொண்டு வந்த நல்ல சீர்திருத்தங்களை யெல்லாம் தள்ளுபடி செய்தார். 'மழையைக் கொடுக்கும் மேகத்தைக் கண்டு உழவன் மகிழ்ச்சி கொள்ளுகின்றான்; ஆனால், அதைக் கண்டு கூத்தாடி கோபம் கொள்ளுகின்றான்,' என்றார் அறிஞர் அண்ணா. ஆஸ்திரிய நாட்டு மக்களுக்கு மேகமாகத் திகழ்ந்தார் ஜோசப். அவரைக் கண்டு அந் நாட்டு மக்கள் ஆனந்தம் கொண்டனர். ஆனால், அந்த நாட்டின் கூத்தாடிகளான பிரபுக்களும், சமயவாதிகளும், வணிகக் கோமான் களும் அவரைக்கண்டு கோபங்கொண்டனர். அன்றியும், பாமர மக் களின் மகிழ்ச்சியிலும் மண்தூவினர். அந் நாட்டுப் பாமரமக்கள் மன்னனின் நல்ல உள்ளத்தைப் புரிந்துகொள்ளும் மனவளத்தைப் பெற்றிருக்கவில்லை. மாமன்னர் இரண்டாம் ஜோசப் குறிப்பிடு வதைப் போல 'இதோ ஓர் இளவரசன்; அவன் தனது சிறந்த மக்கள் நலன் கருதிய திட்டங்கள் அனைத்திலும் தோல்வியைத் தொட்டணைத்துக் கொண்டான்.' ஆஸ்திரியப் பேரரசு ஃபிரெஞ் சுப் புரட்சியின் போழ்து ஆழ்ந்த கிளர்ச்சிகளால் புளித்துப் பொங் கும் நிலையினைப் பெற்றிருந்தது.

இத்தாலி, நெப்போலியன் பிறந்தபோது ஒரு வெறும் நிலநூல் சொல்லாகவே (Geographical expression) இருந்தது. அது பல நாடு களாகப் பிளவுண்டு வலிமை குன்றியிருந்தது. ஸ்பெயின் நாட்டின் ஆதிக்கம் அங்கு வலிமைபெற்று விளங்கியது. ஆனால், ஸ்பானிய வாரிசுரிமைச் சண்டைக்குப்பின் ஸ்பானிய ஆதிக்கம் இத்தாலியில் ஒழிந்து, ஆஸ்திரியாவின் செல்வாக்கு மலர்ந்தது. இத்தாலிய நாடுகள் பல நேரடியாகவோ, மறைமுகமாகவோ ஆஸ்திரியா வின் கட்டுப்பாட்டிற்குள்ளாயின. இருப்பினும், சார்டினியாவும் இத்தாலியில் தன் செல்வாக்கை நிலைநாட்டும் வகையில் முனைந்து நின்றது. வருங்காலத்தில் இத்தாலிய இணைப்புக்குத் தேவையான வலிவினைப் பெற்றுத்திகழ அது தன்னைப் பல வகையிலும் பக்குவப் படுத்தியது. அன்றியும், 18 ஆம் நூற்றாண்டின் இறுதியில் இத்தாலியை நெப்போலியன் வென்று இணைப்பதற்கான சூழ்நிலை கள் பல அங்கு உருவாகத் தொடங்கின.

'எனதருமைக் குழந்தாய்! அண்டை நாட்டவர்களுடன் நட்புறவு கொண்டு அமைதியாக வாழ்வதற்கு முயற்சி செய். நான் போரில் விரும்பிப்பெற்றிருந்த நாட்டத்தையோ, நான் மேற் கொண்ட ஊதாரிச் செலவுகளையோ நீ கிஞ்சித்தும் கடைப்பிடிக்க வேண்டாம். வாய்ப்புக்கேடாக, மக்களின் நலன் கருதி நான் சாதிக்க இயலாததை நீ விரைவில் செய்துமுடித்து மக்களை விடு விக்க முயற்சியினை மேற்கொள்.' உலகப்புகழ்பெற்ற ஃபிரான்சின் உணர்வு ஒளிர்வல்லரசர் பதினன்காம் லூயி, மரணப்படுக்கையில், தமக்குப்பின் ஃபிரான்சின் ஆட்சிப்பொறுப்பை ஏற்கும் தமது அருமைப்பேரன் பதினைந்தாம் லூயிக்குக் கூறிய அறிவுரைகளே மேலே கண்டவை. பதினன்காம் லூயி இறந்தபோழ்து அவர் மேற்கொண்ட பொருளற்ற சண்டைகளின் விளைவாக ஃபிரெஞ்சுக் கருவூலம் காலியாயிற்று. ஃபிரான்சு பெரும் பொருளாதார நெருக் கடிக் குள்ளாகித் திவாலாகும் நிலையிலிருந்தது. ஆனல், ஃபிரான் சின் பொருளாதார நெருக்கடியைப் போக்கி நாட்டு மக்களின் வாட்டம் போக்கிட முன்வந்தாரில்லை பதினைந்தாம் லூயி. அவரது பாட்டன் அவருக்குக் கூறிய அறிவுரையும் செவிடன் காதில் ஊதிய சங்கு போலாயிற்று. அவரும் தொடர்ந்து பல சண்டைகளை மேற்கொண்டதாலும், ஆடம்பரச்செலவுகளை அதிகப்படுத்தியதாலும் ஃபிரான்சின் நிலை மேலும் மோசமாயிற்று. ஃபிரான்சைக் காப்பாற்ற முடியாத நிலையில் 'எனக்குப்பின் ஃபிரான்சில் பெரும்பிரளயம் ஏற்படும்' என்று அவர் அடிக்கடி கூறுவதுண்டு.

ஃபிரான்சு நாட்டு மன்னர்கள் அதிகாரங்கள் அத்தனையும் பெற்றிருந்தும் நாட்டு மக்களின் நலனில் கவனம் செலுத்தவில்லை. அரச குடும்பத்தினரும், பிரபுக்களும், சமயத்தலைவர்களும் சலுகை கள் பல பெற்று உல்லாசபுரியில் உலா வந்தனர். ஏழை, நடுத்தர மக்கள் அவர்களால் ஏளனம் செய்யப்பட்டனர். மன்னர் களின் பார்வையும் அப் பாமர மக்கள்மீது பாய்வதுமில்லை. ஆட்சியில் நீதி, நேர்மை நிலைநாட்டப்படவில்லை. மக்களுக்காக மன்னன் என்ற நிலைமாறி மன்னர்களுக்காக மக்கள் என்ற நிலை பிறந்தது. மன்னரின் அவையே ஆடம்பரத்தின் சிகரமாக, ஏழை மக்களின் எலும்பால் கட்டப்பட்ட கோட்டையாகத் திகழ்ந்தது. வெர்சாயி (Versailles) அவையில் 18,000 பேர் பணியாற்றினர். அவர்களில் மன்னருக்கும் அவரது குடும்பத்தினருக்கும் மட்டும் பணியாற்றியவர் தொகை பதினறுயிரம். எஞ்சிய இரண்டாயிரம் பேர் அவையினர் என்ற செல்வாக்கினைப் பெற்று மன்னனின் துதி பாடி அவனிடமிருந்து அதிகச் சலுகைகளைப் பெற்று ஆடம்பர மாக வாழ்ந்தனர். அரண்மனைவாசிகள் அத்தனை பேரும் தங்களை ஆண்டவனின் செல்லக் குழந்தைகள் என எண்ணி ஆடம்பரத்தில்

திளைத்திருந்தனர். அரசகுடும்பத்தினர் பலரும் தங்களுக்கெனத் தனித்தனியே அரண்மனை, நிலம், பணியாள் போன்றவற்றைப் பெற்று இன்பமாக வாழ்ந்தனர். அரசியாருக்குப் பணிபுரிய மட்டும் ஐந்நூறு பேர். அரசரின் ஆடம்பர மேசைமட்டும் பதினைந்து லட்சம் டாலர் விலைமதிப்புள்ளது.

ஊழல் மிகுந்த ஃபிரான்சு நாட்டின் நிர்வாக இயந்திரமும் பெரிதும் பாழ்பட்டிருந்தது. நிர்வாகத்தின் பல்வேறு கூறுகளின் சட்டதிட்டங்கள் தெளிவுபடுத்தப்படவில்லை. நிர்வாகத்தின் பல்வேறு அமைப்புகளின் அதிகார வரம்புகளும் வரையறுத்துச் செயல்படவில்லை. நிர்வாக வசதிக்காகச் செய்யப்பட்டிருந்த நிலப்பிரிவுகளும் குழப்பம் நிறைந்து காணப்பட்டன. நிர்வாகத்தின் பல்வேறு பிரிவுகளின் மோதல்கள் தவிர்க்க முடியாதவையாகின. அதிகார வரம்புகள் தெளிவுபடுத்தப்படாத காரணத்தால் மக்கள் மேலும் மேலும் அவதிக்குள்ளாயினர்.

ஃபிரான்சு நாட்டின் சட்டத்துறையும் குழப்பம் நிறைந்து காணப்பட்டது. நாடு முழுமைக்கும் ஒரே சீரான சட்டம் நடைமுறையிலில்லை. சில இடங்களில் ஜெர்மானியச் சட்டம் நடைமுறையிலிருந்தது. வேறு சில பகுதிகளில் ரோமானியச் சட்டம் கடைப்பிடிக்கப்பட்டது. நானூறுக்கு மேற்பட்ட சட்ட முறைகள் நாட்டில் நடைமுறையிலிருந்தனவாகக் கருதப்படுகின்றது. சட்டங்களும் மக்களுக்குப் புரியாத இலத்தீன் மொழியில் எழுதப்பட்டிருந்த காரணத்தால் சட்டத்தின் பயனை மக்கள் முழுதும் பெற முடியவில்லை. சட்டம் கடுமையானதாகவும் அநீதி மிக்கதாகவும் இருந்தது. சாதாரணக் குற்றங்களுக்கும் கொடிய தண்டனைகள் வழங்கப்பட்டன. கசையடி, உடலுறுப்புகளை வெட்டிக்களைதல் போன்ற தண்டனைகள் நடைமுறையிலிருந்தன. காரணமின்றி எவரையும் சிறைப்பிடித்துக் காவலில் வைப்பதுண்டு. நீதிமன்றங்களிலும் ஊழல்கள் மலிந்து காணப்பட்டன. பல்வேறு நீதிமன்றங்களின் அதிகார வரம்புகள் வரையறுக்கப்படாததால் குழப்பங்கள் மேலிட்டன.

வரித்துறையிலும் குறைபாடுகள் மலிந்திருந்தன. வரி போடுகின்ற முறை முற்றிலும் கண்டிக்கத்தக்கது. பிரபுக்கள், மதகுருமார்கள் ஆகியோர் வரிவிலக்குப் பெற்றிருந்தனர். ஆகவே, வரிச்சுமை முழுதும் வசதியும் சலுகையுமற்ற பாமர மக்களின்மீது விழுந்தது. 'பிரபுக்களின் கடன் போரிடுதல், சமயக் குருக்களின் கடன் இறைவழிபாடுசெய்தல், மக்களின் கடன் வரி செலுத்துதல்' என்ற கூற்று முற்றிலும் பொருந்துவதாயிற்று. வரி வசூலிக்கின்ற முறையும் கொடுமை நிறைந்ததாக இருந்தது. வரி

வசூலிக்கின்ற உரிமையைக் குத்தகைக்காரர்கள் பெற்றிருந்த காரணத்தால் அவர்கள் குறிப்பிட்ட தொகையை அரசுக்குச் செலுத்திவிட்டு அதைவிட அதிகமான தொகையை மக்களிடம் கண்டித்து வசூலித்தனர். இம் முறையால் அரசுக்கு எவ்வித இலாபமும் இல்லை; மேலும் ஏழைமக்கள் வரிச்சுமையால் மிகவும் வருந்தினர்.

ஐரோப்பியச் சமுதாய அமைப்பும் பெரிதும் குறைபாடுடையதாயிருந்தது. சமுதாயத்தில் சலுகைகள் பல பெற்று வாழ்ந்தனர் உயர்குடிமக்கள். அவர்கள் பல இடங்களில் முற்றிலும் வரிவிலக்குப் பெற்று வாழ்ந்தனர். சில இடங்களில் மிகக் குறைந்த அளவு வரிமட்டும் கட்டினர். சலுகையற்ற ஏழை நடுத்தரமக்கள் வரிச்சுமையால் பெரிதும் பாதிக்கப்பட்டனர். ஐரோப்பிய சமுதாயம் நிலமானிய முறை அடிப்படையில் அமைந்திருந்தது. எனவே, நிலக்கிழார்கள் தங்கள் பகுதிகளில் எல்லா வசதிகளையும் அதிகாரங்களையும் பெற்றுக் குறுநில மன்னர்களாகக் காட்சியளித்தனர். நிலமற்ற ஏழை உழவர்களின் உழைப்பால் அவர்கள் உல்லாச வாழ்வு நடாத்தினர். உழவர்களின் உற்பத்தியின் பெரும் பகுதி நிலப்பிரபுக்களின் ஊதாரிச் செலவுக்கே பயன்பட்டது. பண்ணையாள்கள் பயங்கர வறுமையில் வாடினர். அன்றைய சமுதாயத்தில் பெரும்பகுதியினர் ஏழைகள். அவர்களிடத்தில் மகிழ்ச்சிக்கு வழியில்லை, மனவேதனையைத் தவிர; விடுதலை நினைப்பிருந்தும் விடுபட இயலாதவர்கள்; ஆண்டைகளைக் காக்கும் ஆற்றல்களைப் பெற்றிருந்தும் தங்களைப் பாதுகாக்க முடியாதவர்கள்; மேட்டுக் குடியினரின் வளர்ச்சிக்கு வழிவகுத்துத் தங்கள் வளர்ச்சிக்குத் தடை போட்டவர்கள்; அவர்களது வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் தேவையான வாய்ப்புக்கதவுகள் அனைத்தும் மூடப்பட்டேயிருந்தன. ஏற்றத்தாழ்வு எங்கணும் தலைவிரித்தாடி சமுதாய அமைப்பையே ஆட்டங்காணச் செய்தது. ஆனால் அந்த அழுத்தப்பட்ட, நசுக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்களிடம் விழிப்புணர்ச்சி ஏற்படும்வரை உயர்குடியினர் அவர்களது உழைப்பைச் சுரண்டி வாழ்ந்தனர்.

ஃபிரெஞ்சு சமுதாய அமைப்பும் ஏற்றத்தாழ்வின் அடிப்படையிலேயே அமைந்திருந்தது. ஃபிரெஞ்சு சமுதாயம் சலுகைகளைப் பெற்றோர், சலுகைகள் பெறாதோர் என இரு பிரிவுகளாக இருந்தது. அரச குடும்பத்தினர், பிரபுக்கள், சமயக் குருமார்கள் ஆகியோர் சலுகை பெற்ற உயர்குடியில் இடம் பெற்றனர். அவர்கள் மிகச் சிறுபான்மையினர். ஃபிரான்சு நாட்டின் மக்கள் தொகை இரண்டு கோடியே ஐம்பது லட்சம். இதில் பிரபுக்கள் தொகை ஓர் இலட்சத்து ஐம்பதினாயிரம். அன்றைய ஃபிரான்சின்

மொத்த மக்கள்தொகையில் ஒரு விழுக்காடு கூட இல்லாத அவர்கள் தொண்ணூற்றென்பது விழுக்காடு மக்களை ஆட்டிப் படைத்தார்கள். ஃபிரான்சு நாட்டின் மொத்தச் சொத்தில் ஐந்தில் இரண்டு பங்கு அவர்களிடமிருந்தது. அரசாங்கப் பதவிகள், படைத்துறை, திருச்சபைப் பதவிகள் அனைத்திலும் அவர்களே ஏகபோகத் தன்னுரிமைபெற்று விளங்கினர். சாமானியர்கள் அவர்களைக் கண்ட நேரத்தில் வணக்கம் செலுத்தவேண்டும். அவர்கள் பெரும் நிலப்பகுதிகளையும் பிற சொத்துகளையும் பெற்று வசதியோடு வாழ்ந்தனர். ஒவ்வொரு பிரபுவும் கோட்டை கொத்தளங்கள், மாடமாளிகைகளுடன், வரிவசூலுக்குத் தேவை யான பெரும் நிலப்பகுதிகளையும் பெற்றிருந்தார். ஆண்டவனின் புகழ்பாடி அவர்வழி நின்று மக்களை நல்வழிப்படுத்தும் பணியை மேற்கொண்ட சமயக் குருக்களோ ஆடம்பரத்தின் உச்சிக்கே சென்றுவிட்டனர். பணத்தில், படாடோபத்தில், சொத்தில், சுகபோகத்தில், அதிகாரத்தில், ஆடம்பரத்தில், உலகியல் வாழ் வினை மேற்கொண்டவர்களையும் மிஞ்சிச்சொகுசு வாழ்வை அவர்கள் நடாத்தினர். அலங்காரக் கோவில்கள், அழகு நிறை அரண்மனைகள், ஒய்யாரக் கோட்டைகள், ஒளி சிந்தும் வண்ணப்படங்கள், தங்கக் குடுக்கைகள், தளிர் மேனியை அலங்கரிக்கும் பாலாடை யன்ன துகில்கள் — அத்தனையும் பெற்று ஆண்டவனின் அருட்குழந்தை களாக அவர்கள் ஆதிக்கம் செலுத்தினர். வளமான வாழ்க் கைக்கு மேலும் மெருகூட்ட வசூலித்தனர் டைத் (**Tithe**) என்ற வரியும். ஆண்டு ஒன்றுக்கு மூன்று இலட்சம் டாலர்கள் வருமானம் பெற்றிருந்தார் ஸ்டிராஸ்பர்க் அதிமேற்றிராணியார் (**Archibishop-of Strarsburg**). அவருடைய உயர்ந்த அவை ஒரு சிறந்த ஒளிமய மான அரண்மனையில் அமைந்திருந்தது. அங்கு ஒரே நேரத்தில் இருநூறு விருந்தினர்களை வரவேற்று அவர் உபசரித்தார். அவருடைய சமயலறையிலுள்ள கரண்டிகள்கூட வெள்ளியால் செய்யப்பட்டவை. வந்த விருந்தினர்களை மகிழ்விப்பதற்காக அவரது இலாயத்தில் நூற்று எண்பது குதிரைகள் தயாராக வைக் கப்பட்டிருந்தன. இவ்வாறு கிறித்துவ சமய உயர்குருக்கள் உல்லாச வாழ்வின் உறைவிடமாகத் திகழ்ந்தனர். அவர்களது ஆடம்பர வாழ்வும், ஒழுக்கக் கேடுகளும் உண்மையிலேயே மக்களை அதிர்ச்சிக்குள்ளாக்கின. பரமண்டலத்தின் பெருமைபற்றிப் பேச வேண்டியவர்கள் பாவைகளின் பார்வையில் மயங்கினர். எனவே, இயல்பாக, மக்கள் அவர்கள்மீது எரிச்சல் கொண்டனர். அந்த எரிச்சல் படிப்படியாக வளர்ந்து எரிமலையாக வெடிக்கும் தூரம் வெகுதொலைவில் இல்லை.

சலுகையற்றோர் பட்டியலில் ஏழை நடுத்தரமக்கள் இடம் பெற்றனர். அவர்கள் மிகவும் வறுமையில் வாடினர். உழவர்

களோ சொல்லொணுத் துயரில் துன்புற்றனர். கோழி கூவுமுன்பு கோணல் கலப்பையைத் தாங்கிச் சென்று, பகல் முழுதும் ஆண்டையின் வயலில் உழுதுவிட்டுக் கோட்டான் கூவுகின்ற நேரத்தில் குடிசைக்குத் திரும்பினுன் உழைத்து உழைத்து உருக்குலேந்த உழவன். அவனது உழைப்பின் பயன் அவனுக்கோ அவனது உற்ருருக்கோ பயன்படவில்லே; மாருக அவனது உழைப்பை உறிஞ்சிவாழும் ஆண்டைக்கே பயன்பட்டது. உழவன் தன் விருப்பம்போல் பயிரிட இயலாது; ஆண்டையின் விருப்பப்படியே பயிரிடவேண்டும். நிலக்கிழாரின் ஆடு மாடுகளுக்கும் அவனே தீவனம் போடவேண்டும். தனக்குத் தேவையான மாவைக்கூட ஆண்டையின் ஆலேயில்தான் அரைக்கவேண்டும். உழவர்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளேயும் ஆண்டையே விசாரித்துத் தீர்ப்புக் கூறும் அதிகாரம் பெற்றிருந்தார். சிறிய குற்றங்களுக்கும் கடும் தண்டனேகள் விதிக்கப்பட்டன. அபராதக் கட்டணங்களும் ஆண்டைகளுக்கே உரித்தாயின. அன்றியும் உழவன் பலமுனே உழைப்பாலும், பலமுனே வரியாலும் பெரிதும் பாதிக்கப்பட்டான். வாரத்தில் மூன்று நாள்கள் ஆண்டையின் சொந்தச் சாகுபடி நிலத்தில் உழைக்கவேண்டும்; அறுவடைக் காலங்களில் ஆண்டைக்கு அவனது உழைப்பு வாரத்தில் ஐந்து நாள்கள். இந்த நேரத்தில் இரட்டிப்பு வரியும் கட்டவேண்டும். திருச்சபைக்கு டைத் (Tithe) என்ற வரியும் கட்டவேண்டும். மேலும் மன்னருக்கு நிலவரி (Taille), வருமானவரி (Vingtieme), உப்புவரி (Gabelle), சாலேவரி (Corvee) ஆகிய வரிகளேயும் உழவர்கள் கட்டவேண்டும். 'உழவன் கணக்குப் பார்த்தால் உழக்குக்கூட மிஞ்சாது' என்பார்கள். ஆனுல், ஃபிரான்சு நாட்டின் உழவர்கள் நிலே அதைவிட மோசமாக இருந்தது. அவர்களது உழைப்பை உறிஞ்சி உலுத்தர்கள் ஒய்யார வாழ்வு வாழ்ந்தனர். ஆனுல், உழவர்களோ உழைத்து உழைத்து ஓடாகத் தேய்ந்து மாய்ந்தனர். 'ஃபிரான்சில் பத்தில் ஒன்பது பேர் பசிக்கொடுமையாலும் எஞ்சியோர் செரியாமையாலும் (indigestion) செத்தனர்' என்ற கூற்று முற்றிலும் பொருந்துவதாகும்.

ஃபிரான்சின் நடுத்தர மக்களும் சலுகைகள் இன்றியே வாழ்ந்தனர். வணிகர்கள், வட்டிக்கடையினர், பேராசிரியர்கள், மருத்துவர்கள், வழக்குரைஞர்கள் ஆகியோர் நடுத்தர வகுப்பைச் சார்ந்தோராவர். தொழில், வணிகம் ஆகிய துறைகளில் அவர்கள் சிறந்து விளங்கினர். அவர்களிடத்தில் வசதிமட்டுமன்று, வளமான மூளேயுமிருந்தது. அவர்களே பழமையை எதிர்த்துப் புதுமைக்கு வழிவகுத்தனர். புரட்சிக்குத் தேவையான தலேவர்களெல்லாம் இந்த வகுப்பிலிருந்தே தோன்றினர்.

'உழவனின் ஏர்முனையில் இறைவனைக் காண்கின்றேன்' என்றார் வங்கக்கவிஞர் தாகூர். 'ஏழை எளியவர்களின் புன்சிரிப்பில் காண்கின்றேன் கடவுளை' என்றார் அண்ணா. ஆனால், ஐரோப்பாவில் கிறித்துவ சமயக்குருக்கள் இறைவனின் இருப்பிடமான ஏழைகளை, பஞ்சைகளை, பராரிகளை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. 'ஒட்டகம் ஊசித்துளையில் நுழைந்து செல்வது எளிது; ஆனால், பணக்காரன் பரமபிதாவின் சாம்ராஜ்யத்தை யடைதல் எளிதன்று' என்ற ஏசுவின் கொள்கைகளைப் புறக்கணித்துச் சமயக்குரவர்கள் பணக்காரர்களின் பக்கபலமாக விளங்கினர். ஐரோப்பாவில் கிறித்துவ சமயம் பிளவுபட்டு ஒன்றோடொன்று மோதிக்கொண்டன. கத்தோலிக்கர்களும், பிராட்டஸ்டன்டுகளும், கிரேக்கப் பழைய திருச்சபையைச் சேர்ந்தவர்களும், ஒருவரோடொருவர் சமயச் சச்சரவுகளில் ஈடுபட்டனர். விவிலியநூலும் குரானும், சிலுவையும் பிறையும் மோதிக்கொண்டன, இடைக்காலச் சிலுவைச் சண்டைகளில். ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஐரோப்பாவில் விவிலியநூலும் விவிலியநூலுமே மோதிக் கொண்டன. சிலுவையும் சிலுவையும் சீறிப்பாய்ந்தன. அன்றியும் ஐரோப்பா முழுதும் யூதர்களும் காணப்பட்டனர். சில இடங்களில் கிறித்துவர்கள் அவர்களைச் சகித்து ஏற்றுக்கொண்டனர். பல இடங்களில் அவர்கள் படுகொலை செய்யப்பட்டனர். கத்தோலிக்கத் திருச்சபையும் பலமுனைத் தாக்குதலுக்குள்ளாயிற்று, போப்பின் அதிகாரத்தையும், ஆணையையும் எதிர்த்துக் கண்டனக் கணைகள் பறந்தன. ஏசு சபையினரை எதிர்த்து ஐரோப்பாவில் எங்கும் கிளர்ச்சிகள் தோன்றின. 1764-ல் ஃபிரான்சு நாட்டில் ஏசு மன்றத்தினரின் இயக்கம் நசுக்கப்பட்டது. ஸ்பெயின், சிசிலி, பர்மா போன்ற நாடுகளிலிருந்தும் அவர்கள் விரட்டப்பட்டனர். 1773 ஆம் ஆண்டு போப் ஏசுமன்ற இயக்கத்தைக் (Order of the Jesuits) கலைத்து உத்தரவிட்டார். திருச்சபையிலும் ஊழல்கள் மலிந்து காணப்பட்டன. திருச்சபையின் பெரும் சமயக் குரவர்கள் ஏழைகளின் ஏற்றத்தில் நாட்டமின்றிச் சொந்தநலனில் அக்கறை காட்டினர். பரமனின் பெருமை பாடவந்த அவர்கள், பரமபிதாவையே மறந்து வாழ்ந்தனர். வால்டேர் அவர்கள் குறிப்பிடுவதைப்போல, 'இறை நம்பிக்கையுள்ள அதிமேற்றிராணியார் ஒருவர்கூட இல்லை.' இறைவனின் பெயரால், சமயத்தின் பெயரால், பாமரமக்களை நசுக்கி வாழ்ந்தனர் திருச்சபையார். மக்களுக்கு நல்ல மார்க்கத்தைக் காட்டவேண்டிய மதம் மக்களை மாக்களாக்கி மகிழ்ந்தது.

இவ்வாறு, பொதுவாக ஐரோப்பாவில், சிறப்பாக ஃபிரான்சில் அரசியல் அழுகி நாற்றமெடுத்தது; சமுதாயம் புரையோடிப்

போயிற்று ; சமயம் சாக்கடைப் புழுவாயிற்று. ஒவ்வொரு துறையி லும் சீர்திருத்தம் காண்பதற்குத் தேவையான சூழ்நிலைகளும் உருவாயின. ஃபிரான்சில் புத்துலகு படைக்க, புதிய சமுதாயம் காண வித்திட்ட வித்தகர்களில் மான்டெஸ்கியூ **(Montesquieu)**, வால்டேர், ரூசோ **(Rousseau)** ஆகிய மூவரும் முக்கியமானவ ராவர். ஃபிரெஞ்சுப்புரட்சியையும்நெப்போலியனையும் உருவாக்கிய பெருமை பெரிதும் அவர்களைச் சாரும். மான்டெஸ்கியூ **(Montesquieu)** சிறந்த வழக்கறிஞர் ; வரலாற்றில் வல்லுநர் ; மனித இயக்கங்களை மாசறக்கற்ற மாமேதை; பண்பட்ட தத்துவஅறிஞர். ' ஸ்பிரிட் ஆஃப் லாஸ் ' **(The Spirit of Laws)** என்ற அவரது நூல் உலகப்புகழ் பெற்றது. அந்நூலின் வாயிலாக ஃபிரான்சு நாட்டின் பழைய அரசியல் முறையை அவர் படம்பிடித்துக் காட்டுகின்றார். ஃபிரான்சில் பழைய ஆட்சிமுறை ஒழிந்து அரசியலமைப்புச் சார்ந்த அரசாங்கம் **(Constitutional form of Government)** அமைய அவர் வழி கூறினர். சட்டத்தின் ஆதிக்கத்தை **(Supremacy of Law)** நிலைநாட்டவும் அவர் விரும்பினர். சட்டம் இயற்றுகின்ற அதி காரம், சட்டத்தை நடைமுறைப்படுத்துகின்ற அதிகாரம், நீதித் துறை அதிகாரம் ஆகிய அனைத்தும் ஓர் ஆள் இடத்திலோ, அல்லது ஓர் அமைப்பிடத்திலோ இருக்குமானல் சுதந்திரமும் உரிமையும் பொருளற்றதாகிவிடும் ; எனவே, முக்கிய அதிகாரங்கள் அனைத் தையும் பிரித்துத் தனித்தனி அமைப்புகளிடம் ஒப்படைக்க வேண்டுமென்று அவர் வற்புறுத்தினர். அவரது அதிகாரப் பிரி வினைக் கோட்பாடு ஐரோப்பாவில் சிறந்த செல்வாக்கைப் பெற்றுத் திகழ்ந்தது. அவரது நூல் ஃபிரான்சு மக்களிடையே அரசியலில் விழிப்புணர்ச்சியை உருவாக்கியதுடன் புரட்சியாளர்களுக்குக் கேடயமாகவும் விளங்கியது.

ஃபிரான்சின் அரசியலில் மண்டிக்கிடந்த மாசுகளைப் போக்க மான்டெஸ்கியூ பணியாற்றியதைப் போல, சமுதாயத்திலும், சமயத்திலும் பொங்கிவழிந்த மூடப் பழக்கவழக்கங்களை, குருட்டு நம்பிக்கைகளைச் சாடினர் வால்டேர் **(Voltaire)**. தம்முடைய வலிமைமிக்க எழுத்தாலும் பேச்சாலும், அவர் பொருளற்ற சடங்குகள், முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போடும் மூடக் கருத்துகள் போன்றவற்றைக் கடுமையாகத் தாக்கினர். திருச்சபையின் ஊழல்களை மக்கள்முன் படம்பிடித்துக் காட்டி, மக்களுக்குச் சமய விழிப்புணர்ச்சியை ஊட்டினர். அவரது அரிய பல்துறைப் புலமைவாய்ந்த நகைத்திறமும், எவரது மனமும் புண்படாதபடி மூடக்கருத்துகளைச் சாடுகின்ற பாங்கும், அவரது அஞ்சாத நாத்திகக் கருத்தும், திறமைமிக்க பொது அறிவும் ஃபிரெஞ்சு மக்களின் நாடி நரம்புகளில் பாய்ந்துசென்று அவர்களைப்

பக்குவப்படுத்தின. வால்டேரின் கருத்துகளால், கூனன் நிமிர்ந்தான்; குருடன் விழி பெற்றான்; கோழையும் வீரனானான்.

'மனிதன் சுதந்திரமாகப் பிறக்கின்றான்; பிறந்தபின் எங்கும் விலங்கிட்டுக் காணப்படுகின்றான்' என்றார் அறிவுலக மேதை ரூசோ. அவர் தமது 'சமுதாய ஒப்பந்தம்' **(The Social Contract)** என்ற நூலில் மக்களின் இறைமை அதிகாரத்தை வற்புறுத்தியுள்ளார். மக்களிடத்தில் உண்மையான இறைமை அதிகாரம் இருக்குமானால் அதைப் பிடுங்கிக்கொள்ள எந்த அரசாங்கத்தாலும், அமைப்பாலும் இயலாது என்று வாதிட்டார். மக்கள் சுதந்திரத்துடன் வாழ வழிவகை கண்டார். அவரது எழுத்துகள் மக்கள் மத்தியில் மகத்தான செல்வாக்கைப் பெற்றன. அவரது சமுதாய ஒப்பந்தம் என்ற நூலே ஃபிரெஞ்சுப் புரட்சியாளர்களின் வேதம்; அதுவே புரட்சித் தீயை மூட்டியது; ஜேகோபியர்களின் **(Jacobites)** நற்செய்தியும் **(Gospel)** அந் நூலே.

இத்தகைய நல்லறிஞர்களின் கருத்துகளால் கவரப்பட்ட ஃபிரெஞ்சு மக்கள் மன்னனையும் அவனது அடிவருடிகளாம் பிரபுக்களையும், மமதைமிக்க மதகுருக்களையும் எதிர்த்துப் புனிதப் போரில் இறங்கத் தயாராயினர். மன்னராட்சி மாயவும், மக்களின் உரிமைகளை நிலைநாட்டவும், மக்களாட்சி மலரவும், ஏற்றத்தாழ்வு அகலவும், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய கருத்துகளை உலகத்தின் மூலைமுடுக்குகளிலெல்லாம் முழங்கவுமான புரட்சிச் சூழ்நிலை தோன்றியது. அந்தப் புரட்சியில் பூத்தது ஒரு விடிவெள்ளி. புரட்சிக் கனி, பூபாகம் முழுதும் பயன்படும் வகையில் அயராது உழைத்து இந்த அகிலத்தின் அணையாவிளக்காக நின்று ஒளிசிந்தும் அந்த விடிவெள்ளி தோன்றியது கார்சிகாவில்.

### உறுதுணைபுரிந்த நூல்கள்


1. ஐரோப்பிய வரலாறு — எச். ஏ. எல். ஃபிஷர்
2. ஃபிரெஞ்சுப் புரட்சியின் முன்னணைப்பொழுது — லோவெல்
3. இன்றைய ஐரோப்பா — டபுள்யூ. ஏ. பிலிப்ஸ்
4. பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டுகளில் ஐரோப்பா — கிராண்டும் டெம்பர்லியும்
5. ஐரோப்பாவில் புரட்சிக் காலம் *(1769-1815)* — எச்.ஜி.போர்ன்
6. ஃபிரெஞ்சுப் புரட்சிபற்றிய சொற்பொழிவுகள் — ஆக்டன்
7. ஃபிரெஞ்சுப் புரட்சி — எச். பெல்லோ **(H. Belloc)**
8. ஃபிரெஞ்சுப் பெரும்புரட்சி — கிரோபோட்கின்
9. ஃபிரெஞ்சுப் புரட்சி — குட்வின்
10. ஃபிரெஞ்சுப் புரட்சியின் காலப் பெரும்பிரிவு *(1715-1815)* — எல். ஆர். காட்சால்க் **(L. R. Gottschalk)**

# 2. இளமையும் கல்வியும்

'இந்தச் சிறு தீவு (கார்சிகா) ஒரு நாள் ஐரோப்பாவைக் கலக்கித் திகைப்பிலாழ்த்தும்' என்றார் பேரறிஞர் ரூசோ. கார்சிகா நடுநிலக்கடலில் (Mediterranean Sea) உள்ள வளமான தீவு. கரடு முரடான மலைகள், குறுகிய மலையிடுக்குகள், அடர்ந்த காடுகள், அகன்ற நீலவானம், அலைகடல் ஆகிய இயற்கையழகுடன் சிறந்து விளங்கிய அத் தீவு ஃபிரான்சின் கடற்கரையிலிருந்து நூறு கல் தொலைவிலுள்ளது. ஆண்டு பலவாக அத் தீவு இத்தாலி நாட்டின் ஒரு மாநிலமாகவே இருந்துவந்தது. எனவே, கார்சிகாவின் மக்கள் இனத்தால், மொழியால், பண்பால், பழக்கவழக்கத்தால், உணவால், உடையால், உணர்வால் இத்தாலியர்களாகவே வாழ்ந்து வந்தனர். மண்வளமும், மலைவளமுமிக்க அத் தீவின் மக்கள் மனவளமிக்கவர்களாக விளங்கினர். சிறந்த நாட்டுப்பற்றுக் கொண்ட அவர்கள், புகழ்பெற்ற விடுதலை வீரர்களாகவும் விளங்கினர். பதினெட்டாம் நூற்றாண்டின் நடுவில், கார்சிகாவின் குடிமகன் என்பது பெருமையாகக் கருதப்பட்டது. அத்தகைய நாட்டின்மீது ஆதிக்கம் செலுத்திய ஜினோவா, அதன் பிடியிலிருந்த கார்சிகாவை ஃபிரான்சுக்கு விற்றுவிட்டது. 1769-ல் கார்சிகா ஃபிரெஞ்சுப் பேரரசின் ஒரு பகுதியாயிற்று. இயல்பாகவே விடுதலை விரும்பிகளான கார்சிகர்கள், இப்போது ஃபிரெஞ்சுப் பேரரசை எதிர்த்தும் போர்க் கொடி உயர்த்தினர். விடுதலைப்போர் தொடர்ந்தது. விடுதலைப் படையின் தளபதி புகழ்பெற்ற பாஸ்குவேல் பயோலி (Pasquale Paoli) என்பவராவர். அவரது புகழ், ஐரோப்பியப் பெருநகரங்களனைத்திலும் ஓங்கியிருந்தது. அவர் கார்சிகாவின் தளபதி மட்டுமல்லர், கார்சிகா மக்களின் வழிகாட்டியுமாவார். அமெரிக்க மக்களுக்கு அதிபர் வாசிங்டனைப்போல, சீனத்து நாட்டுக்கு டாக்டர் சன்யாட்சனைப்போல, இரஷ்யாவிற்கு லெனினைப்போல, திராவிட மக்களுக்கு அறிஞர் அண்ணாவைப் போல, கார்சிக மக்களுக்கு பயோலி அன்று விளங்கினார். அவரது சிறந்த தலைமையில் அயராது அந்நியராதிக்கத்தை எதிர்த்துப் போராடினர் கார்சிகாவின் வீரர்கள். அவரது படையில் ஆண்களும் பெண்களும் அலையலையாக வந்துசேர்ந்தனர்.

பயோலியின் விடுதலைப்படையில் சேர்ந்து போரிட்ட வீரர்களில் சார்லஸ் போனபார்ட் (Charles Bonaparte) என்பவர் முக்கியமானவர். அவர் துடிப்புள்ள இளைஞர் ; நாவன்மை படைத்த வழக்கறிஞர். பொலிவான தோற்றத்தினர் ; உள்ளத்தில் உறுதி படைத்தவர் ; நற்பண்பினர் ; நல்ல குடிப்பெருமை பெற்றவர். இருப்பினும் அவர் ஊதாரித்தனமாகச் செலவு செய்பவர் ; எப்போதும் அமைதியற்றிருப்பவர் ; நிரந்தரப் பணப் பற்றுக்குறையுடையவர். அவர் இலத்தீசியா இராமோலினி (Latizia Ramolini) என்ற கார்சிக அணங்கை மணந்து இல்லற வாழ்வை இன்பமுற நடாத்தினார். இலத்தீசியா பேரழகும், நற்பண்பும், நாட்டுப் பற்றும், ஆழ்ந்த கல்வியும், உயர்ந்த அறிவும் வாய்ந்தவள். உள்ள உறுதியும், தெளிந்த போக்கும் கொண்டவள். வெள்ளை மனம் பெற்ற அவள், சிறந்த வீராங்கனை. ஃபிரெஞ்சு மொழியைப் பிழையின்றிப் பேசும் ஆற்றலை அவள் பெற்றிருக்கவில்லை. வருமானத்திற்கேற்ற வகையில் வாழ்வை நடாத்திய வனிதையான இலத்தீசியா மகிழ்ச்சியில் மயங்கியதுமில்லை துன்பத்தில் துவண்டதுமில்லை. வாழ்வில் தோன்றிய பயங்கரச் சோதனைகளை யெல்லாம், தக்கபடி சந்தித்து வெல்லும் ஆற்றலை அவள் இயல்பாகவே பெற்றிருந்தாள். விடுதலைப் போராட்டத்தில் தன் கணவனுடன் காடு மலையெல்லாம் சென்று பங்கெடுத்துக்கொண்ட மறக்குல மங்கையாகத் திகழ்ந்தாள். அவளது போராற்றலைக்கண்டு வியந்த தளபதி பயோலி, அவளைக் கார்னேலியா (Cornelia) என அழைத்து மகிழ்ந்தார். அதாவது 'இந்தக் கூர்மதி வாய்ந்த, நெஞ்சுரங் கொண்ட, அழகிய நாட்டுப்புற மங்கை, வீரமறவர்களின் சந்ததிகளை ஈன்றெடுக்கும் தகுதிபெற்றவள்' என்று புகழ்ந்து கூறினார். அவள் ஆயிரத்தில் ஒருத்தி என்றால் மிகையாகாது.

சார்லசும் இலத்தீசியாவும் கார்சிகாவின் தலைநகரான அஜாசியோ (Azaccio) என்ற நகரிலுள்ள அழகிய மாளிகையில் வாழ்ந்து வந்தனர். நாட்டுப்புறத்தில் கடற்கரையருகே கோடையில் தங்கும்விடுதி ஒன்றும் அவர்கள் பெற்றிருந்தனர். கோடையில் குழந்தைகளின் குதூகல வீடாக அது விளங்கியது. ஃபிரெஞ்சுக்காரர்கள் கார்சிகாமீது போர்தொடுத்த நேரத்தில் அவர்களிருவரும் இளந்தம்பதிகள். இலத்தீசியா அப்போது ஒரே ஒரு மகவுக்குத் தாய் மட்டுமல்லள்; அடுத்த குழந்தையை விரைவில் பெறுமாறு கருவுற்றிருந்தாள். இருப்பினும், இருவரும் பயோலியின் படையில் சேர்ந்து பகைவரைத் தாயகத்திலிருந்து விரட்டும் புனிதப்போரில் ஈடுபாடுகொண்டனர். ஆனால், விடுதலைப்படை வெற்றி வாய்ப்பினை இழந்தநிலையில் கார்சிகா ஃபிரெஞ்சு ஆட்சிக்குட்பட்ட மாநிலமாயிற்று. கார்சிகா மக்களும் போர்போன் மரபில் தோன்றியு

ஃபிரெஞ்சு மன்னர்களின் இசைவற்ற குடிகளாயினர். ஆனால், ஃபிரான்சின் ஆதிபத்தியத்திற்கு அடிபணிய மறுத்த தளபதி பயோலியும் அவரைச் சார்ந்த முந்நூற்று நாற்பது நாட்டுப் பற்றுள்ள வீரர்களும் கார்சிகாவினின்றும் தப்பிச்சென்று இங்கிலாந்தில் குடியேறினர். ஆனால், சார்லசும் அவரது துணைவியாரும் ஃபிரெஞ்சு ஆட்சிக்கு அடங்கி வாழ இசைந்து இல்லத்திற்குத் திரும்பினர்.

1769ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 15ஆம் நாள், வரலாற்றுப் புகழ்மிக்க நன்னாள். அன்று காலை நிறைகருவுற்றிருந்த இலத்தீசியா கோவிலுக்குச் சென்றாள். வழிபாடு நடந்துகொண்டிருந்தபோதே அவள் மகப்பேற்று வலியின் காரணமாக இல்லம் திரும்பவேண்டியதாயிற்று. ஆலயத்திலிருந்து ஓர் அழகிய வண்டியில் இலத்தீசியா அழைத்துவரப்பட்டாள். அந்த வண்டி, பழமைக்காட்சிகள் நிறைந்த திரைச்சீலையால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. அந்தத் திரையின்மீது இலியத் (Iliad) காவிய வீரர்களின் உருவங்களும், சண்டைக் காட்சிகளும் வரையப்பட்டிருந்தன. வீடு வந்தடைந்த சிறிது நேரத்தில் தனது அழகிய இரண்டாவது மகனை ஈன்றெடுத்தாள். பெற்றோர்கள் அவனை நெப்போலியன் என்று அழைத்து மகிழ்ந்தனர். இரண்டு திங்களுக்குமுன் நெப்போலியன் பிறந்திருப்பாரானால் அவர் பிறப்பால் இத்தாலியராகக் கருதப்படுவார். ஆனால், இரண்டு திங்களுக்கு முன்தான் கார்சிகா ஃபிரெஞ்சு ஆதிக்கத்திற்குட்பட்ட காரணத்தால் அவர் பிறப்பால் ஒரு ஃபிரெஞ்சுக்காரரானார். 'என்னுடைய நாடு செத்துக்கொண்டிருந்த நேரத்தில் நான் பிறந்தேன். சுதந்திரச் சிம்மாசனத்தை செங்குருதிக் கடலில் மூழ்கடிக்கும் வண்ணம் முப்பதாயிரம் ஃபிரெஞ்சுக்காரர்கள் எங்கள் கரைகளில் பாய்ந்து தாக்கினர். அதுவே என் பிஞ்சுக் கண்களைப் பெரிதும் புண்படுத்திய அருவெறுக்கத்தக்க காட்சி' என்று நெப்போலியன் வருந்திக் குறிப்பிட்டுள்ளார். 'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று' என்ற குறளுக்கு எடுத்துக் காட்டாகத் தோன்றினார் நெப்போலியன். கார்சிகாவின் விடுதலை, ஃபிரான்சின் மமதை நிறைந்த மன்னராட்சியை மாய்த்தல், மக்களாட்சியை நிறுவுதல், ஐரோப்பாவில் ஃபிரான்சை முதல்தர நாடாகச் சிறக்கச் செய்தல், மக்களை மதப்பிடியிலிருந்து விடுவித்தல், ஏற்றத்தாழ்வற்ற சமுதாயத்தை அமைத்தல், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய புரட்சிக் கருத்துகளைப் பூவுலகம் முழுதும் பரப்புதல் — போன்ற சாதனைகள் பல புரிந்து புகழின் உச்சியில் உலாவ உதித்துவிட்டார் நெப்போலியன்.

குழந்தை நெப்போலியன், தன் பெற்றோர்களுடன் கார்சிகாவிலுள்ள நாட்டுப்புற வீட்டில் வாழ்ந்து வந்தார். நெப்போலியனின்

குழந்தை உள்ளத்தில் பழமை நினைவுகள் பலவற்றை உருவாக்கிய அந்த இல்லம் இன்னும் பாழடைந்த நிலையில், பார்வையாளர்களின் காட்சிப் பொருளாக விளங்குகின்றது. அங்கு ஒதுக்கமான ஓரிடத்தில் ஒரு கருங்கற்பாறை உள்ளது. அதன் பிளவுபட்ட சந்தில் குகைபோன்ற ஓர் இடைவெளி காணப்படுகின்றது. அது இன்றும் 'நெப்போலியனின் அழகுமிகு செயற்கைக்குகை' **(Napolean's Grotto)** என்ற பெயரினைத் தாங்கிநிற்கின்றது. அந்த விருப்பமான இடத்தில் தங்கி, நெப்போலியன் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருப்பதுண்டு; அவரது சிந்தனை சிறகடித்துப் பறக்கும்; தெளிவான திட்டங்கள் செயல்வடிவம் பெறும். மாலை வேளைகளில் நீண்ட நேரம் அங்கு நூல்களிலும் மூழ்கியிருப்பார். அவருக்கு எதிரேயுள்ள ஏற்றமிகு நடுநிலக்கடலும், உயர்ந்து பரந்த நீலவானமும் அவரது எண்ண அலைகளுக்கு எழுச்சியூட்டின. அவரது உடன்பிறப்புகள் எல்லாம் அங்குள்ள தோட்டத்தில் ஓடி, ஆடி மகிழ்ந்திருந்த நேரத்தில் நெப்போலியன் மட்டும் தனிமையில் அந்தக் குகையில் அமர்ந்து ஆழ்ந்த ஆராய்ச்சியில் ஈடுபாடு கொண்ட காரணத்தால் அவர் ஒரு தனிப்பிறவியாக அவர்களால் மதிக்கப்பட்டார். வருங்கால மேதை நெப்போலியனை — தளபதி நெப்போலியனை — பேரரசர் நெப்போலியனை — சிறந்த சீர்திருத்தவாதி நெப்போலியனை — பண்பட்ட அரசியலறிஞர் நெப்போலியனை உருவாக்கும் பயிற்சிப்பாசறையாக அந்தப் பாறைக்குகை பயன்பட்டது.

நெப்போலியன் இயல்பாகவே அடுத்த குழந்தைகளுடன் அன்புடன் நெருங்கிப்பழகும் தன்மையினைப் பெற்றிருக்கவில்லை. அமைதியோடு ஒதுங்கியிருக்கும் போக்கினர். மனச்சோர்வும், எளிதில் கோபங்கொள்கின்ற இயல்புமுடையவர். உரிமைத் தடைகளைக் கண்டு சகிக்காது அவற்றை உடைத்தெறியத் துடிக்கும் தன்மை படைத்தவர். சிறுவயது முதற்கொண்டே நெப்போலியனிடம் உள்ளஉறுதியும், துன்பங்களைக் கண்டு கலங்காது ஏற்றுச் சகிக்கும் தன்மையும், கட்டுக்கடங்காமையும் இயல்பாகவே அமைந்திருந்தன. எளிதில் கோபங்கொண்டாலும் அது விரைவில் மறைந்துவிடும். அவர் அடுத்த குழந்தைகளுடன் சேர்ந்து விளையாடுவதிலும் நாட்டங்கொள்ளவில்லை. அவரது அண்ணனும், தம்பிகளும், தங்கைகளும் அவரிடம் அன்பு கொண்டிருக்கவில்லை. என்றாலும், அவரை உயர்ந்தவராக மதித்துப் பணிந்து நடந்தனர். அவரது அருங்குணங்களையும் அளவற்ற ஆற்றலையும் கண்ட அவரது மாமன் ஒருவர் 'ஜோசப், குடும்பத்தில் மூத்தவன்; ஆனால், நெப்போலியன் அதன் தலைவன்' என்று கூறினார்.

நெப்போலியன் தம் தந்தையின் தனிப்பாசத்திற்குரியவர். அவரது மடியிலமர்ந்து கைகட்டி, கண்களில் நீர்மல்க, கவனத்துடன், விடுதலைப்போரில் கார்சிகர்கள் பெற்ற துன்பங்களையெல்லாம் தந்தை சொல்லக் கேட்டார். விடுதலைப் போரின் வீழ்ச்சியையும், தாம் பிறப்பதற்குச் சற்றுமுன்பு தம் தாய் தந்தையுடன் காடு, மலைகளில் சென்று பெற்ற துன்பங்களையும் துயரங்களையும் கேட்டு நெப்போலியன் நெஞ்சுருகினார். அவரது பிஞ்சு நெஞ்சில் ஃபிரெஞ்சு ஆதிபத்தியத்தின்மீது வெறுப்பு இயல்பாகத் தோன்றியது. கார்சிகாவின் விடுதலைப்போரைத் தொடர்ந்து நடாத்தும் எண்ணம் அவரது இளம்நெஞ்சில் ஆழமாகப் பதிந்தது. அதுமுதல் போர்பற்றிய விளையாட்டுகளில் அவர் நாட்டம்கொண்டார். அவர் சிறுவயதில் விளையாட்டுக் கருவியாகப் பயன்படுத்திய பித்தளைப்பீரங்கி ஒன்று இன்றும் கார்சிகாவில் ஓர் எழுச்சிமிக்க நினைவுச்சின்னமாக விளங்குகின்றது. தெளிந்த அறிவின்பாற்பட்ட அமைதிநிலை, ஆண்மையோடமைந்த துணிவு, உள்ளஉறுதியுடன்கூடிய அஞ்சாமை, ஒரு மாவீரனுக்கே உரித்தான பெருமை, தன்னம்பிக்கை ஆகிய பண்புகள் அவரிடம் குடிகொண்டிருந்தன. தாயகத்தின்மீது அந்நியராதிக்கத்தை வெறுப்பதை அவர் தமது நேர்மையின் பாற்பட்ட ஒழுக்கமாகக் கருதினார்; கார்சிகர்களை வீழ்த்திய ஃபிரெஞ்சுக்காரர்களைப் பழிவாங்குவதைத் தம் தலையாய கடமையாகக் கொண்டார். ஆதிபத்திய வெறிபிடித்த ஃபிரெஞ்சுக்காரர்களை மன்னித்து, மறப்பதைப் பெரும் இழுக்காகக் கருதினார். பொதுவாக, அவருடைய நடையுடைப்போக்கு, மேன்மைமிக்கதாகவும், பகட்டற்றதாகவும், தன்னடக்கமிக்கதாகவும் அமைந்திருந்தது. நெப்போலியன் அசல் கார்சிகராக உருப்பெற்று வளர்ந்துவந்தார்.

கார்சிகா ஃபிரெஞ்சு ஆட்சிக்குட்பட்டவுடனேயே கவுண்ட் மார்பூ **(Count Marboeu)** என்பவர் அதன் ஆளுநராக நியமிக்கப்பட்டார். போனபார்ட் குடும்பத்தினரின் அருங்குணங்களால் கவரப்பட்ட அவர், அக்குடும்பத்தினரின் நெருங்கிய நண்பரானார். சார்லஸ் போனபார்ட் வழக்கறிஞர்களின் தலைவராகப் பதவி உயர்வு பெற்றார். குழந்தை நெப்போலியனின் நலனில் ஆளுநர் அதிக அக்கறை செலுத்தினார். அவனது அறிவாற்றலும், ஆழ்ந்து சிந்திக்கும் திறனும், கூரிய பார்வையும், குழப்பமற்ற பேச்சும் அவரை மிகவும் கவர்ந்தன. 'நெப்போலியன் வாழ்வில் தனக்கெனச் சீரான பாதையொன்றினை அமைத்துக்கொண்டு சிறந்து விளங்குவான்' என்று தம் விருப்பத்துடன்கூடிய நல்வாழ்த்துக்களை வழங்கினார்.

பிள்ளைகளைப் பேணிவளர்ப்பதில் நெப்போலியனின் தாய் இலத்தீசியா மிகவும் தேர்ச்சிபெற்று விளங்கினாள். 'ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம், உயிரினும் ஓம்பப்படும்' என்ற உண்மையை உணர்ந்த அந்த உத்தமி தன்மக்களுக்கு ஒழுக்கத்தையும் உயர்ந்த நோக்கத்தையும் ஊட்டிவந்தாள். உண்மையுரைத்தல், பணிவுடைமை, நல்ல நடத்தை, எளியவர்களைக் கண்டு இரங்கல் போன்ற அருங்குணங்களையெல்லாம் அவர்கள் உள்ளத்தில் பதிய வைத்தாள். தவறிழைத்த குழந்தைகளைத் தக்கபடி தண்டிக்கவும் அவள் தயங்கியதில்லை. நெப்போலியன் வாழ்ந்த நாட்டுப்புறப் பகுதியில் அவரது வயதான மாமன் ஒருவர் வாழ்ந்தார். அவர் பெரும்பணக்காரர்; ஆனால் வறியர். மூட்டைமூட்டையாகப் பணத்தை முடக்கிவைத்திருந்த அவர் மற்றவர்களுக்குக் கொடுத்துதவும் மனப்பாங்கு இல்லாதவர். நெப்போலியனும் அவரது உடன்பிறப்புகளும் அவரிடம் சென்று அடிக்கடி பணம் கேட்பதுண்டு. அவரும், ஆடுமாடுகளும் நிலபுலமும் பெற்று தாம் சிறப்பாக வாழ்ந்தாலும் தம்மிடம் செல்லாக்காசுகூட இல்லையென்று செப்புவார். ஆனால் அவர் மறைத்துவைத்திருந்த பணமூட்டையைக் கண்ட நெப்போலியனும் அவரது உடன்பிறந்தார்களும் ஒரு சூழ்ச்சி செய்தனர். நெப்போலியன் தங்கை பாலைன் சூழ்ச்சியின் உட்கருத்தை அறியாதவளாதலால் நெப்போலியன் கட்டளைப்படி நடக்க இசைந்தாள். அடுத்தநாள் நெப்போலியனும் ஜோசப்பும் அவரை அணுகி வழக்கம்போல் சிறிது பணம் கேட்டனர். அந்தக் கிழவரும் வழக்கம்போல் வறுமைப்பல்லவி பாடினார். ஆனால் சூழ்ச்சித்திட்டப்படி பாலைன் மறைத்துவைக்கப்பட்ட பணமூட்டையைத் தள்ளிவிட்டாள். காசுகள் தரையில் சிதறியோடின. குழந்தைகள் வாய்விட்டுச்சிரித்து மகிழ்ந்தனர். அதைக்கண்ட கிழவர் ஆற்றொணாச் சீற்றங்கொண்டார். அந்த வேளையில் அங்கு வந்த இலத்தீசியா பிள்ளைகளின் நடத்தையைக் கண்டு கோபங்கொண்டு அவர்களைத் தண்டித்தாள். உடனே சிதறிய காசுகளையெல்லாம் பொறுக்கிப் பையுள்போட்டு இருந்த இடத்தில் வைக்கும்படி பிள்ளைகளுக்குக் கட்டளையிட்டாள். தம் தாயிடத்தில் நெப்போலியன் அளவுகடந்த பற்றும், மரியாதையும், மதிப்பும் வைத்திருந்தார். உண்மையிலேயே நெப்போலியனும் அவரது குடும்பத்தினரும் பெற்ற உயர்வுக்கெல்லாம் அடிப்படையாக அமைந்தது இலத்தீசியா கொடுத்த பல்துறைப் பயிற்சியாகும். அந்த அம்மையார் தன் மக்களுக்கு அடிக்கடி அளித்த உடல், உள்ள, ஒழுக்கப் பயிற்சிகளை நெப்போலியனே வியந்து பாராட்டியுள்ளார். 'ஒரு குழந்தையின் எதிர்கால உயர்வோ தாழ்வோ அக்குழந்தையின் தாயைப் பொருத்தது' என்பது

நெப்போலியன் தம் தாயின் சாதனைகளை அடிப்படையாக வைத்து அறிவித்த கருத்தாகும்.

நெப்போலியனது ஆரம்பக்கல்வி கார்சிகாவில் தொடங்கியது. அங்குள்ள ஆரம்பப்பள்ளி யொன்றில் அவர் ஆறு வயதில் சேர்க்கப்பட்டார். அப்பள்ளியில் ஜியா காமினெட்டா **(Gia Cominetta)** என்ற சிறுமியும் நெப்போலியனுடன் பயின்றுவந்தாள். அவள் நல்ல கூந்தலழகி-குறுகுறு பார்வையுடையவள். அவள் நெப்போலியனின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டாள். அவளே நெப்போலியனின் முதற்காதலி. தம் காதலிமீதுள்ள அளவற்ற பாசத்தால் பிற மாணவருடன் சேர்ந்து விளையாடுவதைவிடுத்து அவர் அவளுடன் பேசிமகிழ்வதில் பேரார்வம் காட்டினர். பள்ளிக்குச் செல்லும்போதும், பள்ளியிலிருந்து திரும்பும்போதும் இளங் காதலரிருவரும் இணைபிரியாது கைகோர்த்துத்திரிவர். அதனைக் கண்ட மற்ற பிள்ளைகள் அவர்களைக் கேலிசெய்யமுற்பட்டனர். ஆனால் நெப்போலியன் அதனைச் சட்டைசெய்யாது தம் போக்கில் அச்சிறுமியுடன் அளவளாவி மகிழ்ந்துவந்தார். ஆனால் கேலிக் கணைகளும், கிண்டல் தோட்டாக்களும் பலமுனைத் தாக்குதலைத் தொடங்கின. அந்த வேளைகளில் நெப்போலியன் துணிச்சலாக தம்மைவிட வயதிலும் உருவிலும் பெரிய மாணவர்களின் மத்தியில் புகுந்து கையில் கிடைத்ததைக் கொண்டு தாக்க, அவர்கள் அஞ்சி ஓடுவர். அதன்பின் அச்சிறுமியின் கையைப் பிடித்துக்கொண்டு போரில்வென்ற வீரனைப்போல பீடுநடை போட்டுச்செல்வார் நெப்போலியன். துணிச்சலும், எதிரிகளின் எண்ணிக்கையைக் கண்டு அஞ்சாமையும் நெப்போலியனுடனே பிறந்து, உறுதியாக வளர்ந்துவந்தன.

கார்சிகாவில் ஆரம்பக்கல்வியைத் தொடர்ந்த நெப்போலியன் பத்து வயதினை இப்போது அடைந்தார். அவரது பெற்றோர் அவரை இராணுவப்பள்ளியில் சேர்க்க விரும்பினர். அவர்களது ஆவலைப் பூர்த்திசெய்யும்வகையில் ஆளுநர் மார்பூ பெருமகன் அவர்களுக்கு ஆவனசெய்தார். நெப்போலியனின் ஆற்றலைக் கண்டுவியந்த ஆளுநர் அவர் படைத்துறைப்பயிற்சிக்கு ஏற்றவர் என்பதை அறிந்து மகிழ்ந்தார். தாமே பரிந்துரைத்து, பாரிஸ் நகருக்கருகிலுள்ள பிரைன் என்னுமிடத்திலுள்ள இராணுவப் பள்ளியில் நெப்போலியனுக்கு இடம் கிடைக்கச்செய்தார். பாரிஸ் நகருக்குப் பயணத்தை மேற்கொண்ட நெப்போலியன், தம் தாயைப் பிரிந்துசென்ற காட்சி நெஞ்சை உருக்குவதாக அமைந்தது. எதையும் தாங்கும் இதயம் படைத்த நெப்போலியன், தன்னடக்கம் நிறைந்த அவர்தம் தாயைப் பிரியநேர்ந்த நேரத்தில் கதறிக்கதறி அழுதுவிட்டார். அவரைத் தேற்றி

அன்னையும் அன்புடன் விடைகொடுத்தனுப்பினள். இத்தாலி வழியாகப் பாரிஸ்நகரம் சென்று ஓங்கி உயர்ந்துநின்ற ஒய்யார மாளிகைகளையும், அகன்ற வீதிகளையும் கண்டுகளித்தவாறு நெப்போலியன் இராணுவப்பள்ளி வந்தடைந்தார்.

பிறப்பால் உயர்ந்த ஃபிரெஞ்சு பிரபுக்களின் குழந்தைகளே பிரைன் பள்ளியில் பயின்றுவந்தனர். அங்கு பெரும்பாலும் திறமையின் அடிப்படையில் மாணவர்கள் சேர்க்கப்படுவதில்லை. அரசகுடும்பத்தைச் சார்ந்தோரும் பிரபுக்களின் செல்லக்குழந்தைகளும் செருக்குடன் பயின்ற அப்பள்ளியில் சாமான்ய நெப்போலியனும் விரைவில் தம் நிலையை உறுதிப்படுத்திக் கொண்டார். நெப்போலியனுக்கு ஃபிரெஞ்சுமொழி அந்நியமொழி; அதில் அவர் பேச்சுப்பயிற்சி பெற்றிருக்கவில்லை. எனவே, தம்முடன் பயிலும் மாணவர்களுடன் அவர் இத்தாலி மொழியிலேயே பேசிவந்தார். ஆகவே, அவருடன் பயின்ற மாணவர்கள் நெப்போலியனை அந்நியராகக் கருதினர். அன்றியும், பள்ளியில் செல்வச்செருக்கில் திளைத்திருந்த அவர்கள் வறுமையில் வாடிய நெப்போலியனைக் கண்டு நகைத்தனர். அவர்களது ஆடம்பரம், ஊதாரித்தனம், எளியவரைக்கண்டு ஏளனம்செய்யும்போக்கு ஆகியவைகளைக் கண்ட நெப்போலியன் அவர்கள்மீது இயல்பாகவே வெறுப்புக் கொண்டார். திறமைக்கு மதிப்பளிக்காது பிறப்பின் அடிப்படையில் பதவிகள் அளிக்கும் வழக்கத்தை அவர் அடியோடு வெறுத்தார். 'பிறப்பொக்கும் எவ்வுயிர்க்கும் சிறப்பொக்கும் அவரவர் திறமையினால்' என்ற குறிக்கோள் கொண்டார். மன்னராட்சியும், திறமைமிக்கோர் அனைவருக்கும் ஏற்றமும் ஏற்பட உழைக்க வேண்டுமென்ற உறுதிபூண்டார். பிரைன் இராணுவப்பள்ளியே நெப்போலியனின் உள்ளத்தில் மக்களாட்சிக் கருத்தைப் பதிவு செய்தது.

நீண்ட அங்கியுடன், கைச்செலவிற்குக் காசின்றிக் கண்ணும் கருத்துமாகக் கல்வியில் நாட்டம்செலுத்திய நெப்போலியனைக் கேலிசெய்த ஃபிரெஞ்சுப் பெருங்குடிப் பிள்ளைகள் அவரது தாயகத்தின் வீரத்தையும் பழிக்க முன்வந்தனர். 'தாயகத்தின் வீரத்தைப் பழித்தவனைத் தாய் தடுத்தாலும் விடேன்' என்ற உறுதிகொண்டு அவர்களை ஒறுக்கமுற்பட்டார் நெப்போலியன். 'கார்சிகர்கள் வீரமிக்கவர்களென்றால் தோல்வியே காணாத எங்கள் ஃபிரெஞ்சுப் படையிடம் ஏன் தோற்று ஓடினீர்கள்?' என்றனர் ஃபிரெஞ்சு பிரபுக்களின் பிள்ளைகள். 'ஃபிரெஞ்சுக்காரர்கள் பத்துப்பேருக்கு நாங்கள் ஒருவர்; நான் வளர்ந்து பெரியவனாகும்வரை பொறுத்திருங்கள்; ஃபிரெஞ்சுக்காரர்களாகிய உங்களுக்குத் தக்கபடி தந்தனுப்புவேன்' என்று வீரமுழக்கமிட்டார் நாட்டுப்பற்று

மிக்க நெப்போலியன். ' என்னுடைய வறுமைநிலையை விளக்கிக் கூறுவதில் நான் பெரிதும் சலிப்படைந்துள்ளேன். இந்த அந்நிய மாணவர்களின் கேலியும் கிண்டலும் என்னை கிறுகிறுப்பிலாழ்த்து கின்றன ; பெருந்தன்மையில் அவர்கள் என்னைவிட மிகவும் பின் தங்கியவர்கள் ; அவர்களது பெருமையெல்லாம் பணத்தால் மட்டுமே ; குணத்தால் அல்ல ; பணப்பெருமைமிக்க இந்தப் பையன்களிடம் நான் உண்மையிலேயே பணிந்துதான் நடக்க வேண்டுமா?' என்று தம் தந்தைக்கு நெப்போலியன் வருந்தி எழுதி ஞர். தந்தையோ தம்மிடம் பணமில்லை என்று கையை விரித்து விட்டார்.

வறுமை வாட்டியபோதிலும், கேலியும் கிண்டலும் கிளர்ந் தெழுந்த நேரத்திலும் நெப்போலியன் அவற்றையெல்லாம் துச்ச மெனக்கருதிக் கல்வியில் கவனத்தைச்செலுத்திஞர். அப் பள்ளி யில் பயின்ற ஐந்தாண்டுகாலத்தில் அவர் பெரும்பாலும் மற்ற மாணவர்களுடன் சேராது தனித்திருந்து தம்மை வலுப்படுத்திக் கொண்டார். நூல்களை ஆழ்ந்துபடிப்பதிலும், பல்வேறு தேசப் படங்களை ஆய்வதிலும், அவர் அதிக ஆர்வங்காட்டிஞர். உடன் பயிலும் மாணவர்களெல்லாம் பள்ளியை ஓய்விடமாகக் கருதி உல்லாசமாக நேரத்தை வீணுக்கிக்கொண்டிருந்த நேரத்தில், நெப்போலியன் கல்வியில் கருத்தூன்றி விரைவில் அனைவரது பாராட்டுதலையும் பெற்ருர். அவரை வெறுத்தொதுக்கிய மாண வர்கள் கூட, அவரை விரும்பி ஏற்றனர். அவரது அயரா உழைப்பை மதித்தனர். அவரது உயர்வினை ஒப்புக்கொண்டனர். ' உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ ?' என்ற உண்மையின் செயல்வடிவமாக அவர் விளங்கிஞர். தமது திறமையை மூலதன மாகக்கொண்டு உழைத்த நெப்போலியன் விரைவில் பிரைன் பள்ளியின் ஒளிவிளக்காகத் திகழ்ந்தார். கணிதத்தில் அவரை மிஞ்சும் மாணவர் எவரும் அப்பள்ளியிலில்லை. வரலாறு, அரசாங் கங்கள், நடைமுறை விஞ்ஞானம்பற்றிய நூல்கள் பலவற்றை நன்கு படித்து அவற்றில் முதன்மைபெற்று விளங்கிஞர். ஓமர் **(Homer)**, ஓசியன் **(Oosian)** ஆகிய பண்டைக் கவிஞர்களின் கவிதை களையெல்லாம் திரும்பத்திரும்பப் பயின்று அவற்றில் சிறந்த புலமை பெற்றுத்திகழ்ந்தார். ஓய்வுநேரங்களில் பள்ளி நூலகத் தில் மூழ்கியிருப்பார். புளுடார்க் **(Plutarch)** போன்ற வீரமறவர் களின் வரலாற்று நூல்கள் அவரை மிகவும் கவர்ந்தன. வீரத்தின் விளைநிலமாம் கிரேக்க, உரோமானிய வீரக்கதைகள், எழுச்சியும் வீழ்ச்சியும்பெற்ற பேரரசுகள், வீரர்களின் தீரமிக்கசாதனைகள், ஆகியவற்றையெல்லாம் படித்துப்படித்து அவர் விம்மிஞர். 'நல்ல நூல்களைப்படியாத நாளெல்லாம் பயனற்ற நாள்' என்று எண் ணிப் படிப்பில் மூழ்கியிருந்தார். இத்தகைய சிறந்த கட்டுப்பாட்டு

டன் பள்ளியில் பயின்றகாரணத்தால் அவர் தம்மை உணர்ந்து வென்றவரானார். சிக்கலான பிரச்சனைகளையெல்லாம் விரைவில் தீர்த்திடும் ஆற்றலை அவர் பெற்றார். 'தன்னை உணர்ந்திடும் தத்துவஞானிகள் முன்னைவினையின் முடிச்சையவிழ்ப்பர் ; பின்னை வினையினைக் கசக்கிப்பிழிவர்' என்ற திருமூலரின் கூற்றுக்கு அவர் உரிய இலக்கணமாகத் திகழ்ந்தார். அத்தகைய சிறப்பாற்றலைப் பெற்ற நெப்போலியன் 'வாளின் துணையாலும், ஓமரின் காவியத்தின் தெளிவாலும் உலகத்தை ஆட்டிப்படைப்பேன்' என்று தம் தாய்க்கு எழுதியுள்ளார். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றின் உற்ற தோழனாக விளங்கிய நெப்போலியன், படிப்பில் ஆழ்ந்த கவனம் செலுத்தியகாரணத்தால் உடல்வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்பட்டது. அவரது தலை உடலுக்குப் பொருந்தாதவாறு சற்றுப் பெரிதாக வளர்ச்சியடைந்தது. ஆயினும், அவர் தமது ஆற்றலால், அருங்குணத்தால், விரைவில் பேராசிரியப் பெருமக்களின் பேரன்புக்குரியவரானார். 'இந்த இளைஞன் கருங்கற்பாறையாலானவன் ; அவனுள் ஓர் எரிமலையே அடங்கியுள்ளது' என்றார் பேராசிரியர் ஒருவர். அத்தகைய நெப்போலியன் பிரைன் பள்ளியில் பயின்றநேரத்தில் ஜெர்மன்மொழியில் ஆர்வங்காட்டவில்லை. ஆகவே, ஜெர்மன்மொழிப் பேராசிரியர் போயர் (Bouer) அவர்மீது அலட்சியம் காட்டினார். ஒருநாள் அவரது வகுப்பிற்கு நெப்போலியன் செல்லவில்லை. அதனையறிந்த பேராசிரியர் 'நெப்போலியன் எங்கே?' என்றார். 'நெப்போலியன் கணித வகுப்பில் உள்ளான்' என்றான் ஒரு மாணவன். 'ஆ அப்படியா ! கணிதமாவது கற்கிறானே !' என்றார் பேராசிரியர். உடனே ஒரு மாணவன் இடைமறித்து 'ஐயா, கணிதத்தில் இப்பள்ளியில் முதல்தரமாக விளங்குபவன் நெப்போலியனே' என்றான். 'ஆம் ! முட்டாள்கூடக் கணிதம் கற்பான் என்பதே நான் அனுபவத்தில் கண்ட உண்மை' என்று அப்பேராசிரியர் கூறினார். அதனையறிந்த நெப்போலியன் தமது உண்மையான திறமையை அறியும்பொருட்டும் பேராசிரியர் போயரின் கூற்றின் பயன்களை அனுபவிக்கும்பொருட்டும் 'அவர் நீண்டநெடுங்காலம் வாழவேண்டும்' என்று நகைச்சுவையுடன் கூறினார்.

பிரைன் இராணுவப்பள்ளியிலுள்ள ஒவ்வொரு மாணவனுக்கும் சிறிது வெற்றுநிலம் ஒதுக்கிக்கொடுப்பது வழக்கம். அதனை மாணவர்கள் தங்கள் விருப்பம்போல் பயன்படுத்திக் கொள்ளலாம். நெப்போலியன் தமக்கு ஒதுக்கப்பட்ட நிலத்தைச் சிறந்த சோலையாகமாற்றி மகிழ்ந்தார். முட்செடிகளையும் மரங்களையும் வேலியாக்கி, நடுவே ஒரு வேனிலகத்தை (Summer resort) யமைத்தார். கார்சிகாவில் தாம் விட்டுவந்த தமது அன்புக்

குரிய செயற்கைக்குகையின் நினைவாக அதனை உருவாக்கினார். உடன்பயிலும் மாணவர்களின் பிடியிலிருந்து விலகிச்சென்று அந்த அழகிய சிறுவீட்டில் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருப்பார் நெப்போலியன். சிறந்த நூல்களைப் படித்து மகிழ்வதற்குரிய சிறப்பிடமாகவும் அது விளங்கியது. ஒருமுறை இரண்டு மாணவர்கள் அந்த இனிய சோலைஇல்லத்திற்குள் நுழைந்தபோழ்து நெப்போலியன் அவர்கள்மீது மண்வெட்டியை வீசி விரட்டியடித்தார். இந்த நிகழ்ச்சி வருங்காலத்தில் தம் தாயகமான கார்சிகாவிலிருந்து அந்நியரை விரட்டியடிக்கும் நிகழ்ச்சிக்கு முன்னோடியாக அமைந்தது.

நெப்போலியனின் எண்ணமெல்லாம் இராணுவத்துறையின் மூலம் பெறும் புகழையும் கீர்த்தியையும்சுற்றி வட்டமிட்டது. ஒருவன் இரத்தக்களரியின்மூலமே சிறந்த பெயரையும் புகழையும் ஈட்ட இயலும் என்ற போதனை இராணுவப்பள்ளியில் சிறப்பிடம் பெற்றது. கட்டிடங்களை இடித்தல், கழனிகளை அழித்தல், மங்கையரின் மனக்கொதிப்பு, கணவனையிழந்தோரின் கதறல், அனாதைகளின் கண்ணீர், போர்க்களத்தில் இரத்தவெள்ளத்தில் மிதந்துகொண்டிருப்போரின் அலறல் — ஆகியவற்றின் மூலமே படைவீரன் பயன்பெறுவான் என்ற எண்ணம் எல்லா மாணவர்களிடமும் இயல்பாக அமைந்திருந்தது. வால்டேர், ரூசோ போன்ற அறிஞர்களின் சமயஎதிர்ப்புப் போதனைகளும் நெப்போலியனை வெகுவாகப்பாதித்தன. ஏசுவின் சமயம் ஒரு கட்டுக்கதை ; இறந்தபின் கடவுளின் நீதிமன்றத்தில் விசாரணை நடைபெறும் என்பது கடைந்தெடுத்த மூடநம்பிக்கை ; தூங்குவது போன்றது சாவு, அதிலிருந்து விடுபடுவதில்லை ; பாவம், புண்ணியம், நரகம், மோட்சம் என்பதெல்லாம் எத்திப்பிழைப்போரின் ஏமாற்றுச்சொற்கள் — என்றெல்லாம் அப்பேரறிஞர்கள் ஃபிரான்சு நாட்டில் போதித்துவந்தனர். எனவே, நெப்போலியன் கல்வி பயின்ற ஃபிரான்சு ஒரு கிறித்தவ நாடாக இல்லை. ஃபிரான்சில் கிறித்தவசமயம் பலரால் மறுக்கப்பட்டது. கடவுள்நம்பிக்கையும், சமயச்சடங்குகளும் வெறுத்தொதுக்கப்பட்டன. சுருங்கக்கூறின், அக்காலத்தில் ஃபிரான்சு பகுத்தறிவின் பாசறையாக விளங்கியது. அந்தப் பாசறையில் பயின்ற நெப்போலியனும் மூடநம்பிக்கைகளில் நம்பிக்கைகொள்ளாது, பொருளற்ற சடங்குகளில் கவனத்தைச் செலுத்தாது, மனிதனை மனிதனாக மதிக்கும் மனப்பாங்கினைப்பெற்று விளங்கினார். ஃபிரெஞ்சு நல்லறிஞர்களின் புரட்சிக்கருத்துக்கள் நெப்போலியனின் நெஞ்சத்தில் நீக்கமற நிறைந்தன.

பிரைன் இராணுவப்பள்ளியின் வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்ட நிகழ்ச்சி ஒன்று 1784ஆம் ஆண்டு

நிகழ்ந்தது. அந்த ஆண்டு குளிர்காலம் வழக்கத்திற்கு மாறுகக் கடுமையாக இருந்தது. பள்ளியைச்சுற்றிலும் பனிப்பாறைகள் விழுந்து மாணவர்கள் வெளியில்சென்று விளையாடமுடியாமல் தடுத்தன. உடனே நெப்போலியன் மதிலரண், முகப்பு, பதுங்கு குழி, புறஅரண் போன்றவைகள் அடங்கிய அழகிய பனிக்கட்டி களாலான கோட்டை ஒன்றினைக் கட்டிமுடிப்பதற்கான திட்டம் ஒன்றை மாணவர்கள் முன்வைத்தார். கோட்டைக்கொத்தளங் களை உருவாக்கும்கலையில் வல்லவரான நெப்போலியன் தாமே முன்னின்று வேலைகளைக் கவனிக்கமுன்வந்தார். மாணவமணி களும் ஆர்வத்துடன் ஒத்துழைப்பு நல்கினர். எழுந்தது கோட்டை, கொத்தளம், கைப்பிடிச்சுவர், அகழி, பாசறை — அத்தனையும் பாங்குற அமைந்தன. பிரைன் பெருங்குடிமக்களும் திரள்திரளா கச் சென்று மாணவர்களின் பனிக்கோட்டையைக் கண்டுகளித்து, அதனை உருவாக்கிய இளந்தளபதி நெப்போலியனை வெகுவாகப் பாராட்டினுர்கள். கோட்டையைக் கட்டிமுடித்ததோடன்றி நெப்போலியன் மாணவர்களை இரண்டு அணிகளாகப் பிரித்து, ஓர் அணி கோட்டையைத் தாக்கவும், இன்னோர் அணி கோட்டை யைப் பாதுகாக்கவுமான மாதிரிச்சண்டையையும், நடாத்திக் காட்டினுர். நெப்போலியன் இரண்டு அணிகளுக்கும் அப்போ தைக்கப்போது போர்முறைகளைப் புகட்டி உதவினுர். சிறிது நேரம் முற்றுகையாளர் அணியில் சேர்ந்து முற்றுகையை முனைந்து நிற்கும்படி செய்வார். பின்பு தற்காப்பு அணியில் சேர்ந்து முற்றுகையை முறியடிக்க முன்வருவார். இவ்வாறு போலிப்போர் நடந்துகொண்டிருந்த நேரத்தில் தளபதிக்குக் கீழ்ப்படியாத வீரன் ஒருவனைத் தண்டிக்கும்வகையில், நெப்போலியன் ஒரு பனிக் கட்டியை அவன்மீது வீச, அது அவன் நெற்றியில்பட்டுக் காயத்தை உண்டாக்கி விட்டது. அக்காயம் ஆறி அது அவன் நெற்றியில் நிரந்தர வடுவாக ஆகிவிட்டது. அந்த நிகழ்ச்சியும் நெப்போலியன் நெஞ்சத்தில் நீடித்த வடுவை நிலைநிறுத்திவிட்டது. ஆண்டுகள் பல உருண்டோடின. நெப்போலியன் ஃபிரான்சின் பேரரசராக உயர்ந்தார். ஆனுல், அவரால் தண்டிக்கப்பட்ட அந்த மாணவ ரோ வறுமையில் வாடினுர். பேரரசரைக் கண்டு உதவிபெற அரண்மனைக்குச் சென்ருர் அவர். 'பேரரசே! தங்களால் உருவாக்கப்பட்ட வடுவினை நெற்றியில் தாங்கிய ஒருவர் தங்களைக் காணவந்துள்ளார்' என்று பேரரசரிடம் அவரது வருகையை உரைத்தான் வாயில்காப்போன். 'அந்த வடுவின் பொருளை நான் நன்கு அறிவேன். நான் ஒரு பனிக்கட்டியை அவர் மீது வீசியதால் ஏற்பட்ட காயத்தின் வடு அது. அழைத்து வா அவரை' என்ருர் பேரரசர். வடுவினைத் தாங்கிய அந்த வறுமை மனிதரும் உள்ளே சென்ருர். மன்னரும் அவருடன் அளவளாவி விரும்பிய பொருள்

களனைத்தும் கொடுத்தனுப்பினர். இந்நிகழ்ச்சி நெப்போலியனின் நினைவாற்றலை வெளிப்படுத்துவதுடன், உடன்பயின்ற மாணவர் களுக்கு உதவும் உயரிய நோக்கத்தையும் வெளிப்படுத்துகிறது. தம்மை இழித்தும் பழித்தும் பேசிய பெருங்குடி வழிவந்தவர்களை குறள்வழி நின்று தண்டிக்கும் வகையை நெப்போலியன் கடைப் பிடித்தார். 'இன்னு செய்தாரை ஒறுத்தல் அவர்நாண நன்னயம் செய்து விடல்' என்பது குறள்.

1779 முதல் 1784 வரை ஐந்தாண்டுகள் பிரைன் இராணு வப்பள்ளியில் பயின்று வந்தார். விடுமுறைக்காலங்களில், தம் பெற்றோர்களைக்காண கார்சிகா செல்வார். கார்சிகாவின் விடுதலை வீரர், தளபதி பயோலியின்மீது நெப்போலியன் அளவுகடந்த பற்றும், பாசமும் கொண்டிருந்தார். அவரது வீரமும், ஆண்மை யும், நாட்டுப்பற்றும் நெப்போலியனைப் பெரிதும் கவர்ந்தன. தாயகத்திற்காக அவர் பெற்ற இன்னல்களையும், இடுக்கண்களையும், துன்பங்களையும், துயரங்களையும் கேட்டு நெப்போலியன் வெதும் பினர். ஃபிரெஞ்சுக்காரர்களின் ஆணவமும், அடாத செயலும் அவரது கண்டனத்திற்குள்ளாயின. ஒருநாள் பிரைன் பள்ளி யின் மாணவர்களை அப்பள்ளியின் தலைவர் விருந்திற்கழைத்திருந் தார். மாணவர்களும் பேராசிரியர்களும் விருந்தில் மூழ்கியிருந்த நேரத்தில், பேராசிரியர் ஒருவர் கார்சிகாவீரர் தளபதி பயோலி யை வெளிப்படையாக இழிவாகப்பேசினர். அதனைக்கேட்ட நெப்போலியன் வெகுண்டெழுந்து 'ஐயா, பயோலி ஒரு சிறந்த மனிதர்; அவர் தமது தாயகத்தைப் பெரிதும் நேசித்தார்; கார்சி காவைப் ஃபிரான்சுடன் இணைக்க ஒப்புதலளித்த என் தந்தையின் குற்றத்தை என்றும் மன்னிக்க மாட்டேன்; எனது தந்தையும் பயோலியுடன் இங்கிலாந்து சென்று அவருடைய இன்பதுன்பங் களில் பங்குபெற்றிருக்கவேண்டும்' என்று பதிலுரைத்தார். நெப்போலியனது ஆற்றலையும், பயோலியிடம் அவர் கொண்டுள்ள மதிப்பையும், கார்சிகாமீது கொண்டுள்ள தணியாத பற்றையும், தாயகத்தையும் அதன் தலைவர்களையும் பழிப்பவர் எவராயினும் அவரைச்சாடும் துணிச்சலையும் கண்ட மாணவர்களும், பேராசிரி யர்களும், கல்லூரித்தலைவரும் அவரைப் பெரிதும் பாராட்டினர். அன்றியும் தளபதி பயோலியுடன் நெருங்கிப்பழகும் வாய்ப்பும் நெப்போலியனுக்கு விரைவில் கிட்டியது. இங்கிலாந்தில் வாழ்ந்த பயோலி, கார்சிகா திரும்ப அரசரால் அனுமதிக்கப்பட்டார். நெப் போலியன் விடுமுறைக் காலங்களில் கார்சிகா செல்லும்போது பயோலியைக் கண்டு அளவளாவத் தவறுவதில்லை. நெப்போலி யன், உருவில் சிறியவராக இருந்தாலும் உள்ளவளர்ச்சியில் பெரிய மனிதர். தளபதி பயோலியும் நெப்போலியனும் கார்சிகாவின் பல்வேறு பகுதிகளைக் காணச் சேர்ந்தேசெல்வர். அப்போதெல்

லாம் பயோலி விடுதலைப்போராட்டத்தில் கார்சிகர்கள் ஃபிரெஞ்சுப் படைகளை எதிர்த்துப் போரிட்ட இடங்களையும், இராணுவ நுணுக்கம் வாய்ந்த இடங்களையும் நெப்போலியனுக்குச் சுட்டிக் காட்டுவார். நெப்போலியனது பேரார்வத்தையும், நாட்டுப்பற்றையும் கண்டு உள்ளம் பூரித்தார் பயோலி. தாம் சாதிக்க இயலாத கார்சிகா விடுதலையைச் சாதிக்கவல்லோன் இந்த இளந்தளபதியே என்று அவர் உளமார நம்பினர். நெப்போலியன் நவீனகாலத்தைச் சார்ந்தவனல்ல; மாருகப் புகழ்பெற்ற உரோமானியத் தளபதி புளூடார்ச்சின் (Plutarch) வீரமரபினைச் சார்ந்தவன்-என்று வியந்து பாராட்டினர். நெப்போலியன் பிரைன் இராணுவப்பள்ளியில் பலதுறைகளிலும் பக்குவமான வளர்ச்சியைப் பெற்றுத்திகழ்ந்தார். அவரது உள்ளத்தில் ஃபிரெஞ்சு மன்னராட்சியை மாய்த்து, மக்களாட்சியை நிலைநாட்டும் எண்ணம் ஆழப்பதிந்துவிட்டது. பள்ளியில் தாம் எழுதுகின்ற கட்டுரைகளிலெல்லாம் குடியரசுக் கருத்துக்கள் குறுநடம்புரியும்; மன்னராட்சியின் கொடுமைகள் கோடிட்டுக் காட்டப்பட்டிருக்கும். ஒருநாள் புரட்சிக் கருத்துக்களைத் தாங்கிவந்த அவரது கட்டுரையைக் கண்ணுற்ற பேராசிரியர் ஒருவர் நெப்போலியனை பலபடக் கண்டித்துவிட்டு, அக்கட்டுரையைத் தீயிலிட்டுக் கொளுத்தினர். அதனைக்கண்ட நெப்போலியன் ஆசிரியருக்குச் செலுத்தவேண்டிய மரியாதையைச் செலுத்தி வாளாவிருந்தார். அவரது கட்டுரையை ஆசிரியரால் எரிக்கமுடிந்ததே தவிர உள்ளத்தில் பரவி எரிந்துகொண்டிருந்த புரட்சிக்கருத்துக்களை ஆசிரியரால் அணைக்க இயலவில்லை. ஆனல் பிற்காலத்தில் தாம் பேரரசராக இருந்த போது அப்பேராசிரியரைச் சந்திக்கநேர்ந்த நேரத்தில் நெப்போலியன் 'எனது கட்டுரையைத் தீயிலிட்டுப்பொசுக்கிய காலமெல்லாம் மலையேறிவிட்டது' என்று கூறி, பழைய நிகழ்ச்சியை அவருக்கு நினைவூட்டிச் சிரித்தார். போர்போன் (Borbone) மரபில் வந்த ஃபிரெஞ்சு மன்னர்களின் கொடுங்கோலாட்சியை வீழ்த்த, ஃபிரெஞ்சு மக்களும் தயாராகி விட்டனர். மன்னனையும், பிரபுக்களையும், மதத்தலைவர்களையும் எதிர்த்துக் கிளர்ச்சிகள் கிளர்ந்தெழுந்தன. குடியரசுக் கருத்துக்களின் வலிவினை ஏற்றுப் போற்றிவந்த நெப்போலியனின் ஆற்றல் அரசகுடும்பத்திற்கும் எட்டியது. ஃபிரெஞ்சுப் பெருமன்னரும் தமக்கு ஆதரவாகவும் குடியரசுக் கிளர்ச்சிக்கு எதிராகவும் நெப்போலியனின் ஆற்றலைப் பயன்படுத்தஎண்ணி அவரை விலைக்குவாங்கத் திட்டமிட்டார். ஆசைகாட்டி நெப்போலியனை இழுத்துவிடலாம் தம் பக்கம் என்று மன்னர் மணற்கோட்டை கட்டினர். அதற்காக அவருடைய நெருங்கிய நண்பரும், நெப்போலியனுடன் பிரைன் பள்ளியில் பயின்றவரும், மூத்தோர் என்ற முறையில் நெப்போலியனுக்கு

கணிதம் கற்பித்தவரும் பிற்காலத்தில் 'ஆலந்து **(Holland)** வெற்றி வீரர்' என்று அழைக்கப்பட்டவருமான பிக்கேக்ரு **(Pichegru)** என்பவரை நியமித்தார் ஃபிரெஞ்சுப் பெருமன்னர். மன்னராட்சியின் மகிமையை எடுத்துரைத்து மக்களாட்சி வேண்டுமென்போரின் வாதத்தை முறியடிக்க நெப்போலியனே முற்றிலும் பொருத்தமானவர் என்பதையறிந்த ஃபிரெஞ்சு மன்னர் பிக்கேக்ருவை அணுகினர் நெப்போலியனை வசப்படுத்த. ஆனால் 'அதுமுழுதும் முயன்றாலும் முடியாதசெயல்; நெப்போலியனை நான் இளமையில் நன்கறிவேன்; அவன் ஆழ்ந்து சிந்தித்து முடிவெடுப்பான்; எடுத்த முடிவினை எப்போதும் மாற்றமாட்டான்' என்று பிக்கேக்ரு, நெப்போலியனின் கொள்கைப் பிடிப்பைப் படம் பிடித்துக் காட்டி மறுத்துவிட்டார். மன்னரும் வேறுவழியின்றித் திகைத்தார். நெப்போலியனின் ஆர்வத்தையும் ஆற்றலையும் அன்றே எடைபோட்டிருந்தார் ஃபிரெஞ்சு மன்னர். அந்தப் பெருமன்னரின் பெருமைமிகு அரியணையை ஒருநாள் நெப்போலியன் அமர்ந்து அலங்கரிப்பாரென்று அவர் நிச்சயம் நினைத்திருக்கமாட்டார்.

சிறு வயதில் நடந்த சிறிய நிகழ்ச்சிகளைக்கூட மறவாது எளிதில் நினைவுக்குக்கொண்டுவரும் ஆற்றல், பேரரசர் நெப்போலியனது சிறப்பு இயல்புகளில் ஒன்று. பள்ளியில் படிக்கின்ற காலத்தில் அவரது கையெழுத்துத் தெளிவாக இருப்பதில்லை. பிறரால் வாசிக்கஇயலாதபடி சிக்கல் நிறைந்ததாக இருக்கும். கையெழுத்துக் கற்பித்த ஆசிரியரும் அவரது எழுத்தில் ஏற்றத்தை ஏற்படுத்த பலவாறு முயன்றும் பயனில்லை. நெடுங்காலத்திற்குப் பின் வறுமையில் வாடிய அவ் வாசிரியர் பேரரசர் நெப்போலியனிடம் சென்று தனக்கு ஆயுட்காலம் முழுதும் உதவித்தொகை தந்தருளும்படி வேண்டினர். தமது ஆசிரியரை நன்குணர்ந்த பேரரசர் கோபங்கொண்டவர்போல் நடித்து, 'ஆம். என்னைக் கையெழுத்துக்கலையில் வல்லுநனுக்கியவர் தாங்களன்றே? எனது எழுத்தின் மகிமைகுறித்து எனது மனைவியின் கருத்தை தாங்களே கேட்டுத் தெரிந்துகொள்வீர்' என்றார். அருகிலிருந்த அன்புக்கினியவளான ஜோசபைன் அவ் வாசிரியரைப்பார்த்து 'ஐயா, அவர் எனக்கு எழுதும் மடல்கள் **(letters)** முற்றிலும் மகிழ்ச்சி தருபவை என்பதை நான் தங்களுக்கு உறுதியாகக் கூறுவேன்' என்றுரைத்தார். காலங்கடந்து கூறிய விடையைக் கேட்ட நெப்போலியன் சிரித்து மகிழ்ந்து, அவ் வாசிரியருக்கு ஆயுள் முழுமைக்குமான உதவித்தொகை யளித்தனுப்பினர்.

பிரைன் இராணுவப்பள்ளியில் நெப்போலியன் பயின்ற காலத்தில் தம் தந்தைக்கு அடிக்கடி மடல்கள் தீட்டுவதுண்டு.

அவரது மடல்கள் கருத்தாழமும் நகைச்சுவையும் நிறைந்தவையாக விளங்கின. ஒருமுறை திருச்சபை குருவாகப் பணியாற்றி வந்த அவரது அண்ணன் ஜோசப் அதனை விடுத்து இராணுவத்தில் சேர விருப்பம் தெரிவித்ததை அறிந்தார். உடனே அவர் தம் தந்தைக்குத் தமையனைப்பற்றிய தமது துணிச்சலான கருத்துகளை மடல் வடிவில் தீட்டினார். 'போர்க்களத்தில் ஏற்படும் அழிவுகளைத் தாங்கும் ஆற்றல் அண்ணனிடமில்லை. அவர் சிறந்த காவற்படை அதிகாரியாக விளங்கலாம்; நல்ல தோற்றமும் அழகும் அறிவுக்கூர்மையுமிக்க அவர் விளையாட்டுத்தனமான இன்புகழ்ச்சியுரைகளில் நாட்டங்கொள்ளலாம்; தன்னுடைய தனித்திறமைகளின் மூலம் சமுதாயத்தின் நன்மதிப்பைப் பெறலாம். ஆனால் போரில்? அன்றியும் மாற்றங்காணுவதற்குக் காலங் கடந்துவிட்டது. உயர்ந்த மான்யங்கூட அவர் பெற்று விளங்கலாம். ஆனால், அதனால் குடும்பத்திற்கு எவ்விதப் பயனும் விளையப் போவதில்லை. மேலும், படைத்துறையில் எந்தப் பிரிவில் அவர் சேருவார்? கடற்படையிலா? அவருக்கு கணிதத்தில் ஒன்றும் தெரியாது. கடல்வாழ்க்கைக்கு ஏற்ற உடல்நலத்தை அவர் பெற்றிருக்கவில்லை. அன்றியும், பீரங்கிப்படையில் அவர் சேர விரும்பினால் அங்கு தொடர்ந்து பணியாற்றுவதற்குரிய நெஞ்சுரம் அவரிடமில்லை.' இவ்வாறு பதினான்கு வயதுள்ள நெப்போலியன் தம் அண்ணனின் ஆற்றலைத் தக்கவாறு எடைபோடும் அளவு அறிவுவளர்ச்சி பெற்றிருந்தார். மேலும், படைத்துறை நுணுக்கங்களை மட்டுமின்றி வாழ்வின் பல்வேறு துறைகளின் சிறப்பியல்புகளையும் செவ்வனே அறிந்துவைத்திருந்தார்.

இவ்வாறு பிரைன் இராணுவப்பள்ளி அவருக்குப் பல்துறையிலும் தக்க பயிற்சியினை அளித்தது. 1784ஆம் ஆண்டு அப்பள்ளியின் ஐந்தாண்டு காலப் பயிற்சி முடிந்தபோது நெப்போலியன் தமது பதினைந்தாவது வயதில் அடியெடுத்து வைத்தார். அப்பள்ளியின் இறுதி வகுப்பில் நெப்போலியன் முதல்வராகத் தேறினார். ஃபிரான்சின் பன்னிரண்டு மாநிலங்களிலுமுள்ள ஒவ்வொரு இராணுவக் கல்லூரியிலுமிருந்து முதன்மையாகத் தேறிய மூவரை பாரிஸ் நகரிலுள்ள இராணுவக்கல்லூரிக்கு ஓராண்டுகால மேற்படிப்பிற்காக அனுப்புவது வழக்கம். அவ்வகையில் நெப்போலியனும் பாரிஸ் இராணுவக்கல்லூரிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மிகக்குறைந்த வயதில் இத்தகைய சிறப்பான உயர்வினை நெப்போலியன் பெற்றார். அது அவரது அறிவாற்றலுக்கும், அயராத உழைப்பிற்கும் கிடைத்த சிறப்புப் பரிசாகும். போர்த்துறை அமைச்சர், நெப்போலியனைப்பற்றிய நற்சான்றுகளடங்கிய இதழைப் பாரிஸ் கல்லூரிக்கு அனுப்பிவைத்தார். 'மான்சியர் டே போனபார்ட் (நெப்போலியன்) 1769 ஆம்

ஆண்டு ஆகஸ்ட் திங்கள் பதினைந்தாம் நாள் பிறந்தவர் ; ஐந்தடி ஆறரை அங்குலம் உயரமுள்ளவர்; (பிரைன் இராணுவப்பள்ளியில்) நான்காவது பருவத்தை முடித்தவர் ; நல்ல உடலமைப்புள்ளவர் ; உடல்நல மிக்கவர் ; கனிவு, நேர்மை, செய்நன்றி, இனிமை ஆகிய பண்பினர் ; எடுத்துக்காட்டான நடத்தையுள்ளவர் ; கணிதத்தில் தனிச்சிறப்புடையவர் ; வரலாறு, நிலநூல் ஆகிய பாடங்களையும் நன்கு கற்றறிந்தவர் ; இலக்கியக் கல்வியிலும் இடைநிலைத் தேர்ச்சி பெற்றவர் ; இலத்தீன் மொழியில் தமது நான்காவது பருவத்தை மட்டும் முடித்தவர் ; முதல்தரமான கடலோடி (Sailor) ஆவதற்கு முற்றும் தகுதி பெற்றவர் ; பாரிஸ் கல்லூரிக்கு மேல்உயர்வு பெற்றுச்செல்லப் பொருத்தமானவர்.' மேலேகண்ட சுவையான குறிப்புக்கள் அனைத்தும் பிரைன் இராணுவப்பள்ளி பாரிஸ்கல்லூரிக்கு அனுப்பிய நெப்போலியனின் நற்சான்றிதழில் காணப்படுகின்றன. ஐந்தாண்டு காலத்தில் அத்தனை துறைகளிலும் அவர் பெற்ற வளர்ச்சியினைப் படம் பிடித்துக்காட்டுவதாக அமைந்துள்ளது அச் சான்றிதழ்.

பாரிஸ் இராணுவக்கல்லூரியில் நெப்போலியனின் கல்வியில் மூன்றுவது கட்டம் தொடங்கியது. அக்கல்லூரி மேட்டுக்குடியினரின் ஆடம்பரத்தின் பிறப்பிடமாகத் திகழ்ந்தது. பிரபுக்களின் வழித்தோன்றல்களுக்காகவே அமைக்கப்பட்ட பள்ளியாக அது விளங்கியது. அக்கல்லூரியில் முந்நூறு மாணவர்கள் பயின்றனர். ஒவ்வொரு மாணவனுக்கும் இட்டவேலையைத் தட்டாமல் செய்ய வேலைக்காரன் இருந்தான். சுவைநிறைந்த உணவு, வசதியான படுக்கை போன்றவற்றைப்பெற்று அவர்கள் இன்பவாழ்வு நடாத்தினர். துடிப்போடும், சுறுசுறுப்புடனும் இருக்கவேண்டிய இராணுவக்கல்லூரி மாணவர், சோம்பேறிகளாகக் காலங்கழித்தனர். போரின் துன்பங்களை, துயரங்களை உய்த்துணர வேண்டியவர்கள் இன்பத்தில் மூழ்கி உல்லாசவாழ்வு வாழ்ந்தனர். இத்தகைய வாழ்க்கை, உண்மையான படையை உருவாக்கத் துடித்த நெப்போலியனுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. எனவே, ஒரு வீரனுக்குத் தேவையான ஆண்மையையும், ஆற்றலையும் அழித்தொழிக்கும் வகையில் இராணுவக்கல்லூரியில் இடம் பெற்றுள்ள இன்பக்களியாட்டங்களையும், வசதிகளையும் உடனே தள்ளுபடி செய்யும்படி ஆளுநருக்கு ஓர் உருக்கமான விண்ணப்பம் அனுப்பினார். பசி, தாகம், பனி, மழை ஆகிய அல்லல்களையெல்லாம் போர்க்களத்தில் அனுபவிக்கவேண்டிய வீரர்களுக்கு அத்தகைய இன்னல்களைத் தாங்கும் பயிற்சி இராணுவக் கல்லூரியில் தரப்படவேண்டும் என்று அவர் வாதாடினார். மேலும், போர்க்களத்தில் வீரன் தன்னுடைய குதிரையைத் தானே கண்காணித்து தன்னு

டைய போர்க்கருவிகளைத் தானே துடைத்துக் கொள்வதைப் போல இராணுவக்கல்லூரி மாணவர்களும் தங்கள் பணிகளை வேலையாளின்றித் தாங்களே செய்யவேண்டுமென்று வற்புறுத்தினார். சுருங்கக்கூறின், பாரிஸ் இராணுவக்கல்லூரியை உண்மையான போர்ப் பயிற்சிப் பாசறையாக மாற்ற விரும்பினார். ஆளுநருக்கு அவர் அனுப்பிய விண்ணப்பம் நெப்போலியனின் துணிச்சல், ஆர்வம், ஆழ்ந்த போர்த்துறையறிவு, கூரியபார்வை, எதனையும் சிந்தித்துச் செவ்வனே செய்துமுடிக்கும்திறன், நாவன்மை போன்ற அருங்குணங்களையும் வெளிப்படுத்துகின்றது. அவ் வருங்குணங்கள் ஆளுநர் உட்பட அனைவரையும் கவர்ந்தன. அவரது போர்த்துறை நுணுக்கங்கள் நிறைந்த அறிவாற்றல் அனைவராலும் அங்கீகரிக்கப்பட்டது. அன்றியும், அவ்விண்ணப்பம் பிற்காலத்தில் நெப்போலியன் ஃபாண்டெய்ன்பிளே **(Fontainebleau)** என்ற இடத்தில் அமைத்த உலகப்புகழ்பெற்ற இராணுவக் கல்லூரிக்கு முன்னோடியாக அமைந்தது.

பாரிஸ் இராணுவக்கல்லூரியில் நெப்போலியன் பயின்று கொண்டிருந்த நேரத்தில் அவரது அருமைத் தந்தை இயற்கையெய்தினார். அதனையறிந்த நெப்போலியன் மிகவும் வருந்தினார். ‘ஆர்வமிக்க, அறிவொளி சார்ந்த, நேர்மையான ஒரு குடிமகனை நம்நாடு இழந்துவிட்டது. அது ஆண்டவனின் கட்டளை போலும்’ என்று நெப்போலியன் தம் தந்தை இறந்த நேரத்தில் எழுதினார். சார்லஸ்போனபார்ட் இறந்தபோது அவருக்கு எட்டுக்குழந்தைகள் இருந்தனர். விதவையான இலத்தீசியா, ஜோசப், நெப்போலியன், லூசியன், லூயி, ஜெரோம் ஆகிய மகன்களையும், எலிசா, பாலீன், கரோலின் என்ற பெண்களையும் பெற்றிருந்தாள். கணவனை இழந்த அவள் தன் குழந்தைகளுடன் நாட்டுப்புறப் பகுதியிலுள்ள தனது இல்லத்தில் வசித்து வந்தாள். துன்பங்கள் பல தொடர்ந்து வந்தாலும் அவைகளையெல்லாம் துச்சமென மதித்து தன் குழந்தைகளின் நலனில் அவள் அக்கறை செலுத்தினாள். நெப்போலியனிடத்தில், அவ்வம்மையார் தனிப்பற்று வைத்திருந்தாள். நெப்போலியனின் நலனுக்காக அவள் தனது உடைமைகளனைத்தையும் விற்றுச் செலவுசெய்யக்கூட முன்வந்தாள். எவ்வித வழிகாட்டியும், ஆதரவுமின்றிக் குடும்பச்சுமை முழுதும், அவள்மேல் விழுந்தது. குடும்பநிர்வாகம் அவளது சக்திக்கு அப்பாற்பட்டதல்ல. அவளுடைய வயதிற்கும், அப்பாற்பட்ட குடும்பச்செயல்களைக்கூடக் கச்சிதமாகச் செய்துவந்தாள். அவள் குழந்தைகளைக் கவனித்துக் கண்காணித்த முறை அலாதியானது. எவ்வித கீழான எண்ணமும், தீய ஒழுக்கங்களும் குழந்தைகளிடம் ஏற்படாவண்ணம் அவள் தடுத்து வந்தாள். குழந்தை

களிடம் உயர்ந்த பண்புகளும் உன்னத இலட்சியங்களும் உருப்பெற ஓய்வின்றி அவள் உழைத்தாள். பொய்பேசுவதை வெறுத்ததுடன், குழந்தைகள் செய்கின்ற சிறுதவறுகளையும் கண்டித்துத் திருத்தினாள். சிறிதளவு கீழ்ப்படியாமையையும் அவளால் பொறுக்க இயலாது. எனவே, குழந்தைகளைப் பணிவுள்ளவர்களாகவும், பண்புள்ளவர்களாகவும் வளர்ப்பதில் அவள் மிகுந்த ஆர்வங் காட்டினாள். நெப்போலியனே குறிப்பிடுவதுபோல, 'பொருளிழப்புக்கள், வறுமை, களைப்பு ஆகியவை அவளை ஒன்றும் செய்ய இயலா. அவற்றையெல்லாம் தாங்கி எதிர்த்துச்செல்லும் நெஞ்சுரத்தைப் பெற்றிருந்தாள். ஓர் ஆணுக்குரிய ஆற்றலும், ஒரு பெண்ணின் மென்னயமும், கடுமையின்மையும் அவளிடம் கலந்து காணப்பட்டன.'

நெப்போலியன் பாரிஸ் இராணுவக்கல்லூரியில் பயின்ற காலத்தில் அவர் பெற்ற சுவையான அனுபவங்கள் பலவாகும். ஒரு நாள் மார்செயில்ஸ் (**Marseilles**) என்ற இடத்தில் நடந்த ஒரு பொதுவிழாவிற்கு நெப்போலியன் சென்றிருந்தார். அங்கு வாலிப ஆண்களும் பெண்களும் ஆடிப்பாடி மகிழ்ந்திருந்தனர். நெப்போலியன் மட்டும் அதில் கலந்துகொள்ள மறுத்துவிட்டார். 'ஆடல் பாடல்களினால் ஒரு மனிதன் உருவாக்கப்படுவதில்லை' என்பது அவருடைய உறுதியான எண்ணம். உண்மையிலேயே சிறு வயது முதற்கொண்டே அவர் எத்தகைய கேலிவிளையாட்டுக்களிலும் ஈடுபாடுகொண்டதில்லை. ஆடல்பாடல்களில் மூழ்கிக்கிடக்கும் ஆண்கள் பெண்களைப் பற்றி அவர் உயர்ந்த எண்ணங்கொண்டிருக்கவில்லை. மேலும், சீட்டாட்டம் போன்ற சூதுவிளையாட்டுகளும் அவரைக் கவர்ந்திழுக்கவில்லை. தம்முடைய படிப்பில் தம்மை முழுவதுமாக ஈடுபடுத்திக்கொண்டார். ஒரு நாள் கல்லூரி வகுப்பில் சிக்கலான கணக்கொன்று கொடுக்கப்பட்டது. வகுப்பில் எந்த மாணவரும் அதனைப் போட்டுமுடிக்க இயலவில்லை. நெப்போலியனும் விடைகாண்பதற்கு பெருமுயற்சி மேற்கொண்டார்; முடியவில்லை. இருப்பினும் விடாமுயற்சியுடன் அக்கணக்கைப் போட்டுமுடிக்கத் தீர்மானித்தார். தனிமையில் அமர்ந்து, எழுபத்திரண்டு மணிநேரம்அக் கணக்குடன் தொடர்ந்து போராடி இறுதியில் விடைகண்டு வெற்றிகண்டார். கண்துஞ்சாது, பசிநோக்காது கொண்டபணியில் கண்ணுகஇருக்கும் வலிவினை அவர் இயல்பாகவே பெற்றிருந்தார். உள்ளமும் உடலும் அத்தகைய கடின உழைப்பிற்கு உறுதுணையாயிருந்தன. அவை நெப்போலியனின் கட்டளைக்காகக் காத்துக்கிடந்தன. அவற்றைத் தம் விருப்பம்போல் ஏவிய காரணத்தால் ஏற்றமிகு வெற்றிகள் பல அவரைத் தேடிவந்தன. கல்லூரியிலுள்ள மாணவர்கள் பலர் முயன்றும் முடிக்க இயலாத கணக்கை எழுபத்திரண்டு மணிநேரம்

போராடி நெப்போலியன் முடித்த காரணத்தால் அந்தச் சிக்கலான கணக்கு பிற்காலத்தில் ' நெப்போலியன் கணக்கு ' என்றே அழைக்கப்பட்டது. அவர் தம் வாழ்நாளில் பெற்ற வெற்றிகள் அனைத்தும் தற்செயலாகப் பெற்றவையல்ல ; ஆண்டவனருளால் திடீரென்று அமைந்தவையுமல்ல ; ஆனால், மெய்வருத்தம் பாராது, அயராது உழைத்த உழைப்பின் பயனாய் வந்தவை. ' தெய்வத் தாலாகா தெனினும் முயற்சி தன் மெய்வருத்தக் கூலிதரும்,' ' ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித் தாழாது உஞற்று பவர் ' என்ற குறட்பாக்களின் எடுத்துக் காட்டாக விளங்கினார்.

அறிஞர் பெருமக்களின் கூட்டங்களுக்கு கல்லூரி முதல்வர் நெப்போலியனை அழைத்துச்செல்வது வழக்கம். அத்தகைய கூட்டங்களில் நெப்போலியன் தம் வாதத்திறமையை வெளிப் படுத்தும் வாய்ப்புகள் கிட்டின. நெப்போலியனின் வாதத் திறமையையும் ஆழ்ந்த கருத்துகளையும், சொற்களைப் பயன்படுத் தும் பாங்கினையும், தெளிவாக வரும்பொருளுரைக்குமாற்றலை யும் கண்ட அறிஞர்கள் அவரை 'வாதத்தில் வல்லுநர்' என்றழைத் தனர். நெப்போலியனின் அறிவாற்றல் பெருக்கத்தைக் கண்டு வியந்த அவரது பேராசிரியர் ஒருவர் அவரது விரிந்த அறிவுப் பெருக்கங்கள் ' எரிமலையிலிருந்து வெடித்துக் கிளம்பும் எரிதணல் கக்கும் ஏவுகணைகளாகும் ' என்றார்.

1785ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் நெப்போலியன் படையில் பணியாற்றுவதற்குரிய தேர்வு எழுதினார். புகழ்பெற்ற லே பிளேசு **(La Place)** கணிதத் தேர்வை நடாத்தினார். அதில் நெப்போலியன் முதல் தரமாக வெற்றிபெற்றார். வரலாற்றிலும் அவர் சிறந்த தேர்ச்சிகள் பல பெற்றார். அவரது வரலாற்று அறிவினைக் கண்டு வியந்த அவரது வரலாற்றுப் பேராசிரியர் மான் சியர் கேரூக்ளிபன் **(Monsier Keruglior)** என்பவர் தேர்வு முடிவில் நெப்போலியனது கையெழுத்திற்கெதிரே கீழ்க்கண்டவாறு எழுதி யுள்ளார் : ' பிறப்பாலும் குணத்தாலும் (நெப்போலியன்) ஒரு கார்சிகன். நல்ல வாய்ப்புக் கிடைப்பின் இந்த இளைஞன் உலகில் தன்னிகரற்று விளங்குவான்.' இவ்வாறு தேர்வுகளனைத்திலும் சிறப் பான தேர்ச்சிபெற்ற நெப்போலியனைப்பற்றி பாரிஸ் இராணுவக் கல்லூரி நற்சான்றிதழில் கீழ்க்கண்ட குறிப்புகள் காணப்படுகின் றன: 'அடக்கமான. அயராது உழைக்கின்ற ஆர்வமுடைய அவர், எவ்வித உரையாடலையும்விட படிப்பையே பெரிதும் விரும்புகின் றார் ; அன்றியும் நல்ல தரமான நூல்களையே கற்றுத் தம் எண்ணத் தை ஏற்றமுறச் செய்கின்றார். தனிமையில் நாட்டங்கொண்ட அவர் சொற்செட்டானவர் ; சிடுசிடுப்பும், வீராப்பும், மிகுதியான

இறுமாப்புமுடையவர். அவர் குறைவாகப் பேசிடினும் அவரது கூற்றுக்கள் கூரானவை, உறுதியானவை, பொருளுக்குப் பொருத்தமானவை. அன்றியும், அவர் வாதத்தில் தன்னிகரற்று விளங்குகின்றார். மிகுந்த தன்னல நாட்டமும், மட்டுமீறிய தன்னம்பிக்கை வாய்ந்த பேராவலுமுடையவர்.

## உறுதுணைபுரிந்த நூல்கள்


1. ஐரோப்பிய வரலாறு — எச். ஏ. எல். ஃபிஷர்
2. நெப்போலியனது வாழ்க்கை — ஹாசால் **(Hassall)**
3. ஃபிரெஞ்சுப் புரட்சியும் நெப்போலியனும் — ஹாசென் **(Hazen)**
4. நெப்போலியனது வாழ்க்கை — கே. எச். ரோஸ்
5. நெப்போலியன் — எச். ஏ. எல். ஃபிஷர்
6. நெப்போலியன் — ஃபோர்ணியர்
7. கார்சிகன் — ஜான்ஸ்டன். ஆர். எம்
8. நெப்போலியன் — எமில் லட்விக்
9. நெப்போலியன் — சீலி.
10. நெப்போலியனது வாழ்க்கை — ஜோசப் எஸ். சி. ஆப்பட்.

# 3. இராணுவ அதிகாரி

'உடைவாளின் உறைதான் ஃபிரான்சுக்கு உரியது ; வாளின் கூர்மை எனக்கே உரியது' என்ற எண்ணம் முதன்முதலாக இராணுவச் சீருடையணிந்து உடைவாளை உறையில் மாட்டிய போழ்து நெப்போலியனுக்கு ஏற்பட்டது. 1785 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 28ஆம் நாள் நெப்போலியன் வாலன்ஸ் **(Valence)** நகரிலுள்ள பீரங்கிப்படையின் உதவி அதிகாரி **(Sub-Lieutenant)** யாக நியமிக்கப்பட்டார். பதினாறு வயதில் இத்தகைய பெரும்பதவியைப் பெற்ற நெப்போலியன் பெரிதும் மகிழ்ந்து அன்றே வாலன்ஸ்நகர் சென்று பதவியேற்றார். இராணுவச் சீருடையில் அவரது மெலிந்த உடலையும் சிறிய உருவத்தையும் கண்ட வாலன்ஸ்நகர அணங்குகள் பலர் எள்ளிநகையாடினர். ஆனால் அவரது பொலிவான தோற்றமும், பளபளப்பான முகமும், கூரிய கண்களும், கவர்ச்சிப்பார்வையும் இராணுவத்திலுள்ள அனைவரையும் கவர்ந்தன.

அப்போது, நெப்போலியனின் இளம் நெஞ்சத்தில் மூன்று முக்கிய நோக்கங்கள் நிழலாடின. முதலாவதாக, அவருக்குக் கீழ் பணியாற்றுகின்ற படைவீரர்களில் பெரும்பாலோர் அறிவற்றவர்களாவும், பகட்டார்வத்தில் நாட்டமுள்ளவர்களாகவுமிருந்தனர் ; அவர்களையெல்லாம் பக்குவப்படுத்தி பயனுள்ளவர்களாக்குதல் அவரது முக்கிய கடமையாகும். இரண்டாவது, வறுமையின் உடும்புப்பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வது. மூன்றாவது, மேலும்மேலும் பயனுள்ளவற்றைக் கற்று மற்றவர்களை அடக்கியாள்வது. இத்தகைய நோக்கங்களை உள்ளடக்கி உறுதியுடன் பணியாற்ற முற்பட்ட நேரத்தில், அவரது குடும்பப் பொருளாதார நிலை மிகவும் மோசமாகவிருந்தது. குடும்பச்சுமையை இதுவரை தாங்கிவந்த அவரது தந்தை இப்போது இல்லை ; விதவையான இலத்தீசியாவிற்கு அப்போதைக்கப்போது உதவிவந்த கார்சிகாவிலுள்ள ஃபிரெஞ்சு அதிகாரிகளானு

மார்பு (Marboeu), பூச்சிபோர்ன் (Boucheborn) ஆகியோரும் இப்போது இறந்துவிட்டனர். அவரது தாய் ஏழு குழந்தைகளுடன் மிகவும் அல்லலுற்றுவந்தாள். நெப்போலியனின் குறைந்த ஊதியம் குடும்பச்செலவுகளைச் சரிக்கட்டப் போதுமானதாயில்லை. பாரிஸ் நகரில் படித்தநேரத்தில் வழிச்செலவுக்குக்கூட பணமின்றி வாலன்ஸ்நகரின் பெருந்தொலைவை அவர் நடந்தே சென்றார். இருப்பினும் துன்பத்தில் துவண்டுவிடாது கொண்டபணியில் பெயரும் புகழும் கிடைக்க உலைவின்றி உழைக்க உறுதிபூண்டார்.

வாலன்ஸ்நகர வாழ்க்கை நெப்போலியனுக்கு எழுச்சியற்றதாக, சுவையற்றதாக அமைந்தது. அந்நகரிலுள்ள இளைஞர்கள் எல்லாம் ஆடல் கற்று, அன்றைய சமுதாயத்தின் சிற்றின்பங்களையெல்லாம் அனுபவித்துக்கொண்டிருக்கையில், நெப்போலியன் அவற்றிலெல்லாம் நாட்டம்கொள்ளாதிருந்தார். தம்முடைய அறையில் எப்போதும் புத்தகங்களில் மூழ்கியிருப்பார். அடுத்த அறையில் ஆடல்பாடல்களின் இரைச்சல்-மேசைக் கோல் பந்தாட்டத்தின் (Billiards) போது பந்துகள் உருண்டோடும் ஒலி—அத்தனைக்கும் மயங்காதவகையில் நெப்போலியன் தம் அறையில் தனிமையில் அறிவுநூல்களை அலசி ஆராய்ந்துகொண்டிருப்பார். அன்றைய அரசியல், சமுதாய நிலைகளும் அவரை வெகுவாகக் கவர்ந்தன. சிறிது நேரத்தையும் வீணாக்காது பயனுள்ள வகையில் கழித்தார். பீரங்கிப்படை, அதன்கோட்பாடுகள், அதன் வரலாறு, முற்றுகைக்கலை, பிளேட்டோவின் குடியரசு (Plato's Republic), பாரசீகம், ஏதென்ஸ், ஸ்பார்ட்டா ஆகியநாடுகளின் அரசியலமைப்புக்கள், இங்கிலாந்து வரலாறு, பெருமன்னர் ஃபிரடெரிக்கின் (Frederick The Great) போராட்ட ஏற்பாடுகள், ஃபிரான்சு நாட்டின் நிதிநிலைகள், தார்த்தாரி (Tartar) இனத்தவர், துருக்கியர் ஆகியோரின் நன்மைகள் பழக்கவழக்கங்கள், அவர்களது நாடுகள் பற்றிய விவரங்கள், எகிப்து நாட்டுவரலாறு, கார்த்தேஜ் (Carthage) வரலாறு, இந்தியா பற்றிய விவரங்கள், மிரபு (Mirabeau), பூஃபான் (Buffon), மாக்கியவெல்லி, (Machiavelli) சுவிட்சர்லாந்து அரசியலமைப்பு, இந்தியா, சீனா ஆகியநாடுகளின் அரசியல் வரலாறு, அரசியலமைப்பு, பிரபுக்களின் வரலாறு, இத்தாலிய பேட்ரிசியர்களின் (Patrician) அடாத செயல்கள், வானூல், மண்ணூல், வானிலை ஆய்வுநூல், மக்கள்தொகை வளர்ச்சிச் சட்டங்கள், மக்கள் சிறப்புகளின் புள்ளி விவரங்கள் ஆகியவற்றையெல்லாம் ஆழ்ந்து கற்றுத்திகழ்ந்தார். தாம் படித்த நூல்களிலிருந்து அவர் குறிப்புக்கள் எடுப்பது வழக்கம். அக்குறிப்புக்களையெல்லாம் சேகரித்து அச்சிட்டு வெளியிட்டுள்ளனர். அது நானூறு பக்கங்களைக்கொண்ட நூலாகவுள்ளது. பண்டை ஆங்கிலோ—

சாக்சானியரின் எழுவராட்சிபற்றிய நாட்டுப்படம், முந்நூறு ஆண்டுகால சாக்சானிய மன்னர்களின் பட்டியல், பண்டை கிரீட் தீவில் வாழ்ந்த பல்வேறுபட்ட இனத்தினர், ஆசியாமைனரிலுள்ள பண்டை கிரேக்க கோட்டைகளின் பட்டியல், இருபத்தேழு கலிபாக்களின் ஆட்சிபற்றிய காலக்கணக்கீடுகள், அவர்களது குதிரைப் படையின் வலிமை, அவர்களது மனைவியரின் தகாதசெயல்கள் பற்றிய விவரங்கள் ஆகியவை அக் குறிப்பில் காணப்படும் சிலவாகும். 'இரண்டு கடல்களுக்கிடையே அமைந்து, கிழக்கத்திய மேற்கத்திய நாடுகளின் நடுவேயுள்ள எகிப்தின் இருப்பிடத்தைக் கருத்தில் கொண்டு, பெரும் அலெக்சாண்டர் தம்முடைய உலகப் பேரரசின் தலைநகரை அந்த நாட்டில் உருவாக்கி, எகிப்தை உலக வணிகத்தின் மையமாக்கத் திட்டமிட்டார். தம்முடைய வெற்றிகளையெல்லாம் இணைத்து, ஒருமுகப்படுத்தி ஒரே அரசாக உருவாக்குவதற்கு ஏதாவது நடைமுறைச் சாத்தியமான வழி இருக்குமானால் அது ஆஃப்ரிக்கா, ஆசியா, ஐரோப்பா ஆகியவற்றின் இணைப்பு முனையான எகிப்தைப் பயன்படுத்துவதேயாகும் என்று வெற்றியாளர்களிலெல்லாம் மிகுந்த அறிவொளி சார்ந்த இந்த அலெக்சாண்டர் உணர்ந்தார்' என்று அறிஞர் இரெய்னல் Raynal) எழுதியுள்ளார். அந்த வரிகளை நெப்போலியன் தம் குறிப்புக்களடங்கிய நூலில் நகல் எடுத்து வைத்துள்ளார். முப்பதாண்டுகள் கழிந்தும்கூட அந்த வரிகளை நெப்போலியன் அப்படியே ஒப்பிக்குமளவு அதனை அடிக்கடி படித்துள்ளார். 'செயின்ட் எலினு (St. Helena) அட்லாண்டிக் பெருங்கடலில் ஒரு சிறு தீவு - ஆங்கிலக் குடியேற்ற நாடு' என்பதுதான் அவரது குறிப்புநூலில் அடங்கிய கடைசி வரியாகும். அவரது வாழ்வின் கடைசி வரிகளையும் எழுதி முடித்தது அந்தச் சிறு தீவுதான் என்பதை அப்போது அந்த மாவீரன் நினைத்துக்கூடப் பார்த்திருக்கமாட்டார்.

வாலன்ஸ்நகரில், படையில் பணியாற்றிக்கொண்டிருந்த நேரத்தில் லீயன்ஸ் (Lyons) என்னும் நகரத்தில் கலகம் ஒன்று மூண்டது. அதனை அடக்க நெப்போலியன் தமது படையுடன் அங்கு சென்றார். லீயன்ஸ் நகரில் தங்கியிருந்த காலத்திலும் நெப்போலியனின் வாழ்வு நெருக்கடியாகவே அமைந்தது. வறுமையில் வாடிய நெப்போலியன் அங்குள்ள உணவு விடுதி ஒன்றின் மேல்மாடத்திலுள்ள ஒரு சிறு அறையில் தங்கியிருந்தார். அப்போது அவர் உடல்நலம் குன்றியது. உற்றார் உறவினர் எவரும் அருகிலின்றி மிகவும் வேதனைப்பட்டார். ஜெனீவா நகரத்துச் சீமாட்டி ஒருவர் தமது நண்பர்களைக் காண லீயன்ஸ் நகரம் வந்தவர் தற்செயலாக நெப்போலியன் தங்கியிருந்த உணவு விடுதிக்கு வந்தார். அப்போது போனபார்ட் என்ற பெயருள்ள

இளம் இராணுவ அதிகாரி ஒருவர் வறுமையில் வாடி நோய்வாய்ப் பட்டுள்ளார் என்பதை அறிந்து உடனே அவருக்கு உதவ முன் வந்தார். நெப்போலியனுக்குத் தேவையான சிகிச்சையளித்து விரைவில் அவர் நலம்பெற உதவினர். போனபார்ட்டும் அந்த அம்மையாரின் அன்பாலும் ஆதரவாலும் விரைவில் குணம் பெற்றுத் தேறினர். நலம்பெற்ற நெப்போலியன் அந்த அம்மை யாருக்கு தமது உளம்நிறைந்த நன்றியைக் காணிக்கையாக்கி, அவரிடமிருந்து பிரியாவிடை பெற்றுச்சென்று, மீண்டும் படையில் சேர்ந்தார். தமக்கு மறுவாழ்வளித்த அவ்வம்மை யாரைத் தம் வாழ்நாள் முழுதும் நெப்போலியன் தம் நெஞ்சத் தில் வைத்து ஏற்றிப்போற்றிவந்தார். தாம் பிற்காலத்தில் ஃபிரான்சின் பேரரசனகப் பெருவாழ்வு நடாத்தியநேரத்தில் அதனையறிந்த அம்மையார் அவருக்கு நல்வாழ்த்து மடலொன்று அனுப்பினர். அதில் தமது வறுமை நிலையினையும் சுட்டிக்காட்டி யிருந்தார். அதனைப் படித்த நெப்போலியன் உடனே அந்த அம்மையாருக்கு பதினுயிரம் ஃபிராங்குகளை அனுப்பித் தமது நன்றி மறவாமையை நிலைநாட்டினர். அன்றியும், அந்த அம்மையாருக் குத் தேவையான உதவிகளனைத்தையும் தாம் செய்யக் கடமைப் பட்டிருப்பதாகவும் செய்தி அனுப்பினர். லையன்ஸ் நகரத்திலிருந்த போழ்து உண்மையிலேயே நெப்போலியன் மறுபிறவி எடுத்தார் என்றால் அது மிகையாகாது.

'மனித மகிழ்ச்சியை பெருக்கப் பெரிதும் உதவுகின்ற அமைப் புகள் யாவை?' என்ற தலைப்பில் சிறந்த கட்டுரை எழுதியனுப்பு வோருக்குத் தக்க பரிசளிக்கப்படும் என்று லையன்ஸ் நகரக்கலைக் கழகம் அறிவித்தது. பலர் அக்கட்டுரைப் போட்டியில் பங்கெடுத் துக்கொண்டனர். நெப்போலியனும் அதில் கலந்துகொண்டார். முடிவில் நெப்போலியனின் கட்டுரையே பரிசுக்குரியதாக நடுவர் களால் தேர்ந்தெடுக்கப்பட்டது. நெப்போலியனும் பரிசினைப் பெற்று பெருமிதங்கொண்டார். பல ஆண்டுகள் கழித்து போன பார்ட் பேரரசராக இருந்த காலத்தில் அதே கட்டுரையைக் காணும் வாய்ப்பினைப் பெற்றர். அப்போது அவரது அமைச்சராயிருந்த டேலிரெண்ட் (Talleyrand) என்பவர் மன்னரை மகிழ்விக்கக் கருதி லையன்ஸ் நகருக்கு ஆள் அனுப்பி அக்கட்டுரையை எடுத்துவரச் செய்து அதனை மன்னரிடம் தந்தார். தம்முடைய இளமைப் பருவத்தில் எழுதிய கட்டுரையைக் கண்ணுற்று நெப்போலியன் பெருமகிழ்ச்சி கொள்வார் என்பது அமைச்சர் பெருமகனரின் எண்ணம். ஆனல் அதனைப்படித்துப் பார்த்த நெப்போலியன் 'சாதிக்க இயலாத திட்டங்கள் நிறைந்த இக்கட்டுரை எனது விளையாட்டுப் பருவத்தில் எழுதப்பட்டது' என்று கூறி அதனைத்

தீக்கிரையாக்கினர். அன்றியும், நெப்போலியன் லேயன்ஸ் நகரத்தில் வாழ்ந்த நெருக்கடியான நேரத்திலும் தமது தாயகமான கார்சிகாவின் வரலாற்றையும் எழுதிவந்தார். அதனை அச்சிட்டு வெளியிட முற்பட்ட நேரத்தில் ஃபிரான்சில் குழப்பங்கள் மேலிட்டதால் அம் முயற்சி கைவிடப்பட்டது. மேலும், குழப்பங்களை அடக்கு முகத்தான் எழுதும் பணிக்கும் ஓய்வு கொடுத்தார்.

ஆக்ஸோன் **(Auxone)** பகுதியில் மக்கள் மன்னராட்சியை எதிர்த்துக் கிளர்ச்சியிலீடுபட்டனர். உடனே நெப்போலியனும் அவரது படையினரும் அப்பகுதிக்கு அனுப்பப்பட்டனர். ஆக்ஸோனில் நெப்போலியனும் அவரது நண்பர்களும் சவரத்தொழிலாளி **(barber)** ஒருவர் இல்லத்தில் தங்கினர். ஓய்வு நேரங்களில் வழக்கம் போல் நெப்போலியன் தம்முடைய படிப்பில் தனியே மூழ்கியிருப்பார். அவரது நண்பர்களோ சவரத்தொழிலாளியின் அழகிய மனைவியிடத்தில் சென்று கேலிமொழி பேசி மகிழ்ந்தனர். தன்னுடன் உறவாட வராத நெப்போலியன்மீது அவளுக்கு எரிச்சல் ஏற்பட்டது. சில ஆண்டுகள் கழித்து நெப்போலியன் தளபதியாக இருந்தபோது ஒரு படையுடன் ஆக்ஸோன் வழியாகச் செல்லவேண்டியதாயிற்று. அப்போது நெப்போலியன் தாம் முன்பு தங்கியிருந்த சவரத்தொழிலாளியின் இல்லத்தில் அவரது மனைவியைக்கண்டு, 'அம்மா! சில ஆண்டுகளுக்கு முன்பு உனது இல்லத்தில் தங்கியிருந்த போனபார்ட்டைப்பற்றி உனக்கு நினைவிருக்கின்றதா?' என்று வினவினர். 'ஆம், நினைவிருக்கின்றது. அவர் மிகவும் நட்புப்பாங்கற்றவர். எப்போதும் அறைக் கதவை மூடிக்கொண்டு உள்ளேயே மூழ்கியிருப்பார். வெளியே வந்தால் யாருடனும் வாய்விட்டுப் பேசமாட்டார்' என்றனள் சவரத்தொழிலாளியின் மனைவி. 'எனதருமைப் பெண்ணே! நீ விரும்பியபடி நான் என் ஓய்வுநேரத்தை வீணாக்கியிருந்தால் இன்று இந்த இணையற்ற இத்தாலியப்படையின் தளபதியாயிருப்பேனா?' என்று சிரித்துக்கொண்டே கூறினர் நெப்போலியன். அந்த அணங்கும் அதுகேட்டு மிகவும் மகிழ்ந்து அவரைப்பாராட்டி வழியனுப்பினர்.

ஃபிரெஞ்சுப் பூங்காவில் புரட்சிக்கருத்துக்கள் பூத்துக்குலுங்கிக் கொண்டிருந்த நேரத்தில் அங்கு இரண்டுகட்சிகள் ஒன்றோடொன்று மோதத் தயாராயின. மன்னராட்சியையும், பிரபுக்களின் சிறப்புரிமைகளையும் மதவாதிகளின் மகிமையையும் ஆதரிப்போர் அரசுக் கட்சியினர் **(Royalist)** என்று அழைக்கப்பட்டனர். மன்னரின் கொடுங்கோலாட்சியை முறியடித்து பிரபுக்களின் கொட்டத்தை அடக்கி, குருமார்களின் உல்லாச வாழ்வினை ஒழித்து, மக்களாட்சியை மலரவைக்கும் எண்ணங்கொண்டவர்கள் எல்லாம் குடியரசுக்

கட்சியினர் என்றழைக்கப்பட்டனர். அரச குடும்பத்தினர், பிரபுக்கள், சமயவாதிகள் போன்ற மேட்டுக்குடியினர் அனைவரும் அரசுக் கட்சியில் அங்கம் வகித்தனர். பாமரமக்கள், பாட்டாளிகள், பஞ்சைகள், பராரிகள், ஏழைகள், எளியவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள், நடுத்தர வகுப்பினர் ஆகியோர் குடியரசுக்கட்சியினை ஆதரித்தனர். மக்கள் நலங்கருதியோரனைவரும் குடியரசுக்கட்சியின் ஆதரவாளராயினர். இரண்டு கட்சியினரும் ஃபிரான்சில் தங்களின் செல்வாக்கையும் தத்தம் முதலாதிக்கத்தையும் (Supremacy) நிலைநாட்ட முனைந்துநின்றனர். இந்த நிலையில், படையில் பணியாற்றிய நெப்போலியன்-அரசரின் ஆதரவுப்படையில் துணைத் தளபதியாகப் பணியாற்றிய நெப்போலியன்—அரசர் செலவில் படைப்பயிற்சி பெற்று அரசுக்காக பணியாற்றிய போனபார்ட்—அரசாங்க ஊதியத்தைப் பெற்றுவந்த நெப்போலியன்—அரசுக்கு ஆதரவாக இருக்கவேண்டிய நெப்போலியன்—அரசுக்கட்சியினை ஆதரிக்கவேண்டிய இளந்தளபதி—புரட்சிக் கருத்துக்களால் கவரப்பட்டு குடியரசுக்கட்சியின் ஆதரவாளரானார். மனித உரிமைகளுக்காகவும் நலன்களுக்காகவும் போராடத் தயாரான குடியரசுக் கட்சியின் கொள்கைகள் அவரை மிகவும் கவர்ந்தன. இயல்பாகவே விடுதலையில் நாட்டங்கொண்ட நெப்போலியன் தம் தாயகத்தின் விடுதலையின் விரோதிகளான ஃபிரெஞ்சு மேட்டுக் குடியினரின் விரோதியாக குடியரசுக்கட்சியினை ஆதரித்ததில் வியப்பில்லை. அவருடன் படையில் பணியாற்றிய பலரும் அரசுக் கட்சியின் ஆதரவாளர்கள். அவர்கள் அனைவரும் தங்களுக்கு விரோதமாகக் குடியரசுக்கட்சியை ஆதரித்த நெப்போலியன்மீது வெறுப்புக்கொண்டனர். அவர்களது எதிர்ப்புகளைச் சட்டை செய்யாது நெப்போலியன் குடியரசுக்கருத்துகளைப் பகிரங்கமாகப் பரப்பிவந்தார். அதன்விளைவாக அவர் பல தொல்லைகளுக்குள்ளாக நேர்ந்தது.

ஃபிரான்சில் பெரும்புரட்சி தோன்றிய நேரம். ஆக்ஸோனில் அழகிய நவீன வசதிகளுடன்கூடிய மாளிகை. உயர்குடியினைச் சார்ந்த பலர் அங்கு கூடினர். நெப்போலியனும் அங்கு அழைக்கப்பட்டிருந்தார். சுவையான விருந்துடன் உரையாடலும் தொடங்கியது. ஃபிரெஞ்சுக் கிளர்ச்சிகளையும் புரட்சிக் கருத்துக்களையும் தாக்கிப் பலர் பேசினர். ஆனால், நெப்போலியன் மட்டும் தம் உள்ளத்தில் உதித்த உறுதியான புரட்சிக் கருத்துக்களை அவர்கள்முன் வைத்தார். அவருடன் பணியாற்றிய படைத்துறை அதிகாரிகள் அனைவரும் அவரது கருத்துகளை மறுத்தனர். அவர்களோ பலர், நெப்போலியனோ ஆதரவற்ற ஒருவர். இருப்பினும் துணிவுடன் அவர்களது கருத்துகளையெல்லாம் மறுத்து முழங்

கினர். அப்போது நெப்போலியன் சொற்களுக்காக அலையவில்லை; சொற்கள் அவரைத் தேடி சுழன்றோடி வந்தன. இருப்பினும், எண்ணிக்கையில் அதிகமான பிற்போக்குவாதிகள் அவரை விடாது சொற்களால் தாக்கினர்கள். நெப்போலியனும் தக்க பதிலடி தந்தார். அவரது வாயிலிருந்து கிளம்பும் ஒவ்வொரு சொல்லும் அவர்களைத் தீக்கணைகளாகச் சென்று தாக்கின. சொற்போர் சூடு பிடித்தது. நெப்போலியன் தனித்துநின்று போராடிக்கொண்டிருந்த வேளையில் அறைக்கதவு திடீரென்று திறக்கப்பட்டது. உடனே அந்த நகரத்தின் மேயர் அங்கே காட்சியளித்தார். அவரும் நெப்போலியனுக்கெதிராக இரக்கமின்றி சொல்லாலடிக்கத் தொடங்கினர். வேறு வழியின்றி நெப்போலியன் தவித்த நேரத்தில் அந்த மாளிகையின் சொந்தக்காரஅம்மையார் தக்க நேரத்தில் தலையிட்டு சொற்போரினின்றும் நெப்போலியனை விடுவித்தார்.

1789ல் புரட்சி ஆரம்பித்து ஃபிரான்சில் பெரும் பரபரப்பை உருவாக்கிக்கொண்டிருந்தது. புரட்சியை ஒடுக்குவதற்கான தீவிர ஏற்பாடுகளை அரசும் மேற்கொண்டது. அப்போது ஆக்ஸோனிலிருந்த நெப்போலியன் புரட்சிக் கருத்துக் கொண்டவராக இருந்தாலும், கடமை தவருதவராக விளங்கினர். 1739 ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 23ஆம் நாள் அவரும் அவரது படையினரும் நாட்டையும், சட்டத்தையும், மன்னரையும் காக்கும் வகையில் உறுதிமொழியெடுத்துக்கொண்டனர்.

நெக்கர் (**Necker**), ஃபிரான்சின் புகழ்பெற்ற நிதியமைச்சர். சீர்திருத்தங்களில் தணியாத நாட்டம் கொண்டவர். அவரும் புரட்சிக்கருத்துகளால் கவரப்பட்டவர் என்று கருதிய ஃபிரெஞ்சுப் பெருமன்னர், பதினறும் லூயி, அவரை அமைச்சர் பதவியிலிருந்து விலக்கியதோடு, அவர் உடனடியாக நாட்டைவிட்டு வெளியேற வேண்டும் என்றும் கட்டளையிட்டார். ஏழைகளின் உற்ற தோழன் நெக்கருக்கு ஏற்பட்ட இழிவினைப்போக்க பாரிஸ் மக்கள் திரண்டெழுந்தனர். பழைய ஆட்சியின் புகழ்பெற்ற சின்னமான பாஸ்டில் கோட்டைமீது பாய்ந்தனர். 1789ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 14 ஆம் நாள் பாஸ்டில் தரைமட்டமானது. பாஸ்டிலின் (**Bastille**) வீழ்ச்சி, உரிமை (**Liberty**) யின் வெற்றியென்று பாரிஸ் மக்கள் உவகைகொண்டனர். இந்த வெற்றியே உலகத்திலுள்ள அத்தனை உரிமைப்போராட்ட வெற்றிகளுக்கும் வழிவகுத்தது. இவ்வாறு பயங்கரப்புரட்சி மூண்டவுடன் ஃபிரான்சு முழுதும் ஒரே பரபரப்பு. உயர்குடியினர் அஞ்சிநடுங்க ஆரம்பித்தனர். மன்னர், அமைச்சர் நெக்கரை மீண்டும் பதவியில் அமர்த்தியும்

அமைதி ஏற்படவில்லை. எங்கும் அச்சமும், பரபரப்பும், ஏக்கமும் குடிகொண்டிருந்தன.

1790ஆம் ஆண்டில் ஒரு மாலைநேரத்தில் அமைச்சர் நெக்கரின் இல்லத்தில் ஒரு சிறந்த விருந்து நடைபெற்றது. விருந்துக்கு ஒளியூட்டும் வகையில் அமர்ந்திருந்தார் நெக்கரின் அருமை மகள் பெருமாட்டி டே ஸ்டீல் (**Madame de Stael**). நகரத்திலுள்ள குறிப்பிடத்தக்க பெருங்குடி மக்களனைவரும் அங்கு வருகை தந்திருந்தனர். சீமான்களும் சீமாட்டிகளும் சிறப்பான இடம் பெற்றனர். இலக்கியம், அறிவியல்போன்ற பல்வேறு துறைகளில் புகழ்பெற்ற வித்தகர்கள் பலர் அந்த விருந்தில் கலந்து கொண்டனர். வெண்கலக்குரல் அறிஞர் மிரபு (**Mirabean**), அரசியலறிஞர் டெலிரெண்ட் (**Talleyrand**), அமெரிக்கத்தளபதி ஜார்ஜ்வாஷிங்டனின் அருமைநண்பர் லா ஃபெயெட் (**La Fayette**), நல்லறிஞர் புனித ஜஸ்ட் (**St. Just**), அரசுக்கட்சியின் நாடித் துடிப்பாக விளங்கிய மாலெஸ் கெர்ப்பிஸ் (**Ma'es herbis**), புகழ்பெற்ற வானூல் வல்லுநர் லாலெண்டே (**Lalande**), கணிதமேதைகளான மார்மெண்டல் (**Marmentel**), லேக்ரேஞ்சு (**Lagrange**) போன்ற ஐரோப்பா முழுதும் புகழ்பெற்றுத்திகழ்ந்த அறிஞர் பெருமக்களெல்லாம் அப்பெருவிருந்தில் பங்கெடுத்துக்கொண்டனர். அன்றியும் புகழ்பெற்ற கவிஞர் அல்ஃபியரி (**Alfieri**) ஒரு மூலையில் பெண்களைச் சூழ்ந்துகொண்டு தம் ஆற்றலைக்காட்டிக் கொண்டிருந்தார். இன்னொரு பகுதியில் அறிஞர் பெருமக்களின் நடுவில் நெக்கர் அமர்ந்து அன்றைய அரசியல் நிலைகளை அலசிக் கொண்டிருந்தனர். அழகிய ஜோசபைன் அம்மையாரும் தம்முடைய மகனுடன் சிறிதுநேரத்தில் அங்கு வந்துசேர்ந்தார். மன்னரின் தம்பி பின்வர பெருமாட்டி டே ஜென்லிஸ் (**Madam de-genlis**) ஆடைகளில் நறுமணம்கமழ அசைந்தாடி வந்தார். பேரரசியார் மரிய அந்துவானட் (**Marie Antoinatte**) அம்மையாரின் அருமைத்தோழி பெருமாட்டி கேம்பான் (**Campan**) அம்மையாரும் வந்துசேர்ந்தார். பாரிஸ் நகரப் பெருங்குடிமக்களின் சிறப்பு விருந்தாக அது அமைந்தது. உலகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வரவழைக்கப்பட்ட சுவைமிக்க உணவுவகைகளைப் பரிமாறுவதில் வேலைக்காரர்கள் மும்முரமாயிருந்தனர்.

நடு இரவு நெருங்கிக்கொண்டிருந்தது. விருந்தினர் அமைதியுடன் பாட்டுக்கச்சேரி ஒன்றினைச் சுவைக்கத் தயாராயினர். பெருமாட்டி டே ஸ்டீல் (**Madame de Stael**) பியானோ (**Piano**) கருவியினை இசைக்கத்தொடங்கினார். அவரைத்தொடர்ந்து ஜோசபைன் (**Josephine**) யாழினை இயக்கினார். இவர்கள் இருவருடைய இன்னி

சையில் விருந்தினர் மயங்கியிருந்த நேரத்தில், வரவேற்பறையின் வாயிற்கதவு திறக்கப்பட்டு இரண்டு புதிய விருந்தினர்கள் உள்ளே வந்தனர். ஒருவர் எளிய உடையிலிருந்த வயதான பெரியவர். மற்றவர் இளைத்த, ஒல்லியான இளைஞர். முதியவர் ஃபிரான்சின் புகழ்பெற்ற தத்துவமேதை இரெய்னல் (Raynal) என்று அனை வரும் அறிந்து கொண்டனர். ஆனால் அவருடன் வந்த இளைஞரை எவரும் அறிந்திலர். இன்னிசை நிகழச்சிக்கு எவ்வித இடையூறும் ஏற்படாவண்ணம் அவர்களிருவரும் கதவருகில் அமர்ந்து இசை யைச் சுவைத்தனர். இன்னிசை நிகழ்ச்சி முடிந்தவுடன் அதனை நிகழ்த்திய இரண்டு அம்மையார்கட்கும் பாராட்டுகள் குவிந்தன. அறிஞர் இரெய்னலும் அவர்களைப் பாராட்டிவிட்டு தம்முடன் வந்த இளைஞரை ஸ்டீல் அம்மையாரிடம் 'இவர்தான் மான்சியர் நெப்போலியன் போனபார்ட்' என்று அறிமுகப்படுத்தினர். இன்று உலகத்தின் மூலைமுடுக்கெல்லாம் புகழுடன் விளங்கும் 'போனபார்ட்' என்ற பெயர் அன்று அந்த விருந்திலுள்ள பெருங் குடி மக்களுக்குத் தெரியாத பெயர் மட்டுமல்ல, தரத்தில் குறைந்த பெயரும்கூட. எனவே, அதைக்கேட்டவுடனே பலர் தங்கள் முகத்தைச் சுளித்துக்கொண்டனர்.

ஸ்டீல் அம்மையாரிடம் தம்மை அறிமுகப்படுத்திய நேரத்தில் நெப்போலியன் கூறிய சில குறிப்புக்கள் அந்த அம்மையாரை மிகவும் கவர்ந்தன. எனவே, இயல்பாக அறிஞர் பெருமக்களுடன் உரையாடுவதில் பெருவிருப்பங்கொண்ட ஸ்டீல் அம்மையார், நெப்போலியனுடன் உரையாடத் தொடங்கினர். ஜோசபைன் உள்பட பல பெண்களும் அந்த உரையாடலில் கலந்துகொண் டனர். நெப்போலியன் பேசத்தொடங்கியதும் கூட்டம் அவர் பக்கம் சாயத்தொடங்கியது. 'கேட்டார் பிணிக்கும் தகைய வாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்' என்ற உண் மையை உணர்ந்தவர் நெப்போலியன். மகுடிக்குக் கட்டுண்ட நாகம்போல, அவரது சொற்களில் சொக்கியிருந்தனர் அவரைச் சூழ்ந்தோர். 'திடீரென்று கூட்டத்தினரையெல்லாம் தன்பக்கத் தில் இழுத்த அந்த இளைஞன் யார்? என்று அறிஞர் அல்ஃபியரி (Alfieri), இரெய்னலிடம் வினவினர். 'அவர் என்னுடைய இளம் மாணவர். வியக்கத்தக்க செயற்றிறம் பெற்ற இளைஞர். கடுமை யாக உழைப்பவர். ஆழ்ந்து கற்றவர். வரலாறு, கணிதம், படைத் துறை நுணுக்கங்கள் ஆகியவற்றில் குறிப்பிடத்தக்க தேர்ச்சிப் பேறுகள் பலபெற்றவர்' என்று பதிலளித்தார் இரெய்னல்.

அறிஞர் மிரபு (Mirabeau) அனைவரையும் கவர்ந்த அந்த இளைஞனைக்காண ஓடோடி வந்தார். 'இதோ ஓர் இளம் அறிஞர்'

என்று போனபார்ட்டை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார் ஸ்டீல் அம்மையார். மிரபுவும் போனபார்ட்டுடன் கைகுலுக்கி உரையாடத் தொடங்கினர். அறிவாற்றல்மிக்க அறிஞர் பலரும் இப்போது போனபார்ட்டைச் சூழ்ந்துகொண்டு உரையாட முன் வந்தனர். மேலதிகாரிகள் ஆணையிட்டும் மக்கள்மீது சுடுவதற்கு மறுத்துவிட்டனர் ஃபிரெஞ்சுப் படைவீரர்கள்; அதன்மூலம் ஐரோப்பிய படைவீரர்களுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டை ஏற்படுத்தி விட்டனர் என்று பெருமையாகப் பேசினர் ஆட்டன் (Autun) மேற்றிராணியார், உரையாடலின் ஊடே. உடனே, நெப்போலியன் தலையிட்டு, 'எனது பிரபுவே! தங்களை இடைமறித்துப் பேசுகின்ற துணிவினைப் பெற்றமைக்கு என்னை மன்னிக்கவும். ஆனால், நான் படைத்துறையில் அதிகாரி என்ற முறையில் என்னுடைய உணர்ச்சிகளை வெளிப்படுத்த ஆசைப்படுகின்றேன். நான் மிகவும் இளையவன். அன்றியும் இத்தகைய சிறப்புவாய்ந்த அறிஞர் பெருமக்களுக்குப் பேருரையாற்றுவது மிதப்புவாய்ந்த செயலாகத் தோன்றலாம். ஆனால், கடந்த மூன்றாண்டு காலமாக நமது அரசியல் குழப்பங்களை நான் ஆழ்ந்து கவனித்து வருகின்றேன். நமது நாட்டு நிலையைக் கண்டு நான் மிகவும் வருந்துகின்றேன். சிதைவுற்றதும் அரசாங்கத்தை நிலைகுலையச் செய்வதுமான கொள்கைகளைக் கண்டும்காணாமல் செய்வதைவிட அவற்றை நான் கண்டனத்திற்குள்ளாக்குகின்றேன். அரசியலில் மறைந்துள்ள தவறுகள், மோசடிகள், பழமைபட்டுப்போன சலுகைகள், தகாத வழியில் பெற்ற உரிமைகள் அனைத்தும் அழித்தொழிக்கப்படவேண்டும் என்பதில் நான் யாருக்கும் சளைத்தவனல்லன். இன்னும் சொல்லப்போனால், நான் என்னுடைய வாழ்வுப் பணியின் தொடக்கத்தில், மக்கள் இயக்கங்களின் வளர்ச்சிக்கு ஆதரவு நல்குவதையும், பொது நிர்வாகத்தில் ஒவ்வொரு துறையிலும் சீர்திருத்தத்தை வளர்ப்பதையும் என்னுடைய சிறந்த கொள்கையாகவும், கடமையாகவும் கொண்டிருந்தேன். ஆனால், கடந்த பன்னிரண்டு மாதங்களில் அச்சந்தருகின்ற மக்கள்குழப்பங்களைக் காண்கின்றேன். அன்றியும், நமது சிறந்த மனிதர்கள் எல்லாம் ஒத்திணைந்துவராதபடி பிளவுபட்டு உட்பூசலில் ஈடுபட்டுள்ளதையும் காண்கின்றேன். ஆகவே, இப்போது இதற்கு முன் எப்போதும் இல்லாதவகையில், நமது அரசியலமைப்பு சார்ந்த அரசாங்கத்தைக் காக்கவும், ஒழுங்கை நிலைநாட்டவும், படையில் கண்டிப்பான கட்டுப்பாடு முற்றிலும் அவசியமாகும் என்று நான் உளமாற நம்புகிறேன். உண்மையிலேயே நிர்வாகத்துறையின் ஆணைகளுக்கு எவ்விதத் தயக்கமுமின்றி உடனே பணியவேண்டுமென்று நமது துருப்புக்களைக் கட்டாயப்படுத்தாவிட்டால், உலகத்திலேயே ஃபிரான்சை மிகவும் துன்பம் நிறைந்த நாடாக ஆக்கு

கின்ற ஜனநாயக உணர்ச்சிகளின் கட்டுக்கடங்காத, கண்மூடித்த னமான, சீற்றத்திற்கு நாம் ஆளாக நேரிடும். தினமும் கட்டுக் கடங்காமல் வளர்ந்துகொண்டிருக்கும் பாரிஸ் கிளர்ச்சிக் கூட்டத் தின் திமிர், இரும்புக்கரம் கொண்டு அடக்கப்பட்டு சமுதாய ஒழுங்குமுறை நெகிழாதபடி நிலைநாட்டப்படாவிட்டால், இந்த நகரம் மட்டுமல்ல, ஃபிரான்சின் பிற நகரங்கள் ஒவ்வொன்றும் விவரிக்கவியலாத குழப்பங்களுக்குள்ளாகும். அப்போது உரிமை யின் உற்ற நண்பர்களும், நமது நாட்டின் சிறந்த நலன்களுக்காக உழைத்துவருகின்ற அறிவு ஒளிசார்ந்த நாட்டுப்பற்றுள்ளவர் களும், கிளர்ச்சியைத் தூண்டுகின்ற மக்கள் தலைவர்களின் கும்பலி டையே மூழ்கிவிடுவர். அத்தகைய மக்கள் கிளர்ச்சித்தலைவர்கள் விடுதலைபற்றி உரத்த கூக்குரலிடுவர். உண்மையிலேயே அவர்கள் பழைய நீரோக்களை (**Neros**) விட மோசமான, காட்டுமிராண்டித் தனமான, நாடோடிக்குழுவினராவர். இதனை அமைச்சரவை உறுதியாகக்கொள்ளலாம் ' என்று அனைவரும் பாராட்டி ஏற்றுக் கொள்ளும்வகையில் கூறினார்.

நெப்போலியனது இந்த உரையைக்கேட்ட அனைவரும் அவரைப் பெரிதும் பாராட்டினர். அவரது பேருரையின்போது அங்கு நிரந்தரமான அமைதி நிலவியது. அறிஞர்கள் அனைவரும் அவரது முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தனர். அவரது கூற்று முழுக்க முழு உண்மை என்பதை அனைவரும் ஏற்றுக்கொண்ட னர். ஸ்டீல் அம்மையார் அவரது பேருரையில் மயங்கி அவரைப் பெரிதும் புகழ்ந்தார். அறிஞர் இரெய்னல் தம்முடைய அருமை மாணவரின் மாபெரும் வெற்றியைக் கண்டு உள்ளம் பூரித்தார்.

நெப்போலியன் ஆக்ஸோனில், படையில் பணியாற்றிய நேரத்தில், பதவிஉயர்வு பெற்று முதல்துணைத்தளபதியானார். **(First Lieutenant)** அவர் படையில் பணியாற்றிய காலங்களில் பல முறை விடுமுறை பெற்றுத் தாயகமான கார்சிகா செல்வ துண்டு. 1786 ஆம் ஆண்டு 21 மாத விடுமுறை பெற்று கார்சிகா சென்றார். அவர் ஆக்சோனில் முதல்துணைத்தளபதியாகப் பணியாற்றிய காலத்தில் 24 மாத விடுமுறையில் சென்றிருந்தார். உடல்நலக்குறைவாலும், கார்சிகாவின் விடுதலைப்போராட்டத் தில் பங்கெடுத்துக்கொள்வதற்காகவும் அவர் அடிக்கடி விடு முறை பெற்றுக் கார்சிகாவில் தங்கிவந்துள்ளார்.

## உறுதுணைபுரிந்த நூல்கள்

1. நெப்போலியன் — எமில் லட்விக்

2. ஜேகோபியர்கள் — சி. பிரிண்டன்

3. நெப்போலியன் — எச். ஏ. எல். ஃபிஷர்

4. நெப்போலியனது வாழ்க்கை — ஹாசால்

5. ஃபிரெஞ்சுப் புரட்சியும் நெப்போலியனும் — ஹாசென்.

6. கார்சிகன் — ஜான்ஸ்டன் ஆர். எம்.

7. ஃபிரெஞ்சுப் புரட்சியின் முன்னணைப் பொழுது — (Eve of the French Revolution) — லோவெல்

8. இன்றைய ஐரோப்பா — டபுள்யூ. ஏ. பிலிப்ஸ்.

9. இன்றைய ஐரோப்பிய வரலாறு — ஃபிஃப் (Fyffe)

10. நெப்போலியனது வாழ்க்கை — ஜோசப் எஸ். சி. ஆப்பட்.

# 4. கார்சிகா

'கார்சிகாவின் விடுதலைநேரம் நெருங்கிவிட்டது' என்று துள்ளிக்குதித்தார் நெப்போலியன் 1789ல் ஃபிரான்சில் புரட்சி தொடங்கியவுடனேயே. அந்த மாபெரும் புரட்சியை நெப்போலியன் ஓர் அயல்நாட்டவரின் போராட்டமாகவே கருதினார். ஒரு ஃபிரெஞ்சுக்காரனை இன்னொரு ஃபிரெஞ்சுக்காரன் வீழ்த்திடும் விசித்திரப் போராட்டம் என எண்ணினார். அதனைப் பயன்படுத்தி ஃபிரெஞ்சு ஏகாதிபத்தியவாதிகளைத் தம் தாயகத்திலிருந்து விரட்டியடிக்க உறுதிகொண்டார். எனவே, விடுமுறையில் கார்சிகா சென்று அதன் விடுதலைப்போராட்டத்தை விரைவுபடுத்த விரும்பினார். விடுமுறையும் கிடைத்தது; விரைந்தார் கார்சிகாவுக்கு.

இளந்தளபதி நெப்போலியன் ஒரு முன்னறிவிப்போனைப் போல (**Prophet**) கார்சிகா வந்தடைந்தார். முதன்முதலாக கார்சிகர்களுக்குச் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றை அளிக்க வாக்களித்தவரும் அவரே. 'ஒரு காலத்தில் கார்சிகர்கள் தன்னரசு பெற்றுத் திகழ்ந்திருந்தனர்: இருபதாண்டு காலமாக அந்நியராட்சியில் அவதிப்படுகின்றனர். அந்நியராட்சியும் மக்கள் நலங்கருதாத கொடுங்கோலாட்சி; உயர்குடியினரையும், மக்களை உறிஞ்சிவாழும் சமயக்குருக்களையும் வாழவைத்த அரசு. எனவே, அத்தகைய ஆட்சியை அகற்றி, கார்சிகாவில் கார்சிகர்கள் ஆட்சி நிலைநாட்டப் படவேண்டும், என எடுத்துக் கூறி, கார்சிகர்களைப் போராட்டத்திற்குத் தயாராக்கினார். 'பழைய ஃபிரெஞ்சு ஆதிக்கம் கார்சிக அன்னைக்குப் பூட்டிய விலங்கினை ஒடிப்போம்; கார்சிகாவை முழு விடுதலைபெற்ற நாடாகப் பிரகடனப்படுத்துவோம்; கார்சிகர்களே! காலம் கனிந்துவிட்டது; ஒவ்வொருவரும் விடுதலைப்போருக்கு ஆயத்தமாகுங்கள்; ஒவ்வொரு கார்சிகனும் தனது தொப்பியில் விடுதலையின் சின்னமான சிவப்புச்செண்டினை அணியட்டும்; அமையட்டும் தேசிய காவற்படை (**National Guard**); நான் ஒரு பீரங்கிப்

படையமைப்பாளன் ; நான் உங்களது தலைவனாகப் பணியாற்றி உங்களை வழிநடத்துவேன்' என்று வீரமுழக்கமிட்டார், கார்சிக விடுதலைவீரர் நெப்போலியன்,

இவ்வாறு அசேசியோ (Ajaccio) வீதிகளில் விடுதலைப்பண் பாடிவந்த நெப்போலியன் இருபது வயது இளைஞர். இளைத்த உருவினர் என்றாலும் இரும்பு இதயம் படைத்தவர். அசேசியோ நகரமக்கள் அனைவரும் அவரை நன்கு அறிந்திருந்தனர். அவரது விடுதலை இயக்கத்தில் சேர்ந்து போரிட பலர் முன்வந்தனர். அவர்களில் பலர் தணியாத விடுதலை வேட்கை கொண்டவர்கள். சிலர் ஏதாவது ஒரு மாற்றம் தேவை என்றெண்ணிச் சேர்ந்த வர்கள். விரைவில் நெப்போலியன் கார்சிகர்களின் நம்பிக்கைக் குரிய சிறந்த தலைவராக மதிக்கப்பட்டார். இவ்வாறு கார்சிகாவில் விடுதலைப்போர் விரைந்துகொண்டிருந்த நேரத்தில் பாரிசில் தேசிய சட்டமன்றம் கூடி ஃபிரெஞ்சு மாநிலங்களுக்கு முழு சுயாட்சி அளித்தது. கார்சிகாவுக்கு புதிய ஃபிரெஞ்சு ஆட்சியில் மாநில சுயாட்சி வழங்கப்பட்டது. 'இதுவும் ஒரு வினோதமான விடுதலையே' என்று எண்ணி, தளபதி நெப்போலியனும் போராட் டத்தை தற்காலிகமாக நிறுத்திவைத்தார். அன்றியும் இங்கி லாந்தில் வாழ்ந்துவந்த கார்சிகாவின் தந்தை என்றழைக்கப்படு கின்ற பயோலி (Payoli) யும் அவரது தோழர்களும் கார்சிகா திரும்பிவந்து உரிமைகளனைத்தும் பெற்று வாழலாம் என்ற அறிவிப் பும் பாரிசிலிருந்து வந்தது. பயோலியும் அவரது நண்பர்களும் அதன் பயனாகத் தாயகம் திரும்பினர். அவரது வருகையைக் கண்ட கார்சிகா மக்கள் விழாவெடுத்து மகிழ்ந்தனர். ஆயினும் அவர்களுக்குப் ஃபிரெஞ்சுக்காரர்கள் மீதிருந்த காட்டம் முற்றி லும் தணிந்தபாடில்லை.

மாநில சுயாட்சி பெற்று மகிழ்ச்சிப்பெருங்கடலில் மூழ்கினர் கார்சிகர்கள். நெப்போலியனும் தம்முடைய பிறபணிகளைத் தொடங்கினார். தம்முடைய ஆசைக்கனவுகளுக்கு ஆதரவு திரட் டும் வகையில் அரிய கட்டுரைகள் பல எழுதி வெளியிட்டார். அசேசியோவில் ஒரு சொற்போர் மன்றத்தை உருவாக்கினார். கார்சிகாவிலுள்ள முக்கிய படைத்துறை அதிகாரிகள் எல்லாம் அதில் உறுப்பினர்களாயினர். ஐரோப்பாவைக்கலக்கிய அரிய பிரச்சனைகள் பல அங்கு விவாதிக்கப்பட்டன. அந்த மன்றத்தில் அடிக்கடி பேசித் தம் நாவன்மையையும், வாதத்திறமையினையும் நெப்போலியன் வெளிக்காட்டி வந்தார். அப்போதெல்லாம் நெப் போலியன் மக்களின் உரிமைகளைப் பெரிதும் வரவேற்று முழங்கி னார். ஆனால் அவற்றை அடைய மக்கள் பின்பற்றும் இரத்தப் புரட்சியாலான கொடுமையை வன்மையாகக் கண்டித்தார்,

சொற்போர் மன்ற நடவடிக்கைகளில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்த நெப்போலியன் கார்சிகா வரலாற்றை வரைவதிலும் ஈடுபாடுகொண்டார். தாம் எழுதியவற்றின் சிறந்த பகுதிகளைத் தம் அன்னைக்குப் படித்துக்காட்டி மகிழ்வடைவார்.

பல ஆண்டுகாலம் தலைமறைவாக வாழ்ந்து தாயகம் திரும்பிய பயோலியிடம் நெப்போலியன் அளவுகடந்த பற்றும், பாசமும், மதிப்பும், மரியாதையும் கொண்டிருந்தார். தாம் பிறப்பதற்கு முன்பே தந்தையின் வழிகாட்டியாக இருந்து, தாயகத்தின் விடுதலைத் தளபதியாக விளங்கிய அவரை நெப்போலியனின் இளம் உள்ளம் நாடியதில் வியப்பில்லை. விடுதலைப்படையின் தலைவர் பதவியை மீண்டும் அவரிடம் ஒப்படைத்தார் நெப்போலியன். இளந்தளபதியும் முதுபெரும் தலைவரும் நெருங்கிய நண்பரானார்கள். அவர்களிருவரும் உரையாடுகின்ற நேரத்திலெல்லாம் நெப்போலியன் கார்சிகாவின் முழுவிடுதலையை — புதிய ஃபிரெஞ்சு அரசிடமிருந்து கார்சிகாவை விடுவிப்பதற்கான வழிவகைகளை — வற்புறுத்திவந்தார். பயோலியும் அவரது ஆற்றலைக் கண்டு வியந்தார். அவரது இதயத்தில் குமுறிக்கொண்டிருக்கும் எரிமலையை உணர்ந்தார். புளூடார்க்கின் வீரர்களது தீரம் நெப்போலியனிடம் குடிகொண்டிருப்பதை அறிந்து உள்ளம் பூரித்தார். அவரது நாட்டுப்பற்றினையும், அறிவாற்றலையும் கண்டு அவரை வெகுவாகப் பாராட்டினார். இருப்பினும், இரண்டு புகழ்பெற்ற விடுதலைவீரர்களிடையே கருத்துவேறுபாடும், கசப்புணர்ச்சியும் விரைவில் தோன்றுவதற்கான சூழ்நிலைகள் உருவாயின.

கார்சிகாவின் மாநில சுயாட்சியின்மூலம் சிக்கலான பிரச்சனைகள் பல தோன்றின. அசேசியோ, பாஸ்டியா என்பவை கார்சிகாவின் முக்கிய நகரங்கள். இவைகளில் எந்த நகரை தன்னாட்சிபெற்ற கார்சிகாவின் தலைநகராக்குவது என்பதில் கார்சிகரிடையே கருத்துமாறுபாடுகள் தோன்றின. நெப்போலியனும் அவரது ஆதரவாளர்களும் அசேசியோவை முன்மொழிந்தனர். ஆனால் பயோலியும் அவரது தோழர்களும் பாஸ்டியாவைத் தலைநகராக்க வாதாடினர். இந்தக் கருத்துமாறுபாட்டால் நெப்போலியனுக்கும் பயோலிக்குமிடையே நிலவிய நல்லுறவு பாதிக்கப்பட்டு மனவருத்தம் ஏற்பட்டது. மேலும், கார்சிகாவில் தங்களது ஆதிக்கத்தையிழந்த சமயக்குருக்களும், இழந்த சலுகைகளையும், செல்வாக்கினையும் மீண்டும் பெறக் கிளர்ச்சியிலீடுபாடு கொண்டனர். குடியரசுக் கொள்கைகளில் நாட்டங்கொண்ட நெப்போலியனை அவர்கள் ஒழித்துக்கட்ட முயன்றனர். குடியரசுக் கட்சியினை வெறுத்த பயோலியும் அவரது தோழர்களும் இப்போது நெப்போலியனுக்கெதிராக கிளர்ந்தெழுந்தனர். ஆகவே, கார்சி

காவில் கட்சிகளும், அவற்றிடையே கலகங்களும் தவிர்க்கமுடியாத வாறு மிகுந்தன. நெப்போலியனும் கொடியவர்களின் தாக்கு தலுக்குள்ளானார். எனவே, மேலும் கார்சிகாவில் தங்கி விடுதலைப் பணியாற்றுவது விழலுக்கிறைத்த நீராகும் என்று கருதிய நெப் போலியன் மீண்டும் பாரீஸ் சென்றார்.

கார்சிகாவின் விடுதலைக்காகப் போராடிய நெப்போலியன் தம் தாய்நாட்டைவிட்டு வெளியேறும் இக்கட்டான நிலை ஏற்பட்டது. கார்சிகா விடுதலைப்போரின் முதற்கட்டத்தில் அவர் வெற்றி வாய்ப்பினை இழந்தார். இருப்பினும், தோல்வியால் துவண்டு விடாது தாயகத்தின் விடுதலைக்காக மீண்டும் போராட அவர் தக்கதருணத்தை எதிர்நோக்கியிருந்தார். அத்தகைய வாய்ப்பும் அவருக்கு விரைவில் கிட்டியது. ஃபிரான்சில் தப்பியோட முயன்ற மன்னரைப் பிடித்ததிலிருந்து பெருங்குழப்பம் தோன்றி பயங்கர நிலை உருவாயிற்று. அதனைத்தொடர்ந்து கார்சிகாவிலும் குழப்பம் மிகுந்தது. உள்நாட்டுக்கலவரம் தோன்றியது. அதனைப் பயன் படுத்தி மீண்டும் கார்சிகாவை அந்நியர் பிடியிலிருந்து விடுவிக்க எண்ணினார் நெப்போலியன். எனவே, மீண்டும் விடுமுறையில் கார்சிகா சென்றார் போனபார்ட்.

ஃபிரான்சில் ஏற்பட்ட பயங்கர நிலை பயோலியின் மனதில் மாற்றத்தை உருவாக்கியது. ஃபிரெஞ்சு மக்களின் இரத்தப் பசியினையும், வெறியையும், அட்டூழியங்களையும் கேட்டு வெறுப் புற்ற அவர் கார்சிகாவில் ஆங்கில ஆட்சியை அமைக்கத் திட்ட மிட்டார். இருபதாண்டு காலம் இங்கிலாந்தில் அரசாங்க ஆதர வில் வாழ்ந்த பயோலி அந்த நாட்டின் அமைதியான அரசியலால் ஈர்க்கப் பெற்றார். ஆகவே, குழப்பம் மிகுந்த கொடிய ஃபிரெஞ்சு ஆட்சியில் சிக்குண்டு மாய்வதைவிட தம் தாயகத்தை அமைதி நிறைந்த ஆங்கில ஆட்சியுடன் இணைப்பதை அவர் மேலாகக் கருதி னார். ஆனால், ஆங்கில ஆதிபத்தியத்திற்குத் தாய்த்திருநாட்டை அடகுவைத்த அற்பன் என்ற பழி கார்சிகாவின் வரலாற்று ஏடுகளில் கறைபட்டுநிற்கும் என்பதை அவர் எண்ணிப்பார்க்க வில்லை. ஃபிரெஞ்சுப் புரட்சி அரசுக்கு எதிராகவும், நாட்டுப் பற்றுமிக்க கார்சிகர்களுக்கு விரோதமாகவும் பயோலி ஆங்கில ஆட்சியை கார்சிகாவில் நிலைநாட்ட ஆவல்கொண்டார். அவரது திட்டமும் சூழ்ச்சியும் விரைவில் வெளியாயின. அதனையறிந்த மக்கள் பலர் கொதித்தெழுந்தனர். அவரது கருத்தினை ஆதரித்த சிலர் அவரைப் பின்பற்றினர். ஆகவே, பயோலியின் திட்டம் கார்சிகாவிலும் பயங்கர நிலையை உருவாக்கிற்று. கார்சிகர்களுக் குள்ளேயே மோதல் தவிர்க்க முடியாததாயிற்று. ஒரு கார்சிகன் பிறிதொரு கார்சிகனை வீழ்த்துகின்ற விசித்திரநிலை பிறந்தது.

அவதூறு, அச்சம், அடுத்து என்ன நடக்குமோ என்ற ஏக்கம் கலந்த ஆவல், ஊழல், குழப்பம், கொடுமை போன்றவை கார்சிகாவின் அன்றாட நிகழ்ச்சிகளாகிவிட்டன. ஒவ்வொரு கார்சிகனும் ஆயுதந்தாங்கிப் போராடத் தயாராளுன். பழிவாங்கும் எண்ணம் கார்சிகர்களிடையே மேலோங்கி நின்றது. 'கார்சிகாவின் தந்தை' என்றழைக்கப்பட்ட பயோலி இப்போது நாட்டைக் காட்டிக் கொடுத்த நயவஞ்சகன் என்று பழிக்கப்பட்டார். அப்பழுக்கற்ற அரசியல்வாதி இன்று கார்சிக விடுதலை வரலாற்றில் தீராத களங்கமானுர். அவரது அரசியல் நாணயத்தில் மக்கள் அவநம்பிக்கை கொண்டனர். அவர் இன்று கார்சிகாவின் கொடும் பகைவராகக் கருதப்பட்டார். பாரிஸ் கன்வென்சன் மன்றத்தில் (**Paris Convention**) கார்சிகாவின் பிரதிநிதியாகப் பணியாற்றியவர் சாலிசெட்டி (**Saliceti**). அவர் இயல்பாகவே பயோலியின் மாருத பகைவர் ; அவரை எப்படியும் அரசியலில் பழிவாங்கத் திட்டமிட்டுக் கொண்டிருந்தார். அவருக்கு இப்போது அருமையான வாய்ப்புக் கிட்டியது. பயோலியின் திட்டத்தினைத் தவிடுபொடியாக்கிக் கார்சிகாவில் அவரைச் செல்லாக்காசாக்கும் பணியில் போனபார்ட்டுகளின் நல்லாதரவும் இப்போது சாலிசெட்டிக்குக் கிட்டிற்று. போனபார்ட்டுகள் இயல்பாகவே விடுதலைவிரும்பிகள். எனவே, அவர்கள் பயோலியின் திட்டத்தை வன்மையாகக் கண்டித்து எதிர்க்கக் கிளம்பினர். அசேசியோவில் நெப்போலியனுல் உருவாக்கப்பெற்ற ஜேகோபியர் மன்றமும் (**Jacobin Club**) இப்போது பிளவுண்டது. பயோலியை ஆதரிப்பவர்கள் அங்கு தங்கள் கருத்தினை வலியுறுத்தினர். பயோலியை எதிர்ப்பவர்கள் மிகவும் தீவிரவாதிகள்; ஃபிரெஞ்சுப் புரட்சியின் ஆதரவாளர்கள்; புரட்சி அரசினை கார்சிகாவிலும் நிலைநாட்ட உறுதிபூண்டவர்கள். எனவே, அவர்கள் பயோலியையும், அவரது ஆதரவாளர்களையும் கடுமையாகச் சாடினர்.

இவ்வாறு, கார்சிகாவில் குழப்பம் மூண்டது. அதனைப் பயன்படுத்திக் கார்சிகாவினை விடுவித்து அமைதியை நிலைநாட்ட விரும்பினுர் நெப்போலியன். சோசப், லூசியன் ஆகிய அவரது உடன்பிறப்புக்களும் அவரது உறவினர்களும் பிறரும் இப்போது அவருக்கு நல்லாதரவு நல்கினர். நெப்போலியனது அறிவாற்றலையும், போர்த்திறனையும் நன்குணர்ந்த கார்சிகர் பலர் இப்போது அவரது அணியில் திரண்டனர். பயோலி ஃபிரெஞ்சுப் புரட்சி அரசுக்கு எதிராக சதிசெய்கிருர் என்பதை அறிந்த ஃபிரெஞ்சு அரசு அவரைக் கைதுசெய்து காவலில் வைக்கும்படி ஆணை பிறப்பித்தது. ஆனுல், அந்த ஆணைக்குப் பணிய மறுத்துவிட்டார் பயோலி, கார்சிக மக்களும் அந்த ஆணையைப் புறக்கணித்துப்

பயோலிக்குத் தங்கள் முழுஆதரவினையும் நல்கினர். பயோலியை வெறுத்தவர்கள்கூட அந்த ஆணையினைக் கேள்விப்பட்டுத் தங்கள் ஆதரவினைக் காட்ட முன்வந்தனர். இந் நிலையில் நெப்போலியனது பணி சிக்கலாயிற்று. குழப்பத்தைப் பயன்படுத்தி பயோலியையும் அவரது ஆதரவாளர்களையும் வீழ்த்தி கார்சிக விடுதலையினைப் பெறமுயன்ற நெப்போலியனின் எண்ணம் ஈடேறவில்லை. நெப்போலியனே, ஃபிரெஞ்சு ஆணைக்கு எதிராக பயோலியை ஆதரிக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டார். ஆனால், பயோலியோ அவரைச் சந்தேகத்துடன் கண்காணித்துவந்தார். பயோலியும் அவரது ஆதரவாளர்களும் நெப்போலியனைப் 'பச்சைப்புரட்சிவாதி'யாகவே கருதிவந்தனர். இருப்பினும், பயோலி, நெப்போலியனின் பேராற்றலில் நிறைந்த நம்பிக்கை கொண்டிருந்தார். எனவே, ஒருநாள் அவர் நெப்போலியனை அணுகித் தமக்கு ஆதரவு தரும்படி வேண்டினார். பயோலியின் திட்டத்தை நன்கறிந்த நெப்போலியன் 'ஐயா! இத்தகைய தவறான எண்ணம் தங்களுக்கு உதித்ததேன்? அருள்கூர்ந்து அதனை ஒழியுங்கள். ஃபிரெஞ்சு மக்களின் அடாத செயல்கள் எனக்கு அருவெறுப்பையே தருகின்றன. ஆனால், அதிவிரைவில் அங்கு ஒழுக்கமும் அமைதியும் நிலைநாட்டப்படுமென நான் நம்புகின்றேன். ஐரோப்பிய வல்லரசுகளிடையே சிறிய கார்சிகா விடுதலைபெற்றுத் தனித்துநிற்றல் இயலாததொன்று. மொழி, சமயம், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றில் நமக்கும் ஆங்கிலேயருக்கும் நிறைய வேறுபாடுண்டு. எனவே, கார்சிகாவை இங்கிலாந்துடன் இணைப்பினும் அவ்விணைப்பு முற்றுப்பெற்றதாக அமையாது; நீண்டநாள் இரண்டு நாடுகளும் ஒற்றுமையுடன் இருத்தல் இயலாததாகும். மாறாக, ஃபிரான்சுக்கும் கார்சிகாவிற்குமிடையே இயற்கைத் தொடர்புகள் பல உள. ஃபிரான்சின் ஆட்சியே நமக்குப் பெருமையையும், நன்மையையும் தரவல்லது. அன்றியும், இன்றைய நெருக்கடியில், நம் தாயகத்துக்காக உண்மையாய் உழைத்து, ஒழுக்கக்கேடுகளைத் தகர்த்து அறத்தினைக் காத்தலே நம் தலையாய கடமையும் அறமுமாகும்' என ஆர்வத்துடன் மொழிந்தார். அதனைக் கேட்ட பயோலி வேறுவழியின்றித் திரும்பினார். ஆங்கில ஆட்சியை கார்சிகாவில் நிலைநாட்டத்துணிந்த பயோலியும், கார்சிகாவின் விடுதலையில் நாட்டங்கொண்ட நெப்போலியனும் உயர்ந்த இலட்சிய வீரர்கள். இருப்பினும், அவர்களிடையே கருத்துவேறுபாடுகள் தவிர்க்கமுடியாதனவாயின. இதுவே அவ்விரண்டு பெரிய வீரர்களின் இறுதிச்சந்திப்பு. கார்சிகாவின் தனித்த பகுதியிலுள்ள ஒரு மடத்தில் இந்தச் சந்திப்பு இடம்பெற்றது. எண்பது வயதினைத் தாண்டிய பயோலியும், இருபத்திநான்கு ஆண்டுகள் நிறைவு பெற்ற நெப்போலியனும் நாட்டுநலனில் நாட்டங்கொண்ட

காரணத்தால் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்க இயலாத நிலையில் பிரிந்தனர். இருப்பினும், கருத்துமாறுபட்ட நிலையிலும் ஒருவருக்கொருவர் வாள்கொண்டு மோதத் தயங்கினர். ஆனுல், வேறுவழியின்றிப் போரிடத் தயாராயினர்.

பயோலியைச் சந்தித்துவிட்டுத் தனியாக நெப்போலியன் வீடுநோக்கிச் சென்றுகொண்டிருந்தார். அப்போது பயோலியின் ஆதரவாளர்கள் அவரை வழிமறித்து சிறைப்படுத்தினர். நெப்போலியன் அவர்களிடமிருந்து இலாவகமாகத் தப்பிச்சென்று தேசியப்படையின் தளபதியாகி, பயோலியின் படைகளை எதிர்த்துப் போரிட்டார். இவ்வாறு, உள்நாட்டுக்கிளர்ச்சி உச்சக்கட்டத்தை நோக்கி விரைந்துகொண்டிருந்த வேளையில், பயோலி கார்சிகாவின் ஆட்சியை ஆங்கிலேயரிடம் ஒப்படைத்தார். ஆங்கில அரசும் அதனை விரும்பி ஏற்றுக்கொண்டது. அதனையறிந்த நெப்போலியன் கார்சிகாவிலிருந்து ஆங்கிலேயரை வெளியேற்ற அரும்பாடுபட்டார். ஒருநாள் நள்ளிரவு, ஒரு சிறு படையுடன் சென்று திடீரென்று ஆங்கிலேயரைத் தாக்கி அசேசியோக் கோட்டையைப் பிடித்தார் நெப்போலியன். ஆனுல், அடுத்தநாள் காலை கார்சிகர்களும் ஆங்கிலேயர்களும் சேர்ந்த பெரும்படையொன்று நெப்போலியனது சிறுபடையைச் சுற்றிவளைத்துக்கொண்டது. ஐந்து நாட்கள் நெப்போலியனும் அவரது வீரர்களும் தீரமாகப் போராடி கோட்டையைக் காக்கும் பணியினை மேற்கொண்டனர். இருப்பினும், அவர்களால் ஈடுகொடுக்க இயலவில்லை. உணவிற்காகத் தங்கள் குதிரைகளையே கொன்றுதின்னும் இக்கட்டான நிலைக்கு அவர்கள் தள்ளப்பட்டனர். ஆகவே, வேறுவழியின்றி தக்கநேரத்தில் கோட்டையைக் காலிசெய்து தம் வீரர்களுடன் நெப்போலியன் பாதுகாப்பாகச் சென்றுவிட்டார். கார்சிகா விடுதலைப் போரில் மீண்டும் வெற்றிவாய்ப்பினை இழந்தார் நெப்போலியன். பயோலியின் வலிமை நாள்தோறும் வளர்ந்துவந்தது ; ஆங்கிலேயரின் ஆதரவும் அவருக்கு அனுகூலமாக அமைந்தது. எனவே, எதிரியின் வலிவினையறிந்த நெப்போலியன் தம்முடைய விடுதலைப் போராட்டத்தை நிறுத்திவைக்க முன்வந்தார். அன்றியும், கார்சிகாவில் தாமும் தமது குடும்பத்தினரும் வாழ்தல் பாதுகாப்பிற்கு உகந்ததல்ல என்பதை உணர்ந்தார். எனவே, படையைக் கலைத்துவிட்டுக் கார்சிகாவைவிட்டு வெளியேறத் தயாரானுர். இந்நிலையில், பயோலி நெப்போலியனின் அன்னை இலத்தீசியாவை அணுகி, கார்சிகாவை ஆங்கிலேயரிடம் ஒப்படைத்தது அறிவாய்ந்த செயலென்றும் அதனை ஆதரித்துத் தம்முடன் ஒத்துழைக்கும்படி நெப்போலியனுக்கு அறிவுரை கூறும்படியும் வேண்டினுர். மேலும், ஆங்கிலேயரை இனி எதிர்ப்பதில் பயனில்லையென்றும்

அவர்களை எதிர்ப்பதின்மூலம் நெப்போலியனும் அவரது குடும்பத்தினரும் துன்பத்தை வலிய வரவழைத்துக்கொள்கின்றனர் என்றும் பலவாறு எடுத்துரைத்தார். அதனைக் கேள்வியுற்ற அந்த வீரத்தாய் 'நான் பணிந்து நடக்கவேண்டிய சட்டங்கள் இரண்டுதான் ; ஒன்று கடமை, பிறிதொன்று தன்மானம்' என்று சட்டென்று பதிலுரைத்தார். அதனைக் கேள்வியுற்ற பயோலி வேறுவழியின்றி வீடு திரும்பினார். ஆனால், அடுத்தநாள் நெப்போலியனும் அவரது குடும்பத்தினரும் கார்சிகாவைவிட்டு உடனடியாக வெளியேறவேண்டும் என்ற ஆணை பிறந்தது. எந்தக் குடும்பம் கார்சிகாவின் விடுதலைக்கு வித்திட்டதோ அந்தக்குடும்பம் இன்று அச் சிறு தீவினைவிட்டு வெளியேறும் நிலைக்குத் தள்ளப்பட்டது. கார்சிகாவின் வாழ்விலும் தாழ்விலும் பங்கெடுத்துக் கொண்ட குடும்பம், இன்று அந்தப் புனிதபூமியைவிட்டு வெளியேறும் அவலநிலை. அன்று வயிற்றில் குழந்தையுடன் விடுதலைப் போரில் வீறுநடைபோட்ட வீராங்கனை, இன்று அந்தத் தாயகத்தைவிட்டு வெளியேற ஆணை பிறந்தது நன்றி கொன்றவர்களால். விடுதலைப்பண் பாடிய வீரமறவர் வழிவழிவந்தவர் போன பார்ட்டுகள். கார்சிகாவின் வளர்ச்சிக்குத் தங்களால் இயன்றளவு பங்கினைச் செலுத்தியவர்கள் நெப்போலியனது குடும்பத்தினர். இன்று நொந்த உள்ளத்துடன் பிறந்த நாட்டைவிட்டு வெளியேறக் காலம் வந்ததை நினைத்து கலங்காதவாறு நெப்போலியனும் அவரது குடும்பத்தினரும் தயாராயினர். ஆனால், நாடு கடத்திய ஆணையுடன் அவர்களை விட்டுவிடவில்லை பயோலியின் அடிவருடிகள். ஆங்கில ஆதிக்கத்தின் ஆசைவார்த்தைகளில் மயங்கிய பயோலியின் ஆதரவாளர்கள், நெப்போலியனையும் அவரது குடும்பத்தினரையும் ஒட்டுமொத்தமாகத் தொலைத்துக்கட்டவும் முன் வந்தனர். ஆயிரத்துக்குமேற்பட்ட பயோலியின் ஆட்கள் ஆயுதங்களுடன் நெப்போலியனின் இல்லத்தை நோக்கி விரைந்தனர். அதனை அறிந்த நெப்போலியன் தமது அன்னையையும் உடன்பிறப்புகளையும் அழைத்துக்கொண்டு உடனடியாகக் கிளம்பினார் வீட்டைவிட்டு. சொத்துக்களை, உடைமைகளையெல்லாம் விட்டுவிட்டு கட்டிய உடையுடன் அவர்கள் வீட்டைவிட்டு வெளியேறினர். அவர்கள் வெளியேறிய சிறிது நேரத்தில் நெப்போலியனின் இல்லம் இடித்துத்தள்ளப்பட்டது; பொருள்கள் எல்லாம் உடைத்து நொறுக்கப்பட்டன பயோலியின் பயங்கர ஆட்களால்.

வீட்டைவிட்டு வெளியேறிய நெப்போலியனும் அவரது குடும்பத்தினரும், பலநாள் உணவின்றி, உறக்கமின்றி காடுமேடெல்லாம் அலைந்து இறுதியில் கடற்கரை வந்துசேர்ந்தனர். நள்ளிரவு; ஒரு சிறு விளக்கு வழிகாட்ட; எங்கும் அமைதி; ஒவ்வொருவர்

முகத்திலும் துன்பத்தின் சுவடுகள்; வீடிழந்து, விரும்பிய பொரு ளிழந்து, நாடிழந்து, நல்ல நண்பர்களேயுமிழந்து, அவர்கள் ஒரு சிறு படகில் ஏறினர். அப்படகும் இருளில் நகர்ந்தது. விரைவில் அவர் களுக்காக ஏற்பாடுசெய்யப்பட்ட ஒரு சிறு கப்பலில் ஏறினர். அடுத்தநாள் காலே, நடுநிலக்கடலின் கரையிலுள்ள நிஸ் (Nice) துறையை அடைந்தனர். அங்கு சிறிதுகாலம் தங்கிவிட்டு அவர்கள் மார்சேல்ஸ் (Marsailles) நகரை அடைந்தனர். அந்த நகரில் நெப் போலியனது குடும்பம் வறுமையில் வாழ்வுப் பயணத்தைத் தொடங்கியது. நெப்போலியன் புகழ்பெற்று வாழ்வின் உச்சியில் உலாவரும்வரை அக்குடும்பம் வறுமையில் வாடியது.

பயோலியின் பயங்கரச்சதி தற்காலிகமாக வென்றது. நாட் டுப்பற்றுமிக்க ஒரு நல்ல குடும்பம் நாடுகடத்தப்பட்டது. பயோலி வினே விதைத்தார் கார்சிகாவில்; அதே வினேயை அறுவடை செய்யுங்காலமும் விரைந்து வந்துகொண்டிருந்தது. ‘பிறர்க்கின்ளு முற்பகல் செய்யின் தமக்கின்ளு பிற்பகல் தாமே வரும்’ என்பது குறள்மொழி. பயோலியின் திட்டத்தால் கார்சிகாவில் உருவான ஆங்கில ஆட்சியின் ஆயுட்காலம் இரண்டு ஆண்டுகள் தான். மொழியால், இனத்தால், சமயத்தால், பழக்கவழக்கங் களால், பண்பாட்டால் முற்றிலும் வேறுபட்ட ஆங்கில ஆட்சியை எதிர்த்துக் கிளர்ந்தனர் திடபுத்தியற்ற கார்சிகர்கள். பயோலி யின் வேண்டுகோள் இப்போது பயனளிக்கவில்லே. ஆங்கில ஆட்சி அகற்றப்படவேண்டும் என்பதே கார்சிகர்களின் தணியாத தாகம். எனவே, குன்றுகளில் வேட்டுச்சத்தம் கிளம்பியது. ஆங்கிலேயர் பலர் கொல்லப்பட்டனர். கிளர்ச்சிகளும் குழப்பமும் மீண்டும் தலேவிரித்தாடின. அதனேயறிந்த நெப்போலியன் ஒரு படையுடன் கார்சிகாமீது படையெடுத்து ஆங்கிலேயர்களே விரட்டிஞர். கார்சிகா மீண்டும் ஃபிரான்சின் ஆட்சிக்குட்பட்டது. பயோலியும் ஆங்கிலேயரின் ஆதரவுடன் இங்கிலாந்து சென்ருர். எனவே, நெப்போலியன் இறுதியில் வெற்றிபெற்ருலும் தம் தாயகத்தில் மீண்டும் வாழும் வாய்ப்பினேப் பெறவில்லே. ஆஞல், தாம் பிறந்த அச் சிறு தீவினேப்பற்றியும், அதன் அழகுபற்றியும் அவர் வசித்த இல்லத்தின் எழில்பற்றியும், அங்கு தாம் பெற்ற பயிற்சிபற்றியும், அடிக்கடி எண்ணி மகிழ்வதுண்டு. தாயகத்தில் தாம் பெற்ற இளமைக்காட்சிகள் அவரது உள்ளத்தில் என்றும் பசுமையாகக் காட்சியளித்தன.

## உறுதுணைபுரிந்த நூல்கள்

1. ஐரோப்பாவின் புரட்சிக் காலம் — போர்ன்

2. ஃபிரெஞ்சுப்புரட்சி — ஸ்டீபென்ஸ்

3. ஜேகோபியர்கள் — சி. பிரின்டன்

4. ஃபிரெஞ்சுப்புரட்சி — ஏ. குட்வின்

5. கார்சிகன் — ஜான்ஸ்டன் ஆர். எம்.

6. நெப்போலியன் — லட்விக் (Ludwig)

7. நெப்போலியனது வாழ்க்கை — ஜோசப் எல். சி. ஆப்பட்.

# 5. மனமாற்றமும் புகழின் தொடக்கமும்

1789ஆம் ஆண்டு ஜுன் திங்கள் பதினேழாம் நாள் ஃபிரான்சு நாட்டின் வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்ட நன்னாளாகும். அன்றுதான் தேசியச் சட்டமன்றம் (National-Assembly) ஃபிரான்சில் முதன்முறையாக உருப்பெற்றது. மன்னரின் ஆணவத்தை அடக்க அமைந்த அந்தப் பெருமன்றத்தை நசுக்க முற்பட்டார் பதினாறும் லூயி. தேசியத்திலும், சீர்திருத்தங்களிலும் நாட்டங்கொண்ட மக்களை நசுக்கும்வகையில் வெர்சாயி நகரிலும், பாரிசிலும் படைகள் குவிக்கப்பட்டன. 1789ஆம் ஆண்டு ஜுலைத்திங்கள் 11ஆம் நாள் மக்களின் நலன் கருதிய அமைச்சர் நெக்கரும் (Necker) அவரது கூட்டாளிகளும் பதவியிலிருந்து நீக்கப்பட்டனர். நெக்கர் உடனடியாக நாட்டைவிட்டு வெளியேறவேண்டும் என்ற ஆணையும் பிறப்பிக்கப்பட்டது. அதனையறிந்த பாரிஸ் நகரமக்கள் மன்னனை எதிர்த்துக் கிளர்ந்தெழுந்தனர். அன்றியும், மன்னராட்சியின் பழமைச் சின்னமான பாஸ்டில் கோட்டையில் வெடிமருந்து அதிக அளவில் இருப்பதாக வதந்தி கிளம்பியது. அதனைக் கேள்வியுற்ற புரட்சிக்காரர்கள் வெகுண்டெழுந்தனர். 1789ஆம் ஆண்டு ஜுலைத் திங்கள் பதினான்காம் நாள் அவர்கள் பாஸ்டில் கோட்டையைத் தகர்த்துத் தரைமட்டமாக்கினர். மமதைமிக்க மன்னரின் எண்ணம் தூள்தூளானது. பாஸ்டிலின் வீழ்ச்சி விடுதலையின் வெற்றியாகக் கருதப்பட்டது. ஃபிரான்சில் மட்டுமின்றி உலகமுழுவதிலும் உள்ள விடுதலை இயக்கங்களின் முன்னோடியாக பாஸ்டிலின் வீழ்ச்சி மிளிர்ந்தது. வல்லாட்சியின் மிகப்பழைய சின்னமான பாஸ்டிலைத் தகர்த்தெறிந்த நன்னாளை இன்றும் ஃபிரான்சு மக்கள் தேசிய விடுமுறைநாளாகக் கொண்டாடுகிறார்கள். பாஸ்டிலை வீழ்த்திய புரட்சியாளர்கள் பாரிசில் புதிய ஆட்சியையும் ஏற்படுத்தினார்கள். இலெஃபெயத் (Lafayette) என்பவரின் தலைமையில் தேசியப் புரட்சிப்படை (National Guard) ஒன்றும் அமைக்கப் பெற்றது.

பாஸ்டிலின் வீழ்ச்சி மன்னரின் மமதைக் கண்களைத் திறந்தது. உடனே, மன்னர் பாரிசிலும் வெர்சாயியிலும் நிறுத்திவைத்திருந்த படைகளை விலக்கினார். நெக்கரை மீண்டும் அமைச்சராக்கினார். தேசியப் புரட்சிப்படையை அங்கீகரித்தார். இருப்பினும், புரட்சியாளர்கள் மனநிறைவு கொள்ளவில்லை. மாறாக, ஃபிரான்சின் பல்வேறு நகரங்களில் தேசியப் புரட்சிப் படைகள் உருவாக்கப் பட்டன. நாட்டுப்புறங்களில் உழவர்கள் பண்ணை முதலாளிகளை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். நிலப்பிரபுக்களின் வீடுகள் கொளுத்தப்பட்டன. அவர்களது கோட்டை கொத்தளங்கள் நொறுக்கப்பட்டன. அதனால் பிரபுக்கள் பலர் நாட்டை விட்டுச் சென்று வெளிநாடுகளில் குடியேறினர். புரட்சியாளர்களின் கொடுஞ்செயலைக் கண்ட மன்னர் மீண்டும் அவர்களை அடக்கும் பணியினை மேற்கொண்டார். பெரும்படை ஒன்றினைத் திரட்டினார். படைவீரர்களுக்கு வெர்சாயியில் விருந்தொன்றும் ஏற்பாடு செய்தார். உணவுப் பற்றாக்குறையால் பாதிக்கப்பட்ட பாரிஸ் மக்கள் அதனை அறிந்து கோபங்கொண்டனர். மன்னரைத் தங்களின் நேரடிக் கண்காணிப்பில் வைக்கவேண்டுமென்று விரும்பினர். எனவே, பாரிஸ் நகரத்துப் பெண்கள் வெர்சாயி அரண் மனையைநோக்கி அணிவகுத்துச் சென்றனர். பதினாறும் லூயி மன்னரும், அரசி அந்துவாநெட்டும் அவரது குழந்தையும் சிறை பிடிக்கப்பெற்றுத் தெருவழியே இழுத்துவரப்பட்டனர். 'இதோ! ரொட்டி சுடுபவர் ; அவருடைய மனைவி, சிறிய சமையல்காரப் பையன் ; இனி நமக்கு ரொட்டி கிடைக்கும்' என அவர்கள் தெருவெல்லாம் முழங்கிக்கொண்டே வந்தனர். மன்னரும் வேறுவழியின்றி மக்களின் வேண்டுகோளுக்கு இசைந்தார். தேசிய சட்ட மன்றமும் மக்களின் கருத்துகளுக்கு மதிப்பளிக்கும்வகையில் மன்னரைப் பின்தொடர்ந்தது. மன்னரும் தேசிய சட்டமன்றமும் பாரிஸ் மக்களைச் சார்ந்திருக்க வேண்டியதாயிற்று.

இத்தகைய நெருக்கடியான சூழ்நிலையில் தேசியச் சட்ட மன்றம் கூடித் தனது சிறப்பான பணிகளை ஆற்றியது. 1789ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் நான்காம் நாள் இரவு கூடிய தேசியச் சட்டமன்றம் படைமான்ய முறையையும், தனிச்சலுகைகளையும், உரிமைகளையும் ஒழித்தது. பிரபுக்களும் மதகுருக்களும் அனுபவித்துவந்த தனிச்சலுகைகளும் உரிமைகளும் ஒழிந்தன. மக்களின் நலன் கருதி நாடுமுழுமைக்கும் ஒரேசீரான நிர்வாகம் அறிமுகப் படுத்தப்பட்டது. ஃபிரான்சின் நிதி நெருக்கடியினையும் போக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. மதகுருக்களுக்கு மக்கள் செலுத்திவந்த வரிகள் தள்ளுபடி செய்யப்பட்டன. திருச்சபைச்

சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன. திருச்சபை ஊழியர்கள் சம்பளம் பெறும் அரசாங்க அலுவலர்களாக மாறினர். தேசியச் சட்டமன்றத்தின் சிறப்பான சாதனைகளில் ஒன்று அது ஃபிரான்சு நாட்டிற்களித்த அரசியலமைப்பாகும். இதுவே ஃபிரான்சு நாட்டின் எழுதிவைக்கப்பட்ட முதல் அரசியலமைப்பாகும். 1791ல் அவ்வரசியலமைப்பு முழுவடிவம் பெற்றது. மக்களின் உரிமைகள் பல அச்சட்டத்தில் அறிவிக்கப்பட்டிருந்தன. மக்களனை வரும் சமமானவர்கள் ; மக்களே இறைமை அதிகாரம் பெற்ற வர்கள் ; சட்டமியற்றுவதில் மக்களுக்குப் பங்குண்டு ; பேச்சுரிமை மிகப்புனிதமானதொன்று ; விசாரணையின்றி எவரையும் சிறையி லடைத்தல் முடியாது என்ற உரிமைகள் நிலைநாட்டப்பட்டன. அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் அடிப்படையில் சட்டத் துறை, நிர்வாகத்துறை, நீதித்துறை ஆகியவை தனித்தனி அமைப் புகளிடம் ஒப்படைக்கப்பட்டன. மன்னருக்குச் சட்டமியற்றும் அதிகாரம் அளிக்கப்படவில்லை. நீதித்துறையிலும் அவருக்கு அதிகாரம் வழங்கப்படவில்லை. நீதிபதிகள் மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்டனர். தலஆட்சியும், மக்களாட்சி அடிப்படையில் திருத்தியமைக்கப்பட்டது. ஆட்சித்துறைகளிலும், வட்ட ஆட்சிப் பகுதிகளிலும் (Communes) மாவட்டங்களிலும் மக்களாட்சி மலர்ந்தது.

இத்தகைய சிறப்பான அரசியலமைப்பை உருவாக்கிவிட்டு 1791ஆம் ஆண்டு தேசியச் சட்டமன்றம் கலைந்தது. அதிகாரங் கள் பலவற்றை இழந்த மன்னரும் பல்பிடுங்கப்பட்டு பாம்பாட்டி யிடம் சிக்கிய பாம்பைப்போல தவித்தார். அவர் பெரும்பாலும் சிறைக்கைதியாகவே வாழ்ந்தார். ஆகவே, மன்னரும் அவரது குடும்பத்தினரும் ஆஸ்திரியாவுக்கு மாறுவேடத்தில் தப்பியோட முயன்றனர். ஆனல், ஆஸ்திரிய எல்லைக்கு இருபது கல் தொலைவில் அவர்கள் பிடிபட்டு மீண்டும் பாரிசுக்கு இழுத்துவரப்பட்டனர். மன்னர் புதிய அரசியலமைப்பின் எதிரியாகக் கருதப்பட்டார். புரட்சிக் கருத்துகளின் விரோதியாக அவர் காணப்பட்டார். எனவே, மன்னராட்சியை ஒழித்து மக்களாட்சியை ஃபிரான்சில் நிறுவத் தீவிரவாதிகள் முன்வந்தனர். ஆனல், தேசியச் சட்ட மன்றத்தில் அரசியலமைப்பிற்குட்பட்ட மன்னராட்சியை ஆதரிக் கின்ற உறுப்பினர்கள் பெரும்பான்மையாக இருந்த காரணத்தால் மன்னர்மீது கடுமையான நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை. இருப்பினும் பதினாரும் லூயி புதிய அரசியலமைப்பினை முழு மனதுடன் ஆதரிப்பதாக உறுதிமொழி எடுத்துக்கொண்டார்.

1791ஆம் ஆண்டு புதிய சட்டமன்றம் கூடியது. அதில் கிராண்டியர் (Girondists), ஜேகோபியர் என்ற இரண்டு கட்சி

யினர் செல்வாக்குடன் விளங்கினர். கிராண்டியர் சட்ட மன்றத்தில் பெரும்பான்மை பெற்றிருந்தனர். அவர்களின் தலைவர்கள் பலர் கிராண்டே என்னும் பகுதியிலிருந்து வந்த காரணத்தால் அவர்கள் கிராண்டியர் என அழைக்கப்பட்டனர். கிராண்டியர்கள் நல்ல படிப்பாளிகள்; பகுத்தறிவுவாதிகள்; அரசியலில் நல்லெண்ணமும், நாணயமும் கொண்டவர்கள்; தூய்மையான நோக்குடையவர்கள்; கொள்கைப் பிடிப்புடையவர்கள்; தங்களது செயல்முறைகளில் சிறிதும் வழுவாதவர்கள்; அரசியலில் அப்பழுக்கற்றவர்கள்; கறைபடாத கையினர். ஃபிரான்சில் குடியரசை நிலைநாட்டுவதே அவர்களது குறிக்கோள். ஆனால், அரசியலில் அவர்கள் மிதவாதிகள். ஃபிரான்சு பிற ஐரோப்பிய நாடுகளுடன் போர் தொடுப்பதின்மூலம் ஃபிரான்சில் மன்னராட்சி ஒழிந்து மக்களாட்சி நிலைநாட்டப்படும் என்ற நம்பிக்கை கொண்டவர்கள். அவர்களது போர் ஆர்வத்தின் காரணமாகவே 1792 ஏப்ரல் திங்கள் ஃபிரான்சு, ஆஸ்திரியாவின்மீது போர் தொடுத்தது. உரோலண்ட் அம்மையார் **(Roland)** கிராண்டியர்களின் சிறந்த தலைவராகத் திகழ்ந்தார்.

ஜேகோபியர்கள் **(Jacobins)** சட்டமன்றத்தில் சிறுபான்மையினர். அவர்களது இயக்கம் முதன்முதலில் தூய ஜேக் **(St. Jacques)** மடத்தில் கூடியதால் அக்கட்சியினர் ஜேகோபியர் எனப் பெயர்பெற்றனர். ஆனால், வெகுவிரைவில் ஃபிரான்சு முழுதும் தங்கள் கட்சியின் கிளைகளைப் பெருக்கிக் காட்டினர். 1792 ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்களில் 26000 க்கு மேற்பட்ட ஜேகோபியர் கிளைகள் ஃபிரான்சு முழுதும் அமைக்கப்பட்டிருந்தன. ஜேகோபியர்களில் பலர் படிப்பறிவற்றவர்கள்; பழிபாவங்களுக்கு அஞ்சாதவர்கள்; கொடுமைக்காரர்கள்; அரசியலில் நாணயமும், நல்லெண்ணமுமற்றவர்கள்; இலஞ்சம் போன்ற ஒழுக்கக்கேடுகளை உடையவர்கள். மக்களே அதிகாரங்கள் அத்தனையும் பெற்றிருக்க வேண்டும்; சட்டமும், அரசாங்கமும் அவர்களது கட்டுப்பாட்டின் கீழ் இயங்கவேண்டும்; ஆட்சியாளர்களை மக்கள் அடிக்கடி கண்காணித்து வரவேண்டும்; மக்களுக்குப் பணிந்து நடப்பதே அரசாங்கத்தின் கடமை என்பதே அவர்களது கொள்கை. ஜேகோபியர்களின் தலைவர்கள் பலர் நன்கு கற்ற மேதைகள். அவர்கள் பெரும்பாலும் நடுத்தர வகுப்பினைச் சார்ந்தவர்கள். தத்துவமேதைகள், சமயக்குருக்கள், நாடகநடிகர்கள், வழக்கறிஞர்கள், வணிகர்கள், எழுத்தர்கள் போன்ற பல்வேறு துறையினரும் ஜேகோபியர் மன்றங்களில் உறுப்பினர்களாயிருந்தனர். டாண்டன் **(Danton)**, உரோபஸ்பியர் **(Robes-pierre)**, தூய ஜஸ்ட் **(St.Just)** போன்றவர்கள் அக்கட்சியின் சிறப்பான தலைவர்களாவர்.

ஃபிரான்சின் பல்வேறு பகுதிகளில் அமைந்திருந்த ஜேகோபியர் கழகங்களே புரட்சியின் மையங்களாகத் திகழ்ந்தன. ஜேகோபி யர்கள் பெரும்பாலும் தீவிரவாதிகள்; இந்த இயக்கத்தில் தீவிரப் பற்றுடையவர்களாக விளங்கினர்.

ஃபிரான்சு அரசியலரங்கில் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்ட கிராண்டியர்களும், ஜேகோபியர்களும் முயன்று போராடிக் கொண்டிருந்த நேரத்தில், ஃபிரான்சும் பிற ஐரோப்பிய நாடு களுடன் போராடவேண்டிய நிலைக்குத்தள்ளப்பட்டது. ஃபிரெஞ் சுப் புரட்சியாளர்கள் தங்களது புரட்சிக் கருத்துகளைப் பிறநாடு களிலும் பரப்பத் துடித்தனர். ஐரோப்பிய நாடுகளனைத்திலும் மன்னராட்சியை மாய்த்து மக்களாட்சியை நிலைநாட்ட அவர்கள் விரும்பினர். அதனை அறிந்த பிற ஐரோப்பிய நாட்டவர்கள் ஃபிரெஞ்சு புரட்சியாளருக்கெதிராகத் திரண்டனர். புரட்சியை நசுக்கி மீண்டும் மன்னருக்கு நல்வாழ்வளிக்க அவர்கள் முன்வந் தனர். அன்றியும், ஃபிரெஞ்சுப் புரட்சியின் கொடுமைதாங்காது, பிறநாடுகளில் சென்று குடியேறிய ஃபிரெஞ்சு மேட்டுக்குடியின ரும் புரட்சியாளர்களின் அட்டூழியங்களையும் அடாத செயல்களை யும் தாங்கள் குடியேறிய நாடுகளில் பரப்பினர். அவர்களில் பெரும்பாலோர் ஜெர்மானிய நாடுகளில் குடியேறினர். அவர் களுக்கு ஆஸ்திரியா ஆதரவளித்தது. ஆகவே, ஃபிரான்சு, இயல்பாக வே ஆஸ்திரியாமீது கோபங்கொண்டது. மேலும், போப்பிற்குச் சொந்தமான ஏவிக்னன் (Avignon) என்ற இடத்தை ஃபிரான்சு பிடித்து இணைத்துக்கொண்டது. ஃபிரான்சின் இத்தகைய நடவடிக் கை, பன்னாட்டுச் சட்டத்தை (International Law) மீறிய செய லாகக் கருதப்பட்டது. இந்நிலையில், 1791ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 27ஆம் நாள் ஆஸ்திரியாவும் பிரஷ்யாவும் சேர்ந்து ஃபிரெஞ்சுப் புரட்சிக்கு எதிராக அறிக்கை ஒன்றினை (Declaration of Pillnitz) வெளியிட்டனர். ஃபிரெஞ்சுப் பேரரசி மரியஅந்து வானட் ஆஸ்திரியப் பேரரசரின் சகோதரியாவார். அவருக்கும் அரச குடும்பத்தினருக்கும் புரட்சிக்காரர்களால் எவ்வித ஆபத்தும் ஏற்படாவண்ணம் பாதுகாக்கவே அந்த அறிக்கை வெளியிடப் பட்டது. அதனைத்தொடர்ந்து ஆஸ்திரியா, பிரஷ்யா போன்ற ஐரோப்பிய நாடுகள் ஃபிரெஞ்சு விவகாரங்களில் தலையிடத் தயா ராயின. இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்தி ஆஸ்திரியாவுடன் போரில் குதித்து மன்னராட்சியை மாய்த்து ஃபிரான்சில் குடியரசை ஏற்படுத்த புரட்சியாளர் விரும்பினர். ஜேக்கோ பியர்கள், நாட்டில் வல்லாட்சி மீண்டும் தலைதூக்கும் என்ற அச்சத்தின்காரணமாகப் போரினை எதிர்த்தனர். ஆனால், அவர் களது எதிர்ப்பு எடுபடவில்லை. பிற நாட்டவர் ஃபிரெஞ்சு

விவகாரங்களில் தலையிடுவதை வெறுத்த மக்கள் போருக்கு ஆதரவு நல்கினர். ஆகவே, 1792ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் ஃபிரான்சு, ஆஸ்திரியாவுக்கு எதிராகப் போரில் குதித்தது. கிராண்டியர்கள் போருக்கு ஆதரவு நல்கி பிற ஐரோப்பிய நாடுகளுடன் போரில் குதித்தாலும், போரினை வெற்றிகரமாக நடாத்தும் ஆற்றலைப் பெற்றிருக்கவில்லை. ஃபிரெஞ்சுப்படைகள் பலமுனைகளில் தோல்வியைத் தொட்டணைத்துக்கொண்டன. ஃபிரான்சின் பெல்ஜியத் தாக்குதல் முறியடிக்கப்பட்டது. ஆஸ்திரிய, பிரஷ்யப் படைகள் ஃபிரெஞ்சுப் படைகளைத் தோற்கடித்தன. தோல்விக்கான காரணங்களை ஃபிரெஞ்சுக்காரர்கள் அலசி ஆராய முற்பட்டனர். மன்னரும், அரசகுடும்பத்தினரும் இராணுவ இரகசியங்களை எதிரிகளுக்கு வெளியிட்ட காரணத்தால் ஃபிரெஞ்சுப் படைகள் தோற்றன என்றும், ஆகவே, தோல்விக்கு அரசரே முழுப்பொறுப்பாவார் என்றும் ஃபிரெஞ்சுக்காரர்கள் மன்னர்மீது குற்றம் சாட்டினர். இந் நிலையில் 1792ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் எதிரிகளின் படைத்தலைவரான பிரன்ஸ்விக் கோமகன் (Duke of Brunsvick) அறிக்கை ஒன்றினை வெளியிட்டார். லூயி மன்னர் குடும்பத்திற்குக் கேடு விளைவிப்பவர்கள் கடுந்தண்டனைக்குள்ளாவார்கள் என்றும், மீண்டும் ஃபிரான்சில் மன்னராதிக்கம் நிலைநாட்டப்படுமென்றும் அவர் அவ்வறிக்கையில் குறிப்பிட்டிருந்தார். அவ்வறிக்கைக்குப் பதிலிறுக்கும்வகையில் பாரிஸ் மக்கள் மன்னரை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். ஜேகோபியர்களின் தலைவர்களான டாண்டனும் உரோபஸ்பியரும் பாரிஸ் புரட்சியாளர்களுக்குத் தூண்டுகோலாக விளங்கினர்.

புரட்சிக்காரர்கள் பாரிஸ் நகர ஆட்சியைக் கைப்பற்றினர். ஆண்களும் பெண்களும் கலந்த பெருங்கூட்டமொன்று மன்னர் மாளிகையைத் தாக்கியது. முப்பதாயிரத்துக்கு மேற்பட்ட அக்கூட்டம் அரண்மனைத் தோட்டத்திற்குள் புகுந்து மன்னரது மாளிகையிலுள்ள கதவுகளையும், சாளரங்களையும் உடைத்து நொறுக்கி அரசரைத் தங்களுக்குப் பணியும்படி வற்புறுத்தியது. ஜேகோபியர்களின் சிவப்புக் குல்லாவை அணியும்படி அவரைக் கட்டாயப்படுத்தினர் கலகக்காரர்கள். மன்னருடைய காவலாளிகள் கொல்லப்பட்டனர். மன்னரும் வேறு வழியின்றி சட்டமன்றத்தில் அடைக்கலம் புகுந்தார். சட்டசபைமுன்பும் புரட்சிக்காரர்கள் மன்னராட்சியை நீக்கவேண்டுமென்று கூச்சல் போட்டனர். மன்னரும் சிறைப்படுத்தப்பட்டார். 1792 ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் பத்தாம் நாள், மன்னர் தற்காலிகமாக விலக்கி வைக்கப்பட்டார். புதிய சட்டமன்றத்திற்கு மன்னராட்சியை ஒழிக்குமதிகாரம் இல்லாத காரணத்தால் அதற்கேற்றவகையில்

புதிய அரசியல் சட்டத்தை உருவாக்க புதிய நிறைஉரிமைப் பேரவையைக் (National Convention) கூட்டுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அதனைத்தொடர்ந்து ஜேகோபியர்களின் தலைவரான டாண்டன் சர்வாதிகாரியானார்.

பதினாறும் லூயி மன்னரையும், அவரது குடும்பத்தினரையும் பாரிஸ் மக்கள் திரண்டுசென்று தாக்கிய கோரக்காட்சியை மன்னர் மாளிகைக்கருகிலுள்ள ஒரு கட்டிடத்தின் உச்சியிலிருந்து கவனித்த நெப்போலியன், அதனைக் காணச் சகியாது தம் முகத்தை வேறுபக்கம் திருப்பிக்கொண்டு ‘இந்த ஈனர்களை அரண்மனைக்குள் அனுமதித்த அற்பர்கள் யார்? முதலில் நுழைந்த ஒரு ஐநூறு பேரைத் துப்பாக்கிக் குண்டுகளால் துளைத்திருந்தால் எஞ்சிய கூட்டத்தினர் எங்கோ ஓடி ஒளிந்திருப்பர் உயிருக்குப் பயந்து’ என்று மனங்கொதித்துக் கூறினார். பாரிஸ் நகரில் தினமும் வன்முறை தலைவிரித்தாடியது. மன்னரைச்சார்ந்த பிரபுக்களின் மாளிகைகள் தகர்த்தெறியப்பட்டன. அரச குடும்பத்தினரும் பிரபுக்களும் தங்கள் மாளிகைகளைவிட்டு உயிருக்கஞ்சி ஓடியதைக் கண்ட மக்கள் மகிழ்ச்சிகொண்டனர். மன்னரின் காவலர்கள் பலர் கொல்லப்பட்டு அவர்களது உடல்கள் வீதிவழியே இழுத்து வரப்பட்டன. இத்தகைய கொடுமைகளைக் கண்ட நெப்போலியன் இப்போது தம் கருத்தை மாற்றிக்கொள்ள நேரிட்டது. ஃபிரெஞ்சு மக்கள் மக்களாட்சி நெறிமுறைகளுக்கேற்ற தகுதியினைப் பெற்றிருக்கவில்லை என்பதை உணர்ந்தார். இங்கிலாந்தின் அரசியலமைப்பு சார்ந்த முடியரசையும் (Constitutional Monarchy) அமெரிக்காவின் குடியரசையும் அவர் வெகுவாகப் பாராட்டினார். மக்களின் நலன் கருதி அவர்களை நல்வழிப்படுத்தக்கூடிய மன்னர் ஒருவர் ஃபிரான்சுக்கு மிகமிகத் தேவை என்பதை அவர் உணர்ந்தார். ஆனால், பழைய வல்லாட்சியின் கொடுமையும் மன்னர்களின் மட்டரக நடவடிக்கைகளும், பிரபுக்களும் சமயக்குருக்களும் அனுபவித்த சலுகைகளும் உரிமைகளும், மக்கள் பட்ட இன்னல்களும் இடுக்கண்களும் அவர் மனதில் ஆழப்பதிந்திருந்தன. அவற்றையெல்லாம் பாமர மக்களின் நலன்கருதி நெப்போலியன் வெறுத்தார். இருப்பினும், மக்கள் தங்கள் உரிமைகளைப் பெற வன்முறையிலிறங்கியதை அவர் வன்மையாகக் கண்டித்தார். கட்டுப்பாடற்ற மக்களின் காட்டுமிராண்டிச் செயல்களைக்காட்டிலும், பிரபுக்கள், மதகுருக்கள் ஆகியோரின் ஆணவமும், ஆதிக்கமும் சிறந்தவை என்றுகூட நெப்போலியன் எண்ணலானார். கடமை, கண்ணியம், கட்டுப்பாடற்ற ஃபிரெஞ்சு மக்கள் குடியரசுக்குத் தகுதியற்றவர்கள் என்றும், இங்கிலாந்திலுள்ள வரம்புக்குட்பட்ட முடியாட்சி ஃபிரான்சுக்கும் பொருந்துவதாகும் என்றும் அவர்

உளமார நம்பினர். தம் உள்ளத்தில் உதித்த உன்னதக் கருத்துகளை ஒளிவுமறைவின்றி நெப்போலியன் அஞ்சாது எடுத்துரைத்து வந்தார். மக்களின் உரிமைகளை உள்ளடக்கிய குடியரசுக் கருத்துகள் அவரது இரத்தத்தில் கலந்தவை. ஆனால், மக்களின் அநாகரிகச் செயல்களும், கொடுமை நிறைந்த வெறியாட்டங்களுமே அவரது உள்ளக் கருத்துக்களைச் சிறிது மாற்றிக்கொள்ளக் காரணமாயின. இருப்பினும், வன்முறையிலீடுபாடுகொண்ட மக்களை நல்வழிப்படுத்தி, எவராலும் அசைக்கமுடியாத பேரரசு ஒன்றினை ஃபிரான்சில் நிலைநாட்டி அதன்மூலம் மக்களின் உயிர்போன்ற உரிமைகளைப் பெற்று உண்மையான குடியரசை உருவாக்க அவர் உறுதிபூண்டார்.

இந் நிலையில் ஃபிரான்சின் அரசியல் ஆதிக்கம் ஜேகோபியர்களின் கைக்கு மாறியது. அரசருக்கு ஆதரவு காட்டியவர்கள் என்ற சந்தேகத்திற்குள்ளான அத்தனை பேரும் படுகொலை செய்யப்பட்டனர். ஆண்கள், பெண்கள், குழந்தைகள், சமயக்குருக்கள், பிரபுக்கள் போன்ற பலர் ஈவிரக்கமின்றி கொல்லப்பட்டனர். இந்த பயங்கரப் படுகொலைகளுக்குக் காரணம் பகைவர் படை பாரிசைநோக்கி விரைந்துகொண்டிருந்தது என்ற செய்திதான். அரசருக்கு ஆதரவளிப்பவரையெல்லாம் கொன்றுகுவித்த இந்த நிகழ்ச்சிதான் பயங்கர ஆட்சியின் (Reign of Terror) தொடக்கமாகக் கருதப்படுகின்றது. டாண்டனின் பெரு முயற்சியின் பயனாகப் படையின் வலிமை பெருகியது. 1792ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் ஃபிரெஞ்சுப்படை வால்மி (Valmy) என்ற இடத்தில் பகைவர் படையைத் தோற்கடித்தது. ஃபிரெஞ்சுப் படையின் இந்த வெற்றி ஆபத்தான கட்டத்திலிருந்த ஃபிரான்சைக் காப்பாற்றியது. அன்றியும், வால்மி வெற்றி ஃபிரெஞ்சுப் படையின் வேறு பல வெற்றிகளுக்கும் முன்னோடியாக அமைந்தது. அதனைத் தொடர்ந்து செப்டம்பர் திங்கள் 21ஆம் நாள் நிறைஉரிமைப் பேரவையும் (National Convention) கூடியது. சிறைப்படுத்தப்பட்ட [மன்னர் பதினாறும் லூயி குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டார். அரசத்துரோகக் குற்றம் அவர்மீது சுமத்தப்பட்டது. விசாரணை முடிவில் அவருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. 1793ஆம் ஆண்டு ஜனவரித்திங்கள் 21ஆம் நாள், ஞாயிற்றுக்கிழமை மாமன்னர் பதினாறும் லூயி கொல்லப்பட்டார். அதற்கு முன்பே, அதாவது 1792 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 22 ஆம் நாள் ஃபிரான்சில் முடியாட்சி ஒழிக்கப்பட்டுவிட்டதாக அறிவிக்கப்பட்டது. அன்றுமுதல் ஃபிரான்சு குடியரசு நாடாயிற்று.]

இவ்வாறு ஃபிரான்சில் மன்னராட்சி மாய்ந்தது ; மக்களாட்சி மலர்ந்தது. ஆனால், புதிய குடியரசுக்குச் சோதனைகள் பல தோன்றின. புரட்சிப்படையின் தலைவர் டுமூரியே (Dumouriez) ஒரு கிராண்டியர். அவர் இப்போது புரட்சிப்படைகளுக்கு விரோதமாக நடக்கலானார். அதனைத் தொடர்ந்து கிராண்டியர்கள் அரசியலில் தங்கள் செல்வாக்கை விரைவில் இழந்தனர். இந்த அரிய வாய்ப்பினைப் பயன்படுத்தி ஜேகோபியர்கள் அரசாங்கத்தைக் கைப்பற்ற முனைந்தனர். கிராண்டியர்கள் நிறைஉரிமைப் பேரவையினின்றும் வெளியேற்றப்பட்டனர். அவர்களது வீழ்ச்சிக்குப்பின் ஜேகோபியர் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்ட பயங்கர ஆட்சியைக் கைக்கொண்டனர். ஃபிரான்சு நாட்டின் பாதுகாப்புக் குழு (Committee of Public Safety) பயங்கர ஆட்சிக்குத் துணையாக நின்றது. அக்குழுவில் டாண்டன் உட்பட பன்னிரண்டு பேர் இடம்பெற்றிருந்தனர். அக்குழு, படையைப்பெருக்கி ஐரோப்பிய பகைநாடுகளுடன் போரைத் தொடர்ந்து நடத்துவதில் முழுக்கவனம் செலுத்தியது. அதற்கு உதவியாக ஜேகோபியர்களின் ஆதிக்கத்தை நிலைநாட்டப் பணியாற்றிய மற்றுமொரு அமைப்பு, புரட்சி நீதிமன்றமாகும். புரட்சி அரசுக்கும், ஜேகோபியர்களுக்கும் விரோதமாக நடந்தவர்களை இம் மன்றம் விசாரித்துத் தண்டனை வழங்கியது. நாட்டின் துரோகிகள் என்று கருதப்பட்ட பலர் இம் மன்றத்தின்மூலம் கொல்லப்பட்டனர். மரிய அந்துவானட் உட்பட பல அரசகுடும்பத்தினரும், பிரபுக்களும், கிராண்டியர்கள் பலரும் தலைவெட்டுப்பொறி (Guillotine) க்கு இரையானார்கள்.

சுதந்திரமடைய முயற்சி செய்யும் மக்களனைவருக்கும் ஃபிரெஞ்சு மக்கள் உதவிசெய்யக் காத்திருக்கிறார்கள் என்ற அறிவிப்பினையும் புரட்சி அரசு வெளியிட்டது. அதனைக் கேட்ட ஐரோப்பிய பகை நாடுகள் பலம்பொருந்திய கூட்டிணைவு ஒன்றினை உருவாக்கின. அதில் ஆஸ்திரியா, பிரஷ்யா, பிரிட்டன், ஹாலந்து, ஸ்பெயின், சார்டினியா ஆகிய நாடுகள் இடம்பெற்றன. ஃபிரான்சில் புரட்சியரசை ஒழித்து மீண்டும் போர்போன் மரபினரின் மன்னராட்சியை நிலைநாட்ட அவை முழுவேகத்துடன் போரிடத்தயாராயின. அன்றியும், பாரிஸ்நகருக்கு வெளியே அரசருடைய ஆதரவாளர்கள் பலர் குடியரசினை எதிர்த்துப் போரில் குதித்தனர். வெண்டி (Vendee), லியன்ஸ் (Lyons), புரோவென்ஸ் (Provence), மார்செயில்ஸ் (Marseilles), தௌலான் (Toulan) போன்ற நகரங்கள் புரட்சி அரசுக்கெதிராகப் போரிட்டன. இத்தகைய உள்நாட்டுக் குழப்பத்தைப் பயன்படுத்தி ஐரோப்பிய பகைநாடுகள் புரட்சி அரசினை வீழ்த்தப் போரில் குதித்தன.

தௌலான் என்பது நடுநிலக்கடலின் கரையிலுள்ள முக்கிய ஃபிரெஞ்சுத் துறைமுகமாகும். அது ஃபிரான்சின் சிறந்த கடற் படைத்தளமாகும். அங்கு ஃபிரெஞ்சுக் கடற்படையும், பீரங்கிப் படையும், ஆயுதக்கிடங்கு மிருந்தன. ஐம்பதுக்கு மேற்பட்ட போர்க்கப்பல்களும் பீரங்கிப் படைக்கலன்களும் அங்கு வரிசை யாக நிறுத்திவைக்கப்பட்டிருந்தன. அங்குள்ள பரந்த படைக் கலக்கொட்டிலில் (Magazine) ஏராளமான போர்க்கருவிகளும், வெடிமருந்தும் நிரப்பிவைக்கப்பட்டிருந்தன. இருபத்தைந்தா யிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் அங்கு வாழ்ந்து வந்தனர். அவர்களில் பெரும் பகுதியினர் பழைய மன்னராட்சியின் ஆதர வாளர்கள், மார்செயில்ஸ், லீயன்ஸ் (Lyons) போன்ற தென் ஃபிரான்சின் நகரங்களிலுள்ள அரச ஆதரவாளர்களில் பத்தா யிரத்துக்கு மேற்பட்டோர் தௌலானில் அடைக்கலம் புகுந்தனர். ஆக, தௌலான் பெரும்பாலும் அரச ஆதரவாளர்களின் கோட் டையாகத் திகழ்ந்தது. இந் நிலையில், தௌலான் துறைக்குச் சற்று தொலைவில் ஆங்கில — ஸ்பானிய கலப்புக் கடற்படையொன்று நிறுத்திவைக்கப்பட்டிருந்தது. புரட்சியரசை வெறுத்த தௌலான் நகரத்து அரச ஆதரவாளர்கள் (Royalists) தௌலான் நகரத் தையும், துறைமுகத்தையும், படைக்கலக்கொட்டிலையும், போர்க் கப்பல்களையும், கலன்களையும், கோட்டைகளையும் ஆங்கில—ஸ்பா னிய கடற்படையிடம் ஒப்படைத்தனர். ஆங்கிலக் கப்பல்களும் தௌலான் துறைக்குள் வெற்றிகரமாக நுழைந்தன. பதிமூன்று யிரத்திற்கு மேற்பட்ட ஆங்கில — ஸ்பானிய வீரர்கள் நகரைச் சுற்றி நிறுத்திவைக்கப்பட்டனர். 1793ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 28ஆம் நாள் பதினேழாம் லூயி மன்னரின் கொடி தௌலானில் பறந்தது.

தௌலான் நகரை ஆங்கிலேயருக்கு அடகுவைத்த அற்பர் களின் அடாதசெயல் அறிந்த புரட்சியரசு கடுங்கோபம் கொண் டது. உடனடியாகத் தாயகத்தின் மண்ணிலிருந்து ஆங்கிலேய ரைத் துரத்தியடிக்க உறுதிபூண்டது. மீண்டும் தௌலானைக் கைப்பற்றும் பொருட்டு இரண்டு பெரும்படைகள் உடனடியாக அனுப்பப்பட்டன. நாற்பதாயிரம் வீரர்கள் தளபதி கார்டாக்ஸ் (General Cartaux) தலைமையில் தௌலானை முற்றுகையிட்டனர். தளபதி படைத்துறை நுணுக்கங்களை முற்றிலும் அறிந்திருக்க வில்லை. மூன்று மாதகாலமாக முற்றுகை நீடித்தும் குறிப்பிடத் தக்க முன்னேற்றம் எதுவும் காணப்படவில்லை. ஏனெனில், பீரங் கிக் குண்டுகள் எட்டாத தொலைவில் கோட்டைகளின் அகழிகளுக்கு வெகு தொலைவில் ஃபிரெஞ்சுப்படையினர் நிறுத்தி வைக்கப்பட் டிருந்தனர். மேலும், ஆங்கில — ஸ்பானியப் படையினரும் தௌ

லான் நகர அரச ஆதரவாளர்களும் நகரைத் தற்காத்து ஃபிரெஞ்சு முற்றுகையை முறியடிப்பதற்கான ஒவ்வொரு நடவடிக்கையினை யும் மேற்கொண்டனர். சிறிய ஜிப்ரால்டர் **(Little Gibraltar)** என்ற கோட்டையினை எதிரிகள் நெருங்காவண்ணம் தற்காத்து வந்தனர். தௌலான் முற்றுகையில் ஃபிரெஞ்சுப் பீரங்கிப்படை யின் தளபதி டொமார்ட்டின் **(Dommartin)** என்பவர் படுகாய முற்று தொடர்ந்து பணியாற்ற முடியாத நிலைக்குத் தள்ளப்பட் டார். உடனே, புரட்சியரசு நெப்போலியனை தௌலான் பீரங்கிப் படையின் தளபதியாக நியமித்தது. 1793ஆம் ஆண்டு செப் டம்பர் திங்கள் 16ஆம் நாள் மெலிந்த, வெளிறிய தோற்றத் துடன் கந்தலுடையினைப் பெற்றிருந்த நெப்போலியன் தௌலான் முற்றுகைப் பீரங்கிப்படைத் தளபதியாகப் பொறுப்பேற்றார். உடனே, போர்க்களத்திற்குச் சென்று முற்றுகையினைப் பார்வை யிட்டார். முற்றுகை தகுந்த முறையில் அமையாதது கண்டு வருந்தினார். பீரங்கிகள் நிறுத்திவைக்கப்பட்டுள்ள இலக்குகளின் குறைகள், குண்டுகளின் குறைகள், குண்டுகள் எட்டிப்பாயாத வகையில் அமைந்துள்ள நிலைகளின் குறைகள், குண்டுகளைச் சூடேற்றுகின்ற முறையிலுள்ள குறைபாடுகள் போன்றவற்றை யெல்லாம் சுட்டிக்காட்டினார். தாமே ஒரு பீரங்கிக் குண்டினைச் சுட்டுக்காட்டி அதன் குறைகளைத் தலைமைத்தளபதிக்கு எடுத்து விளக்கினார். இத்தகைய குறைபாடுகளுடன் முற்றுகையை நீடித் தால் தௌலான் நகரைப்பிடிப்பது இயலாத செயல் என்று எண்ணினார். தௌலான் நகரின் தற்காப்புக் கோட்டையாக விளங்கும் சிறிய ஜிப்ரால்டரை வென்றாலன்றி தௌலானைப் பிடிப்பது எளிதல்ல என்பதை உணர்ந்தார். தௌலான் நகரத் தின்மீது தாக்குதலை நிறுத்தி, சிறிய ஜிப்ரால்டரின்மீது முழு அளவுத் தாக்குதலையும் செலுத்தவேண்டுமென்று உறுதிபூண் டார். சிறிய ஜிப்ரால்டர் குன்றின்மீது பீரங்கிப்படையினை அணி வகுத்துக் கீழேயுள்ள தௌலானைத் தாக்கினால் ஆங்கிலேயர் பஞ்சாய் பறந்தோடுவர் என்பது அவரது திட்டம். அமெரிக்கத் தளபதி வாசிங்டன், பாஸ்டன் துறையிலிருந்து ஆங்கிலேயர்களைத் துரத்தியடித்ததைப்போல தௌலான் துறையிலிருந்து ஆங்கி லேயர்களை விரட்டியடிக்க நெப்போலியன் திட்டமிட்டார். வாசிங்டன் கடைப்பிடித்த போர்முறைகளை நன்கு கற்றறிந்த நெப்போலியன் இப்போது அவற்றைக் கையாள முன்வந்தார். தமது முற்றுகைத் திட்டங்களனைத்தையும் தலைமைத்தளபதி டுகோமியர் **(Dugommier)** முன்வைத்தார். தளபதியும் நெப் போலியனது திட்டங்களின் சிறப்பினை உணர்ந்து நல்லாதரவு நல்கினார்.

ஞாலங் கருதினும் கைகூடும் ; காலம்
கருதி இடத்தாற் செயின்.

அருவினே என்ப உளவோ, கருவியான்
காலம் அறிந்து செயின் — என்ற குறட்கருத்திற்கு ஏற்ற வகையில் தம் திட்டங்களை நிறைவேற்றத் தயாரானர் நெப்போலியன். தம் படையுடன் சிறிய ஜிப்ரால்டரை நோக்கி அவர் அணிவகுத்துச் சென்றார் ; தம் படையை மூன்று பிரிவுகளாகப் பிரித்து மூன்று பக்கங்களில் நிறுத்திவைத்தார். விரைவில் இருநூறு கனமான பீரங்கிகள் வரவழைக்கப்பட்டு தக்க இடங்களில் அமைக்கப்பட்டன. எதிரிகளின் கோட்டை அகழிக்கருகே ஒரு பீரங்கி அமைக்கப்பட்டது. ஐந்து அல்லது ஆறு வலிமை வாய்ந்த பீரங்கிகளேக் குறிதவருத நிலைகளில் அமைத்தார். அத்தனை ஏற்பாடுகளையும் எதிரிகளின் குண்டு மாரிக்கிடையே தம் உயிரையும் பொருட்படுத்தாது செய்துமுடித்தார். அவரது குதிரைகள் பல எதிரிகளின் குண்டுகளுக்குப் பலியாயின. நெப்போலியனின் இடது தொடையிலும் குண்டுக்காயம் பட்டது. இருப்பினும், விடாமுயற்சியுடன் சிறிய ஜிப்ரால்டரைப் பிடிக்கும் ஏற்பாடுகளனைத்தையும் செய்துமுடித்தார். அடுத்து, தௌலான் நகர்மீது திட்டமிட்டபடி தாக்குதலுக்கான தக்க தருணத்தை எதிர்நோக்கியிருந்தார். ஏற்ற வேளையும் வந்தது. 1793 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 17ஆம் நாள் நள்ளிரவில் தௌலானைத் தாக்குவதற்கான சமிக்கை பிறந்தது. ஒரே பீரங்கி முழக்கம் ; எங்கும் கூக்குரல் ; கூப்பாடு ; அழுகுரல் ; கட்டிடங்கள் இடிந்து விழும் கோரக்காட்சிகள் ; இடர்ப்பாடுகளுக்கிடையே சிக்கிய மக்களின் ஓலம் — இத்தகைய இன்னல்களைப் பெருக்கும் வகையில் பேய்க்காற்றும் பெருமழையும் மக்களை அலைக்கழித்தன. போரின் பயங்கரப் பசிக்கு இருதரப்பிலும் எண்ணிறந்த வீரர்கள் இரையாயினர். ஒரு சில மணி நேரத்திற்குள் எண்ணுயிரம் குண்டுகள் சிறிய ஜிப்ரால்டர் கோட்டையைத் துளைத்து தூளாக்கின. ஒவ்வொரு பகுதிக்கும் நெப்போலியன் நேரடியாகச் சென்று வீரர்களை உற்சாகப்படுத்தினர். இருள், புயல், மழை, பீரங்கி முழக்கம், குண்டுவீச்சினிடையே தோன்றும் ஒளி ஆகியவற்றிடையே ஃபிரெஞ்சு வீரர்கள் பாய்ந்துசென்று ஆங்கிலேயரை விடாது தாக்கினர். எங்கும் ஒரே பிணக்குவியல் ; செத்தவர்களும் செத்துக்கொண்டிருப்பவர்களும் எங்கும் நிறைந்து காணப்பட்டனர். ஃபிரெஞ்சுப்படையின் தாக்குதலுக்கு ஈடுகொடுக்கவியலாத இங்கிலாந்துப் படை ஓடிமறைந்தது. சிறிய ஜிப்ரால்டர் கோட்டை தகர்த்தெறியப்பட்டது. ‘தளபதி அவர்களே ! தாங்கள் இப்போது சென்று நன்ருகத் தூங்கலாம் ; நாம் தௌ

லானைப் பிடித்துவிட்டோம்' என்று பெருமிதத்துடன் கூறினர் நெப்போலியன் தலைமைத்தளபதி டுகோமியரைப் பார்த்து.

நள்ளிரவில் ஜிப்ரால்டர் கோட்டை வீழ்ந்தாலும் விடியும்வரை சண்டை நீடித்தது. பீரங்கிகள் தௌலான் நகரில் முழங்கிக் கொண்டிருந்தன. தொட்டில் குழந்தைகள் முதற்கொண்டு கிழவர்கள்வரை பலர் குண்டுகளுக்கிரையாயினர். பலர் உடலுறுப்புகளை இழந்து உழன்றனர். எங்கும் கோரக்காட்சிகள். காலையில் தௌலான் தெருக்களிலெல்லாம் இரத்தம் உறைந்திருந்தது. தௌலானை வென்றபின் நெப்போலியன் தமது பீரங்கிகளை ஆங்கிலக் கப்பல்மீது திருப்பினர். ஆங்கில கடற்படையினைக் கண்ட இடங்களிலெல்லாம் ஃபிரெஞ்சுப் படையினர் தாக்கினர். ஆங்கிலப்படையும் ஜிப்ரால்டரையும் தௌலானையும் காலிசெய்துவிட்டுக் கிளம்பின. ஆனல், ஓடிய ஆங்கிலப்படையை துரத்தித் தாக்கும் பணியை ஃபிரெஞ்சுப் படையினர் மேற்கொண்டனர். பல ஆங்கிலக்கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. ஆங்கிலேயர்களும் சிக்கிய ஃபிரெஞ்சுக் கலன்களைத் தீயிட்டுக் கொளுத்தினர். கப்பல்கள், படைக்கலக்கொட்டில்கள் போன்ற அனைத்தும் தீக்கிரையாயின. தௌலான் நகர ஜேகோபியர்கள் அரசுக்கட்சி ஆதரவாளர்களை வேட்டையாடினர்கள். எங்கும் ஒரே குழப்பம். உயிருக்குப் பயந்து ஆண்களும் பெண்களும் ஓடினர். முப்பதாயிரத்திற்கு மேற்பட்டவர்களைத் துன்பத்திலும் துயரத்திலும் அனுதைகளாக விட்டுவிட்டு ஆங்கிலக் கப்பல்படை கடலில் மறைந்தது.

இவ்வாறு, நெப்போலியன் ஒரேஒரு இரவில் ஆங்கிலேயர்களை வீழ்த்தித் தௌலானை மீட்டார். இந்தப் போரில் நெப்போலியன் தமது போர்த்துறை நுணுக்கங்கள் அனைத்தையும் கையாண்டு பெருவெற்றி பெற்ருர். முற்றுகையின் போழ்து உயிருக்கஞ்சாது, உறுதியுடன் போராடினர். அதில் அவர் தமது தொடையில் குண்டுக்காயம் ஒன்றினையும் பெற்ருர். அவரது படைத்துறைப் பணியில் அவர் பெற்ற முதல் காயமும் இறுதிக் காயமும் அதுவே யாகும். தௌலானில் போனபார்ட் பெற்ற வெற்றி வரலாற்றுப் புகழ்பெற்ற வெற்றி; புரட்சி அரசின் விதியினை நிர்ணயித்த வெற்றி. தௌலானில் முதல்முதலாக நெப்போலியன் வலிமை வாய்ந்த ஆங்கிலப் படையினை வென்ருர். போனபார்ட் பெற்ற இந்த வெற்றி பல வெற்றிகளுக்கு முன்னேடியாக அமைந்தது. பாராட்டுகள் பல குவிந்தன இளந்தளபதிக்கு ; நிறைஉரிமைப் பேரவையினரும் தலைமைத்தளபதியும் போனபார்ட்டை வெகுவாகப் பாராட்டினர்கள். தௌலான் வெற்றி போனபார்ட்டின் புகழுக்கு முன்னேடியாக விளங்கியது. பாரிஸ் நகரில் தௌலான் வெற்றிவிழா கொண்டாடப்பட்டது. அந்த விழா நெப்போலி

யனின் பெயரையும் புகழையும் மக்கள்முன் வைத்தது. மக்களும் நெப்போலியனை மனமார வாழ்த்தி வரவேற்றனர்.

தௌலான் வெற்றியினைத் தொடர்ந்து தென் ஃபிரான்சின் கடற்படைத் தளங்களைச் செம்மைப்படுத்தி, விரிவாக்கி, பகைவரின் கடற்படைத்தாக்குதலிலிருந்து ஃபிரெஞ்சு மக்களுக்குப் பாதுகாப்பளிக்கும் பணி போனபார்ட்டிடம் ஒப்படைக்கப்பட்டது. இரண்டு மாத காலம் அப் பணியில் நெப்போலியன் சிறப்பாக ஈடுபாடு கொண்டிருந்தார்; புதிய பொறுப்பில் புத்துணர்ச்சியுடன் பணியாற்றினர்; ஒவ்வொரு துறையையும் வளைகுடாவையும் நுணுக்கமாக ஆய்ந்து அதற்கேற்றவகையில் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்துமுடித்தார். தௌலான் நகரிலிருந்து நிஸ் நகரம் வரையுள்ள கடற்கரை போனபார்ட்டின் கட்டுப்பாட்டில் இருந்தது. அப் பகுதியிலுள்ள பீரங்கிப்படையினை மூன்று பிரிவுகளாகப் பிரித்தார். முதல் பிரிவு, முக்கிய துறைமுகங்களில் போரிடுகின்றவர்களின் தற்காப்பிற்காக முன்னின்று பணியாற்றியது. இரண்டாவது பிரிவு, வணிகக் கப்பல்களைப் பாதுகாக்கும் பணியினை மேற்கொண்டது. மூன்றாவது பிரிவு, கடற்கரையில் நடைபெறுகின்ற வணிகத்தைக்காக்கும் வகையில் செயல்பட்டது. இவ்வாறு, கொண்ட பணியில் கண்ணுங்கருத்துமாய்ச் செயல்பட்டுக்கொண்டிருந்த நேரத்தில், 1794ஆம் ஆண்டு மார்ச் திங்கள் போனபார்ட் இத்தாலியிலுள்ளநிஸ் (Nice) நகரின் பீரங்கிப் படைப்பகுதி தளபதி (Brigadier General)யாகப் பதவிஉயர்வு பெற்றார். அப்போது நிஸ் பகுதியிலிருந்த ஃபிரெஞ்சுப்படை எவ்வித குறிப்பிடத்தக்க சாதனையும் புரியாது, சோம்பேறித்தனமாகக் காலங்கடத்திவந்தது. அதனைச் சுற்றிலும் வலிமை வாய்ந்த ஆஸ்திரியப்படைகளும் சார்டினியப் படைகளும் வளைத்துக் கொண்டிருந்தன. ஃபிரெஞ்சுத் தளபதி டுமெர்டிரின் (Dumertrin) அச்சமற்றவர்; அனுபவமிக்கவர்; ஆனால் வயதானவர். அன்றியும், அவர் வாதநோயால் அவதிப்பட்ட காரணத்தால் படைத்துறைப் பணியைச் செவ்வனே செய்யமுடியாத நிலையிலிருந்தார். இந் நிலையில் போனபார்ட், நிஸ்நகரை அடைந்ததும் பம்பரமாகப் பணியாற்றத் தொடங்கினர். ஃபிரெஞ்சுப்படை, பகைவர்படை பற்றிய முக்கிய தகவல்களையெல்லாம் சேகரித்தார். படைவீரர்களின் எண்ணிக்கை, இலக்குகளின் நிலை, அமைப்புமுறை, படைகளின் வலிமை போன்றவற்றையெல்லாம் அறிந்தார். ஃபிரெஞ்சுப்படையின் ஒவ்வொரு இலக்கினையும் கவனமாக ஆராய்ந்தார். குறைபாடுகளைக் களைந்தார். இத்தாலியின் படத்தை எடுத்து ஆராய்ந்தார். மலைகள், கணவாய்கள், நதிகள் ஆகியவற்றைச் சுற்றிப்பார்த்து அவைபற்றிய விவரங்களை அறிந்து, பகைவரின்

வலிமையையும் தம்முடைய வலிமையையும் எடைபோட்டுப் போருக்குரிய அனைத்தையும் செவ்வனே செய்துமுடித்தார். அப்போது ஆஸ்திரியப் பெரும்படை ஒன்று வளமைமிக்க ரோசா **(Roza)** நதிக்கரையில் முகாமிட்டிருந்தது. அப் படைவீரர்கள், எதிரிகள் எளிதில் தாக்கமாட்டார்கள் என்ற எண்ணத்தில் இன்பமாகக் காலம்கடத்திவந்தனர். அதனையறிந்த நெப்போலியன் அப் படையினைத் தாக்கி அழிக்கத் திட்டமிட்டார். இராணுவ ஆலோசனை மன்றத்தைக் கூட்டித் தம்முடைய திட்டத்தை அதன் முன் வைத்தார். திட்டத்தின் சிறப்பினை ஆய்ந்தறிந்த ஆலோசனை மன்றமும் திட்டத்தினை வரவேற்று ஆதர்வு நல்க முன்வந்தது. திட்டமும் விரைவில் செயல்வடிவம் பெற்றது. ஒரேகிளியா **(Oreglia)** என்பது ரோசா நதியின் இணைநதி. அதன் வழியாகப் பதினைந்தாயிரம் வீரர்களைக்கொண்ட ஃபிரெஞ்சுப்படை ஒன்று மெசென்னு **(Massena)** என்பவருடைய தலைமையில் இரகசியமாக விரைந்தது. ஆஸ்திரியப்படை முகாமிட்டிருந்த ரோசா நதியை அடைந்து, அதனைக் கடந்து அப் பெரும்படைமீது பின்புறமாகத் திடீரென்று பாய்ந்து தாக்கியது. அதே நகரத்தில் தலைமைத் தளபதி டூமெர்டிரின் **(Dumertrin)** தலைமையில் பத்தாயிரம் வீரர்கள் ஆஸ்திரியப் படையை முன்னாலே சென்று திடீரென்று தாக்கினர். இதற்கிடையில், நெப்போலியனும் பத்தாயிரம் வீரர்களுடன் நடுநிலக்கடற்கரையைநோக்கி விரைந்து சென்று முக்கிய படைத்தளங்களைக் கைப்பற்றி எதிரிகள் பின்வாங்கிச் செல்லாதபடி தடுத்து அவர்களை வேட்டையாடினார். ஆஸ்திரியப் படையும் சுழற்காற்றில் சிக்கிய சருகைப்போன்று தவித்தது; பெரும் சேதத்திற்குள்ளாகியது. எதிரிகளின் முக்கிய தளமான சோர்ஜியா **(Saorgia)** ஃபிரெஞ்சுப்படை வசமாயிற்று. அங்கு சேகரித்து வைக்கப்பட்டிருந்த உணவுப்பொருட்களும் படைக் கருவிகளும் எளிதில் ஃபிரெஞ்சுப்படைகளுக்குக் கிடைத்தன. ஆல்ப்ஸ் மலையும், ரோசா நதிக்கரைப்பகுதிகளும் ஃபிரான்சு வசமாயின. எதிர்பாராத இந்த வெற்றிச் செய்திகள் ஏவுகணை வேகத்தில் எட்டிப்பறந்தன. ஃபிரான்சின் மூலை முடுக்களிலெல்லாம் தலைமைத்தளபதி டூமெர்டிரின் புகழ் ஓங்கியது. ஆனால், அவரோ தம் புகழுக்குக் காரணமான போனபார்ட்டுக்குத் தம் புகழ்க் கிரீடத்தைச் சூட்டி மகிழ்ந்தார். ஆல்ப்ஸ் பகுதியில் பெற்ற வெற்றியினைப் பேணிக்காக்கும் வகையில் சிறப்பான பாதுகாப்பு நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டன.

இந் நிலையில் நெப்போலியனின் வாழ்க்கையில் ஒரு பயங்கரப் புயல் வீசியது. தௌலான் வெற்றிக்குப்பின் மார்செயில்ஸ் நகரிலுள்ள பழைய சிறைச்சாலை ஒன்றினை வெடிமருந்து சேகரித்து

வைக்கத் தகுந்த இடம் என்று கருதி நெப்போலியன் பழுது பார்த்து வந்தார். ஆனால், அவர் திடீரென்று இத்தாலிக்கு அனுப்பப்பட்ட காரணத்தால் சிறைச்சாலையைச் செப்பனிடும் பணியை வேறு ஒருவர் பார்த்துவந்தார். இதற்கிடையே, அச்சிறைச்சாலை இரண்டாவது பாஸ்டில் என்றும், நாட்டுக்குழைக்கும் நல்லவர்களைச் சிறையிடவே அது பழுதுபார்க்கப்படுவதாகவும் செய்திகள் பறந்தன. அதனையறிந்த பாதுகாப்புக் குழுவினர் அவ்வதிகாரியைச் சிறைப்படுத்தும்படி ஆணையிட்டனர். அவரும் கைது செய்யப்பட்டுப் புரட்சி நீதிமன்றத்தின்முன் நிறுத்தப்பட்டார். ஆனால், அச் சிறைச்சாலையைச் செப்பனிடும் திட்டம் தம்மால் உருவானது அல்ல என்றும், தமக்கு முன்பே அத் திட்டத்தை நெப்போலியன் செயல்படுத்தினார் என்றும், அவரைத் தொடர்ந்தே அப் பணியினைத் தாம் செய்துமுடித்ததாகவும் விசாரணையின்போழ்து அவ்வதிகாரி எடுத்துரைத்தார். அதனை ஏற்றுக்கொண்ட புரட்சி நீதிமன்றம் அவரை விடுதலைசெய்தது. ஆனால், நெப்போலியன் உடனடியாகக் கைதுசெய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டார். நிஸ் நகருக்கருகிலுள்ள கேரீ கோட்டையில் **(Fort Carree)** அவர் பதினைந்து நாள் காவலில் வைக்கப்பட்டிருந்தார். கைது செய்யப்பட்ட அன்று அவரது பிறந்தநாள். ‘ நான் இன்று எனது இருபத்தைந்தாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கிறேன் ’ என்று கூறித் தமது பிறந்தநாளைச் சிறைச்சாலையிலேயே கொண்டாடினார். அவரது உற்ற நண்பர்கள் அவரைச் சிறையிலிருந்து தப்பியோடும்படி வேண்டினர். ஆனால், நெப்போலியன் குற்றமற்றவர் என்பதாலும் மனதில் மாசற்றவர் என்பதாலும், ஓடி ஒளிவது குற்றத்தை ஒப்புக்கொண்ட செயலாகும் என்று எண்ணியதாலும் நண்பர்களின் வேண்டுகோளை ஏற்கமறுத்தார். ‘ சிறைச்சாலை, மாங்குயில் கூவிடும் பூஞ்சோலையாக ’ அவருக்குப் பட்டது. வழக்கம்போல் தம்முடைய நூல்கள், தேசப்படங்கள், விளக்க அட்டவணைகள் புடைசூழ கருமமே கண்ணாயிருந்தார். அதனால், நெப்போலியன் குற்றமற்றவர் என்பதை அறிந்து பாரிஸ் அரசு அவரை விடுதலை செய்தது. ஆனால், அவரைப் பீரங்கிப்படையினின்றும் மாற்றி காலாட்படையின் தளபதியாக அரசு நியமித்தது. இந்த மாற்றம் தம்முடைய படைத்துறைப் பணிக்கு இழுக்கு என்று எண்ணிய நெப்போலியன் அதனை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். பின்பு மார்செயில்ஸ் நகரம் சென்று தம்முடைய அன்னையுடன் கொஞ்ச நாள் தங்கியிருந்தார். அதுபோழ்து அவர் வழக்கம்போல் தம்முடைய படிப்பில் கவனம் செலுத்தினார். அன்றைய அரசியல் நெருக்கடிகள், புரட்சிகளின் வரலாறுகள், அரசாங்கங்களின் அமைப்புகள் போன்றவற்றை அறிவதில் நாட்களைக் கழித்தார்.

1794ஆம் ஆண்டு மே திங்களில் மீண்டும் வேலைதேடும் பொருட்டுப் பாரிஸ் சென்றார் நெப்போலியன். பல நாள் வேலைதேடியும் பலனில்லை. கால் கடுக்குமளவு அவர் நடந்துசென்று பல இடங்களில் வேலைக்கு முயன்றார். அவரது முயற்சிகளனைத்தும் வீணாயின. இதற்கிடையே கையிலிருந்த காசும் செலவாகி வறுமைத்தேள் அவரைக் கொட்டியது. அன்றியும், மார்செயில்ஸ் நகரில் தாயும் குடும்பத்தினரும் வறுமையில் வாடுகின்ற செய்தியும் அவரை வாட்டி வதைத்தது. என்ன செய்வதென அறியாது திகைத்தார் நெப்போலியன். ஆற்றங்கரையில் பித்துப்பிடித்தவர்போல் அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தார். அத் தருணத்தில் அவரது பழைய நண்பர் தெமாசிஸ் (Demasis) என்பவர் நெப்போலியனைக் கண்டு தழுவி நலம் விசாரித்தார். விரைவில் நெப்போலியனின் வறுமையை உணர்ந்த தெமாசிஸ் தம்மிடமிருந்த ஆறாயிரம் டாலர்களை அளித்து அவரது அன்னையின் துயரைக் களையும்படி வேண்டினார்.

''உடுக்கை இழந்தவன் கைபோல, ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு''

என்ற குறளுக்கு இலக்கணமாகத் திகழ்ந்தார் தெமாசிஸ். நெப்போலியனும் அப் பணத்துடன் மார்செயில்ஸ் சென்று அன்னையின் வாட்டத்தைப் போக்கினார். நன்றி மறவாத நெப்போலியனது உள்ளத்தில் தெமாசிஸ் நிரந்தர இடத்தைப் பெற்றுவிட்டார். பதினைந்து ஆண்டுகளுக்குப்பின் நெப்போலியன் பெரும்வசதியுடன் பெருமன்னராக வீற்றிருந்தநேரத்தில் தற்செயலாக நண்பர் தெமாசிசைச் சந்திக்கும் வாய்ப்பினைப் பெற்றார். அதனைத் தமது நன்றிக்கடனைக் கழிக்கும் நல்வாய்ப்பாகக் கருதினார். உற்ற நண்பரை உளமார வரவேற்று அவருக்கு அறுபதினாயிரம் டாலர்களைக் கொடுத்து தமது நன்றியை நிலைநாட்டினார். அன்றியும், ஆறாயிரம் டாலர்கள் வருமானமுள்ள பதவி ஒன்றினையும் அந்த நல்ல நண்பருக்கு நெப்போலியன் அளித்தார் என்றும் சொல்லப்படுகிறது.

நெப்போலியன் இத்தாலியைவிட்டு வந்தபின் ஃபிரெஞ்சுப் படை கட்டுப்பாடற்று, தக்க வழிகாட்டியில்லாது நிலைகுலையத் தொடங்கியது. தோல்விகள் அப் படைக்குத் தொடர்ந்து வந்தன. ஆஸ்திரியப்படைக்கு ஈடுகொடுக்க இயலாத நிலையில் ஃபிரெஞ்சுப் படை பல முனைகளில் பின்வாங்கியது. நெப்போலியன் பெற்றுத் தந்த இடங்களையெல்லாம் ஃபிரெஞ்சுப் படை இழந்தது. ஆல்ப்ஸ் பகுதியில் மீண்டும் ஆஸ்திரியர் கை ஓங்கியது. ஃபிரான்சு நாட்டின் பாதுகாப்புக் குழுவும் செய்வதறியாது திகைத்தது. ஆல்ப்ஸ் பகுதியின் இராணுவ நுணுக்கங்களை அறிந்திராது அக் குழுவினர், படை

களுக்கு எத்தகைய ஆணைகள் பிறப்பிப்பது என்றுகூட அறியாது குழம்பினர். இந் நிலையில் ஆல்ப்ஸ் பகுதியில் அரும்பெரும் சாதனை கள் புரிந்த ஆற்றல் மறவன் நெப்போலியன் நினைவு அவர்களுக்கு வந்தது. உடனே, பாதுகாப்புக் குழுவினர் நெப்போலியனை வர வழைத்து ஆலோசனை கேட்டனர். ஆல்ப்ஸ் மலையின் இராணுவ நிலைகளை நன்குணர்ந்த நெப்போலியன் தக்கவாறு ஆலோசனைகளை வழங்கினர். பாரிஸ் நகரிலுள்ள பாதுகாப்புக் குழுவின் அறைக்கு நாள்தோறும் சென்று அங்கிருந்தவாறே இத்தாலியிலுள்ள ஃபிரெஞ்சுப்படைகளுக்கு நல்வழி காட்டி அவற்றை இயக்கிக் கொண்டிருந்தார். அதன்பயனாக இத்தாலியில் மீண்டும் ஃபிரெஞ் சுப்படை கைஓங்கியது. இழந்த இடங்களை மீண்டும் பெற்று வெற்றி மேல் வெற்றி பெற்றுத்திகழ்ந்தது.

இந் நிலையில் 1795 ஆம் ஆண்டு ஃபிரான்சு நாட்டின் நிறை உரிமைப் பேரவை புதிய அரசியலமைப்பு ஒன்றினை உருவாக்கியது. அதன்படி சட்டம் இயற்றும் அதிகாரம் இருமன்றங்களடங்கிய சட்டமன்றத்திற்கு அளிக்கப்பட்டது. முதல் மன்றம், மூத்தோர் மன்றம் (Council of Ancients) என்றழைக்கப்பட்டது. அதில் இருநூற்றைம்பது உறுப்பினர்கள் இடம்பெற்றனர். நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்களும், திருமணமானவர்களுமே அம் மன் றத்தின் உறுப்பினராகத் தகுதிபடைத்தவர்கள். இரண்டாவது மன்றம், ஐநூற்றுவர் மன்றம் (**Council of Five Hundred**) என்ற ழைக்கப்பட்டது. அம் மன்றத்தின் பெயருக்கேற்ப அதில் ஐநூறு உறுப்பினர்கள் இடம்பெற்றனர். முப்பது வயதினைத் தாண்டியவர் களே அதில் உறுப்பினராகத் தகுதி பெற்றிருந்தனர். ஃபிரான்சின் நிர்வாக அதிகாரம் ஐந்துபேர்கொண்ட இயக்குநர் குழுவிடம் (**Directory**) ஒப்படைக்கப்பட்டது. இயக்குநர்களுக்கு உதவிசெய்ய அமைச்சர்கள் நியமிக்கப்பட்டனர். ஒவ்வொரு ஆண்டும் சட்ட மன்றங்களின் ஒவ்வொரு பகுதியினரும், இயக்குநர்களில் ஒருவரும் புதிதாகத் தேர்ந்தெடுக்க வழிவகை செய்யப்பட்டது. 1795ல் உருவாக்கப்பட்ட இந்த இயக்குநர்குழு 1799 வரை நீடித்தது. ஃபிரெஞ்சு வெற்றிகளுக்குக் காரணமான கார்னெட் (**Carnot**) பொறியியல் வல்லுநர் இலெட்டூர்னியர்(**Letourneur**), கிராண்டியர் இயக்கத்தைச் சார்ந்த முன்னணிவீரர் இலாரிவெல்லியர் இலா பாக்ஸ் (**Larevelliere Lepeaux**), ஜேகோபியர்களின் முன்னணிவீர ரான இரீவ்பெல் (**Rewbell**), தென்பகுதி ஜேகோபியர் தளபதி பராஸ் (**Barras**) ஆகியோர் முதல் இயக்குநர்களாகப் பணியாற் றினர்.

இதுவரை உருவாக்கப்பட்ட அரசியல் திட்டங்களில் இதுவே மிகவும் சிறந்ததாகப் பலராலும் போற்றப்பட்டது. குடியரசுக்

கருத்துகளில் நாட்டங்கொண்ட மிதவாதிகளால் அவ்வரசியல மைப்பு உருவாக்கப்பட்டது. போர்போன் மன்னராட்சி மீண்டும் உயிர்பெற்று எழாதபடி தடுத்து, ஜேகோபியர்களின் பயங்கர ஆட்சிக்கு முடிவுகட்டி, நாட்டில் சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்டி, ஃபிரான்சில் குடியரசை நீடித்து நிலைபெறச் செய்வதே புதிய திட்டத்தின் நோக்கமாகும். ஃபிரான்சு மக்கள் புதிய திட்டத் தினை வரவேற்று நல்லாதரவு நல்கினர். ஆனால், பாரிஸ் நகரத்தி லுள்ள தொண்ணூற்று நான்கு வார்டுகளில் நாற்பத்தெட்டு வார்டுகள் புதிய அரசியலமைப்பினை அங்கீகரித்தன; நாற்பத்தாறு வார்டுகள் அதனை ஏற்றுக்கொள்ள மறுத்தன. மேலும், பாரிஸ்நகர அரசுக்கட்சி ஆதரவாளர்களும், ஜேகோபியர்களும் இணைந்து புதிய அரசியலமைப்பினை எதிர்த்துக் கிளர்ச்சியில் ஈடுபாடுகொண்டனர். பாரிசில் அதனைத்தொடர்ந்து வன்முறைகள் தலைதூக்கின. இருப்பி னும், புதிய அரசியலமைப்பிற்கு ஃபிரான்சுமுழுதும் பெரும்பா லான மக்களின் நல்லாதரவு கிட்டிய காரணத்தால் அது உடனடி யாக நடைமுறைக்கு வந்தது. ஆகவே, அதனை விரும்பாத அரசுக் கட்சியினரும் தீவிரவாதிகளான ஜேகோபியர்களும் புதிய அரசியல் திட்டத்தை உடைத்து நிறைஉரிமைப் பேரவையை ஒழித்துக் கட்டும் நோக்குடன் வன்முறைச் செயல்களில் இறங்கினர்.

பாரிஸ் நகரம் போராட்டக்களமாக மாறியது. இரத்தம் ஆறாக ஓடியது; அமைதிகுலைந்தது; எங்கும் அச்சமும் அருவெறுப்பும் குடிகொண்டன. இயக்குநர்களும், நிறைஉரிமைப் பேரவை யினரும் நடுங்கினர். மேலும், பாரிசில் நாற்பதாயிரம் மக்கள் வெறிகொண்டவர்களைப்போல கையில் வாளும், துப்பாக்கியு மேந்தி வீதிகளில் வலம்வந்து நிறைஉரிமைப் பேரவையைத் தாக் கும்பொருட்டு அதனை நெருங்கினர். நிறைஉரிமைப் பேரவை யினர் அஞ்சி நடுங்கினர். அவர்களிடம் ஐயாயிரம் வீரர்களடங்கிய ஒரு சிறு படையே இருந்தது. அப் படையின் தலைவனும் நெருங் கிக் கொண்டிருந்த வெறிக்கூட்டத்தினைக் கண்டு அஞ்சியோடி விட்டான். தலைவனை இழந்த நிலையில் படை பதறியது. அதனைப் பயன்படுத்தி புரட்சிக்காரர்கள் புதிய வேகத்துடன் தாக்குதலைத் தொடர்ந்தனர். பாரிஸ் வீதிகளில் குருதிவெள்ளம் பெருக்கெடுத் தோடியது. இரவு பதினொரு மணி. நிறைஉரிமைப் பேரவையின் முடிவுகாலம் நெருங்கிவிட்ட நிலையில், அச்சம் அப் பேரவையினரை வாட்டியது. இதற்கிடையே படைத்துறைப் பொறுப்பு பராசிடம் ஒப்படைக்கப்பட்டது. இந்த இக்கட்டான நிலையில் நாட்டையும் நிறைஉரிமைப் பேரவையினையும் காக்கும் பெரும் பொறுப்பினைத் தாங்கத் தயங்கிய பராசுக்கு நெப்போலியனின் நினைவு வந்தது. தௌலான் வெற்றி வீரன் நெப்போலியன் அவரது உள்ளத்தில்

நம்பிக்கையொளியை மூட்டினர். பராசின் கண்கள் மன்றத்தின் பார்வையாளர் பகுதியைச் சுற்றிச்சுழன்றது. அங்கு ஆழ்ந்த சிந்தனையில் பேரவையினர் படும் துயரினைக்கண்டு மனம் வெதும்பி யிருந்த நெப்போலியனை பராசின் கண்கள் விரைவில் அடையாளம் கண்டு அளவிலா ஆனந்தங்கொண்டன. மகிழ்ச்சியால் மனந்தேறிய பராஸ் அப்போது எழுந்து நின்று ' அவையோர்களே ! இந்த இக்கட்டான நெருக்கடியில் நம்மைப் பாதுகாக்கும் வீரன் ஒருவன் தான். அவ் வீரமறவனின் ஆற்றலையும், துணிவையும், அறிவுத்திறனையும் நான் தௌலான் சண்டையில் கண்குளிரக் கண்டுள்ளேன். அந்த ஆற்றல்மறவனின் பெயர் நெப்போலியன் போனபார்ட்' என்று உரைத்தார். அவரது உரை அவையோரின் உள்ளத்தில் உறுதியினை உருவாக்கியது. நெப்போலியன் என்ற சொல் அவர்களின் அச்சத்தை அகற்றியது. அவையோர் அனைவரும் நெப்போலியனையே உற்றுநோக்கினர். அவைத்தலைவரும் நெப்போலியனை அருகேயழைத்து அவரது ஒப்புதலைப் பெற்று நிறைஉரிமைப் பேரவையினையும், புதிய அரசியலமைப்பினையும் காக்கும் பெரும்பொறுப்பினை அவரிடம் ஒப்படைத்தார். நெப்போலியனது அமைதியும், உறுதியும், கடமைஉணர்வும் அவையினரின் உள்ளத்தில் உவகையூட்டின. உடனே பாரிஸ் கலகத்தையடக்கி, அமைதியை நிலைநாட்ட முழு அதிகாரம் நெப்போலியனுக்கு வழங்கப்பட்டது.

பாரிஸ் கலகக்காரர்களை ஒடுக்குவதற்கான ஆக்கப்பணிகளில் அவர் உடனே ஈடுபட்டார். இரவு முழுதும் உறக்கமின்றி உற்சாகத்துடனுழைத்தார். சேப்ளான்ஸ் (Sablons) என்ற இடத்திலிருந்து மூராட் (Murat) என்ற குதிரைப்படை வீரர்மூலம் ஐம்பது கனரகத்துப்பாக்கிகள் தக்கபாதுகாப்புடன் வரவழைக்கப்பட்டன. நிறைஉரிமைப் பேரவையைச் சுற்றிலும் தக்க இடங்களில் பீரங்கிகள் அமைக்கப்பட்டன. அன்றிரவு முழுதும் கண்விழித்துத் தற்காப்பு ஏற்பாடுகளைத் தகுந்தவாறு செய்துமுடித்தார். அவரது பொறுப்பில் ஐயாயிரம் வீரர்களடங்கிய சிறு படைமட்டுமிருந்தது. ஆனல், கலகக்காரர்களோ நாற்பதாயிரத்திற்கும் மேற்பட்டவர்கள். அன்றியும் நன்கு பயிற்சியும், கட்டுப்பாடும் பெற்று நல்ல தளபதிகளால் வழிநடத்தப்பட்டனர். எனவே, அத்தகைய பெரும் படையினை வீழ்த்தும் மனஉறுதியையும், உற்சாகத்தினையும், ஆற்றலையும், கடமை உணர்வினையும் தம்படையிலுள்ள ஒவ்வொரு வீரனுக்கும் ஊட்டினர். எண்ணூறு துப்பாக்கிகள் வரவழைக்கப்பட்டு நிறைஉரிமைப் பேரவையினரின் பாதுகாப்புக்காக வழங்கப்பட்டன. ஏற்கெனவே அஞ்சிநடுங்கிக் கொண்டிருந்த அவர்களுக்குத் துப்பாக்கிகள் வழங்கப்பட்டவுடன் அவர்கள் நடுக்கம் இன்னும்

அதிகமாயிற்று. இருப்பினும், நெப்போலியன் அவர்களுக்கு நம்பிக்கை ஒளியாகத் திகழ்ந்தார். நெப்போலியனும் தம்முடைய வீரர்களையழைத்து தக்கமுறையில் அவர்களது கடமைகளையெடுத்து விளக்கி அவர்களிடம் வெற்றிக்கான நம்பிக்கையினையும் ஊட்டினார். இவ்வாறு, ஒரே இரவில் தற்காப்பு ஏற்பாடுகளையும், எதிரிகளைத்தாக்கி வீழ்த்துவதற்கான ஏற்பாடுகளையும் செய்துமுடித்தார்.

காலை ஐந்து மணி. பீரங்கிகள் முழங்கின. பீரங்கி முழக்கத்தைக் கேட்ட நிறைஉரிமைப் பேரவையினர் நடுநடுங்கினர். பாரிஸ் கலகக்காரர்கள் நாலாபக்கங்களிலிருந்தும் புற்றீசல்போல் வந்து பாய்ந்து தாக்கினர். நெப்போலியனது படையினரும் குறிப்பிட்டபடித் திருப்பித்தாக்கினர். அவர்களது பீரங்கிகள் விடாது முழங்கின. தெருவெங்கும் பிணங்கள் குவிந்தன. சிங்கத்தின்முன் சிறுநரிகள் ஓடுவதைப்போல, நெப்போலியனின் பீரங்கிகளின் தாக்குதலுக்கு ஈடுகொடுக்கவியலாத கலகக்காரர்கள் சந்து பொந்துகளில் ஓடி மறைந்தனர். ஒரு மணி நேரத்திற்குள்ளாகவே கலகம் அடக்கப்பட்டது. மீண்டும் கலகக்காரர்கள் ஆயுதம் தாங்கிவராது தடுக்கும்வகையில் நெப்போலியன் தம்முடைய படைவீரர்களை பாரிசின் பல்வேறு பகுதிகளுக்கும் அனுப்பி மக்களிடமுள்ள ஆயுதங்களையெல்லாம் கவர்ந்து வரும்படி செய்தார். கலகக்காரர்கள் பலரும் தங்கள் ஆயுதங்களை இழந்தனர். அடுத்து, நெப்போலியன் இறந்தவர்களைப் புதைக்கும்படியும், காயம் பட்டவர்களை மருத்துவமனைக்கனுப்புமாறும் ஆணை பிறப்பித்தார். கலகத்தை அடக்கிய பின்பு நெப்போலியன் தம்முடைய தம்பிக்குக் கீழ்க்கண்ட மடலினை அனுப்பினார் : ' இறுதியில் கலகம் அடக்கப்பட்டது. உனக்கு உடனடியாகச் செய்தியனுப்ப வேண்டுமென்பதே என் முதல் விருப்பமாகும்... எங்களுடைய படை வீரர்களைத் தக்க இடங்களில் அமர்த்தினோம். எதிரிகள் எங்களை பாய்ந்துவந்து தாக்கினர். நமது பக்கத்தில் முப்பது பேர் இறந்தனர். அறுபது பேர் காயமுற்றனர். நாங்கள் கலகக்காரர்களை வென்று அவர்களது ஆயுதங்களை யெல்லாம் கைப்பற்றினோம். இப்போது எங்கும் அமைதி நிலவுகிறது. வழக்கம் போல் நான் சிறு கீறல்கூட இல்லாது தப்பினேன்.........'

நெப்போலியனின் பாரிஸ் வெற்றி குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இச் சண்டையில் அவரது எதிரிகள் ஃபிரெஞ்சுக்காரர்களே. போர்க்களம் பாரிஸ் நகரமே. ' கொஞ்சங்கூட ஈவிரக்கமின்றிச் சொந்த நாட்டவர்களையே கொன்று குவிக்க உங்களால் எப்படி முடிந்தது ?' என்று வினவினர் ஓர் அம்மையார் நெப்போலியனிடம். ' ஒரு போர்வீரன் இயந்திரத்தைப் போன்றவன் ; ஆணைக்

குப் பணிந்து பணியாற்றுவதே அவனது கடமை' என்று போன பார்ட் அடக்கத்துடன் பதில் கூறினார். இருப்பினும், சொந்த நாட்டவரின் குருதி பாரிஸ் வீதிகளில் பெருக்கெடுத்தோடும் அவல நிலைக்குத் தாம் காரணமாகிவிட்டதை அறிந்து பெரிதும் வருந்தினார். கொண்ட பணியில் கடுமையும் நெஞ்சில் ஈரமும் கலந்த விசித்திர மனிதராக நெப்போலியன் விளங்கினார்.

பாரிஸ் கலகத்தை அடக்கியபின் வெற்றிவீரர் போனபார்ட் தம்முடைய படைத்துறையதிகாரிகளுடன் நிறைஉரிமைப் பேரவையினுள் நுழைந்தார். அவையினர் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரத்துடன் அவர்களை வரவேற்றனர். அத்தகைய ஆரவாரங்களை விரும்பாத நெப்போலியன் அமைதியாக அவையில் நோட்டமிட்டார். 'நீங்கள்தான் நாட்டின் நாயகர்கள். துப்பாக்கிச் சத்தம் கேட்டவுடன் அஞ்சி நடுங்கினீர்கள். எப்படி நடுங்குவது என்பதை நீங்கள் மறந்துவிடக்கூடாது. நான் உங்களது பாதுகாவலனாக இருக்கின்றேன். நீங்களனைவரும் எனக்குப் பணிந்து நடக்கும் வேலைக்காரர்களாகும்வரை தங்களை நான் பாதுகாத்துக் கொண்டேயிருப்பேன்' என்ற எண்ணம் அவரது உள்ளத்தில் ஒரு கணம் உதித்து மறைந்தது.

இவ்வாறு, பாரிஸ் கலவரத்தை ஒடுக்கி ஃபிரான்சின் புதிய அரசியலமைப்பை நெப்போலியன் நிலைநாட்டினார். நிறை உரிமைப் பேரவையும் நெப்போலியனைப் பாராட்டித் தக்கபடி சிறப்பித்தது. உடனடியாக அவர் உள்நாட்டுப் படையின் தலைமைத் தளபதியாக பதவிஉயர்வு பெற்றார். தலைநகரையும் அரசாங்கத்தையும் பாதுகாக்கின்ற பொறுப்பு அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. இருபத்தைந்தாண்டுகள் நிரம்பிய நெப்போலியன் இப்போது தானைத்தளபதியாகப் பதவிஉயர்வு பெற்றார். அதன் பயனாக அவரது வசதிகள் பெருகின. பணப்பற்றாக்குறை நீங்கியது. பணியாட்கள், வாகனவசதிகள், அதிகாரம், செல்வாக்கு ஆகிய வற்றினைப் பெற்று உயர்ந்து காணப்பட்டார். இந்தப் பதவியும் புகழும் அவருக்குத் திடீரென்று கிடைத்தவையல்ல. பல ஆண்டுகள் கடுமையான உழைப்பின் விளைவுகள். 'உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ' என்பதற்கு அவர் எடுத்துக்காட்டாக விளங்கினார். தாம் பெற்ற பெரும்பதவியின் பயனாக அவரது உற்றார் உறவினரெல்லாம் உயர்ந்த நிலையெய்தினர். அவருடைய தம்பிகளனைவரும் வறுமையின் பிடியிலிருந்து விடுபெற்று நன்னிலை பெற்றனர். அவரது அன்னை மீண்டும் மனமார சிறப்பான வாழ்வு பெற்றார். அவர் விருப்பம்போல் குடும்பத்தை நடாத்த வசதிகள் பெருகின. அவரது தமையன் ஜோசப்பைத் தேடி பதவிகள் பல வந்தன. இந் நிலையில் போனபார்ட் மார்செயில்ஸ் நகருக்குச்

சென்று தமது அன்னைக்கு வேண்டிய வசதிகளனைத்தையும் செய்து முடித்து அவரது நல்வாழ்த்துகளுடன் பாரிஸ் திரும்பினர்.

பாரிஸ் நகரில் கலகம் தணிந்ததே தவிர கலகக்காரர்களின் கோபம் தணிந்தபாடில்லை. அடிக்கடி ஏற்பட்ட கலவரங்களினலும் குழப்பங்களாலும் பாரிசில் பல ஆயிரக்கணக்கான மக்கள் வேலையின்றித் தவித்தனர். பஞ்சம் தலைவிரித்தாடியது. அதன் கோரப் பசிக்குப் பலர் இரையாயினர். பணம் படைத்தோர் பலர் தங்கள் பணத்துடன் பாரிசை விட்டுச் சென்று வெளி நாடுகளில் குடிபுகுந்தனர். வறுமையில் வாடிய மக்கள் ஆங்காங்கே கிளர்ச்சிகளில் ஈடுபட்டனர். ஆனல், நெப்போலியன் திறமையுடன் அவற்றையெல்லாம் அடக்கிவந்தார். தம்முடைய நகைச்சுவைப் பேச்சுக்களால் பல கலகக்கூட்டத்தினரைக் கலைந்து போகும்படி செய்துள்ளார். அன்றியும், நாட்டில் பஞ்சத்தைப் போக்கி அமைதியை நிலைநாட்ட ஆக்கவேலைகள் பலவற்றை மேற்கொண்டார். ஏழை எளியவர்களுக்கு ரொட்டியும் விறகும் கொடுக்கும்படி கட்டளையிட்டார். தம்முடைய சொந்த வருமானத்திலிருந்து பல குடும்பங்களைக் காப்பாற்றியும் வந்தார். அதுபோழ்து திடீரென்று ஒரு நாள் கலகக் கூட்டம் நெப்போலியன் முன் தோன்றியது. நெப்போலியனும் பலவாறு எடுத்துக்கூறி அவர்களைக் கலைந்து போகும்படி வேண்டினர். ஆனல், பருத்துப் பெருத்த ஓர் அம்மையார் அக் கூட்டத்தின் முன் நின்று ‘தோழர்களே! நீங்கள் கலையாதீர்கள். இப் போர்வீரர்களின் இனிய சொற்களில் மயங்கிவிடாதீர்கள். சுவையான உணவை வயிறுமுட்டத் தின்று கொழுத்திருக்கும் இவ் வீரர்கள், பசியால் மெலிந்து வாடும் நம் போன்றோரைக் கவனிப்பார்களா?’ என்று எடுத்துக் கூறினர். அதனைக் கேட்ட நெப்போலியன் எழுந்து நின்று ‘அம்மா என்னைக் கொஞ்சம் பாருங்கள். நம் இருவரில் தின்று கொழுத்தவர் யார் என்பதை நீங்களே சொல்லுங்கள்’ என்று சுவைபடக் கூறினர். அதனைச் செவிமடுத்த அந்த அம்மையார் தேள் கொட்டியவரைப்போல் திகைத்துநின்ருர். கலகக் கூட்டத்தினரோ நெப்போலியனின் நகைச்சுவையினை ரசித்துக்கொண்டே கலைந்து சென்றனர்.

ஒருநாள் பெர்மான் பெருமாட்டி இல்லத்தில் ஒரு சிறப்பான விருந்து. நெப்போலியன் அவ் விருந்தில் கலந்துகொள்ள அலங்கார வண்டியில் விரைந்தார். வண்டியும் பெருமாட்டியின் வீட்டின்முன் நின்றது. போனபார்ட்டும் வண்டியினின்றும் இறங்கினர். அப்போது அவர் கண்ட காட்சி அவரது ஈரமான நெஞ்சினை மேலும் உருக்கியது. கண்ணில் நீர்மல்க கையில் செத்துப்போன குழந்தையுடன், வறுமையின் சோகச்சின்னமாக நெப்போலியன்முன் நின்ருள் ஒரு பெண். அவளது கணவனும்

இறந்துபட்டார். அவளது வீட்டில் இன்னும் ஐந்து குழந்தைகள் நீரின்றி வாடி வதங்கிய பயிரைப்போல உயிருடன் போராடிக் கொண்டிருந்தனர். 'ஐயா ! இந்த ஆபத்தான நிலையில் எனக்கு ஏதேனும் இடர்காப்புதவி அளிக்கப்படாவிடில் நான் என்னுடைய ஐந்து குழந்தைகளுடன் நீரில் முழ்கிச்சாக உறுதி கொண்டுள்ளேன்' என்று தன் வறுமை நிலையினை எடுத்துக் கூறினள் போனபார்ட்டிடம். நெப்போலியனும் அந்த ஃபிரான்சு நாட்டு 'நல்ல தங்காளின்' வாட்டத்தைப் போக்க முன்வந்தார். விருந்தினைக் கூட சுவைக்க இயலாத நிலையில் அவரது சிந்தனையெல்லாம் அப் பெண்ணின் வறிய நிலையைச்சுற்றியே வட்டமிட்டது. விருந்து முடிந்தவுடன் அந்தப் பெண்ணின் இல்லம் தேடிச்சென்று அவளது துயர்துடைத்து அவளுக்கு மீண்டும் வாழ்வளித்தார். மேலும், அவளது குடும்பத்திலுள்ள பெண்களைத் தம்முடைய நண்பர்களின் இல்லங்களில் தையல் வேலையிலமர்த்தி வருமானத்திற்கும் வழிசெய்தார். அக் குடும்பம் என்றும் நெப்போலியனுக்கு நன்றி செலுத்திவந்தது. இவ்வாறு, ஃபிரெஞ்சு மக்களின் உள்ளங்களையெல்லாம் கவர்ந்திழுக்கும் வகையில் தமது ஆக்கப்பணிகளை ஆற்றி வந்தார் நெப்போலியன்.

பாரிஸ் நகரில் மீண்டும் கலகம் ஏற்படாதபடி தடுத்து நிறுத்தும் பொருட்டு மக்களிடமுள்ள ஆயுதங்களையெல்லாம் அரசாங்கத்திடம் ஒப்படைக்கும்படி ஆணை பிறப்பித்தார் தானைத் தளபதி போனபார்ட். பாரிஸ் நகரெங்கும் ஆயுதங்களைப் பறிமுதல்செய்யும் பணி தொடர்ந்தது. அதன் பயனாக பலர் தங்கள் உயிர்போன்ற ஆயுதங்களையெல்லாம் இழந்தனர். 'ஐயா, என் தந்தையின் உயிர் போன்றது அவர் பயன்படுத்திய வாள். அவரது நினைவாக அவ் வாளினை நாங்கள் போற்றிப் பாதுகாத்து வந்தோம். எங்கள் குடும்பத்தின் பெருமையை நிலைநாட்டிக் கொண்டிருந்த அவ் வாளினை என் தாயிடமிருந்து பறிமுதல் செய்துவிட்டனர் தங்கள் படைவீரர்கள்; எங்களின் உயிர் போன்ற அவ்வாளினை எங்களுக்கு மீண்டுமளித்து எங்கள் குடும்பத்தின் மானத்தைக் காப்பாற்றும்படி தங்களைப் பணிவுடன் வேண்டுகின்றேன்" என்று கண்களில் நீர்மல்க கூறினன் தளபதி போனபார்ட்டிடம் பன்னிரண்டாண்டு நிரம்பிய ஈஜீன் (Euqe e) என்ற இளைஞன். அவனது கூற்றின் உண்மையை உணர்ந்த தளபதியும் உடனே அவ் வாளினை வரவழைத்துத் தம் கையாலேயே ஈஜீனிடம் கொடுத்து அவனை வாழ்த்தி வழியனுப்பினர். தன்னுடைய புகழ்பெற்ற குடும்பத்தின் சொத்து மீண்டும் தனக்குக்கிடைத்த மகிழ்ச்சிப் பெருக்கில் ஈஜீனுக்குப் பேச இயலவில்லை. ஆனந்தக்கண்ணீர் அவன் கண்களில் மல்க, அவ் வாளினை

மார்புறத்தழுவி, தளபதியைத் தலைகுனிந்து அமைதியாக வணங்கி விடைபெற்றுச் சென்றான் ஈஜீன். அச் சிறுவனது குடும்பப்பாசத்தினையும் தந்தைமீது அவன் கொண்டுள்ள அளவற்ற அன்பினையும் நெப்போலியன் வெகுவாகப் பாராட்டியதுடன் அவனைச் சான்றோனாக்கிய அவனது அன்னையையும் வியந்து போற்றினார்.

இழந்த பெருந்தனத்தைப் பெற்ற ஈஜீன் பெரு மகிழ்ச்சியால் துள்ளிக்குதித்து அன்னையிடம் சென்று நடந்தவற்றை விளக்கி அவ் வாளினை அவளிடமளித்தான். அவனது அன்னையும் தனது கணவரின் உயிர்போன்ற அவ் வாளினை மீண்டும் வழங்கிய தளபதிக்கு நன்றி செலுத்தத் துடித்தாள். அடுத்தநாள் நெப்போலியனின் அறைக்குள் நுழைந்தாள் அவ்வணங்கு. பேரழகும் பண்பட்ட நாகரிகமும் கொண்ட அப் பெருமகள் முப்பது வயதினைத் தாண்டியவள். குயில் குரலினள்; கனிவும் கவர்ச்சியுமிக்கவள்; கண்டாரைக் கவர்ந்திழுக்கும் கட்டழகி. அப் பேரழகி நெப்போலியனைக் கண்டு அடக்கத்துடன் தன் இதயத்தினடித்தளத்திலிருந்து வந்த நன்றியினை இனியமொழியில் இயம்பினாள். போனபார்ட்டும் அம் மங்கைநல்லாளின் பேரழகில் கட்டுண்டார். இம் முதல் சந்திப்பே அந்த உள்ளங்களிரண்டையும் இறுக்கமாகப் பிணைத்து விட்டது. அடுத்து இருவரும் அடிக்கடி சந்திக்கும் வாய்ப்பினைப் பெற்றனர். அது விரைவில் காதலாக மலர்ந்து கனிந்தது.

இவ்வாறு, தளபதி நெப்போலியன் உள்ளத்தில் உறுதியான இடத்தைப் பிடித்த அப் பேரழகிதான் ஜோசபைன். அவள் மேற்கிந்தியத் தீவுகளிலுள்ள மார்டினிகோ (Martinico) என்ற இடத்தில் பிறந்தாள். இளங்கோமகன் பியூகார்னெஸ் (Viscount Beuharnais) என்பவர் ஃபிரான்சில் செல்வாக்குப் பெற்ற மேட்டுக்குடியினர். அவர் வணிகத்தின் பொருட்டு மேற்கிந்திய தீவுகளுக்குச் சென்றிருந்த நேரத்தில் ஜோசபைனின் அழகில் மயங்கி அவளைச் சிறு வயதிலேயே மணமுடித்தார். பாரிஸ் வந்த பின்பு ஜோசபைன் மேட்டுக்குடியினரின் அன்புக்குரியவளானாள். ஃபிரெஞ்சுப் பேரரசி மரிய அந்துவானட்டின் நெருங்கிய நட்பினைப் பெற்றாள். அவரது அவையினை அலங்கரித்த அணங்குகளில் குறிப்பிடத்தக்கவளாக ஜோசபைன் விளங்கினாள். ஆனால், விரைவில் அவளது இன்ப வாழ்வில் இருள் சூழ்ந்தது. பயங்கர ஆட்சி அவளது குடும்பத்தில் பயங்கரச் சூழலை உருவாக்கியது. அவளது கணவர் பியூகார்னெஸ் புரட்சியரசின் தலைவெட்டுப்பொறி (Guillotine)க்கு இரையானார். ஜோசபைனும் மூன்று மாதகாலம் சிறையில் வாடினாள். உரோபஸ்பையரின் வீழ்ச்சிக்குப்பின் ஜோசபைன் விடுதலைபெற்று வெளியே வந்தாள். நெப்போலியன் கைது

செய்யப்பட்டுச் சிறையில் காவலில் வைக்கப்பட்ட அதேநாளில் அவரது வருங்கால மனைவி விடுதலைபெற்று வெளியே வந்தாள். அவள் வெளியேவந்த அன்று நெப்போலியன் கைது செய்யப் பட்டு சிறைக்குள்ளே சென்றார். விதவையான ஜோசபைன், ஈஜீன், ஹார்ட்டன்ஸ் என்ற இரண்டு பிள்ளைகளுடன் வாழ்வுப் பயணத்தை வா ட் ட த் து ட ன் தொடங்கினாள். தன்னுடைய வசீகரத் தோற்றத்தைப் பயன்படுத்தி தன் வாழ்வினை வளமாக்க முயன்றாள். அவள் இயல்பாகவே பசப்புக்காரி. பராசும் அவளது அழகில் மயங்கினார். அவரது காமக்கிழத்தியாகப் பல நாள் வாழ்ந்தாள். இந் நிலையில் ஜோசபைன் நெப்போலியனைச் சந்தித்து அவரது உள்ளத்தைக் கவர்ந்ததுடன் தன்னுடைய உள்ளத்தையும் அவரிடம் விட்டுவந்தாள். இயக்குநர்களில் ஒருவரான பராசும் நெப்போலியன் - ஜோசபைன் உறவுக்கு உற்சாக மூட்டினார்.

'நெப்போலியன் ஆற்றல்மறவன்; எதையும் சாதிக்கும் இயல்புடையவர்; சிறந்த தளபதிக்குரிய தகுதிகளனைத்தையும் பெற்றவர்; ஒளிமயமான எதிர்காலமுடையவர்; சுருங்கக் கூறின், ஃபிரான்சு நாட்டின் வழிகாட்டி; அவரையும் தம்முடைய ஆசைநாயகியான ஜோசபைனையும் இணைப்பதன் மூலம் தம்மையும் தம் பதவியினையும் தம்முடைய நாட்டையும் காக்க இயலும்' என்ற அசைக்க முடியாத நம்பிக்கை அவரது உள்ளத்தில் உலவியது. எனவேதான், நெப்போலியன் - ஜோசபைன் திருமணத்திற்குப் பராஸ் வழிவகுத்தார். அன்றியும், நெப்போலியனுக்குப் படைத்துறையில் தளபதிப்பதவியினை அளித்து அதனை நிரந்தரமாக்கவும் முன்வந்தார். ஜோசபைனிடம் நெப்போலியனுடைய பதவிக்கான உறுதியினையும் வழங்கினார். ஆகவே, நெப்போலியனை விட இரண்டு வயது மூத்தவளான ஜோசபைன், நெப்போலியனை மணந்து இல்லறம் இனிதே நடாத்த இசைந்தனள். 1796 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் ஆறும் நாள் நெப்போலியன் - ஜோசபைன் திருமணம் எளிய முறையில் இனிதே நடந்தேறியது. அப்போது நெப்போலியனுக்கு வயது 26. ஜோசபைன் பிறப்புபற்றிய சான்றிதழை மேற்கிந்திய தீவுகளிலிருந்து வாங்க இயலவில்லை. எனவே, ஜோசபைனின் சொல்லின்படி அவளுக்கு 28 வயது என்று முடிவுசெய்யப்பட்டது. நெப்போலியனுக்கும் ஒரு வயது அதிகமாக்கப்பட்டது. இவ்வாறு, இரண்டு பக்கங்களிலும் வயதினைப் பற்றிய பொய்ச்சான்றுகளுடன் பாரிஸ் திருமண ஏட்டில் அவர்களுடைய பெயர்கள் பதிவுசெய்யப்பட்டன. ஃபிரான்சில் புரட்சியரசு திருச்சபைகளை மூடியது; திருச்சபை குருமார் தொகுதிகள் **(Clergies)** தடைப்படுத்தப்பட்டன; கடவுளும் மறுக்கப்பட்டார்,

திருமணங்களில் சமயச்சடங்குகள் புறக்கணிக்கப்பட்டன. திருமணம் வயதுவந்த ஆண் - பெண்ணின் வாழ்க்கைநல ஒப்பந்த மாகக் ஆக்கப்பட்டது. எனவே, தளபதி நெப்போலியன் திருமணமும் எவ்விதச் சமயச்சடங்குமின்றி எளியமுறையில் நடை பெற்றது. நெப்போலியனும் ஜோசபைனும் பாரிசில் பதிவுத் திருமணம் செய்துகொண்டனர். திருமணத்தையொட்டி சொத் துப் பிரிவினை எற்பாடும் கையெழுத்தாயிற்று. ஜோசபைன் பெரும் பாலும் கடன்களையே சொத்தாகப் பெற்றிருந்தாள். உடுத்தியிருக் கிற இராணுவச் சீருடையே எனது சொத்து என்று அறிவித்தார் மணமகன் நெப்போலியன். ‘மாற்றமுடியா அமைவுக்கு’ (**To Destiny**) என்ற எழுத்துகள் திருமண மோதிரத்தில் ஒளி வீசின.

> “மருங்கிலா நங்கையும் வசயிலையனும்
> ஒருங்கிய விரண்டுடற்குயி ரொன்ருயினர்”

**உறுதுணைபுரிந்த நூல்கள்**


1. ஃபிரெஞ்சுப் புரட்சியின் காலப்பெரும் பிரிவு — 1715 - 1815 — எல். பி. காட்சால்க்
2. ஃபிரெஞ்சுப் பெரும் புரட்சி — கிரோபாட்கின்.
3. ஃபிரெஞ்சுப் புரட்சியும் நெப்போலியனும் — ஹாசென்.
4. நெப்போலியன் — எமில் லட்விக்
5. நெப்போலியனது வாழ்க்கை — சே. எச். ரோஸ்
6. நெப்போலியன் போனபார்ட் — ஸ்லோன்
7. நெப்போலியனது வாழ்க்கை — ஜோசப். எஸ். சி. ஆப்பட்.

# 6. இத்தாலிய வெற்றி

‘ அருமைத் தோழர்களே ! அரைப்பட்டினியுடன் போது மான ஆடையின்றி நீங்கள் இங்கே அவதிப்படுகிறீர்கள். நமது அரசோ உங்களிடமிருந்து அதிகம் எதிர்பார்க்கின்றது. ஆனல், உங்களுக்கு வேண்டிய வசதிகளனைத்தையும் செய்துகொடுக்கும் நிலையில் அரசு இல்லை. உங்களுடைய பொறுமையினையும் துணி வினையும் நான் பெரிதும் பாராட்டுகின்றேன். உலகத்தின் சிறந்த பகுதிகளுக்கு நான் உங்களை அழைத்துச் செல்லுகின்றேன். செழித்தோங்கிய நகரங்களையும், வளங்கொழிக்கின்ற மாநிலங் களையும் நான் அங்கு உங்களுக்குக் காட்டுவேன். அங்கு நீங்கள் பெயரும் புகழும் பெருஞ்சொத்தும் அறுவடை செய்யலாம். இத்தாலியப் படையின் இணையற்ற வீரர்களே! உறுதியும் துணிவும் உங்களுக்கு மிகமிகத் தேவை.''

1796 ஆம் ஆண்டு — தம்முடைய திருமணத்திற்குச் சற்று முன்பு — நெப்போலியன் இத்தாலியப் படையின் தலைமைத்தள பதியாகப் (Commander - in - Cheif of the Army of Italy) பதவி உயர்வு பெற்ருர். திருமணமான இரண்டாம் நாளே நிஸ் நகரம் சென்று பதவியேற்றுத் தம்முடைய வீரர்களுக்காற்றிய அரும் உரையே மேலே கண்ட வரிகள். இதனைக் கேட்ட வீரர்கள் புத்துணர்வும், புதிய எழுச்சியும் பெற்றனர். நெப்போலியனின் இத்தாலியப் போராட்ட ஏற்பாடு (Compaign) 1796 ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் 1797 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள்வரை ஓராண்டு காலம் நீடித்தது. இந்த ஓராண்டில் அவர் ஆற்றிய சாதனைகள் மகத்தானவை. அசைக்கமுடியாத ஃபிரெஞ்சுப் படையின் கீர்த் தியினை அகிலத்தில் நிலைநாட்டிய பெருமை அவரைச் சாரும். ‘ வந்தார், கண்டார், வென்ருர் ’ என்றே அவருடைய இத்தாலிய சாதனையை எடுத்தியம்புகின்றன வரலாற்றேடுகள்.

பல்வேறு சிறப்புத்திறன்களின் மொத்த உருவம் போன பார்ட். இயல்பாகவே அரசியல், படைத்துறை ஊக்கங்கள்

அவரிடம் எழுச்சிபெற்று விளங்கின. பொதுவாக ஒரு நாட்டினைக் கண்டு ஆய்ந்து மதிப்பிடுகின்ற வேளையில் அந் நாட்டின் நிலக்கூறு பற்றிய செய்திகளை மட்டுமின்றி அந் நாட்டு மக்களின் நலன் சார்ந்த ஆக்கப்பொருள்பற்றிய செய்திகளையும் கணக்கில் வைப்பது அவரது வழக்கம். எதிரிகளால் புறக்கணிக்கப்பட்ட அத்தகைய செய்திகள் அல்லது நிகழ்ச்சிகள் **(Facts)** போனபார்ட்டின் விருப்பம் என்ற நெம்புகோலினை இயக்குகின்ற உறுதியான தாங்குநிலை ஆதாரமாக விளங்கின. இருபத்தாறு ஆண்டுகளே நிறைந்த இளைஞன் போனபார்ட்டின் அரசியல், படைத்துறை ஆற்றல்களனைத்தையும் பயன்படுத்திக் கீர்த்தி பெறுவதற்கேற்ற இடமாக இத்தாலி என்ற பெயரிலே உலவிய பல வண்ண ஒட்டுகளாகிய நாடுகள் **(Mosaic of States)** அமைந்தன. இத்தாலி நீண்ட நெடுங்காலமாகவே போர்போர்ன் ஹேப்ஸ்பர்க் அரச மரபினரின் ஆதிக்க வேட்டைக்காடாக அமைந்து அமைதி குலைந்திருந்தது. அவர்களது போட்டிகளின் விளைவாகவும், போட்ட சண்டைகளின் பயனாகவும், உள்நாட்டுக் குழப்பங்களும், பிரிவுகளும் தோன்றி, இத்தாலி சிறப்பினை இழந்தது. அன்று ஐரோப்பாவிற்கே வழிகாட்டிய இத்தாலி—மறுமலர்ச்சியின் தாயகமான இத்தாலி — அகிலத்திற்கெல்லாம் சட்டம் வழங்கிய இத்தாலி இன்று ஐரோப்பியர்களின் போர்க்களமாக மாறி அவதிப்பட்டது. அன்று உரோமானியரின் போர்க்களமான ஐரோப்பா இன்று இத்தாலியைத் தனது போர்க்களமாக மாற்றி அதன் சீரையும் சிறப்பினையும் மாய்த்தது. இத்தாலியின் வடபகுதியில் ஹாப்ஸ்பர்க் மரபினர் வலிமையற்று விளங்கினர். வளமான மிலான் **(Milan)** ஹாப்ஸ்பர்க் மரபில் வந்த கோமகனுடைய ஆட்சிப்பகுதியாக விளங்கியது. வலிமை வாய்ந்த மேண்டுவா **(Mantua)** அவர்களது பிடியிலிருந்தது. அன்றியும், ஆங்காங்கே பல படைமான்ய முறையிலமைந்த நில உரிமைகளையும் அவர்கள் பெற்றிருந்தனர். ஆஸ்திரிய நாட்டு வழித்தோன்றலான ஒருவர் வளமான டஸ்கனி **(Tascany)** பகுதியினை ஃபிரான்சிலிருந்து ஆண்டு வந்தார். மொடீனா **(Modena)**, லூக்கா **(Lucca)** ஆகியவை ஆஸ்திரியாவின் பிடியிலிருந்தன. தென் இத்தாலியும் சிசிலியும் போர்போர்ன் மரபில் வந்த மன்னர்களிடமிருந்தன. பார்மா **(Parma)** பகுதியும் அவர்களது ஆதிக்கத்துக்குட்பட்டிருந்தது. போப்பாண்டவரின் ஆதிக்கத்திலிருந்த நாடுகள் அவரது ஆட்சிக்கெதிராக கிளர்ச்சிகளில் ஈடுபட்டன. 1794 ல் போலோன் பகுதியைச் சார்ந்த இரண்டு இளைஞர்கள் இத்தாலிய மூவர்ணக் கொடியினையேற்றி போப்பின் ஆதிக்கத்திற்கெதிராக மக்களைப் புரட்சி செய்யும்படித் தூண்டினர். ஃபிரெஞ்சுப் புரட்சிக் கருத்துகளைப் பரப்பினர். ஆனால், அவ்வீர இளைஞர் இருவரும் பிடிபட்டுத்

தூக்கிலிடப்பட்டனர். புரட்சி நசுக்கப்பட்டது. இருப்பினும், புரட்சிக் கருத்துகள் பரவுவதைத் தடுக்குமாற்றலே அன்றைய இத்தாலியில் எந்த சக்தியும் பெற்றிருக்கவில்லை. பீட்மாண்ட் (Piedmont), இலம்பார்டி (Lombardy) ஆகிய பகுதிகள் கிளர்ந்தெழுந்தன. சார்டினிய மன்னர் ஃபிரெஞ்சுப் புரட்சியரசை எதிர்த்துப் போர்தொடுத்த நேரத்தில், டூரின் மக்களைக் கிளர்ச்சியிலிருந்து தடுப்பது அவருக்கு இயலாததாயிற்று. ஆஸ்திரிய - சார்டினியக் கூட்டிணைவு, புரட்சியரசிடமிருந்து சவாய் (Savoy), நிஸ் (Nice) ஆகிய பகுதிகளை மீட்க இயலாதவாறு திணறியது. ஆஸ்திரிய ஆட்சியிலும் உள்நாட்டு மன்னர்களாட்சியிலும் இத்தாலிய மக்கள் அழுத்தப்பட்டு நசுக்கப்பட்டனர். ஆகவே, அவர்கள் புரட்சிக் கருத்துகளால் கவரப்பட்டதோடல்லாமல் ஃபிரெஞ்சுக்காரர்களைத் தங்களை வாழ்விக்க வந்த மீட்பர்களாகவும் கருதினர்.

ஃபிரான்சில் நிலைநாட்டப்பட்ட குடியரசினை முறியடிக்கும் முயற்சியில் ஐரோப்பிய முடியரசுகள் முனைந்துநின்றன. ஃபிரெஞ்சு மக்களாட்சிக் கருத்துகள் ஐரோப்பிய பாமர மக்களின் இதயங்களையெல்லாம் தடவின. மன்னர்களும், மன்னர் தம் மரபில் வந்த பிரபுக்களும், உயர்குடியினரும், இறைவனின் பெயரால் உலகை இருட்டறைக்கு அழைத்துச்சென்ற சமயக்குருமார்களும் அதனைக் கண்டு மருண்டனர். ‘மழையைக் கொடுக்கும் மேகத்தைக் கண்டு உழவன் உவகை கொள்கின்றான்; அதைக் கண்ட கூத்தாடி கோபங்கொள்ளுகின்றான்.’ அதைப்போல நாட்டு மக்களின் நலன் கருதியமைந்த குடியரசினைக் கண்டு ஐரோப்பிய சாமான்யமக்கள் ஆனந்தங்கொண்டனர்; ஆனால் ஆண்டுகள் பலவாக மக்களை அட்டைகள் போல உறிஞ்சிக் கொழுத்த முடியரசு ஆதரவாளர்கள் வெகுண்டனர்; குமுறினர்; பதை பதைத்தனர்; எப்படியும் குடியரசை வீழ்த்தித் தங்கள் குலப்பெயரை நிலைநாட்டத் துடியாய்த் துடித்தனர். ஃபிரெஞ்சுப் புரட்சி இங்கிலாந்தையும் வெகுவாகப் பாதித்தது. இங்கிலாந்து மக்களும் ஆதிக்கபுரியினை எதிர்த்துக் கிளர்ச்சிகளில் ஈடுபாடு கொண்டனர். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற கோரிக்கைகளை முன்வைத்து உரிமைப்போராட்டங்கள் நடாத்தினர். இத்தகைய கிளர்ச்சிகளை நசுக்கி அவைகளுக்குக் காரணமாக அமைந்துள்ள ஃபிரெஞ்சுக் குடியரசினை வீழ்த்த இங்கிலாந்து அரசு உறுதி கொண்டது. ஜனநாயகக் கருத்துகளின் பிறப்பிடமாக பாரிஸ் விளங்கியது. அங்கிருந்து கிளம்பிய புரட்சிக் கருத்துக்கணைகள் ஐரோப்பாவின் மணிமகுடங்களையெல்லாம் தாக்கின. ஃபிரெஞ்சு முடியரசுக்கு ஏற்பட்ட கதி தங்களுக்குமேற்படும் என்று அவர்கள் அஞ்சினர். ஆகவே, ஐரோப்பிய முடிமன்னர்கள் பலர் ஒரே

அணியில் திரண்டு புரட்சிக் கருத்துகளை நசுக்கி குடியரசை வீழ்த்திடும் பணியினை விடாது தொடர்ந்தனர்.

ஃபிரான்சில் குடியரசு ஏற்படுத்தப்பட்ட பின்னர், வெளிநாடு களுடன் போர் நடாத்தும் பொறுப்பு நாட்டின் பாதுகாப்புக் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அக் குழுவின் உறுப்பினர் களில் ஒருவர் கார்னோ (Carnot) என்பவர். அவரது சிறப்பான பணியால் ஃபிரெஞ்சுப்படை புத்துயிரும், புதிய வேகமும் பெற்றுப் புனிதப்போரில் வெற்றிகள் பல பெற்றது. தோல்விமேல் தோல்வி பெற்றுக்கொண்டிருந்த ஃபிரெஞ்சுப் படையை வெற்றிப் பாதை யில் திருப்பிவிட்ட பெருமை க ார்னோவையே சாரும். இதற்கி டையே, ஃபிரான்சில் இயக்குநர்கள் ஆட்சிப்பொறுப்பினை ஏற்றுப் போரினை வெற்றியுடன் நடாத்தினர். ஹாலந்து, ஃபிரெஞ்சுக் குடியரசு வசமாயிற்று. 1795ல் பிரஷ்யா, ஃபிரான்சுடன் அமைதி உடன்பாடு செய்துகொண்டது. ஹ ா ல ந் து ம் ஃபிரான்சுடன் சேர்ந்து போரில் குதிக்க முன்வந்தது. பிரிட்டன், ஆஸ்திரியா, சார்டினியா ஆகிய நாடுகள் மட்டுமே ஃபிரெஞ்சுக் குடியரசுக் கெதிராகப் போராட்டத்தைத் தொடர்ந்து நடாத்தின. பிரிட் டனின் வலிமைவாய்ந்த கடற்படை ஃபிரான்சு நாட்டின் துறை முகங்களை வலியச் சென்று தாக்குவதில் முனைந்து நின்றது. இரைன் நதி தீரத்தில் இரண்டு லட்சத்திற்கும் மேற்பட்ட ஆஸ் திரியப்படை குவிக்கப்பட்டது. சமயம் வாய்த்தபோது அப் பெரும்படை ஃபிரான்சைத் தாக்க காத்திருந்தது. ஆஸ்திரிய, சார்டினிய, ஆங்கிலேய, நேப்பில்ஸ் படைகள் ஒன்றுபட்டு ஆல்ப்ஸ் மலைத்தொடர்களில் அணிவகுத்து நின்றன. இவ்வாறு, நாலா பக்கங்களிலும் பகைவர்களின் படைகளால் சூழப் பெற்று ஃபிரான்சு இக்கட்டான நிலையிலிருந்தது. இந்த நெருக்கடி யான நிலையிலிருந்து ஃபிரெஞ்சுக் குடியரசைக் காப்பாற்ற ஒரு பொதுவான போர்த்திட்டம் தயாரிக்கப்பட்டது. அதன் படி, ஃபிரெஞ்சுப் படை யொன்று ஜெர்மனி வழியாக இரைன் நதியைக் கடந்து சென்று ஆஸ்திரியப் பகுதிகளைத்தாக்க வேண்டும்; அப் படைக்கு மோரோ (Moreau), ஜோர்டான் (Jourdàn), பிக் கேக்ரு (Pichegru) ஆகிய புகழ்பெற்ற தளபதிகள் நியமிக்கப் பட்டனர். இன்னொரு படை வடஇத்தாலி வழியாக ஆல்ப்ஸ் தொடர்களைக் கடந்து ஆஸ்திரியாவின் தலைநகரான வியென்னு (Vienna) வைத் தாக்கவேண்டும். இப் படையின் தலைமைத் தளபதி யாகத்தான் நெப்போலியன் நியமிக்கப்பட்டார். தலைமைத்தளபதி நெப்போலியனும் செயற்கரிய சாதனைகள் பல புரிந்தார். இத்தா லியப் படையின் தலைமைத் தளபதியாக நியமிக்கப்பட்ட போன பார்ட் மூன்று முக்கிய குறிக்கோள்களைப் பெற்றிருந்தார். முதலா

வதாக, ஆஸ்திரியாவின் பிடியிலிருந்து சார்டினியாவைப் பிரிப்பது ; இரண்டாவது, இத்தாலியிலுள்ள ஆஸ்திரியப்படைகளை முழுவலிமையுடன் தாக்கித் திணறடிப்பதன் மூலம் அவற்றின் உதவிக்கு இரைன் நதிப்பகுதியில் குவிந்துள்ள ஆஸ்திரியப் படைகளை வரவழைக்கும்படி செய்து அதன்மூலம் குடியரசுமீது பாயவிருக்கும் ஆஸ்திரியப் படையின் வலிமையைக் குறைப்பது ; மூன்றுவது, தம்முடைய அதிகாரத்தையும் செல்வாக்கையும் பயன்படுத்தி குடியரசுக்கு எதிராக மன்னர்களுக்கு உதவியாக இருக்கும் போப்பைப் பணியவைப்பது. உரோமாபுரிக்கு அனுப்பப் பட்ட ஃபிரெஞ்சுக் குடியரசுத் தூதர் போப்பின் ஆட்களால் வீதிகளில் விரட்டியடிக்கப்பட்டார். வீட்டிற்குள் நுழைந்து அவரை விடாது விரட்டி இழுத்து பட்டப்பகலில் படுகொலை செய்தனர். போப்பும் அக் கொலைகாரர்களுக்கு எவ்விதத் தண்டனையும் வழங்க வில்லை. ஃபிரெஞ்சுக் குடியரசுக்குப் பெரும் இழுக்கினை ஏற்படுத்தி விட்டார் போப். ஆகவே, அவரைப் பழிவாங்க நெப்போலியன் முன்வந்தார். இத்தகைய நோக்கங்களை உள்ளடக்கி இளைஞன் போனபார்ட், வாக்களித்த நிலம் (Promised Land நோக்கித் தம் மக்களை மோசே அழைத்துச் சென்றதுபோல தம்முடைய வீரர்களை இனிய இத்தாலியைநோக்கி அழைத்துச் சென்றுர். மோசே தம்முடைய மக்களுக்களித்த வாக்குறுதிகளைப் போல நெப்போலியனும் தம் வீரர்களுக்கு ஆசைகாட்டி அழைத்துச் சென்றுர். மோசேயை நம்பாத அவரது ஆட்களில் சிலர் முணுமுணுத்ததைப் போல நெப்போலியனது வீரர்களில் சிலரும் அவரது ஆசைவார்த்தைகளில் மயங்காது முணுமுணுத்தார். இருப்பினும், நெப்போலியன், அவர்களின் இதயங்களையெல்லாம் குளிரவைக்கும் பொருட்டு அழைத்துச்சென்றுர் இத்தாலிக்கு. அவருக்கிருந்த வசதிகள் மிக மிகக் குறைவு. ஆனல், ஆற்றவேண்டிய பணியோ மிகமிகப் பெரிது. 24 மலைத்துப்பாக்கிகள், போதுமான உணவின்றி வாடிய 4000 குதிரைகள், அரைகுறை ஆடையுடன், அரைப்பட்டினி யுடன் வாடிய முப்பதாயிரம் வீரர்கள், அவர்களுக்கு அரைச் சாப்பாட்டளவில் ஒரு மாதத்திற்குப் போதுமான உணவு — இவையே நெப்போலியன் பெற்றிருந்த வசதிகள். இத்தகைய குறைகளுடன் இத்தாலியை வெற்றிகொள்ளும் பெரும் பணி அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அன்றியும், அவரது படை வீரர்களில் பலர், மனம் வெதும்பிய நிலையில் இருந்தனர். வேறு சிலர் மன்னராட்சி ஆதரவாளராக மாறும் நிலையிலிருந்தனர். அவர்களையெல்லாம் தக்கவாறு திருத்தி தம் வழிக்கு இழுத்து அவர்களைச் சிறந்த நாட்டுப்பற்றுள்ள குடியரசு வீரர்களாக மாற்றினுர் போனபார்ட். அவர் காலத்தை கொஞ்சங்கூட வீணுக்காது சுழன்று பணியாற்றி தம்முடைய படையை வலிமைமிக்க

மக்களரசுப் படையாக மாற்றியமைத்தார். ஒரு சாலையை அமைக்க நூற்றுப்பத்து பேர்கொண்ட ஒரு குழுவினை அனுப்பியது ; ஒரு படைப்பிரிவில் ஏற்பட்ட கலகத்தை அடக்கியது ; குதிரை திருடிய வழக்கில் இரண்டு இராணுவ அதிகாரிகளுக்கு ஆணைகள் பிறப் பித்தது ; இரண்டு இராணுவ அதிகாரிகளின் படைத்துறைபற்றிய வேண்டுகோளுக்கிணங்கித் தக்கவாறு பதிலனுப்பியது; தம்முடைய படையினை நிஸ் நகருக்கு கொண்டுவரும்படி தௌலான் (Toulan) பகுதியிலிருந்த இராணுவ அதிகாரிக்கு ஆணை பிறப்பித்தது ; கலகம் செய்கின்ற படைப்பிரிவில் உள்ள ஆற்றல்மிக்க அதிகாரி களைக் கண்டுபிடிக்குமாறு அப் பிரிவின் இராணுவ அதிகாரிக்கு உத்தரவு அனுப்பியது ; வீரர்களைக் கூட்டிப் பேருரை ஆற்றியது ; படைகளை மேற்பார்வையிட்டது — ஆகியவை, தாம் வந்து சேர்ந்த மூன்றுவது நாளில் மட்டும் போனபார்ட் ஆற்றிய பணி களின் பட்டியலாகும். முதல் இருபது நாட்களில் படையின் உணவுபற்றிய நூற்றி இருபத்தி மூன்று எழுத்து மூலமான ஆணைகளை போனபார்ட் பிறப்பித்துள்ளார்.

போனபார்ட்டின் படையும் நகரத் தொடங்கியது. இராணுவ அதிகாரிகள் அவரது உறுதியினையும், அச்சமற்ற தன்மையினையும், துணிவினையும் வெகுவாகப்புகழ்ந்து அவர் ஊட்டிய உற்சாகத்தில் உறுதியும், வேகமும் பெற்று முன்னேறினர். தளபதி குதிரைமீத மர்ந்து இரவு பகலென்று பாராது அவர்களை வழி நடாத்திச் சென்றார். கடும்பனியையும், கொடிய குளிரையும் பொருட்படுத் தாது, ஆழமான மலைப்பள்ளத்தாக்குகளின் வழியாகவும், கண வாய்களின் வழியாகவும் படைகள் அணிவகுத்துச் சென்றன. பல வழிகளில் பிரிந்துசென்ற படைகள் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட இடத்தையடைந்தன. பேய்க்காற்று, பெருமழை, கடும்பனி, மலைகள், புதர்க்காடுகள் போன்ற தடைகளையெல்லாம் தாண்டி, இரவு பகலென்று பாராது, பசி, தூக்கம் ஆகியவற்றைப் பொருட்படுத்தாது, அவர்கள் அங்கு வந்து சேர்ந்தனர். நெப்போ லியன் ஊட்டிய ஆற்றலே அவர்களை இலட்சிய வீரர்களாக மாற்றியது. ஆஸ்திரியப் படைகள் மூன்று பிரிவுகளாகப் பிரிந்து மாண்டிநாட்டி (Montenotte) என்ற சிற்றூருக்கருகில் முகாமிட் டிருந்தன. நடுப்பிரிவில் மட்டும் பத்தாயிரம் வலிமைமிக்க வீரர் கள் இருந்தனர். 1796 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பதினோராம் நாள், இரவில் நல்ல மழை பெய்து வழியெல்லாம் சகதி நிறைந்திருந்தது. நல்ல இருட்டு. அத்துடன் புயலும் மழையும் விடாது தொடர்ந்தன. ஆஸ்திரியப் படைகள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தன. அன்று இரவெல்லாம் தம் படையை வழி நடாத்தி அதிகாலையில் ஆஸ்திரியப் படையைத் தாக்கினர் போன

பார்ட். ஃபிரெஞ்சுப் படைகள் ஒவ்வொரு பகுதியிலும் சென்று ஆஸ்திரிய, சார்டினியப் படைகளைச் சுழற்காற்று தாக்கியதைப் போல சுழன்று சுழன்று தாக்கின. தாக்குதல் நெடுநேரம் நீடித்தது, வெற்றி தோல்வியை நிர்ணயிக்க இயலாதவாறு. இருப்பினும், இறுதியில் ஃபிரெஞ்சுப் படையின் தாக்குதலுக்கு ஈடுகொடுக்க வியலாத ஆஸ்திரியப் படைகளும், சார்டினியப் படைகளும் வெவ்வேறு திசைகளில் புறங்காட்டி யோடின. இச் சண்டையில் ஆஸ்திரியப் படைவீரர்களில் இறந்தோர் - காயம் பட்டோர் எண்ணிக்கை மூவாயிரத்தைத் தாண்டியது. அவர்களது படைக் கருவிகள் பல ஃபிரெஞ்சுப் படை வசமாயிற்று. இச் சண்டையே போனபார்ட் முழுப்பொறுப்புடன் முன்னின்று நடாத்திய முதல் சண்டை. இந்த வெற்றியே தளபதி நெப்போலியனின் தனிப்பட்ட புகழுக்குரிய முதல் வெற்றி.

தோற்ற ஆஸ்திரியப்படைகள் டீகோ (**Dego**) நோக்கி ஓடின. அங்கு சென்று அதிகளவு படையுதவி பெற்று மிலான் (**Milan**) நகரைக் காப்பாற்றுவது அவர்களது நோக்கம். சார்டினியப் படைகள் மில்லெசிமோ (**Millesimo**) நோக்கிப் பின்வாங்கி தங்களுடைய தலைநகரான டூரினைக் (**Turin**) காக்க விரைந்தன. இவ்வாறு, தளபதி போனபார்ட் விரும்பியபடி ஆஸ்திரிய, சார்டினியப் படைகள் பிரிக்கப்பட்டன. பிரிந்து ஓடிய ஆஸ்திரிய, சார்டினியப் படைகளை ஒரே நேரத்தில் தனித்தனியே சந்தித்துத் தாக்கும்படி தம் படைகளை ஏவினார் நெப்போலியன். அதன்படி டீகோ பகுதியில் ஆஸ்திரியப்படைகள் தாக்கப்பட்டன. ஃபிரெஞ்சுப்படையின் கடுந் தாக்குதலுக்குள்ளான ஆஸ்திரியப்படை சிதறி மலைகளிலோடி மறைந்தது. அவர்கள் வசமிருந்த பீரங்கிகள் உணவுப்பொருட்கள் போன்றவை ஃபிரெஞ்சுப் படை வசமாயிற்று. மூவாயிரத்திற்கு மேற்பட்ட ஆஸ்திரிய வீரர்கள் போனபார்ட்டின் போர்க்கைதிகளாயினர். மில்லெசிமோ பகுதியில் பதினைந்தாயிரம் வீரர்களடங்கிய சார்டினியப் படைத்தளபதி நெப்போலியனிடம் சரணடைந்தார். இவ்வாறு, மூன்று நாட்களில் நடந்த மூன்று சண்டைகளிலும் போனபார்ட் மகத்தான வெற்றிகளைப் பெற்றார். டீகோ சண்டையில், இலேன்னெஸ் (**Lannes**) என்ற இளைஞர் ஆற்றிய தீரச்செயல் தளபதி போனபார்ட்டை வெகுவாகக் கவர்ந்தது. விரைவில் இலேன்னெஸ் படிப்படியாகப் பல பதவி உயர்வுகளைப் பெற்றார். சண்டையில் நல்ல வீரர்களைப் பொறுக்கி எடுத்து அவர்களை ஊக்குவிப்பது தளபதியின் வழக்கமாகும்.

தோற்றோடிய சார்டினியப் படைகளைத் தொடர்ந்து நெப்போலியனும் தம் படைகளை அழைத்துச்சென்றார். அவரைச் சூழ்ந்து நாலா திக்குகளிலிருந்தும் பகைவர் படைகள் குவிந்த

வண்ணமிருந்தன. பேர்திய உணவும் போர்க்கருவிகளும் இல்லாத நிலையில் ஃபிரெஞ்சுப் படைகளும் தளர்ச்சியடைந்தன. இருப்பினும் தளபதி தம்முடைய ஆர்வத்தின் காரணமாக அவர்களை நல்வழிப் படுத்தி, ஆறுதல் கூறி அவர்களிடம் ஒழுக்கத்தையும், கட்டுப்பாட்டையும் உருவாக்கி அழைத்துச் சென்றார். விரைவில் ஃபிரெஞ்சுப் படை ஜிமோலோ (Zem o) மலையின் உச்சியினையடைந்தது. அங்கிருந்து கீழேயுள்ள செழுமைமிக்க இத்தாலியச் சமவெளிகளைக் கண்டு அவர்கள் ஆனந்தக் கூத்தாடினர். கனிகுலுங்கும் சோலைகள், கண்கவர் திராட்சைத் தோட்டங்கள், வளமிக்க வயல் வெளிகள், வனப்புமிக்க சிற்றூர்கள் ஆகியவை கண்கொள்ளாக் காட்சியாக அமைந்திருந்தன. வளைந்தோடும் வற்றாத நதிகள், அவற்றில்பட்டு ஒளிவிடும் வெண்ணிறக் கதிர்கள், அவ்வாறுகளை ஆரத்தழுவும் அழகிய புல்வெளிகள், அடர்ந்த காடுகள், அழகிய நகரங்கள் ஆகியவற்றின் எழில்கண்டு இன்பங்கொண்டனர் ஃபிரெஞ்சுப் படையினர். குதிரைமீதமர்ந்தபடியே இத்தாலியின் எழிலைக் கண்டுகளித்தார் நெப்போலியன். ஆயினும், கண்ட காட்சியில் மயங்கிக் காலத்தை வீணாக்காது அவர் கொண்ட பணியினைத் தொடர்ந்தார். விரைவில் ஃபிரெஞ்சுப்படை வெயில் சூழ்ந்த இத்தாலியச் சமவெளிகளை வந்தடைந்தது. இப்போது போனபார்ட் தம்முடைய படைகளை இரண்டாகப் பிரித்து ஒரு பிரிவினை ஆஸ்திரியப் படைகளைப் பின்தொடரும்படி பணித்தார். இன்னொரு பிரிவினைத் தாமே வழிநடாத்தி டூரின் நகர்நோக்கி விரைந்து கொண்டிருந்த சார்டினியப் படையைப் பின்தொடர்ந்தார். ஏப்ரல் திங்கள் 18 ஆம் நாள் ஃபிரெஞ்சுப்படை சீவா (Ceva) என்ற இடத்தில் சார்டினியப் படைகளைச் சுற்றிவளைத்துத் தாக்கியது. ஆனால், சார்டினியப் படை அன்றிரவு பின்வாங்கி கார்சுக்கிளியா (Carsuglia)ப் பகுதியிலுள்ள ஆழமான, நுரை படிந்துள்ள விசைநீரோடையை (Torrent) வந்தடைந்தது. அடுத்தநாள் மாலை நெப்போலியன் மீண்டும் அவர்களை முந்திக்கொண்டு வந்து அவர்களைத் தாக்க முற்பட்டார். ஆனால், ஃபிரெஞ்சுக்காரர்களின் தாக்குதல் பலிக்காதபடி தக்க பாதுகாப்பளித்தது அவ் விசை நீரோடை. இருப்பினும், அங்குள்ள பாலத்தைக் கடந்து அடுத்த நாள் காலையில் அவர்களைத் தாக்குவதாக நெப்போலியன் முடிவெடுத்தார். ஆனால், ஃபிரெஞ்சுப்படைகள் பாலத்தைக் கடப்பதற்குள் சார்டினியப் படைகள் ஓடிவிட்டன. அவ்வாறு ஓடிய படைகளை விரட்டிச்சென்று நெப்போலியன் மாண்டோவி (Mondove) என்ற இடத்தில் வளைத்து மடக்கினார். அங்கு இரண்டு படைகளும் பயங்கர மோதலில் இறங்கின. மாண்டோவிச் சண்டையிலும் ஃபிரெஞ்சுப் படைகளே வெற்றியைத் தழுவிக்கொண்டன. சார்டினியப் படைகள் இரண்டாயிரம் வீரர்களையும், எட்டு

பீரங்கிகளேயும், பதினேரு பதாகைகளேயும் (Standards) விட்டு விட்டு ஓட்டம்பிடித்தன. நெப்போலியனும் அப் படையினரை விடாது விரட்டி சார்டினியத் தலைநகரான டூரினுக்கு இருபது கல் தொலைவிலுள்ள சேராஸ்கோ (Cherasco) என்ற இடத்தில் அவர்களை மீண்டும் மடக்கினர். சேராஸ்கோ நெப்போலியன் வசமாயிற்று. நெப்போலியன் சார்டினியத் தலைநகரை நெருங்கிய வுடனே டூரின் நகரில் குழப்பமும் கொந்தளிப்பும் மிகுந்தன. நெப்போலியனின் ஆதரவாளர்கள் அவரை வரவேற்றுத் தங்களின் காப்பாளராக ஏற்றுச் சார்டினியாவில் குடியரசை உருவாக்கக் காத்துக்கொண்டிருந்தனர். இந் நிலையில், சார்டினிய மன்னர் வேறு வழியின்றி நெப்போலியனுடன் அமைதியுடன்பாடு செய்து கொள்ள முன்வந்தார். அதன்படி, 1796ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 28 ஆம் நாள் சேராஸ்கோ உடன்பாடு கையெழுத்தா யிற்று. அவ்வுடன்பாட்டின்படி, ஆல்ப்ஸ் மலைகளின் திறவுகோல் கள் போன்ற கோனி (Coni), டோர்டோனு (Tortona), அலெக் சாண்டிரியா ஆகிய மூன்று முக்கிய கோட்டைகளும் ஃபிரெஞ்சுக் குடியரசுக்குக் கிடைத்தன. சார்டினிய மன்னர் ஆஸ்திரியக் கூட்டிணைவிலிருந்து விலகினர். சார்டினியத் தூதுவர் ஒருவர் பாரிசுக்கு அனுப்பப்பட்டார். ஃபிரெஞ்சுப் படைகள் இதுவரை பிடித்த இடங்கள் அனைத்தும் ஃபிரான்சுக்கு உடைமையாக்கப் பட்டன. சார்டினியப் படைகள் கலைக்கப்பட்டன. சார்டினியாவின் படைத்துறை வழிகளனைத்தையும் ஃபிரெஞ்சுப் படையினர் பயன் படுத்தும் உரிமை பெற்றனர். சவாய் (Savoy), நிஸ் (Nice) ஆகிய வை ஃபிரெஞ்சுக் குடியரசுக்குக் கொடுக்கப்பட்டன. அந்த உடன் பாட்டினை அடுத்து நெப்போலியன் அடியிற்கண்ட உள்ளத்தை உருக்குகின்ற ஓர் அறிவிப்பினை வெளியிட்டார். 'அருமைத் தோழர்களே ! ஆறு வெற்றிகள், இருபத்தோரு பதாகைகள் (Standards), ஐம்பத்தைந்து பீரங்கிகள், அநேக வலிமைமிக்க இடங்கள் ஆகியவற்றை நீங்கள் பதினைந்தே நாட்களில் பெற் றுள்ளீர்கள் ; அன்றியும் வளமிக்க பீட்மாண்ட் (Piedmont) பகுதியினையும் வென்றுள்ளீர்கள். பதினைந்தாயிரம் வீரர்களைச் சிறைப் பிடித்துள்ளீர்கள் ; பத்தாயிரம் பேர் இறந்துள்ளனர் அல்லது காயம் பட்டுள்ளனர்........... நீங்கள் முழுதும் கைவிடப் பட்ட நிலையிலிருந்தீர்கள் ; ஆனல் இப்போது தேவைகளனைத் தையும் நீங்கள் பெற்றுள்ளீர்கள். பீரங்கியின்றி படைகளை வென்று வாகை சூடியுள்ளீர்கள். பாலங்களின்றி பல ஆறுகளைக் கடந்துள்ளீர் ; கால்களில் செருப்புகளின்றி நடந்தே முன்னேறி யுள்ளீர், போர் முனைகளில் போதிய உணவின்றி வெட்டவெளியில் தங்கியிருந்துள்ளீர் ; இத்தகைய இன்னல்களுக்கிடையே சிறப் பான சாதனைகளைச் செய்யவல்லோர் குடியரசுப்படையினரும்

விடுதலை வீரர்களுமான நீங்களே. ஆனால், எனதருமைத் தோழர்களே ! நாம் சாதித்தவை மிகக்குறைவு ; நாம் சாதிக்க வேண்டியவை மிகப்பல. டூரின் அல்லது மிலான் இன்னும் நம் கைகளுக்கு வரவில்லை......... மாண்டிநெட்டி, மில்லெசிமோ, டீகோ, மாண்டோவி வெற்றி வீரர்களாகிய நீங்கள் ஃபிரான்சின் பெயரையும் புகழையும் மேலும் தொடர்ந்து நிலைநாட்டுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்குண்டு. நாம் அடுத்த வெற்றியினை நாடிச் செல்வதற்குமுன், நாம் விடுவித்த மக்களைப் பாதுகாப்போம். சட்டத்திற்கு உட்படாத வன்முறைச் செயல்களனைத்தையும் அடக்கி ஒடுக்குவோம் என்ற உறுதியினை நீங்கள் எனக்களித்திடல் வேண்டும். இல்லையேல், நீங்கள் உண்மையிலேயே காப்பவர்களாக (Deliverers) ஆக முடியாது ; ஆனால், கொடுமைக்காரர்களாக நிந்திக்கப்படுவீர்கள். தேசிய அதிகாரத்தில் நாட்டங்கொண்டு, நீதியின்பால் வழுவாது நின்று, சட்டத்தை நிலைநாட்ட எண்ணங் கொண்டுள்ள நான், மனிதத்தன்மைக்கும், தன்மானத்திற்கும் தேவையானவற்றை நடைமுறைப்படுத்தத் தயங்கமாட்டேன். உங்களுடைய வெற்றிப் புகழாரங்களையெல்லாம் கறைபடுத்த நான் எந்தக் கொள்ளைக்காரர்களையும் அனுமதியேன். போர்க் காலக் கொள்ளைக்காரர்கள் ஈவிரக்கமின்றிச் சுட்டுக்கொல்லப் படுவர்.

'இத்தாலியப் பெருங்குடி மக்களே ! உங்களுடைய அடிமை விலங்கினை ஒடித்து உங்களை விடுவிக்கவே ஃபிரெஞ்சுப் படை இங்கு வந்துள்ளது. ஃபிரெஞ்சு மக்கள் அனைத்து நாடுகளின் நண்பர்கள். அவர்களை நீங்கள் முழுதும் நம்பலாம். உங்களுடைய சொத்து, சமயம், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றிற்குரிய மதிப்பும் மரியாதையும் முறைப்படி வழங்கப்படும். உங்களை அடிமைப்படுத்திய கொடுங்கோல் உலுத்தர்களை எதிர்த்தே நாங்கள் போரிடுகின்றோம்.'

நெஞ்சை நெகிழவைக்கும் இவ்வறிவிப்பினைக் கேட்டபின்பும் போனபார்ட்டின் வீரர்களில் பலர் சேராஸ்கோ உடன்பாட்டினைக் கண்டித்தனர். தோல்வி கண்ட மன்னன் ஒருவனுடன் உடன்பாடு செய்து கொள்வது ஃபிரெஞ்சுக் குடியரசு கோட்பாட்டிற்கே முரணானது என்று அவர்கள் கருதினர். எனவே, சார்டினியாவில் உடனடியாக மன்னராட்சியை நீக்கிவிட்டு மக்களாட்சியை மலர வைக்க அவர்கள் விரும்பிவேண்டினர். ஆனால், பக்குவமற்ற மக்களின் கரங்களுக்குத் திடீரென்று ஆட்சி மாறுவதின்மூலம் பயங்கர விளைவுகள் ஏற்படுமென்று அஞ்சினார் நெப்போலியன். ஃபிரான்சின் பயங்கர ஆட்சி அவரது உள்ளத்தில் பசுமையான நினைவுகளைத் தேக்கிவைத்திருந்தது. ஃபிரான்சிற்கு ஏற்பட்ட

நெருக்கடி இத்தாலியிலும் ஏற்படக்கூடாது என்று விரும்பினர் போனபார்ட். எனவே, உடனடியாக ஆட்சி மாற்றத்திற்கு இசைவு தராது தமது வீரர்களின் உள்ளக் கிடக்கையை அறிந்து அவர்களை அடுத்த வெற்றிக்கு அழைத்துச் சென்றார்.

நிஸ் (Nice), பீட்மாண்ட் (Piedmont), சவாய் (Savoy), மாண்ட்ஃபெராட் (Montferrat) ஆகிய நான்கு மாநிலங்களை உள்ளடக்கியது சார்டினிய நாடு. மூன்று இலட்சம் மக்கள் அங்கு வாழ்ந்தனர். சார்டினிய மன்னர் தம்முடைய அரிய முயற்சியாலும், இங்கிலாந்து கொடுத்த உதவியாலும் அறுபதாயிரம் வீரர்களடங்கிய ஒரு பெரும்படையைப் பெற்றிருந்தார். அவர் நிறைய கோட்டை, கொத்தளங்களையும் பெற்றிருந்தார். ஒவ்வொரு கோட்டையும் போதுமான உணவுப் பொருட்களுடனும், தக்க பாதுகாப்புடனும் விளங்கியது. ஃபிரான்சிலிருந்து தப்பி ஓடிவந்த இளவரசர்களுக்கும் பிரபுக்களுக்கும் அவர் தமது நாட்டில் அடைக்கலம் அளித்தார். ஆஸ்திரியக் கூட்டிணைவில் சேர்ந்து ஃபிரான்சுக் குடியரசைத் தாக்கவும் முற்பட்டார். அத்தகைய ஆற்றல் மிக்க சார்டினிய மன்னரின் படையினை, முப்பதாயிரம் அரைப்பட்டினி வீரர்களைக் கொண்டு பதினைந்தே நாளில் வென்று சார்டினியாவிலிருந்து ஆஸ்திரியர்களை விரட்டியடித்தார் நெப்போலியன். நெப்போலியனின் ஆற்றலைக்கண்டு அஞ்சிய சார்டினிய மன்னர் அவருடன் உடன்பாடு செய்துகொண்டு தம் உயிர்போன்ற பகுதிகளையெல்லாம் இழந்து தவித்தார். சேராஸ்கோ உடன்பாட்டில் கையெழுத்திட்ட ஒரு சிலநாட்களில் சார்டினிய மன்னர் மனமொடிந்து மாண்டார்.

சேராஸ்கோ உடன்பாடுகளுடன் தளபதி மூராட் (Murat) பாரிசுக்கு அனுப்பிவைக்கப்பட்டார். அவர் எதிரிகளிடமிருந்து பெற்ற இருபத்தொரு பதாகைகளையும் தம்முடன் எடுத்துச் சென்றார். சார்டினிய வெற்றிச்செய்தி ஃபிரெஞ்சுமக்களின் செவிகளில் தேனெனப் பாய்ந்தது. நெப்போலியன் போனபார்ட் என்ற இத்தாலியப் பெயர் ஒவ்வொரு ஃபிரெஞ்சுக் குடிமகனுடைய உள்ளத்திலும் நின்றுநிலவியது. ஒவ்வொருவருடைய உதட்டிலும் அப் பெயர் உற்சாகத்துடன் உலா வந்தது. அவர் புகழ் பாடாத வாயில்லை; அவர் பெயரை உச்சரிக்காத நாவில்லை என்ற வகையில் நெப்போலியன் போனபார்ட் ஃபிரெஞ்சு மக்களின் நெஞ்சங்களிலெல்லாம் நீக்கமற நிறைந்துவிட்டார். பதினைந்து நாட்களில் மூன்று முறை ஃபிரெஞ்சுச் சட்டமன்றம் கூடி இத்தாலியப் படைக்கும் நெப்போலியனுக்கும் பாராட்டு வழங்கியது. ஃபிரான்சு முழுவதும் வெற்றி விழாக்கள் கொண்டாடப்பட்டன. இயக்குநர்கள் ஏற்பாடுசெய்த பாரிஸ் வெற்றி விழா

வின் போது மூராட் தாம் கொண்டுவந்த வெற்றிப் பதாகைகளை இயக்குநர்களிடம் சமர்ப்பித்தார். அதுபோழ்து வெளி நாட்டுத் தூதுவர்கள் பலரும் வருகைதந்து விழாவினைச் சிறப்பித்தனர். ஃபிரான்சு முழுவதும் விழாக்கோலம் பூண்டது; ஐரோப்பா முழுவதும் போனபார்ட்டின் புகழ்பரவத் தொடங்கியது.

சார்டினியாவை வென்று அதனை ஆஸ்திரியக் கூட்டிணை விலிருந்து பிரித்தபின்பு போனபார்ட் தமது கவனத்தை ஆஸ் திரியாமீது திருப்பினார். முதல் குறிக்கோள் நிறைவேறியது. ஆஸ்திரியாவை வீழ்த்தி ஃபிரெஞ்சுக் குடியரசினைக் காப்பாற்று வது அவரது இரண்டாவது இலட்சியம். அதனை நிறைவேற்ற போனபார்ட் இப்போது முழுமூச்சுடன் ஈடுபட்டார். டீகோ **(Dego)** சண்டையில் தோற்றோடிய ஆஸ்திரியப் படைகள் தளபதி பியூலியூ **(Beaulieu)** தலைமையில் போ **(Po)** நதியின் அக்கரையில் முகாமிட்டு மேலும் படைஉதவியை எதிர்நோக்கிக் காத்திருந்தன. அவர்களுக்கு உதவியாக ஆஸ்திரியப் படைகளும் விரைந்து வந்து கொண்டிருந்தன. இந் நிலையில் போனபார்ட்டும் தம் படையுடன் போ நதிநோக்கி விரைந்தார். வழியில் பார்மா என்ற நாட்டின் கோமகனை வென்று அவருடன் ஒரு போர்நிறுத்த உடன்பாடு செய்துகொண்டார். அதன்படி பார்மாக் கோமகன் (**Duke of Parma** நெப்போலியனுக்கு 500 டாலர் வெள்ளி நாணயங்களும் *1,600* பீரங்கிப்படைக் குதிரைகளும் ஏராளமான உணவுப் பொருட்களும் வழங்கினார். மேலும், குறிப்பிடத்தக்க இருபது படங்களையும் நெப்போலியன் அவரிடமிருந்து பெற்று பாரிசில் பொருட்காட்சி சாலையை அலங்கரிக்க அனுப்பிவைத்தார். அப் படங்களில் மிகவும் சிறப்புப்பெற்றது தூய ஜெரோம் (**St. Jerome)** என்பவருடைய உருவப்படமாகும். அப் படத்தினை தம்மிடம் விட்டு வைத்தால் இருநூறாயிரம் டாலர்கள் நெப்போலியனுக்குக் கொடுப்பதாகக் கோமகன் வாக்களித்தார். ஆனால், நெப்போ லியன் அதற்கிணங்க மறுத்து தூய ஜெரோமின் உருவப்படத்தை பாரிசுக்கு அனுப்பிவைத்தார். இந் நிகழ்ச்சி நெப்போலியனின் கலையார்வத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். பார்மாவை வீழ்த்தியபின் போனபார்ட் தமது படையுடன் போ நதிக்கரை வந்தடைந்தார். போ நதியின் எதிர்க்கரையில் நாற்பதாயிரம் தீரமிக்க வீரர்களடங்கிய ஆஸ்திரியப் பெரும்படை முகாமிட்டி ருந்தது. அடுத்த கரையில் நெப்போலியனது படைகள் ஆற்றைக் கடந்து சென்று எதிர்க்கரையில் முகாமிட்டுள்ள ஆஸ்திரியப்படை யைத் தாக்குவது அவ்வளவு எளிதான செயல் அல்ல. அன்றியும், எதிரேயுள்ள ஆஸ்திரியப்படை எண்ணிக்கையில் பெரிது. ஃபிரெஞ் சுப் படைகள் உடனே ஆற்றைக்கடந்து சென்று அதனைத்தாக்கி

வீழ்த்துவது எளிதற்றது மட்டுமல்ல, போர்த்துறை நுணுக்கங் களுக்கு ஏற்புடையதும் அல்ல. ஆகவே, போனபார்ட் தம்முடைய வீரர்களை அழைத்துக்கொண்டு இரவோடு இரவாக போ நதி வழியாகக் கீழ்நோக்கிச் சென்றார். முப்பத்தாறு மணி நேரத்தில் எண்பது கல் தொலைவினைக் கடந்தார் போனபார்ட். இடையில் சிக்கிய படகுகளையெல்லாம் கைப்பற்றினார். ஒரு குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில் தம் படைப்பிரிவுகளனைத்தையும் ஒன்றுபடுத்தினார். ஒன்றுபட்ட படைகள் அனைத்தும் படகுகளின் மூலம் விரைவில் எவ்வித சேதமுமின்றி போ நதியினைக் கடந்து இலம்பார்டிச் சமவெளியில் இறங்கின.

இலம்பார்டி வளமிக்க நாடு. உலகத்தின் செழிப்பான பகுதி களில் ஒன்று. அதனை ஆஸ்திரியர்கள் வென்று ஒரு பெரும்கோ மகனின் ஆட்சிக்கு உட்படுத்தினர். பன்னிரண்டு இலட்சம் மக்கள் அங்கு வாழ்ந்தனர். ஆஸ்திரிய ஆட்சியில் வெறுப்பும் வேதனையும் கொண்டிருந்த இலம்பார்டி மக்கள் புரட்சிக் கருத்துகளால் பெரிதும் கவரப்பட்டு ஆஸ்திரிய ஆட்சியினை வீழ்த்தி குடியரசை நிலைநாட்ட தக்க நேரத்தை எதிர்நோக்கி யிருந்தனர். எனவே, நெப்போலியன் படையுடன் இலம்பார்டியில் வந்திறங்கியவுடன் அவரை இலம்பார்டி மக்கள் குதூகலத்துடன் வரவேற்றனர். ஃபிரெஞ்சுப்படைகள் போ நதியைக் கடந்து இலம்பார்டியில் இறங் கிய செய்தியினை அறிந்த ஆஸ்திரியத் தளபதி பியூலியூ தம் படை களனைத்தையும் திரட்டிக்கொண்டு நெப்போலியனைச் சந்திக்க விரைந்தார். இரண்டு படைகளும் விரைவில் ஃபோம்பியோ **(Fombio)** என்ற இடத்தில் சந்தித்தன. அங்கு பெரும்போர் ஒன்று நிகழ்ந்தது. அப் போரில் ஆஸ்திரியர்களில் பலர் உயிரிழந் தனர். இறுதியில் நெப்போலியன் வென்றார். இரண்டாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் சிறை பிடிக்கப்பட்டு கைதிகளாயினர். புறமுது கிட்டோடும் ஆஸ்திரியப் படைகளைத் தொடர்ந்து ஃபிரெஞ்சுப் படை வீரர்களும் விரட்டிச்சென்றனர். அடிபட்டு ஓடிய ஆஸ்திரி யப்படை அன்று மாலை அட்டா நதிக்கரையிலுள்ள லோடி **(L[illegible]i)** என்ற சிறியநகரை வந்தடைந்தது. அறுநூறு அடி அகலமுள்ள அட்டா ஆற்றினை முப்பதடி அகலமுள்ள ஒரு சிறு மரப்பாலத்தின் வழியாக ஆஸ்திரியப்படை கடந்து அக்கரையை அடைந்தது. அங்கு அணிவகுத்து நின்ற ஆஸ்திரியப் பெரும்படையுடன் அது சேர்ந்து மீண்டும் தாக்குதலுக்குத் தயாராயிற்று. அப் பெரும் படையில் பன்னிரண்டாயிரம் காலாட்படையினரும், நாலாயிரம் குதிரைப்படையினரும் அடங்கியிருந்தனர். அன்றியும், முப்பது கனரகப் பீரங்கிகளும் குறிப்பிட்ட இலக்குகளில் வைக்கப்பட்டுக் குமுறிக்கொண்டிருந்தன. அக் குறுகிய பாலத்தை எதிரிகள் அணுகா

வண்ணம் அவர்களது பீரங்கிகள் நெருப்பைக் கக்கிக்கொண்டிருந்தன. இந் நிலையில் போனபார்ட்டும் தம் படைகளுடன் லோடி நகர் வந்தடைந்தார். எதிரிகளின் போர் ஏற்பாடுகளை அறிந்த போனபார்ட் தம்முடைய படைகளையும் தக்கவாறு நிறுத்திவைத்தார். பீரங்கிகளைத் தாமேமுன்னின்று தக்க இலக்குகளில் பொருத்திவைத்தார். அட்டா நதியிலுள்ள குறுகிய பாலத்தை எந்த விலைகொடுத்தேனும் கடந்து சென்று எதிரிலுள்ள ஆஸ்திரியப் படைகளைத் தாக்கி வீழ்த்த உறுதிபூண்டார். தமது திட்டத்தை தம் கீழுள்ள இராணுவ அதிகாரிகளிடம் விளக்கினார். அவர்களில் ஒருவர் ' அது இயலாத செயல் ' என்றார். உடனே போனபார்ட் ' முடியாது ' என்பது ஃபிரெஞ்சுச் சொல் அல்லவே என்று கூறி அவர்களைத் தம் வசப்படுத்தித் தாக்குதலுக்குத் தயாரானார். போனபார்ட் விருப்பப்படி லோடி பாலத்தைக் கடக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. ஆஸ்திரியப் படைகளின் விடாத தாக்குதலுக்கு ஈடுகொடுத்து, அவர்களது பீரங்கிக் குண்டுகள் கக்குகின்ற நெருப்புக்கும் புகைக்குமிடையே உயிரைப் பணயமாக வைத்து ஃபிரெஞ்சு வீரர்கள் உற்சாகத்துடன் பாலத்தைக் கடக்க முற்பட்டனர். வீரர்கள் சோர்வடைந்த நேரத்திலெல்லாம் அவர்களை ஊக்கி, உற்சாகப்படுத்தி அவரது பணியில் முன்னே சென்று தம்மைப் பின்தொடர்ந்து வரும்படி நெப்போலியன் ஆணையிட்டு முன்னேறினார். அவருக்கருகில் உயிரைத் துச்சமெனக் கருதி முன்னேறினார் இலேன்னெஸ். அதன் விளைவாக இலேன்னெஸ் என்ற அத் துணிச்சல்கார வீரரே முதன்முதலில் பாலத்தைக் கடந்தவர். அடுத்துக் கடந்து வந்தார் தளபதி போனபார்ட். முன்னால் வந்த இலேன்னெஸ்மீது ஆஸ்திரிய வீரர்கள் பாய்ந்தனர். அவரது குதிரை மாண்டது. அதுபோது அரைடஜன் வாட்கள் அவர்மீது பாய்ந்து வந்தன. ஆனால், இலேன்னெஸ் துணிவுடன் அருகிலிருந்த ஆஸ்திரிய வீரர்மீது தாவி அவரது வாளைப்பிடுங்கி அதன்மூலம் அரைடஜன் ஆஸ்திரிய வீரர்களைக் கொன்று சாதனை புரிந்தார். அவரது வீரத்தினையும் தீரச்செயலினையும் தம் கண்களால் கண்டுகளித்த தளபதி நெப்போலியன் அவருக்கு அதே இடத்தில் பதவி உயர்வு கொடுத்துப் பாராட்டினார்.

1796 மே திங்கள் 10ஆம் நாள் நடந்த லோடிச் சண்டையிலும் நெப்போலியன் பெருவெற்றி பெற்றார். ஆஸ்திரியப் படைகள் பஞ்சாய்ப் பறந்தன. இரண்டாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டனர் ; இருபது பீரங்கிகள் கைப்பற்றப்பட்டன ; இரண்டாயிரத்து ஐநூறு ஆஸ்திரிய வீரர்களும், நானூறு குதிரைகளும் மாண்டனர். ஃபிரெஞ்சுப்படையில் 400 பேர் மட்டும் உயிரிழந்தனர். லோடி வெற்றி வரலாற்று முக்கி

யத்துவம் வாய்ந்தது. அவ் வெற்றியே வேறு பல சீரிய வெற்றிகளுக்கு வழிவகுத்தது. ஃபிரெஞ்சுப் படையின் வீரத்தினை உலகறியச் செய்ததும் லோடி வெற்றியே. மேலும், ஃபிரெஞ்சு வீரர்கள் தங்களுடைய இளந்தளபதி நெப்போலியனிடம் அளவு கடந்த நம்பிக்கை கொள்ள வழிசெய்தது அம் மாபெரும் வெற்றி. நெப்போலியனைக் கண்ட அவரது வீரர்கள் 'சிற்றேவலர் (Little-corporal) நீடுழி வாழ்க' என்று முழங்கினர். 'சிற்றேவலர்' என்பது நெப்போலியனுக்கு அவரது வீரர்கள் அளித்த செல்லப் பெயர். (பட்டப் பெயர்). லோடி வெற்றிகுறித்து இயக்குநர்களுக்கு எழுதிய போனபார்ட் 'என்னுடைய வீரர்கள் ஈடுபட்ட போர் நிகழ்ச்சிகளனைத்திலும் பேரச்சந் தருகின்ற லோடி பாலத்தைக் கடந்த நிகழ்ச்சி ஈடும் இணையும் இல்லாததாகும்' என்று குறிப்பிட்டுள்ளார்.

லோடி வெற்றியின் பயனாக இலம்பார்டி முழுதும் நெப்போலியனின் வசமாயிற்று. இலம்பார்டியை ஆண்டு வந்த பெருங்கோமகன் ஃபெர்டினண்ட் (Ferdinand) தம் மனைவியுடன் கண்களில் நீர் மல்க தலைநகரான மிலானை விட்டு வெளியேறினார். கோமகனார் வெளியேறியவுடனே மிலான் மக்கள் குடியரசு முழக்கங்களை வானளாவ முழங்கினர். மூவண்ணக் கொடிகள் எங்கும் பறந்தன. மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தனர். மிலான் நகரமே விழாக்கோலம் பூண்டது. 'இந்த வீடு வாடகைக்கு விடப்படும்; சாவி வேண்டுவோர் ஃபிரெஞ்சு ஆணையாளருக்கு விண்ணப்பிக்கவும்' என்ற வேடிக்கையான அட்டையொன்று மிலான் அரண்மனை வாயிலில் தொங்கவிடப்பட்டது. மே திங்கள் 15ஆம் நாள் போனபார்ட் மிலான் நகரில் வெற்றிஉலா வந்தார். மிலான் நகரமக்கள் 'எங்களின் மீட்பாளரே! வருக, வருக!' என்று வரவேற்றனர். இத்தாலியின் பல்வேறு பகுதிகளைச் சார்ந்த நாட்டுப்பற்றுமிக்க விடுதலை விரும்பிகளனைவரும் மிலான் நகரில் வந்து குவிந்தனர். நெப்போலியனின் ஆதரவுடன் தங்கள் நாடுகளையும் விடுவிக்க அவர்கள் விரும்பினர். தேசிய காவற்படை (National Guard) என்ற பெயரில் ஒரு பெரும்படை உருவாக்கப்பட்டது. அப் படைவீரர்கள் குடியரசின் மூவண்ணக் கொடிக்கு மதிப்பளிக்கும் வகையில் நீலம், சிவப்பு, வெள்ளை ஆகிய மூன்று நிறங்களாலான உடைகளையே அணிந்தனர். நெப்போலியனின் வெற்றியின் நினைவாக வெற்றிவளைவுகளும் நகரில் அமைக்கப்பட்டன. தளபதியை வரவேற்க மிலான் நகரமே திரண்டு வந்தது. அவர் சென்ற வழியெல்லாம் மலர்கள் தூவப்பட்டன. பெண்கள் மாடிகளிலும் சன்னல்களிலும் கூடிநின்று புன்முறுவல் பூத்தும் பூச்செண்டுகளை வீசியும், கைக்குட்டைகளை ஆட்டியும் இளந்தளபதி

போனபார்ட்டை வரவேற்றனர். இன்னிசை முழங்க, மணிகள் ஒலிக்க படைத்துறை அணிவகுப்பு மரியாதைகளை ஏற்று மிலான் நகர மக்களின் வாழ்த்துகள் வானைப்பிளக்க நெப்போலியன் மிலான் அரண்மனையுள் அடி எடுத்து வைத்தார். 'மிலான் பெருங் குடிமக்களே! நீங்கள் உண்மையிலேயே விடுதலையில் நாட்டங்கொண் டிருப்பீர்களேயானால், இத்தாலிய மண்ணிலிருந்து ஆஸ்திரியர்களை நிரந்தரமாக விரட்டியடித்து இத்தாலிய விடுதலைக்கு உங்கள் முழு ஆதரவினை நல்கவேண்டும்' என்ற வேண்டுகோளையும் நெப்போலி யன் விடுத்தார். இவ்வாறு, மிலான் நகரில் போனபார்ட் தங்கி இத்தாலிய விடுதலையை விரைவுபடுத்திக்கொண்டிருந்த நேரத்தில் மொடினாக் கோமகன் **(Duke of Modena)** அவருடன் அமைதி உடன்பாடு செய்துகொண்டார். அதன்படி, நெப்போலியனுக்கு இரண்டு மில்லியன் டாலர்களும், இருபது சிறந்த உருவப்படங் களும், ஏராளமான குதிரைகளும், உணவுப்பொருள்களும் கிடைத்தன.

அடுத்து, நெப்போலியன் இதயத்தைக் கவரும் இன்னொரு அறிவிப்பினையும் வெளியிட்டார். 'அருமைப் படைத்துறைத் தோழர்களே! அபினைன் மலைகளிலிருந்து வரும் விசைநீரோடை யைப் போல நீங்கள் பாய்ந்து வந்தீர்கள். உங்களது முன்னேற்றப் பாதையில் குறுக்கிட்ட தடைகளனைத்தையும் தவிடு பொடியாக் கினீர்கள். ஆஸ்திரியக் கொடுங்கோலாட்சியிலிருந்து பீட்மாண்ட் விடுவிக்கப்பட்டுள்ளது; மிலான் நகரம் இப்போது உங்கள் வசம்; இலம்பார்டி முழுதும் குடியரசுக் கொடிகள் பட்டொளி வீசிப் பறக்கின்றன. பார்மாக் கோமகனும், மொடினாக் கோமகனும் உங்களின் பெருந்தன்மையால் உலவுகின்றனர். உங்களைத் தாக்கிப் பெருமைகொண்ட பகைவர் படைகள் உங்கள் தாக்குதலி லிருந்து தப்பிக்க வியலாதபடி திணறுகின்றன. போ, டிசினோ, அட்டா ஆகிய நதிகள் உங்களை ஒருநாள்கூட தடுத்து நிறுத்தும் ஆற்றலைப் பெற்றிருக்கவில்லை......................உங்களது வெற்றி உங்கள் தாயகத்தின் உள்ளத்தில் உவகையை ஊட்டியுள்ளது. குடியரசு முழுதும் விழாக்கோலம் பூண்டுள்ளது. தாயகத்திலுள்ள உங்கள் பெற்றோர்கள், துணைவியர்கள், உடன்பிறப்புகள், காதலியர் ஆகியோர் அனைவரும் உங்களின் வெற்றிச் சாதனைகளைக் கேட்டு உள்ளம் பூரிக்கின்றனர். உண்மையிலேயே, நீங்கள் மகத் தான சாதனை புரிந்துள்ளீர்கள். இருப்பினும், இன்னும் அடைய வேண்டிய வெற்றிகள் ஏராளமாக இருக்கின்றன.................. நம்முடைய பகைவர்கள் நம்மைக் கண்டு அஞ்சி நடுங்கட்டும்; ஆனால், மக்கள் நம்மைக் கண்டு மருட்சி கொள்ளுதல் கூடாது. நாம் மக்கள் அனைவருக்கும் நண்பர்கள். அவர்களனைவரையும்

மன்னராட்சியின் பிடியிலிருந்து விடுவிப்பதே நம் கடமை..........
.........விடுதலை பெற்ற, உலகத்தால் நன்கு மதிக்கப்படுகின்ற ஃபிரெஞ்சு மக்கள் ஐரோப்பாவிற்குப் புகழ்மிக்க அமைதியை வழங்குவர். அந்த நல்லநாளில் நீங்கள் தாயகம் திரும்பலாம். நம் தாயகத்தின் மக்கள் அரும்பெரும் சாதனைகள் பல புரிந்த உங்களைச் சுட்டிக்காட்டி 'அதோ, அவன் இத்தாலியப்படை வீரன்' என்று கூறிப் பெருமை கொள்வர்.' இந்த உள்ளத்தை உருக்குகின்ற அறிவிப்பினைக் கேட்ட ஃபிரெஞ்சு வீரர்கள் தங்களுடைய தளபதியினை உளமார வாழ்த்தி உவகைகொண்டனர்.

இத்தாலியின் உணவுக்களஞ்சியம் இலம்பார்டி. அந்த வளமான பகுதியின் தலைநகரம் மிலான். ஆடம்பரத்திலும், அழகிலும், பணச்செருக்கிலும், செல்வாக்கிலும் சிறந்து விளங்கிய மிலான் நகரம் நூற்றிருபதாயிரம் மக்களைப் பெற்றிருந்தது. இலம்பார்டியை வென்ற தளபதி நெப்போலியன் தம் படைகளுடன் மிலான் நகரில் தங்கினார். அவரது படைகளுக்கு ஆறு நாட்கள் ஓய்வு கொடுக்கப்பட்டது. மிலான் நகரில் நெப்போலியன் தங்கியிருந்த நேரத்தில் இத்தாலியின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் குடியரசு ஆதரவாளர்கள் அவரைக் காண தலைநகரில் குவிந்தவண்ணமிருந்தனர். நெப்போலியனை, இத்தாலியை விடுவிக்க வந்த ஏந்தலாக அவர்கள் கருதினார்கள். நெப்போலியன் போனபார்ட் என்ற பெயரே அவர்களை மயக்கி, தளபதியை அவர்களின் உறவினராக்கியது. அவரது தாய்மொழியும் இத்தாலி என்பதால் இத்தாலிய மக்கள் போனபார்ட்டிடம் இன்னும் நெருக்கமான உறவு கொண்டனர். அவரது நாவன்மைமிக்க பேச்சுகள் அவர்களை வெகுவாகக் கவர்ந்தன. அவரது நாணயம், நல்லெண்ணம், ஒழுக்கம், உயரிய பண்பு, நாட்டுப்பற்று, ஆற்றல், வீரம், அறிவு ஆகிய அனைத்தும் இத்தாலிய மக்களைச் சொக்க வைத்தன. இத்தாலிய மக்களின் இதயங்களைக் கவர்ந்த நெப்போலியன் விரைவில் அவர்களது இதயங்களையும் வென்றார். இத்தாலிய மக்களின் இதயச் சிம்மாசனத்தில் நிலையான இடத்தைப் பெற்று விளங்கினார்.

இந் நிலையில், இத்தாலியப் படைகளுக்குத் தேவையான வசதிகளைச் செய்துகொடுப்பதற்கு ஃபிரெஞ்சுக் குடியரசின் பொருளாதாரம் இடம் தரவில்லை. பொருளாதார நெருக்கடிக்குள்ளான ஃபிரெஞ்சுக் குடியரசுக்குத் தேவையான பணத்தைத் தளபதியே கொடுக்கும் நிலை ஏற்பட்டது. எனவே, தளபதி நெப்போலியன் தம் படைவீரர்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்துகொடுப்பதற்கு முன்வந்தார். வளமிக்க இலம்பார்டியில் தம் படைவீரர்களின் தேவைக்கு அதிகமாகவே, ரொட்டியும்

மாமிசமும், மதுவும் கிடைத்தன. ஆனால், போதுமான உடைகளின்றி அவர்கள் வருந்தினர். ஆகவே, தளபதி நெப்போலியன் மிலான் நகர மக்களிடமிருந்து நாற்பது இலட்சம் டாலர்களைப் பெற்றுத் தம் படைக்குரிய வசதிகளைச் செய்துகொடுத்தார். தோற்ற மக்களின் பணத்தைக் கவர்தல் தளபதிக்குப் பிடிக்காத செயல். அதற்காக அவர் மிகவும் வருந்தினார். ஆனால், ஆடையின்றி அரைகுறைச் சாப்பாட்டுடன் அவதிப்படும் தம் படைவீரர்களைக் காப்பாற்றவே அவர் மிலான் மக்களிடமிருந்து பணம் பெற்றார். அப் பணத்தைக்கொண்டு படைகளுக்குத் தேவையான உணவுப் பொருள்களும், உடைகளும், போர்க்கருவிகளும் வாங்கப்பட்டன. போர்வீரர்களுக்கு உதவும்வகையில் ஆங்காங்கே மருத்துவமனைகள் பல அமைக்கப்பட்டன. எஞ்சிய பணத்தில் பத்து இலட்சம் டாலர்களைப் பாரிசுக்கு அனுப்பிவைத்தார் நெப்போலியன். அன்றியும், இரைன் நதி தீரத்தில் ஆஸ்திரியப் படைகளுடன் வீரப்போர் புரிந்துகொண்டிருந்த தளபதி மோரே **(Moreau)** தலைமையிலுள்ள ஃபிரெஞ்சுப் படைக்கு இரண்டரை இலட்சம் டாலர்களை நெப்போலியன் அனுப்பிவைத்தார். இலம்பார்டியில் குடியரசுக்கு முன்னோடியாக அமையும் வகையில் நெப்போலியன் ஆற்றலும் அருந்திறனுமிக்க மிலான் நகராட்சியை உருவாக்கினார். இலம்பார்டி முழுதும் படைத்துறைச் சீர்திருத்தங்களை மேற்கொண்டு படையில் கடமையினையும், கட்டுப்பாட்டினையும் நிலைநாட்டினார். படைத்துறை வசதிகள் பெருகிய காரணத்தால் அதற்கேற்றவகையில் புதிய படைஅமைப்புகள் உருப்பெற்றன. இத்தகைய அரும்பணிகள் அனைத்தையும் ஐந்தே நாட்களில் செய்துமுடித்தார் தளபதி போனபார்ட். அவரது அற்புதமான உள்ள உறுதியே அவரது இடைவிடா உழைப்புக்கு உறுதுணையாக அமைந்தது. ஒரு நாளில் இரண்டு மணி நேரம் மட்டுமே அவர் தூங்கினார். எஞ்சிய இருபத்திரண்டு மணி நேரமும் அவர் அயராது உழைத்தார். அத்தகைய கடுமையான உழைப்பே அவரைப் புகழின் உச்சிக்கு அழைத்துச் சென்றது. ‘எனது மூளையில் பல அலுவல்கள் ஒழுங்காகவும், வரிசையாகவும், தனித்தனியாகவும் மேசையிலுள்ள செருகு அறைகளைப்போல அமைக்கப்பட்டுள்ளன. ஓர் அலுவலை மறந்து மற்றொன்றுபற்றிச் சிந்திக்கும் வேளையில் முந்திய அறையினை மூடிப் பிந்திய அறையினைத் திறந்துகொள்வேன். அவை இரண்டும் ஒன்றோடொன்று கலப்பதுமில்லை; எனக்குக் களைப்பைத் தருவதுமில்லை. வீண்சிந்தனைக்கு என் மூளையில் சிறிதும் இடமில்லை. நான் தூங்கவிரும்புகின்ற நேரத்தில் அறைகளனைத்தையும் மூடிவிடுவேன். நான் விரும்பும் போதே தூக்கம் வரும். தூக்கத்தை நான் வென்றவன்’ என்பது அவரது கூற்று.

ஒருநாள் காலை மிலான் நகரில் போனபார்ட் தமது குதிரை மீதமர்ந்து புறப்படத் தயாரானார். அப்போது முக்கிய படைத் துறை நடைமுறை ஏடுகளுடன் **(Despatches)** குதிரைப் படை வீரனொருவன் அவர்முன் வந்து வணங்கிநின்றான். அவன் சமர்ப் பித்த ஏடுகளைக் குதிரையிலமர்ந்தவாறு படித்துப் பார்த்த தளபதி உடனே தமது மறுமொழியை வாயால் கூறி அப் போர்வீரனை விரைவாகச் செல்லும்படி பணித்தார். ' ஐயா, எனக்குக் குதிரை யில்லை; நான் ஏறிவந்த குதிரை அதிவிரைவு காரணமாகக் களைப் புற்றுத் தங்கள் அரண்மனை வாயிலில் வந்து விழுந்து இறந்து விட்டது' என்று வருத்தத்துடன் கூறினான். ' அப்படியானால் என்னுடைய குதிரையை எடுத்துக் கொள்' என்று கூறி போன பார்ட் தம் குதிரையிலிருந்து இறங்கினார். ஆனால், அந்தக் குதிரை வீரன் தலைமைத்தளபதியின் புகழ்மிக்க, சிறப்பு வாய்ந்த குதிரை யில் ஏறிச் சவாரிசெய்யத் தயங்கினான். 'நீ அக் குதிரையை மிகவும் உயர்வானதாகக் கருதுகிறாய். ஒரு ஃபிரெஞ்சுப் போர்வீரனைவிட உயர்வானது ஒன்றுமில்லை' என்று எடுத்துக்கூறி போனபார்ட் அக் குதிரையுடன் வழியனுப்பிவைத்தார்.

மிலான் நகரில் தங்கி, இலம்பார்டியில் நல்லாட்சியை அமைக்கும் பணியில் போனபார்ட் ஈடுபாடுகொண்டிருந்த நேரத்தில் அவரது கவனம் மீண்டும் ஆஸ்திரியப் படைகளைத் துரத்தியடிப்பதில் பாய்ந்தது. ஆனால், நெப்போலியனின் புகழினை யும் கீர்த்தியினையும் கண்ட இயக்குநர்கள் அச்சங்கொண்டனர். அவரது புகழின் வேகம் இயக்குநராட்சியையும் இடித்து நொ றுக்கும் என்ற பயம் அவர்களை வாட்டியது. ஒரு மாதத்திற்குள் ளாகவே ஐரோப்பா முழுதும் தம் பெயரினை நிலைநாட்டிய நெப் போலியனின் புகழுக்குத் திரைபோட முயன்றனர் இயக்குநர்கள். அவரது படைத்துறை நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தி அவரது செல்வாக்கைச் சிதைக்க இயக்குநர்கள் திட்டமிட்டனர். அதன் படி, இத்தாலியப்படை இரண்டாகப் பிரிக்கப்பட்டு ஒரு பிரிவு கெல்லர்மேன் **(Kellerman)** என்ற புகழ்மிக்க தளபதியின் தலைமையில் ஆஸ்திரியர்களைத் தொடர்ந்து சென்று தாக்கவும், இன்னொரு பிரிவு நெப்போலியன் தலைமையில் போப் ஆதிக்கத்தை வீழ்த்தவும் இயக்குநர்கள் ஆணைபிறப்பித்தனர். இத்தாலியப் படையினை இரண்டாகப் பிரிப்பது அப் படையின் அழிவிற்கே வழி வகுக்கும் என்று உறுதியாக நம்பினார் நெப்போலியன். எனவே, அவர் இயக்குநர்களின் ஏற்பாட்டை ஏற்க மறுத்து உடனே தம்மு டைய பதவிவிலகல் கடிதத்தை இயக்குநர்களுக்கு அனுப்பிவைத் தார். ' இரண்டு நல்ல தளபதிகளைவிட ஒரு கெட்ட தளபதி மேலானவன்.' அரசாங்கத்தைப்போல, போரும் முக்கியமாகச்

சாமர்த்தியத்தால் நிர்ணயிக்கப்படுவதாகும். இத்தாலியப் படையை இரண்டு கூருகப் பிரிப்பது பெரிதும் அறிவற்ற செயலாகும். அதைவிட அறிவற்ற செயல் அவற்றை இரண்டு வெவ்வேறு தளபதிகளின்கீழ் வைப்பது. போப்பினே வீழ்த்தி, அவரது நாடுகளைப் பிடிக்க முற்படின் இத்தாலியப்படை முழுதும் ஒரே தளபதியின் கட்டுப்பாட்டில் இயங்கவேண்டும்................. ஃபிரெஞ்சுக் குடியரசுள்ள இன்றைய நிலையில் தங்களின் நம்பிக்கைக்குரிய ஒருவரைத் தளபதியாகப் பெற்றிருத்தல் மிகவும் அவசியமாகும். நான் உங்களுடைய நம்பிக்கையை இழந்தவன் என்று கருதுவீர்களேயானுல் அதற்காக நான் உங்கள்மீது வருத்தங்கொள்ளமாட்டேன். ஒவ்வொரு தளபதியும் ஒவ்வொரு விதமாகப் போர்புரியும் வழக்கமுள்ளவர். கெல்லர்மேன் என்னைவிட அதிக அளவு போர்த்துறை அனுபவமிக்கவர். என்னைவிட சாமர்த்தியமாக அவர் போரினை நடாத்தக் கூடும். ஆனுல், அவரும் நானும் ஒன்றுசேர்ந்து போரிட்டால் தொல்லையைத்தவிர வேறு எதனையும் சாதிக்கவியலாது. தளபதி பியூலியூவுக்கு ஆஸ்திரியப் பேரரசர் அனுப்பிய பதினைந்தாயிரம் வீரர்களைப் பற்றிய செய்தியினை விட, தங்களது படைத்துறை முடிவு பெரிதும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்' என்று நெப்போலியன் தம் பதவிவிலகல் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். இதனைப் படித்த இயக்குநர்கள் தங்களுடைய ஆணையை உடனே இரத்து செய்துவிட்டு பிளவுபடாத இத்தாலியப் படைக்குத் தலைமைத்தளபதியாக மீண்டும் போனபார்ட்டை நியமித்ததுடன், அவருக்குத் தேவையான அதிகாரங்கள் அனைத்தையும் வழங்கினர்.

1796 ஆம் ஆண்டு மே திங்கள் 22 ஆம் நாள் தளபதி நெப்போலியன் ஆஸ்திரியப் படைகளை விரட்டிச்சென்று தாக்கும் பொருட்டுத் தம் படைகளுடன் மிலான் நகரைவிட்டு வெளியேறினுர். அடுத்த நாள் அவர் பனுஸ்கோ (Banasco) என்ற சிற்றூரினை வந்தடைந்தார். நெப்போலியனின் முன்னேற்றத்தை யறிந்த போப்பும் அவரது ஆதரவாளர்களும் உழவர்களையும் நாட்டுப்புற மக்களையும் நெப்போலியனை எதிர்த்துப் போரிடும்படி தூண்டினர். போப்பின்மீது நம்பிக்கைகொண்ட நாட்டுப்புறத்தவர்களும் உழவர்களும் அவரது வேண்டுகோளுக்கிணங்கிப் போராட முன் வந்தனர். அவர்களுக்கு உற்சாகமூட்டும் வகையில் சமயக்குருமார்களும் பாதிரிகளும் வதந்திகளை உலவவிட்டனர். 'ஆஸ்திரியப் பெரும்படை ஒன்று நெப்போலியன்மீது பாய விரைந்து கொண்டிருக்கிறது. இத்தாலி முழுதும் ஃபிரெஞ்சுக்காரர்களுக்கெதிராக ஆயுதப் புரட்சியில் இறங்கிவிட்டது; வலிமைமிக்க கடற்படையினைப் பெற்றுள்ள இங்கிலாந்து நெப்போலியனுக்கெதிராக எண்ணிறந்த வீரர்களை சார்டினியக் கரைகளில் இறக்கி

யுள்ளது ; உண்மையான கத்தோலிக்க சமயத்தின் விரோதிகளான ஃபிரெஞ்சுக்காரர்களை இத்தரையுலகிலிருந்து விரட்டப் போரிடு பவர்களின் வீரத்தினைக் கடவுளும் அவரது தூதர்களும் வானுல கத்திலிருந்து சன்னல்வழியாகக் கண்டு அவர்களை வாழ்த்திக் கொண்டிருக்கின்றனர். நெப்போலியனின் வீழ்ச்சி உறுதியா யிற்று' என்பன போன்ற வதந்திகளை நம்பிய அப்பாவி உழவர்கள் ஃபிரெஞ்சுப் படைகளைத் தாக்க வெறிகொண்டலைந்தனர். முப்ப தாயிரத்துக்கு மேற்பட்ட உழவர்கள் ஆயுதம் தாங்கிப் போரிடத் தயாராயினர். நெப்போலியனும் வரஇருக்கின்ற ஆபத்தினைத் தெரிந்து அதற்கேற்றவகையில் படைகளைப் பலப்படுத்தினர். பனுஸ்கோவில் நடந்த மோதலில் பல உழவர்கள் உயிரிழந்தனர். ஆண்களும் பெண்களும் அலறியடித்துக்கொண்டு ஓடினர். ஃபிரெஞ்சுப் படைகளின் கொடுமையை அவர்கள் சென்ற இட மெல்லாம் பரப்பினர். ஆகவே, ஃபிரெஞ்சுப் படைமீது மற்ற உழவர்களும் ஆத்திரங்கொண்டனர்.

பனுஸ்கோ கலகத்தை அடக்கியபின் நெப்போலியனது படை கள் மேலும் முன்னேறி பேவியா (Pavia) என்ற சிறு நகரை அடைந் தன. பேவியா, கலகக்காரர்களின் உறைவிடமாகத் திகழ்ந்தது. முப்பதாயிரம் மக்களைக்கொண்ட அந் நகரில் நெப்போலியன் முந்நூறு வீரர்களடங்கிய ஒரு படைப்பிரிவை வைத்துவிட்டு மிலான் திரும்பினர். இதற்கிடையே எண்ணுயிரத்திற்கு மேற் பட்ட உழவர்களும் அரசுக்கட்சி ஆதரவாளர்களும் ஃபிரெஞ்சு முகாமினைத் தாக்கிட முன்வந்தனர். அதனை அறிந்த நெப்போலி யன் மிலான் நகர அதிமேற்றிராணியாரை (Archbishop) அனுப்பி சமரசத்துக்கு ஏற்பாடுசெய்தார். அதிமேற்றிராணியாரின் சமரச முயற்சியும் பயனளிக்கவில்லை. ஆகவே, மோதல் தவிர்க்க முடியாத தாயிற்று. நெப்போலியனின் பீரங்கிகள் குமுறின ; கலகக்காரர் கள் பலர் கொல்லப்பட்டனர். ஃபிரெஞ்சு வீரர்கள் நகரையே சூறையாடினர். பேவியா நகரில் நிறுத்திவைக்கப்பட்டிருந்த சிறு படையின் இராணுவ அதிகாரி (Captain) கவனக்குறைவாக நடந்த குற்றத்துக்காகச் சுட்டுக்கொல்லப்பட்டார். இத்தகைய கடுமையான நடவடிக்கைகள் இப்போது நெப்போலியனுக்குத் தேவைப்பட்டன. கடமையும் கட்டுப்பாடும் படைக்கு மிகமிகத் தேவை என்பதை ஒவ்வொரு ஃபிரெஞ்சு வீரனும் தன் உள்ளத்தில் நிலைநிறுத்தும் பொருட்டு கவனக்குறைவான வீரர்களுக்குக் கடுந் தண்டனைகள் வழங்கலானர். இருப்பினும், கடமை தவருத வீரர் களின் ஆற்றலைப்பாராட்டி அவர்களுக்குப் பதவி உயர்வும் வழங்க அவர் தவறியதில்லை. பேவியா நிகழ்ச்சி நெப்போலியனின் நினைவில் பசுமையாக இருந்தது. 'என் வாழ்நாளில் சூறையாடுவதற்கு அனுமதித்த ஒரே நகரம் பேவியாதான். அந் நகரைக் கொள்ளை

யடிப்பதற்கு என் வீரர்களுக்கு இருபத்திநான்கு மணி நேரம் அனுமதி வழங்கினேன்; ஆனால் மூன்று மணி நேரத்தில் அங்கு நடந்த கோரக் காட்சிகளைக் கண்டு மனம்வருந்தி உடனே கொள்ளையை நிறுத்தும்படி என் படையினருக்கு ஆணையிட்டேன்' என்று தளபதி பிற்காலத்தில் வருந்திக் கூறினார். இத்தகைய பயங்கரக் காட்சிகளுக்கிடையிலும் போனபார்ட் பேவியா நகரிலுள்ள புகழ்பெற்ற பல்கலைக்கழகத்தைக் காணும் வாய்ப்பினை ஒரு நாள் பெற்றார். தம் பரிவாரங்கள் புடைசூழ அவர் அப் பல்கலைக்கழகத்தினுள் நுழைந்தார். அதன் தலைவரும் பேராசிரியப் பெருமக்களும் அவர்களை நன்கு வரவேற்றனர். ஒவ்வொரு வகுப்பாகச் சென்று நெப்போலியன் பார்வையிட்டதோடு மாணவர்களும் பேராசிரியர்களும் திகைக்கும்படியான கேள்விகள் பலவற்றையும் எழுப்பினார்.

போனபார்ட் ஒரு வகுப்பறைக்குள் நுழைந்தார். அது அவருக்குப் பிரியமான கணித வகுப்பு. அங்கு ஒரு மாணவனின் கணித நூலினை வாங்கிப் புரட்டிப் பார்த்து அதிலுள்ள கடினமான கணக்கொன்றினைத் தேர்ந்தெடுத்து ஒரு மாணவனிடம் கொடுத்துச் சரியாகச் செய்யும்படி கூறினார். அம் மாணவனும் கணிதத்தில் வல்லவன். ஆகவே, நெப்போலியன் கொடுத்த கணக்கை விரைவில் செய்து முடித்துக்காட்டினான். அக் கணக்கைக் கண்ட நெப்போலியன் 'நீ செய்தது தவறு' என்றார். அதனைக் கேட்ட அம் மாணவன் 'நீங்கள் சொல்வது தவறு; நான் செய்தது சரியானது' என்று கூறிச்சாதித்தான். எனவே, நெப்போலியனே அக் கணக்கைப் போட்டுப்பார்த்தார். மாணவன் செய்தது சரியென்பதை உணர்ந்தார். 'ஆம், நீ செய்ததுதான் சரி' என்று கூறி அவனை வெகுவாகப் பாராட்டினார். அடுத்த அறைக்குள் சென்றார் நெப்போலியன். அங்கு புகழ்பெற்ற அறிஞர் வோல்டா (Volta)வைக் கண்டு மகிழ்ந்து அவரைக் கட்டித்தழுவினார். அறிஞரும் தளபதியைக் கண்டு பெரிதும் பூரித்தார். பல்கலைக்கழகத் தலைவரும் இளந்தளபதி நெப்போலியனைப் பாராட்டியளித்த வரவேற்புரையில் 'மாமன்னர் சார்லஸ் இந்த மகத்தான பல்கலைக் கழகத்திற்கு அடிக்கல் நாட்டினார். மாபெரும் நெப்போலியன் (Napoleon the Great) இந்தப் பல்கலைக் கழகத்தின் கீர்த்தியினை நிலைநாட்டுவாராக' என்று குறிப்பிட்டுள்ளார்.

நெப்போலியன் மீண்டும் ஆஸ்திரியப் படைகளைத் துரத்திச் சென்று தாக்கும் பணியினைத் தொடர்ந்தார். பதினைந்தாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் மின்சியோ (Mincio) நதிக்கரையில் முகாமிட்டிருந்தனர். நெப்போலியனது படைகள் ஆற்றைக் கடந்து வராதபடி அவர்கள் பாலத்தைத் தகர்த்துவிட்டனர். நெப்போலி

யனும் மின்சியோ நதிக்கரை சென்று ஆஸ்திரியப் படைகளைத் தாக்க காத்திருந்தார். ஒருநாள் தனிமையில் ஆற்றுப் பக்கம் சென்றிருந்தநேரத்தில் அவர் திடீரென்று ஆஸ்திரியப் படைகளிடம் சிக்கிக்கொண்டார். ஆனால், அதிசயமாகத் தப்பித் தம் படைகளிடம் வந்தடைந்தார். அன்று அவர் தனிமையில் சென்றதால் ஏற்பட்ட ஆபத்தினை உணர்ந்து அன்றுமுதல் நெப்போலியனுக்கு மெய்க்காவற்படை ஒன்று உருவாயிற்று. அப் படையில் பத்தாண்டு அனுபவம் பெற்ற ஐநூறு பேரிருந்தனர். அவர்கள் எப்போதும் நெப்போலியனிடமே இருப்பர். இந்தப் படையமைப்பே பிற்காலத்தில் புகழ்பெற்று விளங்கிய பேரரசுக் காவற்படை (Imperial Guard) யின் முன்னோடியாக விளங்கியது. மின்சியோ நதிக்கரையில் தங்கியிருந்த ஆஸ்திரியப்படை விரைவில் மாண்டுவா கோட்டையை வந்தடைந்தது. வலிமைமிக்க அக் கோட்டையில் இருபதாயிரம் ஆஸ்திரிய வீரர்களிருந்தனர். அவர்களைத் தாக்குவது எளிதல்ல என்று கருதிய நெப்போலியன் மாண்டுவா (Mantua) க் கோட்டையை முற்றுகையிடும்படி பணித்தார். 1796ஆம் ஆண்டு ஜூன் திங்கள் முதல் 1797 ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள்வரை மாண்டுவாக் கோட்டையின் முற்றுகை நீடித்தது. இந்தக் காலத்தில் ஆஸ்திரியப் படைகள் நான்கு முறை பெருவாரியான தாக்குதலில் இறங்கி முற்றுகையை முறியடிக்க முயன்றன. ஆனால், நெப்போலியன் அவர்களது முயற்சிகளனைத்தையும் முறியடித்தார்.

இதற்கிடையில், ஆஸ்திரியத் தலைமைத் தளபதி பியூலியூவின் ஆற்றலில் நம்பிக்கை இழந்த ஆஸ்திரிய அரசு அவரை விலக்கிவிட்டு அவருக்குப் பதிலாக உரும்சர் (Wurmser) என்பவரைத் தலைமைத்தளபதியாக நியமித்தது. அவரது தலைமையில் அறுபதாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் அணிவகுத்துச் சென்றனர் மாண்டுவா முற்றுகையை முறியடிக்க. அதனை அறிந்த நெப்போலியன், உரும்சரும் அவரது படைகளும் மாண்டுவா வந்துசேர ஒரு திங்களுக்கு மேலாகுமென்று கணித்து, தம்முடைய கவனத்தை இப்போது தென் இத்தாலியிலுள்ள எதிரிகளின்மீது செலுத்தினர். நேப்பில்ஸ் நாடு (Kingdom of Naples) நடுநிலை தவறியதற்காக நெப்போலியனது தாக்குதலுக்குள்ளானது. ஆனால், அத் தாக்குதலைத் தாங்காது நேப்பில்ஸ் நெப்போலியனுடன் அமைதி உடன்பாடு செய்துகொண்டது. போப்பும் நெப்போலியனது வருகையறிந்து வலிய போர்நிறுத்த உடன்பாட்டிற்கு முன்வந்தார். அதன்படி அன்கோனு (Ancona), போலோனு (Bolona), ஃபெர்ரார (Ferrara) ஆகிய பகுதிகள் ஃபிரான்சுக்குச் சொந்தமாயின. நானூறு மில்லியன் டாலர் வெள்ளி, தங்க நாணயங்களும் நூறு வண்ணப்படங்

களும், பழங்காலக் கையெழுத்து ஏடுகள் ஐநூறும் நெப்போலிய னுக்குக் கிடைத்தன. நாணயங்களைத் தவிர ஏனைய பொருட் களனைத்தும் பாரிஸ் பொருட்காட்சிசாலைக்கு அனுப்பப்பட்டன. இவ்வுடன்பாட்டின் விளைவாகத் தற்காலிகமாகப் போப் தமது அதிகாரத்தை மீண்டும் பெற்றார். நடுநிலை தவறிய டஸ்கனி (Tuscony) மீதும் நெப்போலியன் பாய்ந்தார். ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்த இலெக்கார்ன் (Leghorn) துறைமுகத்தைத் தாக்கி ஆங்கிலப் பொருட்களைச் சேதப்படுத்தினர். அதனைத் தொடர்ந்து நடந்த மோதலில் ஆங்கிலேயரை வென்று இலெக் கார்ன் துறையைக் கைப்பற்றினர். அடுத்து, டஸ்கனியின் தலை நகரான ஃபிளாரன்ஸ் (Florence) அவரது தாக்குதலுக்குள்ளா யிற்று. இதற்கிடையில், டஸ்கனி கோமகன் நெப்போலியனை நன்கு வரவேற்று அவரது நட்புறவைப் பெற்றுத் தம்மைக் காத் துக்கொண்டார். இவ்வாறு, இருபது தினங்களுக்குள் நேப்பில்ஸ், போப் நாடுகள், டஸ்கனி ஆகிய தென் இத்தாலியப் பகுதிகளில் தம் ஆதிக்கத்தையும் செல்வாக்கையும் நிலைநாட்டி மீண்டும் நெப் போலியன் மாண்டுவா நோக்கி விரைந்தார்.

1796ஆம் ஆண்டு ஜூலைத்திங்கள் ஐரோப்பாவின் கண்கள னைத்தும் ஆவலுடனும் அதிர்ச்சியுடனும் மாண்டுவாவையே நோக் கின. இத்தாலியின் தலைவிதியை நிர்ணயிக்கின்ற சண்டைகள் பல மாண்டுவாக் கோட்டைச் சுவர்களுக்குப் பின்னல் நிகழ்ந்தன. இலம்பார்டியின் வல்லரணுக விளங்கிய அக் கோட்டை பெரும் பாலும் எதிரிகள் நெருங்க இயலாதவண்ணம் அமைந்திருந்தது. மின்சியோ நதியின் அகன்ற பகுதியில் தாழ்ந்த சதுப்புநிலத்தில் தக்க பாதுகாப்புடன் அக் கோட்டை அமைந்திருந்தது. வரலாற் றுப் புகழ்மிக்க அக் கோட்டையைச் சுற்றிலும் கனரகப் பீரங்கிகள் வைக்கப்பட்டு இருபதினுயிரம் ஆஸ்திரிய வீரர்கள் அங்கு தங்கி யிருந்தனர் என்பதையும் அவர்களைத் திடீரென்று தாக்கி வீழ்த்த இயலாதென்பதால் நெப்போலியன் அக் கோட்டையைத் தம் படைகளுடன் முற்றுகையிட்டார் என்பதையும் ஏற்கெனவே கண்டோம். இத்தாலியின் தென்பகுதியை வென்றபின் தம் படைகளைக் காடு, மேடு என்று பாராது கடுங்குளிரிலும், மழையி லும் இரவு பகலாக ஓய்வின்றி நடாத்திச்சென்று மீண்டும் மாண்டு வாவை அடைந்தார். இதற்கிடையில், ஆஸ்திரியத் தளபதி உரும்சர் (Wurmser) அறுபதினுயிரம் வீரர்களுடன் வட இத்தாலி யில் நன்கு பாதுகாப்புடன் விளங்கிய டிரெண்ட் (Trent) நகரை வந்தடைந்தார். மாண்டுவாவிலிருந்து வடக்கே அறுபது கல் தொலைவிலுள்ளது டிரெண்ட். அங்கிருந்து தமது படைகளுடன் பாய்ந்துவந்து மாண்டுவாவை முற்றுகையிட்டுள்ள ஃபிரெஞ்சுப்

படையை வீழ்த்த ஆஸ்திரியத் தளபதி எண்ணினூர். அவருக்கு ஆதரவாக இத்தாலிய நாடுகள் பல போரில் குதிக்கத் தயாராயின. வெனிஸ், நேப்பில்ஸ் ஆகியவை நெப்போலியனுடன் அவைகள் செய்துகொண்ட உடன்பாட்டையும் மீறி ஆஸ்திரியர்களுக்கு உதவிசெய்ய முன்வந்தன. இத்தாலியிலுள்ள அரசுக்கட்சி ஆதர வாளர்களும் ஆஸ்திரியாவுக்கு ஆதரவு காட்டினர். போப்பும் இதுவே தக்கதருணம் எனக்கருதி ஆஸ்திரியர்களுக்கு ஆலவட்டம் சுற்றினூர். கார்டினல் மேத்தி (Mettei) என்பவரை அனுப்பி தம்முடைய முழு ஆதரவையும் ஆஸ்திரியர்களுக்கு நல்குவதாக போப் வாக்களித்தார். இவ்வாறு, இத்தாலியில் உரும்சருக்கு ஆதரவு பெருகுவதைக் கண்ட குடியரசு ஆதரவாளர்கள் குமுறினர். மாண்டுவாவில் தங்கியுள்ள இருபதாயிரம் வீரர்களுடன் உரும் சரின் அறுபதாயிரம் வீரர்களும் சேர்ந்த பெரும்படைக்கு முப்பதா யிரம் வீரர்களைக் கொண்டு நெப்போலியன் எவ்வாறு ஈடுகொடுக்க இயலும் என்று அவர்கள் பெரிதும் கலங்கினர்.

மாண்டுவாவுக்கும் டிரெண்டுக்கும் இடையே மலைகளின் வழியாக அழகிய கார்டா (Garda) ஏரி அமைந்திருந்தது. அதிக ஆழமில்லாத அவ்வேரி தெளிந்த நீரைப் பெற்றிருந்தது. முப்பது கல் நீளமும், நான்கு முதல் பன்னிரண்டு கல்வரை அகலமும் கொண்டு அழகிய காட்சிப்பொருளாக விளங்கியது. கார்டாவின் ஆரம்பத்திலிருந்து வடக்கே பதினைந்து கல் தொலைவில் உள்ளது டிரெண்ட் (Trent). அவ்வேரியின் முடிவிலிருந்து தெற்கே பதினைந்து கல்தொலைவில் மாண்டுவா உள்ளது. டிரெண்ட் நகரில் பெரும் படையுடன் காத்திருந்த தளபதி உரும்சர், 'நாம் விரைவில் நெப் போலியன் என்ற பையனைப் பிடித்து விடலாம்' என்று இறுமாப் புடன் கூறினூர். ஆஸ்திரியப் பெரும்படையைக் கண்டு அஞ்சி அச் சிறுவன் தப்பியோடி விடாதபடி தடுப்பதற்காகத் தம்முடைய பெரும்படையை உரும்சர் மூன்று பிரிவாகப் பிரித்தார். ஒவ்வொரு பிரிவிலும் இருபதாயிரம் வீரர்களிருந்தனர். ஒரு பிரிவு தளபதி குவாஸ்டாஞேவிச் (Quasdanovich) என்பவர் தலைமையில் கார்டா ஏரியின் மேற்குக்கரை வழியாகக் கீழ்நோக்கிச் சென்றது. மிலான் நகர் வழியாக பின்வாங்கிச்செல்ல எத்தனிக்கும் ஃபிரெஞ்சுப் படையை ஊடுருவித் தாக்குவதே இப் பிரிவின் முக்கிய கடமை யாகும். இரண்டாவது படைப்பிரிவினைத் தளபதி உரும்சர் ஏரியின் கீழ்க்கரை வழியாக மாண்டுவாவை நோக்கி அழைத்துச் சென்ஞர். மாண்டுவா முற்றுகையை முறியடித்துக் கோட்டையை மீட்பதே இப் படைப்பிரிவின் முக்கிய நோக்கமாகும். மூன்ருவது பிரிவு, தளபதி மிலாஸ் (Melas) தலைமையில் அடிஜி (Adige) பள்ளத் தாக்கு வழியாக மாண்டுவா நோக்கி விரைந்தது. ஃபிரெஞ்சுப்

படையினர் தப்பி ஓடாதவாறு தடுத்தபின் இந்த மூன்று பிரிவு களும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒன்றுசேர்ந்து எதிரிகளின்மீது பயங்கரத் தாக்குதலை நடாத்த எண்ணங்கொண்டிருந்தன.

எதிரிகளின் இத்தகைய படைஏற்பாட்டினை தம்முடைய ஒற்றர்கள்மூலம் போனபார்ட் அறிந்தார். ஜுலைத் திங்கள் முப்பத்தொன்றும் நாள் மாலை, இந்த மகிழ்ச்சிகரமான செய்தி அவரது செவிகளுக்கு எட்டியது. ஆஸ்திரியப் பெரும்படை மூன்று பிரிவாக வெவ்வேறு திசையில் வருவதை அறிந்த நெப்போலியன் அதனைத் தமக்குச் சாதகமாக்கிக்கொண்டு ஆஸ்திரியர்களை வீழ்த்தத் திட்டமிட்டார். இரண்டு திங்களுக்கு மேலாக ஏராளமான செலவில் முற்றுகை இடப்பட்ட மேண்டுவாக் கோட்டையை விட்டு தம் படை முழுவதையும் அன்று இரவே கிளப்பி அதிவிரைவாகச்சென்று அதிகாலையில் கார்டா ஏரியின் மேற்குக்கரை வழியாக வந்துகொண்டிருந்த குவாஸ்டானேவிச்சின் படைமீது திடீரென்று பாய்ந்து தாக்கினார். இத் தாக்குதலை ஆஸ்திரியத் தளபதி எதிர்பார்க்கவில்லை. முப்பது கல் தொலைவு வரை எந்த ஃபிரெஞ்சுப் படையும் நம் எதிரில் தென்படாது என்ற தவறான எண்ணத்தில் அலட்சியமாகத் தம் படைகளை குவாஸ்டானேவிச் அழைத்துவந்துகொண்டிருந்தார். எனவே, ஃபிரெஞ்சுப் படையினரின் திடீர்த்தாக்குதலால் ஆஸ்திரிய வீரர்கள் திக்குமுக்காடினர். பல ஆயிரக்கணக்கான ஆஸ்திரிய வீரர்கள் கொல்லப்பட்டனர். எஞ்சியோர் உயிருக்குப் பயந்து மலைகளில் ஓடி மறைந்தனர். இந்த மோதலில் ஏற்பட்ட துப்பாக்கி முழக்கங்கள் தொடர்ந்த இடிமுழக்கம் போன்று ஏரியின் அடுத்தகரை வழியாக வந்துகொண்டிருந்த ஆஸ்திரியப் படைகளுக்கு ஒலித்தன. ஆனால், தங்களுடைய படையினருக்கு எவ்வித உதவியும் செய்ய இயலாது அவர்கள் தவித்தனர். குவாஸ்டானேவிச்சின் படைகளை வீழ்த்திய நெப்போலியன் அதே வேகத்தில் தம்முடைய படைகளை அழைத்துக்கொண்டு கீழ்க்கரை வழியாக வந்துகொண்டிருந்த ஆஸ்திரியப் படைகளைத் தாக்க விரைந்தார். ஆஸ்திரியப் படைகளின் எஞ்சிய இரண்டு பிரிவுகளும் ஒன்றுசேர்வதற்குமுன் அவைகளைத் தனித்தனியே சந்தித்து சிதறடிக்க வேண்டுமென்பதே அவருடைய நோக்கம். 'அருமைத் தோழர்களே! நம்முடைய வெற்றி விரைந்து செல்லும் உங்களுடைய கால்களிலேயே உள்ளது. எதற்கும் அஞ்சவேண்டாம். மூன்று நாட்களில் ஆஸ்திரியப்படை முழுவதையும் முறியடிப்போம். என்னை நம்புங்கள். நான் என்றும் வாக்குத் தவறியவனல்லன் என்பதை நீங்கள் அறிவீர்கள்' என்று தம் வீரர்களை உற்சாகப்படுத்தி நெப்போலியன் அதிவேகமாக அவர்களை அழைத்துச் சென்றார். பசி, தூக்கமின்மை, களைப்பு,

சுமை ஆகிய அனைத்தும் சுக்காய்ப் பறந்தன. அவரது வீர உரையால் பிற்பகல் முழுதும் மிக விரைவாகச் சென்றுகொண்டிருந்த ஃபி ரெஞ்சுப் படை அன்று இரவு வழியில் தங்கி ஒரு மணி நேரம் மட்டும் தூங்கி ஓய்வு எடுத்துக்கொண்டது. ஆனால், தளபதி போனபார்ட் ஓய்வு ஏதுமின்றி தம் பணியில் கண்ணும் கருத்து மாயிருந்தார்.

அடுத்த நாள், ஆகஸ்ட் திங்கள் மூன்றும் நாள். அன்று அதி காலையில் லோனுடோ (Lonato) என்ற இடத்தில் ஆஸ்திரியத் தளபதி மிலாஸ் தலைமையிலுள்ள படையின் எதிரே ஃபிரெஞ்சுப் படை கம்பீரமாக வந்துநின்றது. மிலாசின் இருபதாயிரம் வீரர் களுடன் உரும்சரின் வீரர்களில் முன்னுல் விரைவாகவந்த ஐயாயி ரம் பேர் சேர்ந்து இப்போது ஆஸ்திரியப் படையினரின் எண்ணிக் கை இருபத்தையாயிரமாயிற்று. மிலாசின் படையினருக்கு உதவி யாகத் தலைமைத் தளபதி உரும்சரும் தம்முடைய எஞ்சிய பதினை யாயிரம் வீரர்களுடன் விரைந்து வந்துகொண்டிருந்தார். நெப் போலியன் படையில் இப்போது இருபத்திரண்டாயிரம் வீரர் களே இருந்தனர். அவர்களைக்கொண்டு நாற்பதாயிரம் வீரர்கள டங்கிய ஆஸ்திரியப் படையை முறியடிக்க மும்முரமாகப் பணி யாற்றினுர் நெப்போலியன். அதனைத் தொடர்ந்து ஆகஸ்ட் திங்கள் மூன்றும் நாள் இரண்டு படையினரும் பயங்கரமாக மோதினர். இரத்தம் ஆருக ஓடியது. எங்கும் பிணக்குவியல்; அழுகுரல்; சண்டை அன்றிரவு வரை நீடித்தது. இறுதியில் ஆஸ்திரியப்படை சிதறியோடியது. மீண்டும் தளபதி நெப்போலி யன் வெற்றியைத் தழுவிக்கொண்டார். லோனுடோ சண்டையில் பல ஆயிரக்கணக்கான ஆஸ்திரிய வீரர்கள் உயிரிழந்தனர். ஐயாயி ரம் வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டனர். இருபது கனரக பீரங்கி களை ஃபிரெஞ்சுப் படையினர் கைப்பற்றினர். தப்பி ஓடிய ஆஸ் திரிய வீரர்களையும் விடாது சமவெளிகளில் துரத்திச்சென்று வேட் டையாடினுர் ஃபிரெஞ்சுக் குதிரைப்படை அதிகாரியான ஜூனுட் (Junat) என்பவர். அன்றிரவு போர்க் களைப்பால் பீடிக்கப்பட் டிருந்த ஃபிரெஞ்சு வீரர்கள் எதிரிகளின் பிணங்களுக்கருகிலேயே தூங்கி ஓய்வெடுத்தனர். ஆனல், தளபதி போனபார்ட் மட்டும் கண் துஞ்சாது அடுத்தநாள் சண்டைக்குரிய ஏற்பாடுகளனைத்தும் செய்துகொண்டிருந்தார். விடிவதற்குச் சற்றுமுன்பே ஃபிரெஞ் சுப்படை மீண்டும் முன்னேறியது. நெப்போலியனும் குதிரை மீதமர்ந்து ஆங்காங்கே வீரர்களை ஊக்குவித்துக்கொண்டு வந்தார். களைப்பு மிகுதியால் அவர் முன்னுலேயே ஐந்து குதிரைகள் இறந்து வீழ்ந்தன. இருப்பினும், அயராது முன்னேறின அவரது படை. அடுத்த நாள் காலை லோனுடோவுக்கு ஐந்து கல் தொலைவிலுள்ள கேஸ்டிலியோன் (Castiglione) என்ற இடத்தை ஃபிரெஞ்சுப் படை

வந்தடைந்தது. அங்கு லோடைோவிலிருந்து ஓடிய ஐயாயிரம் ஆஸ்திரிய வீரர்களும் சேர்ந்து இருபதாயிரம் பேர் தளபதி உரும்சர் தலைமையில் ஃபிரெஞ்சுப் படைகளைத் தாக்க அணிவகுத்து நின்றனர். விரைவில் வரலாற்றுப் புகழ்பெற்ற கேஸ்டிலியோன் சண்டைக்களத்தில் இரண்டு படைகளும் முழுமூச்சுடன் மோதின. நெப்போலியனது வீரர்கள் உரும்சரின் படையினரைச் சுற்றிச் சுற்றித் தாக்கி மரணஅடி கொடுத்தனர். நெப்போலியனும் சுற்றிச் சுழன்று சென்று தம் வீரர்களை உற்சாகப்படுத்தினர். முடிவில், ஆஸ்திரியப் படைகள் சிதறி ஓடின. கேஸ்டிலியோன் களமும் போனபார்ட்டின் வெற்றிக்களமாகத் திகழ்ந்தது.

அறுபதாயிரம் வீரர்களுடன் உரும்சர் அணிவகுத்து மாண்டுவா நோக்கிப் புறப்பட்டு ஆறு நாட்கள்தான் ஆகின்றன. இந்த ஆறு நாட்களில் சுமார் நாற்பதாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் அழிந்துபட்டனர். எஞ்சிய இருபதாயிரம்பேர் ஓடி மறைந்தனர். ஆனல், முப்பதாயிரம் ஃபிரெஞ்சு வீரர்களில் இந்த மோதல்களில் இறந்தவர் எண்ணிக்கை ஏழாயிரம். இத்தகைய மகத்தான வெற்றிக்கு நெப்போலியனது பேராற்றலும், விடாமுயற்சியும், துணிவும், தன்னம்பிக்கையும் காரணமாகும். இதுவரை வரலாற்று ஏடுகளில் காணப்பெருத மாபெரும் வெற்றிகளைப் பெற்று மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தனர் ஃபிரெஞ்சு வீரர்கள். இதுவரை தங்களுடைய தளபதியை 'சிற்றேவலர்' (Little Corporal) என்று செல்லமாக அழைத்த ஃபிரெஞ்சு வீரர்கள் தங்களுடைய தளபதிக்கும் சிறிது பதவி உயர்வு கொடுத்து 'தண்டுத்தலைவர்' (Sergeant) என்று செல்லமாக அழைத்தனர். அன்றியும், தாங்கள் பெற்ற படைத்துறைச் சாதனைகளை 'ஆறு நாள் படைத்துறை ஏற்பாடு, (The Six Days Campaign) என்று அழைத்துப் பூரித்தனர்.

ஆஸ்திரியப் பெரும்படைகளுடன் நெப்போலியன் போரிட்டுக் கொண்டிருந்த நேரத்தில் அவருக்கு எதிராக வெனிஸ், நேப்பில்ஸ், ரோம் ஆகிய நாடுகள் திரும்பின. நெப்போலியனுடன் செய்து கொண்ட உடன்பாட்டையும் மீறி அவை ஆஸ்திரிய வீரர்களுக்கு ஆதரவாகப் போரில் இறங்கின. இப்போது, வெற்றிபெற்ற நெப்போலியன் தம்மை வஞ்சிக்க முற்பட்ட அந் நாடுகளின் கோமான்களை அழைத்து அவர்களை மன்னித்து அவர்களுடன் பெருந்தன்மையுடன் நடந்துகொண்டார். ஆனல், கார்டினல் மேத்தியை மட்டும் தம்மை வந்து பார்க்கும்படி ஆணையிட்டார். வயது முதிர்ந்த கார்டினலும் கைகட்டி வாய்பொத்தித் தளபதி முன் நின்று, 'நான் பாவம் செய்துவிட்டேன்; நான் பாவம் செய்து விட்டேன்' என்று மன்ருடினர். அவர் உணர்ந்து கூறிய கூற்றினை ஏற்றுக்கொண்ட நெப்போலியன் அவரது பாவச்சுமை

யைப் போக்கும் வண்ணம் தக்க தண்டனை அளித்தார். அதாவது, கார்டினல் மேத்தி ஒரு மடத்தில் அமர்ந்து மூன்று மாதகாலம் பட்டினி கிடந்து இறைவனை வழிபடவேண்டும் என்று நெப்போலி யன் கட்டளையிட்டார். ஆனால், தம்முடன் செய்துகொண்ட உடன்பாட்டிற்கு ஊறு நேராவண்ணம் நடந்துகொண்ட இலம் பார்டி மக்களை அவர் பெரிதும் பாராட்டினார்.

ஆஸ்திரியர்களுடன் போராடிக்கொண்டிருந்த வேளையில், ஒருநாள் இரவு தளபதி நெப்போலியன் சாதாரண உடையில் படைமுகாம் ஒன்றினைப் பார்வையிடச் சென்றார். இரண்டு சாலை கள் இணைகின்ற ஓர் இடத்தில் காவலுக்கு நின்றுகொண்டிருந்த போர்வீரனொருவன் நெப்போலியனைத் தடுத்து நிறுத்தினான். அப்போது நெப்போலியன், 'நான் படைத்துறை அதிகாரிகளில் ஒருவன்; இங்குள்ள படைமுகாமை மேற்பார்வையிட வந்துள் ளேன்; எனவே, என்னைத்தடுக்காதே' என்றார். அதனைக் கேட்ட அக் காவலன் 'எவரையும் உள்ளே அனுமதிக்கக் கூடாது என்பது எனக்களிக்கப்பட்ட ஆணை. அதனை ஏற்று நடப்பது என் கடமை. மீறி உள்ளே செல்வீரானால் என் துப்பாக்கிக் குண்டுகளுக்கு நீர் இரையாவீர்' என்று உறுதியுடன் பதிலுரைத்தான். போனபார்ட் டும் வேறு வழியின்றித் திரும்பினார். அடுத்தநாள் காலை அக் கடமை வீரனை வரவழைத்து அவனுக்குப் பதவிஉயர்வு கொடுத் துப் பாராட்டினார்.

கேஸ்டிலியோன் வெற்றிக்குப்பின் நெப்போலியன் தம் படை களுடன் மீண்டும் மாண்டுவா வந்தடைந்தார். அக் கோட்டை யில் தங்கியிருந்த ஆஸ்திரிய வீரர்கள் நெப்போலியனது முற்று கைப் பணிகளனைத்தையும் அவர் இல்லாத நாட்களில் அழித்து விட்டனர். இப்போது நெப்போலியன் மீண்டும் முற்றுகைக் கான சீரிய பணிகளில் நாட்டங் கொள்ளவில்லை. மாறாகத் தம் முடைய படைவீரர்களை மாண்டுவாக் கோட்டையைச் சுற்றி நிறுத்திவைத்தார். மூன்று வாரகாலம் ஃபிரெஞ்சுப் படை அங்கு தங்கி ஓய்வெடுத்தது. இதற்கிடையில், ஆஸ்திரிய அரசு ஃபிரான் சுடன் அமைதிஉடன்பாடு செய்துகொள்ள விரும்பாது மீண்டும் போராடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தது. 'ஃபிரெஞ்சுக் குடியரசை எப்படியும் ஒழித்தே தீருவோம்' என்று அது உறுதி பூண்டது. ஆகவே, ஆஸ்திரியா தன்னுடைய முழுவலிவினையும் செல்வாக்கினையும் பயன்படுத்தி ஒரு பெரும்படையைத் திரட்டி யது. மூன்று வார காலத்திற்குள் ஐம்பத்தைந்தாயிரம் வீரர் களடங்கிய பெரும்படை ஒன்று திரண்டது. தளபதி உரும்சர் தலைமையில் மீண்டும் அப் படை டிரெண்டில் கூடியது. மாண்டு வாக் கோட்டையிலுள்ள இருபதாயிரம் வீரர்களையும் சேர்த்து

இப்போது ஆஸ்திரியப் படைவீரர்களின் எண்ணிக்கை எழுபத்தையாயிரமாகும். தளபதி நெப்போலியனும் தம் படையில் புதிய வீரர்களைச் சேர்த்து முப்பதாயிரம் வீரர்களுடன் ஆஸ்திரியப் பெரும்படையுடன் மோதத் தயாரானர்.

செப்டம்பர் திங்களின் தொடக்கத்தில் ஆஸ்திரியப் பெரும் படை தளபதி உரும்சர் தலைமையில் மாண்டுவா நோக்கி நகர்ந்தது. டிரெண்டிற்குத் தெற்கே பத்துக் கல் தொலைவிலுள்ளது ரொவெரெடோ (Roveredo). இது மிகவும் வலிமைமிக்க இராணுவ இலக்கு. இங்கு உரும்சர், தளபதி டேவிடோவிச் (Davidovitch) என்பவரது தலைமையில் இருபத்தையாயிரம் வீரர்களை நிறுத்திவைத்தார். இந்தப் படையின் முக்கியப் பணி ஃபிரெஞ்சு ஊடுருவலைத் தடுப்பதாகும். எஞ்சிய முப்பதாயிரம் வீரர்களை அழைத்துக்கொண்டு உரும்சர், பிரெண்டா (Brenta) பள்ளத்தாக்கு வழியாக வந்து ரொவெரெடோவிலிருந்து அறுபது கல் தொலைவிலுள்ள பஸானே (Bassano) என்ற இடத்தை வந்தடைந்தார். இப்போது ரொவெரெடோவிலுள்ள ஆஸ்திரியப் படைகளுக்கு உதவி கிட்டாத தொலைவில் உரும்சரின் படை இருந்தது. இதனை அறிந்த நெப்போலியன் உடனே தம் படைகளை ரொவெரெடோ நோக்கி முடுக்கினர். செப்டம்பர் திங்கள் நான்காம் நாள் அதிகாலை ஆஸ்திரியப் படைத்தளபதி டேவிடோவிச் எதிர்பாராதவகையில் ஃபிரெஞ்சுப்படை திடீரென்று புயல்போல் பாய்ந்து ஆஸ்திரியப் படையைத் தாக்கியது. பிணங்கள் குவிந்தன ; இரத்தம் பெருக்கெடுத்தோடியது ; ஆஸ்திரியப் படை அலறியடித் தோடியது. ஓடிய பகைவரை ஃபிரெஞ்சுக் குதிரைப்படை விரட்டிச்சென்று தாக்கிச் சேதப்படுத்தியது. ஏழாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டனர். இருபது பீரங்கிகளும் ஃபிரெஞ்சுப் படை வசமாயின. ரொவெரெடோவும் நெப்போலியனின் வெற்றிமாலைகளில் ஒன்றாகக் கூடியது. அடுத்தநாள் காலை நெப்போலியன் வெற்றிகரமாக டிரெண்ட் நகரில் நுழைந்தார். டிரெண்ட் நகர மக்களுக்கு வேண்டிய உருக்கமான உரைகளையாற்றி அவர்களது உள்ளங்களை வென்றார் நெப்போலியன். அடுத்து, அவர் தமது படையுடன் உரும்சரின் படைகள் தங்கியிருந்த பஸானே நோக்கி அதிவிரைவாகச் சென்றார்.

ரொவெரெடோவில் நிறுத்திவைக்கப்பட்டிருந்த ஆஸ்திரியப் படை முழுதும் அழிக்கப்பட்ட செய்தி செப்டம்பர் திங்கள் ஆரும் நாள் மாலை உரும்சரின் செவிகளை எட்டியது. அடுத்தநாள் காலை அவர் படுக்கையிலிருந்து எழுவதற்குள் நெப்போலியனது படை பஸானேவை அடைந்து உரும்சர் படையைத் தாக்கத் தயாராயிற்று. அதனை அறிந்த ஆஸ்திரியத் தளபதி அவசர அவசரமாக

எழுந்து தமது படைகளை அணிவகுத்தார். உரும்சர் படைகளின் அணிவகுப்பிற்குத் தேவையான நேரத்தைக் கொடுக்கும் வகையில் நெப்போலியனும் தாக்குதல் தொடங்காது காத்திருந்தார். அணிவகுப்பு முடிந்தவுடன் இருபடைகளும் பயங்கரமாக மோதின. அன்றிரவு முழுதும் சண்டை ஓயவில்லை. எங்கும் பிணங்கள் ; அழுகுரல் ; ஓலம் ; முணுமுணுப்பு. செத்துக்கொண்டிருப்பவரின் அழுகுரல் இரவுக்காற்றில் அலைஅலையாக மிதந்து வந்தது. விடாது ஒலித்துக்கொண்டிருந்த பீரங்கி முழக்கம் மலைகளில் மோதி எதிரொலித்தது. மனிதத்தன்மைக்கே இடமற்றவகையில் அங்கு கொடுமை தாண்டவமாடியது. இறந்தவர்களைப் புதைக்க நாதி யில்லை. காயம்பட்டவர்களுக்கும் செத்துக்கொண்டிருப்பவர்களுக் கும் ஒரு செம்பு தண்ணீர் கொடுக்கக்கூட ஆளில்லை. எங்கும் ஒரே நாசவேலை நடந்துகொண்டிருந்தது. உரும்சரின் படையில் சுமார் பதினைன்காயிரம் பேர் அழிந்தொழிந்தனர். எஞ்சிய பதினாறாயிரம் வீரர்களுடன் பின்வாங்கிச்சென்று மாண்டுவாக் கோட்டையில் புகுந்தார். நெப்போலியனும் அவரைப் பின்தொடர்ந்து மாண்டு வா நோக்கித் தம் படைகளுடன் விரைந்தார்.

பஸானோ வெற்றி வரலாற்றுச் சிறப்புமிக்க வெற்றி. ஆஸ்திரி யப் பேரரசின் நாடித்துடிப்பான தளபதி உரும்சர் இப்போது மாண்டுவாக் கோட்டையில் வைக்கப்பட்டார். அவர் வெளியேறி வந்து தாக்க இயலாதபடி ஃபிரெஞ்சுப் படைகள் கோட்டையைச் சூழ்ந்து நின்றன. உரும்சர் உண்மையிலேயே கோட்டைக்குள் சிறைவைக்கப்பட்ட நிலையிலானார். ஆஸ்திரியப் பெரும்படை களனைத்தையும் வென்று வரலாற்றில் புதிய சாதனையை உருவாக்கி னார் நெப்போலியன். இதுவரை வரலாற்று ஏடுகளில் ஏறாத வெற்றி களை இப்போது நெப்போலியன் ஏற்றிவைத்தார். பத்தே நாட் களில் மூன்றாவது ஆஸ்திரியப் பெரும்படையை முறியடித்து தமக்கு இனி இத்தாலியில் எதிரிகள் இல்லை என்ற நிலையைத் தளபதி நெப் போலியன் உருவாக்கினார். இப்போது, ஃபிரெஞ்சுப் படைகளை எதிர்த்துத் தாக்கும் துணிவு ஆஸ்திரியாவில் எவருக்கும் இல்லை. ஐரோப்பா முழுதும் நெப்போலியனின் வெற்றிச் செய்திகள் அலைஅலையாகச் சென்றன. அவைகளை வரவேற்ற சாதாரண மக்கள், குடியரசில் நாட்டங்கொண்டவர்கள் நெப்போலியனைத் தங்களின் கடவுளாகக் கருதி வழிபட்டனர் ; அவைகளைக் கேட்கச் சகியாத அரசுக்கட்சி ஆதரவாளர்களோ அவரைப் பேயாகச் சபித் தனர்.

ரொவெரெடோவிலிருந்து, பஸானொ நோக்கிப் படையுடன் வந்துகொண்டிருந்த நேரத்தில் ஃபிரெஞ்சுப் படைவீரன் ஒருவன் கந்தலாடையுடன் தளபதி முன் நின்று ' ஐயா, ஃபிரெஞ்சு வீரர் களாகிய நாம் வெற்றிகளைக் குவித்துக்கொண்டிருக்கிறோம். ஆனால்,

நாம் அணிந்திருப்பதோ அசிங்கமான கந்தலாடைகள்' என்று மனம் வருந்தி வேதனையுடன் கூறினன். அதனைக் கேட்ட போனபார்ட் படையில் அதிருப்தி படருவதை உடனே தடுக்கும் வகையில், 'எனது அருமை நண்பனே! கந்தலாடைகள் நாம் பெற்ற விழுப்புண்களைக் காட்டும் கண்ணாடிகள்; புதிய ஆடைகளோ அவற்றை மறைத்துவிடும். ஆகவே, கவலைப்படாதே' என்று கூறி அவனைத் தேற்றினர்.

பஸானேச் சண்டைக்கு முந்திய இரவு நெப்போலியன் தனிமையில் வெகுதூரம் சென்றுவிட்டார். அன்று பகல் முழுதும் அவர் சாப்பிடவில்லை. பல இரவுகள் அவர் தூங்கியதில்லை பசியோ அவரை வாட்டியது. அப்போது, அருகிலிருந்த ஃபிரெஞ்சு வீரன் ஒருவன் தான் வைத்திருந்த ரொட்டியில் பாதியைக் கொடுத்து நெப்போலியனின் பசியைப் போக்கினன். பசி நீங்கிய நெப்போலியனும் அவனருகில் சிறிது நேரம் தூங்கி ஓய்வெடுத்த பின் படைகளிருக்குமிடம் சென்றடைந்தார். ஆண்டுகள் பல கடந்தன. நெப்போலியன் பேரரசராக ஒருநாள் பெல்ஜியம் வழியாகச் சென்றுகொண்டிருந்தார். அதுபோழ்து, அங்கிருந்த படைவீரர்களில் ஒருவன் போனபார்ட்முன் தோன்றி, 'ஐயா அன்று பஸானேப் போருக்குமுன் நீங்கள் பசியால் வாடியபோது, நான் என் ரொட்டியைத் தங்களுக்களித்தேன். இப்போது, என் தந்தை வயதான காலத்தில் பசியால் வாடுகின்றார். அவருக்கு ரொட்டி கொடுத்துதவும்படித் தங்களைப் பணிவுடன் வேண்டுகின்றேன்' என்று கூறினன். பழைய நிகழ்ச்சியை தம் நெஞ்சில் பசுமையாகப் பதித்திருந்த நெப்போலியன் உடனே அவ் வீரனின் தந்தைக்கு உதவித்தொகை கொடுக்க உத்தரவிட்டார். அவ் வீரனுக்கும் பதவிஉயர்வு கொடுக்கப்பட்டது.

பஸானேச் சண்டை நடந்த இரவு எங்கும் பிணங்கள் சிதறிக் கிடந்தன. கையிழந்தோர், காலிழந்தோர், தலை துண்டாக்கப் பட்டோர், கடுமையான காயங்களைப் பெற்றோர், கண்களைப் பறி கொடுத்தோர், குடல் சரிந்தோர் போன்றோரடங்கிய காட்சி நெஞ்சை உருக்குவதாயிருந்தது. அன்று நடு இரவு. நெப்போலியன் வழக்கம்போல் தம் குதிரையில் அமர்ந்து பிணங்களின் நடுவே வந்துகொண்டிருந்தார். அப்போது, ஒரு நாய் ஒரு பிணத்தினருகில் நின்றுகொண்டிருந்தது. நெப்போலியனைக் கண்ட அந்த நாய் அவரிடம் வருத்தத்துடன் வந்து மீண்டும் அப் பிணத்திற்கருகில் சென்று, முகத்திலுள்ள இரத்தத்தை நக்கி, கடுமையாகக் குரைத்துப் புலம்பித் தானும் மாண்டது. இந் நிகழ்ச்சி நெப்போலியனின் நெஞ்சை நெகிழவைத்தது. தன்னுடைய தலைவன் இறந்ததைக் காணச் சகியாத அந்த நாய் தானும் அவனுடன்

மாண்டதைக் கண்ட நெப்போலியன் அந்த நாயின் நன்றியை அறிந்து மெச்சினார். அவரது கண்கள் குளமாயின. தம்மருகில் வந்து தன்தலைவன் இறந்துபட்டான் என்ற செய்தியை நெப்போலியனுக்குத் தெரியப்படுத்திய முறை அவரது உள்ளத்தை உருக்கியது. தம் வாழ்நாள் முழுதும் அந்த நன்றியுள்ள நாயின் உருவம் அவரது நெஞ்சத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டது. 'நான் மேற்கொண்ட போர்நிகழ்ச்சிகளில் இந்த நிகழ்ச்சியே என்னைப் பெரிதும் வருத்தியது. உற்றார், உறவினர் அனைவராலும் கைவிடப்பட்டு தனியே உயிர்துறக்கும் வேளையில் அந் நாய் ஒன்றுதான் அவருக்கு உறுதுணையாயிருந்தது. நான் அநேக போர்களில் ஈடுபட்டிருந்தேன். பல்லாயிரக்கணக்கான மக்கள் இறந்ததையும் என் கண்கள் கண்டுள்ளன. ஆனால், நன்றியுள்ள அந் நாயின் புலம்பலைக் கண்டு என் கண்கள் குளமாயின' என்று பிற்காலத்தில் நெப்போலியன் வருந்திக் கூறுவதுண்டு.

பஸானோ வெற்றிக்குப்பின் தளபதி நெப்போலியன் மாண்டுவாக் கோட்டையை மீண்டும் முற்றுகையிட்டார். ஆஸ்திரிய தளபதி உரும்சர் தம் படைவீரர்களுடன் உள்ளிருந்தார். போதிய உணவுப்பொருட்களின்றி வாடினார். தம் படையிலிருந்த குதிரைகள் அனைத்தும் கொல்லப்பட்டு வீரர்களின் உணவுப்பொருள்களாகப் பயன்படுத்தப்பட்டன. இருப்பினும், கோட்டைக்குள்ளிருந்த வீரர்கள் உணவுப் பற்றாக்குறையால் பெரிதும் வாடினர். இந்த இக்கட்டான நிலையிலும் ஆஸ்திரியப் பேரரசு ஃபிரெஞ்சுக் குடியரசை அங்கீகரித்து உடன்பாட்டிற்கு வரமறுத்தது. எந்த விலைகொடுத்தேனும் ஃபிரெஞ்சுக்காரர்களை வீழ்த்த மீண்டும் உறுதிகொண்டனர் ஆஸ்திரியர்கள். அவர்களை ஊக்குவிக்கும் வகையில் இங்கிலாந்தும் பொருள் கொடுத்து உதவியது. அரசுக் கட்சி ஆதரவாளர்கள் அனைவரும் அவர்களது முயற்சிக்கு உறுதுணையாய் இருந்தனர். எனவே, ஆஸ்திரியாவின் நான்காவது படை விரைவில் திரட்டப்பட்டது. அப் பெரும்படையில் நூறாயிரம் பேர் திரண்டனர். படைவீரர்களுக்குத் தேவையான உடைகளைத் தயாரித்தும் புன்முறுவலைக்காட்டியும் அரசகுலப் பெண்கள் அவர்களை உற்சாகப்படுத்தினர். ஆஸ்திரியப் படையின் கொடிகளைத் தம் கைகளாலேயே தைத்து அழகுபடுத்தினர் ஆஸ்திரியப் பேரரசியார். இப்போது எழுபத்தையாயிரம் ஆஸ்திரியப் படைகள் புகழ்பெற்ற ஆல்வின்ட்சி **(Alvintzi)** தலைமையில் மாண்டுவாவை விடுவிக்கக் கிளம்பின.

இத்தகைய பெரும்படையை இரண்டாகப் பிரித்து ஒருபடை ஆல்வின்ட்சி தலைமையில் டிரெய்ஸ்டி **(Trieste)** என்ற கிழக்கு தளத்

தின் வழியாக முன்னேறியது. இன்னொரு பிரிவு வடக்கே டைரால் (Tyrol) தளத்திலிருந்து கிளம்பியது. இந்த இரண்டு படைகளையும் தனித்தனியே சந்தித்து முறியடிக்கும் திட்டத்தை நெப்போலியன் தீட்டினார். அதன்படி, முதலில் தம்முடைய படைகளுடன் கிழக்கு நோக்கிச் சென்று ஆல்வின்ட்சியின் படைகளைத் தாக்கி முறியடித்து அதன்பின், டைரால் பகுதியில் விரைவாக முன்னேறிச் சென்று டேவிடோவிச் படையின்மீது பாய்ந்து தாக்க எண்ணினார். இதற்கிடையில், தளபதி வாபாய்ஸ் (Vaubois) தலைமையிலுள்ள ஃபிரெஞ்சுப் படை அடிஜி (Adige) வழியாகக் கீழ்நோக்கி வந்து கொண்டிருக்கும் டேவிடோவிச் படையைத் தடுத்து நிறுத்த வேண்டும். ஆனால், நெப்போலியனின் திட்டம் நிறைவேற இயலாதபடி நிலைமைகள் சிக்கலாயின. வாபாய்ஸ், ஆஸ்திரிய தளபதி டேவிடோவிச்சின் படையின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த இயலவில்லை. அன்றியும், ஃபிரெஞ்சுத் தளபதியான ஆஜிரே (Augereau)யும், மெசெனா (Massena)வும் டிரெண்டா வழியாக முன்னேறி ஆல்வின்ட்சியின் படைகளைத் தாக்க இயலவில்லை. இதற்கிடையில், அக்டோபர் திங்கள் 12ஆம் நாள் அதிகாலையில் தளபதி ஆல்வின்ட்சி தம் படைகளுடன் வெரோனா (Verona) நகருக்கு வெளியிலுள்ள கால்டியரோ (Caldiero) குன்றுகளை வந்தடைந்தார். இப்போது நெப்போலியன் ஒரு படையுடன் கால்டியரோ குன்றுகளை அடைந்து ஆல்வின்ட்சியை விரட்ட முயன்றார். அன்று முழுதும் நடந்த சண்டையில் ஃபிரெஞ்சுப் படை பின்வாங்கி வெரோனா நகருக்குள் நுழைந்தது. இதுவரை தாம் மேற்கொண்ட போர்களில் பின்வாங்கியறியாத நெப்போலியன் இப்போது முதன்முறையாகத் தம் படைகளின் நலன் கருதிப் பின்வாங்கி வெரோனா வந்தடைந்தார். அவரது நிலை மிகவும் இக்கட்டாக இருந்தது. அவர் தம் படையுடன் மீண்டும் பின்வாங்கி மாண்டுவாவை அடைந்தால், இப்போது ஆல்வின்ட்சி தலைமையிலும் டேவிடோவிச் தலைமையிலும் தனித்தனியே பிரிந்திருக்கின்ற ஆஸ்திரியப் படைகள் இரண்டும் இணைந்து வலிமைமிக்க பெரும்படையாகிவிடும். அவர் வெரோனாவில் தம் படைகளுடன் தங்கியிருந்தால் ஆஸ்திரியப் படைகளிடம் சரணடைய நேரிடும். கால்டியரோக் குன்றுகளில் வலுவுடன் முகாமிட்டிருக்கும் ஆஸ்திரியப் பெரும்படையை மீண்டும் திடீரென்று தாக்குவாரேயானால் அவர் மறுபடியும் பின்வாங்க வேண்டிவரும். இத்தகைய நெருக்கடியான கட்டத்தில் நெப்போலியன் தம் இராணுவத்திறனைத்தையும் பயன்படுத்திச் சிந்தித்து ஒரு நல்ல முடிவுக்கு வந்தார். அதாவது, ஆஸ்திரியத் தலைமைத் தளபதி ஆல்வின்ட்சியின் படைகளைச் சுற்றிச்சென்று அவர்களுக்கு உதவியாகவரும் சரக்குகளையும், பீரங்கிகளையும் கைப்பற்றி அவருடன் மோதி வீழ்த்தியபின்

தம் கவனத்தை டேவிடோவிச் படைகளின்மீது செலுத்துவது என்ற முடிவுக்கு வந்தார் நெப்போலியன். அதன்படி, வெரோனு நகரில் மூவாயிரம் வீரர்களை நிறுத்திவிட்டு எஞ்சிய தம் வீரர்களுடன் அடிஜி வழியாக விரைந்தார். அக்டோபர் திங்கள் 15ஆம் நாள் ரோன்கோ **(Ronco)** என்ற இடத்தில் அடிஜியைக் கடந்து, அடிஜியையும், ஆல்பேடினையும் பிரிக்கின்ற முக்கோண வடிவமுள்ள சதுப்புநிலத்தின் குறுக்கே பாய்ந்துசென்றூர். விரைவில் நெப்போலியன் ஆர்கோலா **(Arcola)** என்ற இடத்தை அடைந்தார். அங்கு ஆல்பேபின் நதியின்மீதுள்ள பாலத்தைக் கடந்துசெல்ல அவர் முற்பட்டார். ஆனல், அப் பாலத்தைப் பாதுகாத்துவந்த பகைவர்படையின் உறுதியால் நெப்போலியன் அதனைக் கடக்க இயலவில்லை. இருப்பினும், பெருமுயற்சி செய்தார் அப் பாலத்தைக் கடந்துசெல்ல. இந் நிலையில் அடுத்தநாள் காலை ஆல்வின்ட்சியின் படை முழுதும் ஆர்கோலாவை அடைந்து நெப்போலியனை வளைத்துக்கொண்டது. விரைவில் இரண்டு படைகளும் ஆர்கோலாக்களத்தில் மோதின. இரண்டு பக்கங்களிலும் வெற்றி தோல்வியை நிர்ணயிக்க இயலாதபடி போர் கடுமையாக இருந்தது. ஆனல், அக்டோபர் திங்கள் 17ஆம் நாள் மாலை போர்க்காற்று ஃபிரெஞ்சுப் படைகளுக்குச் சாதகமாக வீச ஆரம்பித்தது. அன்று மாலை ஐம்பது ஃபிரெஞ்சுக் குதிரைவீரர்கள் ஒரு நீக்ரோ அதிகாரியின் தலைமையில் எக்காளமாகப் போர்க்கொம்பு ஊதிக்கொண்டு ஆஸ்திரியப் படையின் பின்புறமாகச் சுற்றி குதிரைகளில் அதிவிரைவாகச் சென்றனர். அவர்களது செல்கை ஒரு பெரிய திடீர்த்தாக்குதலுக்கு முன்னறிவிப்பாக அமைந்தது. அந்தப் போர்முழக்கத்தைக் கேட்ட ஆஸ்திரியப்படை அஞ்சி நடுங்கத்தொடங்கியது. அதனைப் பயன்படுத்தி ஃபிரெஞ்சு வலதுபுறப் படைப்பிரிவின் தளபதியான ஆஜிரே **(Augereau)** திடீரென்று பாய்ந்து தாக்கினர் ஆஸ்திரியப்படையை. ஆஜிரேயின் தாக்குதலைத் தாங்க இயலாதபடி, இதுவரை ஆர்கோலா என்ற இடத்தை அதிக உறுதியுடன் தற்காத்துவந்த ஆஸ்திரியப் படை அன்று மாலை ஐந்து மணி அளவில் மெதுவாகப் பிடிதளர்ந்து பின்வாங்கத் தொடங்கியது. இருப்பினும், வெற்றி மதில்மேல் பூனையாக இருந்தது. டேவிடோவிச்சின் படையைத் தடுத்து நிறுத்த இயலாத நிலையில் ஃபிரெஞ்சுத் தளபதி வாபாய்ஸ், ரிவோலி **(Rivoli)**ப் பகுதியிலிருந்து விரட்டப்பட்டார். அதன் பயனுக, டேவிடோவிச்சின் படை தடையின்றி வெரோனுநோக்கி முன்னேற வழிபிறந்தது. ஆனல், டேவிடோவிச்சின் கவனக்குறைவால் அவர் விரைந்து சென்று ஆல்வின்ட்சியுடன் சேர்ந்து வெரோனுவைக் கைப்பற்ற முடியவில்லை. இதற்கிடையில், ஃபிரெஞ்சுத் தளபதிகளான வாபாய்சும், மெசெனுவும் ரிவோலி மேட்டுநிலத்தில் ஆஸ்திரியப் படைகளை

விரட்டிச்சென்று வீழ்த்தினர். இவ்வாறு, ஆர்கோலாவிலும் ரிவோலியிலும் மீண்டும் ஆஸ்திரியப் படைகள் தோல்வியைத் தொட்டணைத்துக்கொண்டன.

ஆர்கோலாப் போர் வரலாற்றுச் சிறப்புமிக்க ஒன்றாகும். 'இதுவரை நான் போரிட்ட களங்களில் ஆர்கோலாச் சண்டையைப்போல வீரதீரத்துடன் போராடிய களம் எதுவுமில்லை. அன்று என்னுடைய தளபதிகள் காட்டிய வீரத்திற்கும், நாட்டுப் பற்றுடன் கூடிய உற்சாகத்திற்கும் உவமை கூறவியலாது' என்று நெப்போலியன் வியந்து கூறியுள்ளார். போனபார்ட் தமது உயிரைத் துச்சமெனக் கருதி அப் போரில் தீவிரமாக ஈடுபட்டார். அப்போது அவரது உயிரையே குடிக்கும் நிகழ்ச்சிகளும் நடந்தன. சண்டையின் இடையே ஒரு பயங்கரக் குண்டு நெப்போலியன்மீது வீசப்பட்டது. அதனையறிந்த ஃபிரெஞ்சு வீரன் மூரியன் **(Murion)** பாய்ந்துவரும் குண்டுக்கும் நெப்போலியனுக்கும் இடையே தாவிக்குதித்து குண்டடியைத் தான் தாங்கித் தன் தளபதியின் உயிர்காத்தான். கொஞ்சம் கவனக்குறைவாக இருந்திருந்தால் அக் கொடுங்குண்டு நெப்போலியனின் உயிரையே குடித்திருக்கும். தன்னுயிரைக் கொடுத்து தன் தலைவனின் உயிர் காத்த உத்தம வீரன் மூரியன் வரலாற்று ஏடுகளில் சாகாத இடத்தைப் பெற்றுவிட்டான். தன் தளபதியின் நெஞ்சிலும் நிரந்தர இடம் பிடித்துவிட்டான். அவனது சாவின் துயரத்தைத் தாங்காத நெப்போலியன் பல நாள் வருந்திக் கண்களைக் குளமாக்கிக் கொண்டார். இதற்கிடையே கணவனை இழந்து தவிக்கும் மூரியன் மனைவிக்கும் இரங்கல் கடிதமொன்றும் நெப்போலியன் எழுதியனுப்பினார். 'அருமைத் தங்கையே! உனது உயிரினும் இனிய அன்புக் கணவனை இழந்து தவிக்கின்றாய்; நீண்டகாலமாக என்னுடன் நெருங்கிப் பழகிய இனிய நண்பனை ஆர்கோலாக் களத்திற்குப் பலி கொடுத்து நான் அழுது தவிக்கின்றேன்; நமது நாடோ, ஓர் உறுதிபடைத்த வீரனை, நாட்டுப் பற்று மிக்க நல்ல தீரனை இழந்து வாடுகின்றது' என்பவை அந்த இரங்கல் மடலில் காணக்கிடக்கும் சில வரிகளாகும்.

ஆர்கோலாக் களத்தில் நடந்த பிறிதொரு நிகழ்ச்சியும் நெப்போலியனின் உயிருக்கு உலைவைப்பதாக அமைந்தது. போர்க் களத்தில் வீரர்கள் மும்முரமாக மோதிக்கொண்டிருந்தனர். ஆஸ்திரிய வீரர்களும் அவர்களைத் தாக்கிய ஃபிரெஞ்சு வீரர்களும் வெற்றிக்காக விடாது போரிட்டுக் கொண்டிருந்தனர். தளபதி நெப்போலியனும் நரிக் கூட்டத்தில் சிங்கம் புகுந்ததைப்போல ஆஸ்திரியப் படை வீரர்களிடையே புகுந்து தாக்குதலில் ஈடுபட்டிருந்தார். அப்போது, ஆஸ்திரியர்கள் வீசிய குண்டொன்று

அவரது குதிரையைப் பலமாகத் தாக்கியது. குண்டடிபட்ட குதிரையும் வலிதாங்காது எதிரிகளின் குண்டு மாரிக்கிடையே பாய்ந்துசென்று அங்குள்ள சதுப்புநிலச் சகதியில் மூழ்கி இறந்து விட்டது. தளபதி போனபார்ட்டும் கழுத்தளவு சகதியில் சிக்கித் தவித்துக்கொண்டிருந்தார். விரைவில் அவருடைய உதவிக்கு அவரது வீரர்கள் வந்திராவிட்டால் அவர் அங்கேயே மூழ்கிச் செத்திருப்பார்; அல்லது ஆஸ்திரிய வீரனின் கொடுவாளுக்கு இரையாகியிருப்பார்; அல்லது ஆஸ்திரியக் குண்டு அவரது தலையைத் துளைத்துச்சென்று அவரது உயிரைக் குடித்திருக்கும். ஆனால், எதிரிகளின் பேய்த் தாக்குதலையும் தாங்கி ஃபிரெஞ்சு வீரர்கள் பாய்ந்துசென்று தங்களின் உயிரினும் மேலான தளபதியைக் காப்பாற்றினர்.

ஆர்கோலாவிலும் ரிவோலியிலும் நடந்த சண்டைகளில் கிட்டத்தட்ட முப்பதாயிரம் வீரர்களை இழந்த ஆஸ்திரியப்படை மலைகளில் ஓடி மறைந்தது. வெற்றிபெற்ற தளபதி நெப்போலியன் மீண்டும் வெரோனா நகரில் வெற்றிஉலா வந்தார். அந் நகர மக்கள் அவரை மலர் தூவி வரவேற்றனர். அவரது எதிரிகள்கூட அவரது தீரச்செயலைப் பாராட்டிப் புகழ்ந்தனர். வெற்றியில் திளைத்த நெப்போலியன் தம் ஆருயிர் மனைவிக்கும் மடல் ஒன்று தீட்டினார். ‘ என்னுடைய போற்றுதலுக்குரிய ஜோசபைன்! இறுதியில் நான் மீண்டும் உயிர்பெற்று வாழ்கின்றேன். பெயரையும் புகழையும் மார்பில் தாங்கி மரணத்தின் பிடியிலிருந்து விலகி வெகு தொலைவிலுள்ளேன். எதிரிகள் முறியடிக்கப்பட்டனர். விரைவில் மாண்டுவா நம் வசமாகும். அதன் பின் உன் கணவன் உன்னைத் தன் கரங்களில் அலக்காகத் தூக்கி ஆயிரக்கணக்கான அன்பு முத்திரைகளை உன் கன்னத்தில் பதிப்பான். நான் இப்பொழுது கொஞ்சம் களைப்படைந்துள்ளேன். ஈஜீன், ஹார்டென்ஸ் தீட்டிய மடல்கள் கிடைக்கப்பெற்றேன். மெத்த மகிழ்ச்சி. என்னை அடிக்கடி நினைத்துக்கொள்............காதல், ஆர்வம், இரக்கம் ஆகியவற்றால் பிணைக்கப்பட்டிருக்கின்ற நம்மைப் பிரிக்கும் ஆற்றல் சாவினைத்தவிர வேறு எந்தச் சக்திக்கும் இல்லை. உன் நலன்கள் குறித்து அடிக்கடி எழுது. ஆயிரக்கணக்கான முத்தங்கள்’ வாளேந்தி ஆஸ்திரிய வீரர்களை விரட்டிய அதே கரத்தில் எழுதுகோலேந்தி தம் இதயத்தைக் கவர்ந்த எழிலரசிக்கு எழுதிய மடலின் வரிகளே மேலே கண்டவை. அவரது மடலில் உள்ள வாக்கியங்களெல்லாம் ஒன்றோடொன்றிணைந்து சொற்களாயின. சொற்கள் ஒன்றோடொன்று மோதி எழுத்துகளாயின. அதாவது, எவருக்கும் புரியாத வகையில் அவரது மடல் அமைந்திருந்தது. ஜோசபைன் மட்டுமே அந்த மடலைப் புரிந்துகொள்ளும் ஆற்றலைப் பெற்றிருந்தாள்.

இதுவரை நான்கு ஆஸ்திரியப் பெரும்படைகள் நெப்போலியனிடம் தோல்விகண்டு சிதறி ஓடியுள்ளன. இருப்பினும், ஆஸ்திரியப் பேரரசு ஃபிரெஞ்சுக் குடியரசினை அங்கீகரித்து ஏற்று அத்துடன் அமைதி உடன்பாடு செய்துகொள்ள முன்வரவில்லை. ஃபிரான்சுடன் சண்டையைத் தொடர்ந்து நடத்துவதற்கான முயற்சிகளில் ஆஸ்திரியப் பேரரசு தீவிரமாக இறங்கியது. ஐந்தாவது பெரும்படை ஒன்றினைத் திரட்டி எப்படியும் நெப்போலியனை வீழ்த்தி ஃபிரான்சில் மீண்டும் மன்னராட்சியை மலரவைக்க அது உறுதிபூண்டது. ஃபிரெஞ்சுப் புரட்சியால் பாதிக்கப்பட்ட மன்னர்களும் மதகுருக்களும், பிரபுக்களும் பிற உல்லாசபுரியினரும் வழக்கம்போல் தங்கள் ஆதரவை ஆஸ்திரியாவுக்கு நல்க முன்வந்தனர். ரோம், வெனிஸ், நேப்பில்ஸ் ஆகிய அரசுகளும் குடியரசுக் கருத்துகளுக்கெதிராகப் பணியாற்றின. தங்களின் ஆதிக்கத்தினை நிலைநாட்டிக்கொள்ளும் வகையில் வாய்ப்புக்கிட்டின் நெப்போலியனை வீழ்த்த அவை காத்திருந்தன. மக்களாட்சிக் கருத்துகளை விரும்பாத ஐரோப்பியரனைவரும் ஆஸ்திரியர்களுக்கு ஆதரவாக நின்றனர். ஃபிரெஞ்சுப் புரட்சியின் கொடுமைகள் அவர்களது நெஞ்சில் நிழலாடிக்கொண்டிருந்தன. குடியரசு என்ற போர்வையில் வரும் அத்தகைய கொடுமைகளை விரும்பாத அவர்கள் தங்களைத் தற்காத்துக்கொள்ள ஆஸ்திரியாவுடன் சேர்ந்து ஃபிரான்சுக்கு எதிராகப் போரிட முன்வந்தனர். எனவேதான், நான்கு முறை தோற்றோடியபின்னும் ஆஸ்திரியா தோல்வியால் துவண்டு விடாமல் போரைத் தொடர்ந்து நடாத்த முடிவுசெய்தது. ஐந்தாவது பெரும்படையையும் அது திரட்டியது. அப் பெரும்படையை முறியடிக்கும் வகையில் தளபதி போனபார்ட்டும் தக்க போர் ஏற்பாடுகளைச் செய்தார். வெற்றியில் திளைத்துக்கொண்டிருக்கின்ற ஃபிரெஞ்சு வீரர்களின் நாட்டுப்பற்றுமிக்க போர் ஆர்வமும் துணிவும் குடியரசுக் கருத்துகளுக்காகத் தங்கள் குருதியையும் கொட்டத் துடிக்கும் மக்களின் ஆதரவும் அவருக்கு உறுதுணையாக இருந்தன.

ஆனால், வளர்ந்துகொண்டிருக்கின்ற நெப்போலியனின் கீர்த்தியினையும் பெருமையினையும் கண்டு ஃபிரெஞ்சு இயக்குநர்கள் அஞ்சி நடுங்கினர். ஆஸ்திரியப் பேரரசை வீழ்த்திய அதே வாள் கொண்டு நெப்போலியன் தங்களையும் வீழ்த்திடுவார் என்ற அச்சம் அவர்களைக் குடைந்தது. ஆகவே, நெப்போலியனின் போர்ப் புகழைத் தடுத்துநிறுத்த அவர்கள் முடிவுசெய்தனர். அதற்குள்ள ஒரேவழி ஃபிரான்சு, ஆஸ்திரியாவுடன் மேற்கொண்ட போரை முடிவுக்குக் கொண்டுவருவதாகும். எனவே, உடனடியாகப் போரை நிறுத்தி ஆஸ்திரியர்களுடன் உடன்பாட்டுக்கான பேச்சுகளைத் தொடங்கும்படி இயக்குநர்கள் நெப்போலியனுக்கு

செய்தியனுப்பினர். இச் செய்தியினைத் தாங்கி தளபதி கிளார்க் **(General Clarke)** என்பவர் வெரோனு விரைந்தார். நெப்போலியனும் அவரை இனிது வரவேற்று மகிழ்ந்தார். ஆனல், செய்தி தெரிந்தவுடன் நெப்போலியன் சீறி எழுந்தார். 'நீ இங்கு எனது ஆணைக்குக் கட்டுப்பட்டு நடக்க விரும்பினல் நான் உன்னிடம் வழக்கமான அன்பு செலுத்தி மகிழ்வேன்; இல்லையேல், உன்னை இங்கு அனுப்பிய இயக்குநர்களிடம் எவ்வளவு விரைவாகச் செல்ல முடியுமோ அவ்வளவு விரைவாகச் சென்று விடுவது நல்லது' என்று தளபதி கிளார்க்கிடம் கூறினர். அவரும் நெப்போலியனது ஆணையை ஏற்று நடக்க முன்வந்தார். அவரது அருங்குணத்தாலும் அயராத உழைப்பாலும் கவரப்பட்டு விரைவில் அவரது ஆர்வமுள்ள தொண்டராகவும், அவரது புகழ்பாடும் மாணவராகவும் மாறிவிட்டார் தூதராக வந்த தளபதி கிளார்க். 'இத்தாலியில் தலைமைத்தளபதி நெப்போலியன் போரினைத் தொடர்ந்து நடாத்துவது இன்றைய சூழ்நிலையில் தவிர்க்க முடியாததாகும்' என்று அறிக்கையினையும் தளபதி கிளார்க் இயக்குநர்களுக்கு அனுப்பிவைத்தார்.

ஆஸ்திரியத் தலைமைத்தளபதி ஆல்வின்ட்சி, நெப்போலியனை நசுக்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்த நேரத்தில், போப்பும் மறைமுகமாகப் பொது எதிரியை வீழ்த்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தார். நெப்போலியனுடன் செய்துகொண்ட உடன்பாட்டையும் மீறி ஆண்டவனின் புகழ் பாடி, அடுத்த உலகத்தின் பெருமையை எல்லாம் எடுத்துக் கூறி, மக்களை நல்வழிப்படுத்தவந்த போப், ஆயுதம் தாங்கிப் போரிடத் தயாரானர். பகைவனுக்கருள வேண்டிய அவரது நெஞ்சு இப்போது பகைவனைப் பழிவாங்கத் துடித்தது. ஒரு கன்னத்தில் அடித்தவனுக்கு மறு கன்னத்தையும் காட்டவேண்டிய அவர் நெப்போலியன் கன்னத்தில் கட்டாரி கொண்டு தாக்க முன்வந்தார். தூய்மையின் சின்னம், ஆண்டவனின் அருளைப் பெற்ற அவரது நேர்வாரிசு, மக்களின் நல்ல வழிகாட்டி என்றெல்லாம் போற்றப்பட்ட போப், தாம் செய்துகொண்ட உடன்பாட்டையும் மதியாது நெப்போலியனுடன் போரிடத் தயாரானர். எனவே, அவரது செயல் உண்மையிலேயே நம்பிக்கைத் துரோகமானது; ஆண்டவனுக்கே அடுக்காதது. போப்பின் அடாதசெயலை அறிந்த நெப்போலியன், மடத்தில் கடுந்தவத்திலிருந்த மேத்தியை அழைத்து அவரிடம் அனுப்பி நிலைமையை விளக்கினர். 'ரோம் சண்டையை விரும்புகிறது. அதன் விருப்பம்போல் நடக்கட்டும். ஆனல், போப் நிலமையைச் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். என்னுடைய படை மிகவும் வலிமையானது. நான் ஏவினல் போப்பின் ஆதிக்கம் ஒரு நொடியில் மண்ணோடு மண்ணுகி

விடும். இன்னும் அமைதிக்காக நடவடிக்கை எடுத்துக்கொள்ளும் படி ஃபிரெஞ்சு அரசு எனக்கு அனுமதி வழங்கியுள்ளது. போர் மிகவும் கொடுமையானது ; அனைவராலும் வெறுக்கத்தக்கது ; பயங்கர விளைவுகளை உள்ளடக்கியது. ஆகவே, நம்முடைய பிரச்சனைகளுக்கு அமைதியான தீர்வுகாண நான் விழைகின்றேன். இன்றைய நிலையில் போரினால் எனக்கு ஆபத்தோ அல்லது புகழோ ஏற்படப் போவதில்லை' என்று மேத்தியின் மூலம் போப்புக்கு நிலைமையை எடுத்துவிளக்கினார். ஆனால், போப் உண்மை நிலையை உணர்ந்து தெளிந்தவராகச் செயல்படவில்லை. ஆஸ்திரியா எப்படியும் நெப்போலியனை வீழ்த்திவிடும் என்ற நம்பிக்கையில் அவர் அசையாதிருந்தார். ஆகவே, நெப்போலியனின் நிலைவிளக்கம், செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று.

இதற்கிடையில், நெப்போலியனின் வேண்டுகோளுக்கிணங்கி ஜோசபைன் படைமுகாமிற்கு வந்து சேர்ந்தாள். போர் மேகங்கள் சூழ்ந்திருந்தும், அவர் துணிச்சலுடன் தம் கணவனுக்குரிய பணிகளை அவருக்கு அருகிலிருந்து ஆற்றிவந்தார். நான்கு வார கால அமைதி. இரு தரப்பினரும் ஆயத்தங்களில் ஈடுபாடு கொண்டிருந்தனர். எனவே, இந்தக் குறுகிய காலத்தில் நெப்போலியனின் உள்ளம் கவர்ந்த ஜோசபைன் அவருக்கு இன்பமூட்டி வந்தாள். தம்முடைய தளபதிகளெல்லாம் ஆடம்பரத்தில் திளைத்துக்கொண்டிருந்த நேரத்தில் நெப்போலியன் மட்டும் தம் துணைவியுடன் எளிய வாழ்க்கை நடாத்திவந்தார். வசதிகள் பல பெற்றிருந்தும் அவர் தம் குடும்பவாழ்வை வளமாக்கிக்கொள்ள விரும்பவில்லை. ஜோசபைன் தம்முடன் இருந்தகாலத்தில் அவரது படைத்துறைப் பணிகள் கிஞ்சித்தும் தடைப்படவில்லை. தம்முடைய கடுமையான பணிகளுக்கிடையே சிறிது நேரம் அவரது அன்புக்குரிய ஜோசபைனிடம் கொஞ்சிப் பேசுவதை ஓய்வாகக் கருதினார். ஆனால், போர் மேகங்கள் மீண்டும் இத்தாலியப் பகுதியில் சூழ்ந்தன. ஆஸ்திரியப் பெரும்படையொன்று மாண்டுவா நோக்கி விரைந்து வந்துகொண்டிருந்தது. அதனை அறிந்த நெப்போலியன், ஜோசபைனை படைமுகாமிலிருந்து பாதுகாப்பான இடத்திற்கு அனுப்பிவைத்தார். உயிரினும் இனிய ஜோசபைனைப் பிரிந்த நெப்போலியன் முகம் வாடியது ; பிரிவாற்றாமையால் அவர் பெரிதும் வாடினார். இருப்பினும் பகைவர்களைத் தாக்கும் பணியில் தம்மை முழுதும் ஈடுபடுத்தினார்.

1797ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் தொடக்கத்தில் ஆஸ்திரியாவின் ஐந்தாவது பெரும்படை, தளபதி ஆல்வின்ட்சி தலைமையில் மாண்டுவா நோக்கி விரைந்தது. மாண்டுவாக் கோட்டையில் பட்டினியால் வாடி வதங்கிக்கொண்டிருக்கும் உரும்சரும் அவரது வீரர்களும் பசிக்கொடுமையின் கடைக் கட்டத்திற்கே

வந்துவிட்டனர். அவர்களுக்கு விரைவில் விடுதலை கிடைக்காவிடில் அத்தனை பேரும் பட்டினி கிடந்து செத்துமடிவர். இத்தகைய தங்களது இக்கட்டான நிலையை ஓர் ஒற்றன் மூலம் உரும்சர் தளபதி ஆல்வின்ட்சிக்குத் தெரிவித்தார். எனவே, எந்த விலை கொடுத்தேனும் மாண்டுவா முற்றுகையை முறியடித்து ஆஸ்திரிய வீரர்களை விடுவிக்கும் நோக்கத்துடன் ஆல்வின்ட்சி விரைந்து வந்துகொண்டிருந்தார். அதுபோழ்து, டைரோல் **(Tyrol)** பகுதி முழுதும் ஃபிரெஞ்சுக்காரர்கள் வசமிருந்தது. ஆஸ்திரியர்களுக்கு ஆதரவாக டைரோலிய உழவர்கள் ஆயுதம் தாங்கிக் கொரில்லாத் தாக்குதலைத் தொடங்கினல் அவர்களையெல்லாம் ஈவிரக்கமின்றிச் சுட்டுத்தள்ளும்படி நெப்போலியன் ஃபிரெஞ்சுப் படைகளுக்கு உத்தரவிட்டார். அதனை அறிந்த ஆல்வின்ட்சி அவ்வாறு சுட்டுத்தள்ளப்படுகின்ற ஒவ்வொரு உழவனுக்குப் பதிலாக இரண்டு ஃபிரெஞ்சுப் போர்க்கைதிகளைத் தூக்கில் போடுவதாக அறிவித்தார். அதனைக்கேட்ட நெப்போலியன் வெகுண்டெழுந்து, ‘ தூக்கில்போட்டுச் சாகடிக்கப்படுகின்ற ஒவ்வொரு ஃபிரெஞ்சு வீரனின் உயிருக்கும் ஈடாகத் தம் வசமுள்ள ஆஸ்திரிய இராணுவ அதிகாரிகள் ஒவ்வொருவராகச் சாகடிக்கப்படுவர் ; அவ்வாறு சாகடிக்கப்படுகின்றவர்களில் முதல்வராக ஆல்வின்ட்சியின் மருமகனே இடம் பெறுவார் ’ என்று பதிலிறுத்தார். ஆனல், அத்தகைய பயங்கர நிலைகள் ஏற்படாவண்ணம் தடுக்கப்பட்டன. ஆனல், மாண்டுவாக் கோட்டையைச் சுற்றிலும் தம் படைகளை நிறுத்தித் தளபதி நெப்போலியன் ‘ ஆல்வின்ட்சி எப்பக்கம் வந்து புகுந்திடுவார் ; அவர் எத்தனை பட்டாளம் கூட்டிவருவார் ’ என்று கூறி விழிப்புடனிருந்தார்.

ரிவோலிச் சமவெளியில் தளபதி ஜூபெர்ட் **(Joubert)** தலைமையில் ஒரு ஃபிரெஞ்சுப்படை இருந்தது. 1797ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 12ஆம் நாள் ஆல்வின்ட்சியின் படைகள் ரிவோலி வந்தடைந்தன. அப்போது ரிவோலியைக் காத்துவந்த ஃபிரெஞ்சுப்படையை ஆஸ்திரியப்படை சுற்றி வளைத்துத் தாக்க முற்பட்டது. இச் செய்தி உடனடியாக மாண்டுவாவிலிருந்த நெப்போலியனுக்கு எட்டியது. மேலும், இன்னெரு ஆஸ்திரியப் படையும் வேறொரு திக்கில் மாண்டுவாவை நோக்கி வந்துகொண்டிருக்கிறது என்ற செய்தியும் அவருக்குக் கிடைத்தது. எனவே, நெப்போலியன் மீண்டும் நெருக்கடிக்குள்ளானர். இரண்டு ஆஸ்திரியப்படைகளும் இணைந்து மாண்டுவாவைத் தாக்குவதற்கு முன் அவைகளைத் தனித்தனியே சந்தித்து வீழ்த்த வேண்டுமென்ற திட்டத்துடன் நெப்போலியன் முப்பதாயிரம் வீரர்களுடன் ரிவோலி நோக்கி விரைந்தார். அடுத்தநாள் காலை இரண்டு மணிக்குப் பனிநிறைந்த ரிவோலியின் உயரமான பகுதிகளை

அடைந்தார். அன்றிரவு நல்ல நிலவொளி. எனவே, அவருக்குக் கீழுள்ள சமவெளியில் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த ஆஸ்திரியப்படைகளை நன்கு மதிப்பிட அவரால் முடிந்தது. ஒவ்வொரு பிரிவிலும் பத்தாயிரம் வீரர்கள் அடங்கிய ஐந்து பிரிவுகள் அங்கு முகாமிட்டிருப்பதை அவர் எளிதில் அறிந்தார். அன்றியும், அப்படைக்கு ஆதரவாக இன்னும் ஆஸ்திரியப் பீரங்கிப்படை வந்து சேரவில்லை என்பதையும் தெரிந்துகொண்டார். எனவே, ஆஸ்திரியப் படைகளைத் தாக்குவதற்கு உடனே தயாரானார்.

அன்று அதிகாலை நெப்போலியனின் பீரங்கிகள் முழங்கின. ரிவோலிச் சண்டை தொடங்கியது. அரைத்தூக்கத்திலிருந்த ஆஸ்திரிய வீரர்களைப் பாய்ந்துசென்று தாக்கினர் ஃபிரெஞ்சு வீரர்கள். நீண்ட நேரம் சண்டை தொடர்ந்தது. எங்கும் இரத்த ஆறு ஓடியது. வீரர்கள் செத்து வீழ்ந்துகொண்டிருந்தனர். வெற்றி அலை மேலும் கீழும் ஆடிக்கொண்டிருந்தது. ஃபிரெஞ்சுப் படைகள் பல நெருக்கடிக்குள்ளாயின. சமவெளி முழுதும் செத்தவர்களும், செத்துக்கொண்டிருந்தவர்களும் பரந்துகிடந்தனர். நெப்போலியனின் மூன்று குதிரைகள் அவர் முன்னாலேயே சுடப்பட்டு இறந்தன. விரைவில் ஆஸ்திரியப் படைகள் நெப்போலியனையும் அவரது படைகளையும் சுற்றிவளைத்துக்கொண்டன. பின்வாங்கிச்செல்ல இயலாதபடி ஆஸ்திரியப் படைகள் முன்னும் பின்னும், பக்கவாட்டிலும் பாய்ந்து சென்று ஃபிரெஞ்சுப் படைகளைத் தாக்கின. தோல்வியை நெருங்கிக்கொண்டிருந்த நெப்போலியன் இப்போது ஒரு தந்திரத்தைக் கையாண்டார். காலத்தைக் கடத்தி, புத்துணர்வும், புதிய உதவியும் பெற்று ஆஸ்திரியர்களைத் தாக்கும் எண்ணத்தில், நெப்போலியன் அடிக்கடி ஆல்வின்ட்சியை நோக்கி சமாதானக் கொடியை வீசினார். ஆல்வின்ட்சியும் நெப்போலியன் விரித்த வலையில் வீழ்ந்து விட்டார். ஃபிரெஞ்சுத் தளபதி ஜூனாட் (Junot) ஆல்வின்ட்சியிடம் சென்று உடன்பாட்டிற்கான நிபந்தனைகள்பற்றி விவாதிப்பதில் ஒரு மணி நேரம் கடத்தினார். இதற்குள்ளாக, தளபதி நெப்போலியன் தம் படைகளைத் திருத்தி அமைத்து மீண்டும் தீவிரத் தாக்குதலுக்கு ஏற்றவகையில் அணிவகுத்து நின்றார். எதிர்பார்த்தபடி உடன்பாட்டுப் பேச்சுகள் முறிந்து தாக்குதல் மீண்டும் தொடங்கியது. நெப்போலியனது படைகள் புதிய தெம்புடன் தாக்கின. எங்கும் பீரங்கி முழக்கம் ; வண்டிகளின் இரைச்சல்; இவற்றிற்கிடையே அழுகுரல். எங்கும் ஒரே குழப்பமாக இருந்தது. குழம்பிய நிலையில் ஆஸ்திரியப்படைகள் அலறியடித்துக்கொண்டு ஓட ஆரம்பித்தன. ரிவோலிக் களத்தில் மீண்டும் நெப்போலியன் வென்றார். ரிவோலிச் சண்டை நெப்போலியன் மேற்கொண்ட மிகவும் பயங்கரமான

சண்டைகளில் ஒன்று ; அங்கு நெப்போலியன் பெற்ற வெற்றியும் குறிப்பிடத்தக்க ஒன்ருகும்.

ஒரு சிறு படையை ரிவோலியில் விட்டுவிட்டு நெப்போலியன் தம் படைகளுடன் அன்று இரவே மாண்டுவா நோக்கி விரைந்தார். ஆஸ்திரியத் தளபதி புரோவெரா (Provera) தலைமையில் இருபதாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் மாண்டுவா நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர். அப் படையினை வீழ்த்தி மாண்டுவாவை முற்றுகையிட்டுக் கொண்டிருந்த ஃபிரெஞ்சுப் படையைக் காப்பாற்றும் பொருட்டு உடனுக்குடனே நெப்போலியன் விரைந்தார். அவரது படை ஏற்கெனவே முந்திய இரவுமுழுதும் நடந்துவந்து அடுத்த நாள் முழுதும் சண்டையில் ஈடுபட்டுக் களைத்திருந்தது. ஆகவே, தம்முடைய படைகளுக்கு அன்றிரவு தூங்குவதற்குக் கொஞ்சம் நேரம் ஒதுக்கினுர். ஆனுல், தளபதி மட்டும் தூங்காது விழிப்புடனிருந்தார். சிறிது நேர ஓய்வுக்குப்பின், மீண்டும் தம் படைகளை நகர்த்தினுர். அடுத்த நாள் முழுதும் படைகளை விரைவாக அழைத்துக்கொண்டுவந்து அன்று மாலை மாண்டுவாவை நெருங்கினுர். அப்போது, அங்கு போர்முழக்கம் கேட்டது. மாண்டுவாவிலிருந்து ஃபிரெஞ்சுப்படையை புரோவெரா தலைமையிலுள்ள ஆஸ்திரியப்படை ஒரு பக்கமாகத் தாக்கிக்கொண்டிருந்தது. கோட்டைக்குள் அரைப்பட்டினியிலிருந்த உரும்சரும் அவரது வீரர்களும் வெளியில் வந்து வேருெரு பக்கத்தில் ஃபிரெஞ்சுப் படையைத் தாக்கினர். இந் நிலையில் நெப்போலியன் ஓநாய்க் கூட்டத்தில் புலி பாய்ந்ததைப்போல திடீரென்று பாய்ந்து ஆஸ்திரியப்படைகளைத் தாக்கினுர். ஆஸ்திரியப்படைகளும் ஃபிரெஞ்சுத் தாக்குதால் சிதறி ஓடின. உரும்சரும் அவரது அரைப் பட்டினி வீரர்களும் மீண்டும் கோட்டைக்குள் சென்று கைதிகள் போலாயினர்.

இவ்வாறு, ரிவோலியில் தொடங்கி மாண்டுவாவில் முடிந்த மூன்று நாள் சண்டையில் இருபத்தையாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டனர் ; இருபத்தைந்து பதாகைகள் கைப்பற்றப் பட்டன ; அறுபது பீரங்கிகள் ஃபிரெஞ்சுப்படை வசமாயின. ஆருயிரம் வீரர்களுக்கு மேல் செத்து மடிந்தனர். ஆஸ்திரியாவின் ஐந்தாவது பெரும்படையும் அழித்தொழிக்கப்பட்டது. இத்தாலியும் எவ்வித சேதமுமின்றி ஃபிரெஞ்சுப் பிடியில் நீடித்தது. நெப்போலியனின் போர்த்துறைச் சாதனைகளை உலகம் ஆச்சரியத்துடன் நோக்கியது. இதுவரை வரலாற்று ஏடுகளில் இடம்பெருத மகத்தான சாதனைகள் அவை என்று அனைவரும் நெப்போலியனைப் பாராட்டினர்.

இந் நிலையில் மாண்டுவாக் கோட்டைக்குள்ளிருந்த உரும்சர் வேறு உதவி எதுவுமின்றி நம்பிக்கை இழந்தார், அவரிடமிருந்த

குதிரைகள் அனைத்தும் கொல்லப்பட்டு வீரர்களின் உணவாயின. இன்னும் மூன்று தினங்களுக்கு மட்டும் அரைவயிற்றுக்குத் தேவையான உணவு இருந்தது. ஆகவே, உரும்சர் வேறுவழியின்றி நெப்போலியனுடன் உடன்பாடு செய்துகொள்ள முன்வந்தார். நெப்போலியனும் அவரது இன்னலை உணர்ந்து அவரது உணர்ச்சிகளுக்கு மதிப்பளித்து உடன்பாட்டிற்கு இணங்கினர். உரும்சரும் அவரது வீரர்களும் மதிப்புடன் கோட்டையைவிட்டு வெளியேறினர். உரும்சரை அன்புடன் வரவேற்று அளவளாவி அவருடன் மகிழ்ந்திருந்து நெப்போலியன் அவரை வழியனுப்பிவைத்தார். அன்றியும், அவருக்கு நெப்போலியன் இருநூறு குதிரைகளையும், ஐநூறு வீரர்களையும், ஆறு பீரங்கிகளையும் வழங்கி அச்சமின்றி ஆஸ்திரியா சென்றடையும்படி அனுப்பிவைத்தார். உரும்சரும் நெப்போலியனது பெருந்தன்மையைக் கண்டு வியந்து அவரைப் பாராட்டி நன்றிகூறி 'போப்பின் ஆட்கள் தங்களை நஞ்சிட்டுக் கொல்லச் சதிசெய்கின்றனர்; எனவே, கவனமாக இருங்கள்' என்ற எச்சரிக்கையையும் விடுத்துப் பிரியாவிடை பெற்றுச் சென்றார். எஞ்சிய இருபதாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் நெப்போலியனின் போர்க்கைதிகளாயினர். பதினைந்து பதாகைகளும் ஐநூறு பீரங்கிகளும் பிற போர்க்கருவிகளும் நெப்போலியன் வசமாயின. மாண்டுவாக் கோட்டையில் அன்றே மூவர்ணக்கொடி பட்டொளி வீசிப் பறந்தது.

அடியோடு ஆஸ்திரியர்கள் இத்தாலிய மண்ணிலிருந்து விரட்டப்பட்டனர். முப்பதாயிரம் வீரர்களுடன் தமது இத்தாலியப் போரைத் தொடர்ந்தார் நெப்போலியன். இடையில் இருபத்தைந்தாயிரம் வீரர்களைத் தம் படையில் சேர்த்தார். ஆக, ஐம்பத்தையாயிரம் வீரர்களைக்கொண்டு பத்தே மாதங்களில் இத்தாலி முழுதும் வென்று புதிய சாதனையை நெப்போலியன் நிலைநாட்டினார். இக் காலத்தில் அவர் சிறந்த புகழ்பெற்ற தளபதிகளின் தலைமையில் இயங்கிய ஐந்து பெரிய ஆஸ்திரியப் படைகளை வென்றுள்ளார். நன்கு போர்ப்பயிற்சி பெற்றுக் கட்டுப்பாட்டுடன் விளங்கிய இருநூறாயிரம் ஆஸ்திரிய வீரர்களை வென்ற பெருமை அவரைச்சாரும். நூறாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டனர்; முப்பத்தைந்தாயிரம் வீரர்களுக்குமேல் கொல்லப்பட்டனர். அத்தகைய சாதனைகள் மகத்தானவை; நெப்போலியனின் பெருமையை அவை அகிலமெல்லாம் எடுத்துச்சென்று நிலைநாட்டின.

அடுத்து, நெப்போலியன் தம் கவனத்தை ரோம்மீது திருப்பினார். போப் நாற்பதாயிரம் வீரர்களுடன் நெப்போலியனைத் தாக்கத் தயாரானார். நெப்போலியன் போப்பைப் பணியவைக்க

முற்பட்டார். ரோம்நோக்கிப் படைமேற்கொண்டு செல்லுமுன் நெப்போலியன் கீழ்க்கண்ட அறிவிப்பை வெளியிட்டார் : ‘ போப்பின் நாடுகளுக்குள் ஃபிரெஞ்சுப்படை நுழையும் தருவாயிலுள்ளது. அது சமயத்தையும் மக்களையும் காப்பாற்றும். வெற்றியின் உத்தரவாதமான துப்பாக்கி முனைஈட்டியை ஒரு கரத்திலும், அமைதியின் சின்னமும், பாதுகாப்பின் அடையாளச்சின்னமுமான ஆலிவ் கிளையை அடுத்த கரத்திலும் தாங்கி ஃபிரெஞ்சுப் படைவீரன் வந்துகொண்டிருக்கின்றான். இந்தப் படையினை எதிர்ப்பவர்கள் துன்பத்திற்குள்ளாவார்கள். ஒவ்வொரு நகரத்திலும் சிற்றூரிலுமுள்ள மக்களுக்கு அமைதியும், பாதுகாப்பும், ஆதரவும் அளிக்கப்படும்.’ இந்த அறிவிப்பினைக் கேட்டமாத்திரத்தில் போப்பின் திருச்சபை குமுறி எழுந்தது. சமயத்தின் மாண்பைக் கொடுக்கவரும் ஃபிரெஞ்சு வீரர்களை வீழ்த்தும்படி மக்களுக்கு வேண்டுகோள் விடப்பட்டது. மக்களைத் தங்கள் பக்கம் கவர்ந்திழுப்பதற்கான மாயவேலைகளும் மேற்கொள்ளப்பட்டன. எதிரிகளை நாசமாக்கும்பொருட்டு ஒவ்வொரு கோவிலிலும் நாற்பதுமணிநேர ஜெபமும் நடைபெற்றது. இவ்வாறு, போப்பின் நாடுகள் நெப்போலியனை எதிர்க்கத் துணிந்த நேரத்தில் ஃபிப்ரவரித் திங்கள் பத்தாம் நாள் அவர் எண்ணாயிரத்து ஐநூறு வீரர்களுடன் ரோம்நோக்கிப் புறப்பட்டார். வழியில் சீனியோ (Senio) நதிக்கரையில் கார்டினல் புஸ்கா (Busca) தலைமையில் ஏழாயிரம் வீரர்கள் நெப்போலியனை எதிர்க்கக் காத்திருந்தனர். அங்கு நடந்த மோதலில் போப்பின் படை வீரர்கள் பலத்த தாக்குதலுக்குள்ளாகிச் சிதறி ஓடினர். ஓடியவர்களை ஃபிரெஞ்சு வீரர்கள் விரட்டிப் பிடித்து சிறைக்கைதிகளாக்கினர். போப் படையில் இறந்தவர்போக எஞ்சிய அனைவரும் சிறைபிடிக்கப்பட்டனர். அடுத்து, நெப்போலியன் தம் படை வீரர்களுடன் அன்றே ஃபெயென்சா (Faenuza) நகரை வந்தடைந்தார். அந் நகரின் வாயிற்கதவுகள் மூடப்பட்டிருந்தன. வெளியில் ஃபிரெஞ்சு வீரர்களைத் தாக்க போப்பின் வீரர்கள் காத்திருந்தனர். விரைவில் இருதரப்பினரும் போரில் குதித்தனர் ஃபிரெஞ்சு வீரர்கள் அவர்களை விரைவில் வீழ்த்தி வாயிற்கதவுகளை உடைத்து நகருக்குள் நுழைந்து அதனைச் சூறையாட முனைந்தனர். ஆனால், நெப்போலியன் ஃபிரெஞ்சு வீரர்களைத் தடுத்து நிறுத்தி, நகரைக் காப்பாற்றினார். போப்பால் திசைதிருப்பப்பட்ட அந் நகர மக்களை அன்பால் கவர அவர் முற்பட்டார். சீனியோக் களத்திலும் ஃபெயென்சாவிலும் சிறைபிடிக்கப்பட்ட வீரர்கள் அனைவரையும் அங்குள்ள ஒரு பெண் துறவியர் மடத்திலுள்ள பெருந்தோட்டத்தில் கொண்டுவந்து நிறுத்தும்படி பணித்தார். கடவுளை நம்பாதவர், கொடுமைக்காரர், பழி

பாவங்களுக்கு அஞ்சாதவர் என்றெல்லாம் நெப்போலியன் அவர்களுக்கு அறிமுகப்படுத்தப்பட்டிருந்தார். ஆகவே, அவர்களனை வரையும் ஒட்டுமொத்தமாகச் சுட்டுக் கொல்லவே இங்கு கொண்டு வந்து குவித்திருக்கிறார்கள் என்று எண்ணி கைதிகள் அனைவரும் கலங்கிக்கொண்டிருந்தனர். அப்போது, நெப்போலியன் அவர்கள் முன் தோன்றினார். உடனே, அங்கு குழுமியிருந்த கைதிகளனை வரும் முழந்தாளிட்டு நெப்போலியனை வணங்கி உயிருக்காக மன்றாடினர். அக் காட்சியினைக் கண்ட நெப்போலியன் மிகவும் வருந்தி அவர்களை எழுந்திருக்கும்படி கூறி அடியிற்கண்ட நெஞ்சை உருக்கும் உரையை ஆற்றினார்: 'அருமை நண்பர்களே! இத்தாலிய மக்களனைவரின் நண்பன் நான். உங்களுடைய நலன் கருதியே நான் இங்கு வந்துள்ளேன். உங்களனைவருக்கும் இன்று விடுதலை. நீங்கள் மகிழ்ச்சியுடன் உங்களுடைய இல்லங்களுக்குத் திரும்பலாம். சமயம், அது சம்பந்தப்பட்ட அமைப்புகள் ஆகிய வற்றினை அழித்தொழிக்க வந்தவர்களல்ல நாங்கள்; ஏழைகள், நசுக்கப்பட்ட மக்கள் ஆகியோரின் நண்பர்கள் ஃபிரெஞ்சுக்காரர்கள் என்ற இனிப்பான செய்தியை உங்களது குடும்பத்திலுள்ள அனைவருக்கும் எடுத்துக்கூறுங்கள்.' இத்தாலியமொழியில் நெப்போலியன் ஆற்றிய இவ்வுரையைக் கேட்ட கைதிகள் நன்றிப் பெருக்கால் கண்களைக் குளமாக்கினர். தளபதியின் சீரிய பண்பால் அவர்கள் பிணைக்கப்பட்டனர். போனபார்ட்டின் புகழ் பாடும் தொண்டர்களாக அவர்கள் தங்களை மாற்றிக்கொண்டனர். தாங்கள் சென்ற இடமெல்லாம் தளபதியின் கருத்துகளைப் பரப்பினர். நெப்போலியனைத் தங்களின் இதயச் சிம்மாசனத்தில் ஏற்றிப் போற்றினர்.

அடுத்து, நெப்போலியன் ஏட்ரியாட்டிக் கரையிலுள்ள (Atriatic) அங்கோனு (Ancona) நகர் வந்தடைந்தார். அங்கு போப்பின் ஒரு படை அவரை எதிர்க்கக் காத்திருந்தது. அப் படைக்கு எவ்விதச் சேதமும் விளைவிக்காமல் நெப்போலியன் அதனைச் சுற்றி வளைத்து உருக்கமானதொரு உரையை ஆற்றினார். வழக்கம்போல் அவரது உரை அப் படைவீரர்களின் உள்ளங்களில் ஊடுருவிச் சென்று அவர்களை உணர்ச்சி வசப்படுத்தியது. அவரது உரை கேட்டு அவ் வீரர்கள் உடனே நெப்போலியனின் ஆதரவாளர்களாயினர். ஃபிரெஞ்சுக் குடியரசின் சீரிய நோக்கங்களையும், தளபதியின் அரிய பண்புகளையும் பரப்பும் ஆர்வம்மிக்கத் தொண்டர்களாக அவர்கள் மாற்றப்பட்டனர். இத்தாலி முழுதும் சென்று குடியரசுக் கருத்துகளைப் பரப்பும் தூயபணியில் அவர்கள் தங்களை ஈடுபடுத்திக்கொண்டனர். அங்கோனு வீரர்களின் இதயங்களையெல்லாம் வென்ற நெப்போலியன் அந் நகரத்தின் துறை

முகத்தினைக் கண்டார். அது மிகவும் புறக்கணிக்கப்பட்ட நிலையில் சிறிய கப்பல்கூடத் தங்க வழியின்றி இருப்பதை அறிந்த தளபதி அத் துறையைப் புதுப்பிக்கும் படியும் ஆணை பிறப்பித்தார். அதன் பயனாக அங்கோனாத் துறை அகன்ற பெருங்கப்பல்கள் செல்லக்கூடிய சிறந்த துறைமுகமாக மாற்றப்பட்டது. அங் கோனாவிலிருந்த யூதர்களும் மிகவும் கொடுமைக்குள்ளாக்கப் பட்டு வருந்திக்கொண்டிருந்தனர். அதனையறிந்த நெப்போலி யன் அவர்களது தடைகள் அனைத்தையும் நீக்கி அவர்களுக்குப் புதுவாழ்வு அளித்தார். அன்றியும், ஃபிரான்சிலிருந்து தப்பிவந்து போப் நாடுகளில் அடைக்கலம் புகுந்த சமயக்குருக்கள் (Priests) குறைகளையும் நெப்போலியன் களைந்தார். அவர்களையெல்லாம் உடனடியாக நாட்டைவிட்டுத் துரத்தும்படி இயக்குநர்கள் நெப் போலியனுக்கு ஆணை பிறப்பித்தனர். ஆனால், நெப்போலியன் 'வெந்துகொண்டிருக்கின்ற அவர்கள்மீது வேல்பாய்ச்ச' விரும் பாது அவர்களை அன்புடன் நடாத்தினார். இத்தாலியக் குருக் களின் கொடுமையிலிருந்து அவர்களைப் பாதுகாத்தார். ஒவ் வொரு மடமும் ஃபிரெஞ்சுக் குருமார்களுக்கு வேண்டிய வசதி களனைத்தையும் செய்துகொடுக்கவேண்டும் என்று அவர் மடங் களுக்கு ஆணை பிறப்பித்தார். ஃபிரெஞ்சுக் குருமார்களிடத்தில் அன்புடனும் பிரிவுடனும் நடந்துகொள்ளும்படி தமது வீரர்களை யும் கேட்டுக்கொண்டார். ஃபிரெஞ்சு வீரர்களும் தங்களின் பழைய குருமார்களை அடையாளங் கண்டு அவர்களுடன் அள வளாவினர். தங்கள் நலனில் தணியாத நாட்டங்கொண்ட தளபதியை ஃபிரெஞ்சுக் குருக்கள் நெஞ்சார வாழ்த்தினர். இந் நிலையில் லொரெட்டே (Loretto) என்ற இடத்திலிருந்த மேரி யின் சிலையொன்று கண்ணீர் வடிக்கின்றது என்ற செய்தி நெப் போலியனுக்கு எட்டியது. போப் நாடுகளுக்கு நாத்திகர்களால் ஏற்பட்ட அவல நிலைகுறித்து வருந்தி அவ்வம்மையார் அழுவதா கக் குருக்கள் கதை கட்டிவிட்டனர். ஒன்றும் அறியாத அப்பா விக் கத்தோலிக்கர்களை தமக்கெதிராகத் திருப்பிவிடும் சதி என் பதை உணர்ந்த நெப்போலியன் உடனே அச் சிலையை வரவழைத் துக் 'கண்ணீர் சதியை' அம்பலப்படுத்தினார். மதகுருக்களால் உருவாக்கப்பட்ட அக் கண்ணீரை விரைவில் மக்கள்முன் வைத் தார். கண்ணாடி ஜெபமாலை ஒன்றின் இணைப்பால் கண்ணீர் போல் தோன்றும் ஏற்பாட்டைச் செய்து மக்களை ஏமாற்ற நினைத்த மதகுருமார்களின் குட்டு வெளிப்பட்டது. அதனை அறிந்த மக்கள் சதிகாரச் சமயக்குருக்களைச் சாடினர்; நெப்போலியனை வாழ்த்தினர்.

அடுத்து, நெப்போலியன் ரோம்நகர் நோக்கித் தமது படை யுடன் புறப்பட்டார். இன்னும் மூன்று தினங்களில் அவர் அந்

நகரை அடைந்து விடுவார். ஃபிரெஞ்சுப்படை ரோம்நோக்கி வந்துகொண்டிருக்கிறது என்பதை அறிந்த ரோம் நகர மக்கள் பெருங் குழப்பத்திற்குள்ளாயினர். ஃபிரெஞ்சுப் படைகளும் விரைந்து வந்து டொலெண்டினே (Tolentino) என்ற இடத்தில் முகாமிட்டன. அதனை அறிந்த போப் ஆறும் பயஸ் (Pope Pius the Sixth) தப்பியோடும் பொருட்டுத் தம் அறையிலிருந்து கீழே படிக்கட்டுகள் வழியாக வந்துகொண்டிருந்தார். அப்போது, திடீரென்று நெப்போலியனின் தூதனொருவன் போப்பின் முன் தோன்றி, 'ஐயா, நீங்கள் தப்பி ஓடவேண்டாம்; உங்களுக்கு எவ்வித ஆபத்தும் எங்களால் வராது; எங்கள் தளபதி எப்போதும் அமைதியையே விரும்புகின்றார்' என்று இதமாக எடுத்தியம்பினார். போப்பும் அமைதி உடன்பாட்டிற்கு இசைந்தார். அவருக்குரிய மதிப்பும் மரியாதையும் வழங்கப்பட்டன. உலகியல், ஆன்மவியல் சார்ந்த இளவரசர் என்ற வகையில் அவர் பெருந்தன்மையுடன் நடத்தப்பெற்றார். ஃபிப்ரவரித் திங்கள் 19ஆம் நாள் டொலெண்டினே உடன்பாடு நிறைவேறியது. அதன்படி, போப் ஃபிரான்சுடன் அமைதியுடன் உறவுகொள்ள இசைந்தார். சிஸ்பாடேன் (Cispadane) குடியரசை அங்கீகரித்தார்; இதற்கு முன் செய்துகொண்ட உடன்பாடுகளின்படி நடப்பதாக உறுதி கூறினார். தம்மிடத்தில் கருணையுடனும், மனிதாபிமானத்துடனும் நடந்து கொண்ட தளபதி நெப்போலியனுக்கு நன்றிசெலுத்த முயன்ற போப் தம் கண்களைக் குளமாக்கிக்கொண்டார். நெப்போலியனை நெஞ்சார வாழ்த்தினார்.

போப்பைப் பணியவைத்தபின் நெப்போலியன் மீண்டும் ஆஸ்திரியர்கள்மீது தம் பார்வையைச் செலுத்தினார். மாண்டுவாக் கோட்டை வீழ்ந்துவிட்டது; ஆஸ்திரியர்களனைவரும் இத்தாலியைவிட்டு விரட்டப்பட்டனர்; போப்பும் பணிந்தார். இருப்பினும் ஆஸ்திரியப் பேரரசு ஃபிரெஞ்சுக் குடியரசுடன் உடன்பாடு செய்துகொள்ள விரும்பாது இறுமாப்புடன் இருந்தது. அன்றியும், இன்னொரு பெரும் படையைத் திரட்டி ஃபிரான்சுடன் மீண்டும் போரிடத் துடித்தது. எனவே, நெப்போலியன் நேரடியாக ஆஸ்திரியாவின் தலைநகரான வியன்னு (Vienna) மீது பாய்ந்து ஆஸ்திரியர்களைப் பணியவைக்க உறுதிகொண்டார். ஆஸ்திரியாவை வென்று அதனை ஃபிரான்சுடன் இணைப்பது அவரது நோக்கமல்ல; ஆனால், ஆஸ்திரியாவை ஃபிரான்சுடன் அமைதி உடன்பாட்டிற்குக் கொண்டு வரவேண்டும் என்பதே அவரது ஆவல். வேறு வழியின்றி இந்த துணிச்சலான முடிவிற்கு நெப்போலியன் வந்தார். அதற்கான ஏற்பாடுகளில் தீவிரமாக இறங்கினார். முதலாவதாக வெனிஸ் அரசின் நடுநிலைமையை உறுதிப்

படுத்தினர். அது நடுநிலை தவறி ஃபிரெஞ்சுக்காரர்களுக்குத் தீங்கு செய்ய நினைத்தால் வெனிஸ்மீது பாய்ந்து அதனை வென்று ஃபிரான்சுடன் இணைத்துவிடுவதாக நெப்போலியன் எச்சரித்தார். அடுத்து, மாண்டுவாவில் கவிஞர் வர்ஜில் (Virgil) நினைவாக விழா ஒன்று நடாத்தி இத்தாலியர்களின் உள்ளங்களையெல்லாம் குளிர வைத்தார். வர்ஜில் மாண்டுவாவில் பிறந்தவர்; எனவே, அவரது விழாவினை அங்கு நடாத்துவது மிகவும் பொருத்தமுடையதாகும். தங்களுடைய முன்னோர்களின் அறிவுச் சிறப்புகளுக்கு மதிப்பளிக்கும் வகையில் விழாவெடுத்து அவர்களைப் போற்றும் நெப்போலியனின் கவிதையுள்ளத்தை இத்தாலியர்கள் பெரிதும் பாராட்டினர். மேலும், தளபதி சேருரியர் (Serurier) தலைமையில் பத்தாயிரம் வீரர்களடங்கிய ஒருபடை மாண்டுவாவில் நிறுத்திவைக்கப் பட்டது. இத்தாலிய அரசுகளின் நடுநிலையைக் கண்காணிப்பது இப் படையின் முக்கிய கடமையாகும்.

இத்தகைய ஏற்பாடுகளைச் செய்துமுடித்த நெப்போலியன் மார்ச் திங்கள் முதல் வாரத்தில் தம்முடைய படைத்தலைமை முகாமை பஸானோவிற்கு (Bassano) மாற்றினர். அங்கு தம்முடைய வீரர்களுக்கு உற்சாக மூட்டும் வகையில் கீழ்க்கண்ட படைத்துறை அறிவிப்பினை வெளியிட்டார்: ' அருமைத் தோழர்களே! இதுவரை நாம் மேற்கொண்ட போர் ஏற்பாடு நமக்கு அளவற்ற, அழிக்கமுடியாத கீர்த்தியினைத் தேடித் தந்துள்ளது. இதுவரை நாம் பதினன்கு நெருங்கிய நேரடிச் சண்டைகளிலும் (Pitched battles) எழுபது போர்வினைகளிலும் வெற்றி பெற்றுள்ளோம். நூறாயிரம் கைதிகளையும் ஐநூறு பீரங்கிகளையும் இரண்டாயிரம் கனரகத் துப்பாக்கிகளையும், நான்கு தோணிப் பாலங்களையும் நாம் எதிரிகளிடமிருந்து பெற்றுள்ளோம். அன்றியும், ஆறு மில்லியன் டாலர்களை பாரிஸ் கருவூலத்திற்கு அனுப்பியுள்ளோம். இத்தாலியின் கலை வேலைப்பாடுடன்கூடிய முந்நூறு உருவப்படங்கள் பாரிஸ் பொருட்காட்சியை அலங்கரிக்க அனுப்பப் பட்டுள்ளன. ஐரோப்பாவின் அழகிய நாடுகள் பலவற்றை நாம் வென்றுள்ளோம். வீர அலெக்சாண்டரின் தாயகமான மாசிடோனியாவின் எதிரே, ஏட்ரியாட்டிக் கடற்பகுதியில் நம்முடைய மூவர்ணக் கொடி முதல்முறையாகப் பட்டொளி வீசிப் பறக்கின்றது. இன்னும் அதிகமான புகழாரங்கள் உங்கள் மார்புகளில் தவழக் காத்திருக்கின்றன. ஃபிரெஞ்சுக் குடியரசை முளையிலேயே கிள்ளி யெறியச் சதிசெய்த எதிரிகளில் எஞ்சி இறுமாப்புடன் இருப்பவர் ஆஸ்திரியப் பேரரசரே. அமைதியைத் தேடிச் செல்லுகின்ற நாம் அதனை ஆஸ்திரியப் பேரரசின் இதயமான வியன்னவில் அடைய இருக்கின்றோம். அங்குள்ள மக்கள் மிகவும் வீரமுள்ளவர்கள்;

அவர்களது சமயத்திற்கும் பழக்கவழக்கங்களுக்கும் நீங்கள் மதிப்பளிக்க வேண்டும்; அவர்களது சொத்துகளை நீங்கள் தூய்மையானவைகளாகக் கருதவேண்டும். நீங்கள் தூய்மையான விடுதலைக் கருத்துகளைத் தாங்கித் துணிவுள்ள ஆஸ்திரிய நாட்டிற்குச் செல்கிறீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.'

போனபார்ட்டின் போர் ஏற்பாட்டினை அறிந்த ஆஸ்திரியப் பேரரசு அதற்கு ஈடுகொடுக்கும் வகையில் போர் ஏற்பாடுகளைச் செய்தது. இளவரசர் சார்லஸ் ஆஸ்திரியப் படைகளின் தலைமைத்தளபதி ஆக்கப்பட்டார். 'தங்கமான இதயம் படைத்த' சார்லசின் தலைமையில் ஐம்பதினாயிரம் ஆஸ்திரிய வீரர்கள் பியாவி (Piave) நதிக்கரையில் முகாமிட்டிருந்தனர். அவர்களது உதவிக்காக மேலும் நாற்பதாயிரம் வீரர்கள் பேரரசின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்துகொண்டிருந்தனர். ஆக, தொண்ணூறாயிரம் வீரர்களுடன் நெப்போலியனை வீழ்த்த ஆஸ்திரியாவின் ஆறாவது பெரும்படை பணிக்கப்பட்டது. நெப்போலியன் ஐம்பதாயிரம் வீரர்களுடன் ஆஸ்திரியாவின்மீது பாயத் தயாரானார். இவ்விரண்டு படைகளையும் நோக்கியே ஐரோப்பிய நாடுகளனைத்தும் ஆவலுடன் தங்கள் பார்வையைச் செலுத்தின. பனிக்கட்டிகள் நிறைந்த கடுமையான குளிர்காலத்தில் தம் படைகளுடன் நெப்போலியன் வரமாட்டார் என்ற எண்ணத்தில் பியாவி நதிக்கரையில் ஆஸ்திரியத் துருப்புகள் மெத்தனமாக இருந்தனர். ஆனால், அவர்களுக்கு அச்சமும் திகிலும் ஏற்படும் வகையில் ஃபிரெஞ்சுப்படையினர் பியாவி வந்து அவர்கள்முன் நின்றனர். ஃபிரெஞ்சுப் படையினைக் கண்ட ஆஸ்திரியப் படை அங்கிருந்து பின்வாங்கி, நாற்பது கல் தொலைவிலுள்ள டேக்ளிமெண்டோ நதிக்கரையை அடைந்தது. நெப்போலியன் அவர்களைத் தொடர்ந்து சென்று, மார்ச் திங்கள் 10ஆம் நாள் காலை டேக்ளிமெண்டோ (Taglimento) நதிக்கரை வந்தடைந்தார். அங்கு விரைந்து செல்லுகின்ற நதியின் அடுத்த கரையில் ஆஸ்திரியப் பெரும்படை அணிவகுத்து நின்றது. ஃபிரெஞ்சு வீரர்கள் ஆற்றைக் கடக்கவியலாதபடி அதன் மேற்பகுதி முழுதும் எட்டித்தாக்கும் வண்ணம் முக்கிய இலக்குகளில் நதிக்கரை முழுதும் பீரங்கிகள் வைக்கப்பட்டிருந்தன. அடுத்துள்ள சமவெளியில் ஆஸ்திரியக் காலாட்படையினர் துடிக்கும் துப்பாக்கிகளுடன் தாக்குதலுக்குத் தயாராக நின்றனர். அவர்களுக்குப் பக்கவாட்டில் குதிரைப்படையினர் அணிவகுத்து நின்றனர். இத்தகைய பிரமாண்டமான அணிவகுப்பினையும் அலை அலையாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த படையினையும் கண்ட நெப்போலியன், கடும் பனியிலும் சகதியிலும் சிக்கிக் களைப்புடன் வந்த தம் படையை ஓய்வு எடுக்கும்படி கட்டளையிட்டார். அதன்படி

ஃபிரெஞ்சுத் துருப்புகள் தங்கள் ஆயுதங்களையெல்லாம் ஒதுக்கி வைத்து விட்டு உல்லாசமாகப் பொழுதுபோக்கினர். அதனைக் கண்ட தளபதி சார்லஸ் தம் படைகளின் அணிவகுப்பைக் குலைத்து தன் படைவீரர்களுக்கும் ஓய்வு கொடுத்தார். இவ்வாறு, இருதரப்பிலும் சிறிது நேரம் அமைதி நிலவியது. ஆனால், திடீரென்று ஃபிரெஞ்சுப்படை வீரர்கள் அணிவகுத்து முன்னேறத் தயாராயினர். அயர்ந்திருந்த ஆஸ்திரிய வீரர்கள் மீண்டும் அணிவகுத்து நிற்பதற்குள் ஃபிரெஞ்சுப் படைவீரர்களில் பாதிப்பேர் ஆற்றைக் கடந்து அக்கரை சேர்ந்தனர். விரைவான படைப்பெயர்ச்சிக்குப் பெயர்போன ஃபிரெஞ்சுப்படை முழுதும் ஆற்றைக் கடந்து ஆஸ்திரிய வீரர்களை புயல்போல் பாய்ந்து தாக்கின. குழம்பிய ஆஸ்திரிய வீரர்கள் பலத்த தாக்குதலுக்குள்ளாயினர். பல வீரர்கள் மாண்டனர் ; எங்கும் இரத்தம் பெருக்கெடுத்தோடியது. தோல்வியைத் தொட்டணைத்துக் கொண்ட ஆஸ்திரியப் படை உதவியை எதிர்பார்த்துப் பின்வாங்கியது. இவ்வாறு, ஆஸ்திரியப் பெரும்படை திடீரென்று எதிர்பாராதவகையில் தோற்கடிக்கப் பட்டது. வெற்றி பெற்ற ஃபிரெஞ்சுப் படையினரும் விடுதலைப் பண் பாடி ஆஸ்திரியப் படைகளை விரட்டிச்சென்றனர். ஒவ்வொரு கோட்டையிலும், கணவாயிலும், நதியிலும் அவர்களது முன்னேற்றத்தைத் தடுப்பதற்கான தடைகள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றையெல்லாம் உடைத்தெறிந்து வீரநடை போட்டார் நெப்போலியன் தமது புகழ்பெற்ற விடுதலைப் படைகளுடன். பின்வாங்கிச்சென்ற ஆஸ்திரியப் படைகளும் அவைகளைத் தொடர்ந்து சென்ற ஃபிரெஞ்சுப் படைகளும் விரைவில் கார்னிக் ஆல்ப்ஸ் (Carnic Alps) மலையின் உச்சியை அடைந்தன. அங்கிருந்து கடுங்குளிரிலும் பனிப்பாறைகளுக்கிடையிலும் பாய்ந்து ஓடிய ஆஸ்திரியப் படைகளை விரட்டிக் கொண்டே ஃபிரெஞ்சுப் படைகளும் சென்றன. இறுதியில், இரண்டு படைகளும் டார்விஸ் மலை (Mount Tarwis) யின் உச்சியை அடைந்தன. அங்கு இரு படைகளுக்குமிடையே ஒரு பயங்கர மோதல் ஏற்பட்டது. பனிப்பாறை களுக்கிடையே வீரர்கள் பலர் செத்து வீழ்ந்தனர். வழக்கம்போல் இங்கும் ஆஸ்திரியப் படைகள் தோல்வியைத் தழுவிக் கொண்டன. ஆஸ்திரிய வீரர்கள் மலைகளுக்கிடையே ஓடி மறைந்தனர். தம் படைவீரர்கள் பலரை இழந்த தளபதி சார்லசும் எஞ்சிய வீரர்களுடன் விரைந்து பின்வாங்கினர். அவரைத் தொடர்ந்து தாக்கிக்கொண்டே ஃபிரெஞ்சுப் படைகளும் சென்றன. விரைவில் ஆல்ப்ஸ் மலைகளைத் தாண்டி இரு படையினரும் ஆஸ்திரியச் சமவெளிக்குள் நுழைந்தனர். அங்கு பேசிய புதிய மொழியையும் காட்சிகளையும், வீடுகளையும் மக்களின் பழக்க வழ ங்களையும் கண்ட ஃபிரெஞ்சு வீரர்கள் தாங்கள் இத்தாலி

யைத் தாண்டிப் புதிய பூமியான ஆஸ்திரியாவில் வந்திறங்கியதாக அறிந்தனர்; அளவிலா ஆனந்தங்கொண்டனர். புதிய தெம்புடன் வெற்றிக்களிப்பில் வியந்து வியன்னு நோக்கிச் செல்லமுற்பட்டனர். ஆனுல், இருபது நாட்களுக்குமுன் பெரும்படையுடன் கிளம்பிய தளபதி சார்லஸ் தம் படை கொஞ்சங்கொஞ்சமாகத் தேய்ந்து இறுதியில் வியன்னுநோக்கி விரைந்தோடும் நிலைக்குத் தள்ளப் பட்டார். வெற்றி அலைகளில் மிதந்துவந்த நெப்போலியன் நாற்பத்தையாயிரம் வீரர்களுடன் வளைந்தோடும் வற்ருத நதிகளை யெல்லாம் தாண்டி படைமேற்கொண்டு சென்றுகொண்டிருந் தார்.

இந் நிலையில் எப்போதும் அமைதி விரும்புகின்ற தளபதி நெப்போலியன் ஆஸ்திரியத் தளபதி சார்லசுக்கு உருக்கமான தொரு மடலை அனுப்பினுர். 'தலைமைத்தளபதி அவர்களே! நாம் மேற்கொண்ட போர் ஆறு வருடங்களாகத் தொடர்ந்து நடக்கின்றதன்ருே? எண்ணிறந்த மக்கள் கொல்லப்பட்டன ரன்ருே? மனித இனத்திற்கு நாம் இழைத்த தீங்குகள் போதா தோ? இனியாகிலும் அவர்களைக் காத்தல் கூடாதோ? ஃபிரெஞ் சுக் குடியரசுக்கெதிராகக் கிளம்பியவர்களெல்லாம் தங்கள் ஆயு தங்களைக் கீழே போட்டுவிட்டு ஓய்ந்துவிட்டனர். ஆனுல், உங் களுடைய அரசுமட்டும் இன்னும் பகைமை பாராட்டிப் போரினைத் தொடர்ந்து நடாத்துகின்றது. இனி நடக்கவிருக்கும் சண்டை களிலும் பல ஆயிரக்கணக்கான வீரர்கள் இரு தரப்பிலும் செத்து மடிவது திண்ணம். அத்தகைய சண்டைகளில் ஈடுபட்டு வெற்றி பெறுவதைக் காட்டிலும் அமைதி உடன்பாடு செய்துகொண்டு எண்ணிறந்த மக்களின் உயிர்களைக் காத்தல் சாலச் சிறந்ததன்ருே?' என்ற உருக்கமான வரிகள் அம் மடலில் இடம் பெற்றன. ஆனுல், ஆஸ்திரியத் தளபதி அம் மடலுக்குச் செவிசாய்க்காது போரினைத் தொடர்ந்து நடாத்த உறுதிகொண்டார். எனவே, நெப்போலி யனும் வேறுவழியின்றி வியன்னு நகர் சென்று விரும்பிய அமைதி யைப் பெறத் தீர்மானித்தார்.

ஆகவே, நெப்போலியன் மீண்டும் தம் படைகளுடன் விரைந் தார். ஒவ்வொரு மலை இடுக்கு வழியிலும் பாய்ந்து செல்லு கின்ற நதிக்கரையிலும் நிறுத்திவைக்கப்பட்டிருந்த ஆஸ்திரிய வீரர்கள் கொல்லப்பட்டனர். இறுதியில், இருதரப்பினரும் ஸ்டிபி யன் ஆல்ப்ஸ் (**Stipian Alps**) மலையை வந்தடைந்தனர். அங்குள்ள நியூமார்க்கெட் (**Neumarket**) என்பது ஒரு இடுக்கு வழி. அங்கு தமது படைகளை நிறுத்தித் தளபதி சார்லஸ் துரத்தி வரும் ஃபிரெஞ்சுப் படைகளைத் தடுத்துத் தாக்கமுற்பட்டார். ஆனுல், அங்கு நடந்தபோரிலும் எண்ணிறந்த ஆஸ்திரிய வீரர்கள் கொல்

லப்பட்டனர். இடுக்கு வழியில் இரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. மலை இடுக்கெல்லாம் பிணங்கள் சிதறிக்கிடந்தன. இறுதியில், ஆஸ்திரியப் படையினர் உலர்ந்த சருகு போலாயினர். தளபதி சார்லஸ் எஞ்சிய வீரர்களுடன் வியன்னுநோக்கி விரைந்தார். நெப்போலியனும் தொடர்ந்து வந்து லியோபென் நகரை அடைந்தார். அங்கிருந்து வியன்னுமீது பாய அவர் தயாரானுர். பிரிந்துவரும் தம் படைகளனைத்தையும் ஒன்ருக்கும் பொருட்டு அங்கு அவர் ஒருநாள் தங்கினுர். ஒன்றுபட்ட ஃபிரெஞ்சு வீரர்களும் லியோபென் நகரில் தங்கி ஓய்வு எடுத்தனர்.

நெப்போலியன் வியன்னுவுக்கருகிலுள்ள லியோபென் நகர் வந்தடைந்த செய்தி தலைநகருக்குள் எட்டியது. வியன்னு மக்கள் பெருங்குழப்பத்திற்குள்ளாயினர். அரசும் தலைநகரைக் காப்பதற்கான தற்காப்பு ஏற்பாடுகளைத் தீவிரப்படுத்தியது. மன்னரும் கோமகன்களும் பிரபுக்களும் பிற அரசகுடும்பத்தினரும் வேட்டை நாய்களைக் கண்டு மிரண்டோடும் புள்ளிமான்களைப்போல, நகரைவிட்டுத் தப்பியோடினர். டான்யூப் நதி முழுதும் படகுகள் நிறைந்து மக்களையும் சொத்துகளையும் கடத்திச்செல்லும் பணியில் மும்முரமாயிருந்தன. அன்று அவ்வாறு டான்யூப் நதியினைக் கடந்து ஓடியவர்களில் ஆறு வயதுச் சிறுமியான மரியலூயிசா (Marie Louise) குறிப்பிடத்தக்கவள். இவளே பிற்காலத்தில் நெப்போலியனை மணந்து பேரரசியாக விளங்கினுள். படைகள் அனைத்தும் வியன்னுவில் குவிக்கப்பட்டன. தற்காப்பு ஏற்பாடுகள் பலப்படுத்தப்பட்டன. அணிவகுப்புகள் மேற்பார்வையிடப் பட்டன. கோட்டை கொத்தளங்கள், தடுப்புச் சுவர்கள் ஆகியவை பழுதுபார்க்கப்பட்டன. இதற்கிடையில், தளபதி சார்லஸ் தளபதி நெப்போலியனுடன் ஒருநாள் போர்நிறுத்த உடன்பாடு செய்து கொண்டு தற்காப்பு ஏற்பாடுகளில் மூழ்கியிருந்தார். வலியக் கிடைத்த நேரத்தை வகையாகப் பயன்படுத்தி நெப்போலியனும் வலிமையான தாக்குதலுக்கான ஏற்பாடுகளில் இறங்கினுர். அன்றியும், ஆஸ்திரிய மக்களுக்குத் தமது உருக்கமான வேண்டுகோளையும் விடுத்தார். 'ஆஸ்திரியப் பெருங்குடி மக்களே! நான் உங்களுடைய உற்ற நண்பன் என்பதை உறுதியுடன் கூறுகின்றேன்; நான் இப் புகழ்மிக்க நகர்மீது படைமேற்கொண்டு வந்திருப்பது நகரை வீழ்த்தி அதனை ஃபிரான்சுடன் இணைப்பதற்காக அல்ல. மாருக, ஆஸ்திரியாவில் அமைதியை நிலைநாட்டி மக்களனைவரையும் கொடியவர் பிடியிலிருந்து விடுவித்து வாழவைப்பதற்காகவே. பிரிட்டனின் தங்கக்கட்டிகளை இலஞ்சமாகப் பெற்று ஆஸ்திரிய அரசு ஃபிரெஞ்சுக்காரர்களுக்கெதிராக அநியாயமான வலுச்சண்டையில் இறங்கியுள்ளது. ஆஸ்

திரிய மக்களின் உரிமைகளுக்கும் பழக்கவழக்கங்களுக்கும் சமயத் திற்கும் ஊறு நேராவண்ணம் நான் அவர்களைப் பாதுகாப்பேன் என்றும் உறுதி கூறுகின்றேன். எனவே, எவ்விதத் தயக்கமுமின்றி என்னை நம்புங்கள்.' நெஞ்சை நெகிழவைக்கும் இவ்வறிவிப்பினைக் கேட்ட ஆஸ்திரிய மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தனர். நெப்போலியன் கூறியதைப் போலவே அவரது செயலும் அமைந் தது. ஃபிரெஞ்சு வீரர்கள் தங்களிடம் சிறைப்பட்டிருந்த ஆஸ் திரிய வீரர்களிடம் அன்புடன் பழகினர். அவர்களுக்குத் தேவை யான வசதிகளனைத்தையும் செய்துகொடுத்தனர். இவற்றை யெல்லாம் அறிந்த வியன்னு மக்கள் ஃபிரான்சுடன் அமைதி உடன்பாடு காணும்படி அரசை வற்புறுத்தினர். தளபதி சார்ல சும் இனி போரின்மூலம் நாட்டைக் காத்தல் இயலாது என்பதை உணர்ந்து அதனைத் தம் அண்ணனை ஆஸ்திரியப் பேரரசரிடம் எடுத்து விளக்கி அமைதிஉடன்பாட்டிற்கான அனுமதியைப் பெற் ருர். உடனே, உடன்பாட்டிற்கான பேச்சுகளைத் தொடரும் வகையில் ஆஸ்திரிய அவையிலிருந்து தூதர்கள் அனுப்பப்பட்டனர். அவர்கள் தளபதி நெப்போலியனிடம் சென்று உடன்பாட்டிற் கான பணிகளுக்கு ஊறு நேராவண்ணம் ஐந்து நாள் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்துகொண்டனர்.

லியோபன் அருகிலுள்ள ஓர் அழகிய தோட்டத்தில் உடன் பாட்டுப் பேச்சுகள் தொடங்கின. ஆஸ்திரியப் பேரரசர் ஃபிரெஞ் சுக் குடியரசை அங்கீகரித்தார் என்பதை உடன்பாட்டின் முதல் வாசகமாகச் சேர்க்கும்படி ஆஸ்திரிய ஆணையாளர்கள் முன் மொழிந்தனர். 'அதனை அடித்து விடுங்கள்' என்று இடைமறித் தார் நெப்போலியன். 'ஃபிரெஞ்சுக் குடியரசு உதய சூரியனைப் போன்றது; குருடர்களைத்தவிர மற்றனைவரும் அதனைக் கண்டு களித்தேயாகவேண்டும். எங்கள் நாட்டிற்கு மக்களாகிய நாங்களே ஆண்டைகள்; எங்கள் விருப்பம் போல் நாங்கள் எந்த அரசையும் எங்கள் நாட்டில் நிலை நாட்டுவோம் ஒருநாள். ஃபிரெஞ்சு மக்கள் முடியரசினை விரும்பி நிலை நாட்டினுல், குடியரசை அங்கீ கரித்த பேரரசர் அதனை அங்கீகரிக்க மறுத்துவிடக்கூடும்' என்று நெப்போலியன் கூறியதைக் கேட்டு அனைவரும் ஆச்சரியத்தில் மூழ்கினர். விரைவில் உடன்பாட்டின் முன்னேற்பாடுகள் (Preliminaries) முடிந்தன. வருங்கால ஃபிரெஞ்சுப் பேரரசரான நெப்போலியன் ஆஸ்திரியப் பேரரசருடன் சமமாக அமர்ந்து உடன்பாட்டில் கையெழுத்திட்டார். ஆஸ்திரியப் பேரரசரும் கை யொப்ப மிட்டார். இந்த ஆரம்ப உடன்பாடு 1797ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் கையெழுத்தாயிற்று.

இவ்வாறு, ஆஸ்திரியாவின் இதயமான வியன்னுவில் அமைதியை வென்றுபெற்ற நெப்போலியன் அடுத்துத் தம் படைகளுடன் வெனிஸ் நோக்கி விரைந்தார். 'நெப்போலியன் தோற்கடிக்கப்பட்டு ஆஸ்திரியாவில் சிறைவைக்கப்பட்டுள்ளார்; அவரது படைகள் சிதறடிக்கப்பட்டன' என்ற வதந்திகளை நம்பி நடுநிலை நாடான வெனிஸ் ஃபிரெஞ்சுக் குடியரசுக்கெதிராகப் போரில் குதித்தது. ஆயுதமற்ற ஃபிரெஞ்சுக்காரர்கள் பலர் தாக்கப்பட்டனர். ஆங்காங்கே நிறுத்திவைக்கப்பட்டிருந்த ஃபிரெஞ்சுப் படைகள் தாக்குதலுக்குள்ளாயின. மருத்துவமனைகளில் சேர்க்கப்பட்டுச் செத்துக்கொண்டிருந்த ஃபிரெஞ்சுக்காரர்களையும் தாக்கிக் கொன்று குவித்தனர் வெனிஸ் படையினர். இத்தகைய கொடுஞ்செயல்களைக் கேட்ட நெப்போலியன் குமுறி, விரைந்தார் தம் படைகளுடன் வெனிஸ் நோக்கி. ஆல்ப்ஸ் மலைகளையும் அடுத்துள்ள ஆறுகளையும் அதிவிரைவில் தாண்டி அவர் வெனிஸ் வந்தடைந்தார். நெப்போலியனின் வருகையை யறிந்த வெனிஸ் அரசு அவருடன் உடன்பாடு செய்துகொள்ள முன்வந்தது. பல இலட்சக்கணக்கான டாலர்கள் பெறுமானமுள்ள தங்கக்கட்டிகளை நெப்போலியன்முன் வைத்து வெனிஸ் தூதர்கள் மன்னிப்புக்காக மன்ருடினர். ஆனுல், தங்கத்தைக்கொண்டு இழந்த ஃபிரெஞ்சு உயிர்களை ஈடுசெய்ய இயலாது என்று கூறி நெப்போலியன் உடன்பாட்டிற்கு வரமறுத்துவிட்டார். ஆகவே, வெனிஸ் அரசு அஞ்சி நடுங்கி ஃபிரெஞ்சு அரசுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டது. ஏராளமான பணத்தைப் பாரிசுக்குக் கொடுத்ததுடன் இயக்குநர்களுக்கும் முடிந்தளவு இலஞ்சம் கொடுத்து உடன்பாட்டை விலைக்கு வாங்கியது. இயக்குநர்களும் பழமைமிக்க வெனிஸ் அரசை விட்டுவைக்கும்படி நெப்போலியனுக்கு ஆணை பிறப்பித்தனர். ஆனுல், இயக்குநர்களின் ஆணையைத் துச்சமெனக் கருதித் தூக்கியெறிந்துவிட்டு நெப்போலியன் வெனிஸ் பகுதியில் படைகளுடன் நுழைந்தார். நெப்போலியனின் பீரங்கிகள் முழங்கின. உடனே, வெனிஸ் அரசு சட்டமன்றத்தைக் கூட்டி நெப்போலியனிடம் சரணடைவதற்கான ஏற்பாடுகளைச் செய்தது. இதற்கிடையே, ஃபிரெஞ்சு வீரர்கள் தங்கள் துப்பாக்கிகளைச் சட்டமன்றத்தின் சன்னல்கள் வழியாக நீட்டி அவர்களை மேலும் நடுங்க வைத்தனர். அன்றியும், ஃபிரெஞ்சு வீரர்கள் நகரைச் சூழ்ந்துள்ள நீர்த்தேக்கங்களைக் கடந்து நகருக்குள் நுழைந்தனர். குடியரசில் நாட்டங்கொண்ட வெனிஸ் நகரமக்கள் அவர்களை மகிழ்ச்சி ஆரவாரத்துடன் வரவேற்றனர். வேறு வழியின்றி வெனிஸ் நிபந்தனையின்றி நெப்போலியனிடம் சரணடைந்தது. உலகத்தின் மிகக்கொடிய கொடுங்கோன்மை இப்போது நெப்போலியன் காலடியில் வீழ்ந்தது. நெப்போலியன் உடனடியாக வெனிஸ்

சிறைகளைத் திறந்துவிட்டு அனைவருக்கும் விடுதலை வழங்கினர். குற்றவாளிகளனைவரும் மன்னிக்கப்பட்டனர். உயர் குடி ஆட்சி (Aristocracy) ஒழிக்கப்பட்டது ; அங்கு மக்களாட்சி மலர்ந்தது. பல்வேறுபட்ட மக்களுக்கும் அரசியலில் பிரதிநிதித்துவம் அளிக்கப் பட்டது. பொதுநிதி தூய்மையானதாகக் கருதப்பட்டது. ஏழைப் பிரபுக்களுக்கு உதவித்தொகைகள் தொடர்ந்து வழங்கப்பட்டன. வெனிஸ் அரண்மனையில் புதிய குடியரசுக் கொடிகள் பறந்தன. இவ்வாறு, ஆயிரத்தைநூறு ஆண்டுகளுக்கு மேலாகப் புகழ்பெற்று விளங்கிய வெனிசிய உயர்குடி ஆட்சி ஒழிந்தது ; குடியாட்சி நிலைநாட்டப்பட்டது ; மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தனர். வெனிசிய உயர் குடி ஆட்சி மாய்ந்ததை அறிந்த வேர்ட்ஸ்வொர்த் (Wordsworth) கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார் : ' ஒரு காலத் தில் பகட்டான கிழக்கத்திய நாடுகளனைத்தையும் வெனிஸ் தன்னு டைய முழுச்சொத்துரிமையாகப் பெற்றிருந்தது ; மேற்கத்திய நாடுகளின் பாதுகாப்பாளனாக விளங்கியது ; தன்னுடைய குடிப் பெருமை குலையும் வகையில் அதன் மதிப்பு மங்கி மறையவில்லை ; விடுதலை (Liberty) யின் மூத்த மகவு வெனிஸ்.

இவ்வாறு, இத்தாலி முழுதும் நெப்போலியன் பிடியில் சிக்கி யது. ஊர் பெயர் அறியாத இருபத்தாறு வயதிளைஞன் முப்ப தாயிரம் அரைப்பட்டினி வீரர்களுடன் நடுநிலக்கடலின் கரை களின் வழியாக ஊர்ந்து வந்து இன்னும் ஓராண்டுகூட முற்றுப் பெறவில்லை. அதற்குள்ளாக இத்தாலி முழுதும் அவருக்குப் பணிந்தது ; ஃபிரெஞ்சுக் குடியரசை மதியாத நாடுகளெல்லாம் அதனை மதிக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டன ; இதுவரை எவருக் கும் பணியாத ஆஸ்திரியப் பேரரசர் நெப்போலியனுக்கு பணிந் தார். இத்தாலிய மக்கள் உலகப் புகழ்பெற்ற நெப்போலியன் தங்கள் நாட்டவன் (இத்தாலியன்) என்பதை அறிந்து அளவிலா ஆனந்தங்கொண்டனர். தங்களை விடுவிக்க வந்த ' விடுதலைச் சிற்பி ' என்று அவரைப் போற்றிப்புகழ்ந்தனர். அவரது செல் வாக்கு எங்கும் சிறகடித்துப் பறந்தது. அவர் தோன்றிய இடங் களிளெல்லாம் மக்களின் வாழ்த்தொலி முழக்கங்கள் வானைப் பிளந்தன. ஒவ்வொரு மலைக்குன்றிலும் அவரது வருகை குறித்து விழாத் தீப்பந்தங்கள் சுடர்விட்டெரிந்தன. அவர் சென்ற இட மெல்லாம் வரவேற்பு மணிகள் ஒலித்தன ; அழகிய மகளிர் அவர்செல்லும் வழிகளில் அணிவகுத்து நின்று அவரை மலர்தூவி வரவேற்றனர். இராணுவ அணிவகுப்பு மரியாதைகளும் அவர் சென்ற இடங்களிலெல்லாம் இடம் பெற்றன. ஐரோப்பா முழுதும் அமைதி நிலவியது ; அத்தகைய அமைதியை வழங் கியவர் நெப்போலியனே. அவ்வமைதியை அவர் அரிய விலை

கொடுத்து வாங்கினர். அதனருமை உணர்ந்து, எதிரிகள் ஒய்ந்த இந்த நல்ல வேளையில் நெப்போலியனும் தமது வெற்றிவாளினை உறையில் போட்டு உறங்கவைத்தார். அடுத்து, கொதித்தெழுந்த ஜினேவாவின் கொதிப்பை யடக்கி அமைதியை நிலைநாட்டி அங்கு மக்களாட்சியை மலரவைத்தார். வெலெண்டைன் (Valentine) என்ற சிறிய நாட்டை சிசல்பைன் குடியரசுடன் இணைத்தார்.

இவ்வாறு, இத்தாலியை வென்ற நெப்போலியன் மிலான் நகருக்கருகிலுள்ள மாண்டிலெல்லா என்ற இடத்தில் ஓர் அழகிய அரண்மனையில் தம் இருப்பிடத்தை அமைத்துக்கொண்டு தம் இதயம் கவர்ந்த எழிலரசி ஜோசபைன் அருகிலிருக்க இன்பமுடன் வாழ்ந்துவந்தார். ஜோசபைனைச் சுற்றிலும் எப்போதும் அழகிய அணங்குகள் பலர் சூழ்ந்திருந்து அவருடன் அளவளாவினர். நெப்போலியன் இருப்பிடம் ஒரு பேரரசனின் அரண்மனையைப் போல அவையுடன் விளங்கியது. அத்தகைய அரண்மனையிலிருந்து இத்தாலியை மேலும் சீர்திருத்தும் பணிகளை அவர் மேற்கொண்டார். ஆஸ்திரியப் பேரரசுடன் செய்துகொள்ளவேண்டிய இறுதி உடன்பாடு, இத்தாலியக் குடியரசினை உருவாக்குதல், ஏட்ரியாடிக் பகுதியில் ஒரு கடற்படை அமைத்தல், நடுநிலக் கடற்பகுதியில் வளங்கொழிக்கும் திட்டங்களை உருவாக்குதல் ஆகியவை அவர் முன்னுள்ள முக்கிய பணிகளாகும். கால்வாய்கள் வெட்டுதல், சாலைகள் அமைத்தல், துறைமுகங்களைச் சீர்படுத்துதல், பாலங்களை அமைத்தல், கடற்படை, நிலப்படை சம்பந்தப்பட்ட தளவாடங்களை அமைத்தல், பெருந்தொழிற்சாலைகளை உருவாக்குதல் ஆகிய பணிகள் உடனடியாக மேற்கொள்ளப்பட்டன.

இத்தாலிய நாடுகள் பல போட்டியும் பொறாமையும் கொண்டு ஒன்றுடன் ஒன்று மோதிக்கொள்ளத் தலைப்பட்டன. எனவே, இத்தாலிய நாடுகளனைத்தையும் இணைத்து ஒரே குடியரசாக உருவாக்கி மிலானை அதன் தலைநகராக்க நெப்போலியன் விரும்பினர். அன்றியும், சுற்றிலுமுள்ள வலிமைமிக்க குடியரசுகளின் தாக்குதலிலிருந்து இத்தாலியக் குடியரசைக் காக்கும் பொருட்டு அதனை ஃபிரான்சுடன் இணைக்கவும் அவர் விரும்பினர். அதற்கேற்ற வகையில் பாரிசிலிருந்து ஜெனிவாவரை இலம்பார்டி, மிலான் வழியாக அகன்றதொரு நெடுஞ்சாலையை அமைத்தற்கான முயற்சியும் மேற்கொள்ளப்பட்டது. சுவிட்சர்லாந்து வழியாக வரும் அச் சாலைக்கு அனுமதி வழங்கும்படி அந் நாட்டு அரசுடன் தொடர்பு கொள்ளப்பட்டது. சாலை அமைப்பதற்கான இடங்களைத் தேர்ந்தெடுத்துத் திட்டம் தயாரிக்கும் வகையில் பொறியியல் வல்லுநர்கள் அனுப்பப்பட்டனர். மேலும்,

இங்கிலாந்தின் கடல் வலிமையைக் கண்டு ஆத்திரப்பட்ட நெப் போலியன் நடுநிலக்கடலில் ஃபிரெஞ்சு ஆதிக்கத்தை நிலைநாட்டி இங்கிலாந்தை முறியடிக்க முயன்றார். அதற்கேற்றவாறு ஆங் காங்கே இராணுவ இலக்குகள் அமைக்கப்பட்டன. 'இத்தகைய இலக்குகளிலிருந்து நாம் நடுநிலக்கடலில் ஆதிக்கத்தை நிலைநாட்ட லாம்; உருமாறிச் சிதறிக்கிடக்கின்ற உதுமானியப் (Ottoman) பேரரசின் மீது ஒரு கண் வைக்கலாம். அதனைப் பயன்படுத்திப் பெருங்கடலை ஆங்கிலேயருக்குப் பயன்படாதபடி செய்யலாம். இப்போது, அவர்கள் வசமுள்ள நன்னம்பிக்கை முனையை நாம் பிடித்துவிடலாம். நாம் எகிப்து நாட்டையும் வசப்படுத்திக் கொள்ளலாம். அங்கிருந்து நாம் இந்தியாவுக்கு நேராகச் செல்ல வியலும். அங்கு உலகத்தின் நேர்த்தியான குடியேற்றங்களில் ஒன்றினை நாம் உருவாக்குவது எளிதாகும். இங்கிலாந்தைத் தாக்கி வீழ்த்துவதற்கு ஏற்ற களம் எகிப்தே' என்று நெப்போலி யன் இயக்குநர்களுக்கு எழுதியனுப்பினார்.

இத்தகைய திட்டங்களுடன் நெப்போலியன் மிலானில் தங்கிப் பணியாற்றிக்கொண்டிருந்த நேரத்தில் ஆஸ்திரியப் பேரரசுடன் ஏற்பட்ட உடன்பாட்டுப் பேச்சுகளில் முட்டுக்கட்டைகள் ஏற் பட்டன. டேலிக்மெண்டோவுக்குக் கிழக்கே பத்துக்கல் தொலைவி லுள்ள கேம்போ ஃபோர்மியோ (Campo Formio) என்ற சிற்றூ ரில் இறுதிக்கட்ட பேச்சுகள் தொடர்ந்தன. ஒரு நீளவட்டமான மேசையின் ஒரு புறத்தில் ஆஸ்திரிய அதிகாரிகளும், நெப்போலி யன் மறுபுறமும் அமர்ந்திருந்தனர். நெப்போலியன் ஏற்றுக் கொள்ளாத வகையில் ஆஸ்திரியர்களின் நிபந்தனைகள் இருந்தன. அவைகளை அவர் ஏற்றுக்கொள்ளாவிட்டால், இரஷ்யப் படை களின் துணைகொண்டு ஃபிரெஞ்சுக் குடியரசை வீழ்த்துவதாகவும் அவர்கள் அச்சுறுத்தினர். அதுவரை அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த நெப்போலியன் எழுந்து அருகிலிருந்த அழகிய பீங்கான் குடுவையை எடுத்துக் கையிலே வைத்துக்கொண்டு, 'பெரியோர்களே! உடன்பாடு முறிந்தது; போர் தொடரும்; இப் பீங்கான் குடுவையைப் போல மூன்று திங்களில் நான் உங்கள் முடியரசை உடைத்து நொறுக்குவேன் என்பதை நினைவிற்கொள் ளுங்கள்' என்று கூறி கையிலிருந்த குடுவையை ஓங்கித் தரை யிலடித்தார். அங்கிருந்தவர்களிடம் இருபத்தி நான்கு மணி நேரத் தில் மீண்டும் சண்டை தொடரும் என்று எச்சரித்து விரைவாகத் தம்மிருப்பிடம் வந்தடைந்தார். அதனைக்கண்டு கலங்கிய ஆஸ் திரியர்கள் உடனடியாக உடன்பாட்டிற்கு ஒத்துக்கொண்டனர். நெப்போலியன் விரும்பியபடி குடியரசுக்கொள்கைகளுக்காக சிறை யில் வாடிய லாஃபாயெட் (La Fayette) விடுதலை செய்யப்பட்

டார். 1797ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 17ஆம் நாள் கேம்போ ஃபோர்மியோ உடன்பாடு கையெழுத்தாயிற்று. இவ்வுடன்பாட்டின்படி ஆஸ்திரியர்களின் நெதர்லாந்தான பெல்ஜியம் ஃபிரான்சுக்குக் கொடுக்கப்பட்டது. ஃபிரான்சின் எல்லைகள் இரைன் நதிவரை விரிவுபடுத்தப்பட்டன. இத்தாலியில் நெப்போலியனுல் உருவாக்கப்பட்ட இசால்பைன் குடியரசும் லைகுரியன் (Liqurian) குடியரசும் ஆஸ்திரியாவால் அங்கீகரிக்கப்பட்டன. வெனிசுக்குச் சொந்தமான ஐயோனியன் தீவுகள் ஃபிரான்சுக்குக் கொடுக்கப்பட்டன. இஸ்டிரியா (Istria), டால்மேசியா (Dalmatia), கேட்டரோ (Cattaro) மாவட்டங்கள், வெனிஸ் நகரம், கார்டா ஏரி வரையிலுள்ள முக்கிய நிலப்பகுதி, அடிஜி (Adige), போ நதியின் கீழ்ப்பகுதி ஆகியவை ஆஸ்திரியாவுக்குக் கொடுக்கப்பட்டன.

கேம்போ ஃபோர்மியோ உடன்பாடு வரலாற்றுச் சிறப்பு மிக்கவொன்ருகும். பதினுன்காம் லூயி சாதிக்கவியலாததை நெப்போலியன் சாதித்தார். ஃபிரான்சு இவ்வுடன்பாட்டின்படி தன் இயல்பான எல்லைகளைப் பெற்றது. ஐயோனியன் தீவுகள் இப்போது ஃபிரான்சு வசமாயின. அதன் பயனுக எகிப்தில் ஃபிரெஞ்சு ஆதிக்கம் ஏற்பட வழிபிறந்தது. அவை எகிப்திற்குச் செல்லுவதற்கு உதவும் படிக்கட்டுகளாக அமைந்தன. ஐரோப்பிய முடியரசுகளின் முதல் கூட்டிணைவுக்கு (First coalition) இவ்வுடன்பாடு சாவுமணி அடித்தது. இப்போது, ஃபிரான்சுக்கு இங்கிலாந்தைத் தவிர வேறு எதிரிகள் எவருமில்லை; இங்கிலாந்துடன் கூட்டுச்சேர ஐரோப்பாவில் எந்த நாடும் முன்வரவில்லை. ஃபிரான்சை எதிர்த்துத் தனித்துநின்றே இங்கிலாந்து போராட வேண்டியதாயிற்று. ஆனுல், வெனிசிய நாடுகளைக் கூறுபோட்டுப் பெரும்பகுதியை ஆஸ்திரியாவிடம் ஒப்படைத்ததை வெனிசிய மக்கள் வன்மையாகக் கண்டித்தனர். குடியரசில் நாட்டங் கொண்ட அவர்கள் இவ்வேற்பாட்டைக் கண்டு வெகுண்டெழுந்தனர். இத்தாலியை விடுவித்து அதனைக் குடியரசுப் பூங்காவாக மாற்றுவதாக வாக்களித்த நெப்போலியன், ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக விடுதலையின் ஒளிவிளக்காகத் திகழ்ந்த வெனிசை ஆஸ்திரிய மன்னராட்சியின் பிடியில் சிக்கவைத்ததைக் கண்ட வெனிசிய விடுதலை விரும்பிகள் மனம் வெதும்பினர். ஆகவே, அவர்கள் எவ் விலை கொடுத்தேனும் வெனிசியக் குடியரசைக் காண உறுதிபூண்டனர். உடனே மூன்று வெனிசியத் தூதர்கள் ஏராளமான பணத்துடன் பாரிஸ் விரைந்தனர். இயக்குநர்களுக்கு ஏராளமான பணத்தை இலஞ்சமாகக் கொடுத்து வெனிசியக் குடியரசை விலைகொடுத்து வாங்க அவர்கள் அனுப்பப்பட்டனர். ஆனுல், அவர்களது இரகசிய ஏற்பாடு ஒற்றர்கள் மூலம் நெப்

போலியனுக்குத் தெரிவிக்கப்பட்டது. உடனே, மூன்று தூதர்களும் பாரிஸ் நகரை அடைவதற்கு முன்பே பிடிபட்டு நெப்போலிய னிடம் இழுத்துவரப்பட்டனர். அவர்களைக் கடிந்து நெப்போலி யன் விரட்டினார். வெனிசியக் குடியரசு மாய்ந்தது. பேராசிரியர் மார்காம் (Markham) குறிப்பிடுவதைப் போல '‌ஃபிரான்சையும் நெப்போலியனையும் பொருத்தமட்டில், கேம்போ ஃபோர்மியோ உடன்பாடு புகழ்சான்ற ஒன்றாகும். ஆனால், அது வருங்காலப் போருக்கு வித்திட்டது. நெப்போலியனது வெற்றிகளின் கீர்த்தி யின் பயனாகவும், இயக்குநராட்சியின் உள்ளான (Internal) தளர் வின் காரணமாகவும் ஃபிரான்சின் அமைதிவழி முயற்சிகள், அதன் இயல்பான எல்லைகளான இரைன், பிரெனீஸ் (Pyrenees), ஆல்ப்ஸ் ஆகியவற்றிலிருந்து இத்தாலிய இணைப்புகளுக்குத் திசைதிருப்பப் பட்டன. அ த ா வ து, ஃபிரான்சை விரிவுபடுத்தும்பொருட்டு போருக்கு வழி பிறந்தது.' இருப்பினும் நெப்போலியன் தமது வெற்றிகளால் இத்தாலியில் ஃபிரான்சின் மேலாதிக்கத்தை நிலை நாட்டினார். அவரது இத்தாலிய வெற்றிகள் பிறிதொருவகையிலும் சிறப்பு வாய்ந்தவை. அவர் இத்தாலியில் ஏற்படுத்திய ஒற்றுமை யும் இத்தாலிய மக்களிடையே எழுப்பிய மன எழுச்சியும் பிற் காலத்தில் எழ இருக்கும் இத்தாலிய தேசிய இயக்கத்திற்கு முன்னோடிகளாக அமைந்தன.

கேம்போ ஃபோர்மியோ உடன்பாட்டை உறுதிசெய்யும் பொருட்டு அது உடனடியாகப் பாரிசுக்கு அனுப்பப்பட்டது. இயக் நர்களின் ஆணைகளை மதியாது அவ்வுடன்பாட்டை உருவாக்கினார் நெப்போலியன்என்பதைஏற்கெனவேகுறிப்பிட்டுள்ளோம். இருப்பி னும், அவ்வுடன்பாட்டைச் செல்லுபடியாகாதவாறு செய்யும் துணிவு இயக்குநர்களுக்கில்லை. அந்த அளவிற்கு அவர்கள் நெப்போ லியனைக் கண்டு அஞ்சினர். 1797ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 17ஆம் நாள் போனபார்ட் மிலானை விட்டு ரெஸ்டாட் (Restadt) நகருக்குக் கிளம்பினார். அங்கு நடந்த மாநாட்டில் அவர் கலந்து கொண்டு சிறப்பான பணியாற்றினார். அங்கிருந்து டிசம்பர் திங்கள் 7ஆம் நாள் நெப்போலியன் பாரிசுக்குப் பயணமானார். பதினாறு மாதங்களுக்குமேல் வெளியே வெற்றிப்பயணத்தை மேற்கொண்ட நெப்போலியன் இப்போது புதிய புகழுடன் தலை சிறந்த சாதனை களைத் தாங்கித் தலைநகர் சென்றார். அவரது வருகையை அறிந்த பாரிசு மக்கள் மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்தனர். தங்களின் தளபதி யைக் கண்டு களிக்க ஆர்வத்துடனிருந்தனர். அவருக்குச் சிறப்பான வரவேற்பளிக்க ஏற்பாடு செய்தனர். பாரிசு முழுதும் விழாக் கோலம் பூண்டது. நகரெங்கும் நெப்போலியனைப் பற்றியே மக்கள் பேசி மகிழ்ந்தனர், அவரை ஒரு முறையாவது காணவேண்டு

மென்ற ஆர்வத்தில் மக்கள் ஆங்காங்கே திரண்டனர். ஆனுல், நெப்போலியனே அவர்களது பார்வையிற்படவில்லை ; சாதாரணக் குடிமகனைப்போன்று ஆடையணிந்துகொண்டு அவரும் அக் கூட்டத்திலொருவராக நின்று அம் மக்களின் ஆர்வத்தைக் கண்டு வியந்தார். அந்த ஆர்வத்தையும் மக்களின் ஆதரவையும் பயன் படுத்தி ஃபிரான்சை வலிமைமிக்க நாடாக்க அவர் உறுதிபூண் டார். மக்கள் சக்தியை வீழ்த்தும் ஆற்றல் எந்தச் சக்திக்கும் இல்லையென்பதை அவர் அறிந்தார். தமிழகத்தில் தன்னிகரற்று விளங்கிய அறிஞர் அண்ணு அவர்களைக் காணக் காத்துக்கிடப் பரே மக்கள் கால்கடுக்க அவர் செல்லுமிடமெல்லாம், அதைப் போல நெப்போலியனைக் காணத்துடித்தனர் மக்கள். தமிழக மக்களின் இதயங்களை அறிஞர் அண்ணு வென்ருர் ; நெப்போலிய னும் அன்றைய நிலையில் தம்மைக் காணத்துடிக்கும் இதயங்களைக் கவர்ந்துவிட்டார். மக்களாதரவை நம்பியே அண்ணு அவர்கள் 'இப் படை தோற்கின் எப் படை வெல்லும்' என்ற நம்பிக்கையின் துணைகொண்டு நாட்டை நல்வழிப்படுத்தினுர். ஃபிரெஞ்சுத் தள பதியும் மக்களின் ஆதரவை முதலாகக் கொண்டே தம் பணிகளில் வீறுநடை போடத்தொடங்கினுர்.

நெப்போலியனின் புகழ் ஓங்கி வளர்வதைக் கண்ட இயக்கு நர்கள் அச்சமும் அருவெறுப்பும், பொருமையும் பொச்சாப்புங் கொண்டனர். ஆனுல், அதனை வெளிக்காட்டிக்கொள்ள அவர் களால் இயலவில்லை. அன்றியும், மக்களின் ஆர்வத்தையும் அவர் கள் நெப்போலியன்மீது கொண்டிருந்த அளவற்ற பாசத்தையும் அணைபோட்டு அவர்களால் தடுக்க இயலவில்லை. 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' என்பதே குறள் வாக்கு. எனவே, இயக்குநர்களும் வேறு வழியின்றி நெப்போலியனை விழாவெடுத்துச் சிறப்பிக்க முன்வந்தனர். அதற்கேற்ற வகையில், கேம்போ ஃபோர்மியோ உடன்பாட்டு வெற்றிவிழாவைச் சிறப்பாகக் கொண்டாட முயற்சி கள் மேற்கொள்ளப்பட்டன. இச் சீரிய விழாவைக் கொண்டாடு வதற்கு ஏற்ற இடமாக ஒளிமிக்க இலக்சம்பர்க் அவை தேர்ந் தெடுக்கப்பட்டது. விரைவில் அந்த அவை விழாக் கோலம் பூண்டு கண்டோர் வியக்கும் வண்ணம் அணிசெய்யப்பட்டது. அலங் காரப் பெருமேடை ஒன்று அமைந்தது. அதன் ஒரு கோடியில், ரோமானியச் செனட் (Senate) உறுப்பினர்கள் உடைதரித்து இயக்குநர்கள் மூவரும் கம்பீரமாக அமர்ந்திருந்தனர். தூதர் கள், அமைச்சர்கள், மேஜிஸ்திரேட்டுகள் (Magistrates), சட்ட மன்ற உறுப்பினர்கள் ஆகியோர் ஆங்காங்கே தங்களுக்கென அமைக்கப்பட்டிருந்த இடங்களில் அமர்ந்திருந்தனர். அவை முழுதும் மக்கள்வெள்ளம் திரண்டிருந்தது. 'எதிரிகளை வென்று

கைப்பற்றிய கொடிகள், பதாகைகள் போன்ற வெற்றிச்சின்னங்கள் அவையை அலங்கரித்தன. சுவரெங்கும் மூவண்ண ஓவியத் திரைச்சீலைகள் ஒய்யாரமாகப் பறந்தன. வெற்றி இன்னிசை காற்றில் அலை அலையாக மிதந்து சென்று அவையிலுள்ள அனைவரையும் மகிழ்வித்தது. வெளியில் பீரங்கி முழக்கமும் பல்லாயிரக் கணக்கான மக்களின் மகிழ்ச்சி ஆ ர வா ர மு ம் விழாவினைச் சிறப்பித்தன.

இவ்வாறு, 1797ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 10ஆம் நாள் கேம்போ ஃபோர்மியோ உடன்பாட்டு வெற்றிவிழா சீருடனும் சிறப்புடனும் தொடங்கியது. இத்தாலியை வென்ற இணையற்ற தளபதி — ஆஸ்திரியப் பேரரசை அதன் குகையிலேயே சந்தித்த சிங்க ஏறு — நெப்போலியனின் வருகைக்காக அங்குள்ள மக்கள் வெள்ளம் ஆவலோடு காத்திருந்தது. அவர்களது கண்களெல்லாம் அவர் வரும் திக்கு நோக்கியே திரும்பித் திரும்பிச் சுழன்றன. தங்களது குடியரசின் தன்மானத்தை ஐரோப்பிய அரசியலரங்கில் நிலைநாட்டிய நெப்போலியனைக் கண்டுகளிக்க ஆங்கே அலைகடலென மக்கள் திரண்டு ஆர்வத்துடனும், பொறுமையுடனும் காத்திருந்த காட்சி, மக்கள் அவர்மீது வைத்திருந்த நம்பிக்கைக்கும் நல்லெண்ணத்திற்கும் எடுத்துக் காட்டாக அமைந்திருந்தது. இறுதியில், தளபதியின் வருகையைக் குறிக்கும்வகையில் இசை முழக்கங்கள் எழுந்தன. தளபதி போனபார்ட்டும் சாதாரண குடிமகனின் உடையணிந்து, தனது உற்ற நண்பன் டெலிரெண்ட் (Talleyrand) உட்பட ஏனையப் படைத்துறை அதிகாரிகள் ஆடம்பர உடையணிந்து உடன்வர, அவையில் நுழைந்தார். அலங்கார உடையணிந்து அதிக உயரமாகக் காணப்பட்ட அதிகாரிகளின் நடுவே அவர்களைவிடக் குட்டையான நெப்போலியன் சாதாரண உடையணிந்து மேடைமீதேறிய காட்சி மக்களை மிகவும் கவர்ந்தது. அனைவரது கண்களும் எளிய உடையில் தோன்றிய நெப்போலியன்மீது பாய்ந்தன. எங்கும் மகிழ்ச்சி ஆரவாரம். பீரங்கி முழக்கங்களும் மக்களின் ஆரவார முழக்கங்களும் போட்டிபோட்டுக்கொண்டு தளபதியை வரவேற்றன. எளிய உடை, எடுப்பான தோற்றம், ஒளி நிறைந்த கண்கள், இளமைத் துடிப்பு, வெளிறிய கன்னங்கள், ஆழ்ந்த சிந்தனை, ஆற்றல், அறிவு போன்றவற்றின் அறிகுறிகள் ஆகியவற்றைத் தாங்கி தளபதி மேடைமீதமர்ந்த காட்சி மக்களின் உற்சாகத்தையும் ஆரவாரத்தையும் அதிகப்படுத்தியது. தளபதியும் மக்களின் அத்தகைய மகிழ்ச்சி ஆரவாரத்தால் கட்டுண்டார். அவ் விழாக்காட்சியை நேரில் கண்ட எவரும் எளிதில் அதனை மறக்க முடியாது. அது மக்கள் விழா. விடுதலை பெற்ற மக்கள் தங்கள் தளபதிக்குக் கொடுக்கும்

வீரவிழா. எனவே, அதனை அவர்கள் என்றும் நினைவில் நீங்கா திருக்கும்படி விழாநிகழ்ச்சிகள் அமைந்திருந்தன.

டெலிரெண்ட் (Talleyrand) தளபதி நெப்போலியனின் பல் வேறு சாதனைகளைப் பக்குவமாக எடுத்துரைத்து அவரை அவை யினருக்கு அறிமுகப்படுத்தினர். அடுத்து, நெப்போலியன் பேச எழுந்தார். அவை முழுதும் அமைதி நிலவியது. அவரது குரலைக் கேட்கும் அவர்கள் ஆடாது அசையாது நெப்போலியனை நோக் கினர். தளபதியும் மிகவும் அமைதியுடனும் அடக்கத்துடனும் தம்முடைய பேச்சைத் தொடங்கினர். 'பாரிசுப் பெருங்குடிமக் களே! ஃபிரெஞ்சு மக்கள் தங்களுடைய விடுதலைக்காகவே மன்னர் களை எதிர்த்துப் போராடவேண்டியுள்ளது. பகுத்தறிவு அடிப் படையில் ஓர் அரசியலமைப்பை உருவாக்க நாம் ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு மேல் நீடித்துள்ள கேடுகளையெல்லாம் அகற்றவேண்டியுள்ளது. புரோகிதச் சூழ்ச்சி முறை (Priest Craft), நிலப்பண்ணை உரிமை முறை (Feudalism), கொடுங்கோன்மை (Despotism) ஆகியவை இரண்டாயிரம் ஆண்டு காலமாகத் தொடர்ந்து வரிசையாக ஐரோப்பாவை ஆண்டுவந்தன. அண் மையில் நீங்கள் செய்துகொண்ட உடன்பாடு பிரதிநிதித்துவ ஆட்சிமுறையின் காலத்தொடக்கமாக அமைகிறது. ஃபிரெஞ் சுப் பெருநாடு அதன் இயல்பான எல்லைகளைப் பெறும் பணியில் நீங்கள் வெற்றி பெற்றுள்ளீர்கள். அன்று கலையிலும் அறிவியலி லும் சிறந்து விளங்கிய அறிஞர் பெருமக்களின் தொட்டிலாகத் திகழ்ந்த இரண்டு நேர்த்தியான ஐ ரோ ப் பி ய நாடுகளும் (ஃபிரான்சு, இத்தாலி) இன்று தங்களுடைய முன்னோர்களின் கல்லறைகளிலிருந்து கூர்மதியும் குடியாண்மையும் கொப்பளித் துக் கொண்டுவருகின்றன என்ற நம்பிக்கையைப் பெற்றுள்ளன. ஆஸ்திரியப் பேரரசரால் உறுதிசெய்யப்பட்ட கேம்போ ஃபோர் மியோ உடன்பாட்டை உங்கள் முன் படைப்பதில் நான் பெரிதும் பெருமை கொள்ளுகின்றேன். இந்த உடன்பாடு நமது குடியர சுக்குத் தன்னுரிமையையும் வளத்தினையும் கீர்த்தியினையும் வழங்கு கின்றது. என்று ஃபிரான்சில் சிறந்த அமைப்பியல் சார்ந்த சட்டங்களை உருவாக்கி அமைதியும் மகிழ்ச்சியும் உறுதியாக நிலைநாட்டப்படுகின்றனவோ அன்றே ஐரோப்பா முழுதும் விடு தலை பெற்றுத்திகழும்'. தளபதி நெப்போலியன் இவ்வாறு பேசி அமர்ந்தவுடனேயே அங்குள்ள மக்களின் உற்சாகமும் ஆரவாரமும் அலைகடலென ஆர்ப்பரித்தன. 'இத்தாலிய வெற்றிவீரன் நெப் போலியன் வாழ்க', 'ஐரோப்பாவின் அமைதிக் காப்பாளன் நெப் போலியன் வாழ்க', 'ஃபிரான்சின் பாதுகாவலன் நெப்போலியன் வாழ்க' என்ற முழக்கங்கள் வானைமுட்டின. இறுதியில், இயக்குநர் கள் சார்பில்பாராஸ் எழுந்துதளபதியை வெகுவாய் பாராட்டினர்.

'புகழ்மிக்க தளபதியாரே! நமது படை இங்கிலாந்துமீது பாயட்டும்; இலண்டன் அமைச்சரவை அடியோடு அழியட்டும்; அதனைக் கண்டு விடுதலை பெற்ற மக்களாகிய நமது ஆற்றலைக் குறைத்து மதிப்பிடுகின்ற கொடியவர்கள் அச்சத்தால் அலறட்டும்; போ, இரைன், டைபர் ஆகிய நதிகளை வென்ற நமது வீரர்கள் தங்கள் தலைமையில் அணிவகுத்துச் செல்லட்டும்; அவர்களைத் தாங்கிச் செல்வதில் பெருங்கடல் பெருமையும் பெருமகிழ்ச்சியும் கொள்ளும். இரத்தக்கறை படிந்த தேம்ஸ் நதிக்கரையில் நமது மூவண்ணப் பதாகைகள் பறந்தவுடனேயே, அங்குள்ள மக்கள் ஒருமித்த குரலில் உங்களை வாழ்த்தி இங்கிலாந்தை விடுவிக்க வந்த வித்தகர் என்று போற்றி வரவேற்பர்' என்று நெப்போலியனைப் பார்த்து உணர்ச்சி ததும்பக் கூறினர்.

குடியரசில் நாட்டங்கொண்ட மக்கள் அனைவரும் நெப்போலியனைத் தங்கள் வழிகாட்டியாக ஏற்றுப் போற்றினர். இங்கிலாந்தில் மன்னராட்சியை வெறுத்த மக்கள் பலர் அவரைத் தங்களின் உரிமைகளைக் காக்கும் காவலர் எனக்கருதி அவர் வழிசென்றனர். நெப்போலியன் இங்கிலாந்தின்மீது படையெடுத்தால் அவரை வாழ்த்தி வரவேற்க அவர்கள் காத்திருந்தனர். அவரது ஆழ்ந்த அறிவாற்றல், நாணயம், நல்லொழுக்கம், தூய்மை, கடும் உழைப்பு, தன்னலமின்மை, கேட்டார் பிணிக்கும் சொல்வன்மை ஆகியவை மக்களை மிகவும் கவர்ந்தன. இதுவரை எவருக்கும் கிடைக்காத வகையில் மக்களின் ஆதரவு அவருக்குக் கிடைத்தது. அவர்களது இதயங்களை வென்ற நெப்போலியன் பிற்போக்குச் சக்திகளுக்குப் பேரிடியாக அமைந்தார். இங்கிலாந்தின்மீது போர் தொடுத்து அதனை விடுவித்து அங்கு மக்களாட்சியை மலரவைக்கும் மாபெரும் பணி அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. 'இதனை இதனல் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன்கண் விடல்' என்ற இலக்கணத்திற்கேற்ப இயக்குநர்கள் இங்கிலாந்து விடுதலையை தங்களின் இளந்தளபதியிடம் ஒப்படைத்தனர். அதனை அறிந்த இங்கிலாந்துப் பேரரசு அஞ்சி நடுங்கியது. இங்கிலாந்து பிரபுக்களும் உயர்குடியினரும் குழப்பத்தால் கொந்தளித்தனர். 'நாம் ஃபிரான்சுடன் நட்புறவுகொண்டு நேர்மையுடனும் நீதியுடனும் நடக்காவிட்டால் இங்கிலாந்து அரசு இருபத்தி நான்கு மணி நேரங்கூட நீடித்தல் அரிது,' என்று ஜான்பிட் என்ற பிரபு வெளிப்படையாகவே அறிவித்தார். இதற்கிடையில், நெப்போலியனும் இங்கிலாந்துமீது பாய்வதற்கான ஆக்கப்பணிகளில் ஈடுபட்டார். ஐரோப்பாவில் இங்கிலாந்தைத் தவிர ஏனைய நாடுகளெல்லாம் ஃபிரான்சுடன் அமைதியாக வாழ்ந்தன. ஆனல், இங்கிலாந்து மட்டும் ஃபிரெஞ்சுக் குடியரசுக்கு விரோதமான போர்களில் தொடர்ந்து ஈடுபாடு கொண்டது. எனவே, அதனை வென்று அங்குள்ள

பிற்போக்கு ஆட்சிக்குச் சாவுமணி அடித்து அங்கு குடியாட்சியை நிலைநாட்ட நெப்போலியன் முனைந்துநின்றதில் வியப்பில்லை. தம்முடைய துணைத்தளபதிகள் மூவருடன் சென்று ஃபிரெஞ்சுக் கடற்கரைகளை ஆய்ந்தார். இராணுவ இலக்குகள், கோட்டை, கொத்தளங்கள், கடற்படை வலிமை போன்றவற்றை எட்டு நாட்கள் தங்கி நெப்போலியன் ஆராய்ந்தார். முடிவில், இங்கிலாந்தை நேரடியாகப் பாய்ந்து தாக்குவது ஆபத்தானது என்பதை உணர்ந்தார். இங்கிலாந்தை வீழ்த்துவதற்கேற்ற களம் எகிப்து தான் என்பதை உறுதிப்படுத்தினர்.

1798ஆம் ஆண்டு சனவரித்திங்கள் 21ஆம் நாள் மன்னன் பதினாறும் லூயி தூக்கிலிடப்பட்ட நாளின் ஆண்டு விழாவாகும். அதனைக் குடியரசினர் மிகவும் சிறப்பாகக் கொண்டாடிவந்தனர் ; இந்த ஆண்டும் அவ் விழாவை இன்னும் சிறப்பாகக் கொண்டாடும் பொருட்டு விழாக்குழுவினர் நெப்போலியனை அவ் விழாவில் பங்கெடுத்துச் சிறப்பிக்கும்படி அழைத்தனர். ஆனால், நெப்போலியன், ''ஒரு துக்கமான நிகழ்ச்சியை இன்று நீங்கள் கொண்டாட இருக்கின்றீர்கள். அந்த விழா ஒரு சிலருக்கு மட்டுமே பொருந்துவதாகும். வெற்றி விழாக்களைக் கொண்டாடுவதும், களத்தில் மாண்டவர்களுக்காக வருந்தித் துக்கம் கொள்ளுவதும் தான் முறை. ஒரு மனிதன் இறந்த நாளை ஆண்டு விழாவாகக் கொண்டாடுவது ஒரு அரசின் தகாத செயலாகும். அமைதி குலைந்து ஆத்திரம் பெருகவே அது வழிகோலும். அது அரசாங்கத்தை மேலும் வலுவாக்குவதற்குப்பதிலாக அதன் அடித்தளத்தையே ஆட்டங் காணச் செய்யும்'' என்று கூறி அவ் விழாவில் பங்கெடுத்துக்கொள்ள மறுத்துவிட்டார். ஆனால், மக்களின் வேண்டுகோளைப் புறக்கணிக்க இயலாது அவ் விழாவில் தாமும் ஒருவன் என்ற முறையில் மக்களோடு கலந்திருக்க இசைந்தார். விழாவினைச் சிறப்பிக்கும் பொருட்டு ஒரு மாபெரும் ஊர்வலம் நடாத்தப்பெற்றது. ஊர்வலத்தில் நெப்போலியனும் கலந்துகொண்டு சென்றார். அனைவரது கண்களும் அவரையே ஆவலுடன் நோக்கின. விழா முடிந்தவுடன் 'நெப்போலியன் வாழ்க !' என்ற முழக்கம் வானைப் பிளந்து சென்றது. அன்றியும், 'இவ் வழக்கறிஞர்களை விரட்டிவிட்டு நமது சிற்றேவலரை (Little Corporal) மன்னராக்குவோம்' என்ற முழக்கமும் இயக்குநர்களின் செவிகளைத் தாக்கின. ஆர்வமிக்க மக்களின் அத்தகைய முழக்கங்கள் மக்கள் சக்தி நெப்போலியனை ஆரத்தழுவித் தன் அரவணைப்பில் வைத்துள்ளது என்பதை அறிவித்தன. அதனைக் கண்டு அச்சமும் ஆத்திரமும் கொண்ட இயக்குநர்கள் தங்களைத் தற்காத்துக்கொள்ள தக்க ஏற்பாடுகள் செய்ய முற்பட்டனர்.

இதற்கிடையில், நெப்போலியனும் இயக்குநர்களால் தமக்கு வரவிருக்கும் ஆபத்தை நன்குணர்ந்து அதிலிருந்து தம்மைக்காத்துக்கொள்ள முற்பட்டார். பாரிசில் தம்முடைய மனைவி ஜோசபைனின் பழைய சிறிய வீட்டை விலைகொடுத்து வாங்கி அங்கு தம் மனைவியுடன் வாழ்ந்துவந்தார். அதிக நடமாட்டமும் ஆடம்பரமுமின்றி எளிய முறையில் அவர் தம் வாழ்க்கையை அமைத்துக் கொண்டார். அவரது நண்பர்கள் சிலரும் அவரது உடன் பிறப்புகளும் மட்டுமே அவரைக்காண வந்து செல்வர். அவர் பெரும்பாலும் இராணுவ உடையின்றி பொதுநிலை உடையிலேயே காணப்பட்டார்; தனிமையாகவே வெளியே செல்வதுண்டு; கூட்டங்கள், விருந்துகள் ஆகியவற்றில் பெரும்பாலும் பங்கெடுத்துக் கொள்வதில்லை. கொஞ்ச நாட்களுக்கு முன் மாண்டிபெல்லோ அரண்மனையில் முடிசூடா மன்னனுகை வாழ்ந்த தளபதி இன்று பாரிசில் எளிய வாழ்க்கையில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். எப்போதாவது நாடகக் கொட்டகைக்குச் சென்ருல் அவரைக் கண்ட மக்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்வர். உடனே, நெப்போலியன் தம்மை மறைத்துக்கொண்டு தப்பிவிடுவார். அறிஞர்களைத் தம் இல்லத்திற் கழைத்து அவர்களுடன் கலந்துரையாடி மகிழ்வார். இதற்கிடையிலும் இயக்குநர்களின் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனித்து வந்தார். அவர்கள் தமக்கெதிராகச் செய்கின்ற சதிகளைத் தக்கபடி அறிந்து வந்தார். அவர்கள் தம்முடைய மறைமுகமான இரகசிய எதிரிகள் என்பதால் அவர்களிடம் மிகவும் கவனமாக இருந்தார். இரகசிய எதிரியைவிட நேரடியான எதிரி மேலானவன் என்பதை நன்குணர்ந்தார். எதிரில் சீறிவரும் நாகத்தைவிட கொடியில் மறைந்திருக்கும் பச்சைப்பாம்பு ஆபத்தானது என்பதை நன்கு உணர்ந்தவர். பெரும்தளபதிகள் பலரைக் களத்தில் எதிர்த்துநின்ற தளபதி இப்போது மறைந்து நின்று தாக்கும் இயக்குநர்களைக் கொடியிற் கொடியாக மறைந்திருக்கும் பாம்பாகக் கொண்டார். ஆகவே, அவர்களை விட்டுவிலகி இருப்பதே நல்லது என்று கருதினர். ஆனல், தம்முடைய சகோதரர்கள் மூலம் அவர்களைக் கண்காணித்து வந்தார். மேலும், ஃபிரான்சின் அன்றை அரசியல் நிலையினையும், கட்சிகளின் வலுவினையும் கணக்கில் எடுத்துக்கொண்டு தம் நடவடிக்கைகளை அமைத்துக் கொண்டார். 'நான் இங்கு செயலற்றுக் கிடந்தால் சதிகாரர்கள் என்னை அழித்துவிடுவர்; எனவே, நான் இனியும் இங்கு தங்கியிருத்தல் கூடாது' என்று தமக்கிருந்த ஆபத்தை உணர்ந்து அவர் அடிக்கடி கூறுவதுண்டு. அடிக்கடி கைகளைப் பின்னல் கட்டிக்கொண்டு, தமது தோட்டத்தில் அங்குமிங்கும் உலவிச் சிந்தனையைச் சிறகடித்துப் பறக்க விடுவார். தம்மை வீழ்த்த உறுதி கொண்டுள்ள இயக்குநர்களை வீழ்த்தி தம் நிலையை

வலுப்படுத்திக்கொள்ள வாய்ப்பினை எதிர்நோக்கி யிருந்தார். ஆனால், அதற்கேற்ற வாய்ப்பு அண்மையில் கிட்டாது என்றறிந்த போனபார்ட் அவர்களது சதிக்கு எட்டாத தூரத்தில் விலகி யிருக்க விரும்பினார். அவரது ஆவலைப் பூர்த்தி செய்யும் வகையில் இங்கிலாந்தின் போர் நடவடிக்கைகள் அமைந்திருந்தன. இங்கிலாந்தைச் சாக்காகக் கொண்டு இயக்குநர்களின் பிடியிலிருந்து விடுபட விரும்பினார் நெப்போலியன். அதே இங்கிலாந்தைக் கொண்டே நெப்போலியனிடமிருந்து தங்களைத் தற்காத்துக் கொள்ளத் துடித்தனர் இயக்குநர்கள்.

'இங்கிலாந்தின் குடியரசினை உடனடியாக நமது அரசாங்கம் ஒழித்துக்கட்ட வேண்டும். இல்லையேல் சுறுசுறுப்பான அத் தீவினர் நம்மை அழித்தொழித்திடுவர். நாம் நமது கடற்படையை வலு வாக்கி அதன்மூலம் இங்கிலாந்தை வீழ்த்த இயலும். அவ்வாறு செய்தால், ஐரோப்பா முழுவதும் நமது காலடியில் கிடக்கும்' என்று நெப்போலியன் ஏற்கெனவே இயக்குநர்களுக்கு எழுதியுள் ளார். கேம்போ ஃபோர்மியோ உடன்பாட்டு வெற்றிவிழாவிலும் பச்சைக்கொடி காட்டிவிட்டார் பாராஸ் இங்கிலாந்தின் மீது நெப்போலியன் பாய்வதற்கு. ஆனால், அதற்கேற்ற தருணம் இன்னும் வரவில்லையென்றே நெப்போலியன் கருதினார். வலிமை மிக்க கடற்படைகொண்டே இங்கிலாந்தை வீழ்த்த இயலும் என்பது தளபதியின் எண்ணம். ஆனால்,ஃபிரெஞ்சு கடற்படையோ அப்போது பெயரளவிலிருந்தது. கடந்த ஐந்தாண்டு காலங்களில் ஆறு தடவைகள் பிரெஞ்சுக் கடற்படை தோற்கடிக்கப்பட் டுள்ளது. புரட்சியின்போது ஃபிரெஞ்சுக் கடற்படை பெரிதும் நிலைகுலைந்தது. அன்றியும், கப்பல்துறையகங்களில் (Dock Yards) நடந்த வேலைநிறுத்தங்களும் அதனை இன்னும் மோசமான நிலைக்குத் தள்ளின. தொழில் நுணுக்கம் தெரிந்த பலர் வேலையை விட்டு விலக்கப்பட்டனர். எனவே, அமெரிக்கச் சுதந்திரப் போராட்டத்தில் தன்னிகரற்று விளங்கிய ஃபிரெஞ்சுக் கடற் படை இப்போது சிதைந்து சீரழிந்திருந்தது. இத்தகைய கடற் படையின் துணைகொண்டு சிங்கத்தை அதன் குகையிலேயே சந்திக்க நெப்போலியன் துணியவில்லை. இருப்பினும், 'இத்தாலிய வெற்றி வீரன்', ஆஸ்திரியப் புலியை அதன் புதரிலேயே சந்தித்து வீழ்த்திய தீரன், கேம்போ ஃபோர்மியோ உடன்பாட்டிற்குரியவன் என் றெல்லாம் பாராட்டப்பட்ட நெப்போலியனிடமே இங்கிலாந்தை வெற்றிகொள்ளும் பணியும் ஒப்படைக்கப் பட்டது. இங்கிலாந்துப் படையின் தளபதியாக அவர் நியமிக்கப்பட்டார். ஆங்கிலக் கால்வாயின் கரைகளைஏற்கெனவேஆய்ந்து அதனைக் கடந்துசென்று இங்கிலாந்தைத் தாக்குவது இயலாத செயல் என்று அவர் அறிந் திருந்தார். இங்கிலாந்து அவரது பார்வையில் ஒரு சிறு தீவாக

மட்டும் படவில்லை ; அது வலிமைமிக்க உலகப் பேரரசாகக் காணப்பட்டது. யானைக்கு வலிமை நிலத்தில் ; முதலைக்கு வலிமை நீரில். அதுபோல இங்கிலாந்திற்கு வலிமை அதன் வணிக வளத்திலும் இந்திய உடைமைகளிலும் என்பதை நெப் போலியன் அறிந்தார். ஆகவே, ஆங்கிலக் கால்வாயைக் கடந்து சென்று இங்கிலாந்தைத் தாக்குவதைவிட நடுநிலக்கடலின் மூலம் தாக்குவது சிறந்தது எனக் கருதினர். எகிப்தை வென்று அங்கு ஒரு பெரும்படையை அமைத்து ஆங்கில ஆதிக்கத்தை அடியோடு சாய்க்க அவர் திட்டமிட்டார். அலெக்சாண்டரின் வெற்றிக்கு வழி வகுத்து அவரது பேரரசுக்கு நடுநாயகமாக விளங்கிய எகிப்து இங்கிலாந்தை வீழ்த்தச் சிறந்த களமாகும் என்று நெப்போலியன் கருதினர். ஆகவே, தம்முடைய திட் டத்தை அவர் இயக்குநர்கள் முன்வைத்தார். ஆவலுடன் காத்திருந்த இயக்குநர்களும் தளபதியின் திட்டத்தை ஏற்று அதனை உடனே நடைமுறைக்குக் கொண்டு வரும்படி ஆணை பிறப்பித்தனர். எப்படியாவது நெப்போலியன் பாரிசைவிட்டு விரைவில் வெளியேறவேண்டும் என்பதே அவர்களது ஆசை. அன்றியும், நீண்ட தொலைவிலுள்ள எகிப்துக்கு நெப்போலியன் சென்றால் மீண்டும் பாரிசுக்குத் திரும்பமாட்டார் என்பது அவர்களது அற்ப ஆசை. மீண்டும் பாரிஸ் வந்து நெப்போலியன் இயக்குநராட்சியை வேருடனும் வேரடி மண்ணுடனும் சாய்ப்பார் என்று அப்போது அவர்கள் நினைத்துக்கூட பார்த்திருக்க மாட் டார்கள். மால்டாவையும் எகிப்தையும் வென்றுபிடித்தல், செங்கடலிலிருந்து ஆங்கிலேயரை விரட்டியடித்தல், சூயசுப் பூசந்தி வழியாக ஒரு கால்வாயை வெட்டிச் செங்கடலை ஃபிரெஞ்சுப் பிடியில் வைத்தல்—ஆகியவற்றிற்கான முழு அதிகாரங்களைப் பெற்றுத் தளபதி நெப்போலியன் எகிப்துக் களத்தில் இங்கிலாந் தை வீழ்த்தும் பணியினை ஏற்றுக் கொண்டார்.

## உறுதுணைபுரிந்த நூல்கள்

1. ஐரோப்பிய வரலாறு — எச்.ஏ.எல்.ஃபிஷர்
2. ஃபிரெஞ்சுப் புரட்சி — குட்வின்
3. நெப்போலியன் — எச். ஏ. எல். ஃபிஷர்
4. நெப்போலியன் — ஃ போர்னியர்
5. நெப்போலியனும் போப்பும் — ஈ. ஈ. ஒய். ஹேல்ஸ்
6. நெப்போலியன் — எமில் இலுட்விக்

7. நெப்போலியனும் ஐரோப்பிய விழிப்புணர்ச்சியும்
—எஃப். எம். எச். மார்கம்

8. நெப்போலியனின் வாழ்க்கை — ஜே. எச். ரோஸ்

9. நெப்போலியனின் போராட்ட ஏற்பாடுகள்
— டி. சேன்ட்லர்.

10. நெப்போலியனின் வாழ்க்கை —
ஜோசப். எஸ். சி. ஆப்பட்

# 7. எகிப்தும் சிரியாவும்

ஃபிரெஞ்சுக் குடியரசின் ஒரே எதிரியான இங்கிலாந்தை வீழ்த்துவதற்கு ஏற்ற களம் எகிப்துதான் என்று நெப்போலியன் உறுதியாக நம்பினுர். இங்கிலாந்தின் வளப்பத்திற்குக் காரண மான வணிகத்தையும் குடியேற்றங்களையும் குலைப்பதின்மூலம் அதனைப் பணியவைக்க இயலும் என்று அவர் கருதினுர். அன்றியும் எகிப்து மேற்கத்திய நாடுகளுக்கும் கிழக்கத்திய நாடுகளுக்கும் இடையே ஒரு பாலம் போன்றுள்ளது. ஆகவே, எகிப்தை வென்ருல் எளிதில் கீழ்த்திசை நாடுகளின்மீதும் ஃபிரெஞ்சுச் செல்வாக்கை ஏற்படுத்த இயலும். குறிப்பாக, இந்தியாவின்மீது படையெடுத்து அங்கு ஆங்கிலச் செல்வாக்கை அகற்ற எகிப்து வெற்றி வழிகோலும். ஒரே கல்லில் இரண்டு மாங்காய்கள் என்பதைப்போல, எகிப்து வெற்றியின்மூலம் இந்தியாவில் ஆங்கில ஆதிக்கத்தை வீழ்த்துதல், இங்கிலாந்தில் குடியரசை நிறுவுதல் ஆகிய இரண்டு கனிகளையும் தட்டிச்செல்ல அவர் எண்ணினுர். கெய்ரோவில் ஏற்றுகின்ற மூவர்ணக்கொடி முகலாயர்களது டெல்லியிலும், ஆங்கிலப் பெருநகராம் இலண்ட னிலும் அசைந்தாடும் என்று அவர் கருதினுர். ஆகவேதான், அவர் இயக்குநர்களை அணுகி அவர்களது ஒப்புதலைப் பெற்று எகிப்துப் பயணத்திற்கு ஏற்பாடு செய்தார்.

எகிப்து, இந்தியா ஆகிய இரண்டு நாடுகளும் இப்போது நெப்போலியனது நெஞ்சில் நீக்கமற நிறைந்துவிட்டன. அவற்றின் வரலாறு, நில அமைப்பு, வளப்பம், புகழ், நாகரிகம் ஆகிய வற்றையெல்லாம் இளம்வயது முதற்கொண்டே அறிந்திருந்த நெப்போலியன் இப்போது இரவுபகலாக அந் நாடுகளின் படத்தை வைத்துக்கொண்டு ஆராய்ச்சிகள் செய்து, படை மேற்கொண்டு செல்வதற்கான வழிகளையெல்லாம் தேர்ந் தெடுத்தார். அன்றியும், அந் நாடுகளில் மக்கள் படும் அவதி களையும், அரசியல் நிலைகளையும் தெளிவாக அறிந்துகொண்டார். இந்தியா வற்ருத நதிகள் பல வளைந்தோடும் வளப்பமான நாடு.

மலை வளமும், மாநதி வளமும், நிதி வளமும், மக்களின் மன வளமும் கொண்ட நாடு. முகலாயர்களை வீழ்த்தி ஆங்கில ஆட்சியை நிலைநாட்ட இங்கிலாந்து அப்போது முழுமுயற்சியுடன் ஈடுபாடு கொண்டிருந்தது. இந்தியாவில் பெற்ற இடங்களின் பயனுக இங்கிலாந்தின் வணிகமும் தொழிலும் விரைந்து வளர்ந்தன. இங்கிலாந்தின் உயிர்நாடியான இந்தியக் குடியேற்றத்தை விடுவித்துக் குடியரசாக்கினால் அதன் இன்றைய வலிமை குன்றும், அதன்பின் சிங்கத்தை அதன் குகையிலேயே சந்தித்து இங்கிலாந்தில் குடியரசை நிறுவுதல் எளிதாகும் என்ற எண்ணம் தளபதியிடம் மேலோங்கியிருந்தது. ஆகவே, இந்தியாவை நோக்கி படைமேற்கொண்டு செல்லுவதற்கு ஏற்ற வகையில் எகிப்தை முதலில் வெற்றிகொள்வது நெப்போலியனுக்கு இன்றியமையாததாயிற்று.

எகிப்து ஒருகாலத்தில் எழிலும், ஏற்றமும் பெற்றுவிளங்கிய நாடு; புகழ்மிக்க நாகரிகத்தின் பிறப்பிடம். இடையில் அது சீரழிந்து சின்னபின்னப்பட்ட நேரத்திலும் அதன் சிறப்புமிக்க நாகரிகத்தின் கதிர்கள் இன்றும் ஒளிவீசி நிற்கின்றன. நடுநிலக் கடலின் தென்கரையில் அமைந்து ஐரோப்பிய பெருநகரங்களுடன் வணிகப் பண்பாட்டுத் தொடர்புகள் கொள்ளத்தக்கவகையில் எகிப்து ஏற்ற இடத்தினைப் பெற்றுள்ளது. இந்தியா, சீன ஆகிய நாடுகள் செங்கடல்வழியாக எகிப்துடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தன. வெள்ளப் பெருக்கெடுத்தோடும் நைல் நதி எகிப்தின் வளப்பத்திற்கு வழிவகுத்தது. மழையே ஆண்டு பலவாகக் காணுத எகிப்தை வளங்கொழிக்கும் நாடாக மாற்றியது நைல் நதியே. இயல்பான மண்வளமும் நைலின் நீர்வளமும் இணைந்து எகிப்தை எழில்மிக்க நாடாக ஆக்கின. உள்நாட்டு வணிகத்தையும் நைல் ஊக்குவித்தது. ஒருகாலத்தில் இருபது மில்லியன் மக்கள் தொகையைப் பெற்றிருந்த எகிப்து இடையில் ஏற்பட்ட குழப்பங்களால் தேய்ந்து நெப்போலியன் படையெடுப்பின்போது இருபத்தைந்து இலட்சம் மக்களையே பெற்றிருந்தது. எகிப்திய மக்களில் நான்கு பிரிவினர் இப்போது இடம் பெற்றிருந்தனர். பழைய எகிப்தியர்களின் வழித்தோன்றல்களான காப்டுகள் (Copts) இருநூறுயிரம் பேர்; அவர்கள் பெரும்பாலும் நசுக்கப்பட்ட நிலையில் அடிமைகளாகவே வாழ்ந்தனர். அரேபியர்கள் இரண்டு மில்லியன் பேர்; அவர்களே அன்றைய மக்கள் தொகையில் பெரும்பான்மையோர். அவர்கள் கொடுமைக்காரர்களாகவும், காட்டுமிராண்டிச் செயல்களில் ஈடுபாடு கொண்டும் வாழ்ந்தனர். துருக்கியர்கள் இருநூறுயிரம் பேர்; இவர்களே வலிமைமிக்க படைத்துறையைச் சார்ந்த

வர்கள்; மக்களைக் கொடுமைப்படுத்திய மன்னர்களின் காவலர்கள் மாமுலுக்குகள் (Mamelukos) பன்னிரண்டாயிரம் பேர்; இவர்கள் பெரும்பாலும் ஆளும் வகுப்பைச் சார்ந்தவர்கள். குதிரைப்படை வீரர்களாகிய இவர்கள் அதிகாரமும் ஆணவமும் மிக்க கொடுமைக்காரர்கள். இந்தப் பிரிவினைச் சேர்ந்த ஒவ்வொரு வீரனுக்கும் இட்ட வேலையைச் செய்ய இரண்டு எடுபிடிகள். இப்ராகீம், மூராத் என்ற இரண்டு மாமுலுக்குகள் முக்கிய தலைவர்களாவர். இவர்களிருவருமே எகிப்து முழுவதையும் ஆண்டுவந்தனர். அவர்களது ஆட்சியில் மக்கள் பெரிதும் கொடுமைக்குள்ளாயினர். அரச குலத்தவரின் ஆடம்பரத்துக்காக அவர்கள் பலியாயினர். மக்களில் பலர் வறுமையில் வாடி மாண்டனர். ஆனால், மாமுலுக்கு மன்னர்களின் மாளிகைகளோ ஆடம்பரத்தின் சின்னங்களாகத் திகழ்ந்தன. மதுவும் மங்கையும் அங்கு மலிவான பொருட்கள். 'மக்கள் நலம்' அங்கு ஆண்டவர்களின் அருவெறுப்புக்கான ஒன்று. ஏழைகளின் நல்வாழ்வில் இன்பம் காண மறுத்து அழகிகளின் அரவணைப்பிலும், மதுவின் மயக்கத்திலும் மாமுலுக்குகள் மனதைப் பறிகொடுத்து வாழ்ந்தனர். அவர்களது கொடுங்கோலாட்சி எகிப்தின் நல்வாழ்விற்குத் தடை போட்டது. மாமுலுக்குகளின் கொடுங்கோலாட்சியினை ஒழித்து எகிப்திய மக்களைக் காப்பாற்றி அதன்மூலம் அம் மக்களின் நன்மதிப்பைப் பெற நெப்போலியன் முடிவுசெய்தார். அங்கு, குடியரசினை நிறுவி எகிப்தின் கலை, அறிவியல் ஆகியவற்றில் மீண்டும் ஒளி ஏற்படுத்த அவர் எண்ணினார். எகிப்திய விடுதலை தம்முடைய பெயரையும் புகழையும் கீழ்த்திசை நாடுகளிலெல்லாம் பரப்பும்; அமுத்தப்பட்ட மக்களனைவரும் தம்மைத் தங்களின் காப்பாளராகக் கருதி நல்லாதரவு நல்குவர்; அதனை முதலாகக் கொண்டு இந்தியாவில் ஆங்கில ஆதிபத்தியத்தை ஒழித்து அதன் கடல்வலிமையைக் குறைக்க இயலும்; கடலாதிக்கம் பெற்ற இங்கிலாந்தை நிலத்தின்மீதிருந்தும் தாக்கி வீழ்த்தமுடியும் என்ற எண்ண அலைகள் நெப்போலியனின் நினைவில் மோதிச்சென்றன. எகிப்தின்மீது படைமேற்கொண்டு செல்வதற்கான ஏற்பாடுகள் மிகவும் இரகசியமாகவும் தீவிரமாகவும் மேற்கொள்ளப்பட்டன. இயக்குநர்களைத் தவிர வேறு எவருக்கும் நெப்போலியனின் எகிப்துத் திட்டம் தெரிவிக்கப்படவில்லை. ஏற்பாடுகளனைத்தையும் நெப்போலியனே முன்னின்று கவனித்தார். இரவுபகலென்று பாராது படையமைப்புப் பணிகள் விரைந்து மேற்கொள்ளப்பட்டன. ஒவ்வொரு துறையிலும் நடைபெறும் ஆக்கப்பணிகளைத் தாமே மேற்பார்வையிட்டுத் தக்க ஏற்பாடுகளைத் தளபதி செய்துவந்தார். படையமைப்பில் இலக்கியம், அறிவியல், கலை ஆகியவற்றிற்குச் சிறப்பிடமளிக்கப்

பட்டது. படையில், இலக்கிய மேதைகள், அறிவியல் வித்தகர்கள், கலைஞர்கள் ஆகியோர் இடம் பெற்றனர். வென்ற நாடுகளில் ஃபிரெஞ்சுக் கலை, பண்பாடு, இலக்கியம் ஆகியவற்றைப் பரப்புவதுடன் அந் நாடுகளின் சிறப்பான இலக்கியம், கலை, அறிவியற்செல்வங்களை ஃபிரான்சுக்குக் கொண்டுவந்து சிறப்பித்தல் அவர்களது முக்கிய பணியாகும். படைக்குத் தேவையான நிதி, கப்பல்கள், உணவுப்பொருட்கள் ஆகியவற்றைப் பெருக்குவதில் நெப்போலியன் தனிக் கவனம் செலுத்தினார். 1797ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் விழாவின்போது ரோமாபுரியில் ஏற்பட்ட கிளர்ச்சியில் தளபதி டூபாட் (Duphot) படுகொலை செய்யப்பட்டார். அதனை அறிந்த இயக்குநர்கள் உடனே ரோமாபுரிமீது பாய்ந்து அதனைக் கைப்பற்றும்படி தளபதி பெர்தியர் (Berthier) என்பவருக்கு ஆணை பிறப்பித்தனர். 1798ஆம் ஆண்டு, ஃபிப்ரவரி திங்கள், 15ஆம் நாள் எவ்வித எதிர்ப்புமின்றி தளபதி பெர்தியர் புகழ்பெற்ற ரோம் நகரில் நுழைந்தார். போப்பாண்டவரின் ஆதிக்கம் மாய்ந்தது. அங்கு குடியரசு நிலைநாட்டப்பட்டது. அதன் பயனாக, ஏராளமான பணம் ஃபிரான்சுக்கு அனுப்பப்பட்டு எகிப்துப் படையமைப்பிற்குப் பயன்பட்டது. 'என்னை ரோமாபுரிக்கு அனுப்பிவைத்ததன்மூலம் இங்கிலாந்திற்கெதிராகத் தாங்கள் மேற்கொள்ளவிருக்கும் போர் ஏற்பாட்டின் பொருளாளராக என்னை நியமித்துள்ளீர்கள்', என்று நெப்போலியனுக்குப் பெருமையுடன் எழுதினார் தளபதி பெர்தியர். அன்றியும் சுவிட்சர்லாந்து விவகாரத்தில் ஃபிரான்சு தலையிட்டுத் தளபதி இலேன்னெஸ் (Lannes) மூலமாக அரை மில்லியன் ஃபிராங்குகளும் பிற பொருட்களும் பெற்றது. இவ்வாறு நிதியையும் நிறைந்த பொருட்கள் பலவற்றையும் பெற்று நெப்போலியன் படையமைப்புப் பணியை விரைவாக முடித்தார். தௌரான், ஜெனோவா, அசேசியோ, சிவிட்டா வெக்கியா (Civita Vecchia) ஆகிய நான்கு இடங்களையும் படைகளைக் குவிப்பதற்கான முக்கிய இலக்குகளாகத் தேர்ந்தெடுத்தார். ஃபிரான்சு—இத்தாலிய வணிகர்களில் நானூறு பேரினைத் தேர்ந்தெடுத்து முக்கிய போக்குவரத்துக்கான பணிகளில் ஈடுபடும்படி அவர்களை முக்கிய இலக்குகளில் நிறுத்திவைத்தார். தம்முடைய புகழ்பெற்ற இத்தாலியப் படைப்பிரிவுகளை தௌலானுக்கும், ஜெனோவாவிற்கும் புறப்பட்டு வரும்படி பணித்தார். ஐரோப்பாவெங்கிலுமுள்ள புகழ்பெற்ற கைவினைஞர்களையெல்லாம் சேகரித்துத் தம் படையில் சேர்த்தார். ரோமாபுரியிலுள்ள சமயப்பரப்பு உயர்குடி குருமார்கள் கல்லூரி (The College of Propaganda) யிலிருந்து பல்வேறு கிழக்கத்திய மொழிகளின் அச்சுப்பொறிப் படிவங்களனைத்தையும் நெப்போலியன் பெற்று, அச்சுத் தொழிலாளர்கள் பலரையும் தம் படைப்

பிரிவில் சேர்த்தார். தத்துவ, கணித சம்பந்தப்பட்ட கருவிகள் பலவும் அவரது படையில் இடம்பெற்றன.

இவ்வாறு, இதுவரை எவரும் காணுத வகையில் சிறப்புமிக்க பெரும்படையைத் திரட்டியபின் நெப்போலியன் 1798ஆம் ஆண்டு மே திங்கள் 9ஆம் நாள் தௌலான் நகர் வந்தடைந்தார். சில நாட்கள் அவருடன் தங்கி அவருக்கு உற்சாகமூட்டும் வகையில் ஜோசபைனும் அவருடன் வந்திருந்தார். இப்போது அவரது கடற்படையில் முப்பது பெருங்கப்பல்களும் எழுபத்திரண்டு பாய் மரக்கப்பல்களும் நானூறு படைத்துறை ஊர்திகளும் (Transports) இடம்பெற்றிருந்தன. நாற்பதாயிரம் வீரர்களும் நூறு பேர் அடங்கிய இலக்கியப் படையும் அதில் அங்கம் வகித்தனர். கிளிபெர் (Kleber), தேசாய்(Desaix), பான் (Bon), மீனே (Menou), இரெய்னியர் (Reynier) ஆகிய புகழ்மிக்க தளபதிகளை நெப் போலியன் காலாட்படையின் பல்வேறு பகுதிகளின் தளபதிகளாக நியமித்தார். புகழ்பெற்ற மார்மோன்ட் (Marmont) போன்ற பதினன்கு தளபதிகள் அவர்களுக்குக் கீழ் பணியாற்றினர். தளபதி அலெக்சாண்டர் டூமாஸ் குதிரைப் படையின் தளபதியாக நியமிக்கப்பட்டார். அவருக்குக்கீழ் இலெக்ளிளார்க், குராட் டேவூஸ்ட் ஆகிய தளபதிகள் பணியாற்றினர். பீரங்கிப்படைத் தளபதியாக டொமார்ட்டின் (Domartin) நியமிக்கப்பட்டார். அவருக்குக்கீழ் வீரமிக்க இலேன்னெஸ் பணியாற்றினர். இத் தகைய பெரும்படைக்கு மேலும் உற்சாகமூட்டும் வகையில் கீழ்க் கண்ட உரையைத் தளபதி நெப்போலியன் அவர்கள் முன்வைத் தார்: ‘அருமைத் தோழர்களே! இதுவரை நீங்கள் மலைகளிலும் சமவெளிகளிலும் நகரங்களிலும் போரிட்டு வெற்றிகளைக் குவித் தீர்கள். ஆனல், இப்போது நீங்கள் பெருங்கடலில் போரிட வேண்டியுள்ளது. ஐரோப்பா முழுதும் இப்பொழுது உங்களையே பார்த்துக்கொண்டிருக்கிறது. நீங்கள் இன்னும் ஆற்றவேண்டிய அரும்பணிகள் பல, சந்திக்கவேண்டிய களங்கள் ஏராளம்; கடக்க வேண்டிய ஆபத்துகளும், தடைகளும் எண்ணிறந்தன. உங்க ளுடைய தாயகத்தின் பெருமையை நிலைநாட்டவும், மக்களின் மகிழ்ச்சியைப் பெருக்கவும், உங்களது கீர்த்தியையும் புகழையும் நிலைநாட்டவும் நீங்கள் இதுவரை சாதித்தவைகளைவிட இன்னும் அதிகமாகச் சாதனைகளைப் பெற்றிடவேண்டும்.’

1798 ஆம் ஆண்டு மே திங்கள் 19 ஆம் நாள் அதிகாலை; நடு நிலக்கடலின் நீல அலைகளிடையே உதயசூரியன் தன் ஒளிக்கதிர் களைப் பாய்ச்சி எழுந்தான். அப்போது, தளபதி நெப்போலிய னும் தமது படைக்கு ஆணையிட்டார் அக் கடலில் நகர்ந்து செல் லும்படி. ஓரியன்ட் (Orient என்ற கப்பல் உன்னதமான ஒன்று.

நூற்றிருபது துப்பாக்கிகளுடன் பல்வேறு வசதிகளும் நிறைந்திருந்த அப்பெருங்கப்பலில் நெப்போலியனும் மகன் ஈஜினும்(Eugene) ஏறி னர். போனபார்ட்டின் கடற்படையமைப்பு அரைவட்ட வடிவத் தில் பதினெட்டு கல் தொலைவு பரவியிருந்தது. ஜோசபைனும் நெப் போலியனும் பிரிந்த காட்சி நெஞ்சை நெகிழவைப்பதாக அமைந் தது. நெப்போலியனுடன் செல்வதற்கு ஜோசபைன் பெரிதும் விரும்பினாள். ஆனால், போரின் கெடுபிடிகளால் அவளை நெப்போ லியன் தம்முடன் அழைத்துச் செல்ல இயலவில்லை. ஒரு மாடியில் நின்று கண்களைக் குளமாக்கிக் கண்ணுக்கெட்டும் வரையிலும் கப்பலை நோக்கித் தன் கரத்தினை ஆட்டி விடைகொடுத்துக்கொண் டிருந்தாள். படையும் ஜெனோவா நோக்கி விரைந்தது. ஜெனோ வாப் படைகளைச் சேர்த்துக்கொண்டு அப் பெரும்படை அசேசியோ வந்தடைந்தது. அங்குள்ள படைகளையும் சேர்த்துக்கொண்டு பின் சிவிட்டாவெக்கியா வந்தடைந்தது.அங்கு தயாராக இருந்த படை இப்போது நெப்போலியனின் பெரும்படையுடன் இணைந்தது. இவ்வாறு பல்வேறு இலக்குகளிலும் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த படைகள் பலவும் இணைந்து இப்போது நெப்போலியனின் கடற் படை ஒருவலிமைமிக்க நகரைப்போல் கடலில் காட்சியளித்தது. அடுத்து, அப் பெரும்படை மால்டா நோக்கி விரைந்தது.

இத்தகைய படையேற்பாடுகளனைத்தும் பெரும்பாலும் இரகசியமாக வைக்கப்பட்டிருந்தன. நெப்போலியனின் பெரும் படையிலிருந்த வீரர்கள்கூட தாங்கள் எங்கே செல்கிறோம் என்று அறிந்திருக்கவில்லை. இருப்பினும், வதந்திகள் பலவாறு கிளம்பின. கருங்கடல்நோக்கி நெப்போலியன் சென்றார் என்றனர் சிலர்; இந்தியாவின்மீது படையெடுத்துச் சென்றுள்ளார் என்றனர் வேறு சிலர் ; சூயஸ் கால்வாயை வெட்டச் சென்றார் என்றனர் இன்னும் சிலர் ; அயர்லாந்துநோக்கி விரைந்தார் என்றனர் வேறுபலர்; தேம்ஸ் நதிநோக்கி அவர் தம் படையுடன் சென்றார் என்றனர் இன்னும் பலர். நெப்போலியனின் நெருங்கிய தளபதி களில் ஒருவரான கிளிபெர் (Kleber) கூட இங்கிலாந்தின்மீது படையெடுத்துச் செல்வதாகத்தான் நம்பிக்கொண்டிருந்தார். ஆனால், புயல் உருவாகிவிட்டது ; அது எத் திசைநோக்கி வீசுமோ என்று அஞ்சி நடுங்கினர் ஆங்கிலேயர். ஆகவே, அப் புயலுக்கு ஈடு கொடுக்கும் வகையில் உடனடியாகத் தக்க ஏற்பாடுகளை இங்கிலாந்து அரசு மேற்கொண்டது. வலிமைமிக்க கடற்படை யொன்று திரட்டப்பட்டது; புகழ்பெற்ற நெல்சன் அதன் தளபதி யானார்; அப் படை நடுநிலக் கடலுக்கு விரைந்து சென்று ஃபிரெஞ்சு நடவடிக்கைகளைக் கண்காணித்தது. நெல்சனும் நெப் போலியனைப் போன்று பயிற்சிபெற்ற வீரர் ; போர்நுணுக் கங்களை நன்கு அறிந்தவர்; போர்த்தந்திரங்களில் வல்லவர்;

சிறந்த தளபதிக்குரிய தகுதிகளனைத்தையும் பெற்றவர். அவரது ஆற்றல்மிக்க தலைமையில் ஆங்கிலக் கடற்படை நடுநிலக்கடலில் நெப்போலியனைத் தேடிச்சென்று சுற்றிக்கொண்டிருந்தது. இந் நிலையிலும் இங்கிலாந்து அமைச்சரவை அஞ்சிக் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது.

இதற்கிடையில், நெப்போலியனின் பெரும்படை மால்டா நோக்கி விரைந்துகொண்டிருந்தது. இத்தாலியக் கரைகளின் வழியாகச் செல்லும்போது நெப்போலியன் பனி படிந்த ஆல்ப்ஸ் சிகரங்களைக் கண்டு ஆனந்தங்கொண்டார். அப்போது அவரது சிந்தனைகள் சிறகடித்துப் பறந்தன சென்ற காலத்தை நோக்கி. இத்தாலியை இன்பபூமியாக மாற்ற தாம் மேற்கொண்ட செயல் கள் எல்லாம் அவர் முன் தோன்றி மறைந்தன. ‘இத்தாலியை வென்று விடுவித்த அதே படைகளுடன் கிழக்குநோக்கிச் செல்லு கின்றேன்; எனவே, வெற்றி நிச்சயம்’ என்று நெப்போலியன் தமக்குள் கூறிக்கொண்டார். தளபதியின் பேச்சாற்றலும் பெருந்தன்மையும் படையிலுள்ள அனைவரையும் கவர்ந்தன. அவரது உரையாடலில், ஆற்றிய உரையில், உற்சாகம் பெற்று அவரது பெரும்படை கடலில் நகர்ந்து சென்றுகொண்டிருந்தது. கொஞ்ச நேரத்தைக்கூட வீணுக்காது நெப்போலியன் ஆக்கப் பணிகளில் ஈடுபாடு கொண்டார். உரையாடல், தத்துவ விளக்கம், நூல் வாசித்தல் போன்றவை பெரிதும் இடம்பெற்றன. தலைமைத்தளபதியும் தம்முடன் ஒரு சிறிய நூலகத்தையும் எடுத் துச் சென்றிருந்தார். நிலநூல், வரலாறு, அரசியல் தத்துவம் போன்ற நூல்களில் அவர் மூழ்கிக் கிடப்பதுண்டு. அவருக்கு நவீனங்கள் (Novels) பிடிப்பதில்லை. தம் முன்னிலையில் எவரும் நவீனங்கள் படிப்பதையும் அவர் வெறுத்தார். ஒருமுறை பேரரசருடன் வந்த அம்மையார் ஒருவரின் கையிலிருந்த நவீனத் தைக் கண்ட நெப்போலியன் அதனைப் பிடுங்கித் தீயிலிட்டுக் கொளுத்தினர்; அன்றியும் நவீனங்களை படிக்கக்கூடாது என்பதற் கான காரணங்களையும் விளக்கி ஒரு பேருரையாற்றினர். இரவு சாப்பாட்டிற்குப்பின் பெரும்பாலும் முக்கிய பொருள்கள்பற்றி விவாதங்கள் நடைபெற்றன. விவாதத்திற்குரிய தலைப்புகளை பெரும்பாலும் நெப்போலியனே முன்மொழிவார். ‘கோள்களில் மக்கள் வசிக்கின்றனரா?’, ‘பூவுலகின் வயது என்ன?’, ‘நீராலோ அல்லது நெருப்பாலோ இந் நிலவுலகை அழிக்க இயலுமா? போன்ற தலைப்புகளையே பெரும்பாலும் நெப்போலியன் விவாதத்திற்காக முன்மொழிந்தார்.

ஜூன் திங்கள் 16ஆம் நாள்; அதிகாலை; இன்றுடன் நெப் போலியனது படை இருபத்தேழு நாட்கள் கடலில் பயணத்தை

மேற்கொண்டு ஆயிரம் கல் தொலைவினைக் கடந்து வந்துள்ளது. அன்று மால்டா தீவின் வெண்சிகரங்களும் அத் தீவின் அழகிய கோட்டைகளும் நெப்போலியன் கண்களில் பட்டன. எழில்மிக்க மால்டா இளந்தளபதியை இருகரங்கூப்பி வரவேற்பதுபோல் இருந்தது அக் காட்சி. உடனே, நெப்போலியன் மால்டாவில் படையுடன் இறங்கினார். எவ்வித எதிர்ப்புமின்றி மால்டா வீழ்ந்தது; அதன் கோட்டையில் மூவண்ணக்கொடி ஒளிவீசிப் பறந்தது. அதன் துறைமுகத்தில் பெருங்கப்பல் 'ஓரியன்ட்' வெற்றி உலா வந்தது. தம்முடைய வழக்கமான சுறுசுறுப்புடன் நெப்போலியன் மால்டாக் குடியேற்றத்தைப் பலப்படுத்தும் பணியினை மேற்கொண்டார். முக்கிய இலக்குகளில் படைவீரர் கள் நிறுத்திவைக்கப்பட்டனர். துருக்கியச் சிறைக்கைதிகள் அனைவரும் விடுவிக்கப்பட்டு அன்புடன் நடத்தப்பட்டனர். அங்குத் தல சுய ஆட்சியை அவர் உருவாக்கினார். மக்களுக்கு உரிமைகள் பல வழங்கப்பட்டன. விரைவில் தளபதி போனபார்ட் மால்டா மக்களின் நன்மதிப்பைப் பெற்றார். அத்தனை ஏற்பாடுகளையும் ஒரே வாரத்தில் செய்து முடித்து நெப்போலியன் தம் படையுடன் எகிப்துநோக்கி விரைந்தார். மால்டா ஆட்சியாளர்களில் பலர் நெப்போலியனின் ஆணையை ஏற்று அவரது படையில் சேர்ந்து பணியாற்ற முன்வந்தனர்.

நெப்போலியனது பெரும்படை எகிப்தை நோக்கி விரைந்து கொண்டிருந்த நேரத்தில் எதிர்ப்படும் ஆங்கிலக் கப்பல்களை வீழ்த்தும் ஏற்பாடுகளும் மேற்கொள்ளப்பட்டன. நெல்சனும் தமது கடற்படையுடன் ஃபிரெஞ்சுப் படைகளைத் தேடி அலைந்து சலித்துப்போனார். ஃபிரெஞ்சுப்படை ஆஃபிரிக்க கரைநோக்கிச் செல்வதை அறிந்து ஃபிரெஞ்சு வீரர்கள் பெரிதும் ஆச்சரியங் கொண்டனர். இந்த கடற்பயணத்தின்போழ்து ஓர் இரவில் பதினைந்து கல் தொலைவில் ஃபிரெஞ்சுப்படையும் இங்கிலாந்துப் படையும் ஒன்றுக்கொன்று எதிராக இருந்தன. கடுமையான இருட்டின் காரணமாக இரண்டு படைகளும் ஒன்றையொன்று அறியாது எவ்வித மோதலுமின்றித் தனித்தனியே விலகிச் சென்றன. ஜூலைத் திங்கள், முதல் நாள் காலை; 42 நாட்கள் நடுநிலக் கடலில் பயணம் செய்து இன்று ஆஃபிரிக்கக் கரையை ஃபிரெஞ்சுப் படை அடைந்தது. ஃபிரெஞ்சுப் படையினர் ஃபிரான்சிலிருந்து இரண்டாயிரம் கல் தொலைவிலுள்ள எகிப்தின் எழில்மிக்க கரையைக் கண்டு களிப்பெய்தினர். ஃபிரெஞ்சு வீரர்கள் கருப்பழகி கிளியோபாட்ராவின் ஊசிமுனைக் கோபுரம் (Needle of Cleopatra), போம்பேயின் தூண் (Pompeys' Pillar) என்றெல்லாம் புகழப்பட்ட எகிப்தின் எழிலைக் காண துடித்தனர். அவர்களைத் தாங்கிய கப்பல்கள்,

நெப்போலியன் வெகுண்டெழுந்து, 'தூக்கில்போட்டுச் சாகடிக்கப் படுகின்ற ஒவ்வொரு ஃபிரெஞ்சு வீரனின் உயிருக்கும் ஈடாகத் தம் வசமுள்ள ஆஸ்திரிய இராணுவ அதிகாரிகள் ஒவ்வொருவராகச் சாகடிக்கப்படுவர்; அவ்வாறு சாகடிக்கப்படுகின்றவர்களில் முதல்வராக ஆல்வின்ட்சியின் மருமகனே இடம் பெறுவார்' என்று பதிலிறுத்தார். ஆனால், அத்தகைய பயங்கர நிலைகள் ஏற்படா வண்ணம் தடுக்கப்பட்டன. ஆனால், மாண்டுவாக் கோட்டையைச் சுற்றிலும் தம் படைகளை நிறுத்தித் தளபதி நெப்போலியன் 'ஆல்வின்ட்சி எப்பக்கம் வந்து புகுந்திடுவார்; அவர் எத்தனை பட்டாளம் கூட்டிவருவார்' என்று கூறி விழிப்புடனிருந்தார்.

இரிவோலிச் சமவெளியில் தளபதி ஜூபெர்ட் (Joubert) தலைமையில் ஒரு ஃபிரெஞ்சுப்படை இருந்தது. 1797ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 12ஆம் நாள் ஆல்வின்ட்சியின் படைகள் இரிவோலி வந்தடைந்தன. அப்போது இரிவோலியைக் காத்து வந்த ஃபிரெஞ்சுப்படையை ஆஸ்திரியப்படை சுற்றி வளைத்துத் தாக்க முற்பட்டது. இச் செய்தி உடனடியாக மாண்டுவாவிலிருந்த நெப்போலியனுக்கு எட்டியது. மேலும், இன்னொரு ஆஸ்திரியப் படையும் வேறொரு திக்கில் மாண்டுவாவை நோக்கி வந்துகொண்டிருக்கிறது என்ற செய்தியும் அவருக்குக் கிடைத்தது. எனவே, நெப்போலியன் மீண்டும் நெருக்கடிக்குள்ளானார். இரண்டு ஆஸ்திரியப்படைகளும் இணைந்து மாண்டுவாவைத் தாக்குவதற்கு முன் அவைகளைத் தனித்தனியே சந்தித்து வீழ்த்த வேண்டுமென்ற திட்டத்துடன் நெப்போலியன் முப்பதாயிரம் வீரர்களுடன் இரிவோலி நோக்கி விரைந்தார். அடுத்த நாள் காலை இரண்டு மணிக்குப் பனிநிறைந்த இரிவோலியின் உயரமான பகுதிகளை அடைந்தார். அன்றிரவு நல்ல நிலவொளி. எனவே, அவருக்குக் கீழுள்ள சமவெளியில் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த ஆஸ்திரியப்படைகளை நன்கு மதிப்பிட அவரால் முடிந்தது. ஒவ்வொரு பிரிவிலும் பத்தாயிரம் வீரர்கள் அடங்கிய ஐந்து பிரிவுகள் அங்கு முகாமிட்டிருப்பதை அவர் எளிதில் அறிந்தார். அன்றியும், அப்படைக்கு ஆதரவாக இன்னும் ஆஸ்திரியப் பீரங்கிப்படை வந்து சேரவில்லை என்பதையும் தெரிந்துகொண்டார். எனவே, ஆஸ்திரியப் படைகளைத் தாக்குவதற்கு உடனே தயாரானார்.

அன்று அதிகாலை நெப்போலியனின் பீரங்கிகள் முழங்கின. இரிவோலிச் சண்டை தொடங்கியது. அரைத்தூக்கத்திலிருந்த ஆஸ்திரிய வீரர்களைப் பாய்ந்துசென்று தாக்கினர் ஃபிரெஞ்சு வீரர்கள். நீண்ட நேரம் சண்டை தொடர்ந்தது. எங்கும்

ஆணையிட்டார். அதிகாலையில் படைவீரர்கள் பாய்ந்தனர் அப் பெருநகர்மீது. அதனையறிந்து மாமுலுக்குகள் ஒரு பெரும் படையை உடனே திரட்டி ஃபிரெஞ்சுப் படையுடன் மோதினர். போர் விரைவில் முடிந்தது. அலெக்சாண்டிரியாவில் மூவண்ணக் கொடி உயர்ந்து பறந்தது. வென்ற ஃபிரெஞ்சு வீரர்கள் அலெக் சாண்டிரியா மக்களிடம் அன்புடனும், பரிவுடனும், நீதியுடனும், நேர்மையுடனும் நடந்து அவர்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றனர். அப் பெருநகரில் அடிமை வாழ்வில் அவதிப்பட்ட அனைவரும் விடுவிக்கப்பட்டனர். நீதியையும், சமத்துவத்தையும் நிலைநாட்டுகின்ற சட்டங்கள் உருவாக்கப்பட்டன. விரைவில் அரேபியர்கள் நெப்போலியனின் புகழ்பாடத் தொடங்கினர். 'நெப்போலியன் ஒரு நூதன வெற்றி வீரர். மக்களை விடுவித்து அவர்களுக்கு உரிமைகள் வழங்குவதில் அவர் இன்பம் காணு கின்றார். தோற்றவர்களின் பெண்கள் உரிய மரியாதையுடன் நடாத்தப் பெறுகின்றனர். அவர்களது உடைமைகளுக்கு ஊறு நேரவில்லை. அவர்களது உயிர்களுக்கும் எவ்வித ஆபத்துமில்லை. அவர்களுடைய நலனுக்கான ஆக்கவேலைகள் உடனடியாக விரைவு படுத்தப்படுகின்றன. எகிப்திய மண்ணில் நெப்போலியன் காலடி வைத்த அந்தநாளே அந் நாட்டின் ஒளிமிக்க பொன்னுளாகும். அவரது திட்டங்கள் கிழக்கத்திய நாடுகளை வாழவைக்கும் சிறப் பான திட்டங்களாகும்' என்றெல்லாம் எகிப்திய மக்கள் இப்போது நெப்போலியனை ஏற்றிப் போற்றினர். நெப்போலி யனும் தமது நிலையை விளக்கி எகிப்திய மக்களுக்குக் கீழ்க்கண்ட வேண்டுகோளை விடுத்தார் : 'எகிப்தியப் பெருங்குடி மக்களே ! உங்களுடைய சமயத்தை அழித்தொழிக்கவே நான் இங்கு வந்திருப்பதாக எதிரிகள் எடுத்தியம்புவர் ; அதனை நம்பாதீர்கள். உங்களுடைய உரிமைகளை நிலைநாட்டி உங்களது வாழ்வைக் குலைத்த உலுத்தர்களை ஒழித்து, உண்மையான இஸ்லாத்தை மீண்டும் நிலைநாட்டவே நான் இங்கு வந்திருக்கிறேன் என்பதை அவர்களுக்கு எடுத்துக் கூறுங்கள். மாமுலுக்குகளைவிட ஒருபடி முன்னே சென்று ஆண்டவனையும், அவரது திருத்தூதரான நபிகள் நாயகத்தையும், கொரானையும் போற்றிப் பாராட்டுவேன் என்பதையும் அவர்களிடம் கூறுங்கள். ஆண்டவனின் பார்வையில் அனைவரும் சமம் என்பதனையும், அறிவு, ஆற்றல், திறமை, பண்பு ஆகியவற்றில்தான் மக்கள் வேறுபடுகின்றனர் என்பதனையும் அவர்களிடம் சொல்லுங்கள். மற்றவர்களிடமில்லாத எந்தத் தனிப்பண்பு அல்லது சிறப்புத்தகுதி மாமுலுக்குகளிடமுள்ளது ? எத் தகுதியைக் கொண்டு அவர்கள் இன்பம் முழுதும் அனுபவிக் கின்றனர் ? எகிப்து அவர்களுக்கு மட்டும் தனியுடைமை என்றால் அதற்காக அவர்கள் ஆண்டவனிடமிருந்து பெற்ற கட்டளையைக்

காட்ட முடியுமா ? சொத்துகளனைத்திற்கும் அவர்கள் உரியவர்கள்; எந்த வகையில் ? ஓர் அழகிய அடிமையைக் கண்டால், உடனே அவள் அவர்களது உடைமையாவாள். ஒரு நல்ல வீடு, ஓர் அருமையான குதிரை—எதனைக் கண்டாலும் உடனே அதனை அவர்கள் தங்கள் சொத்தாக்கிக் கொள்வர். ஏன் இந்த இழி நிலை ? ஆனால், ஆண்டவன் நீதியும் இரக்கமுமுள்ளவன் ; மாமுலுக்குகளின் பேரரசுக்கு முடிவுகட்டும்படி அவனே ஆணை பிறப்பித்துள்ளான். எங்களை ஆதரித்துப் பின்பற்றுகிறவர்கள் மும்மடங்கு மகிழ்ச்சியைப் பெறலாம் ; அவர்கள் தங்கள் நல்வாய்ப்புகளையும், தகுதிகளையும் தாங்கி முன்னேறலாம். நடுநிலையிலிருப்பவர்களும் மகிழ்ச்சியுடனிருக்கலாம். அவர்களுக்கு எங்களைப் பின்பற்றுவதற்குத் தேவையான காலவரையறை அளிக்கப்படும். ஆனால், மாமுலுக்குகளுக்காக எங்களை எதிர்த்து ஆயுதம் தாங்குவோர் மும்மடங்குத் துன்பத்தில் மூழ்குவர் ; அவர்கள் வேறு நம்பிக்கை எதுவுமின்றி அழிந்தொழிவர்.'

இவ்வறிவிப்பினைக் கேட்ட அரேபியர்கள் அளவிலா ஆனந்தங் கொண்டனர். மாமுலுக்குகளின் பகைவர்களான அவர்கள் இப்போது நெப்போலியனுக்குத் தங்களுடைய முழு ஆதரவினையும் காட்ட முன்வந்தனர். அன்றியும், தாங்கள் சிறைபிடித்து வைத்திருந்த முப்பது ஃபிரெஞ்சு வீரர்களைத் திரும்பவும் நெப்போலியனிடம் அனுப்பிவைத்து அவரது படையில் சேர்ந்து விடுதலைப் பணியாற்றவும் விருப்பம் தெரிவித்தனர். அலெக்சாண்டிரியாவில் நெப்போலியன் மேற்கொண்ட நடவடிக்கைகளைக் கேள்வியுற்ற இயக்குநர்கள் வெகுண்டனர். ஃபிரெஞ்சு வீரர்களனைவரையும் இஸ்லாம் சமயத்தில் சேர்த்துத் தாமும் ஒரு முகமதியனாக மாறிவிட்டார் என்ற குற்றச்சாட்டு நெப்போலியன்மீது பாரிசிலிருந்து வீசப்பட்டது. 'இஸ்லாமியக் கோட்பாடுகளில் எதனையும் ஏற்று நான் பின்பற்றவில்லை ; நான் பள்ளிவாசலில் சென்று வணங்கியதில்லை ; மது குடிப்பதிலிருந்து நான் விடுபடவில்லை. நான் சுன்னத்தும் (Circumcise) செய்துகொள்ளவில்லை. நாங்கள் முஸ்லிம்களின் நண்பர்கள் என்று மட்டுமே கூறினேன் ; அவர்களது நபியை நான் ஏற்றிப் போற்றுவதாகவும் கூறினேன் ; அது முற்றிலும் உண்மை ; இப்போதும் நபிகள் நாயகத்திற்குரிய மரியாதையை வழங்குகின்றேன்' என்ற விளக்கத்தினை அளித்தபின்பே பாரிஸ் கண்டனக் கணைகள் ஓய்ந்தன.

அலெக்சாண்டிரியாவில் நெப்போலியன் ஆறு நாட்கள் தங்கி ஆக்கப்பணிகளில் ஈடுபாடு கொண்டார். மக்களின் உரிமைகளையும், நலன்களையும் காக்கும் சட்டங்கள் உருப்பெற்று உடனே நடைமுறைக்கு வந்தன. காவல்துறை (Police) திருத்தியமைக்கப்

பட்டுத் திறமையாகவும், செம்மையாகவும் செயல்படத் தொடங்கியது. நகரின் வளப்பத்திற்கான பல்வேறு வளர்ச்சித் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஃபிரெஞ்சுப் படையிலுள்ள வீரர்களும், கைத்தொழில் வல்லுநர்களும், கலைஞர்களும் பிறரும் தங்களுடைய பணிகளைத் தொடர்ந்து அலெக்சாண்டிரியாவை ஒரு ஐரோப்பிய நகராகவே மாற்றியமைத்தனர். துறைமுகத்தைப் பழுதுபார்த்து விரிவுபடுத்தும் பணிகளும் தொடர்ந்தன. கோட்டை கொத்தளங்கள் செம்மைப்படுத்தப்பட்டன. தொழிற்கூடங்கள் பல தோன்றின. கல்வி நிறுவனங்களும் ஏராளமாக எழுந்தன. பழைய நாகரிகத்தின் முக்கியக் கூறுகளைத் தேடும் சீரிய பணியும் மேற்கொள்ளப்பட்டது. நாட்டின் அரசு மக்களின் முக்கிய தலைவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது; நெப்போலியனது, மக்கள் நலன் கருதிய திட்டங்களை அவர்கள் செயல்படுத்த முன் வந்தனர். மக்களிடம் புத்தொளியும் புதிய உற்சாகமும் காணப்பட்டன. மாமுலுக்குகளின் கொடுங்கோலாட்சியில் குமுறிய மக்கள் இன்று மனநிறைவுகொண்டு அரசின் பல்வேறு ஆக்கப் பணிகளுக்கு ஆதரவு நல்கினர்.

அலெக்சாண்டிரியாவில் நடந்த மோதலில் முப்பது ஃபிரெஞ்சு வீரர்கள் மாண்டனர். அவர்கள் அனைவரையும் சேகரித்து நெப்போலியன், போம்பேயின் தூண் (Pompey`s Pillar) என்ற கோட்டைக்கு முன் வரிசையாகப் புதைத்து, அங்கு அவர்களது பெயர்களையும் பொறித்துவைத்துச் சிறப்பித்தார். இவ்விரங்கற் கூட்டத்தில் ஃபிரெஞ்சுப் படை முழுதும் கலந்துகொண்டு அவர்களுக்கு வீரவணக்கம் செலுத்தியது. இந் நிகழ்ச்சி ஃபிரெஞ்சு வீரர்களிடையே பெருமிதத்தை உருவாக்கியது. ஒவ்வொரு வீரனும் அத்தகைய வீரச்சாவினைப் பெற்றுத் தனது பெயரையும் புகழையும் நிலவுலகில் நிலைநாட்டத் துடித்தான். தளபதி நெப்போலியனின் பெருந்தன்மையினையும் இறந்த வீரர்களுக்கு வணக்கம் செலுத்தும் பாங்கினையும் பாராட்டிப் போற்றினர் படையினர். இந்த மோதலில் காயமடைந்த வீரர்களும் நன்கு கவனிக்கப்பட்டனர். மருத்துவமனைகளில் அவர்கள் உடனடியாகச் சேர்க்கப்பட்டு நன்கு சிகிச்சை அளிக்கப்பட்டனர். தளபதி கிளிபெர் (Kleber) கூட காயம்பட்டு நன்கு சிகிச்சை அளிக்கப்பட்டார். பொதுவாக, நெப்போலியன் தம் வீரர்களிடம் கொண்டிருந்த பரிவும் பாசமும் அவர்களை மிகவும் கவர்ந்து ஊக்குவித்தன.

அலெக்சாண்டிரியாவை விடுவித்து அங்கு நல்லரசை நிலைநாட்டியபின் தளபதி நெப்போலியன் தம் படைகளுடன் பாலைவனத்தைக் கடக்கும் பணியினை மேற்கொண்டார். அலெக்சாண்

டிரியாவில் தளபதி கிளிபெர் தலைமையில் மூவாயிரம் வீரர்களை நிறுத்திவிட்டு எஞ்சிய படைவீரர்களுடன் அவர் இப்போது கெய்ரோ (Cairo) நோக்கி கிளம்பினார். அவரது கடற்படையின் ஒரு பகுதி நடுநிலக் கடல் வழியே சென்று நைல் நதியின் மேற்கத்திய கிளைநதியான உரோசட்டாவின் முகத்துவாரத்தில் அவரைச் சந்திக்கும்பொருட்டுக் கிளம்பியது. தரைவழியாகச் செல்லும் தளபதியும் அவரது வீரர்களும் அகன்ற பாலைவனத்தில் அறுபது கல் தொலைவு பயணத்தை மேற்கொள்ள வேண்டியதாயிற்று. அனல் கக்கும் கதிரவனின் செந்நிறக் கதிர்களின் கடுமை, மயக்கத்தையும் மருட்சியையும் ஊட்டும் சுடுமணற்பரப்பு ஆகியவற்றை துச்சமென மதித்து விரைந்து சென்றனர் வீரர்கள். மரம், புல், பூண்டு எதுவும் அவர்களது பார்வையில் படவில்லை. ஆங்காங்குள்ள சிறு நீர்நிலைகள் அரேபிய வணிகர்களால் தூர்க்கப்பட்டன. நீர் நிறைந்திருந்த ஒருசில கிணறுகளும் பகைவர்களால் நஞ்சு கலக்கப்பட்டுப் பயனற்றுக்கிடந்தன. வெப்பக்கதிர்கள் வேல்போல் தாக்க, வெளிரிய சுடுமணல் அடிகளைச் சுட்டெரிக்க, நீர்வேட்கை அவர்களின் நிலையினைக் குலைக்க, பகைவர்களின் திடீர்த் தாக்குதல் அவர்களின் பயணத்தைப் பழுதாக்க முற்பட்டும் தளபதி ஊட்டிய தன்னம்பிக்கை என்ற ஒட்டகத்தைக் கொண்டு நெப்போலியனது வீரர்கள் பாலைவனத்தைக் கடக்கும் பணியினைப் பயமின்றித் தொடர்ந்தனர். ஐந்து நாட்கள் சொல்லொணுத் துயரத்தில் துவண்டுவிடாது பாலைவனத்தில் பயணத்தை மேற்கொண்ட வீரர்கள் ஆறுவது நாள் நைல் நதி தங்களின் பார்வையில் பட்டதைக் கண்டு பரவசங்கொண்டனர். தமிழ்நாட்டரசின் சிறப்புப் பரிசாம் பத்து இலட்சத்தைப் பெற்ற ஏழை ஒருவனின் முகமலர்ச்சியும், மகிழ்ச்சி வெள்ளமும் நைல் நதியைக் கண்ட ஃபிரெஞ்சு வீரர்களிடம் காணப் பெற்றன.

அவர்கள் ஆனந்தக் கூத்தாடினர்; மகிழ்ச்சிப்பண் பாடினர்; மெய்மறந்து பரவசத்திலாழ்ந்தனர். முப்பதாயிரம் வீரர்களும் குளிர்ந்த நைல் நதியில் குதித்து மூழ்கிக் குதியாட்டம்போட்டு மகிழ்ந்தனர். மகிழ்ச்சிப் பெருங்கடலில் மனம்விட்டு மிதந்துகொண்டிருந்த வீரர்கள் பாய்ந்துவரும் பகைவர்களின் போர் முழக்கம் கேட்டு குமுறி எழுந்தனர். ஆயிரத்திற்கு மேற்பட்ட மாமுலுக்குக் குதிரைப்படை வீரர்கள் ஃபிரெஞ்சுப் படையினரைத் தாக்கமுற்பட்டனர். நெப்போலியனும் எதிர்த்துத் தாக்க ஆணையிட்டார் தம் வீரர்களுக்கு. பீரங்கிகள் முழங்கின. குண்டுகள் குறி தவறாது சென்று மாமுலுக்குகளைத் தாக்கின. வெகுவிரைவில் அவர்கள் பின்வாங்கி ஓடி மறைந்தனர். இதற்கிடையில் குறிப்பிட்ட நேரத்தில் கப்பற்படையும் அங்கு வந்து சேர்ந்தது. இப்போது நெப்போலியனது படை நைல் நதி

வழியாக கெய்ரோநோக்கி நகர்ந்தது. எகிப்தின் எழிலையும், ஏற்றத்தையும், வனப்பையும், வளப்பத்தையும் கண்டு களித்த வீரர்கள் அங்கு வறுமையில் வாடிய ஏழைகளைக் கண்டு வருந்தினர். மாமுலுக்குகளால் கொடுமைப்படுத்தப்பட்ட செய்திகள் அவர்களைத் திடுக்கிடவைத்தன. கெய்ரோப் பயணத்தின்போழ்து ஒருநாள் நெப்போலியன் அரேபிய முதியவர் ஒருவர் வீட்டில் அவரைச் சந்தித்தார். 'இன்று களையிழந்து, பல இடிபாடுகளுடன் காணப்படும் எனதில்லம் ஒருகாலத்தில் எழில்மிக்க மாடமாகவிருந்தது. நானும் வசதிகள் பல பெற்று வாழ்ந்தேன். அதனை அறிந்த கெய்ரோ மாமுலுக்குகள் என்னை வதைத்துத் துன்புறுத்திப் பணம் பெற்றனர். அவர்களது கொடுமையின் விளைவாக நான் நிரந்தர நொண்டியானேன். மாமுலுக்குகளின் மமதையும் காட்டுமிராண்டிச் செயல்களும் என் நெஞ்சத்தில் நிரந்தர வெறுப்பினை விதைத்துவிட்டன. வாழ்வின் வசதிகளைக் குறைத்துக்கொண்டு இன்று வறிய நிலையில் உள்ளேன். இன்றும் கூட நான் வசதிகள் பலவற்றை உருவாக்கி வாழும் அளவிற்கு பணம்படைத்தவன்தான். ஆனால், மாமுலுக்குகளின் கொடுமை என் வளமான வாழ்விற்குத் தடைபோட்டுள்ளது' என்று கண்களில் நீர்மல்கத் தம் நிலையை எடுத்தியம்பினார் அப் பெரியவர் தளபதி நெப்போலியனிடம். அதனைக் கேட்ட நெப்போலியன் மாமுலுக்குகளின் மட்டமான ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைத்து எகிப்திய மண்ணில் மக்களாட்சியை நிலைநாட்ட மேலும் தீவிரமாக உறுதிகொண்டார். எகிப்திய மக்கள் அவர்களது காட்டாட்சியில் பட்ட தொல்லைகள், துயரங்கள், இழப்புகள், நட்டங்கள் எண்ணிறந்தன. எகிப்தியர்கள் மாமுலுக்குகளின் அடிமைகளாகவே வாழ்ந்து வதைந்தனர். கொடிய மாமுலுக்குகள் விரும்பிய நேரத்திலெல்லாம் தங்கள் மனைவிகளையும் பெண்டு—பிள்ளைகளையும் அவர்களுக்குக் கொடுத்து வாழும் இழிநிலையில் இருந்தனர் எகிப்திய பெருங்குடி மக்கள். எனவே, இத்தகைய காட்டுமிராண்டி ஆட்சியை அகற்றி எகிப்தில் அமைதியை நிலைநாட்டி அங்கு குடியரசை நிறுவ தளபதி தீவிர முயற்சிகளை மேற்கொண்டதில் வியப்பில்லை.

கெய்ரோ நோக்கிச் செல்லும் நெப்போலியனது படைகளைத் திடீரென்று பாய்ந்து தாக்கும்வகையில் மாமுலுக்குகளின் குதிரை வீரர்கள் மறைந்து பின்தொடர்ந்து வந்தனர். அவர்கள் கொரில்லாத் தாக்குதலில் பயிற்சிபெற்றவர்கள். அதற்கு ஈடுகொடுத்து அதனை முறியடிக்கும் வகையில் நெப்போலியனும் தமது படைகளைப் பக்குவமாக மாற்றி அணிவகுத்து நடாத்திச் சென்றார். தம்முடைய படைகளை நாற்கட்ட வடிவில் ஐந்து வகையாகப் பிரித்து அணிவகுத்தார். ஒவ்வொரு முனையிலும்

பீரங்கிப்படை நிறுத்தப்பட்டது. தளபதிகள்,விஞ்ஞானப் படைப் பிரிவினர், இலக்கிய மேதைகள் ஆகியோர் நடுவில் இருந்தனர். இத்தகைய அமைப்புடன் அப் பெரும்படை நகர்ந்து சென்றது. தாக்குதலுக்கான அறிவிப்பு கிடைத்தவுடன் அவர்கள் குறிப்பிட்டபடி இலக்குகளில் தங்கி எதிரிகளைத் தாக்க முன்வந்தனர். பகைவர்களைக் கண்டவுடன் வெளிப்புறக் கோடியில் உள்ள வீரர்கள் உடனே மண்டியிடுவர் ; அவர்களுக்குப் பின்னலிருந்து அவர்களது தலைக்குமேல் இப் படையினர் எதிரிகளைக் குறி வைத்துச் சுடுவர். துப்பாக்கி வீரர்கள் கோட்டைபோல் அமைந்திருக்க, அவர்களுக்கு நடுவே படை முழுதும் பாதுகாப்புடன் பயணத்தை மேற்கொண்டது. படைப் பிரிவிலுள்ள விஞ்ஞான வித்தகர்களும், இலக்கிய மேதைகளும் சவான்கள் (Savans) என்றழைக்கப்பட்டனர். அவர்கள் அமர்ந்து வர கழுதைகள் கொடுக்கப்பட்டிருந்தன. பூவுடன் சேர்ந்த நாரும் மணம் பெறுவதைப்போல, மேதைகளை ஏற்றி வந்த கழுதைகளும் நெப்போலியனது வீரர்களால் பெரிதும் போற்றப்பட்டனர். அவர்கள் அக் கழுதைகளை அரைமேதைகள் (Demi Savans) என்றழைத்து மகிழ்ந்தனர். இத்தகைய படையமைப்புடன் நகர்ந்து வந்த நெப்போலியனது வீரர்கள் ஆங்காங்கே தென்பட்ட மாமுலுக்கு வீரர்களை விரட்டியடித்தனர். இவ்வாறு, ஏழு நாள் பயணத்திற்குப் பின் நெப்போலியனது பெரும்படை கெய்ரோ அருகில் வந்தடைந்தது.

மாமுலுக்கு மன்னன் மூராத் பேயி பத்தாயிரம் பேரடங்கிய புகழ்பெற்ற குதிரைப்படையுடன் நெப்போலியனைச் சந்திக்கத் தயாரானர் கெய்ரோவில். அத்துடன் இருபத்து நான்காயிரம் காலாட்படையினரும் அங்கு அவருக்கு ஆதரவாக அணிவகுத்து நின்றனர். நைல் நதியின் கீழ்க்கரையில் அமைந்திருந்தது கெய்ரோ. ஆனல், நெப்போலியன் தம் படைகளுடன் நைல் நதியின் மேல்கரைவழியாக வந்தடைந்தார் கெய்ரோ. ஜூலைத் திங்கள் இருபத்தொன்றும் நாள் ; அதிகாலை ; எழில்மிக்க எகிப்திய பெருநகரம் கெய்ரோ ஃபிரெஞ்சு வீரர்களின்முன் ஒய்யாரமாகக் காட்சியளித்தது ; அவர்களுக்கு வலப்புறத்தில் வளர்ந்தோங்கிய மலை போன்ற பிரமிடுகளும், அவற்றை ஒட்டிப் பரந்துகிடந்த சமவெளிகளும் கண்கொள்ளாக் காட்சியாக அமைந்திருந்தன. அவற்றைக் கண்ட நெப்போலியனது முகம் மலர்ந்தது. ஆனல், அப் பிரமிடுகளுக்கு அருகிலுள்ள பரந்த வெளியில் அணிவகுத்து நின்ற மாமுலுக்கு குதிரைப்படையினையும், அவர்களுக்குப் பின்னல் நின்ற பெரும் காலாட்படையினையும் கண்ட நெப்போலியன் உடனே தம் படைகளை அணிவகுத்துப் போருக்குத் தயாரானர். எதிரிகளின் அணிவகுப்பு முறை

யினையும், அவர்களது ஆற்றலையும் கண்ட தளபதி மிகவும் வியப்புக் குள்ளானார். தமது புகழ்பெற்ற குதிரையின் மீதமர்ந்தபடி தம் படையின் நடுவில் சென்று தமது தொலைநோக்காடிமூலம் எதிரி களின் அணிவகுப்பினை ஆய்ந்து விரைவில் தாக்குவதற்கான ஏற்ற இடத்தைத் தேர்ந்தெடுத்தார். உடனே, தம் படைகளை வலதுபுறமாகப் பிரமிடுகளுக்கருகில் விரைவாக அழைத்துச் சென்று அங்கிருந்து மாமுலுக்குகளின்மீது தாக்குதலைத் தொடங் கினார். புகழ்பெற்ற பிரமிடுகளுக்கருகில் இச் சண்டை நடந்த காரணத்தால் அதனைப் பிரமிடுப்போர் (Battle of the Pyramids) என்றழைத்தனர். ஃபிரெஞ்சுப் பீரங்கிகள் முழங்கின; துப்பாக்கிகள் எதிரிகளைக் குறிவைத்துத் தாக்கின. ஆயிரக்கணக் கான குதிரைகளும் குதிரைவீரர்களும் குண்டடிபட்டுச் சுருண்டு விழுந்து மணலில் உருண்டனர். பீரங்கிகளும் துப்பாக்கி வேட்டு களும் கிளப்பிய புகையும், படைகள் கிளப்பிய தூசியும் பகைவர் படைகளைக் குழப்பத்தில் ஆழ்த்தின. அதனால், வெறிபிடித்த குதிரைகளின் குளம்படிகளினால் பலர் உயிரிழந்தனர். ஆனால், ஃபிரெஞ்சுப் படையினர் பிரமிடுகளைப்போல உறுதியாக நின்று நிலைகுலையாது தாக்குதலைத் தொடர்ந்தனர். ஃபிரெஞ்சுப் படையின் நடுவே ஊடுருவிச்சென்று தாக்க முயன்று முடியாத, மாமுலுக்குகள் பலர் ஃபிரெஞ்சு வீரர்களின்மீது தங்களுடைய துப்பாக்கிகளை வீசியெறிந்து தாக்கினர். ஆனால், நன்கு பயிற்சி பெற்ற ஃபிரெஞ்சுப் படையினர் மாமுலுக்குகளை மடக்கி வளைத்துத் தாக்கினர். இறுதியில், வேறுவழியின்றி மாமுலுக்குக் குதிரை வீரர்கள் சிதறி ஓடினர். அவர்களைக் கண்ட காலாட் படையினரும் குழப்பத்தில் மூழ்கித் திக்குமுக்காடி ஓடினர். ஆயிரக்கணக்கானோர் ஆற்றில் மூழ்கி நீந்தித்தப்பிக்க முயன்றனர். ஆனால், அவர்கள்மீது விடாது பாய்ந்த குண்டுகளால் அவர்களில் பலர் ஆற்றோடு அடித்துச் செல்லப்பட்டனர். நைல் நதி முழுதும் இரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. பல்லாயிரக்கணக்கான வீரர்கள் பாலைவனத்தை நோக்கி ஓடினர். அவர்களைத் தொடர்ந்து சென்று தாக்கி மாய்த்தனர் ஃபிரெஞ்சு வீரர்கள்.

மாமுலுக்குகளின் தோல்வி உறுதிப்படுத்தப்பட்டது. பரந்த சமவெளி முழுதும் செத்தவர்களும் செத்துக்கொண்டிருந்த வீரர் களும் நிறைந்து காணப்பட்டனர். மாமுலுக்குகளின் மகத்தான படை முகாம் முழுதும் நெப்போலியன் வசமாயிற்று. விலை உயர்ந்த சால்வைகள், பகட்டான வாட்கள், துடிப்பான அரேபியக் குதிரைகள், தங்கக் காசுகள் நிறைந்த பெட்டிகள் எண்ணிறந்த அளவில் ஃபிரெஞ்சுப் படைவீரர்களுக்குக் கிடைத்தன. மாமுலுக்கு வீரர்கள் விலையுயர்ந்த ஆடை அணிகலன்களை அணிவதுடன், நிறைந்த பணத்தையும் தங்க

ளுடன் எடுத்துச்செல்வது வழக்கம். ஆகவே, இறந்துகிடந்த மாமுலுக்கு வீரர்களிடம் பெற்ற பொருள்களும் பணமும் ஏராள மாகும். அவர்களிடமிருந்து பெற்ற தங்கக் காசுகள் மட்டும் ஆறுயிரம் முதல் பத்தாயிரம் ஃபிராங்குகள் மதிப்புள்ளவை யாகும். பிரமிடுப் போரில் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட மாமுலுக்கு வீரர்கள் மாண்டனர். ஆனால், ஃபிரெஞ்சுப்படை யில் மாண்டவர், காயம்பட்டவர் தொகை நூற்றுக்கும் குறை வாகும். மாமுலுக்கு வீரர்கள் நன்கு பயிற்சி பெற்றவர்கள்; உயிரைத் துச்சமென மதித்துப் போரிடும் உள்ள உறுதியினைப் பெற்றவர்கள்; போர்க்களத்தை ' மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை' யாகக் கருதியவர்கள்; ஆற்றல் மறவர்கள்; அவர்களது பேராற் றலை நெப்போலியனே வியந்து பாராட்டினார். 'மாமுலுக்குகளின் குதிரைப்படையும், ஃபிரெஞ்சுக் காலாட்படையும் இணைந்தால் நான் இந்த அகிலம் முழுவதையும் கட்டியாள்வேன்' என்று நெப் போலியன் கூறி மாமுலுக்குகளின் வீரத்தினைப் போற்றியுள்ளார். கெய்ரோவில் மாமுலுக்குகள் பெற்ற அடி ஆஃப்பிரிக்க, ஆசிய நாடு களிலெல்லாம் சென்று எதிரொலித்தது. 'நெப்போலியன்' என்ற சொல் அந் நாடுகளை அச்சத்தால் ஆட்டங்காண வைத்தது. அன்றியும், நெப்போலியனது புகழும் அங்கெல்லாம் பரவியது.

பிரமிடுப்போரின் பயனாக நெப்போலியன் எகிப்து முழுவதற் கும் அதிபதியானார். போர் முடிந்த இரவில் நெப்போலியன் புகழ்பெற்ற கிழக்கத்திய ஆடம்பரத்தின் சின்னமாகத் திகழ்ந்த மாமுலுக்கு மன்னரின் நாட்டுப்புற அரண்மனையில் (Country Palace) நுழைந்தார். அன்று இரவுமுழுதும் அப் பெருமாளிகை யிலுள்ள அலங்கார ஆடம்பரப் பொருட்களைக் கண்டுகளிப்பதில் ஈடுபாடுகொண்டார். மூராத் பேயியின் ஆடம்பரப்பொருட்கள் ஃபிரெஞ்சுத் தளபதியின் உள்ளத்தைக் கவர்ந்தன. அரண்மனைத் தோட்டம் அவரது கண்களுக்கு நல்ல விருந்தாக அமைந்தது. எகிப்திய மண்ணில் நெப்போலியன் காலடிவைத்து இன்றுடன் இருபத்தொரு நாட்களாயின. இக் குறுகிய காலத்தில் எகிப்து முழுதும் அவர் வசமாயிற்று. அவரது புகழ் ஐரோப்பாவில் பரவிய தைப் போல ஆஃப்பிரிக்கா, ஆசியா போன்ற கீழ்த்திசை நாடுகளி லும் விரைவாகப் பரவியது. எகிப்திய மக்களும் நெப்போலியனை விரும்பி வரவேற்றுப் போற்றினர். அவர்களது மேலான ஆதர வும் அவருக்குக் கிட்டியது. அவர்கள் நெப்போலியனைத் தங்களின் வழிகாட்டியாகவும், தங்களை வாழ்விக்க வந்த மாமழையாகவும், தங்களின் விடுதலை வித்தகராகவும் ஏற்றுப் போற்றினர். அவர் வழி நடக்கத் தயாராயினர். அவரை மாமன்னர் கபீர் (Sultan Kabir) என்றும், தீ மன்னர் (King of Fire) என்றும் அவர்கள்

அழைத்து மகிழ்ந்தனர். கெய்ரோவிலிருந்த மாமுலுக்குகளின் மனைவியர்களும் உரிய மரியாதையுடன் நன்கு நடாத்தப்பட்டனர். மூராத்பேயியின் மனைவிக்கு வேண்டிய வசதிகளனைத்தும் உறுதி செய்யப்பட்டன. தமது மகன் ஈஜினை (Eugene) அவ்வம்மை யாரிடம் அனுப்பி அவருக்குத் தேவையான வசதிகளனைத்தும் செய்துகொடுக்கப்படும் என்றும், அவர் தக்க மரியாதையுடனும், மதிப்புடனும் நடாத்தப்படுவார் என்றும்அவரது உடைமைகளனைத் தும் தக்கவாறு பாதுகாக்கப்படும் என்றும் நெப்போலியன் உறுதி யளிக்கச் செய்தார். நெப்போலியனின் பெருந்தன்மையைக் கண்டு வியந்த அவ்வம்மையார் ஈஜினை நன்கு வரவேற்று உபசரித்தார். அவனுக்கு ஓர் அழகிய வைர மோதிரத்தைப் பரிசாகக் கொடுத் துப் பாசத்துடன் வழியனுப்பிவைத்தார்.

நெப்போலியனது வெற்றியைத் தொடர்ந்து முந்நூறுயிரம் மக்கள் தொகையைக் கொண்டிருந்த கெய்ரோ நகரம் குழப்பத் தில் ஆழ்ந்தது. போர்க்குழப்பத்தைப் பயன் படுத்திக்கொண்டு கொடியவர்கள் கொள்ளையிலும் கொலையிலும் ஈடுபாடுகொண் டனர். அதனை அறிந்த தளபதி நெப்போலியன் உடனடியாகத் தம் படையை அனுப்பி அங்கு அமைதியை நிலைநாட்டினார். மக் களின் அன்றாட நிகழ்ச்சிகளுக்கு வழிவகுத்தார். கொள்ளை, கொலைகளில் ஈடுபட்டோர் கொடிய தண்டனைக்குள்ளாயினர். விரைவில், கெய்ரோவில் அமைதி நிலவியது. ஜூலைத் திங்கள் இருபத்திரண்டாம் நாள் நெப்போலியன் தம் படைகளுடன் கெய்ரோ நகருக்குள் கம்பீரமாக நுழைந்தார். கெய்ரோப் பெருங்குடி மக்களும் அவரை விரும்பி வரவேற்றனர். அன்றே நெப்போலியன் மாமுலுக்கு மன்னன் மூராத்பேயியின் புகழ்பெற்ற அரண்மனையினையும் தம் வசப்படுத்தினார். ஆடம்பரத்தின் அழகிய சின்னமாக விளங்கிய அப் பெரிய அரண்மனையிலிருந்துகொண்டு நெப்போலியன் எகிப்திய நலன்பற்றிய ஆணைகள் பல பிறப்பித் தார். எகிப்து நாட்டின் ஏற்றத்துக்கான திட்டங்களை வகுத்து அவற்றை உடனடியாகச் செயல்படுத்தினார் நெப்போலியன். நாட்டை நல்வழிப்படுத்தும் ஒவ்வொரு துறையிலும் அவர் தம் கவனத்தைச் செலுத்தினார். பள்ளிவாசல்கள், அந்தப்புரங்கள் (Harems), பெண்களின் நிலை, சமய அமைப்புகள், விவசாயத்தின் நிலை, கலைகள் போன்ற ஒவ்வொரு துறையிலும் அவர் முழுக் கவனம் செலுத்தினார். செல்வாக்குமிக்க அரேபியப் பெருங்குடி மக்களின் கூட்டத்தைக் கூட்டி அவர்களது அன்பையும் நட்பையும் பெற்றார்; அவர்களது சமயம் தக்கபடி மதிக்கப்படுமென்றும், அவர்களது உரிமைகள் பாதுகாக்கப்படுமென்றும் அவர்களுக்கு நெப்போலியன் உறுதியளித்தார். எகிப்துப் பெருநாட்டில்,

பண்டைய புகழ்பெற்ற நிலையை மீண்டும் உருவாக்கத் தாம் கொண்டிருந்த ஆவலை அவர்களிடம் வெளியிட்டார்.

எகிப்து நாட்டின் ஆட்சிப்பொறுப்பை மக்களிடம் ஒப்படைத்தார் நெப்போலியன். கெய்ரோவில் செல்வாக்கும் சிறப்பும் பெற்ற குடிமக்களைக்கொண்ட பேராண்மைக் கழகம் (Congress) ஒன்றினை நெப்போலியன் நிறுவினார். நாட்டு நலன் கருதிய சட்டங்களை உருவாக்கல், நீதி நிர்வாகம் போன்ற பணிகள் அக் கழகத்திடம் ஒப்படைக்கப்பட்டன. எகிப்தின் பல்வேறு மாநிலங்களிலும் அத்தகைய பேராண்மைக் கழகங்கள் அமைக்கப்பட்டன. அவைகள் தங்களுடைய பிரதிநிதிகளைக் கெய்ரோ பேராண்மைக்கழகத்திற்கு அனுப்பின. எகிப்தில் ஒளிமிக்க கலைக்கழகம் ஒன்றையும் நெப்போலியன் அமைத்தார். ஐரோப்பியக் கலை, விஞ்ஞானக் கருத்துச் செல்வங்களை அக் கழகம் எகிப்து நாடு முழுதும் பரப்பியது. எகிப்து நாட்டுப் படத்தை (Map of Egypt) செம்மையாக வரைவதற்காகச் சில வல்லுநர்கள் நியமிக்கப்பட்டனர். பொறிஇயல் வல்லுநர்களும் விஞ்ஞான மேதைகளும், வரைவு வல்லார்களும் (Draughtsmen) எகிப்து முழுதும் அனுப்பப்பட்டு ஆக்கப்பணிகளில் ஈடுபாடுகொண்டனர். காற்று விசையாலைகள் (Windmills), நீர்விசையாலைகள் (Watermills) பல உருவாக்கப்பட்டன. அலெக்சாண்டிரியா, உரோசட்டா, டெமெய்டா, (Demietta), கெய்ரோ போன்ற நகரங்களில் அமைக்கப்பட்ட ஆலைகளில் அரைத்த மாவு பாரிஸ் ஆலைகளில் அரைத்த மாவைப் போல் அவ்வளவு நேர்த்தியாகவும் மிருதுவாகவும், பளபளப்பாகவும் இருந்தது. ரொட்டி தயாரிக்கும் அடுப்புகள் பல ஆங்காங்கே நிறுவப்பட்டு இப்போது ரொட்டிகள் ஏராளமாகத் தயாரிக்கப்பட்டன. ஒவ்வொரு நோயாளிக்கும் ஒரு படுக்கை என்ற அளவில் ஏராளமான மருத்துவமனைகள் திறக்கப்பட்டன. வெடியுப்பு, வெடிமருந்து ஆகியவை தயாரிக்கும் ஆலைகளும் ஆங்காங்கே எழுந்தன. பிற தொழிற்கூடங்களும், விற்பனை நிலையங்களும் ஏராளமாக ஏற்படுத்தப்பட்டன. ஃபிரெஞ்சு, அரேபிய மொழிகளில் அச்சகங்களும் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு துறையிலும் எகிப்து ஏற்றம் காண்பதற்கான எண்ணிறந்த பணிகள் இரவும் பகலும் இடையறுது தொடர்ந்தன. கெய்ரோவில் செங்கடலையும் நைல்நதியையும் இணைக்கும் கால்வாய் ஒன்றினை வெட்டும் திட்டமும், சூயஸ் பகுதியில் செங்கடலையும், நடுநிலக் கடலையும் இணைக்கும் கால்வாய் ஒன்றினை உருவாக்கும் திட்டமும் மேற்கொள்ளப்பட்டன. இந்தப் பெருந்திட்டங்களுக்கு இருபத்தைந்து மில்லியன் ஃபிராங்குகளும், இரண்டாண்டுகாலப்பணியும் தேவைப்படுமென்று மதிப்பிடப்பட்டது. இத் திட்டங்களின்

பயனுக ஐரோப்பா, ஆசியா, ஆஃப்பிரிக்கா ஆகிய மூன்று கண்டங்களும் முழுப்பயன் பெறும்.

எகிப்து நாட்டை எழிலும் ஏற்றமும் பெற்ற நாடாக்கும் வகையில் ஆக்கப் பணிகளில் அதிதீவிரமாய் ஈடுபாடு கொண்ட நெப்போலியனை எகிப்திய மக்கள் தங்களின் இதயச் சிம்மாசனத்தில் ஏற்றிப் போற்றினர். இதுவரை எந்த வீரனிடமும் காணக் கிடைக்காத அருங்குணங்களும் அரிய செயல்களும் நெப்போலியனிடம் நிறைந்திருந்ததைக் கண்ட எகிப்திய மக்கள் அவரைத் தங்களின் குலவிளக்காகக் கருதி வழிபட்டனர். எகிப்தியப் பெண்கள் பெரிதும் பாதுகாப்புக்குள்ளாயினர்; எகிப்தியர்களின் உடைமைகளும் உயிர்களும் பாதுகாக்கப்பட்டன. அவர்களின் நலனுக்காக முப்பதாயிரம் ஐரோப்பியர்கள் அல்லும் பகலும் அயராது உழைத்தனர். ஆகவே, நெப்போலியனை அவர்கள் அல்லாவின் அன்புக்குரியவரான நபிகள் நாயகத்தின் நாணயமான நல்ல மகன் என்று பாராட்டினர். நெப்போலியனும் எகிப்தியர்களின் சமயச் சடங்குகளிலும், விழாக்களிலும் கலந்துகொண்டு சிறப்பித்தார். பாலைவனக் கொள்ளைக்காரர்களின் கொட்டம் ஒடுக்கப்பட்டது. எவ்விதத் தடையும், இடையூறுமின்றி நீதித்துறை செயல்பட்டது. ஃபிரெஞ்சுப்படை வீரர்களும் எகிப்திய மக்களுடன் நெருங்கிப்பழகி உறவினர்போல் வாழ்ந்தனர். அவர்களது இல்லங்களில் அவர்களுடன் சேர்ந்து புகைத்தல், உண்ணல் ஆகியவற்றில் ஈடுபாடுகொண்டும், அவர்களது குழந்தைகளுடன் ஆடிப் பாடி மகிழ்ந்தும், அவர்களது வீட்டு வேலைகளில் அவர்களுக்கு உதவியாக இருந்தும் ஃபிரெஞ்சு வீரர்கள் தங்களின் நல்லெண்ணத்தையும், நாணயத்தையும் நிலைநாட்டிச் செல்வாக்குடன் திகழ்ந்தனர். ஒருநாள் கொள்ளைக்காரர்கள் சிலர் நாட்டுப் புறத்திலுள்ள உழவன் ஒருவனைக் கொன்றுவிட்டு அவனது ஆடுமாடுகளை ஓட்டிச் சென்றுவிட்டார்கள் என்ற செய்தி அரண்மனையிலிருந்த தளபதிக்கு எட்டியது. ‘உடனே முந்நூறு குதிரை வீரர்களுடனும் இருநூறு ஒட்டகங்களுடனும் சென்று அக் கொடியவர்களை விரட்டிப் பிடித்து இங்கு கொண்டு வருக’ என்ற ஆணையைப் பிறப்பித்தார் அருகிலிருந்த இராணுவ அதிகாரிக்கு நெப்போலியன். அருகிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த எகிப்தியப் பெருங்குடி மகனொருவன் ‘அந்தக் கடைகெட்ட ஏழை, தங்களுக்கு அத்தை மகனா? அவனது இறப்பில் இவ்வளவு ஆவேசம் காட்டுகிறீர்கள்’? என்று தளபதியைப்பார்த்து வினவினான். ‘அந்த ஏழை எனது அத்தைமகன் மட்டுமல்ல; அதற்கும் மேலான உறவினைப் பெற்றவன்; அவனைப் பாதுகாக்கும் அரிய பொறுப்பினை ஆண்டவன் எனக்கு அளித்துள்ளார்’ என்று தளபதி பதில் கூறியவுடனே

அப் பெருங்குடிமகன் அப் பதிலை ஆண்டவனின் அருளைப் பெற்றவனின் வாயிலிருந்து வந்ததாகக் கருதி ஆச்சரியத்தில் மூழ் கினான். இந் நிலையில் நெப்போலியனைக் கொல்லுவதற்கான சதி வேலைகள் பலவும் துருக்கியர்களால் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், அவற்றையெல்லாம் அப்போதைக்கப்போது அறிந்த எகிப்தியர்கள் அவற்றை நெப்போலியனிடம் எடுத்துக்கூறி அவரைக் காப்பாற்றினர். தங்களின் நல்வாழ்விற்கு வழிகாட்டிய தளபதியை கண்களை இமைகள் காப்பதைப்போல் காத்தனர்.

இவ்வாறு, எகிப்திய மக்களுக்கான அரும் பணிகளில் நெப் போலியன் முனைந்து செயல்பட்ட நேரத்தில் அவரது உள்ளத் தை உருக்கும் செய்தியொன்று அவருக்கு எட்டியது. தளபதி புரூயிஸ் (Brueys) நெப்போலியனின் நெருங்கிய நண்பர் ; நம்பிக் கைக்குரிய நல்ல இராணுவ அதிகாரி ; நாட்டுப்பற்று மிக்கவர் ; நன்கு பயிற்சி பெற்று போர் நுணுக்கங்களை முழுதும் அறிந்த வீரர். அவரது தலைமையில் அலெக்சாண்டிரியாவுக்கு அருகிலுள்ள அபௌகிர் (Aboukir) குடாவில் ஒரு ஃபிரெஞ்சுக் கடற்படையை நிறுத்திவிட்டு நெப்போலியன் கெய்ரோநோக்கிப் புறப்பட்டார் என்று முன்பு கண்டோம். மேலும், அபௌகிர் குடாவிலிருந்த படையை அலெக்சாண்டிரியாத் துறைமுகத்திற்குப் பத்திரமாக அழைத்துவந்து சேர்க்கும்படியும் நெப்போலியன் அவருக்கு ஆணை பிறப்பித்திருந்தார். ஆனால், புரூயிஸ் தம் படையை அலெக்சாண்டி ரியாத் துறைக்கு அழைத்துவருவதற்கான பணியில் காலங்கடத்தி னார். இதற்கிடையில் ஆங்கிலத்தளபதி நெல்சன் தலைமையிலுள்ள கடற்படை அபௌகிர் குடாவிலுள்ள ஃபிரெஞ்சுப் படையைத் தாக்க முற்பட்டது. அங்கு நடந்த மோதலில் ஃபிரெஞ்சு வீரர்கள் தீரமுடன் போராடினர். இருப்பினும், கடற்போரில் வல்லுநரான நெல்சனின் நேரடிப்பார்வையில் போரிட்ட ஆங்கில வீரர்கள் அவர்களை விடாது தாக்கினர். இச் சண்டை பதினைந்து மணி நேரம் நீடித்தது. இறுதியில், ஃபிரெஞ்சுப்படை தோற்றது. ஆகஸ்டு திங்கள் முதல் நாளிரவு பதினொரு மணியளவில் நெப் போலியனின் புகழ்பெற்ற 'ஓரியன்ட்' (Orient) என்ற கப்பல் தீப்பற்றி எரிந்தது. நான்கு கப்பல்கள் மட்டும் தப்பி மால்டா நோக்கி விரைந்தன. ஏனைய ஃபிரெஞ்சுக் கப்பல்களனைத்தும் அழிக்கப்பட்டன. ஃபிரெஞ்சுக் கடற்படை தளபதி புரூயிஸ் இப் போரில் மாண்டார். ஆங்கிலத் தளபதி நெல்சனும் தலையில் கடுமையான காயத்திற்குள்ளானார். ஆயிரத்துக்கு மேற்பட்ட ஆங்கிலேய வீரர்களும் ஐயாயிரம் ஃபிரெஞ்சு வீரர்களும் இச் சண்டையில் உயிரிழந்தனர். மூவாயிரம் ஃபிரெஞ்சு வீரர்கள் சிறைப்பிடிக்கப்பட்டனர். இச் சண்டையே வரலாற்றுப் புகழ்

பெற்ற 'நைல்நதிப்போர்' (Battle of the Nile) என்றழைக்கப்படு கிறது. அங்கு ஆங்கிலேயர் பெற்ற வெற்றி குறிப்பிடத்தக்க தொன்றாகும். எகிப்தில் ஏற்படவிருந்த ஃபிரெஞ்சு ஆதிக்கத்திற்கு அது சாவுமணி அடித்தது. நெப்போலியனது ஆசைக் கனவுகளைக் கலைத்ததுடன் அவரது முற்போக்குத் திட்டங்களையெல்லாம் தடுத்து நிறுத்தியது.

ஃபிரெஞ்சுக் கடற்படைக்கு ஏற்பட்ட பேரிழப்பைக் கேள்வி யுற்ற நெப்போலியன் அதிர்ச்சி அடைந்தார். தமது ஆசைகளனைத் தும் கனவானதாகக் கருதி வருந்தினார். நைல் நதிப்போரில் ஃபிரெஞ்சுப்படை பெற்ற தோல்வி நெப்போலியனை இக்கட்டான நிலைக்குத் தள்ளியது. அவர் ஐரோப்பாவிலிருந்து எவ்விதத் தொடர்பும் கொள்ள இயலாதவாறு பிரிக்கப்பட்டுள்ளதாக உணர்ந்தார். தாயகத்திலிருந்து எவ்வித உதவியும் பெற இயலா தென நினைந்து வருந்தினார். எகிப்தில் அவர் சிறைவைக்கப்பட் டிருப்பதாகவே எண்ணினார். இருப்பினும், தம்முடைய நிலையை வெளிக்காட்டாது தமது வீரர்களை வழக்கம்போல் உற்சாகப் படுத்தினார். அன்றியும், தமது நண்பர் புரூயிசின் மனைவிக்கு இரங்கல் மடலொன்றும் அனுப்பினார். 'அன்புள்ள அம்மா! தங்களது கணவர் போர்க்களத்தில் வீரமரணம் எய்தினார். இருமி, ஈளைகட்டி இழுத்துப் பறித்துச் சாவதைவிட இத்தகைய போர்க் களச்சாவு ஏற்றமிக்கது என்பதை நீங்களறிவீர்கள். கொண்ட கணவனை இழந்து நீங்கள் தவிக்கின்றீர்கள்; நானோ நல்ல நண்பனை இழந்து அவதிப்படுகின்றேன்; நமது தாயகமோ நாட்டுப்பற்று மிக்க நல்ல வீரனை இழந்து வருந்துகின்றது. ஆருயிர் கணவனை இழத்தல் மரணவேதனையிலும் கொடியது. அதனால் ஏற்படும் மனவேதனை உங்களது உயிருக்கும் உலைவைக்கவல்லது. உலகில் தனியே கைவிடப்பட்டுள்ளோம் என்ற எண்ணமும், இனி வாழ் வதை விடச் சாவதேமேல் என்ற துணிவும் உங்களுக்குத் தோன் றும். இருப்பினும், இத்தகைய இக்கட்டான நிலையில், உங்களது மக்களை மார்புறத் தழுவுங்கள். அப்போது தங்கள் நெஞ்சத்தில் ஈவும் இரக்கமும் தோன்றி உங்களது நன்மக்களின் நலன் கருதியா வது நீங்கள் உயிர் வாழவேண்டுமென்ற எண்ணம் உதிக்கும். அவ்வெண்ணமே உங்களுக்கு உறுதிபயக்கும் உன்னத வழியாகும். உங்களது குழந்தைகளைக் காத்து அவர்களுக்குரிய கல்வி புகட்டுவது உங்களது கடமையன்றோ? உங்களது கணவரைப்பற்றியும், அவரது வீரத்தைப்பற்றியும், அவரை இழந்ததால் நீங்கள் பட்ட வேதனையைப் பற்றியும், அவரது இறப்பால் அக் குழந்தைகளும் நமது குடியரசும் பெற்ற பேரிழப்பு பற்றியும் உங்களுடைய குழந் தைகளுக்கு எடுத்துக் கூறி அவர்களை உன்னத வீரர்களாக்குங்கள்,

அக் குழந்தைகளின் நலன் கருதியாவது தாங்கள் துன்பத்தை விடுத்து ஆறுதல் பெறுதல் அவசியம். தங்களுக்கு நான் ஆற்ற விருக்கும் உதவியும் தங்களுக்கு ஆறுதலை அளிக்கும் என நம்பு கிறேன்.' இவ்விரங்கல் மடல் புரூயிஸ்மீது நெப்போலியன் கொண் டிருந்த நட்பினையும் நல்லெண்ணத்தையும் வெளிக்காட்டு வதாகும்.

நைல்நதி வெற்றியைக் கேள்விப்பட்ட ஐரோப்பிய மன்னர் களெல்லாம் அதனைத் தங்கள் சொந்த வெற்றியாகக்கருதி விழா வெடுத்து மகிழ்ந்தனர். இங்கிலாந்து தளபதி நெல்சனுக்கு விருதுகள் பல வழங்கிச் சிறப்பித்தனர். அவர் உடனடியாக நைல் நதிப்பகுதியின் கோமானுக்கப்பட்டார். ஆண்டு ஒன்றுக்கு இரண்டாயிரம் பவுன்கள் ஒய்வுக்கால ஊதியமாக அவருக்கு வழங்கப்பட்டது. இவ்வூதியம் அவரது இரு வாரிசுகளுக்கும் தொடர்ந்து நீடித்தது. இரஷ்யப் பேரரசரும், சார்டினிய மன்னரும், நேப்பிள்ஸ் அரசரும் கிழக்கிந்திய கம்பெனியும் நெல் சனுக்கு விலையுயர்ந்த விருதுகளும், பரிசுகளும் வழங்கிச் சிறப்பித் தனர். நெப்போலியனால் நசுக்கப்பட்ட வல்லாட்சி மீண்டும் ஐரோப்பாவில் தலைதூக்க முற்பட்டது. விடுதலைபெற்ற மக்கள் மீண்டும் துன்பத்திற்குள்ளாயினர். ஃபிரெஞ்சுக் குடியரசுக்கு எதிராக மீண்டும் இங்கிலாந்து ஐரோப்பிய நாடுகளின் ஆதரவைப் பெறுவதற்கான வாய்ப்பும் அதற்கு இப்போது கிட்டியது. ஐரோப் பாவில் மன்னர்களனைவரும் இந்த வெற்றியால் ஆனந்தக் கூத்தாடி னர். ஐரோப்பியக் குடியரசுகளனைத்தும் துக்கத்திலாழ்ந்தன.

இதற்கிடையில் பிரமிடுப்போரில் தோற்றோடிய மூராத்பேயி பல ஆயிரக்கணக்கான குதிரைவீரர்களுடன் எகிப்தின் மேல் பகுதி யில் தங்கி ஃபிரெஞ்சுக்காரர்களைத் தாக்கமுற்பட்டார். உடனே, நெப்போலியன் தளபதி தேசாய் தலைமையில் ஒரு பெரும்படையை அனுப்பி மாமுலுக்குகளை வீழ்த்தி எகிப்தின் மேல்பகுதியிலும் ஃபிரெஞ்சு ஆதிக்கத்தை நிலைநாட்டினார். ஆனால், மாமுலுக்குகள் எந்தவிலை கொடுத்தேனும் ஃபிரெஞ்சுக்காரர்களை எகிப்திலிருந்து விரட்டியடிக்க, விடாது போரிட்டு வந்தனர். இந் நிலையில் அபௌகிர் போரில் வென்ற இங்கிலாந்து ஃபிரெஞ்சுக் குடியரசுக் கெதிரான போர்ப்பணிகளைத் தீவிரப்படுத்தியது. துருக்கியும் இங்கிலாந்தின் தூண்டுதலால் ஃபிரெஞ்சுக்கெதிராக போர்ப் பரணி பாடியது. இரஷ்யாவும் ஆங்கிலேயரின் ஆற்றல் மிக்க பேச்சில் மயங்கி ஃபிரெஞ்சுக் குடியரசுக்கெதிராகப் போரில் குதித் தது. எகிப்தில் ஃபிரெஞ்சுக்காரர்களை முறியடித்து அங்கிருந்து அவர்களை விரட்டும் பணியில் இரஷ்யா முழுக்கவனம் செலுத்தி யது. இரஷ்யப் படையொன்று துருக்கியப் படையுடன் இணைந்து

இப் பணியில் தீவிரமாக ஈடுபட்டது. இதுவரை எதிரிகளாயிருந்த கிறிஸ்தவர்களும் இஸ்லாமியர்களும், பழைய பகைமையை மறந்து ஃபிரெஞ்சுக் குடியரசை வீழ்த்தும் பணியில் ஒன்றுபட்டனர். ஒன்றோடொன்று சீறிப்பாய்ந்துகொண்டிருந்த சிலுவையும், பிறையும் இப்போது இணைந்து, தங்களின் சீற்றத்தைப் ஃபிரெஞ்சுக் குடியரசுமீது செலுத்தின. இதுவரை ஒன்றையொன்று கடித்துக் கொண்டிருந்த கொரானும் விவிலிய நூலும் இன்று ஒன்றுபட்டு ரூசோவின் 'சமுதாய ஒப்பந்தத்தின்' மீது தாக்குதலைத் தொடங்கின. இந் நாள்வரை ஒன்றையொன்று விடாது எதிர்த்துத் தாக்கி வந்த இஸ்லாமும், கிறிஸ்தவமும் இன்று ஒன்றுபட்டு பகுத்தறிவாளர்கள்மீது பாணத்தைத் தொடுத்தன. எகிப்திய மண்ணிலிருந்து ஃபிரெஞ்சுக்காரர்களை விரட்டும் பணியில் மும்முரமாயிருந்த ஆங்கிலக் கடற்படைக்கு உதவும்வகையில் இரஷ்ய-துருக்கிய இணைப்புப்படையொன்று நடுநிலக்கடல் வந்து சேர்ந்தது. ஆகவே, இரஷ்யா, துருக்கி, இங்கிலாந்து ஆகிய நாடுகளின் வலிமை மிக்க கடற்படை நடுநிலக்கடலில் தங்கி ஃபிரெஞ்சுக்காரர்களை வீழ்த்தத் தயாராயின. இருபதாயிரம் துருக்கிய வீரர்களும் ரோட்ஸ் (Rhodes) வந்து சேர்ந்தனர். நடு நிலக்கடலிலுள்ள கடற்படையின் துணையுடன் எகிப்தில் இறங்கி அங்கு ஃபிரெஞ்சு வீரர்கள்மீது தாக்குதலைத் தொடங்க அவர்கள் திட்டமிட்டனர். அத்துடன் சிரியாவிலும் ஒரு பெரும்படை ஃபிரெஞ்சுப் படைக்கெதிராகத் திரட்டப்பட்டது. அப் படை பாலைவனத்தைக் கடந்து வந்து எகிப்தில் ஃபிரெஞ்சுக்காரர்களைத் தாக்கத் திட்டமிட்டது. இந்தியாவில் ஆதிக்கம் செலுத்திய இங்கிலாந்து அங்கும் ஒரு பெரும்படையைத் திரட்டி ஃபிரெஞ்சுக்காரர்களைத் தாக்கும் பொருட்டுச் செங்கடல் பகுதிக்கு அனுப்பிவைத்தது. அன்றியும் ஆஸ்திரியா, சார்டினியா, நேப்பிள்ஸ் ஆகிய நாடுகளுடன் ஒரு புதிய உடன்பாடு செய்து அவற்றை ஃபிரெஞ்சுக் குடியரசுக் கெதிராகத் திருப்புவதிலும் இங்கிலாந்து வெற்றி பெற்றது. அவைகள் மீண்டும் இத்தாலியிலிருந்து ஃபிரெஞ்சுக்காரர்களை விரட்டியடித்து ஃபிரெஞ்சுக் குடியரசின்மீது பாய்ந்து தாக்கத் திட்டமிட்டனர். இவ்வாறு, நாலாபக்கமும் ஃபிரான்சுக்கெதிராகப் படைகள் திரண்டன. 'எரிந்து கொண்டிருக்கும் நெருப்பு வளையத்திற்கிடையே ஏற்றிவைக்கப்படாத கற்பூரத்தைப் போல' ஃபிரெஞ்சுக் குடியரசு இருந்தது.

மாமுலுக்கு மன்னன் மூராத்பேயியும் நிலைமை தமக்குச் சாதகமாக இருப்பதை உணர்ந்து எகிப்தில் மீண்டும் தமது ஆட்சியை நிலைநாட்டத் திட்டமிட்டார். துருக்கியர்களின் துணைகொண்டு ஒரு குறிப்பிட்ட நாளில் எகிப்து முழுதும் பரந்திருந்த ஃபிரெஞ்

சுக்காரர்களைத் திடீரென்று தாங்கி அவர்களனைவரையும் எகிப்து நாட்டிலிருந்து வெளியேற்றும் வகையில் ஒரு சதித்திட்டம் உருவாயிற்று. 1798ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் இருபத்தொன்றும் நாள் அதிகாலை கெய்ரோ நகரம் கிளர்ச்சிக்குள்ளாயிற்று. மூராத்பேயியின் புகழ்பெற்ற அரண்மனையில் நெப்போலியன் தூங்கிக்கொண்டிருந்தார். கிளர்ச்சிக்காரர்கள் அரண்மனைக் காவலாளிகளையும் அதிகாரிகளையும் கொன்று அரண்மனை வாயிலருகே வந்து சூழ்ந்துகொண்டனர். அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்த நெப்போலியனுக்கு இத் திடுக்கிடும் செய்தி தெரிவிக்கப்பட்டது. அவர் உடனே எழுந்து, எவ்வித ஆரவாரமுமின்றி நிலைமையைக் கேட்டறிந்தார். அத்தகைய இக்கட்டான நிலையிலும் அவரது உள்ளம் கலங்கவில்லை; உறுதி குறையவில்லை. அவரது துணிவும் ஆற்றலும் குன்றின் மேலிட்ட விளக்குபோல் திகழ்ந்தன. உடனே, தமது குதிரையிலமர்ந்து தம்முடைய நம்பிக்கைக்குரிய சிறிய பாதுகாப்புப்படையுடன் கிளர்ச்சிக்காரர்கள் இருந்த ஆபத்தான இடத்திற்கு எவ்வித அச்சமோ, கலக்கமோ இன்றிச் சென்றார். நெப்போலியனை நேரில் கண்ட மாமுலுக்குகள் நடுங்கத் தொடங்கினர். துப்பாக்கிக்குண்டுகள் அவர்களைத் துளைத்துச் சென்றன. பீரங்கி வேட்டுகள் மாமுலுக்குகளைக் குழப்பத்திலாழ்த்தின. கெய்ரோ நகர வீதியெல்லாம் குருதி வெள்ளம்; கிளர்ச்சிக்காரர்களின் பிணக்குவியல்; செத்துக்கொண்டிருப்போரின் கூக்குரல். நெப்போலியனது தாக்குதலுக்கு ஈடு கொடுக்க வியலாத மாமுலுக்குக் கிளர்ச்சிக்காரர்களில் பலர் உயிருக்கஞ்சி ஓடி ஒளிந்தனர். கிளர்ச்சி பிசுபிசுத்தது. இனி நெப்போலியனுக்கெதிராக வாள் தூக்கும் வலிமையை அல்லது துணிச்சலை எந்த அரேபியனும், துருக்கியனும் பெற்றிருக்கவில்லை. மாமுலுக்குகளின் கிளர்ச்சியை நெப்போலியன் ஒடுக்கியதின் விளைவாக அவரது வலிமை இன்னும் அதிகரித்தது. அவரது புகழ் மேலும் பரவியது. தம்முடைய படைவீரர்களைத் தமது சொந்த மக்களாகக் கருதிய நெப்போலியன் முப்பதாயிரம் ஃபிரெஞ்சு வீரர்களின் உயிர்களையும் தம்முயிராகக் கருதிக் காத்து வந்தார். கெய்ரோக் கிளர்ச்சியை நசுக்கிய நெப்போலியன் ஒன்றுபட்ட இங்கிலாந்து, இரஷ்ய, துருக்கியப் படைகளுடன் மோதுவதற்குத் தயாரானார்.

1799ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் முதல் வாரத்தில் சிரியா நாட்டுப் பெரும்படை யொன்று ஆங்கிலேயர் உதவியுடன் பாலைவனத்தைக் கடந்து எகிப்தின்மீது படையெடுத்து எல் ஆரிஷ் (El Arish) நகரத்தைப் பிடித்துவிட்ட செய்தி நெப்போலியனுக் கெட்டியது. எல் ஆரிஷ் எகிப்திய எல்லைக்குட்பட்ட சிறிய நகரம்.

பாதுகாப்பு அரண்களுடன் கூடிய அந்த அழகிய நகரம் துருக்கியர்களால் துன்பத்திற்குள்ளாக்கப்பட்டு சோர்ந்திருந்தது. உடனே, நெப்போலியன் தமது படையுடன் பாலைவனத்தைக் கடந்து சென்று ரோட்ஸ் (Rhodes) நகரிலுள்ள படையும், சிரியாப் படையும் இணைவதற்குள் சிரியாப் படையை வீழ்த்தி எல் ஆரிஷ் நகரை விடுவிக்கத் திட்டமிட்டார். திட்டம் உடனடியாகச் செயல் படுத்தப்பட்டது. ஆஃப்பிரிக்காவையும் ஆசியாவையும் பிரிக்கின்ற நூற்றைம்பது கல் அகலப் பாலைவனத்தில் தளபதி நெப்போலியன் பத்தாயிரம் வீரர்களுடன் பயணத்தைத் தொடர்ந்தார். பாலை வனத்தைக் கடப்பதற்காக அரேபிய ஒற்றைத்திமிள் ஒட்டகங்கள் பல பயன்படுத்தப்பட்டன. ஒவ்வொரு ஒட்டகத்திலும் முதுகுப் புறமாக இரண்டு பேர் அமர்ந்து சென்றனர். அவ்வொட்டகங்கள் உணவு, தண்ணீர், ஓய்வின்றி தொண்ணூறு கல் தூரம் பாலைவனத் தில் தொடர்ந்து பயணம்செய்யும் ஆற்றலைப் பெற்றவை. இப் புதியபடை அரேபிய ஒற்றைத்திமிள் ஒட்டகப்படை (Dromedary-Regiment) என்றழைக்கப்பட்டது. அப் படை பாலைவனத்தில் ஐந்து நாட்கள் விடாது பயணத்தை மேற்கொண்டு ஐந்தாம் நாள் நடு இரவு எல் ஆரிஷ் நகர் வந்தடைந்தது. அந் நகரைக் கைப்பற்றிய துருக்கிய வீரர்கள் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந் தனர். அவ்வளவு விரைவில் எதிரிகள் படை அங்கு வரும் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. நெப்போலியனும் சூட்டோடு சூடாகத் தாக்குதலைத் தொடங்கினர். பீரங்கிகள் முழங்கின; துப்பாக்கி வேட்டுகள் கிளம்பின. எதிர்பாராத தாக்குதலுக் குள்ளான சிரியா படை சிதறி ஓடியது. எல் ஆரிஷ் கோட்டை நெப்போலியன் வசமாயிற்று. இரண்டாயிரம் சிரியாப் படை வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டனர். ஆனல், தளபதி நெப்போலியன் அவர்களிடம் தமக்கெதிராகப் போரில் குதிப்பதில்லை என்ற உறுதி மொழியினைப் பெற்று அவர்களை மன்னித்து அனுப்பிவிட்டார். ஆனல், அவர்கள் விரைவில் தங்களது உறுதிமொழியினைக் காற்றில் பறக்கவிட்டு மீண்டும் சிரியாப் படையில் சேர்ந்து நெப்போலியனை எதிர்க்கத் துணிந்தனர். சிரியா மன்னர் அகமதின் படையில் அவர்கள் சேர்ந்து ஃபிரெஞ்சுப் படைகளுக்கெதிராகப் போரிட முன்வந்தார்கள். எல் ஆரிஷ் கோட்டையைப் பிடித்தபின் நெப் போலியன் மீண்டும் பாலைவனத்தில் தம் பயணத்தைத் தொடர்ந் தார். விரைவில் சிரியா மலைகளைக் கடந்து காஜா (Gaza) நகர் வந்தடைந்தார் நெப்போலியன். அங்கு துருக்கியப் பெரும்படை யொன்று அவர்களைத் தாக்கியது. அப் படைக்கு சிரியா மன்னர் கொடிய அகமதே தலைமை தாங்கினர். அவரது ஈவிரக்கமற்ற செயல்களாலும், படுகொலைகளாலும் அவர் 'கொலைகாரன் அகமது' (Ahamed the Butcher) என்றழைக்கப்பட்டார். ஃபிரெஞ்சு வீரர்

கள் துருக்கியப் பெரும் படைமீது பாய்ந்து தாக்கினர். அவர்களது தாக்குதலைத் தாங்க இயலாத அகமது தம்முடைய படைவீரர் களுடன் பஞ்சாய்ப் பறந்தோடினர். காஜா நகரமும் சேகரித்து வைக்கப்பட்டிருந்த போர்க்கருவிகளுடனும் ஏராளமான உணவுப் பொருட்களுடனும் நெப்போலியன் வசமாயிற்று. ஆனால், அவரைச் சூழ்ந்துள்ள ஆபத்துகள் அதிகரித்தனவே யன்றிக் குறைந்த பாடில்லை. அவருக்கு அலெக்சாண்டிரியாவிலிருந்து வரும் உதவி களைத் தடுக்கும் பொருட்டும், அவரது படைத்துறை முன்னேற்றத் தைத் தடுத்து நிறுத்தும் வகையிலும் இங்கிலாந்தும் அதன் நட்பு நாடுகளும் மும்முரமாகப் பணியாற்றின. டமாஸ்கஸ் (Damascus) நகரில் முப்பதாயிரம் துருக்கிய வீரர்கள் ஃபிரெஞ்சுக்காரர்களைத் தாக்கக் காத்திருந்தனர். ரோட்ஸ் (Rhodes) நகரில் முப்பதாயிரம் வீரர்கள் முனைந்துநின்றனர் நெப்போலியனை வீழ்த்த. இருப்பினும், நெப்போலியன் சிறிதும் தளராது பகைவர்களை அவர்களின் இருப் பிடத்திலேயே சந்திக்கத் தயாரானர். மார்ச் திங்கள் மூன்றும் நாள் நெப்போலியன் தம் படையுடன் புகழ்பெற்ற ஜாஃபா (Jaffa) நகர் வந்தடைந்தார். அது நல்ல படை பலத்துடன் விளங்கிய பாதுகாப்பான இடம். மேலும், எதிரிகள் எளிதில் நெருங்கா வண்ணம் அதனைச் சுற்றிலும் உயர்ந்த தடுப்புச்சுவர் ஒன்றும் இருந்தது. அந் நகரின் பாதுகாப்பிற்காகக் கடலில் கப்பல்கள் விரைந்து வந்துகொண்டிருந்தன. எனவே, எவ்விதத் தாமதமு மின்றி நெப்போலியன் அப் பெருஞ்சுவரில் ஆள் நுழைவதற்கான ஓட்டை ஒன்றினை உருவாக்கி அதன்வழியாக அங்கிருந்த துருக்கியத் தளபதியைச் சரணடையும்படி தூதர் ஒருவரை அனுப்பிக் கேட் டார். ஆனால், அந்தத் துருக்கியத் தளபதி சரணடைய மறுத்து, வந்த தூதரையும் படுகொலைசெய்து அவரது தலையை ஓர் உயர்ந்த கம்பத்தில் கட்டித் தொங்கவிட்டார். உடனே, ஃபிரெஞ்சு வீரர் கள் சுவரை சுக்கு நூறாக்கத் தாக்குதலைத் தொடங்கினர். ஜாஃபா நகரம் முழுதும் பயங்கரக் கூச்சலும் குழப்பமும் மிகுந்தன. இரு தரப்பிலும் எண்ணிறந்தோர் இறந்துபட்டனர். அப் பெருநகரம் விரைவில் சூறையாடப்பட்டது. இறுதியில் துருக்கியப் படைகள் தலைதெறிக்க ஓடின. ஜாஃபா நகரம் வீழ்ந்தது. மீண்டும் இரண் டாயிரம் பேர் சிறைபிடிக்கப்பட்டனர். அவர்கள் ஏற்கெனவே எல் ஆரிஷ் போரில் சிறைப்பட்டு மன்னித்து விடுதலை செய்யப் பட்டவர்கள். ஆனால், அவர்களுக்கெல்லாம் உணவு கொடுத்து காக்கும் அளவு உணவு பற்றாக்குறையாக இருந்த காரணத்தால், அவர்கள் அனைவரும் சுட்டுக் கொல்லப்பட்டனர். அவர்களைக் கொல்லுவதற்கான ஆணையைப் பிறப்பிக்குமுன் நெப்போலியன் போர்க்குழுவினைக் கூட்டி மூன்று நாட்கள் தொடர்ந்து விவாதித் தார். இருப்பினும், இத்தகைய இழி செயலுக்கு இடம் தராத

நெப்போலியன் குழுவின் முடிவுக்குக் கட்டுப்பட்டுத் தயங்கிய படியே அக் கைதிகளைக் கொல்வதற்கான ஆணையைப் பிறப்பித் தார்.

அடுத்து, நெப்போலியன் சிரியாவின் முக்கிய படைத்துறை நிலையமான அக்ரா (Acre) மீது பாய்வதற்குத் தயாரானார். அந் நகரைச்சுற்றிலும் தம் படைமுழுவதையும் நிறுத்தித் தக்க பாது காப்பு ஏற்பாடுகளைச் செய்திருந்தார் சிரியா மன்னர் 'கொலைகார அகமதின்' துணைத்தளபதி பிலிப்பா (Colonel Phillipeaux) என்ப வர். அவர் படைநுணுக்கங்களை நன்கு அறிந்தவர். நெப்போலிய னுடன் இராணுவப்பள்ளியில் பயின்றவர். ஃபிரெஞ்சு மன்னர் களின் ஆதரவாளர். அவர் இப்போது தம் ஆற்றல் முழுவதையும் பயன்படுத்தி அக்ரா நகரின் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்துமுடித் தார். மேலும், அப் பெருநகரின் காவலுக்காக ஆங்கிலக் கடற் படைத் தளபதி சிட்னிசிமித் என்பவர் ஏராளமான பொறியி யல் வல்லுநர்களையும், பீரங்கிப்படையினையும், பிற போர்க்கருவி களையும் அங்கு கொண்டுவந்து குவித்தார். அன்றியும், அவர் நெப்போலியனுக்கு உதவும் பொருட்டு நாற்பத்தி நான்கு கனரகத் துப்பாக்கிகளை ஏற்றிவந்த கப்பல் ஒன்றையும் கைப்பற்றினார். இவ் வாறு, தக்க பாதுகாப்புடன் விளங்கிய அக்ரா நகரை எப்படியும் வீழ்த்தவேண்டும் என்று தளபதி நெப்போலியன் முடிவுசெய்தார். முற்றுகைக்கான ஏற்பாடுகள் தொடர்ந்தன. தமது படைகளைத் தக்க இலக்குகளில் தக்கவாறு நிறுத்தினார். ஆனால், தாக்குதலைத் தொடங்குவதற்குமுன் சிரியா மன்னர் அகமதிடம் தூதுவர் ஒரு வரை அனுப்பிப் போரினைத் தடுக்க முற்பட்டார். இப்போது அவர் மிகக்கவனமாக துருக்கிய வீரன் ஒருவனையே தூதாக அனுப் பினார். ஆனால், கொடிய கொலைகாரன் அகமது அந்த நல்லெண் ணத் தூதனையும் கொலைசெய்து அவனது தலையை நெடிய கம்பத் தில் கட்டித் தொங்கவிட்டதுடன் அவனது உடலை பையில் போட் டுத் தைத்து கடலில் வீசியெறிந்தார். அகமதின் அநாகரிகக் காட்டுமிராண்டிச் செயலைக் கண்ட நெப்போலியன் அடங்காக் கோபங்கொண்டார். அடுத்து, சிரியா நாட்டு மக்களுக்கு ஒரு அன்பு வேண்டுகோளும் நெப்போலியன் விடுத்தார் : 'சிரியா பெருங்குடிமக்களே! நான் இங்கு வந்திருப்பது உங்களையெல் லாம் தாக்கி வீழ்த்தி உங்கள் நாட்டை அடிமைப்படுத்தி ஆள வேண்டும் என்பதற்காக அல்ல. மாறாக, மாமுலுக்குகளையும் அகமதின் படைகளையும் இந்த மண்ணிலிருந்து விரட்டியடிப்ப தற்கே. என்னை எகிப்தில் தாக்குவதற்காக எந்த உரிமையின் அடிப்படையில் அகமது தம் படைகளை அனுப்பினார்? அவரே என்னை வலியச் சண்டைக்கு இழுத்துள்ளார். ஆகவே, நான்

போரிடப்போவது அவருடன்தான்; உங்களுடன் அல்ல. நீங்கள் வழக்கம்போல் பாதுகாப்புடன் அச்சமின்றி இருக்கலாம். உங்களுக்கு என்னுல் எவ்வித ஆபத்தும் வராது. உங்களுடைய சொத்துகள் பாதுகாக்கப்படும். உங்களுடைய சமயம் உரிய மதிப்பைப் பெறும்; பள்ளிவாசல்கள் சிறப்பிக்கப்படும். எதிரிகளை இரும்புக்கரங்கள் கொண்டு நசுக்குவேன்; ஏழைகளையும் நண்பர்களையும் கரும்புக் கரங்கொண்டு காப்பேன்' என்றுகூறி நெப்போலியன் சிரியா மக்களின் சிந்தனையைத் தூண்டினர்.

அடுத்து, நெப்போலியன் அக்ரா கோட்டையை முற்றுகையிட்டார். துருக்கியர்களும் முற்றுகையை முறியடித்துக் கோட்டையைக் காக்க முனைந்துநின்றனர். இஸ்லாமியர்களனைவரும் இப்போது கிறிஸ்தவர்களுக்கு எதிராகப் புனிதப்போரில் இறங்கினர். 'கிறிஸ்தவ நாய்களை' விரட்டியடிக்கும் புனிதப் போரில் குதிக்கும்படி முஸ்லிம் பெருமக்களனைவருக்கும் வேண்டுகோள் விடப்பட்டது. எனவே, அக்ரா நகரைக் காப்பாற்ற எண்ணிறந்த படைகள் நாலாபக்கங்களிலிருந்தும் கிளம்பின. டமாஸ்கஸ் பல ஆயிரக்கணக்கான வீரர்களை அனுப்பியது. புகழ்பெற்ற மாமுலுக்குக் குதிரை வீரர்கள் விரைந்தனர் அக்ரா நோக்கி. இருப்பினும், தளபதி நெப்போலியன் பத்து நாட்கள் தொடர்ந்து அக்ரா கோட்டை முற்றுகையில் மும்முரமாயிருந்தார். அப்போது துருக்கியப் பெரும்படை ஒன்று அக்ரா நோக்கி விரைந்து கொண்டிருந்த செய்தி அவருக்கு எட்டியது. அப் பெரும்படையில் முப்பதாயிரம் வீரர்கள் இருந்தனர். அவர்களில் பன்னிரண்டாயிரம் பேர் நன்கு பயிற்சியும் தேர்ச்சியும் பெற்றுத் தன்னிகரற்று விளங்கிய குதிரைப்படையினர் ஆவர். ஆனுல், நெப்போலியன் அப்போது எண்ணுயிரம் உறுதிபடைத்த வீரர்களை மட்டுமே பெற்றிருந்தார். அவர்களைக் கொண்டுதான் ஆற்றல்மிக்க துருக்கியர்களையும், அவருக்குத் துணையாக வந்துகொண்டிருக்கும் பிறரையும் வீழ்த்தும் பணியில் தீவிரமாக நெப்போலியன் இறங்கினர். இரண்டாயிரம் வீரர்களை அக்ரா முற்றுகையைத் தொடர்ந்து நடாத்தும்படி பணித்து எஞ்சிய ஆறுயிரம் வீரர்களுடன் முப்பதாயிரம் வீரர்களடங்கிய துருக்கியப் பெரும்படையை எதிர்கொண்டு தாக்கக் கிளம்பினர் தளபதி நெப்போலியன். மூவாயிரம் ஃபிரெஞ்சு வீரர்கள் தளபதி கிளிபெர் (Kleber) தலைமையில் முன்னுல் சென்றனர். எஞ்சிய மூவாயிரம் வீரர்களுடன் நெப்போலியன் அவர்களுக்குப் பின்னுல் வேறுவழியில் சென்ருர். கிளிபெரின் படை தேபோர் மலைக்கடுத்துள்ள பரந்த வெளியினை விரைவில் வந்தடைந்தது. 1799ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பதினுரும் நாள் அதிகாலை; உதயசூரியன் பாலஸ்தீன் குன்றுகளுக்கு மேலே களங்கமற்ற வானத்

தில் தன் கதிர்களைப் பாய்ச்சி எழுந்துகொண்டிருந்தான். அப்போது அங்கு அணிவகுத்துநின்ற ஆடம்பரத்தின் சின்னமாகத் திகழ்ந்த துருக்கியப் படையினரின் வாட்கள்மீதும், கேடயங்கள்மீதும், பள பளக்கும் பட்டாடைகள்மீதும் செங்கதிர்கள் பட அவை கண்களைப் பறிக்கும்வண்ணம் மின்னிக்கொண்டிருந்தன. அக் காட்சியைக் கண்ட ஃபிரெஞ்சு வீரர்கள் ஆரவாரத்துடன் துருக்கியர்களோடு மோத அணிவகுத்து நின்றனர். தங்களுக்குச் சரியான இரை கிடைத்துவிட்ட மகிழ்ச்சியில் துருக்கிய வீரர்கள் ஃபிரெஞ்சுக் காரர்கள்மீது பாய்ந்து தாக்கினர். மூவாயிரம் ஃபிரெஞ்சு வீரர் கள் முப்பதாயிரம் துருக்கியர்களுடன் முனைந்து போரிட்டனர். ஒவ்வொரு ஃபிரெஞ்சு வீரனும் தனக்குள்ள ஆபத்தினை உணர்ந்து உணர்ச்சியுடன் போரிட்டான். மான் கூட்டத்தில் சிங்கம் புகுந்த தைப்போல துருக்கியர்களிடையே ஃபிரெஞ்சு வீரர்கள் புகுந்து தாக்கினர். ஆறுமணி நேரம் தாக்குதல் நீடித்தது. ஆனால், வெற்றி—தோல்வி நிர்ணயிக்க இயலவில்லை. ஃபிரெஞ்சுப் பீரங்கிக் குண்டுகள் துருக்கியர்களைத் துளைத்துக்கொண்டேயிருந்தன. இருப் பினும், அவர்கள் நிலைகுலையவில்லை. எண்ணிறந்த குதிரைகள் மாய்ந்தன. பிணங்கள் குவிந்தன. ஏழுமணி நேரம் இடைவிடாத சண்டை; இருப்பினும், எவரும் சளைக்கவில்லை; இருதரப்பிலும் புதிய வேகத்துடன் தாக்குதல்கள் தொடர்ந்தன. எங்கும் குழப் பம்; புகை மயம். இந் நிலையில், நெப்போலியன் தம் வீரர்களுடன் அங்கு வந்துசேர்ந்தார். முப்பதாயிரம் வீரர்களுடன் தமது வீரர் கள் மூவாயிரம் பேர் ஏழுமணிநேரம் விடாது போரிட்ட பாங்கினைப் பாராட்டினார். அந்த மோதலில் ஃபிரெஞ்சுப் படையினையும், துருக்கியப் படையினரையும் எளிதில் அடையாளம் காண இயலாத வாறு குழப்பம் மேலிட்டது. இருப்பினும், தமது கூரிய பார்வை யால் விரைவில் தமது படையினரை அடையாளம் கண்டு அவர் களுக்கு உதவும்வகையில் போரில் குதித்தார் நெப்போலியன். தளபதி நெப்போலியனது வருகையை அறிந்த ஃபிரெஞ்சு வீரர்கள் உவகையால் துள்ளிக்குதித்துப் புதிய வேகத்துடன் போரிட்டனர். நெப்போலியனும் விரைவில் கிளிபெருடன் இணைந்து தம் படை வீரர்களை முக்கோண வடிவில் அமைத்து துருக்கியர்களைச் சூழ்ந்து கொண்டு தாக்கினர். ஃபிரெஞ்சுப் பீரங்கிகளின் மும்முனைத்தாக்கு தலுக்கு ஈடுகொடுக்க இயலாது துருக்கிய வீரர்கள் சிதறி ஓடினர். ஓடிய வீரர்களைத் துரத்திச்சென்று கொன்று குவித்தனர் ஃபிரெஞ்சு வீரர்கள்.

இறுதியில், நெப்போலியன் வென்றார். துருக்கியப் படை தோல்வியை மட்டும் தொட்டணைத்துக் கொள்ளவில்லை; அது ஃபிரெஞ்சு வீரர்களால் தூள் தூளாக்கப்பட்டு முற்றிலும் அழிந்

தது. துருக்கியர் படைமுகாம் நானூறு ஒட்டகங்களுடனும் ஏராளமான பொருட்களுடனும் நெப்போலியன் வசமாயிற்று. இந்த வெற்றி வரலாற்றில் பொன்னெழுத்துகளால் பொறிக்கப் பட்ட ஒன்று. இனத்தால், சமயத்தால், ஏற்றமிக்க பொருளால், உலகு மெச்சிய பயிற்சியால் உருவாக்கப்பட்ட துருக்கியப் பெரும் படை இப் போரில் ஆறுயிரம் வீரர்களைக்கொண்ட நெப்போலி யனது சிறிய படையால் முற்றிலும் அழிக்கப்பட்டது. நெப் போலியனது சிரியா படையெடுப்பும் பெரும்பாலும் வெற்றியில் முடிந்தது. அக்ரா முற்றுகையை முனைந்து நடாத்த இவ் வெற்றி பெரிதும் உதவியது. 'அக்ரா கோட்டையில் மூவண்ணக் கொடி பறக்கும் நாள் கீழ்த்திசை நாடுகளின் விடுதலையை விரைவுபடுத் தும் நாள்' என்று நெப்போலியன் எண்ணினார். அக்ரா கோட் டையை வீழ்த்தினால் நெப்போலியனது கீழ்த்திசைத் திட்டம் எளிதில் நிறைவேறும். 'அக்ராவையும் கான்ஸ்டாண்டிநோப் பிளையும் வென்றால் இவ்வுலகம் முழுவதையும் ஃபிரான்சின் பிடியில் வைப்பேன்' என்று நெப்போலியன் அடிக்கடி கூறுவதுண்டு. ஏனவே, துருக்கியப் படையை வென்று, முற்றிலும் அழித்த நெப் போலியன் இப்போது தம் முழு ஆற்றலையும் கவனத்தையும் அக்ரா முற்றுகையில் செலுத்தினார். தம் படையுடன் உடனே அக்ரா நோக்கி விரைந்தார். அங்கு மீண்டும் முற்றுகை தீவிர மாக்கப்பட்டது. அக்ரா கோட்டை முற்றுகையை முறியடிக்கும் முயற்சியும் துவண்டுவிடவில்லை. துருக்கியப் படையின் தோல்வி யும் அக்ராவின் பாதுகாப்பு ஏற்பாடுகளைத் தீவிரப்படுத்தியது. இங்கிலாந்து, இரஷ்யா, துருக்கி ஆகிய நாடுகளின் ஒன்றுபட்ட கடற்படை அக்ரா துறைமுகத்தில் முகாமிட்டிருந்தது. அப் படை வீரர்கள் அந் நகரின் தற்காப்பு ஏற்பாடுகளைச் செவ்வனே செய்து வந்தனர். இருப்பினும், ஃபிரெஞ்சுக்காரர்கள் முன்னேறித்தாக்கி முற்றுகையை விரைவுபடுத்தினர். இரவு பகல் என்று பாராது தாக்குதல்கள் தொடர்ந்தன. பிணங்கள் மலைபோல் குவிந்தன. அவற்றைப் புதைப்பதற்குக்கூட நேரமின்றி அவை அழுகியதால் ஏற்பட்ட நாற்றம் ஆகாயமெல்லாம் பரவியது. ஆங்கில — துருக்கியப் படைகளின் தற்காப்பு அணிக்கு ஆங்கிலத் தளபதி சிட்னிசிமித் தலைமை தாங்கினார். அவர் உள்ளத்தில் உறுதியும் கடமையில் பற்றுங் கொண்டவர்; போர் நுணுக்கங்களை நன்கு அறிந்தவர்; நன்கு படைத்துறைப் பயிற்சி பெற்றவர். அத்தகைய தளபதி, அக்ரா தற்காப்புப் படையை முன்னின்று நடாத்தினர். அன்றியும், ஃபிரெஞ்சு வீரர்களைக் கவரும் வகையில் அறிவிப்பு ஒன்றினையும் வெளியிட்டார். 'உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் ஆசையுடன் ஃபிரான்சு செல்ல விரும்பும் ஃபிரெஞ்சுவீரர்கள் தக்க பாதுகாப்புடன் ஃபிரான்சுக்கு அனுப்பப்படுவார்கள்' என்பதே

அவரது அறிவிப்பு. ஆனால், அவரது அறிவிப்பினைக் கேட்டு ஒரு ஃபிரெஞ்சு வீரன் கூட மயங்கவில்லை. தங்களது தளபதி நெப்போலியனிடம் அவர்கள் கொண்டிருந்த நல்லெண்ணத்தையும், நம்பிக்கையையும் அவர்கள் உறுதிப்படுத்தினர். சிட்னியின் அறிவிப்பு தீ பட்ட பஞ்சு போலாயிற்று. அதனைக் கண்டு பொறுத சிட்னி அடுத்து, நெப்போலியனை 'ஒற்றைக்கு ஒற்றை' சண்டைக்கு இழுத்தார். அதாவது, இருவரும் தனித்தனியே நேரிடையாக மோதுவதற்கு சிட்னி சவால் விட்டார். 'புகழ்பெற்ற மார்ல்பரோவை அவரது கல்லறையிலிருந்து எழுப்பி என்னுடன் தனியே மோதுவதற்கு சர் சிட்னி அனுப்பிவைப்பாரானால் நான் அது பற்றிச் சிந்திப்பேன். ஆனால், அவர் தமது தனிப்பட்ட ஆற்றலைக் காட்ட விரும்பினால் எனது படையிலுள்ள சாதாரண வீரனுடன் அவர் நேரடிக் கைகலப்பில் இறங்கட்டும்' என்று நெப்போலியன் பதிலிறுத்தார். இந்த முற்றுகையின்போழ்து நெப்போலியனது நம்பிக்கைக்கு உரியவரும், அவரது நெருங்கிய நண்பரும், சிறந்த தளபதிகளில் ஒருவருமான கேவாரெலி (Caffarelli) குண்டடிபட்டு பதினெட்டு நாள் பயங்கர வலியால் அவதிப்பட்டு மாண்டார். ஒவ்வொரு நாளும் மருத்துவமனை சென்று அவரைக் கண்டு அவருக்கு ஆறுதல் கூறிவந்தார் நெப்போலியன். அவரது இறப்பு நெப்போலியனைப் பெரிதும் வாட்டியது.

அக்ரா முற்றுகையின்போழ்து ஒருநாள் நெப்போலியன் மறைகுழிப் பகுதிகளில் நின்று தம் வீரர்களுக்கு வழி காட்டிக் கொண்டிருந்தார். அப்போது எதிரிகள் வீசிய குண்டு ஒன்று அவர் காலடியில் வந்து வீழ்ந்தது. அதனை அருகிலிருந்து கவனித்த இரண்டு எறிகுண்டுவீரர்கள் (grenadiers) அக் குண்டு வெடிப்பதற்கு முன் நெப்போலியன்மீது பாய்ந்து அவரைக் கட்டி அணைத்துக்கொண்டனர். அக் குண்டும் திடீரென்று நிலத்தைத் துளைத்துக் கொண்டு வெடித்து ஒரு பெருங்குழியை உண்டாக்கியது. இரண்டு குதிரைகளுடன்கூடிய வண்டி ஒன்றினைத் தாங்கும் அளவுள்ள அப் பெருங்குழியில் அம் மூவரும் விழுந்தனர். நெப்போலியனைத் தாங்கிப் பிடித்திருந்த எறிகுண்டுவீரர்களில் ஒருவர் படுகாயத்திற்குள்ளானார். நெப்போலியன் எவ்விதக் காயமுமின்றி தப்பினார். தளபதியின் உயிரினைத் தங்களின் இன்னுயிரென மதித்துக் காத்த வீரர்கள் இருவரையும் நெப்போலியன் வெகுவாகப் பாராட்டினார். அவர்களிருவருக்கும் உடனே பதவிஉயர்வு கொடுத்துச் சிறப்பித்தார்.

அக்ரா முற்றுகை எவ்விதப் பயனுமின்றி அறுபது நாட்கள் நீடித்தது. ஃபிரெஞ்சு வீரர்கள் மூவாயிரம் பேர் உயிரிழந்தனர்.

கொடிய பிளேக்நோயும் தோன்றி வீரர்களைத் தாக்கியது. மருத்து வர்கள்கூட நெருங்கி அவர்களுக்குச் சிகிச்சை செய்யத் தயங்கினர். ஆனால், நெப்போலியன் எவ்விதத் தயக்கமுமின்றி பிளேக்கால் தாக்கப்பட்ட வீரர்களை அணுகி ஆறுதலூட்டிவந்தார். நெப் போலியனது படைகள் உணவுப் பற்றுக்குறையாலும் வாடினர். பீரங்கிக் குண்டுகளும் போதுமான அளவு இல்லை. ஆனால், துருக்கியர்களுக்கோ அடிக்கடி உணவுப்பொருட்களும் படைக்கருவி களும் வந்து குவிந்துகொண்டிருந்தன. மே திங்களில் ஒரு நாள் பன்னிரண்டாயிரம் வீரர்களுடன் கூடிய துருக்கிய கப்பலொன்று அக்ராவை நோக்கி வந்துகொண்டிருந்தது. அப் படை கரை சேருவதற்குள் அக்ராவை வீழ்த்திட எண்ணி வெறித்தாக்குதலில் இறங்கினார் நெப்போலியன். ஆனால், அவரது முயற்சி பலிக்கும்முன் துருக்கியப் படை வந்திறங்கியது. அப் படைக்கும் சிட்னியே தலைமை தாங்கித் தற்காப்புப் போரினைத் தொடர்ந்தார். அங்கு லம் அங்குலமாக முன்னேறிய ஃபிரெஞ்சுப் படைப் பிரிவுகளனைத் தும் தடுத்து நிறுத்தப்பட்டு படுசேதத்திற்குள்ளாயின. எதிரி களின் வீரர்கள் ஒவ்வொரு மணியும் பெருகிக்கொண்டிருந்தனர். ஆனால், ஃபிரெஞ்சு வீரர்களின் தொகை கரைந்துகொண்டே யிருந்தது. துருக்கியரின் முனைப்பகுதி அகன்ற கொடுவாள் (Scimitar) கோரத் தாண்டவம் ஆடியது. ஐரோப்பாவின் துப் பாக்கிமுனையீட்டிகளைவிட துருக்கியர்களின் கொடுவாட்கள் அழி வுப் பணியில் ஆற்றல் நிறைந்து விளங்கின. அவற்றிற்குப் பலி யான ஃபிரெஞ்சு வீரர்கள் ஏராளம். இப்போது நெப்போலியனது வெற்றி ‘ கிணற்றில் போட்ட கல்லாயிற்று ’. தளபதி நெப்போலி யன் நம்பிக்கை இழந்தார். எஞ்சிய வீரர்களை மேலும் பகைவர் களின் வாளுக்கும் பயங்கர பிளேக் நோய்க்கும் பலிகொடுக்க அவர் விரும்பவில்லை. எனவே, அக்ரா முற்றுகையைக் கைவிட் டுக் கெய்ரோ திரும்பத் திட்டமிட்டார்.

கெய்ரோ திரும்புவதற்கான ஏற்பாடுகள் தீவிரப்படுத்தப் பட்டன. நெப்போலியன் தம் படை வீரர்களைக் கூட்டிக் கீழ்க் கண்ட அறிவிப்பினை வெளியிட்டார் : ‘அருமைத் தோழர்களே ! ஆஃப்பிரிக்காவையும் ஆசியாவையும் பிரிக்கின்ற கொடிய பாலை வனத்தை அரேபியப் படையினரைப்போல் அதிவிரைவாகச் சென்று கடந்திருக்கிறீர்கள். எகிப்தின்மீது படையெடுத்துவந்த எதிரிகளின் படை முற்றிலும் அழிக்கப்பட்டுள்ளது. அப் படையின் தளபதியைச் சிறைபிடித்ததுடன் அப் பெரும்படைக்குரிய பீரங்கி கள், ஒட்டகங்கள், உணவுப்பொருட்கள் அனைத்தையும் கைப்பற்றி யுள்ளீர்கள். ஆசியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்து திரண்டுவந்து எகிப்தைக் கொள்ளையடிக்கத் திட்டமிட்டிருந்த எதிரிகளைத் தேபோர் மலையில் சிதறியோடச் செய்துள்ளீர்கள். அலெக்சாண்

டிரியாமீது பாய்வதற்குச் சென்ற முப்பது கப்பல்களைக்கொண்ட பன்னிரண்டாயிரம் வீரர்களடங்கிய கடற்படையைத் திசைதிருப்பி அக்ரா துறை வந்துசேரும்படி செய்து அதன்மூலம் அலெக்சாண்டிரியாவைக் காத்துள்ளீர்கள். சிரியாவின் நடுப்பகுதியில் மூன்று மாதகாலம் மிகக்குறைவான எண்ணிக்கையுள்ள வீரர்களைக் கொண்டு போரினைத் தொடர்ந்து சாதனைகள் பல புரிந்துள்ளீர்கள். நாற்பது பீரங்கிகளும், ஐம்பது பதாகைகளும் பெற்றுள்ளீர்கள். ஆறாயிரம் பேர் சிறைபிடிக்கப்பட்டுள்ளனர். காஜா, ஜாஃபா, அக்ரா ஆகிய கோட்டைகள் தகர்த்தெறியப்பட்டுள்ளன. இத்தகைய சாதனைகளைப் பெற்றபின் நாம் எகிப்து திரும்ப திட்டமிட்டுள்ளோம். எகிப்தின்மீது படையெடுத்து நம்மவர்களை விரட்ட எதிரிகள் தயாராகவுள்ளனர். எனவே, எகிப்தைக் காக்கும்பொருட்டு அக்ராவைவிட்டு நாம் வெளியேற இருக்கின்றோம்.' இத்தகைய வெற்றிச்சாதனைகளுடன் மே திங்கள் இருபதாம் நாள் நெப்போலியன் தம் படைகளுடன் எதிரிகள் சந்தேகப்படாத வகையில் எகிப்து நோக்கிக் கிளம்பினார். ஆயிரத்திருநூறு வீரர்கள் காயம் பட்டும் பிளேக் நோயால் தாக்கப்பட்டும் மருத்துவமனைகளில் இருந்தனர். அவர்களையெல்லாம் குதிரைகள்மீதும் பல்லக்குகள் மீதும் ஏற்றிக்கொண்டு அவர் தமது பயணத்தைப் பாலைவனத்தில் தொடர்ந்தார்.

திரும்பும் வழியில் நெப்போலியன் தம் படையுடன் ஜாஃபா வந்தடைந்தார். அங்கு தம் படைவீரர்களில் ஏழுபேர் பிளேக் நோயால் தாக்கப்பட்டுச் சாகும் தருவாயிலிருந்தனர். செத்துக்கொண்டிருந்த அவர்களை விட்டுவிட்டுச் சென்றால் மாமுலுக்குகளின் கொடுமைக்குள்ளாகி அவர்கள் சாக நேரிடும் என்று நெப்போலியன் அஞ்சினார். எனவே, எதிரிகள் கையில் சிக்கிச் சின்னாபின்னப்பட்டுச் சாவதைவிட அவர்கள் எழுவரும் பிளேக் நோயால் சாவதேமேல் என்று அவர் கருதினார். ஆகவே, அவர்களது சாவை விரைவுபடுத்தும்வகையில் அவர்களுக்கு அபினி (Opium) கொடுக்கும்படி மருத்துவரிடம் நெப்போலியன் கேட்டுக்கொண்டார். ஆனால், அம் மருத்துவரோ 'நோயைக் குணப்படுத்துவதே எனது தொழில்; நோயாளிகளைக் கொல்வதல்ல' என்று கூறி மறுத்துவிட்டார். உடனே, நெப்போலியன் சிறிது நேரம் அமைதியுடன் இருந்துவிட்டு ஐநூறு வீரர்களை அவர்களது பாதுகாப்புக்காக அங்கு இருத்திவிட்டு எஞ்சிய வீரர்களுடன் கெய்ரோநோக்கி விரைந்தார். கொடிய பாலைவனப் பயணத்தில் பல வீரர்கள் மாண்டனர். பல இன்னல்களுக்கும், இடையூறுகளுக்குமிடையே பாலைவனத்தைக் கடந்து இறுதியில் கெய்ரோ வந்தடைந்தார் நெப்போலியன். மூன்று மாதங்களுக்குப்பின் மீண்டும் கெய்ரோ

பெருநகரில் வெற்றிச் செருக்குடனும் பெருமிதத்துடனும் ஏறு நடை போட்டுத் தம் வீரர்களுடன் நுழைந்தார் அம் மாவீரர். களம் பல கண்டு, வென்று திரும்பிய நெப்போலியனை வாழ்த்தி வரவேற்றனர் கெய்ரோ பெருங்குடி மக்கள். எகிப்தின் ஏற்றங் கருதி நெப்போலியன் மீண்டும் தீவிரச் செயல்திட்டங்களை மேற் கொண்டார்.

ஜூலைத் திங்களில் ஒரு நாள் மாலை நெப்போலியன் தமது நெருங்கிய நண்பரொருவருடன் பிரமிடுகள் பக்கமாக உலாவச் சென்றிருந்தார். அப்போது, வேகமாகக் குதிரையில் வந்த அரேபிய வீரனொருவன் அவரருகில் வந்திறங்கி வணங்கி நின்று தான் அலெக்சாண்டிரியாவிலிருந்து கொண்டுவந்த முக்கிய படைத்துறைச் செய்திகளை அவர்முன் வைத்தான். 'வலிமை வாய்ந்த கடற்படையொன்று அபௌகீர் குடாவில் முகாமிட்டுள் ளது ; பதினெட்டாயிரம் கொடிய துருக்கிய வீரர்கள் எகிப்தில் இறங்கியுள்ளனர் ; அவர்களது பீரங்கிப் படை மிகவும் வலிமை வாய்ந்தது ; அதனை ஆங்கிலத் தளபதிகள் இயக்குகின்றனர் ; இங்கிலாந்து, இரஷ்யா, துருக்கி ஆகிய நாடுகளின் ஒன்றுபட்ட படை எகிப்தினை வீழ்த்த தயாராயுள்ளது ; அப் பெரும்படைக்கு ஆதரவாக மூராத்பேயியும் தமது குதிரைவீரர்களுடன் எகிப்தின் மேல்பகுதியிலிருந்து கிளம்பிவிட்டார். அபௌகீர் கிராமத்தினை யும் துருக்கியர்கள் வசப்படுத்திக்கொண்டனர் ; கோட்டைக் காவற்படையும் தாக்குதலுக்குள்ளாகி அழிக்கப்பட்டுள்ளது ; எதிரிகளின் புயல் இவ்வாறு எகிப்துமீது வீசத் தொடங்கிவிட் டது' — என்ற செய்திகள் அனைத்தையும் நெப்போலியன் அறிந் தார். உடனே, தம் முகாமிற்குத் திரும்பி அபௌகீர் நோக்கித் தமது படைகளுடன் செல்வதற்கான ஆக்கப்பணிகளில் ஈடுபட் டார். அடுத்த நாள் காலை நான்கு மணியளவில் தம் குதிரை மீதமர்ந்து படைமேற்கொண்டு அவர் கிளம்பினார். ஃபிரெஞ்சுப் படைகள் எகிப்து முழுதும் பலவாறு பிரித்துவைக்கப்பட்டிருந்தன. கெய்ரோவிலிருந்து எண்ணூறு கல் தொலைவிலுள்ள எகிப்தின் மேற்பகுதியில் ஒரு படை இருந்தது. சிரியா பகுதியிலிருந்து எதிரிகளின் ஊடுறுவலைத் தடுக்க பாலைவனத்தின் எல்லைப்பகுதியில் ஒரு படை வைக்கப்பட்டிருந்தது. அலெக்சாண்டிரியாவில் பிறி தொரு படைப்பிரிவு இருந்தது. எனவே, நெப்போலியன் இப்போது தம்முடன் எண்ணாயிரம் வீரர்களை மட்டுமே அழைத்துச் சென்றார். அவர்களில் இரண்டாயிரம் பேரைத் தளபதி கிளிபெர் தலைமையில் வேறு ஒரு வழிமூலம் அபௌகீர் வந்தடையும்படி அனுப்பினார். எஞ்சிய ஆறாயிரம் வீரர்களுடன் ஏழு நாட்கள் கடுமையான பயணத்தை மேற்கொண்டு நெப்போலியன் அபௌ கீர் வந்தடைந்தார்.

1799ஆம் ஆண்டு ஜுலைத்திங்கள் இருபத்தைந்தாம் நாள் நள்ளிரவு ; நல்ல நிலவொளி ; நெப்போலியன் 'சிங்கத்தின் குகை' யருகே வந்துவிட்டார். துருக்கிய வீரர்கள் கடல் மணற்பரப்பில் முகாமிட்டு ஆங்காங்கே அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தனர். அவர்களுக்கு ஆதரவாக வந்த கப்பல்களும் கடலில் நங்கூரம் பாய்ச்சி அலைகளால் உந்தப்பட்டு அசைந்தாடிக்கொண்டிருந் தன. அந்த அழகிய நிலவொளியில் அயர்ந்து உறங்கிக்கொண் டிருந்த துருக்கியப் படைப்பிரிவுகளின் எண்ணிக்கையைத் தம் இயல்பான கூரிய பார்வையால் நோட்டமிட்டறிந்தார் நெப் போலியன். எகிப்திலிருந்து மாமுலுக்குக் குதிரைப்படையினர் இன்னும் வந்துசேரவில்லை என்பதையும், அக்ராவிலிருந்தும் சிரியா வின் இதர பகுதிகளிலிருந்தும் ஏராளமான படைவீரர்கள் வரவிருக் கின்றனர் என்பதையும் தெளிவாக அவர் தெரிந்துகொண்டார். தம்முடைய நண்பர் தளபதி கிளிபெரும் இன்னும் அபௌகீர் வந்து சேரவில்லை. இருப்பினும், தம்முடைய ஆறாயிரம் வீரர்களைக் கொண்டு உடனே பதினெட்டாயிரம் வீரர்களடங்கிய துருக்கியப் படைமீது பாய்ந்து தாக்கத் தீர்மானித்தார். 'உலகத்தின் தலை விதியை நிர்ணயிப்பது இச் சண்டையே' என்று நெப்போலியன் கருதினார். எனவே, முழுமூச்சுடன் அன்று அதிகாலை துருக்கியர்மீது பாய்ந்து தாக்கினார். ஃபிரெஞ்சுப் பீரங்கிகளின் முழக்கங்கேட்டு துடித்தெழுந்தனர் துருக்கிய வீரர்கள். வரலாற்று ஏடுகளைக் களங்கப் படுத்திய பயங்கரப் போர்களில் அபௌகீர் போரும் ஒன்றாகும். வெள்ளாட்டுக் கூட்டத்தில் ஓநாய்கள் புகுந்ததைப் போல ஃபிரெஞ்சு வீரர்கள் துருக்கியர்களைச் சுழற்றிச் சுழற்றியடித் தனர். சீறிவரும் புலியைக் கண்டு மருண்டோடும் மான் கூட்டத் தைப்போல துருக்கியர்படை துவண்டு சிதறி ஓடியது. கடலில் குதித்து தப்ப முயன்ற வீரர்களையும் ஃபிரெஞ்சுப் பீரங்கிக் குண்டுகள் குறிதவறாது தாக்கிக் கொன்றன. துருக்கிய படைத் தளபதி முஸ்தபா பாட்சாவும் படுகாயத்திற்குள்ளாகி சிறை பிடிக்கப்பட்டு நெப்போலியனிடம் அழைத்துச் செல்லப்பட்டார். துருக்கியத் தளபதியை மிகவும் கண்ணியத்துடனும் மதிப்புடனும் வரவேற்றார் தளபதி நெப்போலியன்.

அன்று மாலை நான்கு மணியளவில் துருக்கியப்படை முழுதும் அழிக்கப்பட்டது. இரண்டாயிரம் வீரர்கள் சிறைபிடிக்கப்பட் டனர். எஞ்சிய வீரர்களனைவரும் கொல்லப்பட்டனர். கடலில் பிணங்கள் மிதந்த காட்சி நெஞ்சை உருக்குவதாக அமைந்தது. ஆங்கிலத்தளபதி சிட்னிசிமித் பிடிபடாது தப்பிவிட்டார். சில மாதங்களுக்கு முன் இதே குடாவில் ஃபிரெஞ்சுக் கடற்படை முழுதும் அழிக்கப்பட்டு எண்ணிறந்த ஃபிரெஞ்சு வீரர்கள் கொல் லப்பட்டனர். இன்று அதே குடாவில் நடந்த சண்டையில்

ஃபிரெஞ்சு வீரர்கள் துருக்கியர்களைத் தாக்கி வீழ்த்திப் பழிதீர்த்துக் கொண்டனர். எந்த அளவு ஃபிரெஞ்சு வீரர்கள் அன்று கொல்லப் பட்டனரோ அந்த அளவு துருக்கிய வீரர்கள் இன்று அதே அபௌ கீர் போரில் கொல்லப்பட்டனர். அன்று மாலை நெப்போலியன் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார். அப்போது தளபதி கிளிபெர் தமது இரண்டாயிரம் வீரர்களுடன் அங்கு வந்துசேர்ந்தார். தாம் வந்து சேர்வதற்குள்ளாகவே, துருக்கியப் பெரும்படையைத் தூள்தூளாக்கிய செய்தி கேட்டு கிளிபெர் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தார். நெப்போலியனது கழுத்தைக் கட்டிக்கொண்டு அவரை அன்புடன் தழுவிப் பாராட்டினார். 'தாங்கள் இந்த இயலுலகைப் போல் மிகவும் சிறந்தவர்' என்று கூறி தளபதி கிளிபெர், நெப்போலியனை வியந்து போற்றினார். நெப்போலி யனின் சிரியா படையெடுப்பு அவருக்கு முழுவெற்றி அளிக்கவில்லை. அன்றியும், அவரது படை பெரும் சேதத்துக்குள்ளாகியது. இருப்பினும், அவரது புகழ் ஃபிரான்சு முழுதும் பரவியது. அவரது துருக்கிய வெற்றி சிரியாவில் ஃபிரெஞ்சுப் படைக்கேற்பட்ட சேதத்தை ஒருவாறு ஈடுசெய்தது எனலாம்.

எகிப்தைநோக்கி வீசிய புயல் ஓய்ந்தது. எங்கும் அமைதி நிலவி யது. ஆபத்துகளனைத்திலிருந்தும் காப்பாற்றப்பட்டது. இப் போது எந்த ஆபத்தும் அதனை எதிர்நோக்கியில்லை. எனவே, எகிப்தின் நலன் கருதிய ஆக்கப்பணிகளில் மீண்டும் ஈடுபட நெப் போலியன் முன்வந்தார். இதற்கிடையில் ஃபிரான்சு நாட்டின் அவலநிலைபற்றிய செய்திகளும் அவரது செவிகளுக்கு எட்டின. இயக்குநர்கள் ஒருவரோடொருவர் பொறாமைகொண்டு நாட்டு நிர்வாகத்தை நிலைகுலையச் செய்துள்ளனர்; ஐரோப்பிய முடியரசு கள் மீண்டும் ஒன்றுபட்டு ஃபிரான்சைத் தாக்க முனைந்துள்ளன; ஆஸ்திரியர்கள் இத்தாலிமீது படையெடுத்துச்சென்று அங்குள்ள ஃபிரெஞ்சு வீரர்களையெல்லாம் ஆல்ப்ஸ் மலைகளுக்கப்பால் விரட்டியுள்ளனர்; பகை மன்னர்களின் படைகள் குடியரசின் எல்லைகளில் குவிக்கப்பட்டுள்ளன — என்ற செய்திகள் இப்போது நெப்போலியனைத் திடுக்கிடச் செய்தன. 'முட்டாள்கள் இத் தாலியை இழந்துவிட்டனர்; நமது வெற்றிக் கனிகளனைத்தும் வீணாயின; நான் உடனே எகிப்தைவிட்டு வெளியேறவேண்டும்; உடனடியாக ஃபிரான்சுக்குச் சென்று அதனை எதிர்நோக்கியுள்ள ஆபத்தினின்றும் அதனைக் காப்பாற்றவேண்டும்' என்று நெப் போலியன் முடிவுசெய்தார். இத்தகைய முடிவுடன் நெப்போலி யன் தமது வீரர்களுடன் ஆகஸ்டு திங்கள் பத்தாம் நாள் கெய் ரோ நகர் வந்தடைந்தார். எகிப்தை விட்டு வெளியேறும் திட் டத்தை அவர் மிகவும் இரகசியமாகவே வைத்திருந்தார். எதிரி கள் எவரும் சந்தேகப்படாதவகையில் அவர் தமது திட்டத்தை

செயல்முறைப்படுத்த விரும்பினர். ஒரு நாள் காலை நைல் நதியின் முகத்துவாரத்தை ஆராய்வதற்காகச் செல்வதாக அறிவித்து விட்டு நெப்போலியன் ஒரு சிறு படையுடன் பாலைவனத்தில் பயணத்தை மேற்கொண்டார். ஆகஸ்டு திங்கள் இருபத்திரண் டாம் நாள் அவர் அலெக்சாண்டிரியா வந்தடைந்தார். அன்று மாலை சூரியன் மறைந்தபின் தம்முடைய நெருங்கிய நண்பர்கள் எட்டுப் பேருடனும் தமது நம்பிக்கைக்குரிய வீரர்கள் ஐநூறு பேருடனும் அவர் நகரைவிட்டுக் கிளம்பிக் கடற்கரை வந்தடைந் தார். அங்கே சிறிது தூரத்தில் இரண்டு கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சிக் கடலில் மிதந்துகொண்டிருந்தன; அவர்களை அங்கு ஏற்றிச் செல்வதற்காகச் சிறிய படகுகளும் தயாராகக் காத்திருந் தன. அவற்றையெல்லாம் கண்ட வீரர்கள் ஒன்றும் புரியாமல் திகைத்தனர். உடனே நெப்போலியன் ‘ நாம் இப்போது நமது தாயகம் திரும்புகின்றோம் ’ என்று அறிவித்தார். அதனைக் கேட்ட வீரர்கள் ஆனந்தக்கூத்தாடினர். அவர்கள் ஏறிவந்த குதிரைகளை யும் கரையில் விட்டு விட்டு களிப்புடன் கப்பலில் ஏறினர். நடு நிலக்கடலில் சுற்றித்திரியும் ஆங்கிலக் கப்பல்களின் கண்களில் படாது அவர்கள் மறைந்து தங்கள் பயணத்தைத் தொடர்ந் தனர்.

1799ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 22ஆம் நாள் இரவு பத்து மணி அளவில் அவர்களது கப்பல்கள் கிளம்பின. நெப்போ லியன் தனிமையில் கப்பல் தளத்தில் அங்குமிங்கும் உலவி ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டார். அவர் வென்ற எகிப்து அவரது கண் களிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக மறைந்துகொண்டிருந்தது. நெப்போலியனது வீரர்களோ தாய்நாடு திரும்பும் மகிழ்ச்சியில் மிதந்துகொண்டிருந்தனர். கப்பலில் பல்வேறு பொருட்கள் பற்றிய வாதங்களும் நிகழ்ந்தன. ‘ஒருநாள் கடவுள் உண்டா ?’ என்ற சொற்போர் சுவைநிறைந்து விளங்கியது. நெப்போலியன் சமய, தத்துவ நூல்களில் கவனத்தைச் செலுத்தினர். விவிலிய நூலையும் கொரானையும் படித்து இரு சமயங்களுக்கிடையே நிலவிய ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்ந்தார். கடற்பயணத்தில் இத்த கைய செயல்களில் ஈடுபாடு கொண்டிருந்தாலும் எதிரிகளின் கண்களுக்குப் படாவண்ணம் அவர்களது கடற்பயணம் மேற் கொள்ளப்பட்டது. நாற்பது நாட்கள் நடுநிலக்கடலில் பயணம் செய்த ஃபிரெஞ்சு வீரர்கள் அக்டோபர் திங்கள் முதல் நாள் கார்சிகா வந்தடைந்தனர். அசேசியோ துறைமுகத்தில் அவர்களது கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சின. தம்முடைய பிறந்த நகரில் நெப்போலியன் வந்திறங்கிய செய்தி கார்சிகாவெங்கும் காட்டுத்தீ போல் பரவியது. கார்சிகர்கள் அலைஅலையாகத் திரண்டு வந்து தங்களது தலைவனை வரவேற்றனர். நெப்போலியனை வளர்த்த

செவிலித்தாய் அவரைக் கட்டித்தழுவினுள். அவளது அன்பினைக் கண்டு நெப்போலியன் ஆனந்தங்கொண்டார். கார்சிகாவில் சில நாட்கள் தங்கித் தாம் பிறந்து வளர்ந்த இடங்களையும், குடியிருந்த இல்லங்களையும், உற்ருர் உறவினர்களையும் கண்டு களித்த நெப்போலியன் அக்டோபர் திங்கள் ஏழாம் நாள் மீண்டும் நடுநிலக்கடலில் பயணத்தைத் தொடர்ந்தார். அடுத்தநாள் காலை எட்டு மணி அளவில் அவர் ஃபிரெஞ்சுக் கரையிலுள்ள சிறிய ஃபிரிஜூஸ் (Frejus) துறைமுகம் வந்தடைந்தார். நெப்போலியனது வருகையை அறிந்த ஃபிரிஜூஸ் நகரம் முழுதும் விழாக் கோலம் பூண்டது. நெப்போலியனுக்குச் சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தனர். ஐரோப்பிய முடியரசுகளால் ஃபிரான்சுக்கு ஏற்பட்ட ஆபத்து நெப்போலியனது வருகையால் முற்றிலும் நீங்கிவிட்டதாகவே கருதி மக்கள் குதூகலத்தில் கூத்தாடினர். வாழ்த்தொலிகள் விண்ணைப் பிளந்தன; பீரங்கிக் குண்டுகளின் முழக்கம் மலைமுகடுகளில் சென்று எதிரொலித்தது. பாரிஸ் நகரம் ஃபிரிஜூஸ் நகரிலிருந்து அறுநூறு கல் தொலைவிலிருந்தது. நெப்போலியனது வருகை தந்திமூலம் பாரிஸ் நகருக்குத் தெரிவிக்கப்பட்டது.

நெப்போலியன் ஃபிரிஜூஸ் நகரம் வந்தடைந்தார் என்ற செய்தி அக்டோபர் திங்கள் ஒன்பதாம் நாள் மாலை பாரிஸ் நகருக்கு எட்டியது. அப்போது இயக்குநர்களின் முதல்வரான கோகியர் (Gohier) என்பவரது இல்லத்தில் பெருவிருந்தொன்று சிறப்பாக நடந்துகொண்டிருந்தது. பாரிஸ் பெருமான்கள் அனைவரும் அப்பெருவிருந்தில்கலந்துகொண்டு களிப்பிலாழ்ந்தனர். நெப்போலியனது ஆசைக்குரிய ஜோசபைனும் கோகியருடன் விருந்துண்டு மகிழ்ந்துகொண்டிருந்தாள். நெப்போலியனது வருகையைக் கேட்ட பலர் திகைப்பிலாழ்ந்தனர்; இன்னெரு பெரும்புரட்சி ஃபிரான்சில் ஏற்பட்டுத் தங்களது பதவிகளும் பறிபோய்விடுமேயென்று பயந்து தவித்தனர் பதவிப்பித்தர்கள். நாட்டுநலனில் நாட்டங்கொண்டோர் அவரது வருகையைக் கேட்டு உள்ளம் பூரித்தனர்; பேருவகை கொண்டனர்; ஃபிரான்சை எதிரிகளிடமிருந்து காப்பாற்ற இப்போது தளபதி வந்துவிட்டார் என்று எண்ணி இறும்பூதெய்தினர். ஃபிரெஞ்சுக் குடியரசுக்கு ஏற்பட்ட இழிநிலையைக் கண்டு ஏங்கிக்கொண்டிருந்த ஒரு ஃபிரெஞ்சு அதிகாரி நெப்போலியனது வருகையைக் கேட்டறிந்த மாத்திரத்தில் மகிழ்ச்சிப் பெருக்கால் மரணமடைந்தார்.

நெப்போலியனது வருகை திடீரென்று, எவரும் எதிர்பாராத வகையில் அறிவிக்கப்பட்டவுடனே, கோகியரின் பெருவிருந்தில் கோலாகலமாகக் கலந்துகொண்டு மகிழ்ச்சிப் பெருக்கில் மூழ்கியிருந்த ஜோசபைன் குழப்பத்தில் ஆழ்ந்தார். உடனே, வீடு

நோக்கி விரைந்தாள் ; ஓய்வு சிறிதுமின்றி அன்று நடு இரவே புறப் பட்டாள் லேயன்ஸ் நகர்நோக்கி கணவனை எதிர்கொண்டழைக்க. அதேநேரத்தில், தளபதி நெப்போலியனும் ஃபிரிஜுஸ்நகர்விட்டுக் கிளம்பினர் லேயன்ஸ் நகர்நோக்கி. அவர் வரும் வழியெல்லாம் விழிவைத்துக் காத்திருந்தனர் மக்கள் அலைஅலையாகத் தங்களின் மாவீரனை வரவேற்க. வழியெல்லாம் மலர்கள் தூவப்பட்டன ; மங்கையர் பலர் திரண்டிருந்து நல்வாழ்த்துக் கூறி வரவேற்றனர். தளபதி நோக்குகின்ற திக்கெல்லாம் மக்கள் வெள்ளம். அடியடி யாக அவரது அலங்காரவண்டி நகர்ந்துவந்து அன்று மாலை லேயன்ஸ் நகர் வந்தடைந்தது. அப் பெருநகரம் முழுதும் விழாக் கோலம் பூண்டு விளங்கியது. ஆங்காங்கே அலங்காரவளைவுகள் அவருக்கு நல்வாழ்த்துக் கூறிநின்றன. தங்களின் தலைவனைக் கண்ட மக்கள் வெள்ளம் உணர்ச்சிப் பெருக்கால் அலைகடலென ஆர்ப்பரித்தது. எங்கும் மகிழ்ச்சிவெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. லேயன்ஸ் நகர மேயர், மக்கள் சார்பில் மகத்தான வர வேற்பளித்தார். அடுத்து, நெப்போலியன் லேயன்ஸ் நகர்விட்டுக் கிளம்பினர். இப்போது, அவர் வழக்கமாகப் பாரிஸ் செல்லும் வழியைவிட்டு வேறு ஒரு குறுக்கு வழியில் பயணத்தைத் தொடர்ந் தார். இதற்கிடையில், ஜோசபைனும் லேயன்ஸ் நகர் வந்தடைந் தாள். ஆனால், அவள் வந்து சேர்வதற்குச் சில மணி நேரங் களுக்கு முன்பே நெப்போலியன் வேறு வழியில் பாரிஸ் சென்று விட்டார் என்ற செய்திகேட்டு அவள் திடுக்கிட்டாள். தன்னைப் பற்றித் தவறுதலான செய்திகளைத் தமது பகைவர்கள் நெப்போலி யனிடம் சொல்லிவிடக்கூடும் என்று அவள் அஞ்சினள். ஒரு வினடி கூட வீணக்காது விரைந்தாள் பாரிஸ் நோக்கி. லேயன்ஸ் நகரி லிருந்து பாரிஸ் 245 கல் தொலைவிலுள்ளது. இரவு பகல் என்று பாராது ஓய்வு சிறிதுமின்றி அவள் வண்டியை முடுக்கினள் பாரிஸ் நோக்கி. நெப்போலியனும் வழியெல்லாம் வண்ண விளக்குகள் வாழ்த்துரை வழங்க, பீரங்கிக் குண்டுகள் முழங்க, மக்களின் முகங்களெல்லாம் மலர பாரிஸ் வந்தடைந்தார். நேராகத் தமது இல்லம் சென்றார். அங்கு தமது நெஞ்சில் நிறைந்தவள் இல்லாத தைக் கண்டு திடுக்கிட்டார். அவரது எண்ண அலைகள் ‘மஞ்சி விரட்டில்’ அவிழ்த்துவிடப்பட்ட காளைகள் போலாயின. ஜோச பைன் அவரது மனக்கண்களில் பயங்கரக் குற்றவாளியாகக் காட்சிதந்தாள். குற்றமுள்ள நெஞ்சுடையாள் ; எனவே, எதிரே வர அஞ்சுகிறாள் எனக்கருதி கடுங்கோபம் கொண்டார். எரிகின்ற நெருப்பில் எண்ணெய் வார்த்ததைப்போல ஜோசபைனின் பகை வர்கள் அவளைப்பற்றிய தகாத, தவறுதலான செய்திகளையெல் லாம் நெப்போலியன்முன் வைத்தனர். இந் நிலையில் தளபதி மேலும் குழம்பினர். இருப்பினும், இரண்டு மணிநேரம் கழித்து

இயக்குநர்களைக் காணும்பொருட்டு இலக்சம்பர்க் (Luxembourg அரண்மனைநோக்கி விரைந்தார். அவர் அங்கு வந்து தமது வண்டியை விட்டு இறங்கியவுடனே அவரை நன்கு நேரில் கண்டறிந்திருந்த காவலன் ஒருவன் உணர்ச்சிப் பெருக்குடன் உரத்த குரலில் 'வாழ்க போனபார்ட்' என்று கூறினான். அவனது வாழ்த்தொலி அரண்மனையின் அறைகளிலெல்லாம் சென்று எதிரொலித்தது. அங்குள்ள இயக்குநர்களின் காதுகளில் அவர்களின் சாவு மணியாக ஒலித்தது. விரைவில் பாரிஸ் நகரம்முழுதும் அச் செய்தி பரவியது. கொட்டகைகளில் நாடகங்கள், இன்னிசைகள் போன்ற நிகழ்ச்சிகள் இடையிலே நிறுத்தப்பட்டன. மக்கள் இலக்சம்பர்க் அரண்மனையைச்சுற்றி அலைஅலையாகத் திரண்டனர். ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் வழிகாட்டியைக் கண்டு மகிழ்ச்சிப் பெருக்கால் துள்ளிக்குதித்தனர். பாரிஸ் நகரம் விரைவில் ஆனந்தக்கடலில் மூழ்கியது; எங்கும் நெப்போலியனைப்பற்றியே பேச்சுகள் எழுந்தன; ஒவ்வொருவருடைய உதட்டிலும் 'போனபார்ட்' என்ற சொல் இன்பநடனம் ஆடியது. விரைவில் அப் பெருநகரம் முழுதும் விழாக்கோலத்தில் வீறுநடை போட்டது.

1799ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 17ஆம் நாள் மாலை நெப்போலியன் பாரிஸ் நகர் வந்தடைந்தார். தமது நெஞ்சில் நிறைந்த ஜோசபைனின்றி அவர் இரண்டு பகல்களையும், இரண்டு இரவுகளையும், இதயத்தினை இரும்பாக்கி, ஏக்கத்திற்கும் பெருமூச்சிற்கும் குழப்பத்திற்குமிடையே கடினமாகக் கழித்தார். அக்டோபர் திங்கள் பத்தொன்பதாம் நாள் நடு இரவு; நெப்போலியனது இல்லம் அமைதியில் தவழ்ந்துகொண்டிருந்தது; அதனைக் குலைக்கும் வகையில் ஜோசபைன் ஏறிவந்த வண்டி முற்றத்திற்குள் நுழைந்தது. தன் தாயின் வருகையை வழிமேல் விழிவைத்துக் காத்திருந்த, ஈஜின் (Eugene), அறிந்தவுடனே, ஓடோடிச்சென்று, அன்னையை இருகரங்களால் கட்டிப்பிடித்துத் தழுவினான். அவளது வருகையை அறிந்த நெப்போலியன் தம் அறையை விட்டு வெளியே வராது அலட்சியமாக இருந்தார். சில வேளைகளில் ஜோசபைன் காலைநேரங்களில் தனது அலங்கார வண்டியில் வெளியே சென்று உலவி வருவதுண்டு. அப்போதெல்லாம் நெப்போலியன் முக்கியமான பணிகளில் ஈடுபாடுகொண்டிருந்தாலும் அவற்றையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு ஓடோடிச் சென்று தம் உயிரின் உயிராம் ஜோசபைனை வண்டியிலிருந்து இறக்கி அறைக்குள் அழைத்துவருவது வழக்கம். ஆனால், இப்போது பதினெட்டு மாதங்களுக்குமேல் வெளிநாடுகளில் தங்கிவிட்டு வந்த நெப்போலியன், தமது ஆசைக்குரியவள் அலங்கார வண்டியில் அயர்ந்து, சோர்ந்து வந்த நேரத்தில், அவளை எதிர்கொண்ட

ழைக்காது, ஏக்கத்தாலும், சீற்றத்தாலும், கண்களில் கனல் பறக்க, தோள்கள் துடிக்க, தம் அறையில் அசையாதிருந்து அவளைக் குழப்பத்தில் ஆழ்த்தினார். குழம்பிய நிலையில் ஜோசபைன் நடுங்கினாள்; அச்சத்தால் அவளது இதயம் அதிவேகமாகத் துடித்தது. ஈஜினும், ஆர்டென்சும் அவளைக் கைப்பிடியாகத் தாங்கி அழைத்துவந்தனர் உள்ளே; அறைக் கதவு திறக்கப்பட்டது; அங்கே நெப்போலியன் கைகளைக் கட்டியபடி கோபம் கொப்பளிக்கச் சிலைபோல் அசையாது நின்றிருந்தார். அவளது முகத்தைக்கூடப் பாராது. பின்பு, அவர் அலட்சியமாக அவளைப்பார்த்து 'அம்மா! நீ உடனடியாக இவ்விடத்தை விட்டகன்று மால்மெய்சன் (Malmaison) என்ற இடத்திற்குச் சென்றுவிட வேண்டும்; அதுவே எனது விருப்பம்' என்று கூறினார். இக்கூற்று அவளது இதயத்தில் ஈட்டிபோல் குத்தியது; அவளது செவிகளில் அது செந்தேளெனப் பாய்ந்தது; வெந்த புண்ணில் அது வேல்கொண்டு தாக்கியது. அதனைத் தாங்க இயலாத ஜோசபைன் கதறிக்கதறி அழுதாள்; உடனே ஈஜின் அவளது அறைக்கு அவளை அழைத்துச் சென்றான்.

மால்மெய்சன் என்பது பாரிஸ் நகரிலிருந்து பன்னிரண்டு கல் தொலைவிலுள்ளது. கடந்த ஒரு வார காலமாகக் கணவனைக் காணத்துடித்து உணவும் உறக்கமுமின்றி ஒடுங்கிய நிலையிலிருந்த ஜோசபைன் அன்று நடு இரவில் தன் இல்லத்தை விட்டு வெளியேறி மால்மெய்சன் செல்வது எளிதான செயலன்று. இருப்பினும், தன் உள்ளத்தில் ஒன்றிய கணவனின் கட்டளையை ஏற்று உடனடியாக வீட்டைவிட்டு வெளியேறத் தயாரானாள். நெப்போலியன் கிஞ்சித்தும் எதிர்பாராதவகையில் தன்னுடைய இரண்டு மகன்களுடன் தனது அறையைவிட்டு இறங்கி முற்றத்திற்கு வந்து வண்டியில் ஏறச்சென்றாள். அதனை அறிந்த நெப்போலியன் உடனே முற்றம் நோக்கிச் சென்று ஜோசபைனிடம் பேச மனமின்றி அருகிலிருந்த மகன் ஈஜினிடம் 'அம்மாவை உள்ளே அழைத்துச் சென்று உண வருந்தி ஓய்வெடுக்கச் சொல்' என்று கூறினார். அக் கட்டளைக்கும் அடிபணிந்தாள் ஜோசபைன். உடனே, தன் அறைக்குச் சென்று அங்கு அழுகையும் கண்ணீருமாக இருந்தாள். நெப்போலியனும் தமது அறைக்குச் சென்றார். இரண்டு நாட்கள் இருவரும் மனப் போராட்டத்தில் சிக்கித்தவித்தனர். இருப்பினும் அவர்கள் ஒருவருடன் ஒருவர் கொண்டிருந்த ஆழ்ந்த காதல் வென்றது; அவர்களைப் பிரித்துவைத்த தடைகள் உடைத்தெறியப்பட்டன. மூன்றாம்நாள் நெப்போலியன் சோகமே உருவான ஜோசபைனின் அறைக்குச் சென்றார். அங்கு அவள் கண்களைக் குளமாக்கி கைகளில் முகத்தைப் புதைத்து, குனிந்தவாறு, குருதி சூடேற குமுறித்

துடித்துக்கொண்டிருந்தாள். அவளுக்கு முன்னல் இருந்த மேசை யின்மீது அவளது ஆசை அத்தானின் அன்பு மடல்கள் பல பரந்து கிடந்தன ; அவைகளுக்கு அருகில் வாடிவதங்கிய முகத்துடன் வாட்டத்தின் சின்னமாக நின்றுகொண்டிருந்தான் ஆர்டென்ஸ் (Hartense). நெப்போலியன் மெதுவாகக் கதவைத் திறந்து உள்ளே சென்று அன்புகலந்த மெல்லிய குரலில் 'ஜோசபைன்' என்றழைத் தார். அதுவரை கண்ணீர் குளத்தில் நீந்திக்கொண்டிருந்த ஜோச பைன் அவ்வினிய குரலைக் கேட்டமாத்திரத்தில் நிமிர்ந்து பார்த்து, 'மோனமி' Monami, என்று வருத்தம்தோய்ந்த குரலில் கூறினாள். 'மோனமி' என்பது நெப்போலியனை ஜோசபைன் செல்லமாக அழைக்கும் பெயராகும். அச் சொல்லினைக் கேட்டமாத்திரத்தில் நெப்போலியன் மகுடிக்குமுன்னல் ஆடும் பாம்பினைப் போலானார். உடனே, அவர் தம் கைகளை நீட்ட, ஜோசபைன் விரைந்து அக் கரங்களின் அணைப்பிற்குள்ளானாள். இன்பக்கடலில் இருவரும் இணைந்து நீந்தினர். இடையில் ஜோசபைன் கொடுத்த விளக் கங்களை நெப்போலியன் ஏற்று மனநிறைவு கொண்டார். அவர் களது ஊடல் மறைந்து கூடல் மலர்ந்தது.

## உறுதுணை புரிந்த நூல்கள்


1. நெப்போலியனின் போராட்ட ஏற்பாடுகள் — டி. சேன்ட்லர்
2. எகிப்தில் போனபார்ட் — ஜே. சி. ஹெரால்ட்
3. நெப்போலியன் போனபார்ட் — ஸ்லோன்
4. நெப்போலியன் — சீலி
5. நெப்போலியன் — எச். ஏ. எல். ஃபிஷர்
6. நெப்போலியன் — எமில் லட்விக்
7. நெப்போலியன் — ஃபோர்னியர்
8. நெப்போலியனின் வாழ்க்கை — ஜே. எச். ரோஸ்.
9. இரத்தம் பொங்கிய இருபது ஆண்டுகள் — அறிஞர் அண்ணா.
10. நெப்போலியனின் வாழ்க்கை — ஜோசப். எஸ். சி. ஆப்பட்,

# 8. கான்சல்

*1799*ஆம் ஆண்டில் நெப்போலியன் தாயகம் திரும்பிய போழ்து குடியரசின் நிலை மிகவும் கவலை தருவதாயிருந்தது. நாடெங்கும் அமைதிகெட்டுக் குழப்பம் நிலவியது. 'புரட்சிக்கு முந்திய நிலை மீண்டும் வந்துகொண்டிருக்கிறது' என்று வருந்திக் கூறினர் நாட்டு நலனில் நாட்டங்கொண்ட நல்லோர் பலர். மீண்டும் ஒரு பயங்கரப் புரட்சியை நோக்கி ஃபிரான்சு விரைந்து கொண்டிருப்பதை அறிந்த பலர் வேதனை கொண்டனர். ஒவ்வொரு துறையிலும் முன்னேற்றம் தடைப்பட்டு நெருக்கடிநிலை ஏற்பட்டது. இன்றைய உலகம் ஐந்து பெரிய வல்லரசுகளிடம் சிக்கி அவதிப்படுவதைப் போல, அன்றைய ஃபிரெஞ்சுக் குடியரசு, இயக்குநர்கள் ஐவரிடம் சிக்கிச்சீரழியும் நிலையிலிருந்தது. 'வேலியே பயிரை மேய்ந்ததைப் போல் ஆட்சியில் நீதியையும் நேர்மையையும், நாணயத்தையும் நிலை நாட்டவேண்டிய இயக்குநர்கள் ஒருவருடனொருவர் மோதி நாட்டின் அமைதியைக் குலைத்தனர். நீதியைச் சாகடித்து, நேர்மையை விற்று, நாணயத்தை நாசமாக்கி நாட்டைப்படுகுழியில் தள்ளினர். வரி மேல்வரி போட்டு மக்களை வாட்டினர் ; கருவூலம் எப்போதும் காலியாகவே இருந்தது ; நெப்போலியன் இத்தாலியிலிருந்து அனுப்பிய பொருட்களெல்லாம் விரைவில் வீணுக்கப்பட்டன. வறுமையும் நோயும் மக்களை வதைத்தன. கொள்ளையும் கொலையும் அன்றாட நிகழ்ச்சிகளாயின. நாட்டு மக்களின் வாட்டத்தைப் போக்கிட முன்வராது இயக்குநர்கள், ஆடம்பரத்தின் உச்சியில் நின்று இன்பம் துய்த்தனர். அரசியல் கட்சிகளும் ஆதிக்கப் போட்டியில் ஈடுபாடுகொண்டு நாட்டில் நாசவேலைகளில் இறங்கின. குடியரசினை மாய்த்திட ஐரோப்பிய முடியரசுகள் கொடுவாள் தூக்கிக் கொக்கரித்து நின்றன. நடுக்காட்டில் கொள்ளையர் கூட்டத்தில் சிக்கிய சிறுமியைப்போல குடியரசு தவித்தது.

ஃபிரெஞ்சுக் குடியரசின் இழிநிலையை உணர்ந்த நெப்போலியன் ஆளத் தகுதியற்ற இயக்குநர்களின் ஆட்சிக்கு முற்றுப்

புள்ளி வைத்து நாட்டில் நல்ல புதிய ஆட்சி மலர்ந்திட வழிகாண முற்பட்டார். இயக்குநர்கள் ஐவரையும் அரியணையிலிருந்து அகற்றிவிட்டு மூத்தோர் மன்றத்தையும் (Council of Ancients) ஐநூற்றுவர் மன்றத்தையும் (Council of Five Hundred) தம் பிடியில் கொண்டுவரத் திட்டமிட்டார். அதற்கான ஆக்கப்பணி களில் உடனே ஈடுபாடுகொண்டார். ஆனால், அதற்காக எவ்விதச் சதிவேலைகளிலும் அவர் இறங்கவில்லை. தமது திட்டத்தை வேறு எவருக்கும் வெளியிடவில்லை. தம்முடைய ஆற்றலிலும், அறிவிலும், மக்களின் ஆதரவிலும் அசையாத நம்பிக்கைகொண்டு அவர் செயல்படத் தொடங்கினார். அன்றியும், பகைவர்கள் யார்? நண்பர்கள் யார்? — என்ற கணக்கையும் அவரது கூரிய கண்கள் எளிதில் கண்டு, நண்பர்களின் நல்லாதரவைப் பெருக்குவதிலும், எதிரிகளைத் தம் பக்கம் இழுப்பதிலும் அவருக்கு உதவின. மேலும், ஐரோப்பிய மன்னர்களால் ஃபிரெஞ்சுக் குடியரசுக்கு நேரவிருந்த ஆபத்தினையும் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டார். அந்நியரின் படையெடுப்பு நாட்டில் நெருக்கடி நிலையை உருவாக்கிட, அதனைப் பயன்படுத்தி இராணுவ நடவடிக்கைகளை நிலைபெறச் செய்ய விரும்பினார். குடியரசுப் படை தமது புத்தாட்சித் திட்டத்தின் முன்னோடியாகும் என்று அவர் கருதினார். பகைவர்களின் பாய்ச்சல் நாட்டில் வீர உணர்ச்சிக்கும், தற்காப்பு இராணுவ நடவடிக்கை களுக்கும் வித்திடுமென்று அவர் எண்ணினார். கொடும் புலிகள் நிறைந்த காட்டில் வாழும் இளைஞன் துப்பாக்கியின் துணை கொண்டு நிற்பதைப்போல ஐரோப்பிய முடியரசுகளினிடையே உலவிய ஃபிரெஞ்சுக் குடியரசு துப்பாக்கிகளின் அருகிலேயே தூங்க வேண்டியதாயிற்று. கண்ணும் கருத்துமாகக் கட்டிக் காத்த கழனியில் முற்றிய கதிரினை அறுவடைசெய்து நெல்லாக்கி களத்திலே குவித்து அதனைக் கயவர்கள் கவர்ந்து செல்லாத வகையில் கையில் கம்புடன் களத்தில் அரைத்தூக்கத்திலிருக்கின்ற வீர உழவனைப் போல ஃபிரெஞ்சுக் குடியரசைக் காக்கும் பணியில் இராணுவம் விழிப்புடன் இருப்பதற்கான அரிய வாய்ப்புக் கிட்டியது. அதனைப் பயன்படுத்தி அற்பர்களின் ஆட்சியை அகற்றி மக்களை மக்களாக்கும் நல்லாட்சியை நிறுவிட நெப்போலியன் உறுதி கொண்டார்.

ஃபிரெஞ்சுக் குடியரசின் இரண்டு சட்டமன்றங்களையும் காப்பதற்காகப் படையொன்று பாரிசில் அமைக்கப்பட்டிருந்தது. அக் காவற்படையின் தளபதியாக இலெவெப்ரி (Lebebre) என்பவர் பணியாற்றினார். நெப்போலியன் அவரை அணுகி 'ஃபிரெஞ்சுக் குடியரசின் தூண்களில் ஒருவராகிய நீங்கள் வழக்கறிஞர்களாகிய இயக்குநர்களால் அதற்கு வரவிருக்கின்ற ஆபத்தை அனுமதிக்க

லாமா ? அதனைக் காப்பதில் தங்களின் மேலான ஆதரவை எனக்கு நல்குங்கள் ' என்று கூறினார். மேலும், பிரமிடுகள் போரில் தாம் பெற்ற துருக்கியப் போர்வாள் ஒன்றினை அவருக்கு அளித்து அவரைச் சிறப்பித்தார். நெப்போலியனது பெருந்தன்மையையும் அவர் தம்மீது கொண்டிருந்த நம்பிக்கையையும் கண்டு மட்டற்ற மகிழ்ச்சிகொண்ட இலெவெப்ரி, 'இந்த இயக்குநர்களை நாம் ஆற்றில் வீசியெறிவோம்' என்று வீர முழக்கமிட்டுத் தமது நல்லா தரவை அவருக்கு நல்கினார். அடுத்து, நெப்போலியன் அன்றைய ஃபிரெஞ்சு அரசியலில் செல்வாக்குடன் விளங்கிய அரசியல் கட்சி களின் ஆதரவைப் பெற முயன்றார். ஃபிரான்சில் அப்போது மூன்று முக்கிய அரசியல் கட்சிகள் இருந்தன. பழைய போர்போன் மரபினைச் சார்ந்த ஒருவரை மீண்டும் ஃபிரான்சின் மன்னராக்கும் வகையில் பணியாற்றினர் அரசர் ஆதரவுக் கட்சியினர் (Royalist Party). ஜேகோபியர்கள் (Jacobins) அதிதீவிர ஜனநாயகக் கருத் துள்ளவர்கள் ; அவர்களின் தலைவர் பராஸ் (Barras). பாரிஸ் மக்கள் அக் கட்சியின் முக்கிய ஆதரவாளராவர். குடியரசுக் கட்சி யினர் (Republicans) மிதவாதிகள். சியே (Sieyes). என்பவர் அவர் களின் தலைவராவார். இந்த மூன்று கட்சிகளும் ஃபிரான்சில் தங்கள் செல்வாக்கை நிலைநாட்ட ஒன்றோடொன்று போராடிக் கொண் டிருந்தன. மேலும், நெப்போலியனது நட்பையும் நல்லாதரவை யும் பெற ஒவ்வொரு கட்சியும் போட்டிபோட்டுக்கொண்டு அவரை நாடின. ஆனால், நெப்போலியன் தமது நட்புக் கரங்களை சியேயின் மிதவாதக் குடியரசுக் கட்சியிடம் நீட்டினார். நெப்போலியனும் சியேயும் நெருங்கிய நண்பர்களாயினர். மனந்திறந்து பேசி மக்களின் சிக்கல்களைத் தீர்க்க முயன்றனர். ஆட்சியின் அவல நிலையைப் போக்க அவர்களது ஒத்துழைப்பு மிகவும் தேவைப் பட்டது. நாட்டை எதிர்நோக்கியுள்ள ஆபத்தினின்றும் அதனைக் காக்க 'ஒரு தலையும் ஒரு வாளும்' அவர்களுக்குத் தேவைப்பட்டன. இரண்டும் நல்வாய்ப்பாக நெப்போலியனிடம் அமைந்திருந்தன. அன்றியும், படைத்துறையில் பணியாற்றும் அதிகாரிகளின் ஆதரவும் அவருக்குக் கிடைத்தது. அனைத்திற்கும் மேலாக, ஃபிரெஞ்சு சட்ட மன்றங்களின் பேராதரவினையும் நெப்போலியன் பெற்றார். ஐநூற்றுவர் மன்றம் முற்றிலும் ஜனநாயகக் கருத்து களின் பிறப்பிடமாகத் திகழ்ந்தது. அம் மன்றத் தலைவர் லூசியன் போனபார்ட் (Lucien Bonaparte). அவர் நெப்போலியனின் உடன் பிறப்பு. எனவே, இயல்பாக நெப்போலியனுக்கு நல்லாதரவை நல்கியதில் வியப்பில்லை. மூத்தோர் மன்றம் (Council of Ancients) என்பது குடியரசின் செனட் ஆகும். அதன் தலைவர் கார்னட் (Car- not). அவரது மேலான ஆதரவையும் நெப்போலியன் விரைவில் பெற்றார்.

1799ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் ஒன்பதாம் நாள் பாரிஸ் நகர வரலாற்றில் சிறப்பான நாள் ; ஃபிரான்சின் தலைவிதியை நிர்ணயித்த நன்னாள். அன்று காலை ஆறு மணியளவில் மூத்தோர் மன்றம் (Council of Ancients) கூடியது. பாரிஸ் நகர வீதிகளில் படைத்துறையினர் அணிவகுப்பு மக்களைக் குழப்பத்தில் ஆழ்த்தியது. அன்றுகாலை எட்டு மணியளவில் நெப்போலியனது இல்லத்தில் முக்கிய இராணுவ அதிகாரிகள் அனைவரும் வந்திருந்து தளபதியுடன் தக்கவாறு பணியாற்றக் காத்திருந்தனர். பாரிஸ் பெருமான்கள் பலரும் நெப்போலியனது இல்லத்தில் கூடினர் ; வீதியெல்லாம் மக்கள் கூட்டம். பாரிஸ் நகரம் முழுதும் பரபரப்பு ; ஒவ்வொருவருடைய முகத்திலும் ஏக்கமும் அச்சமும் கலந்து காணப்பட்டன. அன்று காலை கூடிய மூத்தோர் மன்றம் நெப்போலியன் தயாரித்துக் கொடுத்த ஆணையை (Decree) அப்படியே நிறைவேற்றியது. அதன்படி, சட்ட மன்றங்கள் இரண்டும் பாரிஸ் நகரத்துக்குச் சில மைல்களுக்கப்பாலுள்ள செயின்ட் கிலௌட் (St. Cloud) என்ற இடத்திற்கு மாற்றப்பட்டன. பாரிஸ் நகரின் பல்வேறு படைகளின் தலைமைத் தளபதியாக நெப்போலியன் போனபார்ட் நியமிக்கப்பட்டார். பாரிஸ் நகரக் கிளர்ச்சியாளர்களின் தாக்குதலிலிருந்து சட்ட மன்றங்களைக் காப்பாற்றவே இந்த ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன. மூத்தோர் மன்றம் நிறைவேற்றிய ஆணையை அம் மன்றத்தின் தலைவர் தாமே எடுத்துச் சென்று நெப்போலியனிடம் சேர்ப்பித்தார். நெப்போலியனும் அதனை மனமுவந்து ஏற்றுக்கொண்டார். உடனே, தளபதி நெப்போலியன் குதிரை மேல் அமர்ந்து, இராணுவ அதிகாரிகள் உடன்வர டுயிலெரிஸ் (Tuileries) அரண்மனை நோக்கிப் புறப்பட்டார் ஆயிரத்தைநூறு குதிரைப்படைவீரர்கள் அவருக்கு உதவியாக அணிவகுத்துச் சென்றனர். நெப்போலியன் இல்லத்திலிருந்து சட்ட மன்றங்கள் கூடுகின்ற இடமான டுயிலெரிஸ் (Tuileries) அரண்மனைவரை வழிநெடுகிலும் மக்கள் அலைஅலையாகத் திரண்டு தளபதியைக் கண்டு களித்துத் தங்களின் நல்வாழ்த்துகளை நல்கினர். ஃபிரெஞ்சு நாட்டின் முடிசூடாமன்னன் நெப்போலியன் மூத்தோர் மன்றத்திற்குள் வெற்றிப் பெருமிதத்துடன் நுழைந்தார். அவரது திடீர் வருகையைக்கண்ட உறுப்பினர்கள் பலர் திகைப்பில் ஆழ்ந்தனர். ஆனால், போனபார்ட் அவையில் தமது பதவிக்கான உறுதிமொழி எடுத்துக்கொண்டார். அத்துடன், 'பெரு மதிப்பிற்குரிய அவையினரே ! நீங்கள்தான் நமது தாயகத்தின் அறிவுக் களஞ்சியம். நமது குடியரசினை எதிர்நோக்கியுள்ள சிக்கல்களைக் களைந்து அதனைக் காப்பாற்றும்வகையில் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெற்றுள்ளவர்களும் நீங்களே. உங்களுக்கு ஆதரவு நல்கும் பொருட்டு நான் எனது இராணுவ அதிகாரிகளுடன் இங்கு வந்துள்

ளேன். நீங்கள் எனக்களித்துள்ள ஆணையைக் கடமையுணர்வுட னும் நன்றியுடனும் நிறைவேற்றுவேன்' என்றுகூறி அவையின் அன்பைப் பெற்றார். அடுத்து, போனபார்ட் மூத்தோர் மன்றம் நிறைவேற்றிய ஆணையை இலக்சம்பர்க் அரண்மனையில் கூடியிருந்த இயக்குநர்களுக்கு அறிவித்தார். உடனே, சியே (Sieyes), டூகாஸ் (Ducos) என்ற இயக்குநர்கள் இருவரும் தாங்களாகவே பதவிகளைத் துறந்து போனபார்ட்டுக்கு ஆதரவு காட்டும் வகையில் டூயிலெரிஸ் நோக்கி விரைந்தனர். பராஸ் (Barras) முதலில் எதிர்த்தார். ஆனால், நெப்போலியனைக் கண்டவுடன் அஞ்சிப் பதவி விலகினார். கோகியர் (Gohier), மோலின்ஸ் (Molins) ஆகிய இரண்டு இயக்கு நர்கள் மட்டும் பதவிவிலக மனமின்றி எதிர்த்தனர். ஆனால், நெப் போலியன் அவர்களிருவரையும் சிறைபிடித்துக் காவலில் வைத் தார்.

இதற்கிடையில், அன்று காலை பதினொரு மணியளவில் ஐநூற்று வர் மன்றம் (Council of Five Hundred) கூடியது. அதன் தலைவர் லூசியன் மூத்தோர் மன்றம் நிறைவேற்றிய ஆணையை அவைக்கு அறிவித்தார். உடனே, மன்றம் தனது நடவடிக்கைகளை நிறுத்தி யது. அன்றைய அலுவல்களனைத்தும் அன்று பதினொரு மணியள வில் முடிந்தன. இயக்குநர்களாட்சி அன்றுடன் முடிந்தது. அன்று பிற்பகல் முழுதும் டூயிலெரிஸ் அரண்மனையிலுள்ள போன பார்ட்டின் அறையில் அரசியலறிஞர்கள், இராணுவ அதிகாரிகள், நகரப் பெருமான்கள் பலரும் வந்து அவருக்குத் தங்களுடைய முழு ஆதரவினையும் நல்கினர். போனபார்ட்டும் உடனுக்குடன் தற்காப்பு நடவடிக்கைகளில் கவனம் செலுத்தினார். டூயிலெரிஸ் அரண்மனையின் காவல் பொறுப்பினைத் தளபதி இலேன்னெசிடம் போனபார்ட் ஒப்படைத்தார். தளபதி மூராட் (Murat) செயின்ட் கிலௌட் காவற்படையின் பொறுப்பினை ஏற்றார். இலக்சம்பர்க் அரண்மனைக் காவல் பொறுப்பினை தளபதி மூரே (Moreau) ஏற்றுக்கொண்டார். தளபதி செரூரியர் (Serrurier) தலைமையில் எதிர்பாராத நெருக்கடிகளைச் சமாளிக்கும்பொருட்டு முக்கிய நிலையங்களில் காவற்படையினர் நிறுத்தப்பட்டனர். மக்களை அமைதிகாக்கும்படி வேண்டியும், குடியரசினைக் காப் பாற்றத் தேவையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின் றன என்று மக்களுக்கு அறிவித்தும் போனபார்ட் சிறப்பாகப் பணியாற்றினார்.

அடுத்த நாள் அதிகாலையில் போனபார்ட் செயின்ட்கிலௌட் (St. Cloud) சென்றார். அங்குள்ள அரண்மனையில் சட்ட மன்ற நடவடிக்கைகளுக்காக மூன்று பெரிய அறைகள் ஒதுக்கப்பட்டி ருந்தன. ஒரு அறையில் மூத்தோர் மன்றம் கூடியது; இன்னொரு

அறையில் ஐநூற்றுவர் மன்றம் கூடியது. பிறிதொரு அறையில் நெப்போலியன் தமது காவற்படையுடன் தங்கியிருந்தார். மூத்தோர் மன்றத்தில் ஜேகோபியர்களின் தூண்டுதலால் நெப்போலியனை எதிர்த்துக் கூச்சல் கிளம்பியது ; எங்கும் குழப்பமாயிருந்தது. உடனே, நெப்போலியன் அங்கு விரைந்து அமைதியை நிலைநாட்ட முற்பட்டார். ஆனால், அடுத்த அறையில் கூடிய ஐநூற்றுவர் மன்றம் நெப்போலியன் சமூகத்திலிருந்து விலக்கப் பட்டவர் (Outlaw) என்று அறிவிக்கும் ஆணையை நிறைவேற்றுவதில் மும்முரமாயிருந்தது. அதற்கு இடந்தராத லூசியனைச் சுற்றி வளைத்துக்கொண்டு கொடியவர்கள் தாக்கினர். அதனை அறிந்த நெப்போலியன் தம் காவற்படையுடன் அங்கு விரைந்தார். தமது சகோதரன் லூசியனை விடுவித்தார். குழப்பத்தினை உருவாக்கிய உறுப்பினர்களைக் காவற்படையினர் துரத்தியடித்தனர். போனபார்ட் தமது உடன்பிறப்பாம் லூசியனைத் தம்முடன் குதிரையிலமர்த்தித் தம்படை இருந்த இடத்தினை அடைந்து ' ஐநூற்றுவர் மன்றம் இன்றுடன் கலைக்கப்பட்டது ' என்று அறிவித்தார். உடனே, தளபதி மூராட் தம் படையுடன் அம் மன்றத்திற்குள் நுழைந்தார். உறுப்பினர்கள் அலறியடித்துக் கொண்டு மன்றத்தை விட்டு ஓடினர். இரண்டு மணித்துளிகளில் அம் மாமன்றம் காலி செய்யப்பட்டது. இருப்பினும், அன்று மாலை போனபார்ட் இரண்டு சட்ட மன்றங்களையும் கூட்டினார். நெப்போலியனது ஆதரவாளர்கள் மட்டும் அப்போது வந்திருந்தனர். ஃபிரெஞ்சுக் குடியரசினைக் காக்கும் வகையில் பல ஆணைகள் அங்கு ஒருமனதாக நிறைவேற்றப்பட்டன. நெப்போலியனைப் பாராட்டியும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இயக்குநர்களாட்சி முடிவுற்றதை அறிவிக்கும் ஆணையும் அங்கு ஒருமனதாக நிறைவேறியது. குடியரசின் நிர்வாக அதிகாரம் நெப்போலியன், சியே, டூகாஸ் ஆகிய மூவரடங்கிய குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர்கள் மூவரும் கான்சல்கள் (Consuls) என்று அழைக்கப்பட்டனர். ஒவ்வொரு மன்றத்திலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட இருபத்தைந்து உறுப்பினர்களைக் கொண்ட இரண்டு குழுக்கள் உருவாக்கப்பட்டன. அக் குழுக்கள் இரண்டும் புதிய அரசியலமைப்பை உருவாக்குவதில் கான்சல்களுக்கு உதவியாக இருந்தன.

இவ்வாறு, நெப்போலியன் இரண்டே நாட்களில் ஒரு சொட்டு இரத்தம்கூடச் சிந்தாதவகையில் ஆட்சி மாற்றத்தை உருவாக்கினார். முப்பது வயதுடைய அவர் இன்று ஃபிரான்சின் முடிசூடாமன்னராக விளங்கினார். ஜேகோபியர்களைத்தவிர ஏனைய அரசியல் கட்சிகளனைத்தும் நிபந்தனையற்ற ஆதரவைப் போன

பார்ட்டுக்கு அளித்தன. ஃபிரான்சு முழுவதும் புதிய ஆட்சியினை வரவேற்று மக்கள் விழாக்கொண்டாடினர். இதற்கிடையில், ஆட்சிமாற்றப் புரட்சியில், நெப்போலியன் படுதோல்வி அடைந்தார் என்றும் ஜேகோபியர்கள் அவரைச் சிறைபிடித்தனர் என்றும் வதந்தி பாரிசில் கிளம்பியது. ஜோசபைன் விழிகளில் நீர் மல்க சன்னல் கம்பிகளுக்கிடையே தன் பார்வையை வீதியில் செலுத்தி விம்மிக்கொண்டிருந்தாள். வதந்திபற்றி எதுவுமறியாத நெப்போலியன் இரவு முழுவதும் ஆக்கப்பணிகளில் ஈடுபாடு கொண்டு காலை மூன்று மணியளவில் பாரிஸ் விட்டகன்றார். அன்று காலை நான்கு மணிக்கு தமது இல்லம் வந்து சேர்ந்தார். வழிமேல் விழிவைத்துக் காத்திருந்த ஜோசபைன் தனது கணவனைக் கண்டதும் துள்ளிக்குதித்தோடி அவரது கரங்களில் விழுந்து அரவணைப்புக்குள்ளானாள். அவளது கண்கள் ஆனந்தக் கண்ணீரில் நீந்தின. ஒரு மணி நேர ஓய்வுக்குப்பின் ' நாளை நாமிருவரும் இலக்சம்பர்க் அரண்மனையில் தூங்கலாம் ' என்று தமது நெஞ்சில் நிறைந்தவளிடம் கூறி விடைபெற்று மீண்டும் கிளம்பினார் போனபார்ட்.

இலக்சம்பர்க் அரண்மனையில் அன்று காலை நெப்போலியன், சியே, டூகாஸ் ஆகிய மூன்று கான்சல்களும் கூடினர். சியே சிறந்த அரசியலறிஞர் ; அவரது நரைத்த முடி அவரது ஆழ்ந்த அனுபவத்தின் சின்னமாகத் திகழ்ந்தது. அவர்களது அறையில் ஒரே ஒரு சாய்வு நாற்காலி யிருந்தது. அதில் நெப்போலியன் அமர்ந்து கொண்டார். ஆனால், அதனைக்கண்ட சியே எரிச்சல் கொண்டார்; இருப்பினும் அதனை வெளிக்காட்டிக்கொள்ளவில்லை. டூகாஸ், தலைமை யேற்றுச் செயல்படும் தகுதிபடைத்தவர் மாவீரன் போனபார்ட்டே என்று எண்ணி வாளாவிருந்தார். அடுத்து, சியே ஒரு முக்கியமான இரகசியத்தையும் நெப்போலியனிடம் வெளியிட்டார். இயக்குநர்களாண்ட காலத்தில் அவர்கள் தங்களுக்கென மறைத்து வைத்திருந்த பணப்பெட்டி ஒன்று அங்கிருந்தது. அதில் சுமார் ஒரு மில்லியன் ஃபிராங்குகளிருந்தன. அத் தொகையை இயக்குநர்க ளனைவரும் பங்குபோட்டுக்கொள்ளத் திட்டமிட்டிருந்தனர். ஆனால், இப்போது இயக்குநர்களெல்லாம் ஒழிந்த காரணத்தால் கான்சல்கள் மூவரும் அப் பெருந்தொகையைப் பங்கு போட்டுக் கொள்ளலாம் என்று சியே முன்மொழிந்தார். ஆனால், நெப்போலியன் அதனை ஏற்காது அவர்களிருவரையும் பகிர்ந்தெடுத்துக்கொள்ளும்படி பணித்தார். அதன்படி, சியேயும் டூகாசும் அதனைப் பங்குபோட்டுக்கொண்டனர். ஆனால், சியே பெரும் பங்கினைப் பெற்றார் ; அதனைக் கண்ட டூகாஸ், நெப்போலியனிடம் அதுபற்றிப் புகார் கூறினார். ஆனால்,

நெப்போலியன், 'நீங்களிருவரும் ஒன்றுபட்டு இப் பிரச்சினையை முடித்துக்கொள்ளுங்கள்; இல்லையேல், அத் தொகை முழுவதையும் நாட்டின் பொதுக்கருவூலத்தில் சேர்த்துவிடுவேன்' என்று கூறி அவர்களிடம் தமது ஆதிக்கத்தை நிலை நாட்டினார். அன்று மாலை சியே விருந்து ஒன்றில் கலந்து கொண்டு நண்பர்களுடன் அளவளாவினார். அப்போது, 'இன்றுடன் குடியரசு மாய்ந்தது; அனைத்துத் துறையிலும் ஆற்றல் பெற்று அற்புதங்கள் புரியும் இளைஞர் ஒருவர் நாட்டின் ஆட்சிக்கயிற்றைப் பிடித்துள்ளார்' என்று கூறினார். அதனைக் கேட்ட அவரது நண்பர் ஒருவர், 'அத்தகைய கொடுங்கோலனை ஒழித்துக்கட்ட புரூட்டசின் வாள் நமக்கு தேவைப்படும்' என்று வினவினார். ஆனால் சியே, 'அப்படியானால் நாம் கொடுங்கோன்மையை விட மோசமான போர்போன் மன்னராட்சியில் சிக்கி சீரழிய நேரிடும்' என்று மறுமொழி கூறினார்.

அடுத்து, நெப்போலியன் அரசாங்கத்தைத் திருத்தி அமைப்பதிலும், பேரரசின் நிர்வாகத்தைச் சீராக்குவதிலும் தமது முழுக்கவனத்தையும் செலுத்தினார். இரவும், பகலும் கடுமையாக உழைத்தார். வங்கி, காவல், அரசியல் தந்திரம், படை, கடற்படை போன்ற ஒவ்வொரு துறையிலும் தாமே முன்னின்று சீர்திருத்தம் காண முற்பட்டார். நாட்டு மக்களின் நலங்கருதி திட்டங்கள் பல வகுத்துச் செயல்பட்டார். இயக்குநர்களாட்சியில் நாட்டைவிட்டு ஓடியவர்களின் உறவினர்களெல்லாம் சிறைபிடிக்கப்பட்டிருந்தனர். மனைவிகள், மக்கள், பெற்றோர், உடன்பிறப்புகள் ஆகிய பலரும் ஓடிப்போனவர்களின் உறவினர்கள் என்ற காரணத்திற்காகச் சிறைகளில் அடைபட்டு வாடினர். அவர்களையெல்லாம் உடனடியாக விடுவிக்கும் ஆணை பிறப்பித்தார் நெப்போலியன். ஃபிரான்சு முழுதும் அத்தகைய சிறைச்சாலைகளின் கதவுகள் திறக்கப்பட்டன; செய்யாத குற்றத்திற்குத் தண்டனை அனுபவித்த அப்பாவிகள் விடுதலை பெற்று வெளியே வந்து நெப்போலியனை மனமார வாழ்த்தினர். சில சிறைச்சாலைகளுக்கு நெப்போலியனே நேரடியாகச் சென்று தம் கைப்படவே அவர்களது விலங்கொடித்து அவர்களை விடுதலை செய்தார். திருச்சபைச் சமயக்குருக்கள் (Priests) கொள்கை வேறுபாட்டின் காரணமாக அடக்குமுறைக்குள்ளாகித் துன்புறுத்தப்பட்டனர். பலர் சிறையில் வாடினர்; பலர் நாட்டை விட்டோடி வறுமையில் வாடினர். அவர்களது இழிநிலை கண்டு இரங்கிய நெப்போலியன் அவர்களுக்கு மறுவாழ்வளிக்க முன்வந்தார். சிறையிலிருந்த திருச்சபைச் சமயக்

குருக்கள் விடுவிக்கப்பட்டனர். வேறு நாடுகளில் அடைக்கலம் புகுந்த சமயக்குருக்களும் தாயகம் திரும்ப அனுமதிக்கப்பட்டனர். அவர்களுக்கெல்லாம் வழிபாட்டு உரிமைகள் வழங்கப் பட்டன. ஆலயவழிபாடு மீண்டும் அனுமதிக்கப்பட்டது. அரசாங்கப் பணிகளில் ஒவ்வொருவரும் அக்கறை செலுத்தத் தலைப் பட்டனர். ஒவ்வொரு துறையும் பம்பரம் போல் சுழன்று பணியாற்றியது. நிதியமைச்சர் வாரத்தில் மும்முறை நெப் போலியன்முன் தோன்றி ஆற்றிய பணிகள் பற்றிய அறிக்கை சமர்ப்பித்தார். இயக்குநராட்சியில் நிலவிய இலஞ்சமும், காலதாமதமும் குறையத் தொடங்கின. காலியாகவிருந்த கருவூலம் படிப்படியாக நிரம்பத் தொடங்கியது. பசியால் வாடி, கிளர்ச்சிக்குத் தயாராகவிருந்த படைவீரர்களுடைய குறைகளும் உடனடியாக களையப்பட்டன. ஃபிரான்சு முழுவதும் புதிய வேகமும் புதிய உணர்ச்சியும் காணப்பட்டன. இதற் கிடையில் நாட்டிற்குத் தேவையான புதிய அரசியலமைப்பை வரைவதிலும் அவர் தீவிரக் கவனம் செலுத்தினர்.

ஆறு வார காலத்திற்குள்ளாக புதிய அரசியலமைப்பு உருவாக்கப்பட்டது. அது மக்களை அடிப்படையாகக்கொண்டு பிரமிடு போல் அமைந்திருந்தது. வரி கட்டுகின்ற இருபத் தொன்று வயதுக்கு மேற்பட்ட ஒவ்வொரு ஃபிரெஞ்சு ஆண் மகனுக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. அன்றைய ஃபிரெஞ்சு வாக்காளர்களின் தொகை ஐந்து மில்லியனாகும். அவர்கள் ஐநூறாயிரம் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தனர். இந்தப் பிரதிநிதிகள் தங்களுக்குள்ளாகவே ஐம்பதினாயிரம் உறுப்பினர் களைத் தேர்ந்தெடுத்தனர். அந்த ஐம்பதினாயிரம் பேரும் தங் களுக்குள்ளாகவே ஐயாயிரம் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தனர். இந்த ஐயாயிரம் பிரதிநிதிகளும் குறிப்பிடத்தக்கவர் (Notables) என்றழைக்கப்பட்டனர். அவர்களே பல்வேறு அரசியலமைப் புகளில் பணியாற்றத் தகுதிபடைத்தவர்கள். அவர்களைக் கொண்டே சட்ட மன்றங்கள், செனட் ஆகியவை நிரப்பப்படு கின்றன.

புதிய அரசியலமைப்பு நெப்போலியனை ஃபிரான்சின் முதல் கான்சலாகப் (First consul) பிரகடனப்படுத்தியது. அவரது பதவிக்காலம் பத்தாண்டுகள். அவரது ஆண்டுச் சம்பளம் ஐநூறாயிரம் ஃபிராங்குகள். ஃபிரான்சு நாட்டின் இறைமை அதிகாரம் அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவரே ஃபிரெஞ்சு நிர்வாகத்துறையின் தலைவர். சட்டங்களைச் செயல்படுத்தல், படைகளைக் கட்டுப்படுத்தல், வெளிநாடுகளுக்குத் தூதர்களை நியமித்தல் போன்ற அதிகாரங்கள் அவருக்கு வழங்கப்பட்டன.

அவருக்கு உதவியாக இரண்டு துணைக்கான்சல்கள் இருந்தனர். கேம்பாசரிஸ் (Cambaceres), லீப்பிரன் (Lebrun) ஆகிய இருவரும் துணைக்கான்சல்களாக நியமிக்கப்பட்டனர். அவர்களது பதவிக் காலமும் பத்தாண்டுகளே. அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆண்டு ஊதியமாக முந்நூறுயிரம் ஃபிராங்குகள் வழங்கப்பட்டன. அவர்களிருவரும் முதல் கான்சலுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டியவர்களாவர். நாட்டின் நலனைக்கருதிய சட்டங்களை உருவாக்குவதற்குரிய மசோதாக்களை கான்சல்கள் தயாரித்துச் சட்ட மன்றத்திற்கு முன்மொழிந்தனர்.

கான்சல்களுக்கு அடுத்தபடியாக விளங்கிய அமைப்பு டிரிபியூனேட் (Tribiunate) என்ற மன்றமாகும். குறிப்பிடத்தக்கவர் (Notables) களிலிருந்து நியமிக்கப்பட்ட நூறுபேர் இதன் உறுப்பினர்களாவர். அந்த நியமன உறுப்பினர்கள் நூறுபேரும் செனட் மன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படுவர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆண்டொன்றுக்கு பதினைந்தாயிரம் ஃபிராங்குகள் ஊதியமாக வழங்கப்பட்டன. கான்சல்கள் தயாரித்து முன்மொழிந்த மசோதாக்கள்மீது இம் மன்றம் முழு விவாதம் செய்வதற்கான அதிகாரத்தைப் பெற்றிருந்தது. விவாதத்திற்குப்பின் இம் மன்றம் மசோதாக்களை ஏற்றுக்கொள்ளலாம், அல்லது தள்ளுபடி செய்யலாம். ஏற்றுக்கொண்ட மசோதாக்கள் சட்ட வடிவம் பெற்று நிறைவேற அடுத்த மன்றமான சட்ட மன்றத்திற்கு (Legislative) அனுப்பப்பட்டன. மசோதாக்கள் மீது விவாதிக்கும் அதிகாரம் டிரிபியூனேட் (Tribiunate) மன்றத்திற்கு மட்டுமே உண்டு.

டிரிபியூனேட் (Tribiunate) மன்றம் அனுப்பிய மசோதாக்களை நிறைவேற்றும் அதிகாரம் சட்டமன்றத்திற்கு வழங்கப்பட்டது. அதில் குறிப்பிடத்தக்கவர்களிடமிருந்து நியமிக்கப்பட்ட முந்நூறு பேர் உறுப்பினர்களாக இருந்தனர். அவர்களைச் செனட் மன்றமே தேர்ந்தெடுத்தது. தனக்கனுப்பப்பட்ட ஒரு மசோதா மீது மேலும் விவாதம் நடத்தாது உடனே வாக்களித்து அதனை நிறைவேற்றும். சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட ஒவ்வொரு மசோதாவும் செனட் மன்றத்திற்கு அனுப்பப்படும். செனட் எண்பது உறுப்பினர்களைக் கொண்ட மன்றமாகும். அதன் உறுப்பினர்கள் மூன்று கான்சல்களும் சியே, டூகாஸ் ஆகியோரும் சேர்ந்து குறிப்பிடத்தக்கவர் (Notables) களிடமிருந்து தேர்ந்தெடுத்து நியமிக்கப்பட்டனர். செனட்டும் மசோதாமீது விவாதிக்கும் அதிகாரத்தைப் பெற்றிருக்கவில்லை. சட்ட மன்றம் வாக்களித்து நிறைவேற்றிய மசோதாக்களை சட்டமாக நிறைவேற்றவோ அல்லது தள்ளுபடி செய்யவோ அதிகாரம்

பெற்றிருந்தது. செனட் மன்ற உறுப்பினர்கள் வாழ்நாள் முழுவதும் பதவி வகிக்கலாம். அவர்கள் ஒவ்வொருவரும் ஆண்டு ஊதியமாக இருபத்தைந்தாயிரம் ஃபிராங்குகள் பெற்றனர்.

[புதிய அரசியலமைப்புப்படி நெப்போலியன் முன்மொழி கின்ற ஒவ்வொரு மசோதாவும் சட்ட வடிவம் பெறுவதற்கு முன் பல தடைகளைக் கடந்தாகவேண்டும். டிரிபியூனேட், சட்ட மன்றம், செனட் ஆகிய ஒவ்வொரு மன்றத்திலும் நிறை வேற்றப்பட்டபின்பே அது சட்டமாகும். புதிய அரசியல மைப்பு மக்களின் ஒப்புதலைப் பெறும்பொருட்டு அவர்கள்முன் வைக்கப்பட்டது. மூன்று மில்லியனே பதினொராயிரத்து ஏழு வாக்குகள் அரசியலமைப்புக்கு ஆதரவாகக் கிடைத்தன; ஆயி ரத்து ஐநூற்று அறுபத்திரண்டு வாக்குகள் எதிராகக் கிடைத்தன. ஃபிரான்சு நாட்டின் தேர்தல் வரலாற்றில் இது ஒரு புதிய சாதனையாகும். நெப்போலியன் மக்களிடம் பெற்றிருந்த செல் வாக்குக்கு இது சிறந்த எடுத்துக்காட்டாகும். ஆகவே, நெப் போலியன் மிகப்பெரும்பான்மையான வாக்குகள் பெற்று ஃபிரான்சின் முதல் கான்சலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஃபிரான்சு நாட்டின் தன்னிகரற்ற தலைவனாக விளங்கினார். 'ஃபிரான்சின் மணிமுடியை நான் அபகரித்துக் கொள்ளவில்லை; அது சேற்றில் புதைந்து கிடந்தது; நான் எடுத்தேன்; மக்கள் அதனை என் தலையில் சூட்டினர்' என்பது போனபார்ட்டின் கருத் தாகும்.]

முதல் கான்சலாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நெப்போலியன் இலக்சம்பர்க் அரண்மனையிலிருந்து தம் மனைவியுடன் வரலாற் றுச் சிறப்புமிக்க டூயிலெரிஸ் (Tuileries) அரண்மனையில் குடி யேறினர். அரச குலத்தவரின் ஆடம்பரச் சின்னமாக விளங்கிய அப் பெருமாளிகை பாரிஸ் கிளர்ச்சிக்காரர்களால் பெரும் சேதத்துக்குள்ளாயிற்று. அதனை செப்பனிட்டு, சீராக்கி நெப் போலியன் தங்குவதற்கு ஏற்றவகையில் அது மாற்றியமைக்கப் பட்டு எழிலும், ஏற்றமும் பெற்றுத் திகழ்ந்தது. லூயி பிரபுக் களின் மன்னன்; பிரபுக்களால் அரியணையில் அமர்த்தப்பட்ட வன். அவன் மேட்டுக்குடியினரின் நலன்களுக்காகவே வாழ்ந் தான். நாட்டின் செல்வம் அனைத்தும் அவர்களுக்காக செல வழிக்கப்பட்டது. அவனது ஆட்சியில் ஏழைமக்கள் அடிமை களாகவே வாழ்ந்தனர்; அறியாமை, வறுமை, வாட்டம் அவர்களது உற்ற நண்பர்கள்; ஆடம்பரம், செருக்கு, ஆணவம் ஆகியவை அரசகுலத்துப் பிரபுக்களின் அருங்குணங்கள். ஆக வே, லூயி ஆடம்பரத்தின் சிகரமாக அவர்களது பிரதிநிதியாக

விளங்கினான். ஆனால், நெப்போலியன் மக்களின் மன்னன்; அவர்களில் ஒருவர் மட்டுமல்ல; அவர்களால் மன்னராக்கப்பட்டவர்; மன்னன் என்ற பட்டத்தைப் பெற்றிருக்கவில்லை என்றாலும் மன்னருக்குரிய அதிகாரங்களனைத்தும் பெற்றுத் திகழ்ந்தார். அவர் ஏழைகளின் தோழன்; உழைப்பாளிகளின் உற்ற நண்பன்; சாமான்யர்களின் சகோதரன். எனவே, அவர் மக்களுக்காகவே வாழ்ந்தார். 'மக்கள் நலன் கருதிய திட்டங்களை நிறைவேற்றினார். சலுகை பெற்றோர்—சலுகையுற்றோர் என்ற பாகுபாடு அவரது ஆட்சியில் இல்லை. அறிவும், அயராத உழைப்பும் அவரது காலத்தில் போற்றி வளர்க்கப்பட்டன. மக்களின் இதயங்களை வென்ற நெப்போலியன் தமது புகழ், சிறப்பு அனைத்தும், மக்களுடையது என்று கருதினார். மக்களும் அவரைத் தங்கள் வீட்டுப் பிள்ளையாகக் கருதி உயர்வான இடத்தில் வைத்து அழகு பார்த்தனர்.

1800ஆம் ஆண்டு ஃபிப்ரவரித் திங்கள் 19ஆம் நாள் பாரிஸ் நகரம் முழுவதும் விழாக்கோலம் பூண்டு விளங்கியது. மக்கள் மன்னன் போனபார்ட் பாரிஸ் வீதிகளில் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டார். அலங்கார வண்டியில் அழகுடன் விளங்கின இருக்கைகள் மூன்று. நடுவில் முதல் கான்சல் போனபார்ட் அமர்ந்திருக்க, அவருக்கு இரண்டு பக்கங்களிலும் துணைக்கான்சல்கள் அமர்ந்திருந்தனர். போனபார்ட் மாமன்னனைப் போன்ற மிடுக்குடனும், பெருமிதத்துடனும் அமர்ந்து வர அவருக்கருகில் வீற்றிருந்த துணைக்கான்சல்களிருவரும் அவரது மெய்க்காப்பாளர்களைப் போல காணப்பட்டனர். அந்த அலங்கார வண்டியை ஆறு அழகிய வெள்ளைக் குதிரைகள் இழுத்து வந்தன. கேம்போ போர்மியோ உடன்பாட்டிற்குப்பின் ஆஸ்திரியப் பேரரசரால் நெப்போலியனுக்களிக்கப்பட்டவை அவை. அதனைத் தொடர்ந்து உயர்தர அதிகாரிகள் அணிவகுத்து வந்தனர். அவர்களுக்குப்பின் பொறுக்கியெடுக்கப்பட்ட ஆறாயிரம் வீரர்கள் இராணுவ மிடுக்குடன் அணிவகுத்து வந்தனர். ஊர்வலம் சென்ற சாலையின் இருமருங்கிலும் இருபதினாயிரம் இராணுவ வீரர்கள் கைகோர்த்து நின்று சிறப்பித்தனர். கண்ணுக்கெட்டிய தொலைவெல்லாம் மக்கள் வெள்ளம். வீதிகள், நகர்ப்புறத்தோட்டங்கள், மாடிகள், மரங்கள் அனைத்திலும் மக்கள் கூட்டம். தங்களின் தலைவனை, தங்களை வாழ்விக்க வந்த வித்தகனை, ஃபிரான்சு நாட்டின் நம்பிக்கை ஒளியைக் கண்டு களித்தனர் அவர்கள். மக்களை மாக்களாகக் கருதிய மாமன்னன் லூயியை விரட்டிவிட்டு அதே ஆடம்பர மாளிகையில் 'தங்கள் வீட்டுப் பிள்ளை'யான நெப்போலியனை

மக்களின் இதயங்களையெல்லாம் வென்ற மாமன்னனைக் குடிய மர்த்தினர். 'முதல் கான்சல் நீடுழி வாழ்க', 'போனபார்ட் வாழ்க' போன்ற முழக்கங்கள் வானைப் பிளந்துசென்று எதிரொலித்தன. ஊர்வலம் அரண்மனையை அடைந்தவுடனே, போனபார்ட் தாம்மட்டும் வண்டியைவிட்டிறங்கிக் குதிரை மீதமர்ந்து அங்கு சற்றுத் தொலைவில் தன்னைக்கண்டு களித்து அணிவகுத்து நின்ற படைகளைக் காணச் சென்றார். மூராட், இலேன்னெஸ் போன்ற தளபதிகளையும், படைவீரர்களையும் கண்டு அவர்களுக்கு தம் பாராட்டுகளையும் நன்றியையும் தெரிவித்துக்கொண்டார். அடுத்து, அழகிய டுயிலெரிஸ் அரண்மனைக்குள் நுழைந்து அரசாங்க அலுவல்களைக் கவனிக்கத் தொடங்கினார்.

1800ஆம் ஆண்டு ஃபிப்ரவரித் திங்கள் 19ஆம் நாள் முதல் கான்சலாகப் பதவியேற்ற போனபார்ட் ஃபிரான்சின் நிர்வாகத்தைச் சீர்திருத்தும் வகையில் சிறப்பான நடவடிக்கைகளை மேற்கொண்டார். 'இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து, அதனை அவன் கண்விடல்' என்ற குறளுக்கு இலக்கணமாகத் தக்கவர்களைத் தேர்ந்தெடுத்து ஆட்சியின் பல்வேறு துறைகளை அவர்களிடம் ஒப்படைத்தார். சிறந்த அரசியல் மேதையும், அரசியல் தந்திரங்களில் வல்லவருமான டேலிராண்ட் (Talleyrand) வெளிநாட்டுத் துறை அமைச்சராக்கப்பட்டார். அவரது சிறந்த ஆலோசனையின் பேரில், உள்நாட்டு, வெளி நாட்டுத்துறைகள், காவல்துறை, படைத்துறை போன்றவற்றில் தனிக்கவனம் செலுத்துவதுடன் ஒவ்வொரு துறையினையும் தாமே மேற்பார்வையிட்டார். இரண்டாவது கான்சல் தலைசிறந்த வழக்கறிஞர். எனவே, அவரிடம் சட்டத்துறை ஒப்படைக்கப்பட்டது. மூன்றாவது கான்சல் புகழ் மிக்க பொருளாதார நிபுணர். ஆகவே, அவரிடம் நாட்டின் பொருளாதாரத்துறை ஒப்படைக்கப்பட்டது. கார்னாட் (Carnot) போர்த்துறை அமைச்சரானார். ஃபௌச்சே (Fouche) காவல் துறை அமைச்சராக்கப்பட்டார். அப்ரெயில் (Abriel) என்பவர் நீதித்துறை அமைச்சராக்கப்பட்டார். பதினாறும் லூயிமன்னன் படுகொலைசெய்யப்பட்ட நாளை இதுவரை ஃபிரான்சு விழா வெடுத்து மகிழ்ந்தது. நெப்போலியன், அத்தகைய விழா, காட்டுமிராண்டித்தனமானதும், மனிதத் தன்மையற்றதுமாகும் என்று கருதி அதனை ஒழித்தார். இயக்குநர்கள் புகுத்திய கட்டாயக்கடன் முறையை ரத்துசெய்தார். வணிகப்பெருமான்களையும், வங்கி உரிமையாளர்களையும், பிறரையும் அணுகி அவர்களாக மனமுவந்து அளித்த கடன்களை ஏற்றார். அதன் மூலம் உடனடியாக இரண்டு மில்லியன் டாலர்கள் கிடைத்தன. ஒரே சீரான

சொத்துவரியினை விதித்து அதன் மூலம் வருமானத்தைப் பெருக்கினார். படைத்துறை வீரர்களுக்கு வசதிகளும் பதவி உயர்வுக்கான வழிவகைகளும் மேற்கொள்ளப்பட்டன. நெப்போலியன் மாணவர்களின் அறிவாற்றலையும், தொழிலாற்றலையும் வளர்க்கும் வகையில் கல்வித்திட்டங்களைக் கொண்டுவந்தார். வருங்காலச் சந்ததியினரின் வளர்ச்சியினையும் கருத்தில் கொண்டு கல்வித்துறையில் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. டூயிலெரிஸ் (Tuileries) அரண்மனையை அழகுபடுத்தியதோடல்லாமல் அதனை பாரிஸ் மக்களின் சிறந்த பொழுதுபோக்கிடமாகத் திகழச்செய்தார். ஆடல், பாடல்கள், நாடகங்கள் போன்றவை அங்கு அடிக்கடி இடம்பெற்றன; அவற்றைக்கண்டு மக்கள் மனமகிழ்ச்சி கொண்டனர். மேட்டுக்குடியினரின் மேன்மைக்காக விளங்கிய அரண்மனையை போனபார்ட் பாமரமக்களின் ஓய்வுக்கான உல்லாச புரியாக மாற்றியமைத்தார். கட்டிடத்துறையிலும் அவர் கவனத்தைச் செலுத்தினார். பாரிஸ் நகரை அழகுபடுத்துவதில் அவர் முன்னின்று செயல்பட்டார். டூயிலெரிஸ் அரண்மனைக்கு முன்னால் சீன் (Seine) நதிக்கரையில், அழகிய கப்பல்துறை (Quay) ஒன்று எழுப்பினார். பெருஞ்சதுக்கங்கள் பல உருவாக்கப்பட்டன; கால்வாய்கள் பல வெட்டப்பட்டன; பாலங்கள் பல உருவாயின; பேரரசின் பல பகுதிகளையும் இணைக்கும் வகையில் எண்ணிறந்த சாலைகள் எழுந்தன.

இலாவெண்டி (Lavendee) என்பது ஃபிரான்சு நாட்டின் பெரும் மாநிலங்களில் ஒன்று. அரசுக்கட்சி ஆதரவாளர்களின் கோட்டையாக அது விளங்கியது. அங்கு ஆயிரக்கணக்கான அரசுக்கட்சியினர் (Royalists) ஒன்றுதிரண்டு உள்நாட்டுக் கலகத்தில் ஈடுபட்டனர். இங்கிலாந்து அவர்களுக்குப் பணமும், போர்க்கருவிகளும், ஆட்களும் கொடுத்து உள்நாட்டுப் போருக்கு ஊக்கமும், ஆக்கமும் அளித்தது. ஆகவே, அவர்கள் விரைவில் அறுபதினாயிரம் வீரர்களடங்கிய படையைத் திரட்டிப் போராட்டத்தைத் தொடர்ந்தனர். அதனை ஒடுக்குவதற்கு இயக்குநர்கள் மேற்கொண்ட முயற்சிகளனைத்தும் வீணாயின. ஆனால், நெப்போலியன் முதல் கான்சலாகப் பதவியேற்றுத் தமது நிலையை உறுதிப்படுத்திக் கொண்டவுடன் தமது கவனத்தை இலாவெண்டி உள்நாட்டுக் கலகத்தின்மீது செலுத்தினார். கலகத்தலைவர்களைப் பாரிஸ் நகருக்கழைத்து அவர்களுடன் கலந்துரையாடி அவரது உள்ளங்களையெல்லாம் கவர்ந்து உள்நாட்டுக் கலகத்திற்கு முடிவுகட்டினார். அரசுக்கட்சித் தலைவர்கள் பலர் நெப்போலியனது பெருந்தன்மையைக் கண்டு வியந்தனர். அவர் வழி நடக்க மனமுவந்து முன்வந்தனர். அமைதியையும், கட்டுப்பாட்டையும் நிலை நிறு

த்த நெப்போலியனோடு ஒத்துழைத்தனர். ஆனால், ஜார்ஜ் கேடௌடெல் (George Cadoudal) என்பவர் மட்டும் இறுதிவரை நெப்போலியனை எதிர்த்துப் போரிட்டார். ஃபிரான்சை விட்டகன்று இங்கிலாந்துக்குச் சென்று நெப்போலியனைக் கொல்வதற்குப் பல சதிகளை மேற்கொண்டார். ஆனால், அவர் ஃபிரான்சுக்குச் சதிவேலையின் காரணமாக வந்திருந்த நேரத்தில் பிடிபட்டுச் சுட்டுத் தள்ளப்பட்டார்.

ஃபிரான்சில் உள்நாட்டுக்கலகம் ஓய்ந்து எங்கும் அமைதி நிலவியது. ஃபிரான்சு முழுவதும் முதல் கான்சலுக்கு முழு ஆதரவு நல்கியது. எனவே, சண்டையை நிறுத்தி ஐரோப்பியப் பேரரசுகளுடன் அமைதிஉடன்பாடு செய்துகொண்டு ஃபிரான்சின் வளர்ச்சிப் பணிகளில் நாட்டம் செலுத்த முன்வந்தார் நெப்போலியன். அண்டைநாடுகளுடன் நட்புறவுகொண்டு வாழ்வதே ஃபிரான்சின் குறிக்கோளாயிற்று. ஆகவே, அமைதி உடன்பாடு காண ஒத்துழைக்கும்படி இங்கிலாந்து மன்னர் மூன்றும் ஜார்ஜுக்கு கீழ்க்கண்ட மடலைத்தீட்டினார் : 'பேரன்புமிக்க ஐயா, ஃபிரெஞ்சுப் பெருங்குடிமக்களின் விருப்பத்திற்கிணங்க முதல் கான்சல் பதவி வகிக்கும் நான் தங்களுக்கு இந்த மடலினை வரைவதில் பெருமகிழ்ச்சி கொள்ளுகின்றேன். கடந்த எட்டு ஆண்டுகளாக ஐரோப்பாவை அழிவுப்பாதையி விட்டுச்சென்ற நமது போர் இனியும் தொடரவேண்டுமா ? இங்கிலாந்தும் ஃபிரான்சும் ஒரு நல்ல முடிவுக்கு வந்து போரினை நிறுத்த வழியில்லையா ? நிலையற்ற வெற்றிகளைக் கருதி மக்களின் அமைதி, செல்வம் ஆகியவற்றை நாம் அழித்து வருதல் நியாயமாகுமா ? அமைதியும், சமாதானமும் ஐரோப்பிய மக்களுக்கு இன்பம் தருபவை ; சண்டையின்றி சமாதானத்துடன் வாழ வேண்டும் என்பதே ஃபிரான்சின் மேலான விருப்பம். இங்கிலாந்தும் அதனையே விரும்புமாயின் ஐரோப்பாவில் நிரந்தர அமைதி நிலவும்'.

அகிலமெல்லாம் நிரந்தர அமைதியும், சமாதானமும் நிலவிடவேண்டும் என்ற பெருவிருப்பின் பயனாக நெப்போலியன் தீட்டிய மடலைக் கண்டு இங்கிலாந்து மன்னர் கோபம் கொண்டார். அவரது அமைச்சர் கிரன்வில் (Lord Grenville) என்பவர் கீழ்க்கண்ட பதிலினை விடுத்தார்:—

'ஆண்டாண்டு காலமாக ஃபிரான்சை ஆண்டுவந்த போர்போன் மன்னர் குலத்தவர் மீண்டும் ஃபிரான்சு அரியணையில் அமர்ந்தாலன்றி ஐரோப்பாவில் அமைதி நிலவாது ; ஆகவே, அவர்களை ஃபிரான்சின் ஆட்சிப்பீடத்தில் அமர்த்தும்வரை

அமைதி உடன்பாட்டிற்கு இங்கிலாந்து இசையாது, இணங்காது.'

இங்கிலாந்தின் உள்நோக்கத்தை உணர்ந்த நெப்போலியன் மீண்டும் ஒரு மடலினைத் தமது அமைச்சர் டேலிராண்ட் (Talleyrand) மூலமாக அனுப்பினார். ' ஒரு நாடுதான் விரும்பியபடி அரசை அமைத்துக் கொள்ளும் உரிமையைப் பெற்றுள்ளது என்பதை இங்கிலாந்து மறுக்கவோ, மறைக்கவோ இயலாது. பல நூற்றாண்டுகளாக ஃபிரான்சை ஆண்டனர் போர்போன் மரபினர். ஆகவே, மீண்டும் ஃபிரான்சை ஆளும் உரிமை அவர்களுக்கே உரியது என்று இங்கிலாந்து வாதிடுகிறது. ஆனால், ஆண்டுகள் பலவாக இங்கிலாந்தின் அரியணையிலமர்ந்த ஸ்டூவர்ட்டுகளை விரட்டிவிட்டு, இப்போது ஹனோவரிய (Hanoverian) மரபினைச் சார்ந்த மன்னர்கள் ஆளுவது மட்டும் எப்படி பொருந்தும் ?' என்று அம் மடலில் நெப்போலியன் இடித்துக் கூறினார். ஆனால், அதனையும் பொருட்படுத்தாது இங்கிலாந்து அமைச்சர் கிரன்வில் கீழ்க்கண்ட மறுப்பு மடலைத் தீட்டினார் ; 'ஃபிரெஞ்சுக் குடியரசின் பிடியிலிருந்து மற்ற முடியரசுகளைக் காத்தற்பொருட்டே இங்கிலாந்து போரினை விரும்புகிறது. எனவே, போர் விரைவில் தொடங்கும்'.

இங்கிலாந்து அமைச்சர்களின் போர்வெறி நெப்போலியனின் அமைதிக்கான ஏற்பாட்டைக் குலைத்தது. இங்கிலாந்து பிற ஐரோப்பிய முடியரசுகளையும் ஃபிரெஞ்சுக் குடியரசுக்கெதிராகப் போரில் குதிக்கும்படி தூண்டியது. ஆங்கிலேயரின் மனப்பான்மையை அறிந்த ஃபிரெஞ்சுக்காரர்கள் கொதித்தனர். குடியரசைக் காக்கும் வகையில் நெப்போலியனுக்குப் பின்னால் அவர்கள் அணிதிரண்டு நின்றனர்.

இங்கிலாந்தின் மூன்றாம் ஜார்ஜுக்கு மடல் அனுப்பிய அதே நாள் நெப்போலியன் ஆஸ்திரியப் பேரரசருக்கும் ஐரோப்பாவில் போரை விடுத்து அமைதியை நிலை நாட்டிட தம்முடன் ஒத்துழைக்கும்படி வேண்டி உருக்கமான மடல் ஒன்றினை விடுத்தார். ஆனால், ஆஸ்திரியா தனது நட்பு நாடான இங்கிலாந்துடன் சேர்ந்து போருக்கான பணிகளில் முனைந்து நின்றது. ஐரோப்பாவில் மீண்டும் போர் மேகங்கள் சூழ்ந்தன. நெப்போலியனும் ஃபிரெஞ்சுக் குடியரசின் பகைவர்களைக் களத்தில் சந்திக்கத் தயாரானார்.

இதற்கிடையில், இழந்த அரியணையை மீண்டும் பெற நெப்போலியனது ஆதரவை நாடினர் போர்போன் அரசகுலத்தினர். பதினெட்டாம்லூயி, போனபார்ட்டுக்குப் பதவி ஆசையைக்

காட்டி மீண்டும் ஃபிரான்சின் மணி முடியைப் பெற முன்வந்தார். இலண்டனிலிருந்து அவர் கீழ்க்கண்ட மடலினை நெப்போலியனுக்கு அனுப்பினார்: 'பேரன்புமிக்க நண்பரே! நீண்ட காலமாக நான் தங்கள்மீது மதிப்பும், மரியாதையும் வைத்துள்ளேன். நான் தங்களுக்கு என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். தாங்கள் என்னை ஃபிரான்சின் அரியணையில் அமரச் செய்தால், தாங்கள் விரும்புகின்ற பதவியை நான் தங்களுக்களிப்பேன். தங்களது நண்பர்களும், உறவினர்களும் உயர்ந்த பதவிகளை பெற்றுத்திகழ்வர். பல போர்களில் வெற்றிக்கொடி நாட்டிய தாங்கள் மேலும் பல வெற்றிகள் பெற்று விளங்கலாம். நாமிருவரும் ஒன்று பட்டு ஃபிரான்சில் அமைதியை நிலை நாட்டி மகிழ்ச்சியைப் பெருக்கலாம். தங்களது மேலான ஆதரவின்றி நான் எதையும் செய்ய இயலாது. ஐரோப்பா முழுவதும் தங்களையே நாடுகின்றது. பெரும்புகழ் தங்களை எதிர்நோக்கியுள்ளது. இதுவே தக்க வேளை. ஆகவே, எனது வேண்டுகோளை ஏற்று என்னை ஆதரிக்க விரைவில் முன்வர வேண்டுகின்றேன்.'

உடனே நெப்போலியன் தமது கீழ்க்கண்ட பதிலை இலண்டனில் உள்ள பதினெட்டாம் லூயி அவர்களுக்கு அனுப்பினார்: 'ஐயா, தங்களது மடல் இன்று கிடைக்கப்பெற்றேன். தாங்கள் என்மீது வைத்திருக்கும் அன்பிற்கும் மரியாதைக்கும் நான் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். மீண்டும் ஃபிரான்சுக்கு வரவேண்டும் என்ற எண்ணத்தை உடனடியாகக் கைவிடுக. இல்லையேல், நூறாயிரம் ஃபிரெஞ்சு வீரர்களின் பிணங்களின்மீது தான் தாங்கள் நடந்து வரநேரிடும். ஃபிரெஞ்சு மக்களின் நலத்தினையும், மகிழ்ச்சியையும் கருத்தில் கொண்டு தங்களது சுயநலத்தைத் தியாகம் செய்ய முன்வாருங்கள். அதுவே வரலாற்றில் தங்களுக்குச் சிறப்பான இடத்தைத் தரவல்லது. தங்களது குடும்பத்திற்கு ஏற்பட்ட இக்கட்டான நிலைகுறித்து நான் பெரிதும் வருந்துகின்றேன். ஆனால், ஃபிரான்சின் மணிமுடியை மீண்டும் போர்போன் மரபினருக்குச் சூட்டி வரலாற்று ஏடுகளைக் கறைப் படுத்த என் நெஞ்சு இடந்தரவில்லை.'

வாளின் மூலம் சாதிக்க இயலாததை, பதவி ஆசைகாட்டிப் பசப்புமொழிகளால் சாதிக்க முற்பட்டார் போர்போன் குலக் கொழுந்து, பதினெட்டாம் லூயி. ஆனால், மக்களின் மனங்களில் மங்காத இடத்தைப் பெற்ற நெப்போலியன் லூயியின் மயக்கு மொழிகளில் மனதைப் பறிகொடுக்கவில்லை. மாறாக, மக்களின் உரிமைகளைக் காக்கும் பணியில் தீவிரமாக ஈடுபட்டார். வாளும், பதவி ஆசையைத்தாங்கி வந்த பசப்பு மொழிகளும் பயனற்றுப் போகவே பதினெட்டாம் லூயி வேல் விழி மங்கையொருத்தியின்

துணையை நாடினுர் நெப்போலியனை வீழ்த்த. கெய்ச்சி கோமாட்டி (Duchess of Guiche) கவர்ச்சி மிக்கவள் ; கலைப்பெட்டகம் : கட்டழகி ; கனிமொழி பேசிக் காளையரை கள்ளுண்டவர் போலாக்கும் காரிகை. அவள் அழகிமட்டும் அல்ல, ஆள்மயக்கியும்கூட. வாளுக்கு அஞ்சாத நெப்போலியனை, பதவி ஆசைக்குப் பலியாகாத நெபேர்லியனை அப் பாவையின் துணைகொண்டு வீழ்த்தத் திட்டமிட்டார் லூயி. கோமாட்டி இரகசியமாகப் பாரிசுக்குச் சென்று நெப்போலியனது அவையில் தக்க இடத்தினைப் பிடித்தாள். விரைவில் ஜோசபைனின் அன்புக்குரிய தோழியாளுள். அவளைக் கருவியாகப் பயன்படுத்தி ஃபிரான்சில் மீண்டும் முடியாட்சியை நிலைநாட்ட அவள் முற்பட்டாள். ஒரு நாள் காலையுண்டி நேரம் ; ஜோசபைனும், கோமாட்டியும் உணவருந்திக்கொண்டிருந்தனர். அப்போது கோமாட்டி மெதுவாகத் தன் வஞ்சக வலையை விரித்தாள் ; எளிதாக ஜோசபைன் அதில் விழுந்தாள். அதாவது, 'நான் ஒரு நாள் இலண்டனிலுள்ள பதினெட்டாம் லூயியின் அரண்மனைக்குச் சென்றிருந்தேன். போனபார்ட் தங்களை மீண்டும் ஃபிரெஞ்சு அரியணையிலமர்த்திஞல் அதற்குக் கைமாருகத் தாங்கள் அவருக்கு என்ன செய்வீர்கள்?— என்று அருகிலுள்ள ஒருவர் லூயியைப் பார்த்துக் கேட்டார். உடனே, பதினெட்டாம் லூயி, நான் போனபார்ட்டை உடனடியாக ஃபிரான்சின் காவலனுக ஆக்குவேன் ; அத்துடன் அவர் விரும்பும் அனைத்தையும் அவருக்களிப்பேன். அன்றியும் பாரிசில் பெரும்தூண் ஒன்றினை உருவாக்கி அதன் உச்சியில் போனபார்ட், போர்போன் மன்னருக்கு முடி சூட்டும் உருவச்சிலையமைத்துப் போற்றுவேன் என்று கூறினுர்' என்று கெய்ச்சி கோமாட்டி ஜோசபைனிடம் கூறினுள். அவள் கூறிமுடித்தவுடன் போனபார்ட்டும் அங்கு வந்து சேர்ந்தார். கோமாட்டியின் கூற்றில் மயங்கிய ஜோசபைன் அவள் கூறிய அனைத்தையும் அப்படியே போனபார்ட்டிடம் மிக்க ஆவலுடன் கூறினுள். 'அத் தூணின் பீடமாக முதல் கான்சலின் பிணம்தான் அமைந்திருக்கும் என்று நீ அவளுக்குப் பதில் கூறவில்லையா !' என்று நெப்போலியன் ஜோசபைனிடம் கேட்டார். அதனைக் கேட்ட கோமாட்டி, நெப்போலியனைத் தன் அழகைக்காட்டி, பசப்பு மொழிபேசி, மயக்க முற்பட்டாள். உடனே, போனபார்ட் அவளை ஃபிரான்சை விட்டகலும்படி ஆணையிட்டார்.

இங்கிலாந்தும் ஆஸ்திரியாவும் இணைந்து ஃபிரெஞ்சுக் குடியரசுக்கெதிராகப் போரிட்டபோது இரஷ்ய மன்னர் பால் அவர்களுக்குப் படைகொடுத்து உதவினுர். அந்தச் சண்டைகளில் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட இரஷ்ய வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டு ஃபிரான்

சில் இருந்தனர். அதேபோல், ஃபிரெஞ்சுவீரர்களில் பத்தாயிரம் பேர் போர்க்கைதிகளாக இங்கிலாந்திலும் ஆஸ்திரியாவிலும் இருந்தனர். உடனே, நெப்போலியன் போர்க்கைதிகளை மாற்றிக் கொள்ள முன்வந்தார். ஆஸ்திரியாவிலும் இங்கிலாந்திலுமுள்ள ஃபிரெஞ்சுப் போர்க்கைதிகளை விடுவித்தால் ஃபிரான்சிலுள்ள இரஷ்யப் போர்க்கைதிகளை விடுவிப்பதாக அறிவித்தார். ஆனால், இரஷ்யக் கைதிகளை விடுவிப்பதால் தங்களுக்குப் பயனேதுமில்லை என்று கருதிய இங்கிலாந்தும் ஆஸ்திரியாவும், போனபார்ட்டின் வேண்டுகோளைப் புறக்கணித்தன. ஆனால், அவர்களது உள்ளக் கிடக்கையை உணர்ந்த நெப்போலியன் 'உங்களுடன் தோளோடு தோள்நின்று, உங்களுடைய நலன்களுக்காக, உங்களுடைய தளபதி தலைமையில் எங்களை எதிர்த்துப் போரிட்ட உங்களது கூட்டாளிகளான இரஷ்யர்களை விடுவிப்பது உங்களது தலையாய கடமையன்றோ ?' என்று ஆங்கிலேயருக்கு ஒரு மடல் அனுப்பினார். 'உங்களுக்கு உதவியாக இத்தாலியில் ஃபிரெஞ்சு வீரர்களை எதிர்த்துப் போரிட்ட இரஷ்ய வீரர்கள் உங்களுடைய நண்பர்களல்லவா ? இத்தாலியில் பல ஆயிரக்கணக்கான ஃபிரெஞ்சு வீரர்களைச் சிறை பிடித்துத் தங்களிடம் ஒப்படைத்துச் சென்ற இரஷ்ய வீரர்கள் உங்களின் நலன் கருதி உழைத்த உத்தமர்களன்றோ ? அத்தகைய இரஷ்ய வீரர்களில் சிறைபட்டுள்ள பல ஆயிரக்கணக்கானோரை விடுவித்தல் உங்களது தலையாய கடமையன்றோ ? 'எந் நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு' என்றவகையில் ஆஸ்திரியப் பேரரசருக்கு ஒரு மடலும் அனுப்பினார் போனபார்ட். அன்றியும் ஃபிரான்சிலுள்ள இரஷ்யப் போர்க்கைதிகளனைவரையும் விடுவித்து, அவர்களுக்குப் புத்தாடையும், புதிய இராணுவச் சீருடையும், வாளும் பிறவும் கொடுத்துப் பாதுகாப்புடன் இரஷ்யாவுக்கு அனுப்பிவைத்தார்.

போனபார்ட்டின் பெருந்தன்மையைக் கண்ட இரஷ்ய மாமன்னர் பால் அவரை வெகுவாகப் பாராட்டினார். நச்சு எண்ணமும் நயவஞ்சகமும் கொண்ட ஆங்கிலேயரையும், ஆஸ்திரியர்களையும் அவர் அடியோடு வெறுத்தார். அவர்களுடன் தாம் கொண்டிருந்த உறவை உடனே முறித்தார். நெப்போலியனது அருஞ்செயலைப் பாராட்டித் தமது கைப்படவே கீழ்க்கண்ட மடலினை எழுதி அனுப்பினார் : 'முதல் கான்சல் பெருமகனார் அவர்களே ! மனிதர்கள் அல்லது குடிமக்களின் உரிமைகள்பற்றி வாதிடும்வகையில் நான் இதனை எழுதவில்லை. ஒவ்வொரு நாடும் தான் விரும்பியபடி ஆட்சியமைத்துக் கொள்ள அதற்கு உரிமையுண்டு. எவ்வாறு நாட்டை ஆள்வது ? எவ்வாறு பகைவர்களை வீழ்த்துவது ? என்பதையெல்லாம் அறிந்து ஒரு நாட்டை வழி

நடாத்திச் செல்லுகின்ற ஒருவனை நான் காணும்போதெல்லாம் என் இதயம் அவனையே நாடிச் சென்று போற்றுகின்றது. போர் வெறியும் சுயநலமும் கொண்டலையும் இங்கிலாந்தின்மீது வெறுப்புக் கொண்டு அந் நாட்டுடன் நான் கொண்டிருந்த உறவை முறித்துக் கொண்டதைத் தங்களுக்கு அறிவிக்கவே நான் இதனை எழுதுகின்றேன். இங்கிலாந்தின் அநீதியான, நாணயமற்ற செயல்களுக்கு முடிவுகட்டும் பணியில் நான் இன்றுமுதல் தங்களுடன் ஒன்றுபட்டுப் போரிட முன்வருகின்றேன்.' இவ்வாறு, இரஷ்யா, இங்கிலாந்தின் உறவை முறித்துக்கொண்டதுடன் ஃபிரெஞ்சுக் குடியரசையும் அங்கீகரித்தது. இரஷ்ய அமைச்சரொருவர் பாரிசுக்கு நல்லெண்ணத்தூதுவராக அனுப்பப்பட்டார். இரஷ்ய மாமன்னர் பாலின் நட்பினைப் பெற்றபின் போனபார்ட் பிரஷ்ய மன்னரின் நட்பையும் பெறும் பொருட்டுப் புகழ்பெற்ற டூராக் (Duroc) என்பவரைத் தூதராக அங்கு அனுப்பினர். டூராக்கும் தம் பணியினைச் செவ்வனே செய்து பிரஷ்ய மன்னர் ஃபிரெடெரிக் வில்லியத்தின் அன்பையும் ஆதரவையும் பெற்றார். விரைவில் வில்லியம் ஃபிரெஞ்சுக் குடியரசையும் அங்கு நடைபெற்றுவரும் கான்சல் ஆட்சியையும் அட்டியின்றி அங்கீகரித்தார்.

ஐரோப்பிய முடியரசுகள் ஃபிரெஞ்சுக் குடியரசை வீழ்த்த முற்பட்டபோதிலும் போனபார்ட் அதனைக்கண்டு அஞ்சாது நாட்டு நலனில் நாட்டங்கொண்டு நற்பணியாற்றினர். கல்விக்கூடங்கள் பல திறக்கப்பட்டன. சாலைகள் பல உருவாக்கப்பட்டன. வணிக வளர்ச்சிக்குத் தேவையான வசதிகள் பல செய்யப்பட்டன. பொருளாதாரத்தைப் பலப்படுத்த பலவழிகள் மேற்கொள்ளப் பட்டன. மேட்டுக்குடியினரின் பிறப்புரிமைகளும், சிறப்புச் சலுகைகளும் ஒழிக்கப்பட்டன. அறிவும் ஆற்றலும் தகுதியும் படைத்தவர்களே அரசாங்கப் பணிகளில் அமர்த்தப்பட்டனர். சொத்துக் கேற்ப வரிகள் விதிக்கப்பட்டன. மகளிர் முன்னேற்றத்தில் முக்கிய கவனம் செலுத்தப்பட்டது. மகளிர் பள்ளிகளும், மகளிர் மருத்துவமனைகளும், மகப்பேறு இல்லங்களும் உருவாயின. மகளிர் முன்னேற்றத்திற்குரிய ஆக்கப் பணிகளில் ஜோசபைனும் அக்கறை செலுத்தினள். பிறநாட்டு மகளிரைக் காட்டிலும் ஃபிரெஞ்சு மகளிர் உரிமைகள் பல பெற்று விளங்கினர். ஃபிரெஞ்சு மன்னன் லூயி இறந்த நாள் விழா நிறுத்தப்பட்டது. மக்களின் நலங்கருதிய திட்டங்களையெல்லாம் நிறைவேற்றி நீதி வழுவாது, நேர்மை குன்றாது நெப்போலியன் பணியாற்றிய காரணத்தால் ஃபிரெஞ்சு மக்கள் அவரைத் தங்கள் வீட்டுப்பிள்ளையாகக் கருதி அவருக்கு ஆதரவு நல்கினர். அவரைத் தங்களின் உயிரினும் மேலாகப் போற்றினர். அவருக்கு வரும் ஆபத்துகள் அனைத்தையும் தக்க

வாறு தடுத்து அவரைக் காத்தனர். ஒருநாள், நாடக அரங் கொன்றிற்குச் சென்றுகொண்டிருந்த போனபார்ட்டை வெடி குண்டு வைத்துக் கொல்லத் திட்டமிட்டனர் சிலர். ஆனால், அக் குண்டு வெடிப்பதற்குள் போனபார்ட் அது வைக்கப்பட்டிருந்த இடத்தைக் கடந்துவிட்டார். ஆகவே, உயிர் தப்பினார். அக் குண்டுக்குள்ள இரக்கம் கூட அந்தக் கொடியவர்களுக்கில்லை. நெப்போலியன் உயிர்தப்பிய செய்தி கேட்ட ஃபிரெஞ்சு மக்கள் உவகை கொண்டனர். அவரது உயிருக்கு உலைவைக்க முயன்ற அந்த உலுத்தர்களை மக்கள் விரைவில் கண்டுபிடித்தனர். அவர் கள் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டனர் ; விசாரணைக்குப் பின் அக் கொடியவர்கள்மீது இரக்கம் காட்டி அவர்களை நாடு கடத்தினார் நெப்போலியன். தம்மைக் கொல்ல முயன்றவர் களைக்கூட கொல்லாது காத்தார் அவர். 'அகழ்வாரைத் தாங் கும் நிலத்தைப்போல' அவரது பொறுமை ஒளிபெற்றுத் திகழ்ந் தது. மக்கள் அவர்மீது காட்டிய அன்பு அவரது பொறுமைக் கும் பெருந்தன்மைக்கும் அச்சாரமாக விளங்கியது.

'இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண நன்னயஞ் செய்து விடல்' என்ற கோட்பாட்டினைப் போனபார்ட் தமது சொந்த வாழ்வில் கடைப்பிடித்தாராயினும் நாட்டு நிர்வாகத்தில் நீதியை நிலைநாட்ட அவர் என்றும் தவறியதில்லை. குற்றவாளிகளைத் தண்டிப்பதில் அவர் எவ்விதத்தயக்கமும் காட்டியதில்லை. முப்பது வயதுள்ள, மேட்டுக்குடியில் பிறந்த, பணக்கார இளைஞன் ஒருவன் பதினாறு வயது பருவமங்கை யொருத்தியை, அவளது விருப்ப மின்றி, கட்டாயத் திருமணம் செய்தான். திருமணத்திற்குப் பின்பும் அப் பெண் அவனை விரும்பவில்லை. ஆகவே, வெறிபிடித்த அவன் அவளைக் கொலைசெய்தான். கொலைக்குற்றம் புரிந்த அவனுக்கு நீதிபதிகள் மரணதண்டனை விதித்தனர். செல்வாக் கும், செருக்கும், பணமும் படைத்த மேட்டுக் குடியில் பிறந்த அவனைக் காப்பாற்றும்படி பலர் போனபார்ட்டிடம் முறையிட்ட னர். ஜோசபைனும் அவனை விடுதலை செய்யும்படி தனது கணவனி டம் வேண்டினாள். ஆனால், நெப்போலியன் அவளது வேண்டுகோ ளுக்கு இணங்க மறுத்துவிட்டார். 'தன்னை விரும்பாத ஒரு பெண்ணை பணபலத்தால், ஆணவச்செருக்கால் கட்டாயமாக மணந்தான் அவ் வாலிபன். திருமணத்திற்குப்பின்பும் தன்னை விரும்பாத அவ்வணங்கை அவன் மிருகத்தனமாக வெறிகொண்டு தாக்கிக் கொன்றுள்ளான். இரக்கமற்ற அரக்கனாகிய அவனை என்னால் மன்னிக்க இயலாது. அவனை மன்னித்து நான் விடுதலை செய்தால் பெண்ணினத்திற்கே பெருந்தீங்கு விளைவித்தவனாவேன்' என்று கூறி அந்த இளைஞனை விடுதலை செய்ய மறுத்துவிட்டார். அன்றி

யும் தமது அவையில்] ஒழுக்கத்தை நிலைநாட்ட அவர் அயராது உழைத்தார். மதுவிலும், மங்கையிலும் மனதைப் பறிகொடுத்து, காமவெறி பிடித்தலைந்த பலரைத் திருத்தி நல்வழிப்படுத்தினர். போனபார்ட்டும் தமது சொந்த வாழ்விலும் பொதுவாழ்விலும் தூய்மையைக் கடைப்பிடித்து முன்மாதிரியாகத் திகழ்ந்தார். கற்பை விலைகூறி விற்கும் காரிகைகளைக் கண்டித்தார். கணவனும் மனைவியும் இணைந்தே பொதுநிகழ்ச்சிகளுக்குச் செல்ல வேண்டும் என்று ஆணை பிறப்பித்தார். நெப்போலியனது அவையை அலங்கரித்த அழகிகளில் ஒருத்தி உயர்ந்த அரசாங்க அதிகாரி ஒருவரின் துணைவியாவாள். அவள் அடிக்கடி அவையில் நெப்போலியன் முன் தோன்றித் தன் அழகைக் காட்டி அவரை மயக்க முயன்றனள். அதற்கு அவளது தாயும் உடந்தையாக இருந்தாள். அவளது கணவனே மனைவியின் மட்டரகச் செயல் குறித்து கவலையேதும் கொள்ளவில்லை. அவையின் பெருமையைக் குலைக்கும்வகையில் அநாகரிகமாக நடந்துகொண்ட அப் பெண்ணின் கணவனை ஓராண்டுகாலம் பதவியிலிருந்து விலக்கிவைத்தார் போனபார்ட். அன்றியும், அப் பெண்ணை அவையிலிருந்தும் நிரந்தரமாக விலக்கி ஆணை பிறப்பித்தார். 'ஒழுக்கம் விழுப்பந் தரலான், ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்ற உன்னத இலட்சியத்தின் உறைவிடமாகத் தம் அவையினை மாற்றியமைத்தார் போனபோர்ட்.

இந் நிலையில், அமெரிக்க விடுதலைப் போராட்டத்தின் தளபதியும் — அமெரிக்க மக்களின் உள்ளங்களைக் குளிரவைத்து அவர்களின் உரிமைகளை நிலைநாட்டிய உத்தமரும் — சுதந்திர அமெரிக்காவின் தந்தையும் — ஆன வாசிங்டன் இறந்தார் என்ற செய்தி நெப்போலியனைத் திடுக்கிடவைத்தது. ஃபிரான்சு முழுதும் கருப்புக்கொடிகள் பறந்தன. பத்து நாட்கள் ஃபிரான்சில் துக்க நாட்களாக அறிவிக்கப்பட்டன. ஃபிரான்சு முழுதும் அம் மாவீரனின் வரலாறு மக்களுக்குப் படித்துக்காட்டப்பட்டது. இரங்கற் கூட்டங்கள் பல, நாடு முழுவதும் நடாத்தி அதிபர் வாசிங்டனுக்கு ஃபிரெஞ்சு மக்கள் வீரவணக்கம் செலுத்தினர். அமெரிக்க அதிபரின் அருங்குணங்களையும், ஆற்றிய சாதனைகளையும் விளக்கி இரங்கற் செய்தியினை நெப்போலியன் வெளியிட்டார்.

இதற்கிடையில், மீண்டும் ஐரோப்பாவில் போர் மேகங்கள் சூழ்ந்தன. இங்கிலாந்தும் ஆஸ்திரியாவும் ஃபிரெஞ்சுக் குடியரசை வீழ்த்தும் பணியில் தீவிரமாக ஈடுபட்டன. ஆங்கிலேயரது கடற்படை ஃபிரெஞ்சுக் கரைமீதுள்ள நகரங்களில் குண்டுவீசித் தாக்கி ஃபிரான்சை வலுச்சண்டைக்கு அழைத்துக்கொண்டிருந்தது. ஃபிரான்சில் உள்நாட்டுக் கலகத்தைத் தூண்டி, கலகக்காரர்

களுக்குப் பணமும் கருவியும் கொடுத்துவந்தது. வடக்கு எல்லையில் தளபதி கிரேய் (Marshal Gray) என்பவர் தலைமையில் ஒரு இலட்சத்து ஐம்பதினாயிரம் வீரர்கள் ஃபிரான்சின்மீது பாய்வதற்காக அணிவகுத்து நின்றனர். மேலும், இத்தாலியில் ஆஸ்திரியத் தளபதி மிலாஸ் (Melas) என்பவர் நூற்று நாற்பதாயிரம் வீரர்களுடன், இங்கிலாந்து கடற்படையின் உதவியுடன் ஃபிரெஞ்சுப் படையை வென்று ஃபிரான்சுநோக்கி விரைந்துகொண்டிருந்தார். ஃபிரெஞ்சுக் குடியரசின் வடக்கு, கிழக்கு, தெற்கு எல்லைகளில் பகைவர்களின் படைகள் திரண்டன. ஃபிரான்சு மீண்டும் நெருக்கடி நிலைக்குள்ளாகியது. ஃபிரெஞ்சுக் குடியரசை வீழ்த்தி, அதன் வணிகத்தை நாசமாக்கி, ஐரோப்பாப் படத்தினின்றும் ஃபிரான்சை அடியோடு அழித்துவிடவேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்தன. ஆங்கிலேயர்களது நயவஞ்சகத்தை, நாடுபிடிக்கும் ஆசையை, நாட்டு மக்கள்முன் விளக்கினார் நெப்போலியன். ஆங்கிலேயரது ஆசையில் மண்தூவி, ஃபிரெஞ்சுக் குடியரசைக் காக்கும்வகையில் நெப்போலியன் மேற்கொள்ளும் ஒவ்வொரு நடவடிக்கையினையும் ஏற்றுத் தங்களின் முழுஆதரவை நல்க முன்வந்தனர் ஃபிரெஞ்சு மக்கள். ஃபிரான்சு முழுவதும் போருக்கான ஆயத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஃபிரெஞ்சு மக்களின் வீர உணர்ச்சி ஒன்றுதிரண்டது. அதனைக் கண்ட நெப்போலியன் நாட்டைக் காக்கும் நற்பணியினை மேற்கொண்டார்.

விரைவில், நூற்று ஐம்பதினாயிரம் வீரர்களடங்கிய பெரும் படையொன்று திரண்டது. அவர்களில் பலர் நன்கு பயிற்சி பெற்ற வீரர்கள்; பல வெற்றிகளைக் குவித்தவர்கள்; நாட்டுப் பற்றும் தளபதியிடம் மாறாத நம்பிக்கையும் உடையவர்கள். உயிருக்கஞ்சாது போரிடும் உறுதி படைத்தவர்கள். இத்தகைய சிறப்பான படையின் தளபதியாக மோரோ (Moraeu) என்ற புகழ்மிக்க வீரர் நியமிக்கப்பட்டார். அவர் நெப்போலியனைப் போன்று போர் நுணுக்கங்களை நன்குணர்ந்தவர். வீரர்களின் நம்பிக்கைக்குரியவர். அவரது தலைமையில் அப் பெரும்படையை ஒப்படைத்தார் நெப்போலியன். அப்படை ஃபிரான்சின் வடக்கே இரைன் நதிப் பகுதியில் அணிவகுத்து நின்ற ஆஸ்திரியப் படையைத் தாக்கும்படி அனுப்பப்பட்டது. அடுத்து, நெப்போலியன் அறுபதினாயிரம் வீரர்களடங்கிய படை ஒன்றினையும் திரட்டினார். அதிலடங்கிய வீரர்கள் அனைவரும் போர்ப் பயிற்சி இல்லாதவர்கள்; முற்றிலும் புதியவர்கள்; போர்த் துறை அனுபவம் சிறிதுமற்றவர்கள். அவர்களுக்குத் தாமே தலைமை தாங்கிச்சென்று இத்தாலியிலுள்ள ஆஸ்திரியப் பெரும் படையை வீழ்த்தத் திட்டமிட்டார் நெப்போலியன்.

1800ஆம் ஆண்டு மே திங்கள் 7ஆம் நாள் கான்சல் நெப்போலியன், ஜோசபைனிடமும் பிறரிடமும் பிரியாவிடை பெற்று இத்தாலி நோக்கிப் படையுடன் விரைந்தார். பயிற்சி யற்ற தம் வீரர்களுடன், இரவும் பகலும் விடாது சென்று ஆல்ப்ஸ் மலையைக் கடந்தார். அங்கு மாரங்கோ (Marengo) என்னுமிடத்தில் ஆஸ்திரியத் தளபதி மிலாஸ் (Melas) தம் படையுடன் தங்கியிருந்தார். நெப்போலியன் பாரிசை விட்டுக் கிளம்பிய அதேநாள் அவரது நெருங்கிய நண்பரும், நம்பிக்கைக் குரிய தளபதியுமான தேசாய் (Desaix) எகிப்திலிருந்து பாரிஸ் வந்துசேர்ந்தார். நெப்போலியன் இத்தாலி சென்றுவிட்டார் என்பதை அறிந்த அவர் ஆறுயிரம் வீரர்களுடன் இத்தாலி நோக்கிப் புறப்பட்டார். ஜூன் திங்கள் பதினுன்காம் நாள்; மாரங்கோக் களத்தில் ஆஸ்திரியப் பெரும்படையும் நெப்போ லியனது சிறிய படையும் மோதலில் இறங்கின. எங்கும் ஒரே பீரங்கி முழக்கம்; கூக்குரல்; குழப்பம்; ஆஸ்திரியப் பெரும் படைக்கு ஈடுகொடுக்க இயலாதவாறு ஃபிரெஞ்சுப் படை சிதறி ஓட முற்பட்டது. அதனைக்கண்ட ஆஸ்திரியத் தளபதி, தாம் வெற்றி பெற்றுவிட்டதாக எண்ணி எஞ்சிய பணியை தமக்கு அடுத்த தளபதியிடம் ஒப்படைத்துவிட்டுத் தம் இருப்பி டம் சென்றுர் ஓய்வெடுக்க. இதற்கிடையில், தேசாய் ஆறு யிரம் வீரர்களுடன் மாரங்கோவிலிருந்து முப்பது கல் தொலை வில் முகாமிட்டிருந்தார். மாரங்கோ பீரங்கி முழக்கம் அவரது கூரிய செவிகளில் பாய்ந்தது. உடனே, தமது வீரர்களுடன் விரைந்தார் மாரங்கோ நோக்கி. தேசாயின் வருகையைக் கண்ட நெப்போலியன் புதிய வேகத்துடன் ஆஸ்திரியரைத் தாக்கமுற்பட்டார். தேசாய் தம்முடைய வீரர்களுடன் முனைந்து ஆஸ்திரியர்களைத் தாக்கினுர். நெப்போலியனும் அங்குமிங்கும் சென்று தமது வீரர்களை உற்சாகப்படுத்தினுர். தேசாய் தீவிரத்தாக்குதலில் ஈடுபட்டிருந்தபோது அவர் நெஞ்சில் குண்டு பாய்ந்து குருதி வெள்ளத்தில் சாய்ந்தார். இறக்கும் தருவாயிலும் அவர் போனபார்ட்டின் பெயரைக்கூறிக் கொண் டே உயிர்விட்டார். தேசாய்க்கு ஏற்பட்ட கதியினைக் கண்ட ஃபிரெஞ்சு வீரர்கள் ஆவேசத் தாக்குதலைத் தொடங்கினர். வெற்றி முகத்தில் வீறுநடைபோட்ட ஆஸ்திரியப் படையினர் அலறியடித்துக்கொண்டு ஓடினர். பன்னிரண்டு மணி நேரம் தொடர்ந்து நடந்த சண்டை ஒருவாறு முடிந்தது. வழக்கம் போல் போனபார்ட் வெற்றி பெற்றுர். எண்பது வயதினை எட் டிய மிலாசும் அவரது எஞ்சிய வீரர்களும் நெப்போலியனின் கருணைக்காகக் காத்துக்கிடந்தனர்.

மாரங்கோப்போர் மனித குலத்தை மாய்த்த மாபெரும் போர்களில் ஒன்று. இருபதினாயிரத்துக்கு மேற்பட்டோர் இறந்துபட்டனர். எண்ணிறந்தோர் கை, கால் போன்ற உறுப்புகளை இழந்து தவித்தனர். ஆயிரக்கணக்கான குதிரைகள் செத்தன; போரின் கொடுமை பயங்கரமாயிற்று; எங்கும் பிணங்கள்; அடிபட்டவரின் அழுகுரல்; செத்துக் கொண்டிருந்தவர்களின் துயர ஒலி ஆகிய அனைத்தும் மாரங்கோ வெளியெல்லாம் பரவி கண்டோரையும் கேட்டோரையும் கலக்கத்திலாழ்த்தின. ஃபிரான்சின் புகழ்பெற்ற தளபதிகளில் ஒருவரான தேசாய் மாரங்கோக் களத்தில் மாண்டார். அவரது நெஞ்சினைக் குண்டு பாய்ந்து துளைத்த அதே நேரத்தில் அவரது நெருங்கிய நண்பரும் தளபதியுமான கிளிபெர் (Kleber) எகிப்தில் படுகொலை செய்யப்பட்டார். இறப்பிலும் அவர்களிருவரும் இணைபிரியாது இறந்தனர். இதற்கிடையில், இரைன் நதி தீரத்தில் தளபதி மோரோ ஆஸ்திரியப் பெரும்படையை ஹோகன்லிண்டன் (Hohenlinden) களத்தில் சிதறடித்து வாகைசூடினார். மாரங்கோ, ஹோகன்லிண்டன் களங்களில் ஆஸ்திரியா பெற்ற பலத்த அடியும், இரஷ்ய மன்னர் அலெக்சாண்டர், நெப்போலியனின் நெருங்கிய நண்பராக மாறிய செய்தியும் ஆஸ்திரியாவிற்கு அதிர்ச்சியைத் தந்தன. ஆகவே, வேறு வழியின்றி ஆஸ்திரியா நெப்போலியனுடன் உடன்பாடு செய்து கொள்ள முன் வந்தது. அதன்படி, 1801ஆம் ஆண்டு ஃபிப்ரவரித் திங்கள் 9ஆம் நாள் லூன்வில் (Luneville) உடன்பாடு நிறைவேறியது. அது ஏறத்தாழ கேம்போபோர்மியோ உடன்பாட்டை உறுதிசெய்வதுபோல் அமைந்தது. இரைன் நதியின் இடதுகரையிலுள்ள பகுதிகளனைத்தையும், ஆஸ்திரியா ஃபிரான்சுக்கு வழங்கியது. மெய்ன்ஸ், கோலோன் போன்ற புகழ்மிக்க ஜெர்மானிய நகரங்கள் ஃபிரான்சுக்குக் கிடைத்தன. டஸ்கனியும் எல்பாத் தீவும் சொல்பைன் குடியரசோடு இணைக்கப்பட்டன. டஸ்கனிக் கோமகன் தாம் இத்தாலியில் இழந்த பகுதிக்கு ஈடாக ஜெர்மானிய பகுதிகளைப் பெற்றார். அன்றியும், ஐரோப்பாவில் ஃபிரான்சு உருவாக்கிய குடியரசுகளின் சுதந்திரத்துக்கான உத்தரவாதமளிக்கப்பட்டது.

இவ்வாறு, 1800ஆம் ஆண்டு மே திங்கள் ஏழாம் நாள் பாரிசை விட்டுக் கிளம்பிய நெப்போலியன் மிகக்குறுகிய காலத்திற்குள் ஆல்ப்ஸ் மலையைக் கடந்து, ஆஸ்திரியப் பெரும்படையை வென்று, இத்தாலியை மீண்டும் பெற்றுத் தலைநகர் திரும்பிய போழ்து அவர் புகழ் மேலும் ஓங்கியது. ஃபிரான்சு முழுவதும் வெற்றிவிழா சிறப்பாக நடந்தது. பாரிஸ் நரகம்

நெப்போலியனது வெற்றியை விழாவெடுத்துச் சிறப்பித்தது. ஃபிரான்சின் புகழ் ஓங்கியது; ஃபிரெஞ்சு குடியரசு தலை நிமிர்ந்து நின்றது. ஃபிரெஞ்சு மக்கள் நெப்போலியனது ஆட்சியில் உரிமை பெற்ற மக்களாய் உவகைக் கடலில் மிதந்தனர்.

ஆஸ்திரியாவுடன் உடன்பாடு செய்து கொண்டபின் போனபார்ட் தமது கவனத்தை இங்கிலாந்துமீது செலுத்தினர். இங்கிலாந்தின் கடலாதிக்கத்தை மாய்த்து ஃபிரான்சின் செல்வாக்கை உலக நாடுகளிடையே நிலைநாட்ட எண்ணினர். கடலில் வலிமை பெற்றது, இங்கிலாந்து; நிலத்தில் நிகரற்று விளங்கியது ஃபிரான்சு. நிலத்தில் ஃபிரான்சு யானையைப் போன்றது. நீரில் இங்கிலாந்து முதலையைப் போன்றது. எனவே, நீரில் வலுவற்ற ஃபிரான்சு நிலத்தில் வலுவற்ற இங்கிலாந்தை வீழ்த்தத் திட்டமிட்டது. கடலாதிக்கத்தில் சிறந்து விளங்கிய இங்கிலாந்தும் ஃபிரான்சை வீழ்த்தும் பணியில் மும்முரமாக இறங்கியது. ஃபிரான்சின் வணிகத்தைச் சிதைக்கும் வழிகளில் இங்கிலாந்து இறங்கியது. கடலில் ஆதிக்கம் செலுத்திய இங்கிலாந்து வணிகக்கப்பல்களையெல்லாம் சோதனை போட்டுத் தொந்தரவு கொடுத்தது. பிறநாட்டுக் கப்பல்கள் ஃபிரெஞ்சு நாட்டுத் துறைமுகங்களில் தங்கக் கூடாது என தடைபோட்டது. தடையை மீறிச்சென்ற கப்பல்கள் தடுக்கப் பட்டு ஃபிரான்சுக்குச் சென்ற சரக்குகளும், படைக் கருவிகளும் பறிமுதல் செய்யப்பட்டன ஆங்கிலேயரால். அவர்களது அடாதசெயலை அறிந்த ஐரோப்பிய மன்னர்கள் இங்கிலாந்துக் கெதிராக அணிதிரண்டனர். தங்களது வணிகத்தைக் காக்கும் பொருட்டு அவர்கள் நெப்போலியனது உதவியை நாடினர். இங்கிலாந்தால் பாதிக்கப்பட்ட ஐரோப்பிய நாடுகள் ஃபிரான்சுடன் சேர்ந்து ஒரே அணியில் திரண்டன. இரஷ்யா, பிரஷ்யா, டென்மார்க், ஸ்வீடன், ஆலந்து, ஸ்பெயின் ஆகிய நாடுகள் இங்கிலாந்திற்கெதிராக ஃபிரான்சுடன் சேர்ந்தன. இங்கிலாந்தை வீழ்த்துவதற்கேற்ற தருணம் வந்து விட்டதாக நெப்போலியன் கருதினர். ஆனால், ஆங்கிலக் கடற்படைத் தளபதி நெல்சன் பால்டிக்கடலில் தங்கியிருந்த பகைவர் கப்பல்களைத் தாக்கித் தீக்கிரையாக்கினர். அதனைக் கேள்விப்பட்ட இரஷ்யாவும், ஸ்வீடனும், டென்மார்க்கும் இங்கிலாந்தை எதிர்த்துப் போரிடத் துடித்தன. இந் நிலையில், இரஷ்யாவில் ஒரு கலகம் தோன்றியது. கலகக்காரர்கள் இரஷ்யா நாட்டு மாமன்னர் பால் என்பவரைப் படுகொலை செய்தனர். அவரை அடுத்து அவரது மகன் அலெக்சாந்தர் இரஷ்யாவின் மணி முடியைப்பெற்றார். அவரை மன்னராக்கிய இரஷ்யப் பிரபுக்கள் அவரை இங்கிலாந்துக்கு எதிராகச் செல்லாதபடி தடுத்தனர். எனவே, இரஷ்யா ஃபிரான்சின் கூட்டிலிருந்து விலகநேர்ந்தது. பால் மன்னரின் படுகொலையும் அதனையொட்டி

இரஷ்யாவில் ஏற்பட்ட ஆட்சி மாற்றமும் நெப்போலியனுக்கு அதிர்ச்சியை அளித்தன. ஆங்கிலேயரின் கொட்டத்தை ஒடுக்கத் தமக்கு உதவியாக இருந்த பால் மன்னரின் மறைவு நெப்போலியனைப் பெரிதும் வாட்டியது. இருப்பினும், இங்கிலாந்தின்மீது போர் தொடுப்பதற்கான ஆயத்தங்களைப் போனபார்ட் செய்து வந்தார். இதற்கிடையில், எகிப்தில் ஃபிரெஞ்சுப் படைகளை வீழ்த்தி இங்கிலாந்து தனது ஆதிக்கத்தை அங்கு நிலைநாட்டியது. மால்டா தீவும், ஆங்கிலேயர் வசமாயிற்று. ஆகவே, நெப்போலியன் எவ்விதத் தயக்கமுமின்றி இங்கிலாந்தின்மீது படையெடுத்துச் செல்ல தயாரானார். ஐந்துலட்சம் வீரர்கள் திரண்டனர். ஃபிரான்சு முழுவதும் போர்ப்பரணி ஒலித்தது. கப்பல்கள் பல உருவாயின. ஃபிரான்சின் போர் ஏற்பாடுகளைக் கண்ட இங்கிலாந்து அஞ்சியது. அப்போது, இங்கிலாந்தைக் கொடியபஞ்சம் ஒன்று வாட்டியது. மேலும், அயர்லாந்தும் இங்கிலாந்துக்கு எதிராகக் கிளர்ச்சியில் இறங்கியது. அன்றியும், இங்கிலாந்திலுள்ள மக்கள் நெப்போலியனை ஆதரிக்கவும் முன்வந்தனர். மக்களின் உரிமைகளுக்காகப் போரிடும் மாவீரனுக்குத் தங்களின் ஆதரவை நல்குவதில் அவர்கள் பெரும் ஆர்வம் காட்டினர். அவர்களது ஆர்வம் ஆங்கில அரசுக்கு அச்சத்தை ஊட்டியது. கடலில் வலிமை மிக்க தளபதி நெல்சனும் போலோன் (Boulogne) என்ற இடத்தில் நடந்த இரண்டு கடற்சண்டைகளிலும் ஃபிரெஞ்சுக் கடற்படையை வீழ்த்தி வெற்றிபெற இயலாது திரும்பினார். எனவே, இங்கிலாந்து மக்கள் இப்போது அவரது கடற்படையாற்றலைச் சந்தேகித்தனர். போலோன் துறையில் முகாமிட்டுள்ள ஃபிரெஞ்சுப்படை விரைவில் இலண்டன்மீது பாய்ந்து தாக்கத் தயங்காது என்று அவர்கள் அஞ்சினர். ஆகவே, ஃபிரான்சுடன் அமைதி உடன்பாடு செய்துகொள்ள ஆங்கிலேயர் முன் வந்தனர். ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்டுவதில் எப்போதும் ஆர்வம் கொண்டிருந்த நெப்போலியனும் அமைதி உடன்பாட்டிற்கு இசைந்தார். அதனை அறிந்த இங்கிலாந்து மக்களும், ஃபிரெஞ்சு மக்களும் பெருமகிழ்ச்சி கொண்டனர்.

இலண்டனுக்கும் பாரிசுக்கும் இடையிலுள்ள அமீன்ஸ் (Amines) நகரம் உடன் பாட்டுக்குரிய இடமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டது. இங்கிலாந்து சார்பில் காரன்வாலிஸ் (Cornwallis) அனுப்பப்பட்டார். ஃபிரெஞ்சுக் குடியரசு சார்பில் ஜோசப் போனபார்ட் அனுப்பப்பட்டார். அமீன்ஸ் உடன்பாடு 1802ஆம் ஆண்டு மார்ச் திங்கள் கையெழுத்தாயிற்று. அதன்படி, இங்கிலாந்து தான் வென்ற குடியேற்றங்களையெல்லாம், விட்டு விடச் சம்மதித்தது. இலங்கை, டிரினிடாட் (Trinidad) தவிர

ஏனைய பகுதிகளையெல்லாம் அது இழந்தது. மால்டா மீண்டும் பழைய ஆட்சியாளரிடமே ஒப்படைக்கப்பெற்றது ; மினார்க்கா (Minorca) ஸ்பெயினுக்குக் கொடுக்கப்பட்டது. எகிப்து, நேப்பில்ஸ் (Naples) போர்ச்சுக்கல் ஆகியவற்றிலிருந்து ஃபிரெஞ்சுக்காரர்கள் வெளியேறச் சம்மதித்தனர். மூன்றுமாத காலத்திற்குள் ஃபிரெஞ்சுப் படையினரும், ஆங்கிலேயப் படையினரும் மேலே குறிப்பிட்ட இடங்களிலிருந்து வெளியேற வேண்டும். அமீன்ஸ் உடன்பாடு இரண்டு நாடுகளுக்குமிடையே நல்லுறவை வளர்த்தது. ஆங்கிலேயரும், ஃபிரெஞ்சுக்காரரும் அவ்வுடன்பாட்டை விழாவாகக் கொண்டாடி மகிழ்ந்தனர். ஆங்கிலேயர் ஆயிரக்கணக்கில் நெப்போலியனைக்காண ஃபிரான்சு சென்றனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் ஃபாக்ஸ். பாரிஸ் மக்கள் அவரை அன்புடன் வரவேற்றுச் சிறப்பித்தனர். ஃபாக்ஸ் நெப்போலியனின் நெருங்கிய நண்பரானார். 'ஃபாக்ஸ், காரன்வாலிஸ் போன்றவர்கள் பத்துப் பேர் இங்கிலாந்திலிருந்தால் அந் நாடு நல்வழிநின்று சிறப்புடன் திகழும்' என்று போனபார்ட் குறிப்பிட்டுள்ளார்.

'இங்கிலாந்தும் ஃபிரான்சும் உடன்பாடு செய்துகொண்டதின் விளைவாக ஐரோப்பாவில் அமைதி நிலவியது. ஃபிரான்சும் உள்நாட்டு வளர்ச்சித் திட்டங்களில் நாட்டம் செலுத்தியது. நெப்போலியன் மக்கள் நலனைக்கருதிய திட்டங்கள் பலவற்றைச் செயல்படுத்த முற்பட்டார். பகுத்தறிவு மிக்க ஃபிரெஞ்சு நாட்டில் மீண்டும் கத்தோலிக்க சமயத்தை நிலைநாட்ட நெப்போலியன் முன் வந்தார். மதம் மக்களை மாய்க்கும் கருவி ; உரிமையின் எதிரி ; உலுத்தர்களின் உல்லாசபுரி ; பாமர மக்களைக் காட்டுமிராண்டிகளாக்கும் கயவர்களின் கூடாரம் ; சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய இலட்சியங்களின் தடை ; முன்னேற்றத்தின் முட்டுக்கட்டை ; மூடர்களின் புகலிடம் ; ஏழை பாட்டாளி மக்களைச் சுரண்டும் எத்தர்களின் பிறப்பிடம் — என்றெல்லாம் எண்ணிச் சமயத்தை ஒழித்துக் கட்டிய ஃபிரான்சில் மீண்டும் அதனை புதுப்பிக்க நெப்போலியன் முற்பட்டார். எனவே, எதிர்ப்பு பலமாகக் கிளம்பியது. இராணுவ அதிகாரிகள், படைத்துறை வீரர்கள், அரசாங்க அதிகாரிகள், சட்டமன்ற உறுப்பினர்கள், அறிஞர்கள், கலைஞர்கள், அரசியல்வாதிகள் ஆகியோரில் பலர் நாட்டுப்பற்றுமிக்க நாத்திகர்கள். கடவுள்மீதும் அதனைக் கட்டிக் காத்துவரும் சமயத்தின்மீதும் நம்பிக்கையின்றி வெறுப்புக் காட்டியவர்கள் அவர்கள். எனவே, அவர்கள் மீண்டும் கிறிஸ்தவ சமயம் ஃபிரான்சில் நிலைநாட்டப்படுவதை வன்மையாகக் கண்டித்தனர். ஆனால், நெப்போலியன் தமது அறிவாற்றலால், பகுத்தறிவுக் கொள்கையால் அவர்களையெல்லாம் தம் வசப்படுத்தினார்.

மதம் அரசியலுக்கு உட்பட்ட ஒன்று என்ற வகையில் அதன்மீது ஆதிக்கம் செலுத்தவே மீண்டும் சமயம் ஃபிரான்சில் நடமாட அனுமதிக்கப்பட்டுள்ளது — என்றெல்லாம் எடுத்துக் கூறி, எதிர்ப் பாளரது ஆதரவைப் பெற்றார். உண்மையிலேயே போனபார்ட் மதநம்பிக்கை இல்லாதவர் ; ஆனால், மதப்பற்றுள்ள ஃபிரெஞ்சுக் குடிமக்களைத் தம் வசப்படுத்தி ஃபிரான்சு அரசியலில் தமது நிலையை வலுப்படுத்திக்கொள்ள அவர் விரும்பினார். அன்றியும், ஐரோப்பாவில் அரசியல் துறையில் அமைதியைத் தவழவிட்டதைப் போல சமயத்துறையிலும் சச்சரவுகள் நீங்கி அமைதி நிலவிட வேண்டும் என்று அவர் விரும்பினார். எனவே, மீண்டும் கத்தோ லிக்க சமயத்தை ஃபிரான்சில் புதுப்பிக்கப்படும் பிரச்சனையைச் சட்டமன்றம்முன் வைத்தார். இரண்டு மன்றங்களும் காரசார மாக விவாதித்தன. உறுப்பினர்களின் அச்சத்தையும், பயத்தை யும் போக்கும்வகையில் போனபார்ட் ஆணித்தரமான வாதங்களை முன்வைத்து விளக்கம் கூறினார். இறுதியில், அப் பிரச்சனை வாக்கெடுப்புக்கு விடப்பட்டது. சமயம் மீண்டும் நிலை நாட்டப் படவேண்டும் என்பதற்கு ஆதரவாக முந்நூற்று ஆறு வாக்கு களும், எதிராக இருபத்தெட்டு வாக்குகளும் கிடைத்தன. அதன் விளைவாக, நெப்போலியன் மிக்க மகிழ்ச்சியுடன் கத்தோலிக்க சமயத்தை மீண்டும் ஃபிரான்சில் புகுத்தினார். அது பற்றி, போன பார்ட், போப்புடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார். அந்த உடன்பாடு 1801ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 15ஆம் நாள் கையெழுத்தாயிற்று. கத்தோலிக்கத் திருச்சபையுடன் போன பார்ட் செய்துகொண்ட அந்த உடன்பாடு வரலாற்றில் ஒற்று மைப் பத்திரம் (The concordat) என்று அழைக்கப்படுகின்றது.

ஃபிரான்சில் லொரெட்டோ (Loretto) என்ற இடத்திலுள்ள கத்தோலிக்கக் கோவிலில் கன்னிமேரியின் அழகிய உருவச்சிலை ஒன்று இருந்தது. அது மரத்தால் செய்யப்பட்டு மக்களைக் கவரும் வகையில் அமைந்திருந்தது. அதனை இயக்குநர்கள் பறிமுதல் செய்து பாரிசிலுள்ள பொருட்காட்சியில் வைத்துவிட்டனர். அதனால், அப்பகுதியிலுள்ள கத்தோலிக்கர்கள் பெரிதும் வேதனை கொண்டு நெப்போலியனிடம் இதுகுறித்து முறையிட்டனர். கான்சல் போனபார்ட் அவர்களது உள்ளங்களெல்லாம் குளிரும் வகையில் போப்பினை அழைத்து மீண்டும் அந்த உருவச்சிலையை லொரெட்டோ ஆலயத்தில் வைக்கும்படிச் செய்தார். போப்புடன் செய்துகொண்ட உடன்பாட்டின்படி கத்தோலிக்க சமயம் சட்டப் படி நிறுவப்பட்ட அமைப்பாக ஃபிரான்சில் விளங்கியது. ஆனால், பிராட்டஸ்டண்டு (Protestant) சமய அமைப்புகளும் யூதசமய நிறுவனங்களும் ஃபிரான்சில் இடம்பெற அனுமதிக்கப்பட்டன.

சமயக்குருக்களை நியமிக்கின்ற அதிகாரத்தை அரசுபெற்றது ; அவர்களுக்கு அரசாங்கமே ஊதியம் வழங்கியது. ஃபிரான்சின் சமய அமைப்பில் போப்புக்கிருந்த பிடி தளர்ந்து செல்வாக்கு குறைந்தது. அரசின் அனுமதியின்றி போப்பின் கட்டளைகள் ஃபிரான்சில் செல்லுபடியாகாதென்றும் சமயக் கூட்டங்கள் நடைபெற முடியாது என்றும் சமயக்குருக்கள் நாட்டை விட்டு வெளியேபோக இயலாது என்றும் போனபார்ட் அறிவித்தார். கத்தோலிக்க சமயம் அரசின் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரப் பட்டது. பிற சமயங்களும் அரசாங்கத்தின் அதிகாரத்திற்கு உட் படுத்தப்பட்டன. போனபார்ட்டின் சமய உடன்பாடு 1805 வரை நடைமுறையிலிருந்தது. அதன் பயனாக ஃபிரான்சில் ஞாயிற்றுக் கிழமைகளில் கிறிஸ்தவக் கோவில்களில் மக்கள் கூடி வழிபட்டனர். ஞாயிற்றுக்கிழமை ஓய்வு நாளாக அறிவிக்கப்பட்டது. நெப்போலி யனின் சமய ஏற்பாடு அரசுக்கும் சமயத்திற்கும் இடையே நல்லெண் ணப் பாலமாக அமைந்தது. சமயம் அரசின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரப்பட்டது ; அதன் பயனாக, அரசின் கரங்கள் பலப் படுத்தப்பட்டன. மேலும், சமயத்துறையில் நிலவிய பூசல்கள் மறைந்து ஒற்றுமை நிலவியது. ஐரோப்பிய நாடுகளெல்லாம் போனபார்ட்டின் சமய ஏற்பாட்டைப் போற்றி வரவேற்றன. இது குறித்து இரஷ்ய மாமன்னரும், பிரஷ்ய மன்னரும் தங்களு டைய மகிழ்ச்சியை வெளிப்படையாகக் காட்டினர். ஆஸ்திரியப் பேரரசர், 'ஐரோப்பா முழுவதற்கும் செய்யப்பட்ட அருமையான பணி' என்று புகழ்ந்து அதனைப் பாராட்டினார்.

வரலாற்று ஏடுகளில் போனபார்ட்டின் புகழ்பாடி நிற்பவை களில் அவரது சட்டத்தொகுப்பும் மிக முக்கியமான ஒன்று ஆகும். இன்று ஐரோப்பிய நாடுகளில் நடைமுறையிலுள்ள சட்டங்களில் பல நெப்போலியனது சட்டங்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்தவையாகும். ஃபிரான்சில் பொதுவான சட்டதிட்டங் கள் இல்லாதது பெருங்குறையாக இருந்தது. அக் குறையைப் போக்கும் வகையில் நெப்போலியன் 1800ஆம் ஆண்டு வழக் கறிஞர் குழு ஒன்றினை உருவாக்கினார். அக் குழு அடிக்கடி கூடி ஃபிரான்சின் பல்வேறு நிலைகளையும் கணக்கில்கொண்டு சட்டத்தொகுப்பினை உருவாக்கும் பணியினை மேற்கொண்டது. போனபார்ட்டும் அக் குழுவின் கூட்டங்களுக்கு அடிக்கடி சென்று தரமான சிவில் சட்டத் தொகுப்பு வெளிவர ஆலோசனை கூறி வந்தார். அதன் பயனாக, அக் குழு விரைவில் சிவில் சட்டத் தொகுப்பு ஒன்றினை உருவாக்கித்தந்தது. நடைமுறையிலிருந்த வழக்கங்களும் ரோமானியச் சட்டங்களின் கருத்துகளும் அதில் இடம் பெற்றன. உரிமைகளையும் கடமைகளையும் உள்ளடக்கிய

ஒரு நல்ல சமுதாயம் அமைவதற்கான வழி முறைகளை அச் சட்டத்தொகுதி உறுதியாகவும் தெளிவாகவும் விளக்கியது. பெண்கள் ஆண்களுக்கு அடங்கிநடத்தல், மனைவி - மக்கள்மீது குடும்பத்தலைவருக்குள்ள அளவற்ற அதிகாரம் ஆகியவையும் அதில் இடம் பெற்றன. சமத்துவம், சமயச்சகிப்புத்தன்மை, சமமான சொத்துரிமை ஆகிய நல்ல கருத்துகளும் சிவில் சட்டத்தொகுதியை அணிசெய்தன. மக்களின் வாரிசுரிமை, திருமணம், திருமணரத்து, உரிமைகள், கடமைகள் போன்றவற்றைப் பற்றிய சட்டங்கள் அதில் தெளிவாக்கப்பட்டிருந்தன. அத்துடன், குற்ற இயல் சட்டத்தொகுதி, வணிகச் சட்டத் தொகுதி, தண்டனைச் சட்டத்தொகுதி ஆகியவைகளும் உருவாக்கப்பட்டன. ஜூரி முறை, பகிரங்க விசாரணை ஆகியவை குற்றஇயல் சட்டத் தொகுதியின் சிறப்பியல்புகளாகும். தண்டனைச் சட்டத்தொகுதி கடுமையான தண்டனைகள் பலவற்றை உள்ளடக்கியிருந்தது. நெப்போலியனது சட்டத்தொகுதி வரலாற்றில் சிறப்பான இடத்தைப் பெற்று விளங்குகிறது. நாட்டின் வாட்டத்தைப் போக்கிடும் வகையிலும் எல்லோரும் எளிதில் நீதியைப்பெறும் விதத்திலும், எளிதில் பின்பற்றும் முறையிலும் அவரது சட்டங்கள் அமைந்து விளங்கின.

நீதித்துறையில் போனபார்ட் மேற்கொண்ட பணிகளும் வரலாற்றில் அவருக்கு நீடித்த புகழை உருவாக்கியுள்ளன. வருவாயைப் பெருக்கியும், சிக்கனத்தைக் கையாண்டு செலவுகளைக் குறைத்தும் நிதி நிலையைச் சீராக்கினார். வரித்துறையில் ஊழல்புரிந்த அதிகாரிகளைக் கடுமையாகத் தண்டித்தார். மக்கள் தாங்கக்கூடிய வகையில் புதிய வரிகள் பல விதிக்கப்பட்டன. சீரழிந்த காகித நாணயத்தை ஒழித்தார். 1800ஆம் ஆண்டில் ஃபிரான்சின் வங்கி (Bank of France) ஏற்படுத்தப் பட்டது. அதனைச் செம்மையாக நடாத்துவதற்கு ஆளுநர் ஒருவரும் நியமிக்கப்பட்டார். விரைவில் அதன் கிளைகள் மூன்றும் உருவாயின. நாட்டின் செல்வத்தைப் பெருக்கும்பொருட்டுத் தொழில் கழகம் ஒன்று அமைக்கப்பட்டது. தொழில் வல்லுநர்கள் பலர் அதன் உறுப்பினர்களாவர். தேசியத் தொழில்களை ஊக்குவிக்கும் கழகம் (The Society for Encouragement of National Industries) என்று அது அழைக்கப்பட்டது. பொருட்காட்சிகளை அமைத்தும், பல தொழிற்கல்விக்கூடங்களைத் தொடங்கியும், தொழில் சம்பந்தப்பட்ட சோதனைகள் பல நடாத்தியும், அதன் முடிவுகளை மக்கள்முன் எடுத்து விளக்கியும், கடன் வழங்கியும், பரிசுப் பொருட்களை வழங்கியும், அக் கழகம் சிறப்பாகப் பணியாற்றியது. புதிய இயந்திரங்களைப் பயன்படுத்தி

பருத்தித் தொழிலை அவர் முன்னேற்றினர். சிகேரி தயாரிக்கும் தொழிலும் கிழங்கிலிருந்து சர்க்கரை தயாரிக்கும் தொழிலும் ஏற்படுத்தப்பட்டன. தொழிற்சட்டங்கள் பல உருப்பெற்றுத் தொழிற்சாலைகள் ஒழுங்குபடுத்தப்பட்டன. வணிகமும் வரையின்றி வளர்ந்தது. வணிகக்கழகங்கள் பல தோன்றி ஃபிரான்சின் வளப்பத்தைப் பெருக்கின. புதிய சாலைகள் பலவற்றை உருவாக்கி, பழைய சாலைகளைப் பழுதுபார்த்தும், புதுப்பித்தும், விரிவுபடுத்தியும், பாலங்கள் பலவற்றைக் கட்டியும், கால்வாய்களை வெட்டியும், துறைமுகங்களை விரிவுபடுத்தியும் போனபார்ட் ஃபிரான்சின் வணிகத்தைச் சிறக்கச் செய்தார். நல்ல தரமான உணவுப் பொருட்கள் மக்களுக்கு கிடைத்திடச் செய்தார். கலப்படக்காரர்கள் கடுமையான தண்டனைக்குள்ளாயினர். அங்காடிகளும், தானியக் களஞ்சியங்களும் காவற்படையினரின் மேற்பார்வையில் வைக்கப்பட்டன. புரட்சிகாலக் குறிப்பேடுமுறை ஒழிந்து பழைய குறிப்பேடு மீண்டும் புகுத்தப்பட்டது. உழவுத்தொழிலும் உற்சாகத்துடன் முன்னேறியது. மாற்றிப் பயிர் செய்யும் முறை (Crop Rotation) பயன்படுத்தப்பட்டு நல்ல பலன் தந்தது. ஃபிரான்சின் சாயத்தொழில் சிறக்கும் வகையில் சாயச் செடிகளும் பயரிடப்பட்டன.

போனபார்ட் தமது அறிவு, ஆற்றல் அனைத்தையும் ஃபிரான்சின் நலனுக்காகவே செலுத்தினர். ஃபிரான்சின் இன்பத்தைத் தமது இன்பமாகவும் அதன் துன்பத்தைத் தமது துன்பமாகவும் கொண்டார். ஐரோப்பிய அரசியலரங்கில் ஃபிரான்சை முன்னணியில் நிறுத்தி, தொழில், வணிகம், கல்வி, பண்பாடு, ஒழுக்கம் ஆகிய ஒவ்வொரு துறையிலும் அது சிறந்து விளங்கவேண்டும் என்பதே நெப்போலியனது நோக்கம். ஆகவே, ஒவ்வொரு துறையிலும் தாமே முன்னின்று அயராது உழைத்தார். நிர்வாக அமைப்புகளனைத்தையும் தமது மேற்பார்வையில் வைத்தார். இலஞ்சத்தை ஒழித்தார். அதிகாரிகளனைவரையும் கடுமையாக உழைக்கும்படி செய்தார். புரட்சிக் காலத்தில் பட்டங்கள் சலுகைகள் அனைத்தும் ஒழிக்கப்பட்டன. ஆனல், நாட்டுநலனில் நாட்டங்கொண்டு, தன்னலமற்ற பணியாற்றி சாதனை புரிவோருக்குப் பட்டங்களும், விருதுகளும் வழங்கிச் சிறப்பிக்க முன்வந்தார் போனபார்ட். 1802ஆம் ஆண்டு சிறப்புவாய்ந்த நன்மதிப்பு அணி (Legion of Honour) ஒன்றினை உருவாக்கினர். அது பல படிநிலைகளைப் பெற்றுத் திகழ்ந்தது. படைத்துறையினரும், பிறரும் தங்களது நற்பணிகளுக்குத் தக்கவாறு சிறப்புப்பட்டங்களும், விருதுகளும் பெற்று விளங்கினர்கள். ஃபிரான்சின் தலஆட்சி முறையிலும்

போனபார்ட் தனிக்கவனம் செலுத்தினர். புரட்சியாளர்களின் மூவண்ணக் கொடியே தேசியக் கொடியாகக் கொள்ளப்பட்டது. மார்சேலே (Marseillaise) என்ற புரட்சிகாலப் பாடல் தேசியப்பாடலாகக் கொள்ளப்பட்டது. ஃபிரான்சில் கல்வித் துறை சீர்திருத்தப்பட்டது. நெப்போலியன் இளைஞர்களுக்கேற்ற பொதுக்கல்விமுறை ஒன்றினைத் தாமே முன்மொழிந்தார். 1802ஆம் ஆண்டு கல்வி நிலையங்கள், ஆரம்பப் பள்ளிகள், உயர்நிலைப்பள்ளிகள், லைசீ (Lycees) எனப்படும் அரசாங்கப்பள்ளிகள், அறிவியல், தொழில் ஆகியவற்றைப் போதிக்கும் சிறப்புப்பள்ளிகள் என நான்கு பிரிவுகளாக்கப் பட்டன. கல்வித்துறை ஒரே அமைப்பின்கீழ் கொண்டுவரப் பட்டது. பல்கலைக்கழகம் ஒன்றும் உருவாக்கப்பட்டு, மாநிலங்களிலுள்ள கல்வி நிலையங்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் அதற்கு வழங்கப்பட்டது. சட்டக் கல்லூரிகளும், மருத்துவக் கல்லூரிகளும் தொடங்கப்பெற்றன. இராணுவக் கல்லூரிகள் புதிய முறையில் திருத்தியமைக்கப்பட்டன. ஒழுக்கம், உடலுழைப்பு, நாட்டின் தற்காப்பு, பண்டைய இலக்கியங்கள், அறிவியல் ஆகியவற்றைப் போதிக்க அவற்றில் பயிற்சிபெற்ற ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டனர். பெண் கல்வியிலும் சிறப்பான கவனம் செலுத்தினர் நெப்போலியன். நாட்டின் எதிர்காலம் நல்ல தாய்மார்களைப் பொறுத்தது என்று அவர் கருதினர். ஆகவே பெண் கல்விக்கூடங்கள் பல எழுந்தன. பாலங்கள் கட்டுதல், சாலைகள் அமைத்தல் ஆகியவற்றைக் கற்பிக்கும் தனிப்பள்ளிகளும் தோன்றின. மாணவர்களிடையே நிலவிய ஏற்றத்தாழ்வுகள் ஒழிந்தன; சிறப்புச் சலுகைகள் மாய்ந்தன. மாணவர்களிடையே சமத்துவம், சகோதரத்துவம், ஒழுக்கம், நாட்டுப் பற்று போன்றவை மலர்ந்தன. பொருட்காட்சி மனைகள் பல வற்றை நிறுவி இத்தாலியிலிருந்து கொண்டுவரப்பட்ட பொருட்களைக் கொண்டு அவைகளை அணி செய்தார்.

இத்தாலியில் போனபார்ட்டால் உருவாக்கப்பட்ட சிசால்பைன் குடியரசு (Cisalpine Republic) ஐந்து மில்லியன் மக்களைக் கொண்டது. அதனைச் சுற்றிலும் முடியரசுகள் சூழ்ந்து அடிக்கடி அதற்குத் தொந்தரவு கொடுத்து வந்தன. அன்றியும், குடியரசின் நிர்வாகிகளும் அனுபவமற்ற புதியவர்கள். குடியரசினைக் காத்து நிலைத்திடச்செய்யும் ஆற்றலை அவர்கள் பெற்றிருக்கவில்லை. அங்குள்ள அரசுக் கட்சி ஆதரவாளர்கள் மீண்டும் மன்னராட்சியைப் புகுத்தும் பணியில் ஈடுபட்டனர். சமயவாதிகளும், சலுகை விரும்பிகளும் குடியரசுக்கெதிராகச் சூழ்ச்சிகள் பல செய்துவந்தனர். எனவே, சிசால்பைன் குடியரசினை வலிமைமிக்கதாக்கும்

வகையில் புதிய அரசியலமைப்பு ஒன்றினை உருவாக்கிட இத்தாலி யக் குடியரசினர் விரும்பினர் ; நெப்போலியனைத் தங்களது காவல ராகவும் வழிகாட்டியாகவும் கொண்ட இத்தாலியர் இரண்டு முக்கிய தூதர்களைப் பாரிசுக்கு அனுப்பினர். அவர்களும் போன பார்ட்டை அணுகித் தங்களது குடியரசுக்கேற்ற புதிய அரசாங் கம் ஒன்றை அமைத்துத் தரும்படி வேண்டினர். நெப்போலி யனும் அவர்களை அன்புடன் வரவேற்று புதிய அரசியல் சட்டம் ஒன்றினை உருவாக்கிக் கொடுத்தார். அதன்படி, சிசால்பைன் குடியரசுத் தலைவர் ஒருவரும் துணைத்தலைவர் ஒருவரும் தேர்ந் தெடுக்கப்படுவர். அவர்களது பதவிக்காலம் பத்தாண்டுகள். எட்டு உறுப்பினர்கள் கொண்ட மேல்சட்டசபையும் (Senate) எழுபத்தைந்து உறுப்பினர்களைக் கொண்ட பிரதிநிதிகள் சபை (House of Representatives) யும் நிறுவப்பட்டன. முந்நூறு நிலக் கிழார்கள், இருநூறு வணிகர்கள், இருநூறு சமயத்துறையினர், இலக்கியவல்லுநர் ஆகியோரடங்கிய குழுவிலிருந்து இரண்டு மன்றங்களின் உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்படுவர்.

நெப்போலியன் சிசால்பைன் குடியரசுக்காகத் தயாரித்த இந்தப் புதிய அரசியலமைப்பை அறிமுகப்படுத்தும் பொருட்டுப் பாரிசுக்கும் மிலான் நகருக்கும் இடையிலுள்ள லையான்ஸ் (Lyons) நகரில் ஒரு சிறப்பான மாநாடு கூடியது. அம் மாநாட்டிற்கு ஃபிரான்சிலிருந்து நானூற்று ஐம்பத்திரண்டு பிரதிநிதிகள் அனுப் பப்பட்டனர். நெப்போலியனும் ஜோசபைன் உடன்வர மாநாட் டிற்குப் புறப்பட்டார். 1802ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் பதின்மூன்றாம் நாள் போனபார்ட் லையான்ஸ் வந்தடைந்தார். வழியெல்லாம் மக்கள்வெள்ளம் ; விழிகளெல்லாம் போனபார்ட் மீது ; 'வாழ்க போனபார்ட்' என்ற வாழ்த்தொலிகள் வானைப் பிளந்தன. லையான்ஸ் மாநாட்டில் புதிய அரசியலமைப்பு ஏற்றுக் கொள்ளப்பட்டது. அன்றியும் சிசால்பைன் குடியரசின் அதிப ராகப் போனபார்ட் ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தங்களது அதிபரைப் பாராட்டி விழாவெடுத்து மகிழ்ந்தனர் இத்தாலியர். மகத்தான ஊர்வலங்கள் மக்களின் மகிழ்ச்சி யைப் பெருக்கும் வகையில் அமைந்தன. ஊர்வலத்தில் அலங் கார வண்டியில் அமர்ந்து சென்ற அதிபர் நெப்போலியன் ஆங்காங்கே நின்று அறிமுகமானவர்களுடன் இத்தாலிய மொழி யில் பேசி அவர்களைக் கவர்ந்ததுடன் குடியரசின் மக்களை யும் கவர்ந்தார். லையான்ஸ் நகரில் இருபதுநாள் தங்கி சிசால் பைன் குடியரசினை வலிமைப் படுத்துவதற்கான ஆக்கப்பணிகளை ஆற்றிவிட்டு அதிபர் போனபார்ட் ஜனவரித் திங்கள் முப்பத் தொன்றாம் நாள் பாரிஸ் வந்தடைந்தார்.

இதற்கிடையில், ஃபிரெஞ்சுக் குடியரசின் சட்ட மன்றத் தேர்தல்களும் வந்தன. நெப்போலியனின் சமய ஏற்பாட்டையும், சட்டத் தொகுப்பு முறையினையும் எதிர்த்தவர்களெல்லாம் தூக்கியெறியப்பட்டனர். முதல் கான்சலின் திட்டங்களையும் கொள்கைகளையும் ஆதரித்தோர் அமோக வெற்றி பெற்றனர். அரசாங்க அதிகாரிகளும், படைத்துறையினரும் தங்களுடைய முழு ஆதரவினை முதல் கான்சலுக்கு அளித்தனர். இத்தாலியக் குடியரசின் அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தாயகம் திரும்பிய நெப்போலியனுக்கு ஃபிரான்சின் ஒவ்வொரு பகுதிகளிலிருந்தும் வாழ்த்துகளும் பாராட்டுகளும் வந்து குவிந்துகொண்டிருந்தன. ஐரோப்பிய முடிமன்னர்களையெல்லாம் மிஞ்சிய 'மன்னாதி மன்னனாக' விளங்கினார் நெப்போலியன். அதிகாரங்களனைத்தும் அவரை நாடிச்சென்றன. அவைகளையெல்லாம் ஃபிரெஞ்சுக் குடியரசின் நலன் கருதியே அவர் செலுத்தினார். ஃபிரான்ஸ் நாடு பெறுகின்ற ஒவ்வொரு சிறப்பும் தாம் பெற்ற சிறப்பாகக் கருதினார். குடியரசின் புகழே தமது புகழ் எனக் கொண்டார். நாட்டின் கீர்த்தியே தமது கீர்த்தி எனக் கருதினார். அவரது தன்னலமற்ற பணிக்கு ஆதரவாகப் ஃபிரெஞ்சுப் பெருநாடே திரண்டதில் வியப்பில்லை. ஃபிரெஞ்சுக் குடியரசைப் பகைவர்களின் பயங்கரத் தாக்குதலிலிருந்து காத்து, புரட்சிக் கருத்துகளைப் பூவுலகெல்லாம் பரவும்படி செய்த நெப்போலியனுக்கு நன்றி செலுத்தும்வகையில் அவரது பதவியின் காலத்தை நீடிக்க முடிவுசெய்தது சட்டமேல்மன்றம் (Senate). இத்தாலியக் குடியரசின் அதிபராக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு ஃபிரான்சின் புகழுக்கு மேலும் புகழ்சேர்த்த போனபார்ட்டுக்குப் 'பதவி நீடிப்பே' மக்கள் அவருக்குச் செலுத்தும் காணிக்கை என்று செனட் கருதியது. 1802ஆம் ஆண்டு மே திங்கள் எட்டாம் நாள் மாலை செனட் கூடியது. முதல் கான்சலின் பதவிக்காலத்தை மேலும் பத்து ஆண்டுகளுக்கு நீட்டித்து, சட்டமேல் மன்றம் ஒருமனதாகத் தீர்மானம் நிறைவேற்றியது. உடனே, அத் தீர்மானம் முதல் கான்சலுக்குத் தெரிவிக்கப்பட்டது. தமது பதவிக் காலத்தை நீடித்துத் தீர்மானம் இயற்றிய செனட்மன்றத்திற்குத் தமது நன்றியைச் செலுத்தினார் நெப்போலியன். ஆனால், அத்தகைய அதிகாரத்தை மக்கள் தாம் தனக்களிக்க வேண்டும்; எனவே, இது பற்றிய முடிவினை மக்களின் வாக்கெடுப்புக்கு விட்டுவிட வேண்டும் என்று நெப்போலியன் கருத்துத் தெரிவித்தார். நாட்டுநலன் கருதிய நற்பணிக்குக் காலவரம்பு கூடாது என்ற கருத்தும் அவர்பால் காணப்பட்டது. ஃபிரெஞ்சுக் குடியரசின் புகழினைப் புவியெல்லாம் பரப்பிடத் தாம் என்றென்றும் தலைமைப்

மீடத்தில் அமர்ந்திருக்க வேண்டும் என்ற எண்ணம் அவரது உள்ளத்தில் விடாது ஒலித்துக்கொண்டிருந்தது.

போனபார்ட்டின் உள்ளக்கிடக்கையை உணர்ந்த ஃபிரெஞ்சுச் சட்டமன்றம் உடனடியாகக் கூடியது. பலத்த விவாதத்துக்குப்பின் இரண்டு முடிவுகள் எடுக்கப்பட்டு அவைகளை மக்கள் முன் வைக்கத் தீர்மானிக்கப்பட்டது. முதலாவதாக, நெப்போலியனை வாழ்நாள்முழுவதும் முதல் கான்சலாக பதவியில் நீடிக்கச் செய்தல்; இரண்டாவது, தமக்குப்பின்னுல் ஒருவரைக் கான்சலாக நியமிக்கின்ற அதிகாரத்தை அவருக்கு அளித்தல். இந்த இரண்டு முடிவுகளையும் மேற்கொண்ட சட்டமன்றம் அவைகளை மக்கள் வாக்கெடுப்பிற்குவிட்டு நிறைவேற்றத் தீர்மானித்தது. மேலும், சட்டமன்றத்தின் முக்கிய முடிவுகளிரண்டும் போனபார்ட் முன் வைக்கப்பட்டன. வாழ்நாள் முழுவதும் தம்மைக் கான்சலாக நீடிக்கச் செய்யும் முடிவினை மக்கள் முன் வைக்க போனபார்ட் மறுப்பேதும் கூறவில்லை. ஆனுல், தமக்குப்பின்னுல் தமது வாரிசைத் தாமே நியமிக்கவேண்டும் என்ற சட்டமன்ற முடிவினை அவர் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். ஆகவே, முதலாவது முடிவுமட்டும் பொதுமக்கள் வாக்கெடுப்பிற்கு விடப்பட்டது. போனபார்ட் வாழ்நாள்முழுதும் கான்சலாகப் பதவி வகிக்கவேண்டும் என்பதற்கு ஆதரவாக முப்பத்தைந்து இலட்சத்து அறுபத்தெட்டாயிரத்து எண்ணூற்று எண்பத்தைந்து வாக்குகள் கிடைத்தன. எதிராகக் கிடைத்த வாக்குகள் ஏறத்தாழ எண்ணுயிரம். எனவே, இலட்சக்கணக்கான வாக்குகள் வித்தியாசத்தில் நெப்போலியன் தமது வாழ்நாள் முழுவதும் கான்சலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மக்கள் அவரை ஃபிரான்சின் மக்கள் மன்னனுக மகுடம் சூட்டிவிட்டனர். குடியரசின் புகழை மூலைமுடுக்கெல்லாம் பரப்பும் பணிக்கான அதிகாரத்தை அவர் உரியவர்களிடமிருந்து பெற்றுவிட்டார். மக்களின் நெஞ்சங்களில் அவர் நீக்கமற நிறைந்திருந்தார் என்பது உலகத்திற்கு அறிவிக்கப்பட்டது. மக்கள் நலத்திலும் உரிமையிலும் நாட்டங்கொண்ட நல்லோர் உள்ளமெல்லாம் குளிர்ந்தது இச் செய்தி கேட்டு. குடியரசுக் கருத்துகளில் விருப்பங்கொண்ட மக்களும் குதூகலம் கொண்டனர் போனபார்ட்டின் புதிய நிலையினை அறிந்து.

நெப்போலியனைப் பாராட்டிப் பாரிஸ் நகரம் விழாவெடுத்து மகிழ்ந்தது. பாரிஸ் நகரம் முழுவதும் விழாக்கோலம் - அலங்கார வளைவுகள்-அலையலையாகக் காட்சிதரும் அணையாவிளக்குகள்-வாழ்த்துரைகள் தாங்கிய தட்டிகள் - தோரணங்கள் - வீதியெல்லாம் விதவிதமான வண்ண வேலைப்பாடுகள் - டூயிலெரிசிலிருந்து இலக்

சம்பர்க் அரண்மனைவரை இராணுவச் சீருடையில் இருமருங்கி லும் மிடுக்குடன் அணிவகுத்துநின்று அனைவரது கண்களையும் கவர்ந்து நின்ற வீரர்கள் - ஆங்காங்கே, மாடிகளிலும், மரங்களி லும் மக்கள் வெள்ளம் - மாடங்களிலே மகளிர்கூட்டம் - வீதி யெல்லாம் தங்கள் வீட்டுப்பிள்ளைக்கு வாழ்த்துக் கூறவந்திருந்த மக்கள் மாக்கடல் - அலங்காரத்தேரில் போனபார்ட் அமர்ந்து வர, அதனை எட்டுக்குதிரைகள் இழுத்துவந்து ஊர்வலத்தைச் சிறப்பித்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாக அமைந்தது. ஊர்வலம் சென்ற வழியெல்லாம் மங்கையர் தங்கள் தலைவன் மீது தூவிய மலர்வெள்ளம் - 'போனபார்ட் வாழ்க' என்ற முழக் கம்-கையொலி ஆகியவை வானைப்பிளந்து சென்று எதிரொலித்து நின்றன. ஊர்வலம் முடிந்தபின் பாராட்டுக்கூட்டம் பாங்குடன் நடைபெற்றது. உயர் அதிகாரிகள், சட்டமன்ற உறுப்பினர்கள், வெளிநாட்டுத் தூதர்கள் போன்றோர் தங்களுடைய நல்வாழ்த் துகளைக் கூறினர். செனட்டும் பாராட்டு இதழ் ஒன்றினைப் போனபார்ட்டுக்கு வழங்கிச் சிறப்புப் பெற்றது. தமக்களித்த பாராட்டுக்கு நன்றிதெரிவித்த போனபார்ட், ஃபிரான்சின் நலனைக் கருத்தில்கொண்டு அதன் வளமும் புகழும் ஓங்கும்வகையில் தாம் பணியாற்றுவதாக உறுதி கூறினார்.

அன்றியும், 1802ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் பதினைந்தாம் நாள், பாரிஸ் நகரம் போனபார்ட்டின் பிறந்த நாள் விழாவினை யும் சிறப்பாகக் கொண்டாடி மகிழ்ந்தது. ஃபிரெஞ்சு பெரு நகரம் எடுக்கின்ற ஒவ்வொரு விழாவும் போனபார்ட்டின் நாட்டுப் பணிக்கு நல்ல தெம்பாக அமைந்தது ; தமது புதிய பொறுப்பில் உற்சாகத்துடன் பணியாற்றுவதற்கான, தூண்டுகோலாகத் துலங் கியது. பிறந்தநாள் விழாவின்போது, சமயப் பெருமான்களும், இராணுவ உயர்தர அதிகாரிகளும், வெளிநாட்டுத் தூதர்களும், பிறரும் போனபார்ட்டுக்கு வாழ்த்துகள் வழங்கினர். நடுப் பகலில் அவருக்கு நல்வாழ்த்துக் கூறும்வகையில் ஆலய மணிகள் அனைத்தும் முழங்கின. அன்று இரவு பாரிஸ் நகரம் வண்ண விளக்குகளாலும் வாணவேடிக்கைகளாலும் ஒளிபெற்று விளங்கி யது. பழைய மன்னர் பெற்ற மரியாதை, மதிப்பு அனைத்தும் இப்போது மக்களால் மன்னர் நிலைக்கு உயர்த்தப்பட்ட போன பார்ட் பெற்றுத் திகழ்ந்தார். பாரிஸ் எடுத்த விழாக்களெல்லாம் நெப்போலியனின் வருங்காலப் பேரரசர் பதவிக்கு அச்சாரமாக அமைந்தன.

1802ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் நெப்போலியன் வாழ் நாள் முழுவதும் ஃபிரான்சின் கான்சலாகத் தேர்ந்தெடுக்கப்பட் டார். ஆயுள் முழுவதும் கான்சலாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட

போனபார்ட்டை ஐரோப்பிய நாடுகளெல்லாம் வாழ்த்தி வரவேற்றன. ஃபிரான்சில் குடியரசுக் கருத்துகள் மங்கி முடியரசு மீண்டும் மலர்வதற்கான சூழ்நிலை இப்போது தோன்றியுள்ளது என எண்ணி அவை மகிழ்ந்தன. அண்டை முடியரசுகளுடன் போனபார்ட் நட்புறவு கொண்டு ஐரோப்பாவில் அமைதிக்கான வழியை வகுப்பார் என்ற கருத்தும் ஐரோப்பிய நாடுகளில் பரவலாக நிலவியது. ஃபிரான்சில் போனபார்ட்டின் தலைமையில் மீண்டும் முடியரசு காணும் வகையில் நிலைமைகள் வளர்ந்தால் அவற்றை வரவேற்று அங்கு அதிகாரத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவதில் நெப்போலியனுக்கு உறுதுணையாக நிற்க இங்கிலாந்து தயங்காது என்று பிரிட்டிஷ் பிரதமர் அடிங்டன் (Addington) இலண்டனிலுள்ள ஃபிரெஞ்சுத் தூதரிடம் கூறினார். பிரஷ்ய மன்னர், இரஷ்ய மாமன்னர், ஆஸ்திரியப் பெருமன்னர் ஆகியோரும் தங்களது நல்வாழ்த்துகளை நெப்போலியனுக்கு அனுப்பினர். நெப்போலியனை வெறுத்த நேப்பில்ஸ் அரசி (Queen of Naples) கேதரைன் கூட அவரைவாழ்த்தி வரவேற்றாள். அவரால் ஐரோப்பாவிலும் ஃபிரான்சிலும் அமைதி நிலவ வழிபிறக்கும் என மனதார நம்பினாள்.

ஆனால், இங்கிலாந்திற்கும் ஃபிரான்சுக்குமிடையே மீண்டும் பூசல்கள் தோன்றின. தங்களுடைய சரக்குகளின் விற்பனை எதிர்பார்த்த அளவு நடைபெறாததை அறிந்த ஆங்கிலேயர் ஏமாற்றமடைந்தனர். இரும்புத் தொழிலிலும், பருத்தித் தொழிலும் தன்னிகரற்று விளங்கியது இங்கிலாந்து. 'உலகத்தின் பட்டறை' என்று அழைக்கப்பட்ட இங்கிலாந்து, தொழிற் புரட்சியையும், விவசாயப் புரட்சியையும் கண்ட நாடு. அதன் செய்பொருட்கள் பல ஃபிரான்சுபோன்ற ஐரோப்பிய நாடுகளிலும் கீழ்த்திசை நாடுகளிலும் பெருமளவில் விற்பனையாகி வந்தன். ஆனால், நெப்போலியன் ஃபிரான்சின் நிர்வாகப் பொறுப்பினை ஏற்றபின், ஃபிரான்சின் தொழில் வளம் பெருகியது. ஃபிரெஞ்சுப் பொருட்கள் ஐரோப்பியச் சந்தைகளில் ஆங்கிலப் பொருட்களுடன் போட்டிபோட்டுக்கொண்டு அதிக அளவில் விற்பனையாயின. ஃபிரான்சிலும் பிறநாடுகளிலும் விற்பனையாகிவந்த ஆங்கிலப் பொருட்களின் வருகை தடைப்பட்டது. மேலும், ஃபிரான்சில் ஆங்கிலப் பொருட்களுக்குக் காப்புவரி அதிகம் விதிக்கப்பட்ட காரணத்தால் இங்கிலாந்தின் விற்பனை பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆகவே, இதுவரை ஐரோப்பிய வணிகத்தில் தன்னிகரற்று விளங்கிய இங்கிலாந்து தனக்குப் போட்டியாக ஃபிரான்சு வளர்ந்து வந்ததைக்கண்டு பொறாமை கொண்டது. மேலும், ஃபிரான்சில் நெப்போலியனது புதிய அரசாங்கத்தை

ஏற்றுக்கொள்ளாத அரசுக்கட்சி ஆதரவாளர் பலர் இங்கிலாந்தில் தங்கியிருந்தனர். அவர்கள் அடிக்கடி ஆங்கிலேயரை ஃபிரெஞ்சுக் காரர்களுக்கு எதிராகப் போருக்குத் தூண்டி வந்தனர். மீண்டும் மன்னராட்சியை ஃபிரான்சில் நிலைநாட்ட அவர்கள் இங்கிலாந்தை வற்புறுத்தி வந்தனர். அன்றியும், போனபார்ட்டைக் கொலை செய்வதற்கும் அவர்கள் சதிகள் பல செய்தனர். அத்தகைய சதிகாரர்களை யெல்லாம் ஊக்குவித்துவந்தது இங்கிலாந்து. பிரிட்டனின் உதவியுடன் போனபார்ட்டைச் சுட்டுக் கொல்லுவதற்கான முயற்சிகளையும் அரசுக்கட்சியினர் மேற்கொண்டனர். நெப்போலியனைப் பற்றியும் அவரது துணைவியாரைப் பற்றியும், குடும்பத்திலுள்ள பிறரைப் பற்றியும் தரக்குறைவாக, தகாதனவற்றை எழுதி துண்டு அறிக்கைகளாக அச்சிட்டு வெளியிட்டார் பெல்டியர் (Peltier) என்ற போர்போன் அரசகுலத்தைச் சார்ந்த ஒருவர். அவருக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுத்து வந்தது இங்கிலாந்து. ஆகவே, நெப்போலியன் இங்கிலாந்தின் நாணயத்திலும், நம்பிக்கையிலும் சந்தேகம் கொண்டு அதன்மீது வெறுப்பும் கோபமும் கொண்டார்.

அல்ஜீரியர்கள் நடுநிலக்கடலில் பயணம் செய்த கிறிஸ்துவக் கப்பல்களையெல்லாம் தாக்கிக் கொள்ளையடித்துவந்தனர். ஒரு முறை ஃபிரெஞ்சுக்கப்பல் ஒன்று கடலில் சேதத்திற்குள்ளாகியது. அக் கப்பலிலுள்ள அனைவரையும் அல்ஜீரியர்கள் சிறைபிடித்தனர். மேலும் மூன்று ஃபிரெஞ்சுக்கலங்களும் கைப்பற்றப்பட்டு அல்ஜீரியர்களால் கடத்தப்பட்டன. அதனையறிந்த நெப்போலியன் கடுங்கோபம் கொண்டார். அல்ஜீயர்ஸ் (Algiers) நாட்டுத் தலைவருக்கு மடல் ஒன்று தீட்டி ஓர் அதிகாரி மூலம் அனுப்பினார். உடனடியாக ஃபிரெஞ்சுக்கப்பல்களையும் கைதுசெய்யப்பட்ட ஃபிரெஞ்சுக் காரர்களையும் தம்மிடம் ஒப்படைக்கும்படியும், இனிமேல் இத்தகைய செயல்கள் நடைபெறுவண்ணம் உறுதி கொடுக்கும்படியும் தவறினால் படைகொண்டு தாக்கிப் பணியவைப்பதாகவும் போனபார்ட் அம் மடலில் குறிப்பிட்டிருந்தார். அம் மடலினைப் படித்தவுடனே அல்ஜீயர்ஸ் தலைவர் அஞ்சி நடுங்கினார். எகிப்தில் போனபார்ட்டின் நடவடிக்கைகள் பற்றி அவர் ஏற்கெனவே அறிந்து வைத்திருந்தார். எனவே, ஃபிரெஞ்சுக் கப்பல்களை உடனடியாக விடுவித்ததுடன் ஃபிரெஞ்சுக்காரர்களையும் உரிய மரியாதையுடன் நடாத்தினார். மேலும், அவர் ஃபிரெஞ்சுக் கப்பல்களைக் கைப்பற்றிய அல்ஜீரியக் கொள்ளைக்காரர்களுக்கு மரணதண்டனையும் விதித்தார். ஆனால், ஃபிரெஞ்சு அதிகாரி தக்கவாறு தலையிட்டுத் தண்டனையினின்றும் அவர்களைக் காப்பாற்றினார். அல்ஜீரியர்களிடையேயும் நெப்போலியனது புகழ்பரவியதைக் கேட்ட ஆங்கிலேயர் இயல்பாக ஆத்திரம் கொண்டனர்.

எகிப்து நாட்டைவிட்டு ஆங்கிலேயர்களும் ஃபிரெஞ்சுக்காரர் களும் வெளியேறிவிடவேண்டும் என்பதும், மால்டாவை பழைய ஆட்சியாளரிடமே ஒப்படைத்துவிட்டு அதனைவிட்டு ஆங்கிலேயர் வெளியேறிவிடவேண்டும் என்பதும் அமின்ஸ் (Amiens) உடன் பாட்டுத் தீர்மானங்களாகும். உடன்பாட்டினை மதித்து நெப் போலியன் உடனடியாக எகிப்திலிருந்து ஃபிரெஞ்சு வீரர்களை வெளியேற்றினர். ஆனல், ஆங்கிலேயர்கள் எகிப்திலிருந்தும் மால்டாவிலிருந்தும் வெளியேருது காலம்கடத்திவந்தனர். இது குறித்து இங்கிலாந்து பாராளுமன்றத்திலும் காரசாரமாக விவாதிக்கப்பட்டது. ஆங்கிலேயரின் செயலினைக் கண்டித்துக் கணைகள் பல அங்கேயே வீசப்பட்டன. 'ஃபிரான்சு நாளுக்கு நாள் வளர்ச்சிமேல் வளர்ச்சிபெற்று வலிவும் பொலிவும் பெற்று வருவதைக் குறித்து, பிட் அவர்களுடைய கூட்டாளிகளையும் நண்பர் களையும் விட, நான் பெரிதும் கவலை கொண்டுள்ளேன். ஆனல், அதனைச்சாக்காகக் கொண்டு ஒரு புனிதமான உடன்பாட்டைப் புறக்கடையில் தள்ளுவது நேர்மையாகாது ; நீதியுமாகாது. ஏற்றுக்கொண்ட உடன்பாட்டை நிறைவேற்ற மறுப்பதால் ஏற்படும் பழி இங்கிலாந்தின் பெருமையினைக் குலைக்கும் நிரந் தரக் களங்கமாகும். ஆகவே, உடன்பாட்டின்படி நாம் மால் டாவை விட்டு வெளியேறுவதே நீதிக்கும் நேர்மைக்கும் பொ ருந்துவதாகும்' என்று இங்கிலாந்துப் பாராளுமன்றத்தில் ஃபாக்ஸ் (Fox) என்பவர் வருந்திக்கூறினர். ஆனல், அவரது நேர்மைக்கூற்றுக்குச் செவிமடுக்காத ஆங்கிலப் பாராளுமன்றம் ஃபிரான்சுடன் போரிடுவதற்கான வழி வகைகளை மேற்கொண் டது.

ஆனல், நெப்போலியன், உண்மையாகவே, ஐரோப்பாவில் நிரந்தர அமைதியை நிலைநாட்ட ஆர்வம் கொண்டு அதற்கான பணிகளில் ஈடுபட்டார். தமது நாட்டின் ஏற்றத்திற்கு ஏற்ற திட்டங்களைச் செயல்படுத்துவதில் தீவிரமாக ஈடுபட்டார். ஆல்ப்ஸ் மலையை எளிதாகக் கடந்து செல்லுவதற்கேற்ற எழில் மிக்க சாலைகளை உருவாக்குவதில் அவர் ஓயாது உழைத்தார். பல்லா யிரக்கணக்கான ஃபிரெஞ்சுக்காரர்கள் இப் பணியில் இறங்கினர். ஃபிரான்சின் வணிகத்தையும், உழவுத்தொழிலையும், ஊக்குவிக்கும் வகையில் கால்வாய்கள் பல வெட்டும் பணியும் போனபார்ட்டின் நேரடிப்பார்வையில் மேற்கொள்ளப்பட்டது. அன்றியும் போன பார்ட் தமது படைகளைக் கலைத்து அவர்களையெல்லாம் நாட்டின் ஆக்கத்தொழில் வளர்ச்சியில் ஈடுபடுத்தினர். ஆங்கில நாட்டுடன் உறவைப் பலப்படுத்தும் பொருட்டு பல நடவடிக்கைகளை அவர் மேற்கொண்டார். ஆங்கிலத் தூதரான விட்வொர்த் (Whit

worth) என்பவரையும் அவரது துணைவியான டோர்செட் கோமாட்டி (Duchess of Dorset)யையும் பாரிசில் அன்புடன் வரவேற்று அவர்களுடன் இனிது பழகினர். டூயிலெரிஸ் அரண்மனையில் விருந்துகள் பலகொடுத்து அவர்கள் சிறப்பிக்கப்பட்டனர். அவர்களுக்குத் தேவையான வசதிகளனைத்தும் செய்துதரப்பட்டன. அரசாங்க அதிகாரிகளும், பிறரும் ஆங்கில விருந்தினரை அன்புடன் நேசித்தனர். ஆனல், அமைதியில் நாட்டங் கொண்ட போனபார்ட்டின் செயல்களை அங்கீகரிக்காதவாறு ஆங்கிலேயர் அவர்மீது பகைமை பாராட்டினர். மனமொத்துச் செய்துகொண்ட உடன்பாட்டின்படி, மால்டாவையும், எகிப்தையும் விட்டு வெளியேருது இறுமாப்புடன் இருந்தனர். அதனை அறிந்த நெப்போலியன் ஆங்கிலத் தூதரான விட்வொர்த்தினை அழைத்துப் பேசி நல்லுறவினை நிலைநாட்டவும் முன்வந்தார். 1803ஆம் ஆண்டு ஃபிப்ரவரித் திங்கள் 18ஆம் நாள் போனபார்ட் டூயிலெரிசிலுள்ள தமது அறையில் ஆங்கிலத்தூதரை அழைத்துப் பேசினர். ஆனல், ஆங்கிலேயரின் பிடிவாதத்தால் பேச்சு பலன்தரவில்லை. இதற்கிடையில், இரஷ்யப் பேரரசர் இரண்டு நாடுகளுக்குமிடையே சமரசம் செய்துவைக்க முன்வந்தார். இங்கிலாந்தும் ஃபிரான்சும் கலந்துபேசி ஒரு முடிவுகாணும் வரையில் மால்டாவை இரஷ்யாவிடம் ஒப்படைக்க போனபார்ட் முன்வந்தார். ஆனல், ஆங்கிலேயர்கள் அதனை ஏற்றுக்கொள்ளவில்லை. மேலும், மால்டாவை ஆங்கிலேயருக்குப் பத்தாண்டு காலத்துக்குக் கொடுத்தால் இத்தாலியக் குடியரசை இங்கிலாந்து அங்கீகரிக்கும் என்று பிரிட்டன் அறிவித்தது. ஆனல், போனபார்ட் அதனை ஏற்றுக்கொள்ளவில்லை. உடனே, பாரிசிலுள்ள ஆங்கிலத்தூதர் திருப்பியழைக்கப்பட்டார். ஆங்கிலக்கப்பல்கள் ஃபிரெஞ்சுக் கப்பல்களைத் தாக்கி மீண்டும் கொடிய போரினைத் துவக்கின. 1803 ஆம் ஆண்டு மே திங்கள் பதினெட்டாம்நாள் பிரிட்டன் ஃபிரான்சின்மீது போரினைத் தொடருவதாக அறிவித்தது.

தூங்கியபுலியை இடறிவிட்டனர் ஆங்கிலேயர். அவர்களது போர்ப்பிரகடனத்தைக் கேட்டவுடனே போனபார்ட் இலண்டனிலுள்ள ஃபிரெஞ்சுத் தூதரைத் திரும்பப்பெற்ருர். ஆங்கிலப் போர்வெறியர்களின் சவாலை ஏற்றுத் தமது குடியரசைக் காக்க போனபார்ட் முன்வந்தார். போர் அறிவிப்பினை வெளியிடுவதற்கு முன்பே ஆங்கிலேயர்கள் ஃபிரெஞ்சுக் கப்பல்களைத் தாக்கினர். இலண்டன் துறைமுகத்திலிருந்த ஃபிரெஞ்சுக் கப்பல்கள் சில ஆங்கிலேயரால் கைப்பற்றப்பட்டன. அதனை அறிந்த நெப்போலியன் கடுங்கோபம் கொண்டார். போர் விதிகளை மீறி, ஆதரவற்ற ஃபிரெஞ்சுக் கப்பல்களைக் கைப்பற்றியதுடன், ஏழ

ரைக்கோடி ஃபிராங் மதிப்புள்ள பொருட்களையும் கவர்ந்து சென்ற ஆங்கிலேயரைப் பழிவாங்கத் துடித்தார். ஃபிரான்சு நாட்டில் தங்கியுள்ள ஒவ்வொரு ஆங்கிலேயனையும் உடனே சிறை பிடிக்கும்படி உத்தரவிட்டார். இங்கிலாந்தின் அடாத செயலால் ஃபிரான்சில் ஒரு குற்றமும் செய்யாத பல்லாயிரக்கணக்கான ஆங்கிலேயர் சிறையில் தள்ளப்பட்டு அவதியுற்றனர். அதனை அறிந்த ஆங்கில அரசு இங்கிலாந்திலிருந்த ஃபிரெஞ்சுக்காரர்களை யெல்லாம் பிடித்துச் சிறையில் தள்ளியது. இரண்டு நாடுகளுக் கிடையே ஏற்பட்ட மோதலில் ஒன்றுமறியாத மக்கள் பெரும் அவதிக்குள்ளாயினர். கடலாதிக்கத்தில் சிறந்து விளங்கிய இங்கிலாந்து ஃபிரெஞ்சுக் கப்பல்களை விரட்டித்தாக்கியது. ஃபிரெஞ்சுக் கடற்படை தோல்விமேல் தோல்வியைத் தாங்கி வந்தது. இருப்பினும், போனபார்ட் உறுதிகுலையாது ஆங்கிலேயர்களை அவரது நாட்டிலேயே சந்திக்கத்தயாரானார். ஆங்கிலக் கால் வாயைக் கடந்துசென்று இங்கிலாந்தின்மீது பாய்வதற்குத் திட்ட மிட்டார். அவரே பலமுறை குறிப்பிட்டுள்ளதைப்போல் இங்கிலாந்துப் படையெடுப்பு மிகவும் ஆபத்தானது; சிந்தித்துச் சீர் தூக்கிப்பார்த்துச் செயல்படவேண்டிய ஒன்று. இருப்பினும், இப் போதைய நெருக்கடி நிலையில் வேறு வழியின்றி இங்கிலாந்தின் மீது படைமேற்கொண்டு செல்ல உறுதியுடன் முன்வந்தார் போனபார்ட்.

இருப்பினும், இங்கிலாந்துக்கு அச்சத்தை உருவாக்கிப் பணிய வைக்கும்வகையில் போனபார்ட் அனோவர் (Hanover) மீது பாய்ந் தார். இருபதினாயிரம் ஃபிரெஞ்சு வீரர்கள் உடனடியாக அனோவர் மீது படைமேற்கொண்டுசென்று அதனைப்பிடித்தனர். பதினாரு யிரம் வீரர்களும், நானூறு பீரங்கிகளும், முப்பதினாயிரம் துப் பாக்கிகளும், மூவாயிரத்து ஐநூறு உயர்ந்த ரகக் குதிரைகளும் ஃபிரெஞ்சுக்காரர் வசமாயின. தங்களுடைய தந்தையர் வழிவந்த அனோவரின் வீழ்ச்சியைக் கேட்ட ஆங்கிலேயர் அதிர்ச்சியடைந் தனர். அனோவர் மரபினைச் சார்ந்த ஆங்கில மன்னரும் பெரிதும் வருந்தினார். அனோவரை வீழ்த்தியபின் போனபார்ட், மீண்டும் உடன்பாடு காண இங்கிலாந்துக்கு அழைப்பு விடுத்தார். அமின்ஸ் உடன்பாட்டை நிறைவேற்றினால்தான் அனோவரைவிட்டு வெளியேறுவதாக அவர் அறிவித்தார். ஆனால், ஆங்கில அரசு அதனை ஏற்றுக்கொள்ள மறுத்துப் போரினை விரிவுபடுத்த முன் வந்தது. அதனை அறிந்த ஃபிரெஞ்சு மக்களும் வேறு வழியின்றி போரில் குதித்தனர்; தங்களின் வழிகாட்டியான போனபார்ட் டுக்குப் போரை வெற்றிகரமாக நடாத்தி நாட்டைக் காப்பதற் குத் தேவையான அதிகாரங்களனைத்தையும் அளித்தனர். போர்

வெறி கொண்ட பிரிட்டனை அடக்கும் பணியில் போனபார்ட்டுக் குப் பின்னால் ஃபிரெஞ்சுப் பெருநாடு முழுவதும் அணிதிரண்டு நின்றது. ஆகவே, நெப்போலியன் இங்கிலாந்துப் படையெடுப் புத் தவிர்க்க முடியாததாயிற்று.

இங்கிலாந்து கடலாதிக்கம் பெற்று விளங்கிய நாடு. அதன் கடற்படை அன்றைய ஐரோப்பாவில் தன்னிகரற்று விளங்கியது. ஆங்கிலக்கால்வாயில் அதன் கப்பற்படை ரோந்து சுற்றி பகைவர் கப்பல்களைத் துரத்தியடித்துவந்தது. ஆகவே, ஆங்கிலக் கால் வாய் இங்கிலாந்தின் அரணாக விளங்கியது. அதனைக்கடந்து சென்று இங்கிலாந்தைத் தாக்குவது உண்மையிலேயே மிகவும் ஆபத்தான செயலாகும். இருப்பினும், போனபார்ட் பன்முறை சிந்தித்தபின் இங்கிலாந்துப் படையெடுப்பினை வெற்றியுடன் நிறைவேற்று வதற்கான ஆக்கப்பணிகளில் ஈடுபட்டார். விரிந்த அளவில் போர் ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன. ஆங்கிலக்கால்வாயின் கரை களில் பலத்தகாவல் போடப்பட்டது. மூந்நூறாயிரம் வீரர்கள் இங்கிலாந்துப் படையெடுப்புக்காகத் திரண்டனர். இரண்டா யிரம் பீரங்கிப் படகுகள் மிகவிரைவில் கட்டி முடிக்கப்பட்டு போ லோன் (Boulogne) துறைமுகத்தில் வைக்கப்பட்டன. அவைகளின் மூலம் நூற்று ஐம்பதாயிரம் வீரர்கள் ஆங்கிலக் கால்வாயைத் தாண்டிச் சென்று இங்கிலாந்தினைத் தாக்கத் தயாராயினர். அவர் களுக்குத் துணையாகப் பத்தாயிரம் குதிரைகளும் நாலாயிரம் பீரங்கிகளும் கடல் கடந்து செல்ல ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஃபிரான்சின் உலைக்கூடங்கள், தொழிற்கூடங்கள் அனைத்தும் போர்க்கருவிகளைத் தயாரிப்பதில் மும்முரமாயிருந்தன. ஃபிரெஞ் சுக் குடியரசின் ஒவ்வொரு மாநிலமும் போர்ப்பாசறையாகக் காட்சி யளித்தது. கான்சல் நெப்போலியன் ஒவ்வொரு துறையிலும் நேரடிக்கவனம் செலுத்தி போர் ஏற்பாடுகளை விரைவுபடுத்தினார். போர் செலவுகளைச் சரிக்கட்டும்வகையில் போனபார்ட் கடுமை யான வரிகளை விதித்தார். நாட்டுமக்கள் அவைகளை மனமுவந்து வரவேற்று ஆதரவு காட்டினர். வரிகள் உடனடியாகச் செலுத்தப் பட்டன. அன்றியும், மக்கள் விலையுயர்ந்த ஆபரணங்களையும், பொருட்களையும் போர்நிதிக்குக் கொடுத்துத் தங்கள் தலைவனின் கரத்தை வலுப்படுத்தினர். வெகுவிரைவில் நிதிகள் குவிந்தன. போனபார்ட்டின் போர் ஏற்பாடுகளை ஃபிரெஞ்சு மக்கள் உற்சாகத் துடனும், ஆர்வத்துடனும் வரவேற்றனர். சிறுபடகுகளும், பெரும் படகுகளும், பிறகருவிகளும் நன்கொடைகளாகப் பெருமளவில் வந்துகுவிந்தன. பாரிஸ் 120 துப்பாக்கிகளுடன் கூடிய ஒரு கப்பலை நன்கொடையாக வழங்கியது. லையான்ஸ் 100 துப்பாக்கிகளுடன் கூடிய கப்பலொன்றையும், போர்டே (Bordeaux) 84 துப்பாக்கி

களுடன் கூடிய கப்பலொன்றையும், மார்செயில்ஸ் (Marseilles) 74 துப்பாக்கிகளுடன் கூடிய கப்பல் ஒன்றினையும் தங்களது போர்க் காணிக்கைகளாக வழங்கின. இத்தாலியக் குடியரசும் போர்நிதி கொடுத்து உதவியது. ஐந்துமில்லியன் ஃபிராங்குகள் செலவில் இரண்டு போர்க்கப்பல்களைத் தயாரித்து அது ஃபிரான்சிற்கு வழங்கியது. ஒரு கப்பல் 'அதிபர்' (President) என்றும், இன்னொரு கப்பல் 'இத்தாலியக் குடியரசு (Italian Republic) என்றும் அழைக் கப்பட்டன. வணிகக்கழகங்களும், பொதுமக்கள் மன்றங்களும் தாராளமாகவும், ஏராளமாகவும் கொடுத்துப் போர்நிதியைப் பெருக்கின. செனட்டும் நூற்று இருபது துப்பாக்கிகளுடன் கூடிய கப்பல் ஒன்றினைத் தனது நன்கொடையாகக் கொடுத்தது.

போனபார்ட் போலோன் துறையில் தங்கிப் போர் ஏற்பாடு களைச் செவ்வனே செய்துவந்தார். கரையின் முக்கிய இலக்குகளை யெல்லாம் ஆராய்ந்தார்; கடலின் நிலையை ஆராய்ந்தார்; கடலின் நிலையை ஆராய்ந்து அதற்கேற்ற வகையில் படைகளைப் பக்குவப்படுத்தினர். இதற்கிடையில், இரஷ்யப் பேரரசர் அலெக் சாண்டர் இரண்டு நாடுகளுக்குமிடையே சமரசம் செய்துவைக்க மீண்டும் முன்வந்தார். போனபார்ட் அதற்குத் தமது உள்ளம் நிறை இசைவினை நல்கினர்; ஆனல், ஆங்கிலேயர் அலெக்சாண்ட ரின் சமரச ஏற்பாட்டை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டனர். எனவே, போலோன் துறையில் போர் ஏற்பாடுகளை மேலும் தீவிரப்படுத்தினர் போனபார்ட். பெல்ஜியம் நாட்டிற்கும், இரைன் நதிப்பகுதிக்கும், நெப்போலியன் சென்று அங்குள்ள முக்கிய இராணுவ இலக்குகளையெல்லாம் கண்டறிந்து வந்தார். ஆங்கிலேயரின் கடற்படை போலோனிலுள்ள ஃபிரெஞ்சுவீரர் களைத் தாக்கிச் சேதப்படுத்திவிடாதபடி, கனமான பீரங்கிகள் ஆங்காங்கே அமைக்கப்பட்டன. மூன்றுகல் தொலைவிற்கப்பால் வரும் பகைவர் கப்பல்களைச் சுட்டுவீழ்த்தும் ஆற்றலை அப் பீரங்கி கள் பெற்றிருந்தன. போர்வீரர்களின் நலனுக்குத் தேவையான அனைத்தும் போலோனில் செய்து முடிக்கப்பட்டன. போர்வீரர் களும் உற்சாகத்துடன் இங்கிலாந்தின்மீது பாய்ந்து தாக்குவதற் கேற்ற சமயத்தை எதிர்நோக்கிக் காத்திருந்தனர்.

ஒருநாள், போலோன் பாசறையில் போனபார்ட் தங்கி யிருந்த நேரத்தில், ஆங்கில இளைஞன் ஒருவன் ஃபிரெஞ்சுச் சிறையினின்றும் தப்பியோடினன். அவன் போலோனுக்கருகில் கடற்கரையை அடைந்து அங்கு மரக்கிளைகளாலான படகு ஒன்றினைத்தானே தயாரித்தான். அதன்மூலம் கடலைக்கடந்து இங்கிலாந்து செல்ல எத்தனித்தான். ஆனல், இடையில் அவன் ஃபிரெஞ்சு வீரர்களால் பிடிபட்டு நெப்போலியன்முன் கொண்டு

வந்து நிறுத்தப்பட்டான். 'பலமற்ற மரக்கிளைகளாலான சிறுபடகொன்றில் ஏறிக் கடல் கடந்துசெல்ல நீ எத்தனித்தது உண்மை தானு ?' என்று அவ்விளைஞனைக் கேட்டார் போனபார்ட். 'ஐயா, உண்மைதான்' என்று பதிலுரைத்தான் அந்த இளைஞன். 'வயது முதிர்ந்த காலத்தில் உழைக்க வழியின்றி, வறுமையில் வாடித் திக்கற்றவளாகவுள்ள எனதருமைத் தாயைக் கண்டு அவளுக்குப் பணிவிடை செய்யவே, நான் இந்த துணிச்சலான செயலில் இறங்கினேன். தாங்கள் அனுமதி வழங்கினுல் இப்போதே இக் கடலைக் கடந்து செல்வேன்' என்றும் அவன் போனபார்ட்டிடம் எடுத்துக் கூறினுன். அவனது துணிவையும், உள்ள உறுதியையும், அன்னையிடத்தில் கொண்டுள்ள பாசத்தையும் கண்ட போனபார்ட் அவனைப் பாராட்டி அவனுக்குப் போதுமான பொருளும் கொடுத்துப் பத்திரமாகக் கடலில் அனுப்பிவைத்தார். அந்த இளைஞனும் போனபார்ட்டின் பெருந்தன்மைக்கு நன்றிசெலுத்தி நலமுடன் தாயகம் திரும்பினுன்.

இங்கிலாந்தின்மீது படையெடுப்பதற்கான போனபார்ட்டின் ஏற்பாடுகளைக்கண்டு ஆங்கிலேயர் அரண்டனர். இங்கிலாந்தின் கரையிலிருந்து முப்பது கல் தொலைவில் நூற்று ஐம்பதாயிரம் ஃபிரெஞ்சுவீரர்களும், இரண்டாயிரம் பீரங்கிப்படகுகளும், பத்தாயிரம் குதிரைகளும், நாலாயிரம் பீரங்கிகளும் இங்கிலாந்தினைத் தாக்கும்வகையில் தயாராக வைக்கப்பட்டிருப்பதை அறிந்த ஆங்கிலேயர் உண்மையிலேயே அஞ்சினர். ஐரோப்பாவைக் கலக்கிய மாவீரன் நெப்போலியனுக்கு இங்கிலாந்தை வீழ்த்த இத்தகைய பெரும்படை தேவையில்லை என்றும் அவர்கள் கருதினர். நன்கு பயிற்சிபெற்று, பல களங்களில் வென்று வாகைசூடிய வீரர்களடங்கிய படையுடன் போனபார்ட்டே இங்கிலாந்தின்மீது படைமேற்கொண்டு வரவிருக்கின்ருர் என்பதனை அறிந்த ஆங்கிலேயர் மேலும் அதிர்ச்சி அடைந்தனர். வலிமை மிக்க கடற்படையினைக் கொண்டு விளங்கிய ஆங்கிலத்தளபதிகள்கூட போனபார்ட்டின் படைபலம் கண்டு மலைத்தனர். இங்கிலாந்தைக் காத்தல் எளிதான செயலல்ல என்று அவர்கள் வெளிப்படையாகவே கூறத்தலைப்பட்டனர். நாட்டை எதிர்நோக்கியுள்ள ஆபத்தினைக் கண்ட ஆங்கிலப்பாராளுமன்றம் அவசரமாகக்கூடி ஆலோசனையில் இறங்கியது. பதினேழுவயதுக்குமேல் ஐம்பத்தைந்து வயதுக்குட்பட்ட ஆண்களனைவரும் கட்டாயமாக இராணுவத்தில் சேர்ப்பதற்கான, தீர்மானமும் பாராளுமன்றத்தில் நிறைவேறியது. ஒவ்வொரு வீடும் போர்ப்பாசறையாகக் காட்சியளித்தது. மக்களனைவருக்கும் போர்ப்பயிற்சி அளிக்கப்பட்டது. கடற்கரைகளிலும், முக்கிய நிலையங்களிலும் போர் அபாய அறி

விப்புகள் பொருத்தப்பட்டன. நெருக்கடி நிலைமை எதுவாயினும் அதனைத் தக்கபடி சந்திக்கும் வகையில் படைகள் தயார் நிலையில் வைக்கப்பட்டன. மேலும், நெப்போலியனைக் கொலை செய்வதற்காக சதிச்செயலில் ஈடுபட்டுள்ள இலண்டன் நகர அரசகுலத்தவர்களுக்கு இங்கிலாந்து தீவிரமாக உதவ முன்வந்தது. பணமும், படையும் அவர்களுக்குக் கொடுத்து ஆங்கில அமைச்சரவை சதிக்கு உறுதுணையாக இருந்தது. சதிகாரர்கள் பலர் ஃபிரெஞ்சுக் கடற்கரையை அடைவதற்கு இங்கிலாந்து போர்க்கப்பல்களை கொடுத்து உதவியது. எந்த விலை கொடுத்தேனும் நெப்போலியனைக் கொலைசெய்துவிட்டு ஃபிரான்சில் மீண்டும்போர்போன் அரசகுல ஆட்சியை நிறுவச் சதிக்காரர்கள் இரகசியமாகப் பணியாற்றினர். அவர்களுக்குத் தேவையான பணமும், படையும் கொடுத்து உதவியது இங்கிலாந்து.

ஒருநாள் இலண்டன் சதிகாரர்கள் ஒரு பயங்கரத் திட்டத்தைத் தீட்டினர். கொலைக்கஞ்சாத கொடியவனான ஜார்ஜிஸ் கேடௌடல் (Georges Cadoudal) என்பவனுடைய தலைமையில் நூறு சதிகாரர்கள் ஃபிரான்சுக்குச் செல்ல வேண்டும்; அங்கு நெப்போலியன் மால்மெய்சன் (Mal Maison) மாளிகைக்குச் செல்லும்நேரத்தில் அவரை வழி மறித்தல் வேண்டும்; நெப்போலியனது மெய்க்காவற்படையினரைக் கொன்று, பின் போனபார்ட்டையும் கொல்ல வேண்டும்; அதன்மூலம் எழும் குழப்பத்தைப் பயன்படுத்தி இங்கிலாந்துப் படையின் துணைகொண்டு ஃபிரான்சில் மீண்டும் போர்போன் முடியாட்சியை நிலைநாட்ட வேண்டும். இந்தச் சதிக்கு ஃபிரான்சிலும் ஆதரவு தேட அவர்கள் முயன்றனர். நெப்போலியனது பகைவர்கள் பலரை இதில் ஈடுபடுத்தி சதியை எளிதில் நிறைவேற்றவும் அவர்கள் முயன்றனர். ஒருநாள் சதிகாரர்கள் இலண்டனை விட்டு இரகசியமாகக் கிளம்பி நார்மண்டி வந்தடைந்தனர். அங்கிருந்து எவரும் சந்தேகிக்காத வகையில் பாரிஸ் வந்தடைந்தனர். அங்கு சிலநாள் தங்கி தங்களது திட்டத்திற்கு இரகசியமாக ஆதரவு தேடினர். ஆனால், ஃபிரான்சில் நல்லாட்சி நடாத்திவரும் நெப்போலியனுக்கெதிராக உள்நாட்டுக் கலகத்திலிறங்க எவரும் முன்வரவில்லை. பணத்தைக் கொட்டிக் கொடுத்தும் ஃபிரெஞ்சு மக்களைச் சதிகாரர்கள் தங்கள் பக்கம் ஈர்க்க இயலவில்லை. நெப்போலியனது புகழினைக் காணச் சகியாத பொறுமையுள்ளம் கொண்ட துரோகிகள் முப்பது பேர் மட்டும் இலண்டன் சதிகாரர்களது வஞ்சக வலையில் சிக்கினர். அவர்களில் ஒருவர் மோரோ (Moreau). அவர் நெப்போலியனைப் போன்ற மாவீரர்; போரில் புறமுதுகிட்டு ஓடாத மறவன்; வெற்றிகள் பல பெற்று ஃபிரெஞ்சுப் படைக்குப் புகழ் பல சேர்த்

தவர் ; போனபார்ட்டின்மீது பொறாமை கொண்டவர்; ஃபிரான்சின் தலைமைப் பீடத்தை தம் வயப்படுத்த நினைத்துப் பணியாற்றியவர். அவரது மனைவியும் பதவி வெறி பிடித்தவள். அவளது தூண்டுதலால் மோரோ சதிகாரர்களின் பிடியில் சிக்கினர். நெப்போலியனைக் கொலை செய்வதை அந்தக் கொடிய மோரோ வரவேற்றார். அத் தீச்செயலில் தீவிர ஒத்துழைப்பு நல்கவும் முன்வந்தார். ஆனல், நெப்போலியனை வீழ்த்தியபின் போர்போன் குலத்தவரின் முடியாட்சி மீண்டும் ஃபிரான்சில் மலர் வதை அவர் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். நெப்போலி யனுக்குப்பின் ஃபிரான்சின் ஆட்சிப் பொறுப்புத் தம்மிடம் வர வேண்டும் என்று அவர் சதிகாரர்களிடம் வற்புறுத்தினர்.

இங்கிலாந்தின் துணையுடனும் நல்லாதரவுடனும் சதிகாரர்கள் தீட்டிய திட்டம் விரைவில் போனபார்ட்டின் செவிகளை எட்டியது. அவரது ஒற்றர்கள் பலர் சதிபற்றிய நிலைகளைத் தெரிந்து உடனுக் குடன் போனபார்ட்டுக்கு அறிவித்தனர். சதிகாரர்களில் சிலர் பிடிபட்டுச் சுட்டுக்கொல்லப் பட்டனர். பிடிபட்ட சதிகாரர் களில் ஒருவன் கொலை செய்யப்படுவதற்கு முன் சதிபற்றிய முழு விவரத்தையும் மோரோ போன்ற பெரும் புள்ளிகள் அதற்கு உடந்தையாக இருப்பதையும் வெளியிட்டான். உடனே சதிகாரர் கள் பலர் கைதுசெய்யப்பட்டனர். ஒருநாள் காலை மோரோவும் கைது செய்யப்பட்டார். நீதி விசாரணையில் அவர் சதியில் பங்கு கொண்டார் என்பது நிரூபிக்கப்பட்டது. ஆகவே, அவருக்கு நீதிமன்றம் மரண தண்டனை விதித்துத் தீர்ப்பளித்தது. ஆனல், மோரோவின் வீரத்தையும், ஆற்றலையும், அவர் நாட்டிற்கு ஆற்றிய நற்பணிகளையும் கருத்தில்கொண்டு போனபார்ட் அவரை மன்னித்தார். அன்றியும், அவருக்கு நிறைய பொருள் கொடுத்து அவரது மனைவியுடன் அமெரிக்கா சென்று அமைதியாக வாழும்படி ஆணையிட்டார்.

> "இன்ன செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயஞ் செய்து விடல்" (குறள்)

ஜார்ஜிஸ் கேடௌடல், போலிக்னேக் (Polignac), ரிவியெர் (Riviere) போன்ற பிற சதிகாரர்களுக்கும் நீதி மன்றம் மரண தண்டனை விதித்தது. சதிகாரர்களின் தலைவனை கேடௌடல் தூக்கிலிடப்படுவதற்கு முன்பு தனக்கு ஒரு புட்டி உயர்ந்த ரக மது வேண்டும் என்று சிறைக் காவலரிடம் வேண்டினன். உடனே, சிறைக் காவலர் ஒரு புட்டி மது கொடுத்து அவனது இறுதி ஆசையை இனிது நிறைவேற்றினன். அதனை சிறிது சுவைத்த கேடௌடல், 'இது மிக மட்டமான சரக்கு' என்றுக் கூறி

உயர்ந்த ரக மதுப் புட்டி ஒன்று கொண்டுவரும்படி வேண்டினன்: ஆனல், 'உன்னைப் போன்ற கேடு கெட்ட கயவனுக்கு இது நல்ல சரக்கு தான்' என்று சிறைக் காவலன் சினந்து கூறினன். அதைக் கேட்ட கேடௌடல் கடுங்கோபம் கொண்டான்; கண்கள் சிவந்தன ; கரத்திலிருந்த மதுப்புட்டியை ஓங்கிக் காவலனின் தலை மீது எறிந்தான். உடனே, சிறைக் காவலன் அவனது காலடியில் சுருண்டு விழுந்து செத்தான். அடுத்தநாள் ஜார்ஜிஸ் கேடௌடல் பிற சதிகாரர்களுடன் தூக்கிலிடப்பட்டான்.

ஆர்மண்ட் போலிக்னேக் என்பவர் இராணுவப் பள்ளியில் நெப்போலியனுடன் பயின்றவர்; அவரது நெருங்கிய நண்பர். அவரும் போனபார்ட்டுக் கெதிரான சதிக்கு உடந்தையாக இருந் தார் என்ற காரணத்தால் மரண தண்டனைக்குள்ளானர். அதனை அறிந்த அவரது துணைவி அழுது புலம்பி ஜோசபைனிடம் சென்று தனது கணவனைக் காப்பாற்றும்படி வேண்டினள். தனது உற்ற தோழியின் கண்ணீரைக் கண்டு கலங்கிய ஜோசபைனும் கண் கலங்கி நின்ருள். இருவரும் போனபார்ட்டிடம் சென்று போலிக் னேக்கை மன்னித்து விடுதலை செய்யும்படி வேண்டினர். ஜோசபை னின் வேண்டுகோளை முதலில் நெப்போலியன் புறக்கணித்தாலும் இறுதியில் அவளது கண்ணீர் வென்றது. போலிக்னேக் விடுதலை பெற்று நெப்போலியனின் நம்பிக்கைக்குரிய சிறந்த நண்பராகத் திகழ்ந்தார். தளபதி இலசோலா (Lajolais) என்பவரும் சதியி லீடுபட்ட குற்றத்திற்காக மரணதண்டனை விதிக்கப் பட்டிருந்தார். அவரது மகள் பதினறு வயதுப் பருவப் பெண் தனது தந்தைக்கு ஏற்பட்ட ஆபத்தினை அறிந்து அலறியடித்துக்கொண்டு போன பார்ட்டிடம் சென்ருள். நெப்போலியன் அன்றுமாலை அரண்மனைத் தோட்டத்தில் உலவிக்கொண்டிருந்தார். அவரைக் கண்ட அப் பாவை 'ஐயா! எனது தந்தையை மன்னித்துக் காப்பாற்றுக' என்று வேண்டினள். அவளது தந்தையின் பெயரைக் கேட்டறிந்த நெப்போலியன், 'குழந்தாய் உனது தந்தையை முதலில் ஒரு முறை மன்னித்துள்ளேன். இப்போது மீண்டும் எனக்கெதிரான சதியிலீடுபட்டுக் குற்றம் புரிந்துள்ளார். எனவே, அவரை மன்னித்தல் இயலாது' என்று கூறினர். உடனே, அப் பெண் 'முதன்முறை என் தந்தை குற்றமற்றவர் ; இம் முறை அவர் குற்றவாளி என்பது உண்மையே ; இருப்பினும், அவரை மன்னித் தருள்க' என முறையிட்டாள். அவளது வேண்டுகோளுக்கிணங்கி நெப்போலியன் அவளது தந்தையை மன்னித்தார். அதனைக் கேட்டவுடனே அப் பெண் மயங்கி விழுந்தாள். மயக்கம் தெளிந்த பின் சிறைச்சாலைக்கு விரைந்தாள். தந்தையிடம் மன்னிப்புச் செய்தியினைத் தெரிவிக்க. தந்தையைக் கண்டு கழுத்தினைக் கட்டிப்

பிடித்துக்கொண்டு விம்மி அழுதாள். பேச நா எழவில்லை. மீண்டும் மயக்கமுற்முள். ஆனால், மயக்கம் தெளிந்த பின் அவள் பித்துப் பிடித்தவள் போலானாள். அவள் பித்தம் தெளியாத நிலையில் போனபார்ட் அவளைத் தமது பாதுகாப்பில் வைத்து காத்து வந்தார்.

எடன்கீம் (Ettenheim) என்பது ஃபிரான்சின் எல்லைப்புறத்தி லுள்ள ஓர் ஊர். அங்கு டியெங்கியன் (d'Enghien) என்ற கோமகன் வசித்து வந்தார். அவர் போர்போன் மன்னர் குலத்தைச் சார்ந்தவர். அவர் ஃபிரெஞ்சுக் குடியரசினைத் தாக்குவ தற்கு ஆங்கிலேயரின் உதவியை நாடினாரென்றும், அவர்களது உதவி பெற்று ஃபிரான்சைத் தாக்குவதற்குத் திட்டமிட்டார் என்றும், போனபார்ட்டைக் கொலை செய்வதற்கான சதிக்கு உடந்தையாக இருந்தார் என்றும் ஒற்றர்கள் மூலம் போனபார்ட் அறிந்தார். உடனே, அவரைக் கைது செய்யும்படி போனபார்ட் ஆணை பிறப்பித்தார். டியெங்கியன் கோமகன் விரைவில் சிறை பிடிக்கப்பட்டுக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டார். விசாரணையின்போது அவர் தாம் போனபார்ட்டைக் கொலை செய்யும் சதியில் ஈடுபாடு கொள்ளவில்லை யென்றும், சமயம் வாய்த்தபோது ஃபிரான்சின் மீது போர்தொடுப்பதற்கான ஏற் பாடுகளை மட்டும் செய்ததாகவும் கூறினார். ஆனால், நீதிபதிகள் அவரைக் குற்றவாளியெனக் கருதி அவருக்கு மரண தண்டனை விதித்துத் தீர்ப்பளித்தனர். மனம் ஒடிந்த டியெங்கியன் நெப் போலியனை நேரில் கண்டு முறையிட அனுமதி வேண்டினார். ஆனால், அனுமதி மறுக்கப்பட்டு அவர் தூக்கிலிடப்பட்டார். ஆனால், அவர் சதிச்செயலில் ஈடுபாடு கொள்ளவில்லை என்பதைப் பின்பு அறிந்த நெப்போலியன் பெரிதும் வருந்தினார். முன்னரே அவர் அதனை அறிந்திருப்பின் டியெங்கியன் காப்பாற்றப்பட்டிருப் பார். இது குறித்துப் போனபார்ட் நண்பர்களிடம் உரையாடும் போதெல்லாம் கண்ணீர் விட்டுக் கலங்கினார். இருப்பினும், அத் தவறுக்கு ஒற்றர்களையோ, நீதிபதிகளையோ உடந்தையாக்காமல் தாமே முழுப் பொறுப்பினையும் ஏற்றுக் கொண்டார். டியெங்கியன் கோமகனைக் குற்றவாளியாக்கிக் கொலைசெய்த செய்தியினைக் கேட்ட ஐரோப்பிய அரசர்கள் பலரும் அதிர்ச்சியுற்றனர். நெப் போலியனது செயலை அவர்கள் வன்மையாகக் கண்டித்தனர். இரஷ்யப் பேரரசர் அலெக்சாண்டரும் இது குறித்து நெப்போலி யனுக்குத் தமது வன்மையான கண்டனத்தைத் தெரிவித்தார். ஆனால், தம்முயிரையும், தமது நாட்டையும் காத்தல்பொருட்டு ஒரு மன்னன் சதிகாரர்களிடம் எவ்வாறு நடந்து கொள்வானோ அவ்வாறே தாமும் டியெங்கியன் கோமகன் விவகாரத்திலும் தக்க

வாறு நடந்து கொண்டதாகப் போனபார்ட் பதில் கூறினர். ஆயினும், இந் நிகழ்ச்சி நெப்போலியன் மீது கறை படிய வைத்தது.

## உறுதுணைபுரிந்த நூல்கள்


1. நெப்போலியன் போனபார்ட் — ஸ்லோன்
2. நெப்போலியன் போனபார்ட் — அவரது எழுச்சியும் வீழ்ச்சியும் — நே. எம். தாம்சன்
3. நெப்போலியனது போராட்ட ஏற்பாடுகள் —டி. சேன்ட்லர்
4. பிரிட்டன் வரலாறு — இ. ர. அனுமந்தன்
5. நெப்போலியன் — சீலி
6. நெப்போலியனது வாழ்க்கை— ஜோசப் எஸ். சி. ஆப்பட்
7. நெப்போலியன் — எமில் லட்விக்
8. நெப்போலியனும் போப்பும் — ஈ. ஈ. ஒய். சோல்ஸ்

# 9. பேரரசர்

போனபார்ட்டைக் கொன்று மீண்டும் ஃபிரான்சில் முடியரசை நிறுவப் போர்போன் அரசகுலத்தவர் செய்துவந்த சதித்திட்டங்களைக் கண்ட ஃபிரெஞ்சு மக்கள் குமுறினர். அரசகுலத்தவரின் சதிகளுக்கு ஆக்கமளித்த ஆங்கிலேயர்மீது அவர்கள் கடுங்கோபங் கொண்டனர். ஃபிரெஞ்சுக் குடியரசின் மானத்தைக் காத்த மாவீரன் நெப்போலியனுக்குத்தக்க பாதுகாப்புக் கொடுக்க அவர்கள் முன்வந்தனர். ஏழைகளின் தோழன், பாட்டாளிகளின் பங்காளி, பாமரர்களின் செல்லக்குழந்தை, பஞ்சை பராரிகளின் நண்பன், தாழ்த்தப்பட்டவர்களின் குலக்கொழுந்து — என்றெல்லாம் போற்றப்பட்ட போனபார்ட்டின் உயிரைக் காக்க ஒவ்வொரு ஃபிரெஞ்சுக் குடிமகனும் ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிடத் தயாரானான். 'எப் பக்கம் வந்து புகுந்திடுவர், எதிரிகள் எத்தனை பட்டாளம் கூட்டிடுவர்' என்று புரட்சிப்பண் பாடி ஃபிரெஞ்சு மக்கள் வழிமேல் விழி வைத்து எதிரிகளைக் கண்காணித்தனர். அரசகுலத்தைச் சார்ந்த டியெங்கியன் (d'Enghien) கோமகன் ஃபிரான்சில் மரண தண்டனைக்குள்ளானதை அறிந்து ஐரோப்பிய முடியரசர்கள் பலர் பதறினர். குடியரசினரால் கொலைத்தண்டனைக்குள்ளான கோமகனுக்கு ஆதரவாக அவர்கள் போர்க்கொடி தூக்கவும் முன்வந்தனர். ஃபிரெஞ்சுக் குடியரசின்மீது கண்டனக் கணைகள் பல வீசப்பட்டன. மக்களாட்சி ஐரோப்பாவில் பரவினால் தங்களுக்கும் அத்தகைய முடிவே ஏற்படும் என்றும் அவர்கள் அஞ்சினர். ஆகவே, அவர்கள் எப்படியாவது ஃபிரெஞ்சுக் குடியரசையும் அதனைத் தாங்கிநின்ற கான்சல் நெப்போலியனையும் மாய்த்திட முயன்று பணியாற்றினர். அவர்களுக்கு ஈடுகொடுத்து முறியடிக்கும் வகையில் ஃபிரெஞ்சு மக்களும் தங்களின் வழிகாட்டியான போனபார்ட்டின் கரத்தை வலுப்படுத்தத் துணிந்தனர். அவர் ஆற்றிய அருஞ்செயல்களையும், அவரால் ஃபிரெஞ்சுக் குடியரசு பெற்ற பெருமையினையும், புகழினையும், கணக்கில் கொண்டு மேலும் அவர் அயராது நாட்டுக்கு உழைக்கும்வகையில் அவருக்கு

உற்சாக மூட்ட முற்பட்டனர் மக்கள். அவரது அதிகாரத்தை விரிவாக்கி அவருக்குத் தங்களின் நன்றியறிதலைக் காணிக்கையாக்க ஃபிரெஞ்சு மக்கள் துடித்தனர். பாய்ந்துவரும் பகைவர்களின் தாக்குதலிலிருந்து நாட்டையும் அதன் உயிர்நாடியான நெப்போலியனையும் பாதுகாப்பதற்கான ஒரேவழி அவருக்கும் ஃபிரான்சின் பேரரசராக முடிசூட்டுவதே என்று ஃபிரெஞ்சு மக்கள் கருதினர். சட்டமன்றங்களிலும், பாரிஸ் நகரவீதிகளிலும், ஃபிரான்சின் முக்கிய நகரங்களிலும், கடற்கரைப் பகுதிகளிலமைந்துள்ள இராணுவ முகாம்களிலும், போனபார்ட்டை, ஃபிரான்சின் மன்னராக்கவேண்டும் என்ற பேச்சுப் பலமாக எழுந்தது. ஃபிரெஞ்சு மக்களின் அறிவாற்றலுக்கு ஏற்றவகையில் குடியரசு அமையவில்லை என்பதை ஃபிரெஞ்சு மக்கள் அனுபவ வாயிலாக அறிந்தனர். நிர்வாகத்தில் மலிந்திருந்த ஊழல்களைப் போக்கிட புரட்சி மேற்கொள்ளப்பட்டது. போனபார்ட்டின் சிறந்த சீர்திருத்தங்களால் புரட்சியின் சீரிய நோக்கம் ஈடேறி விட்டது. ஆகவே, இனி குடியரசு முறை தேவையில்லை என்ற கருத்தும் மக்கள் மத்தியில் நிலவியது. மக்களை மதியாத மன்னர்களின் காட்டாட்சியை ஒழித்தல், மக்களை மாக்களாக்கிய படைமான்ய முறையை ஒழித்தல், மேட்டுக்குடியில் தோன்றிய அரச குலத்தவரின் அதிகாரங்களையும், சலுகைகளையும் ஒழித்தல் போன்ற நோக்கங்களை உள்ளடக்கி ஃபிரான்சில் புரட்சி தோன்றியது. இப்போது புரட்சியின் இலட்சியங்கள் பல நிறைவேற்றப்பட்டுள்ளன. இன்று ஃபிரான்சின் முன்னுள்ள முக்கிய பிரச்சனை நாட்டின் பாதுகாப்பு. எனவே, நாட்டின் பெருமையும் புகழும் சிதையாவண்ணம் ஃபிரான்சைப் பாதுகாக்கும் பொருட்டு மக்கள் தலைவன் நெப்போலியனை மன்னராக்குதல் அவசிய, அவசரத் தேவை என அவர்கள் எண்ணினர். நெப்போலியன் ஃபிரான்சின் மணி முடிதரித்த மாமன்னராகக் காட்சியளித்தால் மற்ற ஐரோப்பிய மன்னர்களும் அவரைத் தங்களில் ஒருவராக ஏற்று உரிய மதிப்பினையும் மரியாதையினையும் வழங்குவர்; அதன்மூலம் ஐரோப்பாவில் அமைதி நிலவ வழிபிறக்கும் என்றும் ஃபிரெஞ்சு மக்கள் மனதார நம்பினர். ஃபிரெஞ்சுப் பெருநாட்டு மக்கள் ஒருமுகமாகத் தங்கள் வீட்டுப்பிள்ளையான நெப்போலியனுக்கு ஃபிரான்சின் மணி முடியைத் தரித்து மகிழ மும்முரமாயிருந்தனர். இதுவரை எந்த ஒரு பிரச்சனையிலும் இத்தகைய மக்கள் கருத்தொருமைப்பாட்டினை ஃபிரான்சு கண்டதில்லை. ஃபிரான்சின் நலனில், அதன் பாதுகாப்பில், அதன் சிறப்பில், உயர்வில், அதன் அமைதியில், நாட்டங்கொண்ட ஒவ்வொரு ஃபிரெஞ்சுக் குடிமகன் நாவும், 'நெப்போலியன் ஃபிரான்சின் மன்னராக வேண்டும்' என்றே நவின்றது. மக்களின் இதயச் சிம்மாசனத்தில் கொலு

வீற்றிருந்த முதல் கான்சல் நெப்போலியன் ஃபிரெஞ்சு சிம்மா தனத்தில் அமர்ந்து மக்களை வழி நடத்துவதற்கேற்பட்ட வாய்ப் பினைக் கண்ட மக்களிடையே உற்சாக வெள்ளம் கரைபுரண்டு ஓடியது.

மக்களின் அன்புக் கட்டளையை அறிந்த போனபார்ட் அது குறித்துத் தமது நண்பர்களுடன் கலந்து ஆலோசித்தார். லீப்பிரன், கேம்பா சரிஸ் (Camba Ceres) ஆகிய இரண்டு கான்சல்களையும் அழைத்து மக்களின் விருப்பம்குறித்து கலந்துரையாடினுர். ஃபிரான்சில் மீண்டும் மன்னராட்சி ஏற்பட்டால் மற்ற ஐரோப் பிய குடியரசுகள் அதனை மனப்பூர்வமாக ஏற்று அங்கீகரிக்கும்; அதன்மூலம் போர்ச்சூழ்நிலை மறைந்து ஐரோப்பாவில் அமைதி நிலவும்; ஃபிரெஞ்சு மக்கள் விரும்பிய நிர்வாக மாற்றங்கள், சீர் திருத்தங்கள் போன்றவை, ஏற்கெனவே நிறைவேற்றப்பட்டுள் ளன; மக்களின் நலன்பற்றிய திட்டங்கள் தொடர்ந்து நிறைவேற மன்னராட்சி தடையாக விருக்காது — என்பன போன்ற கருத்து கள் கான்சல்களிடையே நிலவின. ஆகவே, நாட்டின் பாதுகாப் பினையும் வளர்ச்சித்திட்டங்களையும் கருத்தில்கொண்டு முதல் கான்சலும் மக்களின் மனம் நிறைந்த அன்புக் காணிக்கையாக மன்னர்பதவியை ஏற்று மக்களுக்குப் பணிபுரிய ஒப்புக்கொண் டார். ஆனுல், ஃபிரான்சின் ஆட்சிமாற்றம் குறித்துப் பிறநாடு களின் கருத்துகளையும் அறிய அவர் முற்பட்டார். இங்கிலாந் தும், இரஷ்யாவும் ஃபிரான்சுடன் கொண்டிருந்த பகைமையின் காரணமாக ஆட்சிமாற்றம் குறித்துத் தங்கள் கருத்துகளை அறி விக்கவில்லை. ஆனுல், பிரஷ்யா, ஆஸ்திரியா, ஸ்பெயின் போன்ற பெருநாடுகளும் சிறு நாடுகள் பலவும் ஃபிரான்சில் மீண்டும் முடி யாட்சி மலர்வதை மனந்திறந்து வரவேற்றன. பிரஷ்ய மன்னர் தமது கைப்படவே பாராட்டு மடல் தீட்டியனுப்பினுர் பாரி சுக்கு. ஆஸ்திரியப் பெருமன்னர் ஃபிரான்சில் உடனடியாக ஆட்சி மாற்றத்தை வரவேற்று அங்கீகரிக்க முன்வந்தார். ஃபிரான்சின் ஆட்சிமாற்றத்திற்கு ஐரோப்பிய நாடுகளின் பொதுவான ஆதரவு இருப்பதை அறிந்த போனபார்ட் பெரிதும் மகிழ்ந்தார்.

'நெப்போலியன் போனபார்ட் பேரரசர் என்று அழைக்கப் படல் வேண்டும்; பேரரசர் என்ற முறையில் ஃபிரெஞ்சுக் குடி யரசு அவரிடம் ஒப்படைக்கப்படுகின்றது' என்ற தீர்மானம் எவ்வித எதிர்ப்புமின்றி ஒருமனதாக ஃபிரெஞ்சு செனட்டில் நிறை வேறியது. வரலாற்று சிறப்புமிக்க இத்தீர்மானம் நிறைவேற்றப் பட்ட நேரத்தில் முதல் கான்சல், செயிண்ட் கிலௌட் (St. Cloud) என்னுமிடத்தில் தங்கியிருந்தார். செனட் உறுப்பினர் கள் உற்சாகம் பெருக்கெடுத்தோட அத் தீர்மானத்துடன்

கிலௌட் நகர் விரைந்தனர். போனபார்ட்டிடம் தீர்மான நகலை நேரடியாகச் சமர்ப்பித்து அவருக்குத் தங்கள் நல்வாழ்த்துகளைக் கூறவேண்டும் என்பதே அவர்களது நோக்கம். 1804ஆம் ஆண்டு மே திங்கள் 18ஆம் நாள் செனட் உறுப்பினர்கள் அலங்கார வண்டிகளில் அமர்ந்து, ஒய்யார உடையணிந்த குதிரைவீரர்கள் அணிவகுத்து உடன்வர, ஊர்வலமாகச் சென்று, போனபார்ட் தங்கியிருந்த மாளிகையை அடைந்தனர். போனபார்ட், அவர்களை இனிது வரவேற்றார். செயிண்ட் கிலௌட் அரண்மனை முழுதும் மக்கள் அலையெனத் திரண்டிருந்தனர். அவர்களது மகிழ்ச்சி ஆரவாரத்துக்கிடையே செனட் தலைவர் கேம்பாசரிஸ் (Camba Ceres) போனபார்ட்டிடம் சென்று தலைகுனிந்து வணங்கிநின்று பேரரசர் என்ற பட்டம் அடங்கிய பேழையைச் சமர்ப்பித்தார். அங்கு திரண்டிருந்த மக்கள் கூட்டம் 'வாழ்க பேரரசர்' என்று வாழ்த்தியது. அவ் வாழ்த்தொலி அப் பெருமாளிகையின் மூலை முடுக்கெல்லாம் சென்று எதிரொலித்தது. மக்களின் அன்புக் கட்டளையை ஏற்றுக்கொண்ட நெப்போலியன் அவர்களது நிலை உயர அயராது உழைப்பதாக உறுதிகூறி அவர்களுக்குத் தம் நன்றியைச் செலுத்தினார். அடுத்து, அருகில் நின்ற ஜோசபைனிடம் சென்று கேம்பாசரிஸ் பேரரசிக்கான நல்வாழ்த்துகளைக் கூறினார். ஜோசபைன் உணர்ச்சிப் பெருக்கால் பேச இயலாத நிலையில் கண்களில் நீரினைத் தேக்கித் தன் நன்றியை வெளிப்படுத்தினாள்.

பேரரசர் பட்டத்தைப் பெற்ற நெப்போலியன் போப்பின் நல்வாழ்த்துகளைப் பெற விரும்பினார். போனபார்ட்டின் சமய ஏற்பாடு அவரைப் போப்பின் நெருங்கிய நண்பராக்கியது. ஆகவே, தம்முடைய நெருங்கிய நண்பரும் கத்தோலிக்கர்களின் சமயத்தலைவருமான போப் ஏழாவது பயஸ் (Pius VII) என்பவரை தமக்கு ஃபிரான்சின் மணிமுடியைச் சூட்டும்படி அழைத்தார். நெப்போலியனது அறிவிலும் ஆற்றலிலும் ஆழ்ந்த நம்பிக்கையும் மதிப்பும் கொண்டிருந்த ஏழாவது பயஸ் அட்டியின்றி ஏற்றுக்கொண்டார் அவரது அழைப்பை.

முடிசூட்டு விழாவிற்கு முன்பு இங்கிலாந்தினைத் தாக்கி வீழ்த்த எண்ணினார் நெப்போலியன். போலான் பாசறையில் அதற்கேற்ற பயிற்சி தினமும் எண்ணிறந்த வீரர்களுக்குக் கொடுக்கப்பட்டது. அவர்களது பயிற்சியைச் சோதிக்கும் விதத்தில் இரண்டு கடற்சண்டைகள் நடந்தன. முதல் சண்டை மே திங்கள் இறுதி வாரத்தில் நடந்தது. போலானுக்கருகில் ஆங்கிலக்கப்பல்கள் வந்து ஃபிரெஞ்சு வீரர்களைத் தாக்கின. ஃபிரெஞ்சுக் கப்பல்களும் எதிர்த்துத் தாக்கி இங்கிலாந்துக் கப்பல்களைத்

துரத்தியடித்தன. இரண்டாவது மோதல் ஆகஸ்ட் திங்கள் 26 ஆம் நாள் இடம் பெற்றது. இந்தச் சண்டையிலும் ஃபிரெஞ்சு கடற்படையே வென்றது. ஆங்கிலக் கப்பல்கள் பலத்த சேதத்துக்குள்ளாயின. இந்த இரண்டு கடற்சண்டைகளிலும் நெப்போலியன் பங்கெடுத்துக்கொண்டு தமது வீரர்களின் ஆற்றலை அறிந்தார். ஆங்கிலக் கடற்படைக்கு ஈடுகொடுக்கும் வகையில் ஃபிரெஞ்சுக் கடற்படை வளர்ச்சிபெற்றுவருவதை அறிந்து மகிழ்ந்தார். நெப்போலியன் முன்னின்று நடாத்திய கடற்சண்டையில் ஆங்கிலேயர் பெற்ற தோல்வி அவர்களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. ஆகஸ்டில் நடந்த சிறிய மோதலில் பதினைந்து ஆங்கில வீரர்கள் கொல்லப்பட்டனர் ; அறுபதுக்கு மேற்பட்டோர் காயமடைந்தனர். அவர்களது கலன்கள் பலத்த சேதத்திற்குள்ளாயின. ஆனால், ஃபிரெஞ்சுத் தரப்பில் இரண்டு பேர்மட்டும் கொல்லப்பட்டனர் ; ஏழுபேர் காயமுற்றனர். இதுவரை தோல்வியே கண்டறியாத ஆங்கிலக் கடற்படை இப்போது சிறிய சண்டையில் ஃபிரெஞ்சுக் கடற்படையிடம் தோல்வியுற்றதை அறிந்த, ஆங்கிலேயர் உண்மையிலேயே அஞ்சி நடுங்கினர். அடுத்து, ஆங்கில நாடு ஃபிரெஞ்சுக்காரர்களின் பிடியில் சிக்கி விடுமோ என்ற ஏக்கம் அவர்களை வாட்டியது. ஃபிரெஞ்சுக் கடற்படையின் வெற்றியினைக் கேட்ட ஃபிரெஞ்சு மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தனர். தங்களது வீரர்களைப் பாராட்டி ஊக்குவித்தனர்.

போப் ஏழாம் பயஸ் போனபார்ட்டின் முடிசூட்டுவிழாவில் கலந்துகொண்டு சிறப்பிக்கவிருக்கின்றார் என்ற செய்தியும், அவரே ஃபிரான்சின் மணிமுடியை நெப்போலியனுக்குச் சூடவிருக்கின்றார் என்ற செய்தியும் ஐரோப்பாவெங்கும் பரவியது. போப்பின்மீது நம்பிக்கையும் நல்லெண்ணமும் கொண்டவர் அதனைப் போற்றிப் புகழ்ந்து வரவேற்றனர். ஆனால், ஃபிரான்சில் போப் வருகைக்குப் பலமான எதிர்ப்புக் கிளம்பியது. ஃபிரெஞ்சுச் சட்ட மன்றமும் போப், போனபார்ட்டுக்கு முடிசூட்டுவதை வன்மையாகக் கண்டித்தது. இருப்பினும், நெப்போலியன் தமது இயல்பான ஆற்றலால் எதிர்ப்பாளர்களிடம் இதமாகப் பேசி அவர்களையெல்லாம் தம் வசப்படுத்தினார். ஆனால், போப் ஃபிரான்சில் தமக்கெதிராகக் கிளம்பிய எதிர்ப்பினைக் கண்டு அஞ்சினார். ஆகவே, போனபார்ட்டின் அழைப்பை ஏற்றுப் பாரிஸ் வரத்தயங்கினார். ஆனால், போனபார்ட்மீது அவர் கொண்டுள்ள பற்றின் காரணமாக எதிர்ப்புகளைக் கண்டு கலங்காது முடிசூட்டுவிழாவில் கலந்துகொள்ள முடிவுசெய்தார்.

நவம்பர் திங்கள் இறுதியில் முடிசூட்டுவிழாவிற்கான ஏற்பாடுகள் விரைவுபடுத்தப்பட்டன. போப்பும் உரோமாபுரியை

விட்டுக் கிளம்பி பாரிஸ் நோக்கி வந்துகொண்டிருந்தார். வழி யெல்லாம் கத்தோலிக்கர்கள் திரண்டிருந்து அவருக்கு வரவேற் பளித்தனர். நெப்போலியனும் ஃபவுண்டன்பிளே (Fountainebleau) என்னும் இடத்திற்குச் சென்று போப்பைக் கட்டித்தழுவி வர வேற்றுப் பாரிசுக்கு அழைத்துவந்தார். பாரிசில் அவருக்குச் சிறப் பான வரவேற்பளிக்கப்பட்டது. டூலெரியிஸ் அரண்மனையில் போப் தங்குவதற்கான வசதிகளனைத்தும் செய்யப்பட்டிருந்தன. வாட்டி கன் அரண்மனையிலுள்ள வசதிகளனைத்தும் டூயிலெரிஸ் அரண்மனை யில் போப்புக்காகச் செய்யப்பட்டிருந்தன. எனவே, போப், தாம் வாட்டிகனிலிருப்பதாகவே எண்ணி மகிழ்ந்தார். அவரைக் காண் பதற்காக நாள்தோறும் டூயிலெரிஸ் அரண்மனையில் மக்கள் திரண்டனர். அவர்களது ஆவலை நிறைவேற்றும் பொருட்டு நாள் தோறும் போப் மாடியில் நின்று மக்களுக்குக் காட்சி தந்தார். அவருடன் போனபார்ட்டும் நின்று மக்களின் உள்ளங்களை யெல்லாம் குளிரவைத்தார். மக்கள் தலைவரையும், மாண்புமிக்க சமயத் தலைவரையும் மக்கள் திரள்திரளாக வந்து கண்டு, மண்டி யிட்டுத் தங்கள் வணக்கத்தைச் செலுத்தினர். எந்த மக்கள் அலை யலையாகத் திரண்டு பத்து ஆண்டுகளுக்குமுன் சமயவாதிகளை நாட்டைவிட்டே அடித்துத் துரத்தினர்களோ அதே மக்கள் இன்று அணிவகுத்து, முழந்தாளிட்டுச் சமய அதிபரை வரவேற்றனர். எந்த நாட்டில் தமக்கு எதிர்ப்பு அதிகமிருக்கும் என்று அஞ்சி போப் அங்கு வருகைதரத் தயங்கினரோ அந்த நாடு இப்போது அவருக் களித்த அமோக வரவேற்பினைக் கண்டு அவர் பூரித்தார். ஃபிரான்சில் கத்தோலிக்க சமயம் இன்னும் உயிருடனிருப்பதை அறிந்து அவர் உற்சாகங்கொண்டார். மக்கள் மீண்டும் சமய வழி பாட்டில் தங்களை ஈடுபடுத்திக் கொள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்துவந்த நெப்போலியனை போப் உளமாரப் பாராட்டினர்.

போனபார்ட்—ஜோசபைன் திருமணம் எவ்விதச் சமயச் சடங்கு மின்றி எளிய முறையில் நடந்தேறியதாக முன்பு கண்டோம். கத்தோலிக்க சமயத்தின் அங்கீகாரம் எதுவுமின்றி அவர்கள் திருமணம் சட்டப்படி பதிவு செய்யப்பட்டது. அன்றையப் புரட்சிச் சூழலில் சமயவாதிகளும் அவர்தம் அடிவருடிகளும் வேட்டையாடப்பட்ட காரணத்தால் அவர்கள் இருவரும் எளிய முறையில் பதிவுத்திருமணம் செய்துகொண்டனர். இப்போது பேரரசராக உயர்வுபெற்ற போனபார்ட்டின் திருமணம் சமய ஏற்பட்டால் ஒப்புக்கொள்ளப்பட்டதாக ஆக்கப்படல் வேண்டும் என்று ஜோசபைன் விரும்பினள். அவள் போப்பை அணுகித் தங்களது திருமணத்திற்குச் சமய அங்கீகாரமளித்துத் தங்களை வாழ்த்தவேண்டும் என்று வேண்டினள். போப்பும் அவளது

விருப்பத்தை நிறைவேற்ற முன்வந்தார். தமது திருமணம் சமயச் சடங்குகளின்மூலம் போப்பால் புனிதமாக்கப்படுவதை போன பார்ட் எதிர்க்கவில்லை. தமது உயிரின் உயிராம் ஜோசபைனின் ஆவலை நிறைவேற்ற அவரும் முன்வந்தார். முடிசூட்டு விழாவுக்கு முந்தைய நாளிரவு போனபார்ட்—ஜோசபைன் திருமணம் டுயிலெரிஸ் அரண்மனையில் மிகவும் இரகசியமாகச் சமயச் சடங்குகளுடன் போப்பால் சிறப்பாக நடாத்திவைக்கப்பட்டது. தனது திருமணம் சமய அங்கீகாரம் பெற்றதைக் கண்ட ஜோசபைன் உள்ளம் பூரித்தாள். உணர்ச்சிப் பெருக்கால் அவளது கண்கள் குளமாயின. அவள் பெற்ற மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை.

1804ஆம் ஆண்டு, டிசம்பர் திங்கள் 2ஆம் நாள் ஃபிரான்சு வரலாற்று ஏடுகளில் பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பட்ட நல்ல நாள். அன்றுதான் போனபார்ட்டின் முடிசூட்டு விழா சிறப்பாக நடந்தேறியது. சாதாரணக் குடிமகன்—அரச குலத்திற்கு அப்பாற்பட்டவன்—சாமான்யன்—ஆண்டவன் அருள் பெறுதவன் என்றெல்லாம் புறக்கணிக்கப்பட்ட போனபார்ட் புவியாள அரியணையேறிய அதிசய நாள் அது. அன்று, பாரிஸ் நகர் மட்டுமல்ல, ஃபிரெஞ்சுப் பெருநாடே விழாக்கோலம் பூண்டு விளங்கியது. முடிசூட்டு விழா நடைபெறவிருந்த நோட்ரிடேம் ஆலயம் (The Church of Notre Dame) அலங்காரத்தின் சின்னமாகக் காட்சியளித்தது. விதவிதமான வண்ண விளக்குகளும், பட்டாடைகளும், பளபளக்கும் தோரணங்களும், வளைவுகளும் அதன் அணிக்கு மேலும் அணி செய்தன. ஒளிமயமான அந்த ஆலயத்தின் மேற்கு முனையில், இருபத்தி நான்கு ஏழில்மிக்க படிகளுடன் கூடிய ஒய்யார அரியணை உருவாக்கப்பட்டிருந்தது. அதில் பேரரசர் போனபார்ட்டும் பேரரசியார் ஜோசபைனும் அமர்வதற்கான அலங்கார இருக்கைகள் கண்டோர் கண்களைக் கவரும் வகையில் அமைந்திருந்தன. பேரரசர், முழுதும் கண்ணாடிகளால் சூழப்பெற்ற அலங்கார வண்டியில் டுயிலெரிஸ் அரண்மனைவிட்டுக் கிளம்பினர். அவரது உடை அன்றைய ஈடு இணையற்ற கலைஞர்ளால் உருவாக்கப்பட்டு உயர்ந்து விளங்கியது. அவருக்குப் பின்னால் மக்கள் அலைகடலெனத் திரண்டு சென்றனர். அவர்களது கண்களெல்லாம் தங்களின் தலைவன் பேரரசராக முடிசூடுவதைக் கண்டுகளிக்கக் காத்திருந்தன. அவர்களது முகங்களெல்லாம் மகிழ்ச்சிப் பெருக்கால் மலர்ந்து காணப்பட்டன. அனைவரது கண்களும் அவர்மீது பாய பேரரசர் நெப்போலியன் அலங்கார ஆலயத்தில் அடியெடுத்து வைத்தார். அப்போது அங்கிருந்த ஐநூறு தேர்ச்சிபெற்ற பாடகர்கள் இன்னிசை வழங்கினர். அடுத்து நெப்போலியன் மக்களின் மகிழ்ச்சி வெள்ளத்தில் நீந்தி அரியணையில்

அமர்ந்தார். அது போழ்து அருகில் அமர்ந்திருந்த போப், பேரரசர் வாளினையும், செங்கோலினையும், மணிமுடியினையும் வாழ்த்தினார். பின், மணிமுடியைக் கரத்திலே தாங்கி நெப்போலியனுக்குச் சூட்ட முற்பட்டார். அதற்குள் நெப்போலியன் தாமே அம்மணிமுடியை எடுத்துச் சூடிக் கொண்டார். தம்மைவிட போப் உயர்ந்தவரல்ல என்பதை வெளிப்படுத்தவே இவ்வாறு செய்தார். அடுத்து நெப்போலியன் தமது துணைவி ஜோசபைனுக்கான மணிமுடியைத் தம் கரத்தாலே தாங்கினார். அப்போது ஜோசபைன்



படம் 2. பேரரசி ஜோசபைன்

போனபார்ட்டின் காலடியில் முழந்தாளிட்டு வணங்கி நின்றாள். அவளது தலையில் போனபார்ட் மணிமுடியைச் சூட்டினார். அவளது கண்கள் களிப்பால் குளமாகின. சூட்டிய முடியுடன், எழில்மிகு உடையுடன், பேரரசராகச் சிங்கம் போல் நின்ற தனது கணவனையே உற்று நோக்கினாள் ஜோசபைன். போனபார்ட்டும் தமது அன்புப் பார்வையினை அவளது கண்களில் செலுத்தினார். அந்த அன்புப் பிணைப்பிலிருந்து விடுபட அவளுக்கு இயலவில்லை; இருப்பினும், தலைகுனிந்து தனது கணவனின் வாழ்த்துகளைப்

பெற்று உள்ளம் பூரித்துநின்ருள். அங்கு கூடியிருந்த மக்கள், 'மாமன்னர் நெப்போலியன் வாழ்க' என்று முழங்கினர். அவ் வாழ்த்தொலி அந்த ஆலயத்தின் அலங்கார வளைவுகளிலெல்லாம் பட்டுத் தெறித்தது. பீரங்கிகள் முழங்கின. பீரங்கி முழக்கம் பாரிஸ் நகர வீதிகளிலெல்லாம் எதிரொலித்தது. அம் முழக்கம், பேரரசராகப் போனபார்ட் முடிசூடிக்கொண்டார் என்பதை நகர மக்களுக்கு அறிவிப்பதாக அமைந்தது. அன்றுமாலை அலங்கார வீதிகளில் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டு பேரரசரும் பேரரசி யாரும் டுயிலெரிஸ் அரண்மனை வந்தடைந்தனர்.

ஃபிரெஞ்சுக் குடியரசு மீண்டும் முடியரசாக மாறியது. முதல் கான்சல் போனபார்ட் ஃபிரான்சின் பேரரசராஞர். லூயி மன் னர்கள் காலத்திய முடியரசுக்கும், இன்றைய நெப்போலியனது முடியரசுக்கும் இடையே நிறைந்த வேறுபாடுகள் காணப்பட்டன. முன்னைய முடியரசு, மக்களை மாய்த்த அரசு; இன்றைய முடியரசு மக்களை வாழவைத்த அரசு. லூயி மன்னர்களாட்சி மேட்டுக்குடி யினர் நலம் கருதிய ஆட்சி; இன்றைய ஃபிரான்சின் முடியாட்சி மக்கள் நலன் கருதி, மக்களால் உருவாக்கப்பட்ட மக்கள் மன் னன் ஆட்சி. அன்றைய லூயி மன்னர்கள் ஆண்டவனின் வாரிசு களாகத் தங்களை எண்ணி மக்கள் விரோதிகளாகக் காட்சிதந் தனர். இன்றைய நெப்போலியனது ஆட்சி மக்கள்மீது நம்பிக்கை கொண்டு அவர்களை மதித்து நடந்த நல்லாட்சி. லூயி மன்னர் களாட்சியில் சலுகைகள் பெற்ருேர் தனி அமைப்பாக விளங் கினர். போனபார்ட்டின் ஆட்சியில் சலுகைகள் ஒழிந்து தகுதி கள் தனிச் சிறப்புப் பெற்றன; தகுதியுடையவர்களே, நிர்வாகப் பணிகளில் அமர்த்தப்பட்டனர். அன்றைய ஆட்சியில் நிலமான்ய முறை மக்களை அடிமைகளாக்கிக் காட்டாட்சி நடத்தியது. இன் றைய ஆட்சியில், அவர்கள் உரிமைபெற்ற குடிகளாக்கப்பட்டனர். அன்று சமயம் ஆட்சியாளர்களின் கைப்பாவையாகித் தவித்தது; இன்று சமய வழிபாடு மக்களின் மத்தியில் பீடுநடை போட்டது; வழிபாட்டு உரிமைகள் வழங்கப்பட்டன; சமயம் அரசாங்கத்தின் ஓர் அங்கமாக்கப்பட்டது; சமயத்துறை ஊழல்கள் ஒழிக்கப்பட் டன. லூயி மன்னர்களாட்சி ஒவ்வொரு துறையிலும் ஊழல் நிறைந்து காணப்பட்டது; இன்றைய போனபார்ட்டின் ஆட்சி ஊழலற்று, நீதியும், நேர்மையும், ஒழுங்கும், கட்டுப்பாடும், அறிவும், ஆற்றலும் நிறைந்து காணப்பட்டது. ஆகவே, மாவீரர் நெப்போலியனை மக்கள் தங்களின் மன்னராகவே கருதி அவருக்கு ஆக்கமும் ஊக்கமும் ஊட்டிவந்தனர். ஃபிரெஞ்சுக் குடியரசுக் கருத்துகள் அண்டை ஐரோப்பிய நாடுகளிலெல்லாம் பரவ, அங் குள்ள குடியரசுகளுக்கு முடிவுகட்டும் என்று முடிமன்னர்கள்

அஞ்சினர். ஆகவே, அவர்கள் ஃபிரான்சில் குடியரசைத் தொலைத்து முடியரசு காணத்துடித்தனர். அவர்களது நெடு நாளைய ஆவலை நிறைவேற்றும்வகையில் ஃபிரான்சில் மீண்டும் முடியரசு மலர்ந்தது. பல ஐரோப்பிய நாடுகள் அதனை வர வேற்று மகிழ்ந்தன. ஆனால், இங்கிலாந்து மட்டும் இறுமாப்பு டனிருந்தது. ஃபிரான்சு குடியரசானாலும், முடியரசானாலும் தங்களின் பகைநாடு என்று ஆங்கிலேயர் கருதினர். போர் போன் குலத்தவரைத் தவிர வேறுயாரும் ஃபிரான்சின் மணிமகு டத்தைப் பெறுதல் கூடாது என்பது அவர்களது எண்ணம். சாமான்யர்களின் தலைவனான பிளபியன் (Plebian) என்று ஏளன மாகக் கருதப்பட்டவனான போனபார்ட் ஃபிரெஞ்சுப் பேரரசரா வதை அவர்கள் ஆதரிக்கவில்லை. அவருடன் மோதி அவரை வீழ்த்தி அவரமர்ந்த அரியணையில் போர்போன் குலக்கொழுந்தினை அமர்த்தி அழகுபார்க்க விரும்பினர் ஆங்கிலேயர். மேலும், நெப் போலியனின் தலைமையில் வலிவுற்ற ஃபிரான்சு ஐரோப்பாவில் சக்திச் சமநிலையைக் குலைத்துவிடும் என்றும் தமது வாணிபக் குடியேற்ற வளர்ச்சிக்குத் தடையாக வரும் என்றும் ஆங்கிலேயர் அஞ்சினர். ஆகவே, ஃபிரான்சில் ஆட்சி மாற்றத்தை இங்கிலாந்து அங்கீகரிக்க முன்வராததில் வியப்பொன்று மில்லை. இருப்பினும் பேரரசர் நெப்போலியன் ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்ட வேண்டும் என்று விரும்பிச் செயல்பட்டார். இங்கிலாந்துடன் நட்புறவு கொண்டு போர்ச்சேதங்களைத் தவிர்க்கத் தலைப்பட்டார். பேரரசரானவுடனேயே ஆங்கில மன்னருக்கு மடல் தீட்டி அமை திக்கு ஒத்துழைக்கும்படி வேண்டினார். ஆனால், அமைதியில் நாட்ட மற்ற ஆங்கிலேயர் போருக்கு ஆயத்தமாயினர். போனபார்ட்டின் அமைதிப்பணிக்கு அதன் மூலம் ஊறு விளைவித்தனர்.

இத்தாலியக் குடியரசு ஃபிரான்சின் முடியரசை இனிது வரவேற் றது. போனபார்ட் ஃபிரான்சின் பேரரசரான நிகழ்ச்சியை விழா வெடுத்து மகிழ்ந்தது. ஃபிரான்சைப்போல இத்தாலியும் முடியரசு கண்டு முன்னேற வேண்டும் என்று இத்தாலியக் குடியரசினர் விரும்பினர். பண்டைப்புகழ் மிக்க இத்தாலியின் அரியணையில் அந்த நாட்டின் குடிமகன் ஒருவன் அமர்தல் வேண்டும் என்று அவர்கள் ஆசைப்பட்டனர். அதாவது, இத்தாலிய வெற்றி வீரன், இத்தாலியன் என்ற பெருமைபெற்ற தீரன் இன்றைய ஃபிரெஞ்சுப் பேரரசன் போனபார்ட்டே இத்தாலியக் குடியரசின் மன்னராகவேண்டும் என்று அவர்கள் பெரிதும் விரும்பினர். இது குறித்து போனபார்ட்டிடம் கலந்து பேச ஒரு தூதுக்குழு பாரிஸ் விரைந்தது. பேரரசர் இந்தாலியத் தூதுக்குழுவினரை இன்முகங் காட்டி வரவேற்றார். அவர்களது விருப்பத்தினை நிறைவேற்றும்

வகையில் இத்தாலிய மன்னனுக முடிசூட்டிக் கொள்ள இசைந் தார். விரைவில் இத்தாலி சென்று வரலாற்றுப் புகழ்மிக்க சார்ல மேன் (Charlamagne) பேரரசரின் இரும்பு மகுடத்தையணிந்து இத்தாலிய மக்களின் இதயங் குளிரச் செய்வதாக வாக்களித்தார். 1805ஆம்ஆண்டு மே திங்கள் 26ஆம் நாள் மிலான் நகரிலுள்ள ஆலயத்தில் பேரரசர் போனபார்ட்டின் முடிசூட்டு விழாச் சிறப் பாக நடந்தேறியது. ஆயிரமாண்டுகளுக்கு மேலாகப் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்த சார்லமேன் பேரரசரின் இரும்புக் கிரீடத் தைச்சூடி போனபார்ட் இத்தாலிய மன்னராகக் காட்சியளித்தார். மிலான் நகரில் ஒருமாத காலம் தங்கியிருந்து இத்தாலிய மக்களின் முன்னேற்றத்திற்கான அரும்பணிகளை ஆற்றிவிட்டுப் பாரிஸ் திரும்பினுர்.

நெப்போலியன் ஃபிரெஞ்சுப் பேரரசராக முடிசூடிக் கொண்ட தைப் போர்போன் மரபில் வந்த பதினெட்டாம் லூயி வன்மை யாகக் கண்டித்தார். 'ஃபிரான்சில் ஆட்சி பீடத்தில் அமர அவருக்கு என்ன உரிமையிருக்கிறது?' என்று அவர் கேட்டார். அவரது கண்டனக்குரலை, ஃபிரான்சு முழுவதும் அப்படியே வெளி யிட்டார் நெப்போலியன்; 'ஃபிரான்சின் விருப்பமே எனது உரிமை' என்று பதில் கூறினுர். ஃபிரெஞ்சுமக்கள் லூயியின் கண்டனத் தைப் பொருட்படுத்தவில்லை, ஆனுல், நெப்போலியனுக்குப்பின் அவரது குடும்பத்தில் தோன்றிய வாரிசு ஒருவர் ஃபிரான்சின் பேரரசராவதா என்ற சிக்கல் எழுந்தது. இந்த சிக்கலான பிரச்சனை மக்கள் முன்வைக்கப்பட்டது. நெப்போலியனது வாரிசே அவருக்குப்பின் ஃபிரெஞ்சுப் பேரரசராக வேண்டும் என்பதற்கு ஆதரவாக முப்பது இலட்சத்து ஐம்பதாயிரம் வாக்குகளும், எதிராக இரண்டாயிரம் வாக்குகளும் கிடைத்தன. போன பார்ட்டின் மன்னர்மரபு ஃபிரான்சில் நிலை நாட்டப்பட்டது. போனபார்ட்டுக்குப்பின் அவரது வாரிசுகள் வாழையடி வாழை யாக ஃபிரான்சை ஆள்வதற்கான அங்கீகாரம் கிடைத்துவிட்டது. போர்போன் மன்னர்கள் பரம்பரை பரம்பரையாக அமர்ந்துவந்த ஃபிரெஞ்சு அரியணையில் போனபார்ட்டின் பரம்பரையினர் அமர்ந்து ஆட்சிநடத்துவதற்கான அதிகாரத்தை மக்கள் மனமு வந்து அளித்தனர். ஃபிரெஞ்சுமக்கள் மன்னர்களை உருவாக்குகின்ற மகத்தான சக்திபடைத்தவர்களாக விளங்கினர்.

இதற்கிடையில், பேரரசர் நெப்போலியன் இங்கிலாந்தின்மீது படையெடுப்பதற்கான ஏற்பாடுகளில் தீவிரக் கவனம் செலுத்தி ஞர். ஐரோப்பாவில் சூழ்ந்துள்ள போர்மேகம் நாள்தோறும் நெருங்கிக் கருத்துக்கொண்டேவந்தது. நெப்போலியனின் ஆற்ற லும் புகழும் நாள்தோறும் ஓங்கி வளர்ந்த வண்ணமிருந்தன.

அவரால் ஆங்கிலநாட்டிற்கு ஏற்பட்டுள்ள ஆபத்தைக் கண்டு ஆங்கிலேயர் அரண்டனர். இங்கிலாந்து அமைச்சரவை அவசர மாகக் கூடி ஆலோசனை நடத்தியது. ஃபிரான்சுக்கு எதிராக மீண்டும் வலிமைவாய்ந்த ஐரோப்பிய கூட்டிணைவு ஒன்றினை உரு வாக்கத் தீர்மானிக்கப்பட்டது. இங்கிலாந்து விரித்த கூட்டிணைவு வலையில் ஆஸ்திரியா, இரஷ்யா, ஸ்வீடன் ஆகிய நாடுகள் விழுந் தன. விரைவில் அந்த நான்கு நாடுகளிடையே ஒரு கூட்டிணைவு ஏற்பட்டது. அந் நாடுகளின் போர்ச் செலவுகளில் பெரும் பகுதியை பிரிட்டன் ஏற்றுக்கொள்ள முன்வந்தது. வடக்கு ஐரோப்பிய நாடுகளான ஸ்வீடனும், இரஷ்யாவும், ஃபிரான்சின் மீது தாக்குதல் தொடங்கினால், போனபார்ட்டின் படையெடுப்பின் ஆபத்துக் கட்டத்திலிருந்து இங்கிலாந்து காப்பாற்றப்படும் என்று ஆங்கிலேயர்கள் நம்பினர். இங்கிலாந்தின்மீது படையெடுக்கத் தயாராகவுள்ள ஃபிரெஞ்சுப் படையின் கவனத்தை வேறு வழியில் திருப்பும் பொருட்டு வடஐரோப்பிய நாடுகளை ஃபிரான்சின்மீது படையெடுக்கும்படி ஆங்கிலேயர் தூண்டினர். அதற்கான முழுச் செலவையும் ஏற்றுக்கொள்ள இங்கிலாந்து முன்வந்தது. கூட் டிணைவு நாடுகள் விரைவில் ஐநூறாயிரம் வீரர்களடங்கிய பெரும் படை ஒன்றினைத் திரட்டின. அப் படையினைக் கொண்டு நான்கு நாடுகளும் ஒரே நேரத்தில் ஃபிரான்சின் நான்கு பக்கங்களிலும் தாக்கத் திட்டமிட்டன. கூட்டு நாடுகள் திரட்டுகின்ற ஒவ்வொரு நூறாயிரம் வீரர்களுக்கு ஆண்டொன்றுக்கு முப்பது மில்லியன் ஃபிராங்குகள் செலவழிக்க பிரிட்டன் ஒப்புக்கொண்டது. ஐநூறு கப்பல்களைக்கொண்ட இங்கிலாந்துக் கடற்படை ஃபிரெஞ்சுக் கரை களில் தாக்குதல் நடாத்தி வந்தது. இந்தியா, எகிப்து, நடுநிலக் கடல் போன்ற பகுதிகளில் ஆதிக்கத்தை நிலைநாட்டிய இங்கி லாந்து ஒவ்வொரு நிலையிலும் வலிமைமிக்கதாக விளங்கியது. உலகத்தின் பெரும் சர்வாதிகார நாடான இரஷ்யா, ஐரோப்பா வில் பாதியும், ஆசியாவில் பாதியும் பெற்று வலிமைமிக்க நாடாக விளங்கியது. ஆஸ்திரியாவும் இத்தாலியில் ஆதிக்கம் செலுத்திய தோடு பிரஷ்யாவுடனும், இரஷ்யாவுடனும் சேர்ந்து போலந்து நாட்டைக் கூறுபோட்டது. ஃபிரான்சும் ஜெனோவா, பிட்மாண்ட் (Peidmont), எல்லாத்தீவு ஆகியவைகளைப் பெற்று விளங்கியது. இலம்பார்டியும் அதன் வசமாயிற்று.

இந் நிலையில், எண்பதாயிரம் வீரர்களடங்கிய ஆஸ்திரியப் படை தளபதி மேக் (Mack) தலைமையில் ஃபிரான்சு எல்லைநோக்கி நகர்ந்தது. இரஷ்யப் பேரரசர் அலெக்சாண்டர் இலட்சத்து பதி னாயிரம் வீரர்களுடன் கிளம்பினார் ஃபிரான்சைத் தாக்க. போலந்துச் சமவெளிகளின் வழியாக வந்து ஆஸ்திரியப் படை

யுடன் ஒன்றுசேர்ந்து ஃபிரான்சை வீழ்த்தவேண்டும் என்பது அவரது திட்டம். ஆஸ்திரியப் படையும், இரஷ்யப் படையும் ஃபிரான்சை நோக்கி வருதல் பேரரசர் நெப்போலியனுக்குத் தெரியாது என்று கூட்டிணைவு நாடுகள் எண்ணின. ஆனால், அந் நாட்டு படைகளின் ஒவ்வொரு அசைவும் போனபார்ட்டின் கூரிய கண்களில் பட்டது. ஆஸ்திரியப் படை பவேரியாவை வீழ்த்தியது. பவேரிய மன்னர் போனபார்ட்டின் ஆதரவாளர்; அவர் ஆஸ்திரியப் படைகளுக்கு ஈடுகொடுக்க இயலாது நாட்டைவிட்டு ஓடிவிட்டார். மூனிச் (Munich), அல்ம் (Ulm) ஆகிய நகரங்களும் ஆஸ்திரியப்படை வசமாயின. அடுத்து, அப் பெரும்படை இரைன் நதிப்பள்ளத் தாக்கை வந்தடைந்தது. இரஷ்யப் படையும் ஆஸ்திரியப் படையுடன் சேரும் பொருட்டு விரைந்து வந்துகொண்டிருந்தது. போலோனில் தங்கியிருந்த போனபார்ட் ஆஸ்திரிய, இரஷ்யப் படைகளின் நடவடிக்கைகளை அறிந்தார். உடனே, நூற்று எண்பத்தாறுயிரம் துடிப்புள்ள வீரர்களுடன் போனபார்ட் இரைன் நதிப் பகுதிநோக்கி விரைந்தார். அப் பெரும்படை விரைந்துசென்று டான்யூப், இரைன் ஆகிய நதிகளைக் கடந்தது. அடுத்து, ஆஸ்திரியப் படைகளைச் சுற்றி வளைத்துத் தாக்கியது. தப்பியோட முடியாதபடி தவித்த ஆஸ்திரியப் படையினர் போனபார்ட்டிடம் சரணடைந்தனர். அடுத்து, போனபார்ட், அல்ம் (Ulm) கோட்டையை முற்றுகையிட்டார். அங்கிருந்த முப்பத்தாறுயிரம் ஆஸ்திரிய வீரர்களும் உடனடியாகச் சரணடைந்தனர். 1805ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் இருபதாம் நாள் அல்ம் கோட்டை நெப்போலியன் வசமாயிற்று.

அல்ம் வெற்றிக்குப்பின் நெப்போலியன் தமது கவனத்தை இரஷ்யப்படைகளின்மீது செலுத்தினார். நூற்றுப் பதினாறுயிரம் வீரர்களுடன் இரஷ்ய மாமன்னர் அலெக்சாண்டர் நெப்போலியனைக் களத்தில் சந்திக்க விரைந்துகொண்டிருந்தார். ஆஸ்திரியாவின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும் பேரரசரின் படைகள் இரஷ்யப் படைகளுடன் இணைந்து ஃபிரெஞ்சுப் படைகளை வீழ்த்த விரைந்து கொண்டிருந்தன. அன்றியும் அலெக்சாண்டர் பெர்லின் நகர் சென்று பிரஷ்ய மன்னரின் பெரும்படையின் ஆதரவினையும் பெற முயன்றார். அலெக்சாண்டரும் ஃபிரெடெரிக் வில்லியமும் நடு இரவில் பிரஷ்யப் பெருமன்னன் ஃபிரெடெரிக் (Frederick the Great) கல்லறையில் சந்தித்தனர். அங்கு இருவரும் நெப்போலியனுக்கெதிராக உடன்பாடு செய்துகொண்டனர்; பெருமன்னன் ஃபிரெடெரிக்கின் கல்லறையின்மீது ஆணையிட்டு அவர்கள் இணைந்து நெப்போலியனை வீழ்த்த உறுதியெடுத்துக்கொண்டனர். ஃபிரெடெரிக் வில்லியத்தின் பெரும்படையிலுள்ள இரண்டு

இலட்சம் வீரர்கள் இரஷ்யப் பெரும்படையுடன் இணைந்து பேரரசர் நெப்போலியனுக்கெதிராகப் போரிட முடிவு செய்யப் பட்டது. இங்கிலாந்தும் அனோவரிலிருந்து முப்பதினுயிரம் வீரர் களை இரஷ்ய வீரர்களுடன் சேர்ந்து போரிட அனுப்பி வைத்தது. இரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா, இங்கிலாந்து ஆகிய நாடுகளின் படைகள் இணைந்த மாபெரும் படையுடன் நெப்போலியன் மோது வதற்கான இக்கட்டான நிலை பிறந்தது. நெப்போலியனது வீரர்கள் உணர்ச்சி மிக்கவர்கள்; நாட்டுப் பற்று உள்ளவர்கள்; தங்களது தளபதியும் பேரரசருமான நெப்போலியனிடத்தில் ஆழ்ந்த நம்பிக்கையும், நல்லெண்ணமும் கொண்டவர்கள். 'வெட்டிவா என்றால் கட்டி வரும்' ஆற்றல் மறவர்கள். அத்தகைய எழுச்சிமிக்க படையுடன் போனபார்ட் மூன்று தினங்களில் பவேரியத் தலைநகரான மூனிச் வந்தடைந்தார். அப் பெருநகரம் உற்சாகத்துடன், பேரரசரை வரவேற்றது. மூனிச்சை விடுவித்து அங்கிருந்த ஆஸ்திரியர்களை விரட்டினர். பவேரிய மன்னர் மீண்டும் அரியணையில் அமர்ந்தார் நெப்போலியனின் ஆதரவுடன். பின்பு போனபார்ட் வியென்னு நோக்கிச் செல்லும்படி பணித்தார் தம் படைகளை. ஃபிரெஞ்சுப் பெரும்படை ஆஸ்திரியத்தலைநகர் நோக்கி வந்துகொண்டிருந்த செய்தியினைக் கேட்ட ஆஸ்திரியர்கள் அஞ்சி நடுங்கினர். பேரரசர் ஃபிரான்சிஸ், தலைநகரத்தைவிட்டு ஓடி விட்டார். வியென்னு பெருநகரம் விளக்க இயலாத குழப்பத்தி லாழ்ந்தது.

1805ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் பதின்மூன்றும் நாள் காலை ஃபிரெஞ்சுப் பெரும்படை வியென்னு வந்தடைந்தது. நகரமக்களின் சார்பில் ஒரு குழு நகர் எல்லையில் பேரரசர் போனபார்ட்டினைச் சந்தித்துப் பொதுமக்களைக் காப்பாற்றும்படி வேண்டியது. மக்களின் மாமன்னரான நெப்போலியனும் மனமுவந்து அவர் களுக்குப் பாதுகாப்பளிக்க முன்வந்தார். அவர்களது உயிருக்கோ, பொருளுக்கோ ஊறு நேராவண்ணம் தக்க பாதுகாப்பளிப்பதாக உறுதி கூறினர். பொதுமக்கள் குழுவும் போனபார்ட்டைத் 'தங்களை வாழ்விக்க வந்த தலைவர்' என்று பாராட்டிச் சென்றதும் ஃபிரெஞ்சுப்படை வியென்னு நகரமக்களுக்கு எவ்வித தொல்லையும் கொடுக்காது அரசாங்கப் பொருட்களைமட்டும் கவர்ந்தது. நூறுயிரம் துப்பாக்கிகள், இரண்டாயிரம் பீரங்கிகள் உட்பட பல்வேறு படைக்கருவிகளும் பொருள்களும் ஃபிரெஞ்சுப் படை வசமாயின. ஆஸ்திரியத் தலைநகரின் அளவற்ற கருவூலங்கள் சூறையாடப்பட்டு அங்கிருந்த பொருளும், பணமும் போனபார்ட் வசமாயின. போலோனைவிட்டுக் கிளம்பி இரண்டு திங்களுக் ள்ளகாக எதிரிகளை எல்லாம் வேட்டையாடி வியென்னு நகரையும்

வீழ்த்தினர் நெப்போலியன். அவருக்கு முன்னல் பகைவர்கள் ஆடிக்காற்றில் பறந்த பஞ்சு போலாயினர்.

வியென்ன வீழ்ந்த செய்தி கேட்டு அதனை விடுவிக்கப் பெரு முயற்சி மேற்கொண்டார் இரஷ்யப் பேரரசர் அலெக்சாண்டர். அவரும் ஆஸ்திரியப் பெருமன்னரும் தங்களுடைய பெரும் படைகளுடன் நெப்போலியனைச் சந்திக்க விரைந்தனர். போனபார்ட்டும் அவர்களது போர் நடவடிக்கைகளை அறிந்து அவர்களைத் தக்க இடத்தில் சந்திக்கும் பொருட்டுத் தம் படைகளுடன் விரைந்தார். கடுங்குளிரையும் பொருட்படுத்தாது ஃபிரெஞ்சுப் படை கடும்வேகத்தில் பகைவர் முகாம் நோக்கிச் சென்றது. 1805ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் முதல் நாள் இரண்டு படைகளும் ஆஸ்டர் லிட்ஸ் (Austerlitz) என்ற இடத்தினை வந்தடைந்தன. பாரிசிலிருந்து ஆயிரத்து ஐநூறு கல் தொலைவில் உள்ளது ஆஸ்டர்லிட்ஸ் என்ற வரலாற்றுப் புகழ்மிக்க களம். அங்கு அலெக்சாண்டரும், ஆஸ்திரியப் பேரரசர் ஃபிரான்சிசும் நூருயிரம் வீரர்களுடன் அணிவகுத்துநின்றனர். அவர்களுக்கு உதவியாக ஆஸ்திரியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் படைகள் வந்தவண்ணமிருந்தன. ஆகவே, ஆஸ்டர்லிட்ஸ் மாபெரும் களமாகக் காட்சியளித்தது. ஃபிரெஞ்சுப் பெரும்படையில் இப்போது எழுபதினுயிரம் வீரர்களே இருந்தனர். அவர்களைக் கொண்டு இரஷ்ய—ஆஸ்திரியப் படைகளை வீழ்த்துவதற்கான முக்கிய இராணுவ இலக்குகளைத் தேர்ந்தெடுத்து போனபார்ட் தமது படைகளை அணிவகுத்தார். எதிரிகளின் வலுவற்ற நிலைகளை அவரது கூரிய கண்கள் எளிதில் கண்டுபிடித்தன. பகைவர் படையணி வகுப்பில் எந்த இடத்தில் ஊடுருவித் தாக்கினல் அப் பெரும்படை சிதறியோடும் என்பதையெல்லாம் எளிதில் அறிந்தார். தம்முடைய வீரர்களுக்கான அறிவுரைகளை, ஆற்றவேண்டிய பணிகளை, தாக்கவேண்டிய இலக்குகளையெல்லாம் எடுத்துக் கூறினர். எதிரிகளின் வலிவினையும் தமது வலிவினையும் எடைபோட்டுக் காட்டித் தம் வீரர்களை உற்சாகப் படுத்தினர். களத்தினைக் கரும்புக் காடாகக் கருதும் ஃபிரெஞ்சு வீரர்கள் தங்களது தானைத் தலைவனின் கட்டளைகளைத் தாங்கித் தாக்குதலுக்கும் தயாராயினர். அடுத்தநாள் அலெக்சாண்டரின் பெரும்படை பாய்ந்து தாக்குதலைத் தொடக்கிவைத்தது. ஆஸ்டர்லிட்ஸ் முழுதும் ஒரே குழப்பம். பீரங்கிகள் முழங்கின; துப்பாக்கிக் குண்டுகள் குறிதவருது பாய்ந்தன; வாட்கள் தங்கள் பணியை வரையின்றிச் செய்தன; குதிரைகள் குதித்துக் குதித்துப் பாய்ந்து தாக்கின. வெற்றி தோல்வியை விரைவில் நிர்ணயிக்க இயலாதவாறு சண்டை நீடித்தது. இருப்பினும், இறுதியில் ஆஸ்திரிய — இரஷ்யப் படைகள் சிதறி ஓடின. இரண்டு பேரரசர்

களும் தங்கள் படைகளுக்கு ஏற்பட்ட கதியினைக் கண்ணுல் கண்டு இரவோடு இரவாகத் தப்பியோடினர். கொலை வெறியும், கொள்ளை வெறியும் பிடித்த இரஷ்ய வீரர்கள் தோற்றோடிச் செல்லுகின்ற இடங்களிலுள்ள மக்களையெல்லாம் கொடுமைக்குள்ளாக்கினர். அதனையறிந்த நெப்போலியன் அவர்களைத் துரத்தி வேட்டையாடி அம் மக்களைக் காப்பாற்றினுர்.

ஆஸ்டர்லிட்ஸ் போர் ஆஸ்திரிய இரஷ்யப்படைகளுக்குமரண அடி கொடுத்தது. அங்கு நெப்போலியன் பெற்ற வெற்றி மகத்தானது. ஃபிரெஞ்சு வீரர்களின் கட்டுப்பாட்டையும், பயிற்சிப் பாங்கினையும், சிறப்பையும், ஆற்றலையும் அகிலத்தின் மூலைமுடுக்குகளிலெல்லாம் எதிரொலிக்கும்படி செய்தது, ஆஸ்டர்லிட்ஸ் வெற்றி. பேரரசர் நெப்போலியனது வெற்றிப் புகழாரங்களின் பட்டியலில் மேலும் ஒரு ஆரமாயிற்று ஆஸ்டர்லிட்ஸ். பகைவர்கள் பக்கத்தில் பதினைந்தாயிரம் வீரர்களுக்குமேல் கொல்லப்பட்டனர் அல்லது காயப்படுத்தப்பட்டனர்; இருபதாயிரம் வீரர்கள் சிறை பிடிக்கப்பட்டனர். நூற்றெட்டுப் பீரங்கிகளும், நாற்பத்தைந்து பதாகைகளும் (Standards) பலவகையான எண்ணிறந்த படைப் பொருள்களும் போனபார்ட் வசமாயின. நெப்போலியன் இச் சண்டையில் நாற்பத்தைந்தாயிரம் வீரர்களைமட்டுமே பயன் படுத்தினுர். ஆனுல், பகைவர்கள் தொண்ணூருயிரம் வீரர்களை இக் களத்தில் இறக்கினர். இருப்பினும், நாட்டுப்பற்றுடனும், தளபதியிடத்தில் மாருத நம்பிக்கையுடனும் போரிட்ட ஃபிரெஞ்சு வீரர்கள் பெருவாகை சூடினர். தோற்றோடிய ஆஸ்திரியப் பேரரசர் ஃபிரான்சிஸ் ஃபிரெஞ்சுப் பேரரசருடன் உடன்பாடு காண முன்வந்தார். இது குறித்து, பேரரசர் போனபார்ட்டைக் கலந்து பேசும்படி இளவரசர் ஜான் (Prince John) அனுப்பப்பட்டார். இளவரசரும் பேரரசர் நெப்போலியனைச் சந்திக்க அவரது முகாமிற்குச் சென்ருர். அங்கு அவர் கண்ட காட்சி அவரது உள்ளத்தைத் தொட்டது. பேரரசர் நெப்போலியன் காயம்பட்ட தம்து வீரர்களுக்குத் தம் கையாலேயே மருந்துபூசி அவர்களைத் தேற்றிக் கொண்டிருந்தார். பேரரசரின் முகத்தைக் கண்டவுடனேயே காயம்பட்டவர்களின் வலி பஞ்சாய்ப் பறந்தது. அவரது பார்வை அவர்களுக்கு மாமருந்தாக அமைந்தது. இறந்துகிடந்த தம்து வீரர்களின் உடைகளைத் தாமே சரிசெய்து அவர்கள்மீது மூடி அவர்களையெல்லாம் தக்க மரியாதையுடன் அடக்கம் செய்தார். மாமன்னர் ஆற்றிக் கொண்டிருந்த அப் பணிகளையெல்லாம் கண்ட இளவரசர், பேரரசர் போனபார்ட்டின்மீது அளவற்ற பற்றும், பாசமும் கொண்டார். அவரது வருகையை அறிந்த் பேரரசர் அவரை அன்புடனும் உரிய மரியாதையுடனும் வரவேற்

ருர். அமைதி உடன்பாடு காணுவதற்கான தமது ஒப்புதலேயும் அளித்தார். அன்றியும், அது குறித்து அடுத்தநாள் ஆஸ்திரியப் பேரரசரைச் சந்தித்துப் பேசவும் முன்வந்தார். அடுத்தநாள், போனபார்ட்டின் படைமுகாமில் ஆஸ்திரியப் பேரரசர் இனிது வரவேற்கப்பட்டார். இரண்டு பேரரசர்களும் இரண்டுமணி நேரம் கலந்துபேசி நல்லமுடிவுக்கு வந்தனர். இந்த மோதலுக்கு ஆங்கிலேயர்களே காரணமாவர் என்று ஆஸ்திரியப் பேரரசர் கூறினுர். அவர்களது ஒரே நோக்கம் ஆங்கில வணிகத்தை அவனியெல்லாம் வளர்ப்பது; அதற்காக அவர்கள் ஐரோப்பாவை சுடுகாடாக்கத் திட்டமிட்டுள்ளனர் என்று கூறி அவர்களது சுய நலத்தை வெளிக்காட்டினுர் நெப்போலியன். அடுத்து, இரஷ்யப் பேரரசர் அலெக்சாண்டரையும் உடனடியாகப் போரினே நிறுத்தி விட்டு இரஷ்யா செல்லுபடி அவரிடம் தெரிவிக்கவேண்டும் என்றும் ஃபிரான்சிஸ் பேரரசரை போனபார்ட் கேட்டுக்கொண்டார். பேரரசர் ஃபிரான்சிசும் அதற்கிசைந்து அமைதியுடன் போனபார்ட்டிடம் விடைபெற்றுச் சென்ருர்.

அடுத்து, இரஷ்யப் பேரரசர் அலெக்சாண்டரையும் சந்தித்து அமைதி உடன்பாடு காண போனபார்ட் விழைந்தார். தளபதி சேவரி (General Savary) உடனடியாக அலெக்சாண்டரின் படைமுகாம்நோக்கி அனுப்பப்பட்டார். அவரும் இனிது வரவேற்கப்பட்டார் இரஷ்ய மாமன்னரால். அவருடன் தளபதி நடாத்திய பேச்சு வெற்றிகரமாக முடிந்தது. இரஷ்யப் பேரரசர் தமது படைகளுடன் மாஸ்கோ திரும்ப ஒப்புக்கொண்டார்.

அடுத்து, நெப்போலியன் தம் படைகளுடன் வியென்ஞ திரும்பினுர். அங்கு ஆஸ்திரியப் பேரரசருடன் செய்துகொண்ட உடன்பாட்டில் கையெழுத்திட்டார். அவ்வுடன்பாடு பிரஸ்பர்க் (Prusburg) உடன்பாடு என்று அழைக்கப்படுகின்றது. அவ்வுடன்பாட்டின்படி போர்ச் செலவு முழுதும் ஆஸ்திரியா, ஃபிரான்சுக்குக் கொடுக்க ஒப்புக்கொண்டது. பவேரியா, உர்டம்பர்க் (Wurtemburg) தேர்வாளர்களிருவரும் மன்னர்களாக்கப்பட்டனர். பவேரியாவில் பத்து இலட்சம் மக்களும், உர்டம்பர்க்கில் ஒரு இலட்சத்து எண்பத்தி மூன்ருயிரம் மக்களும் வசிக்க அனுமதிக்கப்பட்டனர். சிறுநாடான பேடன் (Baden) ஒரு இலட்சத்துப் பதிமூன்ருயிரம் மக்களேப்பெற்றது. நெப்போலியனே நம்பிய நட்பு நாடுகள் இவ்வாறு பலப்படுத்தப்பட்டன. ஆஸ்திரியாவுக்குச் சொந்தமான வெனிசு (Venice) இத்தாலியுடன் இணைக்கப்பட்டது. அதற்கீடாக ஆஸ்திரியா சால்ஸ்பர்க் என்ற தேர்வாள நாட்டை (The Electorate of Salsburg)ப் பெற்றது. ஐரோப்பிய வல்லரசுகளான இரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய நாடுகளின் தாக்குதலிலி

ருந்து ஃபிரான்சைக் காக்கும்பொருட்டு அந் நாடுகளுக்கும் ஃபிரான்சுக்குமிடையில் நட்பு நாடுகளாலான வலிமைமிக்க தடை ஒன்றினை உருவாக்குவதே போனபார்ட்டின் முக்கிய நோக்கம். அது இந்த உடன்பாட்டின்படி நிறைவேறியது. ஐரோப்பியப் பெருநாடுகளுக்கும் ஃபிரான்சுக்கும் இடையிலுள்ள ஃபிரான்சின் நட்பு நாடுகள் இப்போது வலிமை பெற்றன. அவற்றைத் தாக்கி வீழ்த்திய பின்பே, பகைநாடுகள் ஃபிரான்சை வீழ்த்த இயலும். வருங்காலத்தில் ஃபிரான்சை பகை நாடுகள் எளிதில் சென்று தாக்க இயலாதபடி இவ்வுடன்பாடு காத்தது.

வரலாற்றுச் சிறப்புமிக்க இவ்வுடன்பாட்டிற்குப்பின் போனபார்ட் தம் படைகளைப் பாரிஸ் நோக்கிச்செல்லும்படி பணித்தார். அவர் ஒரு சிறு படையுடன் விரைவாக பாரிஸ் நோக்கி விரைந்தார். பேரரசரின் வருகையை அறிந்த ஃபிரான்சு வழியெல்லாம் அவருக்கு வரவேற்பு கொடுத்துச் சிறப்பித்தது. பாரிஸ் பெருநகரமும் விழாக்கோலம்பூண்டு பேரரசரைச் சிறப்பாக வரவேற்கக் காத்திருந்தது. ஆனால், பேரரசர் இரவில் எவரும் எதிர்பாராத வகையில் பாரிஸ் வந்தடைந்தார். அடுத்தநாள், அவருடைய வருகையை அறிந்த மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தனர். பாரிஸ் நகரம் பேரரசருக்குச் சிறப்பான வரவேற்பளித்தது. பாரிஸ் நகரமேயர் பாராட்டிதழ் படித்தளித்தார். பாரிஸ் நகர மேயரும் பிறரும் அறியாத வகையில் இரவில் பாரிஸ்நகர் வந்தடைந்தமைக்குப் பேரரசர், பாராட்டுக்குப் பதிலளித்துப் பேசுகையில் வருத்தம் தெரிவித்தார்

இங்கிலாந்து, இரஷ்யா, ஆஸ்திரியா, ஸ்வீடன் ஆகிய நாடுகளைக் கொண்டு அமைக்கப்பட்ட ஐரோப்பியக் கூட்டிணைவு நெப்போலியனால் ஒரே அடியில் நொறுக்கப்பட்டது. அக் கூட்டிணைவை உருவாக்கியவர் இங்கிலாந்துப் பிரதமர் வில்லியம் பிட் என்பவர். தமது பெருமுயற்சியால் தாயகத்தைக்காக்க உருவான கூட்டிணைவுக்கு ஏற்பட்ட கதியினைக்கண்டு அவர் கலங்கினார். ஆஸ்டர்லிட்ஸ் போரில் இங்கிலாந்து வாங்கிய மரண அடி அதன் அமைப்பாளரான பிட்டின் மரணத்துக்கும் வழிவகுத்தது. 1806ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 23ஆம் நாள் அவர் மனமுடைந்து செத்தார். ஆவி அவரைவிட்டுப்பிரியும் நேரத்திலும்கூட அவர், 'எனது அருமைத் தாயகமே!' என்று கூறிக்கொண்டிருந்தார்.

பேரரசர் பாரிஸ் வந்தடைந்தும் உடனடியாக நிதியமைச்சரை அழைத்து ஃபிரான்சின் நிதிநிலைகுறித்து ஆராய்ந்தார். அடுத்த நாள் காலை ஃபிரான்சின் சட்டமன்றத்தைக் கூட்டி நாட்டின் பல்வேறு நிலைகள் குறித்து ஒன்பது மணிநேரம் விவாதித்தார். எவ்வித ஓய்வும் இன்றி உடனடியாக ஆக்கப்பணிகளில் அயராது

ஈடுபட்டார். போர்க் காலங்களில் காட்டும் சுறுசுறுப்பையும் விரைவினையும்விட அதிகச் சுறுசுறுப்புடனும் வேகத்துடனும் அமைதிக்காலத்தில் ஃபிரான்சின் ஆக்கப் பணிகளில் ஈடுபாடு கொண்டார். அவருடன் ஈடு கொடுத்துப் பணியாற்றும் ஆற்றலை அன்றைய ஐரோப்பாவில் எவரும் பெற்றிருக்கவில்லை என்று துணிந்து கூறலாம். பண்டை ஃபிரெஞ்சு மன்னர்களால் போற்றிப் பாதுகாக்கப்பட்ட வீறுர்ந்த கல்லறை மாடம் (Mausoleum) ஒன்று செயின்ட் டேனிஸ் என்ற இடத்தில் சிதைந்த நிலையில் கவனிப்பாரற்றுக் கிடந்தது. பண்டைப் பொருட்களைப் பாது காத்து நாட்டின் பெருமையை நிலைநாட்டுவதில் நாட்டங்கொண்ட பேரரசர் இடிந்துகிடந்த அக் கல்லறை மாடத்தைப் புதுப்பித்து அழகுபடுத்தினர். இடிந்து விழும் நிலையிலிருந்த செயின்ட் ஜெனிவிவ் (St. Genevieve) ஆலயத்தையும் புதுப்பித்து அழகு மிக்கதாக்கினர். அல்ம், ஆஸ்டர்லிட்ஸ் ஆகிய களங்களில் பெற்ற பொருட்களைக்கொண்டு நினைவுச்சின்னங்கள் பல உருவாக்கப் பட்டன. பெரும் தூணில் பேரரசரின் உருவச்சிலையுடன் கூடிய அமைதிச்சின்னம் ஒன்றும் பாரிசில் அமைக்கப்பட்டது. லவ்ரே (Louvre), டூயிலெரிஸ் ஆகிய இரண்டையும் இணைத்துப் பெரும் அரண்மனையாக்கும் பணியும் தொடங்கியது. எலிசின்ஃபீல்ட்ஸ் (Elysien Fields) என்ற இடத்தினை நோக்கி எழுந்த மாபெரும் வெற்றிவளைவும், கேரௌசல் (Carousel) வெற்றிவளைவும் கட்டப் படுவதற்கான பணிகள் தொடங்கின. பதினைந்து புதியகுடி தண்ணீர் ஊற்றுகள் பாரிசில் உருவாக்கப்பட்டன. இரவுபகலாக சீன் நதியிலிருந்து நீரை இறைப்பதற்கான பெரிய இயந்திரங்கள் பயன்படுத்தப்பட்டன. பெரும் ஓடத்துறைகள் பலவும் அங்கு கட்டப்பட்டன. அங்கு அழகிய பாலம் ஒன்று அமைக்கப்பட்டு அதற்கு ஆஸ்டர்லிட்ஸ் பாலம் என்று பெயரிடப்பட்டது. ஜீஞ என்ற வேறு ஒரு பாலமும் கட்டப்பட்டது. தலைநகரில் இத்தகைய ஆக்கப்பணிகள் தொடங்கப்பட்ட அதே வேளையில் பேரரசின் பல் வேறு பகுதிகளிலும் அத்தகைய பணிகள் இடம்பெற்றன. நாட்டின் பல்வேறு பகுதிகளில் நீர் வசதிகளைப் பெருக்கும் பொருட்டு கால் வாய்கள் பல வெட்டப்பட்டன. அவைகள் போக்குவரத்துச் சாதனங்களாகவும் பயன்பட்டன. தேசிய நெடுஞ்சாலைகள் பல கட்டுவதற்கான வேலைகளும் இப்போது இடம்பெற்றன. உலகப் புகழ் பெற்ற சிம்ளன் கணவாய், மோசெல்லி (Moselle) பள்ளத் தாக்கு வழியாகக் கட்டப்பட்ட அழகிய சாலை, ரோன்னி (Roanne) யிலிருந்து லையன்ஸ்(Lyons)வரை கட்டப்பட்ட தேசிய நெடுஞ்சாலை, நிஸ் (Nice) நகரையும் ஜினேவா (Genoa) வையும் இணைக்கின்ற பெருஞ்சாலை, இரைன் நதிக்கரைகளின் வழியாக அமைக்கப்பட்ட அழகிய சாலைகள், ஆண்ட்வெர்ப் (Antwerp) என்ற நகரில் எழுந்த

அழகிய வேலைப்பாடுகள் ஆகியவை இன்றும் பேரரசர் போனபார்ட்டின் புகழ்பாடிநிற்கின்றன. பள்ளிகளில் சமயபோதனையும் புகுத்தப்பட்டது. உயர்ந்த தகுதிகள் படைத்த தரமான ஆசிரியர்களை உருவாக்கும் பொருட்டுப் பல்கலைக்கழகம் ஒன்றினையும் போனபார்ட் உருவாக்கினார். நாட்டுக்குத் தேவையான நல்ல கல்வியை இளைஞர்களும் மக்களும் பெற்றுச் சிறக்கும்வகையில் அவரது கல்வித்திட்டங்கள் அமைந்தன.

இத்தகைய வளர்ச்சிப் பணிகளில் போனபார்ட் 1806ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் முதல் ஜூலைத்திங்கள் வரை ஈடுபாடு கொண்டிருந்தார். இதற்கிடையில், இங்கிலாந்து கடற்படையின் கெடுபிடிகளுக்கும் ஈடு கொடுத்து நாட்டைக் காக்கும் பணிகளையும் மேற்கொண்டார். அன்றியும், ஐரோப்பிய நாடுகள் பலவற்றுடன் நட்புறவு கொண்டு ஃபிரான்சின் புகழைப் பெருக்கினார். அபினைன் மலையின் தென்சரிவில் அமைந்துள்ள ஜினோவா மாநிலம் ஐந்து லட்சம் மக்களைக் கொண்டது. அது நெப்போலியனது ஆற்றலையும் அருங்குணத்தையும் கண்டு தானே வலிய வந்து ஃபிரான்சுடன் இணைந்தது. நேப்பில்ஸ் (Naples) மன்னர் ஆங்கிலேயருடன் சேர்ந்து நெப்போலியனுக்கு எதிராகச் செயல்பட்டார். ஆங்கிலப் படையொன்றும் அவரது பாதுகாப்பிற்காக நேப்பில்சில் வைக்கப்பட்டிருந்தது. ஃபிரெஞ்சுப் பேரரசுக்கெதிராகச் சதித்திட்டங்களில் ஈடுபட்ட நேப்பில்சைப் பணியவைக்கப் போனபார்ட் விரும்பினார். தமது இளவல் ஜோசப் போனபார்ட் தலைமையில் நேப்பில்ஸ்நோக்கி ஒரு படையை அனுப்பினார். ஃபிரெஞ்சுப்படை வருவதை அறிந்த நேப்பில்ஸ் மன்னரும் அவருக்கு உதவியாக அங்கிருந்த ஆங்கிலப்படையினரும் நாட்டை விட்டோடினர். ஜோசப் நேப்பில்சை வென்று பேரரசருக்குக் காணிக்கை ஆக்கினார்.

ஆலந்து (Holland) சதுப்பு நிலப்பகுதிகளடங்கிய சிறுநாடு. இரண்டரை மில்லியன் மக்கள் அங்கு வசித்தனர். ஃபிரான்சைப் பின்பற்றி ஆலந்தும் புரட்சிமூலம் புத்தாட்சி கண்டது. அதன் மீது எரிச்சல்கொண்ட இங்கிலாந்து தன் படைபலத்தைப் பயன்படுத்தி அதனை நசுக்க முன்வந்தது. வணிகத்திலும் வளம் நிறைந்த குடியேற்றங்களையும் கொண்டு விளங்கிய ஆலந்தை அடிக்கடி தாக்கிச் சேதத்திற்குள்ளாக்கியது இங்கிலாந்து. ஆகவே, ஆங்கிலேயரின் தாக்குதல்களிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ளும் வகையில் ஆலந்து ஃபிரான்சின் உதவியை நாடியது. ஃபிரான்சும், ஆலந்தின் வேண்டுகோளை ஏற்று அதனை தனது நட்புநாடாக்கிக் கொண்டது. இரண்டு நாடுகளும் இங்கிலாந்தினை எதிர்த்துப் போரிட்டன. ஃபிரான்சில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள் ஆலந்

ஷத்யும் பாதித்தன. ஃபிரான்சு போனபார்ட் தலைமையில் முடியரசாக மாறியதைக் கண்ட ஆலந்தும் மன்னராட்சியை மீண்டும் நிறுவ விரும்பியது. பேரரசரின் தம்பியும் நல்லகுணங்கள் நிறைந்தவருமான லூயி போனபார்ட்டை ஆலந்தின் அரசராக ஏற்றுக்கொள்ள அந் நாட்டு மக்கள் முன்வந்தனர். அவர்கள் தங்கள் விருப்பத்தைப் பேரரசர் நெப்போலியனிடம் தெரிவித்தனர். போனபார்ட்டும் அவர்களது விருப்பப்படி லூயி போனபார்ட்டை ஆலந்து மன்னர் ஆக்கினர். ஆலந்து மக்களும் அவரது நல்லாட்சியில் நன்கு முன்னேறினர். சிசால்பைன் குடியரசும், இத்தாலிய நாடு என்று அழைக்கப்பட்டு அதற்கு ஈஜின் (Eugene) மன்னராக்கப்பட்டார். அவரது ஆட்சியில் வளம்பல பெற்று விளங்கியது இத்தாலி. ஒன்றரை மில்லியன் மக்கள் தொகை கொண்ட, இத்தாலிய நாடுகளில் ஒன்றான, பீட்மாண்ட் (Piedmont) ஃபிரான்சுடன் வலிய இணைந்தது. சிதறிக்கிடந்த தீபகற்ப இத்தாலியை இணைத்து ரோமாபுரியைத் தலைநகராகக் கொண்ட பெருநாடாக்கும் திட்டமும் இப்போது தோன்றியது. இரைன் நதிதீரத்தில் பதினொரு மன்னர்கள் ஒன்றுபட்டு இரைன் நதிநாட்டுக் கூட்டம் (The confederation of ui Rhine) என்ற அமைப்பினை உருவாக்கினர் பேரரசர் நெப்போலியன், அதன் காப்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஸ்பெயின் நாட்டுடனும் போனபார்ட் நெருங்கிய உறவினைப் பலப்படுத்தினர். ஸ்பெயின்மீது ஆதிக்கம் செலுத்த விரும்பிய இங்கிலாந்துக்கு எதிராக ஃபிரான்சு அதற்கு உதவ முன்வந்தது. இருநாடுகளும் செய்துகொண்ட தற்காப்பு உடன்பாட்டின்படி இணைந்து இங்கிலாந்துப் படைகளுடன் மோதிவந்தன. 1805ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் இருபத்தொன்றும் நாள் டிரஃபால்கர் (Trafalgar) என்னுமிடத்தில் நடந்த கடல் சண்டையில் ஸ்பெயின்-ஃபிரான்சு நாடுகளின் கூட்டுக் கடற்படை பலத்த சேதத்துக்குள்ளாகி படுதோல்வியடைந்தது. ஆனால், பேரரசர் உல்ம்; ஆஸ்டர்லிட்ஸ் ஆகிய இடங்களில் பெற்ற மாபெரும் வெற்றிகள் டிரஃபால்கர் தோல்வியை விரைவில் மூடி மறைத்தன. இத்தறுவாயில், இங்கிலாந்தின் பிரதமர் இளையபிட் மனமொடிந்து மாண்டார் என்று ஏற்கெனவே கண்டோம். அவருக்குப் பதிலாக, ஃபாக்ஸ் (Fox) என்பவர் இங்கிலாந்தின் பிரதமரானார். அவர் நெப்போலியனின் நெருங்கிய நண்பர்; அவரது புகழ்பாடும் அரிய மனிதர்; அமைதியில் அதிகம் ஆர்வம் கொண்டவர். எனவே, இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்கும் இடையில் நல்லுறவு வளர்ந்து ஐரோப்பாவில் நிரந்தர அமைதி நிலவ வழி பிறந்தது என்று அனைவரும் எண்ணி மகிழ்ந்தனர். அதற்கேற்ற வகையில் இருநாடு

களின் நடவடிக்கைகளும் நல்லுறவுக்கு வழிவகுப்பனபோல் அமைந்தன. ஃபாக்ஸ் பிரதமரானவுடன் அவர் முன் ஒரு கொடி யவன் தோன்றி நெப்போலியனைக் கொன்றுவர அனுமதி வேண்டி நின்றான். ஃபாக்ஸ், உடனே, அவனைச் சிறையிடச் செய்ததுடன் அது பற்றி உடனே பேரரசர் நெப்போலியனுக்கும் அறிவித்தார். நெப்போலியனும் ஃபாக்சின் நேர்மையினை வியந்து பாராட்டினார். மேலும், ஃபிரான்சில் சிறைத் தண்டனை அனுபவித்துவந்த ஆங்கிலேயர்களை நெப்போலியன் விடுவித்துத் தம் நல் லெண்ணத்தை வெளிப்படுத்தினார். ஃபாக்சும் டிரஃபால்கரில் சிறைப்பட்ட ஃபிரெஞ்சுக்காரர்களை விடுவித்து அமைதிச்சூழ் நிலைக்கு வித்திட்டார். ஆனால், அமைதி உடன்பாடு காண இயலாத வாறு தடைகளும் பல தோன்றின. இங்கிலாந்து பாராளுமன்றத் தில் வலிமைபெற்று விளங்கிய டோரிகள் ஃபிரான்சுடன் அமைதி உடன்பாடு செய்துகொள்வதை விரும்பவில்லை. போர்வெறி பிடித்த அவர்கள் ஃபிரான்சின் வளர்ச்சியினைக் கண்டு பொறுது போரிடத் தூண்டினர். அவர்களையெல்லாம் கட்டுப்படுத்தி ஃபிரான்சுடன் நல்லுறவுகொள்ள ஃபாக்ஸ் முயன்றும் அவரால் முடியவில்லை. இங்கிலாந்து மன்னர், அனோவர் (Hanover) நாட்டிற் கும் மன்னராவார். இப்பொழுது அனோவரைப் பேரரசர் போனு பார்ட் பிடித்து அதனை பிரஸ்பர்க் உடன்பாட்டிற்குப் பின் பிரஷ்ய மன்னரிடம் ஒப்படைத்துவிட்டார். அனோவரை ஆங்கிலேயர் பெற் றாலன்றி ஃபிரான்சுடன் உடன்பாடு காண இயலாத நிலையிலிருந் தனர். இதற்கிடையில், ஃபிரான்சுடன் நட்புறவைப் பலப்படுத்த அயராது உழைத்த ஃபாக்ஸ் நோய்வாய்ப்பட்டு இறந்தார். அதனை அறிந்த நெப்போலியன் பெரிதும் வருந்தினார். இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்கும் இடையே பாலமாக இருந்து உடன்பாடு காண முயன்ற ஒரே நம்பிக்கை ஒளியும் மறைந்து விட்டது. ஆகவே, ஐரோப்பாவில் மீண்டும் போர் மேகங்கள் சூழ்வதற்கான வாய்ப் புகள் ஏற்பட்டன.

இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்குமிடையே உடன்பாடு காண் பதற்கான கதவுகள் அடைபட்ட காரணத்தால் அடுத்த ஒரு ஐரோப்பியக் கூட்டும் நெப்போலியனுக்கெதிராக அமைந்தது. இங்கிலாந்து, இரஷ்யா, பிரஷ்யா ஆகிய மூன்று நாடுகளும் மீண்டும் ஒரே அணியில் திரண்டு ஃபிரான்சின்மீது பாயத் திட் மிட்டன. ஃபிரான்சின் வளர்ச்சியைத் தடுத்து தனது வாணிகத்தை வையகமெல்லாம் வளர்க்கவேண்டும் என்ற ஆசையால் இங்கி லாந்து போரினைத் துணைக்கழைத்தது. பண்டையப் படைப் பெருமையை நிலைநாட்டும்வகையில் பிரஷ்யா ஃபிரான்சுடன் மோத முன்வந்தது. ஆஸ்டர்லிட்ஸ் களத்தில் பெற்ற அடியை

மறக்க அலெக்சாண்டர் மீண்டும் ஃபிரான்சுடன் போரிடத் துணிந்தார். இரண்டு இலட்சம் வீரர்களடங்கிய பிரஷ்யப்படை, மன்னர் ஃபிரெடெரிக் வில்லியம் தலைமையில் அணிவகுத்துச்சென்று சாக்சனிக்குள் நுழைந்தது. சாக்சனி மன்னரை (King of Saxony) தமது கூட்டணியில் சேரும்படி வில்லியம் கட்டாயப்படுத்தினர். இரஷ்யப் பெருமன்னர் அலெக்சாண்டரின் பெரும்படை போலந்து வழியாகச் சென்று பாரிசைத் தாக்கத் திட்டமிட்டது. இங்கிலாந்தும் தனது வலிமைமிக்க கடற்படையைக் கொண்டு நடுநிலக் கடல் பகுதியிலும், ஆங்கிலக் கால்வாய் பகுதியிலும் பகைவர் கப்பல்களைத் தாக்கியது. தன்னுடைய செல்வாக்கையும், தங்கத்தையும் பயன்படுத்திப் புதிய நாடுகளையும் தன்து கூட்டில் சேரும்படி அது தூண்டி வந்தது.

அண்மையில், ஆஸ்திரியத் தலைநகரான வியென்னுவரை படையெடுத்து மேற்கொண்டு சென்று வெற்றி வாகை சூடி மீண்ட நெப்போலியன், புதிய புயல் ஒன்று உருவாகி அது ஃபிரான்சை நோக்கி வீசத் தொடங்கியதைக் கண்டு வருந்தினர். இருப்பினும், பகைவர்களைக் களத்தில் மீண்டும் சந்தித்து ஐரோப்பாவில் நிரந்தர நீடித்த அமைதி காணவிரும்பினர். இங்கிலாந்து, இரஷ்யா, பிரஷ்யா ஆகிய நாடுகளைத்தாக்கி, அவற்றை வீழ்த்தி அங்கெல்லாம் மக்கள் நலன் கருதிய அரசுகளை அமைப்பதின் மூலம் ஐரோப்பாவில் நீடித்த அமைதியை நிலைநாட்ட விரும்பினர். அதற்கான நடவடிக்கைகளில் உடனடியாக இறங்கினர். ஆதிக்க வெறி பிடித்தலையும், பகைவர் படைகளைத் தாக்கிப் போரில் குதிக்கும்படி தமது தம்பிகளான நேப்பில்ஸ் மன்னருக்கும், ஆலந்து மன்னருக்கும் மடல்கள் தீட்டினர். அடுத்து, நாற்பத்தெட்டு மணி நேரம் தமது அறையில் தனித்திருந்து போர்த்திட்டங்களை வகுத்தார். அடுத்த இரண்டு நாட்கள் பல்வேறு படைத்துறைத் தலைவர்களுக்கும் மடல்கள் அனுப்பி அவர்களைப் போருக்குத் தயாராகும்படி பணிப்பதில் கழிந்தன. அந்த இரண்டு நாட்களில் மட்டும் இருநூறு மடல்கள் தீட்டி அனுப்பப்பட்டன. அந்த மடல்களனைத்தும் இன்றும் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன. போர் ஏற்பாடுகளனைத்தும் கச்சிதமாக முடித்தபின் பேரரசர் தமது படைகளை சாக்சனி நோக்கி விரையும்படி பணித்தார். அப் பெரும்படையும் நாளொன்றுக்கு அறுபது கல் வேகத்தில் சென்று ஆறுநாட்களில் இரைன் நதிப்பகுதியை அடைந்தது. போனபார்ட்டும் ஜோசஃபைன் உடன்வர 1806ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 24ஆம் நாள் நடுஇரவில் டூயிலெரிஸ் விட்டுக் கிளம்பினர். மேயென்ஸ் (Mayence) நகரில் ஜோசஃபைனிடம் பிரியாவிடைபெற்று நெப்போலியன் தம் படையுடன் சாக்சனியில்

நுழைந்தார். பிரஷ்யப் பெரும்படை ஜீஞ (Jena) என்ற இடத்திலும், அவுர்ஸ்டாட் (Auerstadt) என்ற இடத்திலும் இரண்டு பிரிவாக முகாமிட்டிருந்தன. 1806ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் பதின்மூன்றும் நாள் மாலை பேரரசர் போன்பார்ட் தமது பெரும்படையுடன் ஜீஞ சமவெளி வந்துசேர்ந்தார். அங்கு முகாமிட்டிருந்த பிரஷ்யப் பெரும்படைமீது வழக்கமான நோட்டம் விட்டுத் தாக்குவதற்கான இலக்குகளையும் தப்பியோடும் பகைவர்களைத் தடுத்து வீழ்த்தும் இடங்களையும் தேர்ந்தெடுத்தார். அடுத்த நாள் காலை தம் படைகளைத்தாக்குதலில் இறக்கினர். இரண்டு படைகளும் பயங்கரமாக மோதின. அன்று முழுவதும் வெற்றி தோல்வியை நிர்ணயிக்க இயலாதவாறு சண்டைநீடித்தது. இறுதியில் மூராட்டின் பன்னிரண்டாயிரம் குதிரை வீரர்களின் புலிப் பாய்ச்சலால் பிரஷ்யப்படை பின்வாங்கி ஓடியது. ஓடிய வீரர்களையும் விரட்டிச்சென்று வீழ்த்தியது அக் குதிரைப்படை. ஜீஞ களத்தில் பிரஷ்ய வீரர்களுக்கு ஏற்பட்ட கதியினைக்கண்டு, அவுர்ஸ்டாடில் முகாமிட்டிருந்த பிரஷ்ய வீரர்களும் அஞ்சி நடுங்கினர். அவுர்ஸ்டாட், ஜீஞவிலிருந்து பன்னிரண்டு கல் தொலைவிலுள்ளது. ஜீஞ களத்தில் கிளம்பிய பீரங்கி முழக்கங்களையும் தப்பியோட முடியாதவாறு பிரஷ்யப்படை திக்குமுக்காடியதையும் அறிந்த அவுர்ஸ்டாட் படைவீரர்கள் ஆயுதங்களைப் போட்டுவிட்டு உயிருக்கஞ்சி ஓடினர். அவர்களையும் சுற்றிவளைத்துத் தாக்கினர் ஃபிரெஞ்சு வீரர்கள். இச் சண்டையில் இருபதாயிரத்துக்கு மேற்பட்ட பிரஷ்ய வீரர்கள் மாண்டனர். இருபதாயிரத்துக்கு மேற்பட்டோர் சிறைப்பட்டனர். பிரஷ்ய மன்னர் ஃபிரெடெரிக் வில்லியம் அவுர்ஸ்டாடிலிருந்து தப்பியோடினர்.

ஜீஞ களத்தில் வென்ற போனபார்ட் ஓய்வு சிறிதும் இன்றி பிரஷ்யாவுக்குள் தம் படையுடன் நுழைந்தார். எதிர்த்த பிரஷ்யப் படைகளனைத்தும் வீழ்ந்தன. பிரஷ்யக் கோட்டைகளனைத்தும் போனபார்ட் வசமாயின. வரலாற்றுப் புகழ்மிக்க பெருமன்னர் ஃபிரெடெரிக்கிடம் பயிற்சி பெற்ற பிரஷ்யப்படை இப்போது சிதறடிக்கப்பட்டு சீரழிந்தது. அப் பெரும்படையை நடாத்திச் சென்ற மன்னர் இரஷ்யாவுக்கு ஓடிவிட்டார். பேரரசர் பாரிசிலிருந்து கிளம்பி இரண்டு திங்களாயிற்று; அதற்குள் இரண்டு லட்சம் பிரஷ்ய வீரர்களைச் சிதைத்து, கோட்டைகள் பலவற்றைக் கைப்பற்றி, ஏராளமான பொருட்களை உடைமையாக்கி ஃபிரெஞ்சுப்படை பிரஷ்யாவில் வீறுநடைபோட்டது. பேரரசர் போனபார்ட் பெர்லின் நகரில் பிரஷ்ய மன்னரின் புகழ்மிக்க அரண்மனையில் ஓய்வெடுத்தார். போனபார்ட்டின் மாபெரும் வெற்றியைக் கேள்விப்பட்ட ஐரோப்பியப் பகை நாடு

களனைத்தும் அஞ்சிநடுங்கின; அவரது நட்புநாடுகள் ஆனந்தக் கூத்தாடின, நெப்போலியனின் தீரச்செயல் அரேபியக் கதைகளில் வரும் வீரர்களின் தீரச்செயல்போன்று அமைந்து அனைவரையும் திடுக்கிடவைத்தது. 'ஆற்றல்மிக்க அரக்கனொருவனுடன் போரிடும் குழந்தைகளைப் போல, நாம் போனபார்ட்டிடம் மோதிக் கொண்டிருக்கிறோம்' என்று இரஷ்யப் பெருமன்னர் குறிப்பிட்டுள்ளார்.

பிரஷ்யாவை வென்று அதன் தலைநகரான பெர்லினில் போனபார்ட் தங்கியிருந்தபோழ்து, அவரது வெற்றியைக்கண்டு கலங்கிய இங்கிலாந்து புதியசட்டம் ஒன்றினை இயற்றி அதன் மூலம் ஃபிரான்சுக் கெதிராக ஐரோப்பிய நாடுகள் பலவற்றைத் திருப்பும் முயற்சியினை மேற்கொண்டது. 'எந்த ஒரு நாடும், ஃபிரான்சுடனோ அல்லது அதன் நட்பு நாடுகளுடனோ, கடல்வழியாக எத்தகைய வணிகத்திலும் ஈடுபடக் கூடாது. அவ்வாறு செய்யின், அத்தகைய கப்பல்கள் கைப்பற்றப்பட்டுச் சரக்குகள் பறிமுதல் செய்யப்படுவதுடன் அவைகளிலுள்ள பயணிகளும் சிறைபிடிக்கப் படுவர்' என்ற அறிவிப்பை இங்கிலாந்து வெளியிட்டது. இதனைக் கண்ட இங்கிலாந்து மக்களில் சிலரும் கடுங்கோபம் கொண்டனர். அமைதியில் நாட்டங்கொண்டு அயராது உழைக்கும் நெப்போலியனை வலியச் சண்டைக்கு இழுப்பதாக அமைந்தது இந்த அறிவிப்பு. ஐரோப்பிய அமைதியில் அக்கறைகொண்ட நாடுகள் பல ஆங்கிலேயரின் இந்த அடாத அறிவிப்பை வன்மையாகக் கண்டித்தன. ஃபிரான்சின்மீது வலியப்புகுத்திய இந்த வணிகத் தடை விரைவில் வெறுங்காகிதத் தடை (Paper Blockade) யாகும் என்பதை இங்கிலாந்து அறியவில்லை. போனபார்ட் அடிக்கடி கூறுவதைப்போல, ஆங்கிலேயரின் ஒரே ஆசை அவர்களது வணிகத்தை உலகமுழுதும் விரிவுபடுத்தவேண்டும் என்பதே. எனவே, ஃபிரான்சின்மீது வணிகத் தடையை விதித்து அதன்மூலம் தங்கள் வணிகத்தை வையகமெல்லாம் பரப்ப ஆங்கிலேயர் விழைந்தனர். ஆனால் அவர்களது திட்டம் அவர்களது ஆசையை நிறைவேற்றவில்லை. மாறாக, ஐரோப்பிய வணிக வளர்ச்சிக்கு அது முட்டுக்கட்டை போட்டதுடன் அமைதிக்கு பங்கமும் விளைவித்தது.

பெர்லின் நகரிலிருந்தபேரரசர் போனபார்ட் இங்கிலாந்தின் வணிகத்தடை அறிவிப்பைக் கேட்டு பெரிதும் கோபம் கொண்டார். இங்கிலாந்தின் கடலாதிக்கத்தை உடைத்து ஃபிரான்சின் மானத்தையும் பெருமையையும் சுதந்திரத்தையும் காப்பாற்ற உறுதி பூண்டார். 1806ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 26ஆம் நாள் வரலாற்றுப் புகழ்மிக்க ஆணையை பெர்லின் பெரு நகரிலிருந்து வெளியிட்டார். ஆகவே, அது இன்றளவும் பெர்லின் ஆணை என்று

அழைக்கப்படுகின்றது. அவ்வாணை பின்வருமாறு : 'ஃபிரெஞ்சுப் பேரரசின் எல்லைக்குள் அல்லது அதன் நட்புநாடுகளின் எல்லைக் குள் காணப்படுகின்ற ஆங்கிலேயர் அனைவரும் உடனே சிறை செய்யப்படுவர். அவர்களுக்குச் சொந்தமான சரக்குகளனைத்தும் உடனடியாகப் பறிமுதல் செய்யப்படும். இங்கிலாந்தின் முகவரி யினைத் தாங்கியோ அல்லது அதன் நட்புநாடுகளின் முகவரியினைத் தாங்கியோ செல்லுகின்ற மடல்கள், சிறு சிப்பங்கள் (Packets), பிற அஞ்சல்கள் அனைத்தும் பறிமுதல் செய்யப்படும். ஆங்கி லத்தில் எழுதப்பட்டுள்ள அஞ்சல்களனைத்தும் கைப்பற்றப்படும். ஃபிரான்சும் அதன் நட்புநாடுகளும் பிரிட்டனும் அதன் நட்புநாடு களுடனும் கொண்டிருந்த வணிகத் தொடர்புகளனைத்தும் இன்று டன் துண்டிக்கப்படுகின்றன. போனபார்ட்டின் பெர்லின் ஆணை யைக் கண்ட ஆங்கிலப் பாராளுமன்றம் அரண்டது. அங்கு அது பற்றி காரசாரமான வாதங்கள் நடந்தன. நெப்போலியன் மேற் கொண்ட அந்த நடவடிக்கைக்கு இங்கிலாந்தே பொறுப்பாகும் என்று பல உறுப்பினர்கள் பேசினர். இங்கிலாந்தே போனபார்ட் டை வலியச் சண்டைக் கிழுத்து நாட்டின் அமைதியை நாசமாக் கியது என்று பல உறுப்பினர்கள் வெளிப்படையாகவே பிரிட் டனைக் குற்றஞ் சாட்டினர்.

ஐரோப்பாவில் நிரந்தர அமைதியை நிலைநாட்டும்வரை உரு வியவாளை உறையில் போடுவதில்லை என்ற உறுதியுடன் பேரரசர் போனபார்ட் பெர்லின் நகர்விட்டுத் தம் பெரும்படையுடன் வார் சா நோக்கி விரைந்தார். போலந்தின் தலைநகரான வார்சா பெர் லின் நகரிலிருந்து நானூறு கல் தொலைவிலுள்ளது. இரஷ்யப் பெரு மன்னர் அலெக்சாண்டர் பொறுக்கி எடுக்கப்பட்ட இரண்டு இலட்சம் வீரர்களுடன் ஃபிரான்சின்மீது பாய்வதற்காகப் போலந்து வழியாக வந்துகொண்டிருந்தார். அவரை வழிமறித்து தாக்கி வீழ்த்தவேண்டும் என்ற திட்டத்துடன் போனபார்ட் போலந்து நோக்கிப் படைமேற்கொண்டு சென்றார். சுதந்திர நாடாகச் சுடர் விட்டுக்கொண்டிருந்த போலந்தைத் தாக்கி இரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய பெருநாடுகள் மூன்றும் அதனைக் கூறு போட்டு எடுத்துக் கொண்ட நிகழ்ச்சி விடுதலையில் நாட்டங்கொண்ட மக்களனைவரையும் திடுக்கிடச்செய்தது. மக்களின் விடுதலைக்கு மதிப்பளிக்கும் போனபார்ட் போலந்து நாட்டுக்குள் அடியெடுத்து வைத்தவுடன், தங்களை விடுவிக்க வந்த தலைவர் அவர் என்றுகூறி அவருக்கு நல்வரவேற்பளித்தனர் போலந்து மக்கள். போலந்து மக்களின் மேலான ஆதரவை துணை யாகக்கொண்டு அந் நாட்டைத் துண்டாடிய துரோகிகளைப் பழி வாங்கும் படலத்தைத் தொடக்கி வைத்தார் நெப்போலியன்.

தம்து பெரும்படையினை அழைத்துக்கொண்டு விஸ்டுலா (Vistula) நதிக்கரை வந்தடைந்தார். மாரிக்கால முழுவதும் அங்கு தங்கி ஓய்வெடுத்தார். விஸ்டுலாக்கரையில் ஃபிரெஞ்சுப் படைகள் முகாமிட்டிருப்பதனை அறிந்து அலெக்சாண்டர், தம் படையுடன் அங்கு விரைந்தார். திடீரென்று ஃபிரெஞ்சுப் படையினரைத் தாக்கவேண்டும் என்ற எண்ணத்தில் இரஷ்யப் பெருமன்னர் பெரும்படையுடன் விஸ்டுலாக் காடுகளில் பகைவர்களறியா வண்ணம் பாய்ந்து வந்துகொண்டிருந்தார். இறுதியில், இரண்டு பெரும் படைகளும் இறங்கின மோதலில். இருதரப்பிலும் எண்ணிறந்த பிணங்கள் வீழ்ந்தன. இருப்பினும், வழக்கம் போல் போனபோர்ட் வாகை சூடினார். பின்வாங்கி ஓடின இரஷ்யப் பெரும்படைகள். ஓடிய படைகளை விரட்டிச்சென்று தாக்கின ஃபிரெஞ்சுப் படைகள். இப்படிப் பல மோதல்கள் இடம் பெற்றன இரண்டு படைகளுக்கு மிடையே. ஃபிரெஞ்சுத் தாக்குதலைத் தாங்கிக்கொண்டு பின்வாங்கிச்சென்ற இரஷ்யப்படை ஐலா (Eylau) களத்தில் அணிவகுத்து நின்றன. இறுதித் தாக்குதலுக்கு 1807ஆம் ஆண்டு ஃபிப்ரவரித் திங்கள் 7ஆம் நாள் இரண்டு படைகளும் எதிரும் புதிருமாக ஐலாகளத்தில் அணி வகுத்து நின்றன. அடுத்த நாள் காலை பீரங்கிக்குண்டுகள் முழங்கத் தொடங்கின. பெரும்போர் தொடங்கியது. தலைகள் எண்ணிறந்தன தரையில் உருண்டோடின; பிணங்கள் அப்பெரும்வெளி முழுவதும் பரந்துகிடந்தன: வெண்பனி நிறைந்த அந்த வெளியெல்லாம் செந்நீர் பெருக்கெடுத்து ஓடியது. பதினெட்டு மணி நேரப் பயங்கர மோதலுக்குப்பின் இரஷ்யப் படையினரில் பாதிப் பேர் மாண்டனர். இருப்பினும், சண்டை இன்னும் தொடர்ந்தது. அப்போது அங்கு புதிய ஃபிரெஞ்சுப் படையொன்று பாய்ந்துவந்து புதுத்தெம்புடன் புகுந்து தாக்கியது. ஃபிரெஞ்சுப் படையினரின் தாக்குதலுக்கு ஈடுகொடுக்க இயலாதநிலையில் இரஷ்யப் படையினர் சிதறி ஓடினர். ஐலா களத்தில் நாற்பதாயிரத்துக்கு மேற்பட்ட இரஷ்ய வீரர்கள் சேதத்துக்குள்ளாயினர். அடுத்து, நெப்போலியன் தம் படைகளுடன் விஸ்டுலா சென்று ஓய்வெடுத்தார்.

ஐலா களத்தில் தோற்றோடிய இரஷ்யப் படையினர் அயராது அடுத்த தாக்குதலுக்கும் தயாராயினர். இரஷ்யா, பிரஷ்யா ஆகிய நாடுகளின் படைகள் மீண்டும் தாக்குதலில் இறங்கின. 1807ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 5ஆம் நாள் இலட்சத்து நாற்பதாயிரம் வீரர்கள் ஃபிரெஞ்சு வீரர்கள்மீது பாய்ந்து தாக்கினர். ஃபிரெஞ்சுப் படை அவர்களது தாக்குதலை முறியடித்து முன்னேறியது. ஜூன் திங்கள் பத்தாம்நாள் எயில்ஸ்பர்க் (Heilsburg) என்ற இடத்தில் மீண்டும் போர் தொடங்கியது. இந்தப் பயங்கரச்

சண்டையிலும் ஃபிரெஞ்சுப் படையே வென்றது. அடுத்து, ஜூன் திங்கள் பதினான்காம்நாள் ஃபிரீட்லேண்ட் (Friedland) என்ற இடத்தில் இரண்டு படைகளும் இறுதிமோதலில் இறங்கின. ஒவ்வொரு களத்திலும் தோற்றோடிய இரஷ்யப்படை உறுதியுடன் இப் போரில் இறங்கியது. இருப்பினும், ஃபிரெஞ்சுப் படையின் இடித்தாக்குதலுக்கு முன் இரஷ்ய — பிரஷ்யப்படையினர் எதிர்த்து நிற்க இயலாது பின்வாங்கி ஓடினர். ஃபிரீட்லேண்ட் களத்தில் வென்ற போனபார்ட் பெருமையுடன் தம் படையினரைப் பாராட்டினார். கடந்த பத்து நாட்களாக விட்டுவிட்டு நடந்த மோதல்களில் பகைவர் பக்கத்தில் காயம்பட்டோர், இறந்தோர், சிறைப்பட்டோர் ஆகியோர் தொகை அறுபதினாயிரம். கடுமையான சேதத்துக்குள்ளான இரஷ்ய, பிரஷ்ய படையினர் பின்வாங்கியோடி, நெய்மென் (Nieman) நதிக்கரையை அடைந்தன. அலெக்சாண்டரும், ஃபிரெடெரிக் வில்லியமும் உள்ளமொடிந்த எழுபதாயிரம் வீரர்களுடன் அந் நதியின் எதிர்க்கரையில் ஏக்கத்துடன் நின்றனர். அடுத்த கரையில் போனபார்ட்டின் படையினர் இலட்சத்து எழுபதினாயிரம் பேர் வெற்றிக்களிப்பில் நிமிர்ந்து நின்றனர். நெய்மென் நதியின் இடது கரையிலுள்ளது டில்சிட் (Tilsit) என்ற சிறு நகரம். அது பத்தாயிரம் மக்களைப் பெற்றிருந்தது. போனபார்ட் அங்கு வந்து சேர்ந்த சிறிதுநேரத்தில் பேரரசர் அலெக்சாண்டர் அமைதி உடன்பாடு காணவிரும்பி அனுப்பிய மடல் அவரிடம் கொடுக்கப்பட்டது. அமைதியில் எப்போதும் நாட்டங்கொண்ட போனபார்ட்டும் உடனே தமது இசைவினைத் தெரிவித்தார்.

இரஷ்யப் பேரரசர் அலெக்சாண்டரும் ஃபிரெஞ்சுப் பேரரசர் போனபார்ட்டும் சந்தித்துப் பேசுவதற்கான நாள் குறிக்கப்பட்டது. 1807ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 25ஆம் நாள் இரு மன்னர்களும் சந்தித்து பேசினர். பலநாள் கலந்து பேசியபின் உடன்பாடு முழுவடிவம் பெற்றது. டில்சிட் உடன்பாடு வரலாற்றுச் சிறப்புமிக்கது. அதன்படி, ஃபிரெடெரிக் வில்லியம் இழந்த தமது நாட்டில் பாதியைப் பெற்று மீண்டும் மன்னரானார். பிரஷ்யா வசமிருந்த போலந்து தனிநாடாக்கப்பட்டு, வார்சா கோமகனுடைய ஆட்சிப் பகுதி (Duchy of Warsaw) என்றழைக்கப்பட்டது. அது சாக்சனி மன்னரிடம் ஒப்படைக்கப்பட்டது. அடிமைகள் முற்றிலும் விடுவிக்கப்பட்டனர்; கொத்தடிமை முறை ஒழிக்கப்பட்டது. மக்கள் உரிமை பெற்றவர்களாக வாழவழிசெய்யப்பட்டது. போலந்து மக்கள் போனபார்ட்டைப் பெரிதும் போற்றினர். எல்ப் நதியின் இடது கரையிலுள்ள பிரஷ்ய மாநிலங்களை யெல்லாம் இணைத்து ஒரு தனி நாடாக்கி அதனை வெஸ்ட்பேலியா (Westphalia) நாடு

என்று அழைத்தார் நெப்போலியன். போனபார்ட்டின் தம்பி ஜெரோம் போனபார்ட் அதன் மன்னராக்கப்பட்டார். பிரஷ்யா வின் மக்கள் தொகை ஒன்பது மில்லியனிலிருந்து ஐந்துமில்லியனுகக் குறைக்கப்பட்டது; அதன் வருமானம் நூற்றிருபது மில் லியன் ஃபிராங்குகளிலிருந்து எழுபது மில்லியன் ஃபிராங்கு களாகக் குறைக்கப்பட்டது. பேரரசர் அலெக்சாண்டர் இரைன் நதி நாட்டுக்கூட்டம் (The Confederation of the Rhine) என்ற நெப்போலியனது அமைப்பினை அங்கீகரித்தார். நேப்பில்ஸ் மன்னர், ஆலந்து மன்னர், வெஸ்ட்பேலியா மன்னர் ஆகியோரும் முறைப்படி அங்கீகரிக்கப்பட்டனர். அலெக்சாண்டரும், போன பார்ட்டும் தற்காப்பு இராணுவ ஒப்பந்தங்களும் செய்துகொண்ட னர். 1807ஆம் ஆண்டு நெப்போலியனின் புகழும் ஆதிக்கமும் உச்ச நிலையில் இருந்தன எனலாம். இங்கிலாந்து தவிர ஏனைய ஐரோப்பிய நாடுகளெல்லாம் ஒன்று நெப்போலியனின் நேரடி ஆட்சியையோ அல்லது மறைமுக ஆட்சியையோ ஏற்றுக் கொண்டன அல்லது அவருடன் நட்பு கொண்டிருந்தன.

டில்சிட் உடன்பாடு முடிந்தபின் போனபார்ட் தம் படைகளை ஃபிரான்சு நோக்கிப் புறப்படும்படி பணித்தார். அவரும் பாரிஸ் நோக்கி விரைந்தார். 1807ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 27ஆம் நாள் வழக்கம்போல் எவரும் அறியாதவகையில் இரவு நேரத்தில் பாரிஸ் வந்தடைந்தார். அடுத்த நாள் அவர் வருகையறிந்த அம் மாநகரம் விழாக் கோலம் பூண்டு வீரவரவேற்பு அளித்தது பேரரச ருக்கு. பெருநகர் வந்தவுடன் பேரரசர் ஓய்வு சிறிதுமின்றி உடனடி யாக நிர்வாகப்பணிகளில் ஆர்வத்துடன் ஈடுபட்டார். ஃபிரான் சின் பல துறைவளர்ச்சிக்கான திட்டங்கள் பல தீட்டப்பட்டு செயல் படுத்தப்பட்டன. நாற்பதாயிரம் கல் தொலைவிலுள்ள சாலைகள் பல பேரரசு முழுவதையும் இணைக்கும் வகையில் எழுந்தன. பதினைன்கு புகழ்பெற்ற பாலங்கள் கட்டப்பட்டன. பிரம்மாண்ட மான கால்வாய்கள் இரண்டு வெட்டப்பட்டன. அவை படகுப் போக்குவரத்துக்குப் பெரிதும் பயன்பட்டன. பேரரசு முழுவதிலு முள்ள கோட்டைகளனைத்தும் பழுதுபார்க்கப் பட்டுச் சீரான நிலையில் வைக்கப்பட்டன. பாரிஸ் நகரில் முப்பது குடி தண்ணீர் ஊற்றுகள் இரவும் பகலும் இடையருது வேலை செய்தன. வெற்றிவளைவுகள், வானளாவிய கட்டிடங்கள் பல எழுந்தன. உள் நாட்டு வணிகம் உச்சநிலை அடைந்தது. பொதுக்கணக்கு கள் எவ்விதப் பிழையுமின்றி, துல்லியமாகவும், விளக்கமாகவும் தெளிவாகவும் இருப்பதற்கான வழி முறைகள் புகுத்தப்பட்டன. கடைத்தெருக்களில் விற்போரையும், வாங்குவோரையும் குளிர் வாட்டாதபடி கண்ணுடியால் மூடப்பட்ட வீதிகளை அமைக்கும்

பணியும் தொடங்கியது. பாரிஸ் நகருக்குள்ளிருந்த நாற்பது இறைச்சிக் கொட்டில்கள் (Slaughter-houses) அப்புறப்படுத்தப் பட்டன. நகருக்கு வெளியில் பெரும் இறைச்சிக் கொட்டில்கள் நான்கு கட்டப்பட்டன. ஃபிரான்சின் புகழுக்குரிய சட்டதிட்டங் கள் ஒன்ருக்கப்பட்டு நெப்போலியனின் சட்டத்தொகுதி (Code Napoleon) என்றழைக்கப்பட்டது. இலக்கியம், கலே, அறிவியல் போன்ற துறைகளிலும் வளர்ச்சி காணப்பட்டது. இத் துறை களின் வளர்ச்சிபற்றி பேரரசருக்கு உடனுக்குடன் அறிவிக்கத் தனிக் குழுக்கள் அமைக்கப்பட்டன. நெப்போலியனது புகழ் வளர்ந்துகொண்டே சென்றது. அதற்குப் போட்டியாக ஃபிரெஞ் சுப் பேரரசின் புகழும் வையகமெல்லாம் கொடிகட்டிப் பறந்தது. பேரரசரின் அதிகாரங்களும் குவிந்தன. அவர் அதிகாரங்களனைத் தும் குவித்துவைக்கப்பட்ட மையமாக ஆக்கப்பட்டார். சட்ட மன்ற உறுப்பினர்கள் அவரால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். படைத் துறை அதிகாரிகளனைவரும் அவரால் நியமிக்கப்பட்டனர். உயர்தர அதிகாரிகள், சமயத்தலேவர்கள், ஆசிரியர் போன்ருேர் நேரடியாகவோ, மறைமுகமாகவோ பேரரசரின் நியமனக் கட்டுப்பாட்டுக்குள் வைக்கப்பட்டனர். 1807ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 15ஆம் நாள் அவரது 38வது பிறந்தநாள்விழா பேரரசெங்கும் பெரிய அளவில் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. அவரது நிர்வாக ஆற்றலேயும், நீதியினேயும், நேர் மையினேயும் மக்கள் போற்றிப் புகழ்ந்தனர்.

டில்சிட் உடன்பாட்டின்படி இரஷ்யாவுக்கும் துருக்கிக்கு மிடையே சமரசம் செய்துவைக்க ஒப்புக்கொண்ட போனபார்ட் இப்போது அதற்கான முயற்சியில் ஈடுபட்டார். தனித்தூதர் ஒருவர் துருக்கிக்கு அனுப்பப்பட்டார்; அவர் போனபார்ட்டின் திட்டங்களேயெல்லாம் துருக்கி மன்னரிடம் தக்கவாறு எடுத்து விளக்கினுர். ஃபிரெஞ்சுப் பேரரசரின் நிபந்தனேகளுக்குட்பட்டுத் துருக்கியும் உடன்பாட்டுக்கு உறுதியளித்தது. ஆகவே, இரஷ்யா வுக்கும் துருக்கிக்குமிடையே சமரசம் வெற்றிகரமாக முடிந்தது. ஆனுல், இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்குமிடையே சமரசம் காண முயன்ற அலெக்சாண்டர் அதில் தோல்வியுற்ருர். ஐரோப்பிய அமைதியில் நாட்டமற்ற இங்கிலாந்து உடன்பாட்டுக்கு ஒத்து வராததுடன், தனது நட்பு நாடான ஸ்வீடன்மீதும் ஆக்கிரமிப்புச் செய்தது. ஃபிரான்சுடன் உடன்பாடு காண மறுத்த காரணத்தால் ஐரோப்பிய நாடுகளேயெல்லாம் தங்களுக்கெதிராகத் திருப்பி விடுவார் நெப்போலியன் என்று அஞ்சினர் ஆங்கிலேயர். அண்டை நாடான ஸ்வீடன் எளிதில் ஃபிரான்சின் பிடியில் சிக்கிவிடும் என்று கருதிய இங்கிலாந்து அந் நாட்டின் முக்கிய நிலேகளேக் கைப்பற்றக்

கருதியது. கோபன்ஹேகன் (Copenhagen) துறைமுகத்தையும் கோட்டையையும், கடற்படையினையும் உடனே ஆங்கிலப் படையிடம் ஒப்படைக்கும்படி இங்கிலாந்து ஸ்வீடனைப் பணித்தது. தனது சுதந்திரத்துக்கு ஏற்பட்ட ஆபத்தைக் கண்ட ஸ்வீடன் அதனை ஏற்றுக்கொள்ள மறுத்தது. உடனே, ஆங்கிலேயப் படையினர் ஸ்வீடன் தலைநகர்மீது பாய்ந்து தாக்கினர். 1807ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 2ஆம் நாள் மாலை தொடங்கிய தாக்குதல் மூன்று நாட்கள் நீடித்தது. கோபன்ஹேகன் நகரின் பெரும் பகுதி தீக்கிரையாயிற்று. இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட மக்கள் மாண்டனர்; முந்நூறுக்கு மேற்பட்ட குதிரைகள் கருகிச் செத்தன. அழகிய ஆலயங்கள் பல இடிந்து தரைமட்டமாயின. ஆங்கிலேயரின் ஆதிக்க வெறிக்கு அந் நகர் பலியாயிற்று. அவர்களின் செயலை ஐரோப்பிய நாடுகள் பல வன்மையாகக் கண்டித்தன. இரஷ்யப் பேரரசர் அலெக்சாண்டரும் இங்கிலாந்தைக் கடுமையாகக் கண்டித்தார். இந் நிலையில் துருக்கிக்கும் இரஷ்யாவுக்குமிடையே பூசல் தோன்றியது. இரண்டு நாடுகளும் தாங்களாகவே சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ளட்டும் என்று நெப்போலியனும் ஒதுங்கியிருந்தார். ஆனால், துருக்கிக்கு ஆதரவாக இங்கிலாந்து போரில் குதிக்க முன்வந்தது. இருநாடுகளும் ஃபிரான்சுக்கு எதிராக ஒன்றுபட்டுச் செயல்பட முன்வந்தன. ஆகவே, டில்சிட் உடன்பாட்டின்படி ஃபிரான்சும், இரஷ்யாவும் இணைந்து எதிரிகளை வீழ்த்துவதற்கான சூழ்நிலை உருவாயிற்று.

இந் நிலையில் பேரரசர் போனபார்ட் இத்தாலியச் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டார். 1807ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 16ஆம் நாள் நெப்போலியன் ஜோசபைன் உடன்வர பாரிசை விட்டுக் கிளம்பினார். 21ஆம் நாள் காலை மிலான் வந்தடைந்தார். அங்கு இளம் ஈஜின் தம்பதிகளுடன் அளவளாவினார்; பலநாள் தங்கி நாட்டு நலனுக்கான ஆக்கவேலைகளில் ஈடுபட்டார். அங்கு அவருக்குச் செல்லுமிடமெல்லாம் உற்சாகமான வரவேற்பளிக்கப் பட்டது. டிசம்பர் திங்கள் பத்தாம் நாள் அவர் மிலானை விட்டுப் புறப்பட்டு பிரசியா (Brescia), வெரோனா (Verona), படுவா (Padua) வழியே வெனிஸ்நோக்கி விரைந்தார். வழியெல்லாம் மக்கள் அலைகடலெனத் திரண்டு அவருக்கு வரவேற்பளித்தனர். வழியில் பவேரிய மன்னரையும், அரசியாரையும் சந்தித்து அவர்களுடன் அளவளாவினார். பவேரிய மன்னரின் மகளையே தமது மகன் ஈஜினுக்கு மணமுடித்திருந்தார். அடுத்து, அவர் வெனிஸ் சென்றார். அங்கும் மக்கள், வெள்ளம் எனத் திரண்டு அவரை வரவேற்றனர். வெனிஸ் நகரில் சிலநாள் தங்கி வளர்ச்சித் திட்டங்களை வகுத்துக் கொடுத்து, இத்தாலியின் பல்வேறு கோட்டை கொத்தளங்களையும், இராணுவ இலக்குகளையும் மேற்பார்வை

யிட்டார். மாண்டுவாக் கோட்டையினையும் அவர் பார்வையிட்டு அங்கு தமது சகோதரன் லூசியனுடன் கலந்துரையாடினர். அடுத்து, அவர் தமது குழுவுடன் மிலான் நகர் திரும்பினர். அங்கு சிலநாள் தங்கியபின் பீட்மாண்ட் (Piedmont) சென்று அங்கிருந்து டூரின் (Turin) வந்தடைந்தார். அங்கும் சின்னுள் தங்கி மக்களுக் கான மகத்தான பணிகளாற்றி பாரிஸ் திரும்பினர். 1808ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் முதல்நாள் மாலை பேரரசர் தமது இத்தாலியப் பயணத்தை இனிது முடித்து வந்தடைந்தார் பாரிஸ் மாநகர். பாரிஸ் பெருநகரும் வழக்கம் போல் விழாவெடுத்து அவரை வரவேற்று மகிழ்ந்தது. பேரரசர் போனபார்ட் அடுத்துத் தம் கவனத்தை போர்ச்சுக்கல், ஸ்பெயின் ஆகிய நாடுகளின்மீது செலுத்தினர்.

போர்ச்சுக்கல், ஸ்பானியத் தீபகற்பத்திலுள்ள சிறுநாடு. மூன்று மில்லியன் மக்கள் அங்கு வாழ்ந்தனர். அவர்களில் பெரும் பாலோர் அறியாமையாலும், ஆட்சியின் அடக்குமுறையாலும் ஆண்டாண்டுகாலமாக அவதியுற்று வந்தனர். அன்றியும் ஆங்கிலேயர் செல்வாக்கும் அச் சிறுநாட்டை ஆட்டிப்படைத்தது. உண்மையிலேயே அது இங்கிலாந்தின் குடியேற்ற நாடு போல் காணப்பட்டது. ஆங்கிலக் கப்பல்கள் அந் நாட்டின் துறைமுகங் களில் தங்கியிருந்தன. போர்ச்சுக்கல் நாட்டு வீதியெல்லாம் இங்கிலாந்துப் பொருட்கள் குவிந்துகிடந்தன. மக்களும் உரிமை யற்றவர்களாக வாழ்ந்து வந்தனர். நெப்போலியன் போர்ச்சுக் கீசிய அரசுக்கு மடல் ஒன்று அனுப்பி அந் நாட்டை இங்கிலாந் துடனே அல்லது அதற்கு எதிராகவுள்ள அணியுடனே பகிரங்க மாகச் சேர்ந்து கொள்ளும்படி கேட்டார். இங்கிலாந்துக்கெதி ரான அணியில் அச் சிறுநாடு சேர முன்வந்தால் உடனே அதன் துறைகளிலிருந்து ஆங்கிலக்கப்பல்கள் விரட்டப்படவேண்டு மென்றும், ஆங்கிலச் சரக்குகளைத் தடை செய்யவேண்டுமென்றும் அம் மடலில் அவர் தெரிவித்திருந்தார். ஆனல், போர்ச்சுக்கீசிய அரசு போனபார்ட்டின் மடலை இங்கிலாந்துக்கு அனுப்பி, அங் குள்ள அமைச்சர்கள்மூலம் பதில் பெற்று அவருக்கு அனுப்பி வைத்தது. அதனைக் கண்டு கொதிப்படைந்த போனபார்ட் ஒரு படையினை அனுப்பி போர்ச்சுக்கலை பணியவைக்க முன்வந்தார். தளபதி ஜூனட் (Junot) தலைமையில் ஒரு சிறு படை பிரனிஸ் மலையைத் தாண்டி லிஸ்பன் (Lisbon) நோக்கி விரைந்தது. அதனை அறிந்த போர்ச்சுகல் அரசரும் அரசியாரும் அரச குலத்தவரும் உடனே நாட்டைவிட்டகன்று பிரேசில் சென்றனர். ஃபிரெஞ்சுப் படையும் எவ்வித எதிர்ப்புமின்றி போர்ச்சுக்கல் தலைநகரம் லிஸ்பனைக் கைப்பற்றி அச் சிறுநாட்டைத் தன் வசப்படுத்தியது. அங்கு ஆங்கிலேயர் செல்வாக்கு அடியோடு ஒழிந்தது.

ஸ்பெயின் நாடு வரலாற்றுப் புகழ்மிக்க நாடு, அங்கு இப்போது நான்காம் சார்லஸ் என்பவர் மன்னராயிருந்தார். அவர் போர்போன் அரசு குலத்தைச் சார்ந்தவர். அவர் ஆற்றல் சிறிதும் அற்றவர். நாட்டு நலனில் அக்கறை காட்டாதவர். பொழுதெல்லாம் வேட்டையிலேயே கழித்தவர். அவரது அரசி லூயிசா மரியா (Louisa Maria) ஆடம்பரக்காரி; ஒழுக்கம் சிறிதும் இல்லாதவள்; கட்டிய கணவனை விட்டு மற்றொருவனுடன் கள்ளக் காதலில் ஈடுபட்டு நாட்டு மக்களின் நல்லெண்ணத்தை இழந்தவள். அவளது கள்ளக் காதலன், மனுவேல் கோடாய் (Manuel Godoy) என்ற போர் வீரன்; நல்ல பாடகன்; அவனுக்குப் பட்டங்களும், பதவிகளும் வழங்கப்பட்டன. கோடாயும் சார்லசும் நண்பர்களாயினர். ஃபெர்டினுண்ட்(Ferdinand), கார்லோ(Carlos) ஃபிரான்சிஸ்கோ (Francisco) என்ற மூன்று மக்களை சார்லஸ் பெற்றிருந்தார். அடுத்து, அரியணை ஏறுவதற்கான முத்திரையைப் பெற்றிருந்த ஃபெர்டினுண்ட் தந்தையைப்போல அறிவும், ஆற்றலும் அற்றவன்; தாயைப்போல ஒழுக்கங் கெட்டவன். 'கோவேறுக் கழுதையின் தலையையும் புலியின் இதயத்தையும் பெற்றவன் உனது மகன் ஃபெர்டினுண்ட்' என்று மரியா கூறுவதுண்டு. இருப்பினும், மன்னரின் மட்டரகப் போக்கினையும் அரசியின் அகங்காரங்கொண்ட அடாத செயல்களையும் கண்டு கொதிப்படைந்த ஸ்பானிய மக்கள் ஃபெர்டினுண்டை மன்னராக்கத் திட்டமிட்டனர். அதனை அறிந்த அரசரும், அரசியாரும் அவளது கள்ளக் காதலன் கோடாயும் ஃபெர்டினுண்ட் மன்னனுவதைக் தடுத்து நிறுத்த முற்பட்டனர். ஆகவே, அவர்களனைவரையும் நஞ்சிட்டுக் கொல்ல முன்வந்தான், இருபத்தைந்து வயதினை எட்டிய ஃபெர்டினுண்ட். அவனது ஏற்பாட்டினை அறிந்த கோடாய், ஃபெர்டினுண்டைச் சிறையிலடைத்தான்.

ஸ்பெயினின் வருங்கால மன்னன் சிறையிலடைபட்டான் என்ற செய்தி நாடெங்கும் பரவியது. உடனே, மக்கள் கடுங் கோபம் கொண்டு கோடாயைப் பழிவாங்க அவன் மாளிகைக்குள் நுழைந்தனர். அங்கொரு மூலையில் அவன் பயந்து நடுங்கி ஒளிந்திருந்தான். அவனைக்காணுத மக்கள் அரண்மனை நோக்கி விரைந்தனர். எங்கும் புரட்சிக்கான அறிகுறிகள் தோன்றின. மன்னரும் மக்களின் குமுறலைக்கண்டு பயந்து கோடாயைச் சிறையிலிட்டு, பின் அவனை நாடுகடத்தினர். சார்லஸ் மன்னரும் தாமாகவே முடிதுறந்து தமது மூத்தமகன் ஃபெர்டினுண்டை அரியணையில் அமர்த்தினர். ஆனல், மக்களின் வலுக்கட்டாயத்தால்தான் முடி துறந்ததாகவும், மீண்டும் தன்னை ஸ்பெயின் நாட்டின் அரியணையில் அமர்த்தும்படியும் சார்லஸ் பேரரசர் நெப்போலியனை வேண்டி மடல் அனுப்பினர். அரசனுக்கப்பட்ட ஃபெர்டினுண்டும்

தனது அரசை அங்கீகரித்துத் தனக்கு ஆதரவளிக்கும்படி போனபார்ட்டை வேண்டினன்.

சார்லஸ் முடிதுறந்த நேரத்தில் செயின்ட் கிளௌடில் (St. Cloud) போனபார்ட் தங்கியிருந்தார். அன்று சனிக்கிழமை; நெப்போலியனுக்குச் செய்தி எட்டியவுடன் இதுபற்றித் தளபதி சேவாரி (Savary)யுடன் கலந்துரையாடினர்; அடுத்து, அவரை முக்கிய குறிப்புகளுடன் மாட்ரிட் (Madrid) நகருக்கு உடனடியாக அனுப்பிவைத்தார். ஆலந்து மன்னருடனும், அப்போது மாட்ரிட் நகரில் தங்கியிருந்த தளபதி மூராட்டுடனும் அடிக்கடி தொடர்பு கொண்டு ஸ்பானிய நிலைமைகளை உன்னிப்பாகக் கவனித்துவந் தார். இருப்பினும், தாமே நேரிடையாக நிலைமைகளைக் கண் டறிந்து அதற்கேற்றவாறு நடவடிக்கைகளை மேற்கொள்ள விரும் பினர். 1808ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 2ஆம் நாள் பேரரசி யார் உடன்வர ஸ்பெயின்நாடு நோக்கிப் புறப்பட்டார். ஏப்ரல் திங்கள் 15ஆம் நாள் பிரனிஸ் மலை அடிவாரத்திலுள்ள பேயோன் (Bayonne) நகர்வந்தடைந்தார். அங்கிருந்து நாட்டு நிலைகளை விளக்கி ஃபெர்டினண்டுக்கு மடல் ஒன்று அனுப்பினர். உடனே, ஃபெர்டினண்ட் பேரரசரைக்காண பேயோன் விரைந் தான். போனபார்ட்டும் அவனை அன்புடன் வரவேற்று அவனது கூற்றுக்களைக் கேட்டறிந்தார். ஃபெர்டினண்ட், போனபார்ட் டைக் காணச்சென்றதையறிந்த சார்லசும் அவரது மனைவியும் உடனே பேயோன் நகர் வந்தடைந்தனர். இருதரப்பினரையும் போனபார்ட் அன்புடன் வரவேற்று விசாரணை நடாத்தினர். தமது நட்பு நாடான ஸ்பெயினின் அரசியல் நிலையினையும், அதனல் ஏற்பட்ட சிக்கலையும், அரச குடும்பத்தினரிடையே ஏற் பட்ட தீராப்பகையினையும் கண்டறிந்து, நெப்போலியன் பெரி தும் வருந்தினர். ஆனல் ஐரோப்பிய அரசியலரங்கில் ஸ்பெயினின் வலிமையை ஃபிரான்சுடன் நெருங்கிய நட்புறவுடன் நிலைநாட்ட எண்ணினர் நெப்போலியன். எனவே, இருதரப்பினரும் ஸ்பெயின் நாட்டை ஆளுகின்ற ஆற்றலை இழந்துவிட்டார்கள் எனக்கரு தினர். ஆகவே, ஃபெர்டினண்டிடமிருந்து ஸ்பெயின் நாட்டின் அரசுரிமை பறிக்கப்பட்டது; சார்லசுக்கும் அது மீண்டும் வழங் கப்படவில்லை. ஆனல், அரச குடும்பத்திலுள்ள அனைவருக்கும் போனபார்ட் உதவித்தொகைகளையும், உயர்ந்த மாளிகைகளையும் வழங்கி அவர்களை ஆதரித்தார். ஆண்டொன்றுக்கு ஒரு மில்லி யன் ஃபிராங்குகள் உதவித்தொகையும், ஆடம்பரமான நேவரி நாட்டுப்புறமாளிகை (The Chateau of Navarre)யும் ஃபெர்டினண் டுக்கு வழங்கப்பட்டன. அவனது தம்பிகள் ஒவ்வொருவருக்கும் ஆண்டொன்றுக்கு நானூறாயிரம் ஃபிராங்குகள் உதவித்தொகை

யாக வழங்கப்பட்டது. சார்லசும் அவரது மனைவியும் தங்களது எண்ணம் ஈடேறிய மகிழ்ச்சியில் வேற்று நாட்டில் வசதிகள் பல பெற்றுவாழ்ந்தனர். அடுத்து, நெப்போலியன் தமது அண்ணனை ஜோசப் போனபார்ட்டை ஸ்பெயின் நாட்டின் மன்னராக்கினார். அரசியலறிவும், அடக்கமும், அமைதியும் ஆட்சியில் நல்லார்வமும் கொண்ட ஜோசப் ஸ்பெயின் நாட்டின் பல்துறை வளர்ச்சிக்கும் பெரிதும் ஈடுபட்டார்.

ஸ்பெயின் நாட்டில் அமைதியை நிலைநாட்டிய பேரரசர் பேயோன் நகர்விட்டு பாரிஸ்நகர் விரைந்தார். ஃபிரான்சின் தென்மாநிலங்களின் வழியாக வந்த பேரரசரை மக்கள் உற்சாகத்துடன் வரவேற்று உள்ளம் பூரித்தனர். அவர் ஆங்காங்கே தமது கூரிய பார்வையைச் செலுத்தி மக்களின் குறைகளைக் கண்டுகளைவதிலும் ஈடுபட்டார். வழியெல்லாம் மக்களின் மகத்தான வரவேற்புகளைத் தாங்கி பேரரசர் 1808ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் தலைநகர் வந்தடைந்தார்.

ஸ்பெயின் நாட்டில் வாழையடி வாழையாக அரசாண்டு வந்த போர்போன் அரசு குலத்தவருக்கு ஏற்பட்ட கதியினைக் கண்ட ஆஸ்திரியா அஞ்சியது. தனக்கும் அத்தகைய கதி ஏற்படுமோ என்ற அச்சம் ஆஸ்திரியப் பேரரசரைப் பெரிதும் வாட்டியது. ஆகவே, எந்த விலைகொடுத்தேனும், ஐரோப்பாவில் பழைய அரச குலத்தவர் ஆட்சி ஒழிக்கப்படுவதைத் தடுத்து நிறுத்தவேண்டும் என்று உறுதிகொண்டது ஆஸ்திரியா. அதற்கான ஆக்கவேலைகளில் அது உடனடியாக இறங்கியது. 'ஸ்பானிய மன்னனைப் போல் அவ்வளவு எளிதில் ஆஸ்திரியப் பெருமன்னன் முடிதுறக்க மாட்டான்' என்று அறிவித்தார் ஆஸ்திரியப் பேரரசர். போனபார்ட்டின் ஸ்பானிய ஏற்பாடு ஐரோப்பிய முடியரசர்களிடையே மீண்டும் அச்சத்தையும், அமைதியின்மையையும் உருவாக்கியது. மீண்டும் அங்கு போர்மேகங்கள் திரண்டன. ஆஸ்திரியா முழுவதும் போருக்கான ஏற்பாடுகள் தீவிரப்படுத்தப்பட்டன. ஒவ்வொரு நாளும் எழுநூறுயிரம் வீரர்களுக்குப் போர்ப்பயிற்சி அளிக்கப்பட்டது. பதினைன்காயிரம் குதிரைகள் உடனடியாக வாங்கப்பட்டன ; ஏராளமான துப்பாக்கிகள் வரவழைக்கப்பட்டன. வாய்ப்புக்கேடாக ஆஸ்திரியா தோற்கடிக்கப்பட்டால் அங்கேரி (Hungary)யில் தங்கி நீண்டதொரு தற்காப்புக்கான போரில் ஈடுபடவும் ஆஸ்திரியர் திட்டமிட்டனர். அதற்கேற்றவாறு அங்கேரியைச் சுற்றிலும் அரண் அமைக்கும் பணியில் இருபதினாயிரம் பேர் ஈடுபட்டனர். ஃபிரான்சின் எல்லைப்பகுதிகளை நோக்கிப் படைகள் பல விரைந்தன. தேசிய எழுச்சியும் மக்களிடையே உயர்ந்து காணப்பட்டது. தங்கள் கண்ணில்பட்ட ஃபிரெஞ்சுக்

காரர்களை ஆஸ்திரியர்கள் வலிய வம்புக்கிழுத்து இழிவுபடுத்தினர். ஆஸ்திரியாவின் போர் ஏற்பாடுகளை அறிந்த போனபார்ட்டும் போருக்குத்தயாரானுர். ஆனுல், ஆஸ்திரிய அமைச்சர் மெட்டர்னிக் (Metternich)கும் பேரரசர் போனபார்ட்டும் சந்தித்துபேசி நிலைமையைச் சீராக்க முயன்றனர். இதற்கிடையில், மீண்டும் ஸ்பெயின் நாட்டில் மக்கள் ஃபிரெஞ்சு ஆட்சிக்கெதிராகக் கிளர்ந்தெழுந்தனர். ஜோசப் போனபார்ட்டின் ஆட்சிக்கு முடிவுகட்ட அவர்கள் முனைந்துபோரிட்டனர். அவர்களுக்கு உதவிசெய்ய இங்கிலாந்து முன்வந்தது. ஸ்பெயினில் நெப்போலியனுக் கெதிராக மக்கள் கிளர்ந்தெழுந்துவிட்டனர் என்றசெய்தி இங்கிலாந்து மன்னருக்கு எட்டியவுடன் அவர் துள்ளிக் குதித்துக் கிளர்ச்சிக்கு ஆதரவுகாட்ட முன்வந்தார். இங்கிலாந்திலுள்ள ஸ்பானியக் கைதிகளனைவரும் உடனடியாக விடுதலை செய்யப்பட்டனர். அவர்களுக்கு உடையும், நல்லுணவும், போர்க்கருவிகளும் கொடுத்து அவர்களை ஸ்பானியப் புரட்சியில் ஈடுபடும்படி பணித்து இங்கிலாந்து அனுப்பியது. அன்றியும், முப்பதினுயிரம் பேர்களடங்கிய ஆங்கிலப்படை ஒன்றும் ஆர்தர்வெல்லஸ்லி தலைமையில் ஸ்பெயினுக்கு ஆதரவாக அனுப்பப்பட்டது. ஸ்பெயின் நாட்டில் ஏற்பட்ட நெருக்கடி உடனடியாகப் பேரரசருக்குத் தெரிவிக்கப்பட்டது. இருபதினுயிரம் வீரர்களடங்கிய ஃபிரெஞ்சுப்படையொன்று தளபதி டூபான்ட் (General Dupont) தலைமையில் ஸ்பானியக் கிளர்ச்சியை அடக்க அனுப்பப்பட்டது. ஆனுல், அப் படை பேலென் (Baylen) என்ற இடத்தில் ஸ்பானியர்களால் தோற்கடிக்கப்பட்டது. இத் தோல்வி பிற்காலத்தில் நெப்போலியன் பெற்ற தோல்விகளுக்கு முன்னேடியாக அமைந்தது. ஸ்பெயினில் மேலும் நிலைமை மோசமாகாதவாறு தடுத்து அமைதியை நிலைநாட்ட நெப்போலியன் ஸ்பெயின் செல்லத் திட்டமிட்டார்.

இதற்கிடையில், இரஷ்யப்பேரரசர் அலெக்சாண்டரும், பேரரசர் நெப்போலியனும் மீண்டும் சந்தித்துப்பேசி ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்ட முற்பட்டனர். 1808ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 27ஆம் நாள் இரு பெருமன்னர்களும் ஜெர்மனியிலுள்ள எர்ஃபர்த் (Erfurth) என்ற நகரில் சந்தித்துப் பேச ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஐரோப்பாவின் தலைவிதியை நிர்ணயிக்கும் இடமாக எர்ஃபர்த் கருதப்பட்டது. ஐரோப்பிய அரச குலத்தவர்கள் அங்கு அலைகடலெனத் திரண்டனர். ஐரோப்பிய மன்னர்கள், இளவரசர்கள், அறிஞர்கள் பலரும் அங்கு வருகைதந்து இரண்டு பேரரசர்களையும் ஒன்ருக கண்டுகளிக்க ஆர்வமுடனிருந்தனர். ஐரோப்பா முழுவதும் எர்ஃபர்த் பேச்சினை ஆவலுடன் எதிர்பார்த்து நின்றது. பேரரசர் போனபார்ட் தமது புகழ்மிக்க

குழுவுடன் அன்று காலை பத்து மணியளவில் அங்கு வந்து சேர்ந் தார். அவரது வருகையைச் சிறப்பிக்கும் வகையில் அந் நகர் முழுவதும் அலங்கரிக்கப்பட்டு வனப்புடன் காட்சியளித்தது. மன்னர்களும் குறுநிலமன்னர்களும் கோமான்களும் பெருமான் களும் அந் நகர் முழுதும் திரண்டிருந்து, போனபார்ட்டை வரவேற்று மகிழ்ந்தனர். நெப்போலியன் எர்ஃபர்த் நகரை அடைந்தபின் தமது அருமை நண்பர் பேரரசர் அலெக்சாண்டர் நகருக்கப்பால் வந்துகொண்டிருந்த செய்தி அவருக்கு எட்டியது. உடனே, தமது குழு உடன்வர, குதிரைமீதமர்ந்து, ஊர்வலமாகச் சென்று ஆறு கல் தொலைவுக்கப்பால் அலெக்சாண்டரையும் அவரது குழுவினரையும் வழியில் சந்தித்து வரவேற்றார். அலெக் சாண்டரைக் கண்டவுடன் போனபார்ட் ஆவலுடன் விரைந்து சென்று அவரை ஆரத்தழுவி வரவேற்றார். அங்கிருந்து இரண்டு மாமன்னர்களும் குதிரைமீதேறி, உரையாடியவாறே, எர்ஃபர்த் வந்தடைந்தனர். அன்றுமாலை அப் பெருநகர் முழுவதும் விழாக் கோலம் பூண்டு பேரரசரிருவருக்கும் மகத்தான வரவேற்பளித் தது. அன்றிரவு நடந்த நாடகத்தில் இருபெரு மன்னர்களும் மேடையில் அருகருகே அமர்ந்திருத்தலைக் கண்ட மக்கள் அக் கொட்டகை அதிரும்படியாக ஆரவாரத்துடன் கை தட்டி அவர் களை வரவேற்றனர். எர்ஃபர்த் மாநாடு இருபது நாள் நடந்தது. இரு பெருமன்னர்களும் இணைந்து ஐரோப்பாவின் பல்வேறு சிக்கல் கள் குறித்து விவாதித்தனர். அத்துடன் அவர்கள் அந் நாட்களில் பெரிதும் இன்புற்றிருந்தனர். நடன, நாடக நிகழ்ச்சிகள் அவர் களை மகிழ்ச்சியில் ஆழ்த்தின. ஒருநாள் மாலை, குழுநடனம் (Ball) சிறப்பாக நடந்துகொண்டிருந்தது. பேரரசர் அலெக்சாண்டரும் அதில் பங்கெடுத்துக்கொண்டு சிறப்பித்தார். அவர் வெஸ்ட் பேலியா அரசி (Queen of Westphalia) யுடன் அயராது ஆனந்தமாக ஆடினர். ஆனால், அருகிலிருந்த போனபார்ட் அவரது ஆட்டத் தில் கலந்துகொள்ளாது அறிஞர் கோதே (Goethe) யுடன் உரை யாடிக்கொண்டிருந்தார். அக் குழுநடன நிகழ்ச்சி முடிந்தபின் போனபார்ட், 'வெய்மர் (Weimer) நகரில் நடந்த குழுநடனம் (Ball) ஒன்றிற்கு நான் சென்றிருந்தேன். பேரரசர் அலெக்சாண் டர் அருமையாக ஆடினர். ஆனல், நான் ஆடவில்லை ; நாற்பது வயது, நாற்பது வயது நான்' என்று தமது உயிருக்குயிராம் பேர ரசி ஜோசபைனுக்கு எழுதினர்.

எர்ஃபர்த் மாநாட்டில் முக்கிய முடிவுகள் பல எடுக்கப்பட்டன. ஃபிரான்சும் இரஷ்யாவும் தங்களது வலிவான உறவை மீண்டும் புதுப்பித்துக்கொண்டன ; இரு பெருநாடுகளும் இராணுவ உடன் பாடு செய்து கொண்டன. ஐரோப்பிய அமைதிக்கு ஒத்துழைப்பு

நல்கும்படி இங்கிலாந்தை மீண்டும் வற்புறுத்த முடிவுசெய்யப்பட்டது. இங்கிலாந்து மக்களை அமைதிக்கான வழியில் திருப்பி அவர்கள் மூலம் இங்கிலாந்து அமைச்சரவையை அமைதிக்குப் பாடுபடும்படி வற்புறுத்தவேண்டும் என்றும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஜோசப் போனபார்ட்டே ஸ்பானிய மன்னராக நீடிக்க வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. ஃபின்லாந்து, மோல்டேவியா (Moldavia), வாலேச்சியா (Wallachia) ஆகியவை இரஷ்யாவின் உடைமையாகவேண்டும் என்பதை ஃபிரான்சு ஏற்றுக்கொண்டது. நெப்போலியன் தமது கைப்பட இங்கிலாந்துக்கு அமைதிவழிக்காக அருமடல் ஒன்று தீட்டினர். அதில் இரு பெரு மன்னர்களும் கையெழுத்திட்டு உடனே அனுப்பிவைத்தனர். அமைதிக்கான ஆக்கவேலைகளில் தங்களுடன் ஒத்துழைக்கும்படி ஆஸ்திரியப்பேரரசர் ஃபிரான்சிசுக்கும் மடல் ஒன்று தீட்டியனுப்பப்பட்டது. அன்றியும், இரு மாமன்னர்களும் தனியாகச் சந்தித்து உரையாடிய நேரங்களில் ஜோசபைனின் திருமணவிலக்கும் பலமாக அடிபட்டது. தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட பிளிபிய (Plebian) இனத்தில் தோன்றிய போனபார்ட் அரச குலத்து அணங்கு ஒருத்தியை மணந்தால் அதன்மூலம் அவர் அரசகுலத்தவராக உயர்த்தப்படலாம்; அவரை தாழ்த்தப்பட்டவன் என்று கருதிய ஐரோப்பிய அரசர்கள் பலர் அவரை தங்கள் பட்டியலில் சேர்த்து மகிழ்வர்; அன்றியும், ஐரோப்பாவில் அரசகுலத்தவர் அவருக்கெதிராகச் செய்யும் ஆர்ப்பாட்டமும் முற்றுப் பெறும் என்ற எண்ண அலைகள் அவரது உள்ளத்தில் மோதின. மேலும், தமக்குப் பின்னுல் பேரரசைக் கட்டியாளும் வகையில் வாரிசு ஒன்றும் புதிய அரசகுல மணத்தின்மூலம் கிடைக்கும் என்றும் அவர் கருதினர். ஆகவே, இரு பெருமன்னர்களும் ஜோசபைனின் உள்ளம் நோகாதபடி அவரை அணுகி திருமணவிலக்குப் பெற முடிவு செய்தனர். ஜோசபைனை விலக்கிவிட்டு புதிய அரசிளங் குமரியின் திருமணத்தின் மூலம் ஐரோப்பாவில் அமைதியை நிலை நாட்ட இயலும் என்று போனபார்ட் நம்பினர்.

எர்ஃபர்த் மாநாட்டில் இருபதுநாள் தங்கி ஏற்றமிக்க முடிவுகளை மேற்கொண்டபின் இரு பெரு மன்னர்களும் அக்டோபர் திங்கள் 14ஆம் நாள் காலை பிரியாவிடைபெற்றுத் தத்தம் தாயகம் புறப்பட்டனர். போனபார்ட் எர்ஃபர்த்திலிருந்து கொஞ்சதூரம் அலெக்சாண்டருடன் சென்று அவரை அணைத்துத்தழுவி விடை கொடுத்து அனுப்பினர். அன்றுமாலை நெப்போலியன் எர்ஃபர்த் நகர் விட்டுக் கிளம்பி அக்டோபர் திங்கள் 18ஆம் நாள் பாரிஸ் வந்தடைந்தார். வந்தவுடன் இங்கிலாந்துக்கு அனுப்பிய அமைதி வழிமடல் குறித்து ஆவலுடன் விசாரித்தார். ஆனல், இங்கிலாந்து

வழக்கம்போல் அவரது வேண்டுகோளைப் புறக்கணித்துப் போர்ப் பரணி பாடியது. ஐரோப்பிய அமைதிக்கான கதவுகளை அடைத்துத் தாள்போடுவதை ஆங்கில அரசு ஆர்வத்துடன் செய்தது. ஆகவே, எர்ஃபர்த் மாநாட்டின் அமைதி ஏற்பாடுகள் அனைத்தும் 'நொந்த சோறு' போலாயிற்று.

எர்ஃபர்த் மாநாட்டின் அமைதி ஏற்பாட்டினை ஏற்றுக்கொள்ள மறுத்த இங்கிலாந்து ஸ்பானியத் தீபகற்பப் போரில் தீவிரமாகக் குதித்தது. ஸ்பானிய மக்களை ஜோசப் போனபார்ட்டின் ஆட்சிக்கெதிராக கிளர்ந்தெழும்படி தூண்டியதுடன் அவர்களுக்கு ஆதரவாகப் படையும் பொருளும் கொடுத்து உதவியது. ஆகவே, எர்ஃபர்த் மாநாட்டிற்கு முன்பே திட்டமிட்டபடி ஸ்பெயினுக்குச் செல்லமுற்பட்டார் போனபார்ட். 1808ஆம் ஆண்டு, அக்டோபர் திங்கள், 29ஆம் நாள் பேயோன் (Bayonne) விரைந்தார். அவரது வண்டி, ஆகாயத்தில் வால்மீன் (Comet) போல, அதிவேகமாய்ச் சென்று நவம்பர் திங்கள் 3ஆம் நாள் காலை பேயோன் நகர் அடைந்தது. அன்றே அவர் தளபதி பெர்தியருடன் கலந்து பேசி போர் ஏற்பாடுகளை விரைவு படுத்தினார். நவம்பர் திங்கள் 11ஆம் நாள் ஸ்பானியப் படைகளை பர்காஸ் (Burgas) என்ற இடத்தில் சந்தித்துத் தாக்கினார். போனபார்ட்டின் பீரங்கித்தாக்குதலைக் கண்ட ஸ்பானியர் சிதறி ஓடினர். அடுத்து, எஸ்பிநோசா (Espinosa) என்ற இடத்தில் முப்பதாயிரம் ஸ்பானிய வீரர்களுடன் போனபார்ட்டின் படைபோரிட்டு அவர்களை ஓடஓட விரட்டியது. புறமுதுகிட்டு ஓடிய ஸ்பானியப் படையினர் சோமாசியரா (Somosierra) கணவாய்ப் பகுதியில் ஒன்றுபட்டு இறுதித் தாக்குதலுக்குத் தயாராயினர். அங்கு ஃபிரெஞ்சுப் படை அவர்களைப் பயங்கரமாகத் தாக்கியது. ஆட்டுக் கூட்டத்தில் சிங்கம் புகுந்ததைப்போல ஃபிரெஞ்சு வீரர்கள் ஸ்பானியர்களை வேட்டையாடினர். இறுதியில், ஸ்பானியப் படையினர் ஆயுதங்களைப் போட்டுவிட்டுச் சிதறியோடினர். இதற்கிடையில், ஆங்கிலப் படையொன்று சர் ஜான் மூர் (Sir John More) தலைமையில், ஸ்பானியர்களுக்கு உதவும்வகையில் போர்ச்சுக்கல்லின் வடபகுதியிலிருந்து ஸ்பெயின்நோக்கி வந்துகொண்டிருந்தது. ஆனால், போனபார்ட் ஆங்கிலப் படையைச் சந்தித்து வீழ்த்துவதற்குமுன் ஸ்பானியப் படையினரை வேட்டையாட விரும்பினார். ஆகவே, அவர் எதிர்கொண்ட ஸ்பானியர் படைகளையெல்லாம் வென்று, டிசம்பர் திங்கள் 2ஆம் நாள் மாட்ரிட் (Madrid) வந்தடைந்தார். அப்போது அவரது வெற்றிப் படையில் எண்பதாயிரம் வீரர்களிருந்தனர். ஸ்பானியத் தலைநகரான மாட்ரிட் அப்போது கலகக்காரரர் வசமிருந்தது. ஆண்களும், பெண்களும், குழந்தைகளுமாக அப் பெரு நகரில் இலட்சத்து எண்ப

தாயிரம் பேர் இருந்தனர். அவர்களுக்கெல்லாம் எவ்வித இடை யூறும் ஏற்படாவண்ணம் ஃபிரெஞ்சுப் படை மாட்ரிட் நகரைக் கைப்பற்றியது. அப் பெருநகரில் போனபார்ட் மீண்டும் அமைதியை நிலைநாட்டினார். பேலென் போருக்குப் பிறகு தப்பி யோடிய ஜோசப் மீண்டும் அரியணையில் அமர்த்தப் பெற்றார். மக்களுக்கான உரிமைகள் பல வழங்கப்பட்டன.

கிளர்ச்சிக்காரர்களிடமிருந்து பாதி ஸ்பெயினை மீட்டு மாட்ரிட் நகரில் மீண்டும் அமைதியை நிலைநாட்டி போனபார்ட் பாரிஸ் திரும்பினார். ஸ்பெயினில் கலகத்தை அடக்கி அமைதியை நிலை நாட்டும் பணி தளபதி சோல்ட் (Soult) என்பவரிடம் ஒப்படைக்கப் பட்டது. மாட்ரிட் நகர் வீழ்ந்தாலும் மற்ற மலைப்பகுதிகளில் ஸ்பானியர் மறைந்திருந்து தாக்குதலைத் தொடர்ந்துவந்தனர். தேசிய எழுச்சியால் உந்தப்பட்ட ஸ்பானியர் கொரில்லாப்போரி லும் ஈடுபாடுகொண்டனர். எனவே, அவர்களை முற்றிலும் தோற் கடிப்பது ஃபிரெஞ்சுப் படையினருக்கு எளிதல்ல. கலகக்காரர்கள் புற்றீசல்போல் கிளம்பி தாக்குதலில் ஈடுபட்டனர். அவர்களுக்கு இங்கிலாந்தும் அடிக்கடி உதவி செய்து வந்தது. நெப்போலியனது புகழுடம்பில் புரையோடிய புண்போல ஸ்பெயின் மாறியது. ஐரோப்பிய அமைதிக்குப் புறம்பான வழிகளில் ஆதிக்கப்போரில் ஆஸ்திரியா மீண்டும் இறங்கிய காரணத்தால் நெப்போலியன், ஸ்பெயின் போரைத் தமது தளபதிகளிடம் ஒப்படைத்துவிட வேண்டியதாயிற்று. இருப்பினும், ஃபிரெஞ்சுப் படையினர் ஸ்பெயின் நாட்டில் அமைதியை நிலைநாட்டும் வகையில் அயராது போரிட்டுவந்தனர். முப்பதாயிரம் வீரர்களுடன் ஆங்கிலத்தளபதி மூர், ஸ்பெயினுக்குள் நுழைந்தார். ஆனால், நெப்போலியனது வெற்றிகளை அறிந்து மூர் உடனே படைகளுடன் திரும்பினார். திரும்பிச் சென்ற மூர் படையினை விடாது விரட்டிச் சென்றார் ஃபிரெஞ்சுத் தளபதி சோல்ட். இரு படைகளும் காருன்னா (Corunna) என்ற இடத்தில் மோதின. 1809ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் நடந்த இந்தக் கைகலப்பில் இங்கிலாந்துப் படை தோற் கடிக்கப்பட்டது. தளபதி மூர் இப் போரில் இறந்துபட்டார். ஆறாயிரம் வீரர்கள் சேதத்துக்குள்ளாயினர் ; மூவாயிரம் குதிரை கள் மாண்டன ; எஞ்சிய ஆங்கில வீரர்கள் கப்பலேறித் தப்பினர்.

ஸ்பெயினைவிட்டுக் கிளம்பிய நெப்போலியன் ஜனவரித் திங்கள் 22ஆம் நாள் இரவு பாரிஸ் நகர் வந்தடைந்தார். வந்தவுடன் ஆஸ்திரியாவின் படையெடுப்பு ஏற்பாடுகள்பற்றி விசாரித்தறிந் தார். வியென்னநகரில் ஆங்கிலத்தூதர்கள் பலர் ஆஸ்திரியாவை மீண்டும் இங்கிலாந்துடன் இணைத்து ஃபிரான்சுடன் மோது வதற்கான வேலைகளில் ஈடுபாடுகொண்டிருந்தனர். ஆங்கிலேயர்

உதவி தமக்கு எப்போதும் உண்டு என்ற நம்பிக்கையில் ஆஸ்திரியாவும் ஃபிரான்சு மீது பாய்வதற்கான ஏற்பாடுகளைத் தீவிரப்படுத்தியது. ஜனநாயக உரிமைகளின் வீர ஆதரவாளன் (Champion), புரட்சியின் குழந்தை போனபார்ட்டை நசுக்கும் பொருட்டு ஐந்து லட்சம் ஆஸ்திரிய வீரர்கள் ஃபிரான்சின் எல்லைகளைநோக்கி அணிவகுத்துப் புறப்பட்டனர். இரண்டு இலட்சம் பயிற்சி பெற்ற வீரர்களுடன் பெருங்கோமகன் சார்லஸ் (Archduke Charles) இன் (Irn) நதியைக்கடந்து பவேரியாவுக்குள் நுழைந்தார். 1809ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பத்தாம் நாள் அவர் பவேரியாவின் தலைநகரான மூனிச் நோக்கிப் படை மேற்கொண்டு சென்றார். அதனை அறிந்த பவேரிய மன்னர் தலைநகரிலிருந்து ஓடி தமது நாட்டுப்புற மாளிகையில் மறைந்து வாழ்ந்தார். ஆஸ்திரியப்படை பவேரியாவுக்குள் நுழைந்த சேதியினைக் கேட்ட நெப்போலியன் உடனே விரைந்தார் பவேரியாவுக்கு. பவேரிய மன்னரைத் திடீரென்று சந்தித்து அவருக்கு ஆறுதல்கூறி, பதினைந்து நாட்களுக்குள் பகைவர்களைப் பவேரியாவிலிருந்து விரட்டி அவரை மீண்டும் தலைநகரில் கொலுவீற்றிருக்கச் செய்வதாக உறுதியும் கூறிச் சென்றார் நெப்போலியன். அதற்கேற்றவகையில் ஃபிரெஞ்சுப் படைகள் திரண்டன. ஏவுகணை வேகத்தில் ஃபிரெஞ்சு வீரர்கள் பவேரியா நோக்கிப் பாய்ந்துசென்றனர். எதிர்த்த ஆஸ்திரியப் ப்டையினரை வீழ்த்தினர். புறங்காட்டி ஓடிய படைகளையெல்லாம் விரட்டிச்சென்று தாக்கினர். இருப்பினும், தளர்ச்சி சிறிதுமின்றி ஒரு இலட்சம் வீரர்களுடன் சார்லஸ், எக்முல் (Eckmuhl) என்ற இடத்தில் அணிவகுத்து நின்றார். ஏப்ரல் திங்கள் 20ஆம் நாள் எக்முல் களத்தில் ஃபிரெஞ்சு வீரர்களும், ஆஸ்திரியப் படையினரும் பயங்கரத் தாக்குதலில் இறங்கினர். பல மணி நேரம் தாக்குதல் நீடித்தது. ஆஸ்திரியப் பெரும்படை இறுதியில் குழப்பத்திலாழ்ந்து சிதறி ஓடியது. ஆறுயிரத்துக்கு மேற்பட்ட ஆஸ்திரிய வீரர்கள் மாண்டனர்; இருபதினாயிரம் வீரர்கள் சிறைபிடிக்கப்பட்டனர்; ஏராளமான கருவிகளும், உணவுப்பொருட்களும் ஃபிரெஞ்சுப் படையினர் வசமாயின. எக்முல் களமும் ஆஸ்திரியர்களுக்கு ஏமாற்றத்தையளித்தது. அங்கு தோற்றோடிய சார்லஸ் எஞ்சிய வீரர்களுடன் டான்யூப் நதியைக் கடந்து பொகீமியாவில் சென்று தப்பித்துக்கொள்ள முயன்றார். ஆனால், அவ்வாறு தப்பியோட முயன்ற ஆஸ்திரியப் படையை இரேட்டிஸ்பான் (Ratisbon) என்ற இடத்தில் ஃபிரெஞ்சுப் படையினர் சுற்றிவளைத்துத் தாக்கினர். இருதரப்பினரும் முழுமூச்சுடன் தாக்குதலில் இறங்கினர். பேரரசர் நெப்போலியனது காலில் குண்டுபட்டுக் காயமேற்பட்டது. தங்களது பேரரசருக்குக் காயத்தை உண்டாக்கிய பகை

வர்கள்மீது ஃபிரெஞ்சு வீரர்கள் வெறிகொண்டு தாக்கினர். ஆகவே, ஆஸ்திரிய வீரர்கள் அஞ்சி ஆற்றைக்கடந்து தப்பியோடினர். பவேரியாவை விட்டு அவர்கள் முழுவதுமாக விரட்டியடிக்கப்பட்டனர். இரேட்டிஸ்பான்நகர் சீர்திருத்தி அமைக்கப்பட்டது. பவேரிய மன்னர் மீண்டும் தலைநகர் சென்றார். அடுத்து, நெப்போலியன் தமது வெற்றிப் படையுடன் வியென்னாமீது பாயத் திட்டமிட்டார். இரேட்டிஸ்பான் நகரிலிருந்து இருநூறு கல் தொலைவில் ஆஸ்திரியத் தலைநகர் வியென்னா உள்ளது. இடையில் ஆறுகள் பலவற்றைக் கடக்கவேண்டும். இருப்பினும் கொண்ட பணியில் உறுதியும் உற்சாகமும் கொண்ட போனபார்ட் வியென்னா நோக்கிப் படையுடன் விரைந்தார். ஆயின், டான்யூப் நதியைக் கடக்கும் அவரது முதல் முயற்சி கடினமாக இருந்தது. ஆஸ்பர்ன் எனுமிடத்தில் நடந்த போரில் ஆஸ்திரியப் படையினர் விடா முயற்சியுடன் கடுமையாகப் போராடி நெப்போலியன் டான்யூப் நதியினைக் கடப்பதைத் தடுத்தனர். நெப்போலியன் தலைமையில் இருந்த ஃபிரெஞ்சுப்படை தோற்றுவிட்டது எனும் வதந்தி காட்டுத் தீ போல் பரவியது. நெப்போலியன் நிலைமையை நன்கு சீர்தூக்கிப்பார்த்து ஆஸ்திரியர் அறியாவண்ணம் மற்றொரு இடத்தில் ஆற்றைக் கடந்து 1809ஆம் ஆண்டு மே திங்கள் பத்தாம் நாள் ஆஸ்திரிய தலைநகர் வியென்னா வந்தடைந்தார். அவரது வருகையைக் கண்ட அரசகுலத்தினரும் மேட்டுக் குடியினரும் தலைநகரைவிட்டு ஓடினர். அரச குடும்பத்தினர் அப்போது நோய் வாய்ப்பட்டிருந்த இளவரசியை விட்டுவிட்டு ஓடிவிட்டனர். அவளுக்கு எவ்விதத் தீங்கும் ஏற்படாவண்ணம் போனபார்ட் காத்தார். அவளே தமது வருங்காலப் பேரரசி என்பதை அவர் அப்போது அறிந்திருக்கவில்லை. அவளும் பேரரசர் போனபார்ட்டை மணந்து ஃபிரான்சின் பேரரசியாவாள் என்று எதிர்பார்க்கவில்லை. இருப்பினும், வருங்கால ஃபிரெஞ்சுப் பேரரசி போனபார்ட்டால் காப்பாற்றப்பட்டாள்.

வியென்னா நகரில் தொண்ணூறாயிரம் வீரர்களுடன் போனபார்ட் தங்கியிருந்தார். அதனையறிந்த சார்லஸ் தலைநகரை மீட்கும் வகையில் இலட்சம் வீரர்களுடன் டான்யூப் நதிவழியாக விரைந்து வந்து வியென்னா நகருக்கெதிரே நதியின் அக்கரையில் பெரும் படையுடன் காத்திருந்தார். போனபார்ட் தமது பெரும் படையுடன் ஆற்றைக் கடந்துசென்று லோபோ (Lobau) தீவில் தங்கிச் சார்லசின் படையினைத் தாக்கமுற்பட்டார். அதற்கான ஆக்கப் பணிகள் மே திங்கள் 19ஆம் நாள் காலை பத்து மணியளவில் தொடங்கின. அதனைத் தொடர்ந்து இருபடைகளும் தீவிரத் தாக்குதலில் இறங்கின. இப் போரில் நெப்போலியனின் நெருங்கிய

நண்பரும், ஆற்றல்மிக்க தளபதியுமான இலேன்னெஸ் (Lannes) இரு கால்களும் துண்டிக்கப்பட்டு இறந்தார். களத்தில் அவர் குண்டடிபட்டுக் கால்களை இழந்து தவித்தநேரத்தில் போனபார்ட் அவரை அணுகி ஆறுதல் கூறினர். அடுத்துத் தம் படைகளை ஆவேசமாகத் தாக்கும்படி ஆணையிட்டார். முப்பது மணிநேரம் தொடர்ந்து நடந்த அப் போரில் பல்லாயிரக்கணக்கான வீரர்கள் பலியாயினர். இருபத்தாருயிரம் ஆஸ்திரிய வீரர்களும் பதினைந் தாயிரம் ஃபிரெஞ்சு வீரர்களும் மாண்டனர். பிணங்கள் எங்கும் பரந்துகிடந்தன. இரத்தம் ஆருக ஓடியது. வேக்ராம் (Wagram) களத்தில் நடைபெற்ற போர் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. அதில் ஃபிரெஞ்சுப் படைகள் முழு வெற்றி பெற்ற போதிலும் அது எளிய வெற்றியாக அமையவில்லை. இரு தரப்பிலும் ஆள்சேதம் அதிகம். பல்லாயிரக் கணக்காஞேர் கைகால்களை இழந்தனர். இத்தகைய பேரிழப்புகளைத் தாங்கி அப் பெரும்போர் முடிந்தது. ஆஸ்திரியாவும் ஃபிரான்சும் அக்டோபர் திங்கள் பதினன்காம்நாள் மீண்டும் நான்காவது தடவையாக அமைதியுடன்பாடு செய்து கொண்டன.

வியென்ன உடன் பாட்டுச் செய்தி மக்களின் உள்ளங்களைக் குளிரவைத்தது. போனபார்ட்டும் பெரிதும் மனநிறைவு கொண் டார். ஆஸ்திரியாவுடன் செய்துகொண்ட உடன்பாட்டின்படி பவேரியாவின் எல்லைகள் பலப்படுத்தப்பட்டன. மீண்டும் ஆஸ்திரி யாவின் தாக்குதலுக்குள்ளாகாதவாறு அதன் நிலை உருவாக்கப் பட்டது. சாக்சனி (Saxony) நாட்டில் ஆயிரத்து நூருயிரம் மக்களைக் குடியேற்றி அது பெரிதுபடுத்தப்பட்டது. பெரும் இழப் பீட்டுத் தொகையும் இல்லீரிய மாநிலங்கள் என அழைக்கப்பெறும் பகுதிகளும் ஆஸ்திரியா ஃபிரான்சுக்குக் கொடுத்தது. இத்தாலி நாடும் விரிவுபடுத்தப்பட்டு வலிமையாக்கப்பட்டது. ஃபிரான்சின் நட்பு நாடுகளனைத்தும் வருங்காலத் தாக்குதல்களிலிருந்து தற் காத்துக்கொள்ளும்வகையில் வலிமைபெற்றன. எல்லைப்புற நாடுகள் பெற்றவலிமை இயல்பாக ஃபிரான்சின் தற்காப்பினை மேலும் பலப் படுத்தியது. போலந்து நாட்டின் ஒரு பகுதியான சாக்சனி பலப் படுத்தப்பட்டதை அலெக்சாண்டர் கண்டித்தார். போனபார்ட் டின் போலந்து நடவடிக்கை விரைவில் போலந்து முழுவதையும் விடுவிடுக்க வழிவகுக்கும் என அவர் அஞ்சினர். இரஷ்யாவிற்கும் ஃபிரான்சுக்குமிடையே நிலவிய நட்புறவினைப் பாதிக்கும் நஞ்சு வித்துகளும் வியென்ன உடன்பாட்டில் கலந்திருந்தன.

வியென்ன உடன்பாட்டினை வெற்றிகரமாக முடித்த போன பார்ட் விரைந்தார் பாரிஸ் நோக்கி. தலைநகர் வந்தபின் வழக் கம்போல் அரசாங்கப்பணிகளில் தீவிரக் கவனம் செலுத்தினர்.

அத்துடன் தமது மறுமணம் குறித்தும் ஆழ்ந்து சிந்தித்து முடிவெடுத்தார். தமது உள்ளத்தில் இரண்டறக் கலந்துவிட்ட பேரரசியார் ஜோசபைனை மணவிலக்குச் செய்துவிட்டு அரசிளங்குமரி ஒருத்தியை மணந்துகொள்ள அவர் உறுதிகொண்டார். ஆகவே ஜோசபைன் விவாகரத்துபற்றி அவரிடம் கலந்துபேசி முடிவெடுக்க முற்பட்டார். அதற்கு வழிவகுக்கும் வகையில் ‘விவாகரத்து’ பாரிஸ்நகர முழுதும் விளம்பரப்படுத்தப்பட்டது. ஃபிரெஞ்சுப் பேரரசினைக் கட்டிக்காக்க நெப்போலியனைப்போன்ற வலிமைமிக்க ஒருவர் தேவை என்பதை மக்கள் உணர்ந்தனர். அத்தகைய ஆற்றல் பெற்றவர் நெப்போலியனின் மகனாகவே இருக்கமுடியும் என்ற நம்பிக்கையும் அவர்களது உள்ளங்களில் ஒளிவீசிப் பறந்தது. ஆகவே, நெப்போலியனுக்கு வாரிசு தேவை என்ற வகையில் அவர் மறுமணம் செய்துகொள்வதை ஃபிரெஞ்சு மக்கள் வரவேற்றனர். ஆனால், இதுவரை அவரது இன்பதுன்பங்களில் இணைந்து நின்று அவரது பணியை இலகுவாக்கிய ஜோசபைன் விவாகரத்துச் செய்யப்படுவதை ஃபிரெஞ்சு மக்கள் பெருங்கவலைக் கிடையே தான் வரவேற்றனர். பேரரசின் நலங்கருதித் தமது நாயகியைத் துறக்க நெப்போலியன் முற்பட்டாலும் அவளது நலனில் அவர் தனிக்கவனம் செலுத்தினார். விவாகரத்துக்குப்பின்னும் ஜோசபைன் சொகுசான வாழ்க்கை நடாத்துவதற்கேற்ற வசதிகளைச் செய்து கொடுக்கவும் போனபார்ட் முன்வந்தார். பாரிஸ் நகரில் பகட்டான அரண்மனையும் நாட்டுப் புறத்தில் நல்லதொரு மாளிகையும் ஆண்டொன்றுக்கு மூன்று மில்லியன் ஃபிராங்குகள் வருமானமும் வருங்காலப் பேரரசியாருக்கு அடுத்த முதலிடமும் நெப்போலியனது நெருங்கிய நண்பராக அவருக்கருகிலேயே இருப்பதற்கான வாய்ப்பும் ஜோசபைனுக்கு உறுதிசெய்யப்பட்டன. அடுத்து, திருமணவிலக்குபற்றி ஜோசபைனிடம் பேசுவதற்கான நாளும் வந்தது. 1809ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 30ஆம் நாள் ; அரண்மனை விருந்தொன்றில் கலந்துகொண்டு சிறப்பித்த ஜோசபைனுக்கு திருமணவிலக்குபற்றிய செய்தி அவரது செவிகளில் செந்தேளெனப் பாய்ந்தது. அவளது முகம் வெளுத்தது ; இரத்தம் உறைந்ததுபோன்ற உணர்வு ; கண்கள் குளமாயின ; கவலை எல்லையைக் கடந்துசென்றது ; அனைவர் முகத்திலும் துக்கத்தின் கோடுகள் காணப்பட்டன ; துன்பத்தின் உச்சியில் நின்ற ஜோசபைன் சோர்வால் துவண்டுவிட்டாள். வருத்தம் வாட்ட, வந்த விருந்தினர் அனைவரும் அரண்மனை விட்டகன்றனர். அதிர்ச்சியடைந்த பேரரசியும் அழுதுகொண்டே தனது அறைக்குச் சென்றாள். அன்றிரவும், அடுத்தநாள் காலையும் தனித்திருந்து அழுது புலம்பினாள். அவளது கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்து ஓடிய வண்ணமிருந்தது. நெப்போலியனுக்கு, துன்பம் அவரது

உள்ளத்தைத் துளைத்துச் செல்ல, துவண்ட நிலையில் ஜோசபைன் அருகில் செல்ல இயலாது தவித்தார். அவரும் அன்று முழுதும் தனிமையில் துன்பக்கடலில் தத்தளித்தார். அடுத்த நாள் காலை இருவரும் உள்ளம் ஒடிந்த நிலையில் உணவறையில் சந்தித்தனர். உணவுமேசையருகே இருவரும் உட்கார்ந்திருந்தனர். ஆனால், ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளவில்லை ; ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளவுமில்லை. அமைதி அவ்வுணவறையில் ஆதிக்கம் செலுத்தியது. அவர்களது முகங்கள் வாடி வதங்கிச் சிறுத்துக் காணப்பட்டன. அறுசுவை உணவு நிறைந்த தட்டுகள் ஒன்றன் பின் ஒன்றாக கொண்டுவந்து அடுக்கப்பட்டன அம் மேசைமீது. ஆனால், அவர்களிருவரும் அவைகளைத் தொட்டுக்கூடப் பார்க்க வில்லை. பளிங்குச் சிலைபோல் அசையாதிருந்தாள் ஜோசபைன் ; அச் சிலையருகே ஆடாது அசையாது அமர்ந்திருந்தார் போன பார்ட். ஆகவே, உணவுத்தட்டுகள் மீண்டும் எடுத்துச் செல்லப் பட்டன ; வேலையாட்களும் அவ்விடத்தை விட்டகன்றனர். அவர் களது முகமெல்லாம் கவலையால் கருத்துக்காணப்பட்டது. வேலை யாட்கள் சென்றபின் போனபார்ட் எழுந்து சென்று அவ்வறையின் கதவினைத் தாளிட்டார். அடுத்து, ஜோசபைன் அருகில் வந்து அவளது கரங்களைப் பிடித்துத் தமது நெஞ்சில் வைத்துக்கொண்டு, நாவு தடுமாறக் கீழ்க்கண்டவாறு போனபார்ட் கூறினார் : 'ஜோ சபைன், என் உயிரின் உயிராம் எனதருமை ஜோசபைன், நான் உன்னிடத்தில் எத்தகைய ஆழ்ந்த அன்பு கொண்டிருக்கின்றேன் என்பதை நீ நன்கறிவாய். இவ்வுலகில் நான்பெற்ற இன்பநாட்கள் மிகச் சிலவே ; அத்தகைய இன்பநாட்களையும் நான் உன் மூலமாக வே பெற்றுள்ளேன் ; உனது அன்பே எனது இன்பக்களஞ்சியம். எனது உயிரினுமினிய உன்னை இப் பெருநாட்டின் நலங்கருதி கைவிட நேர்ந்துள்ளது.' நெப்போலியனது கூற்றினைக் கேட்ட ஜோசபைன் இடியுண்ட நாகம் போலானாள். போனபார்ட்டின் ஒவ்வொரு சொல்லும் அவளது இதயத்தை ஈட்டிபோல் துளைத் தது. கொடியகணைகளால் தாக்குண்ட புள்ளிமானைப்போல சாய்ந்து விழுந்தாள் தரையில் மயங்கி. அதனைக் கண்ட நெப் போலியன் அதிர்ச்சியடைந்தார் ; பணியாள் உதவியுடன் போன பார்ட் அவளை மாடியிலுள்ள அவளது அறைக்குத் தூக்கிச் சென்றார். அப்போது ஜோசபைன் மயக்கத்தில்கூட 'இல்லை ; இல்லை ; நீங்கள் அதனைச் செய்யக் கூடாது ; நீங்கள் நிச்சயமாக என்னைச் சாகடிக்கவேண்டாம்' என்று கூறினாள்.

ஜோசபைன் மயக்கத்தில் கூறிய சொற்களைக் கேட்டு நெப்போ லியன் உள்ளம் வருந்தினார். பேரரசியைப்படுக்கையில் கடத்தி அவ ளுக்கருகிலமர்ந்து ஆவன செய்துவந்தார். சிறிது நேரத்தில் ஜோ

சபைன் மயக்கம் தெளிந்து கண்களைத்திறந்து பார்த்தாள். அப்போது போனபார்ட் அங்கிருந்து சென்று தமது அறையில் ஓய்வு சிறிதுமின்றி அங்குமிங்கும் உலவிக் கொண்டிருந்தார். ஆர்ட்டன்ஸ் தாயருகே இருந்து பணிவிடைகள் செய்துவந்தாள். உடனடியாக, ஈஜின் (Eugene) இத்தாலியிலிருந்து வரவழைக்கப்பட்டார். அவர் வந்தவுடன் அவரைக் கட்டிப்பிடித்து அழுதபடி செய்தியைத் தெரிவித்தாள் ஆர்ட்டன்ஸ். அன்னைக்கு ஏற்பட்ட அவலநிலை அறிந்து ஈஜின் பெரிதும் வருந்தினார். தாயின் அறையில் சிறிது நேரம் தங்கிவிட்டு ஈஜின் பேரரசரின் அறைநோக்கிச் சென்றார். அங்கு அமைதிகுன்றி குமுறிக்கொண்டிருந்த பேரரசரைக் கண்டு ' பேரரசரே ! தாங்கள் எனது அன்னையை மணவிலக்குச்செய்ய முடிவு செய்திருப்பது உண்மைதானா ?' என்று கேட்டார். ஆனால், பேரரசர் வாய்மொழி மூலம் விடைபகராது ஈஜின் கரத்தைப்பிடித்துச் சாடைகாட்டித் தமது விருப்பத்தைத் தெரிவித்தார். 'அப்படியானால், தங்களுடைய அரசாங்கப் பணியிலிருந்து நான் விலகிக் கொள்ளுகின்றேன். பேரரசி நிலையிலிருந்து இறக்கப்பட்ட அபலை ஒருத்தியின் மகனாக இருந்துகொண்டு இத்தாலியின் அரசப் பிரதிநிதியாக நான் பணியாற்ற விரும்பவில்லை. நான் எனது அன்னையுடன் சென்று அவளுக்கு உதவியாக இருக்கவே விரும்புகின்றேன். இதுவரை இன்பத்தில் திளைத்திருந்த எனது அன்னை அவரது குழந்தைகளைக் கொண்டே ஆறுதல் பெறவேண்டும் ' என அறிவித்தார். ஈஜினின் கூற்றினைக் கேட்ட பேரரசர் குழப்பத்திற்குள்ளானார். அவரது கண்கள் குளமாயின. வருத்தம் தொண்டையை அடைக்க அவரது குரல் தளர்ந்தது. கம்மிய குரலில் அவர், 'ஈஜின் ! நீ அறியாதது ஒன்றுமில்லை ; நாட்டின் நலன் கருதியே நான் இம்முடிவினை மேற்கொண்டேன். நிலைமையை நன்குணர்ந்த நீயும் என்னை விட்டுப்பிரிய நினைக்கலாமா ? நீயும் என்னை விட்டகன்றால் எனக்கு உற்றதுணை தான் யார் ? நான் விரும்பியபடி எனக்கொரு மகன் பிறந்தால் அவனைக் கண்காணிப்பது யார் ? நானில்லாத நேரத்தில் அவனைவளர்த்து வீரனாக்குவது யார் ? சிந்தித்துப் பார்த்துச் சீரான முடிவுக்கு வா ' என்று கூறினார். அவரது உரை ஈஜின் உள்ளத்தை உலுக்கியது. பேரரசரின் கரத்தைப்பிடித்து அவரை அருகிலுள்ள தோட்டத்திற்கு அழைத்துச் சென்று ஈஜின் அவருக்கு ஆறுதல் கூறினார். அன்றியும், மயக்கம் தெளிந்தபின் ஜோசபைன், ஈஜினை அழைத்து 'அருமை மகனே ! பேரரசருக்கு நீ பலவகையிலும் கடமைப்பட்டுள்ளாய். உனக்குத் தாயும் அவரே ; தந்தையும் அவரே ; அவருக்குப் பணிந்து அவர் சொற்படி நடத்தலே உமது தலையாய கடமையாகும் ' என்று அறிவுரை கூறினாள்.

திருமணவிலக்குக்கான நாளும் விரைவில் வந்தது. 1809ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் பதினைந்தாம் நாள் டுயிலெரிஸ் அரண்

மனே துக்கத்தின் சின்னமாகக் காட்சியளித்தது. சட்டமன்ற உறுப்பினர்கள், அரசகுலத்தவர், பெருங்குடியினர், இராணுவ அதிகாரிகள், அரசாங்க உயர்தர அதிகாரிகள் போன்றோர் அங்கே கவலையைத் தங்கள் முகங்களில் தேக்கிக் காத்திருந்தனர். துன்பத்தின் சுவடுகள் தோன்றிய முகத்துடன் போனபார்ட் எழுந்து பின்வரும் சோக உரையை நிகழ்த்தினர். 'நாட்டு நலனில் நாட்டங்கொண்ட நல்லோரே! ஃபிரெஞ்சுப் பேரரசின் நலத்தினையும் மக்களின் விருப்பத்தினையும் அடிப்படையாகக்கொண்டு நான் எனது பணிகளை ஆற்றியுள்ளேன். எனக்குப் பின்னால் இப் பெரு நாட்டை ஆளுவதற்கு ஒரு வாரிசு தேவை என்ற வகையில் நான் மறுமணம் செய்துகொள்ளவேண்டும் என்பது உங்களின் விருப்பம். எனது இதயச் சிம்மாசனத்தில் வீற்றிருந்து கடந்த பல ஆண்டுகளாக என்னை இன்பத்தில் ஆழ்த்திய எனதருமைப் பேரரசி ஜோசபைன் எனக்கென ஒரு மகனைப்பெற்றெடுப்பாள் என்று நம்பியிருந்தேன்; இப்போது நான் அந்த நம்பிக்கையை இழந்து விட்டேன். உங்களது விருப்பத்தை நிறைவேற்றி மறுமணம் செய்யக் கடமைப்பட்டுள்ளேன் என்ற காரணத்தால் எனது உயிருக்குயிரான உத்தமி ஜோசபைனை இழக்க முன்வந்துள்ளேன். நாற்பது வயதில் நாட்டின் நலன்கருதி என் நாடித்துடிப்பான நாயகியைத் தியாகம் செய்ய நேர்ந்ததை நினைத்து நான் வேதனையால் விம்முகின்றேன். கடந்த பதினைந்து ஆண்டுகளாக என்னை இன்பத்திலாழ்த்திய எனது எழிலரசியாம் ஜோசபைனைப் புகழ்வதைத்தவிர அவள்மீது புகார் ஒன்றும் கூற என்னால் இயலவில்லை. ஆழ்ந்த அன்பும், தேர்ந்த பண்பும் பெற்று எனது வாழ்வில் ஒளி விளக்காகத் திகழ்ந்தாள் அந்த உத்தமி. எனது வாழ்வும் வளமும் அவளால் பெற்றவை. அவளது நினைவு என் நெஞ்சில் என்றும் பசுமையாக வீற்றிருக்கும். எனது கரங்களால் அவளுக்கு மகுடம் சூட்டினேன்; அதன் பயனாக அவள் பெற்ற 'பேரரசி' என்ற பட்டம் என்றும் நிலைத்து நிற்பதாகுக. அனைத்துக்கும் மேலாக, நான் அவள்மீது கொண்டுள்ள அன்பில் அவள் எவ்வித ஐயப்பாடும் கொள்ளவேண்டாம்; அவளது நெருங்கிய, பாசமிக்க நண்பனாக என்னை அவள் ஏற்றுக்கொள்வாளாக.'

போனபார்ட் உள்ளத்தை உருக்குகின்ற உரையினை முடித்தவுடன் ஜோசபைன் தன் கரத்திலிருந்த காகிதத்தைப் பிரித்துப் படிக்கமுயன்றாள். ஆனால் அதற்குள் அவளது உள்ளம் உடைந்து, குரல் தளர்ந்து, கைகால் நடுங்க அதனை வாசிக்க இயலவில்லை. ஆகவே, அருகிலிருந்த ரெய்மாண்ட் (Reymaund) என்பவரிடம் அக் காகிதத்தைக் கொடுத்துப் படிக்கும்படி வேண்டிக்கொண்டு ஜோசபைன் கண்ணீரும் கம்பலையுமாக நாற்காலியில் அமர்ந்து

கண்களைக் கைக்குட்டையால் மூடிக்கொண்டாள். ரெய்மாண்ட் அவ்வறிக்கையினை வாசித்தார். அது பின் வருமாறு :- 'எனது பெருமைக்குரியவரும் எனது உயிரினும் இனியவருமான என தருமை நாயகரின் அனுமதி பெற்று நான் இவ்வறிவிப்பினை உங்கள் முன்வைக்கின்றேன். நாட்டின் நலன் கருதிய அவரது கொள்கைகளையும் திட்டங்களையும் நிறைவேற்றும் பொருட்டும், மக்களின் விருப்பத்திற்கிணங்கவும், இவ்வுலகில் எவரும் செய்யத் துணியாத பெருந்தியாகத்தைச் செய்ய நான் முன்வந்துள்ளேன். அவருக்குப் பல வகையிலும் நான் கடமைப்பட்டுள்ளேன். அவரது திருக்கரங்களே இப் பெருநாட்டின் பேரரசியாக எனக்கு மகுடம் சூட்டின. அதன் பயனாக நான் ஃபிரெஞ்சு மக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றுச் சிறப்பெய்தினேன். ஃபிரான்சு நாட்டின் முன்னேற்றத்திற்கும், மக்களின் மகிழ்ச்சிக்கும் முட்டுக்கட்டை யாக நிற்கும் எனது திருமணத்தை விலக்கிக்கொள்வதற்கு நான் முழுமனதுடன் இசைகின்றேன். ஃபிரான்சு நாட்டைப் பெருங் குழப்பத்தினின்றும் காத்து, அமைதியையும், ஒழுங்கையும் நிலை நாட்டி மக்களை மகிழ்வித்த எனது மனம்நிறைந்த கணவனது வீரமகன் அவருக்குப்பின் இப் பெருநாட்டைச் சிறப்புடன் ஆளட் டும். அதற்குத் தடையாக நான் நிற்கமாட்டேன். ஆனால் எனக் கும் அவருக்கும் ஏற்படுகின்ற இத் திருமண விலக்கு எங்களது நட் பின் திறத்தை எள்ளளவும் மாற்றவல்லதன்று. என்றென்றும் நான் பேரரசரின் ஆருயிர்த் தோழியாகவே இருந்து பணிபுரி வேன். இப் பிரிவால் நாங்களிருவரும் பெற்ற துன்பமும் துயர மும், துக்கமும் சோர்வும் விளக்கிச் சொல்ல இயலாதவை. இருப்பினும், இப் பெருநாட்டின் நலத்தினைக் கருத்தில்கொண்டு நாங்களிருவரும் ஒன்றுபட்டு இவ்வரிய தியாகத்தினைப் பெருமை யுடன் செய்கின்றோம்.'

அடுத்தநாள் இருவரும் பாய்ந்து வரும் கண்ணீரைத், தேக்கி, சீறிவரும் விம்மலை அடக்கி, கண்கள் பஞ்சடைக்க, கால்கள் தள்ளாட, கரங்கள் நடுங்க, திருமணவிலக்குப் பத் திரத்தில் கையொப்பமிட்டனர். பதினைந்து ஆண்டுகளாக இணைபிரியாது இன்புற்றிருந்த இருவரும் பிரிந்தனர். பிரிவால் பேரரசர் வடித்த கண்ணீரே பேரரசியாரின் பெருமைக்கும் புகழுக்கும், பெற்றிருந்த அருங்குணங்களுக்கும் போதிய சான் றாக அமைந்தது. திருமணவிலக்கு முடிந்த மறுநாள் ஜோச பைன் மால்மெய்சன் (Malmaison) அரண்மனைக்குச் சென்றாள். அது அழகும் ஆடம்பரமுமிக்க மாளிகை. அங்கு பல இன்ப நாட்களை போனபார்ட்டும் ஜோசபைனும் கழித்தனர். அத் தகைய இனிய மாளிகையில் இப்போது கணவனைவிட்டு விலகிய

ஜோசபைன் தனித்திருக்க வேண்டிய நிலை பிறந்தது. ஜோ சபைன் பெற்ற சோகத்தை அவ்வரண்மனையும் இப்போது பெற்று வாடிநின்றது. அங்கு அவருக்கு வேண்டிய வசதிகளனைத் தும் செய்யப்பட்டிருந்தன. இருப்பினும், அம் மாபெரும் அரண்மனை உயிரற்று, உற்சாகமிழந்து, தாயைப் பறிகொடுத்த சேயைப் போல காணப்பட்டது.

1810ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 21ஆம் நாள் பேரரசரின் திருமணம் குறித்து ஆலோசனை நடாத்தப் பாரிஸ் பெருமன்றம் கூடியது. போனபார்ட் தலைமையேற்று அதனைச் சிறப்பித்தார். சேம்பாக்னி (Champagny) என்பவர் எந்த நாட்டுடன் திருமண உறவு கொள்ளவேண்டும் என்ற சேதிகளடங்கிய விரிவான அறிக்கை ஒன்றினை மன்றத்தின் முன்வைத்தார். இரஷ்ய நங் கை, ஆஸ்திரிய அணக்கு, சாக்சோனி தையல் ஆகியோர் அவ் வறிக்கை வாயிலாக மன்றத்தினருக்குத் தெரிவிக்கப்பட்டனர். அவர்களில் பேரரசர் எவரை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்ற முடிவு மன்றத்திற்கே விடப்பட்டது. பேரரசர் எவ்விதக் கருத்தும் தெரிவிக்காது அமைதியுடனிருந்தார். மன்றமும் அமைதியுடனிருந்தது. யார் முதலில் எழுந்து பேசுவது என்ற நிலையில் மன்ற உறுப்பினர்கள் கருத்துக் கூறுது காலங்கடத்தி னர். அதனை அறிந்த போனபார்ட் தமக்கு இடப்பக்கம் வீற் றிருந்த உறுப்பினர்களை ஒவ்வொருவராக அழைத்துக் கருத்தி னைத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொண்டார். அதன்பின், ஒவ் வொருவரும் தங்கள் எண்ணங்களை வெளியிட்டனர். சிலர் சாக்சானி நாட்டுடன் நாம் திருமண உறவு கொள்வதே சாலச் சிறந்தது என்றனர். இரஷ்ய நாட்டு நங்கையே நமது பேரரசருக்குப் பொருத்தமானவள் என்றனர் வேறு சிலர். ஆஸ்திரிய நாட்டு இளவரசியே இப் பெருநாட்டின் பேரரசி யாகத் திகழ்வதற்குத் தகுதி பெற்றவள் என்றனர் வேறுபலர். இக் கருத்தரங்கில் நெப்போலியன் இது பற்றி எவ்வித கருத் தும் கூறுது மன்றத்தின் கருத்தினைக் கேட்டுக் கொண்டிருந் தார். இறுதியில், ஃபிரெஞ்சுப் பேரரசின் நலங்கருதி ஆஸ் திரிய இளவரசியை மணமுடிக்க மன்றத்தில் பேராதரவு கிடைத் தது. இருப்பினும், மன்றத்தின் கருத்தினைக் கேட்டறிந்த பேரரசர் 'மன்ற உறுப்பினர் ஒவ்வொருவர் கூறிய கருத்தினை யும் சீர்தூக்கிப் பார்த்து நல்ல முடிவினை மேற்கொள்வேன்' என்று உறுதிகூறி, மன்றத்தினருக்கு நன்றி நவின்று கூட்டத் தை முடித்து வைத்தார்.

மன்றத்தின் கருத்தறிந்தபின் பெண் தேடும்படலம் தொடங் கியது. பேரரசர் தமது விருப்பத்தை இரஷ்ய நாட்டுப்

பேரரசர் அலெக்சாண்டரிடம் தெரிவித்தார். அவரும் போன பார்ட்டின் விருப்பத்தை வரவேற்று ஆதரவு நல்க முன்வந்தார். ஆனால், அலெக்சாண்டரின் தாயாரும், இரஷ்யநாட்டுப் பெருங் குடியினரும், 'கேட்டவுடன் பெண் தர இசைவதா ?' என்று காலங் கடத்தி வந்தனர். நெப்போலியனுக்கு எவ்வித பதிலும் அனுப்ப வில்லை. ஆகவே போனபார்ட் ஆஸ்திரியப் பேரரசரிடம் தமது விருப் பத்தை வெளியிட்டார். ஆஸ்திரியப் பெருமன்னர் ஃபிரான்சிஸ் அதனை பெருமகிழ்ச்சியுடன் வரவேற்றார். தமது மகள் மரியலூயி சாவை போனபார்ட்டிற்கு மணமுடித்துக் கொடுக்க இசைந்தார். மரியலூயிசா பேரழகி; பதினெட்டு வயதுப் பருவமங்கை; கட்டழகி; அமைதியும் அடக்கமும் நிறைந்தவள்; அறிவும் ஆரோக்கியமும் பெற்று அரசகுலத்தின் அணங்காகத் திகழ்ந்தவள். அவளிடம் தமது கருத்தை ஃபிரான்சிஸ் அறிவித்தவுடன் மரிய லூயிசா அதனை மனமுவந்து வரவேற்றுத் தனது இசைவினை நல்கினாள். ஆஸ்திரிய நாட்டுடன் பேரரசர் போனபார்ட் திருமண உறவு கொள்ள மேற்கொண்ட முடிவினைக் கேட்ட இரஷ்யப் பெரு மன்னர் பெரிதும் வருந்தினார். ஆஸ்திரியாவும் ஃபிரான்சும் ஐரோப்பிய அரசியலரங்கில் ஒன்றுபட்டால் தமக்குக் கான்ஸ் டாண்டிநோப்பில் (Constantinople) கிடைக்காதே என்று அவர் பெரிதும் வருந்தினார். ஆகவே, ஆஸ்திரிய—ஃபிரான்சு திருமண ஏற்பாடு இரஷ்யாவுக்கும் ஃபிரான்சுக்குமிடையே நிலவிய நல்லுற வைப் பெரிதும் பாதித்தது.

திருமணத்திற்கான சிறப்பான ஏற்பாடுகள் உடனடியாக மேற் கொள்ளப்பட்டன. பெர்தியர் பெண் கேட்டு முடிவுசெய்ய விரைந் தார் வியென்னா. தம்முடைய செயலுரிமை பெற்ற பதிலாளாக (Proxy) போனபார்ட் ஆஸ்திரியப் பெருங்கோமகன் சார்லசை (Arch Duke Charles) நியமித்தார். நேற்றுவரை களத்தில் எதிரும் புதிரு வும், மாக நின்று போரிட்ட இருவரும் இன்று நெருங்கிய நண்பர்க ளாக உறவினர்களாகவும் மாறினர். பேரரசர் போனபார்ட்டுக்கும் ஆஸ்திரிய இளவரசி மரியலூயிசா (Maria Louisa) வுக்கும் திருமணம் நிச்சயிக்கப்பட்டு நாளும் குறிக்கப்பட்டது. இருநாடுகளும் விழாக் கோலம் பூண்டன. பாரிசும், வியன்னாவும் அலங்காரத்தின் சின்னங் களாக விளங்கின. திருமணவிழாவின் சிறப்பான நிகழ்ச்சிகளைக் கண்டு மால்மெய்சன் அரண்மனையிலுள்ள ஜோசபைன் மனக் கவலை கொள்ளக்கூடும் என்றறிந்த போனபார்ட் நாவார் என்ற இடத்திலுள்ள அழகிய அரண்மனையில் சென்று சிறிது நாள் தங்கும் படி அவளைக்கேட்டுக் கொண்டார். பேரரசரின் விருப்பப்படியே ஜோசபைனும் நாவாருக்கு (Nauarre) உடனடியாகச் சென்றாள். அங்கு சென்றபின் பேரரசருக்கு மடல் ஒன்றும் தீட்டி அனுப்பினாள்.

'உங்களுடைய உயிர்த்தோழியான என்னை மறந்து விடாதீர்கள்; அடிக்கடி உங்கள் நலன் குறித்து எழுதுங்கள்' என்று அம் மடலில் ஜோசபைன் வேண்டியிருந்தாள். போனபார்ட்டும் அம் மடலினைப் பெற்றுப் பெரிதும் மகிழ்ந்தார். அம் மகிழ்ச்சியில் மணவிழாவினைச் சிறப்பாக நடாத்த முன்வந்தார். மணமகளை அழைத்து வருவதற்கான ஆடம்பர ஏற்பாடுகளும் விரைவாக மேற்கொள்ளப் பட்டன. 1810ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 11ஆம் நாள் வியென்னு நகர் விழாக்கோலம் பூண்டு விளங்கியது. ஆஸ்திரிய நாட்டு அரச



படம்—3. பேரரசி மரியலூயிசா

குலக்கொடி மரியலூயிசா மணக்கோலம் பூண்டு அன்று ஆரவாரத்துக் கிடையே அழைத்துச் செல்லப்பட்டாள் ஃபிரான்சுக்கு. வழியெல்லாம் மக்கள் அலையலையாகத் திரண்டு தங்களின் நல் வாழ்த்துகளை நல்கினர் இளவரசிக்கு. வியென்னு நகரமே திரண்டு சென்றதைப்போல இளவரசியுடன் சென்றனர் அரசகுலத்து அணங்குகளெல்லாம் ஆடம்பரத்துடன். அவர்களைத் தொடர்ந்து அரசவை உறுப்பினர்களனைவரும் அணிவகுத்துச் சென்றனர் ஊர்வலமாக. ஒய்யாரமான கேம்பெயின் (Campiegne) அரண்

மனையில் முதல்முறையாக மணமக்கள் சந்திப்பதற்கான ஏற்பாடு கள் செய்யப்பட்டிருந்தன. இதுவரை போனபார்ட்டும் மரியலூயி சாவும் ஒருவரையொருவர் கண்டதில்லை. ஆஸ்திரிய நாட்டு அரசகுலத்தினர் மணமகளுடன் கேம்பெயின் நோக்கி வந்துகொண் டிருப்பதை அறிந்த போனபார்ட் தமது பரிவாரங்களுடன் அவர் களை எதிர்கொண்டு அழைக்கக் கிளம்பினர். வழியில் ஆஸ்திரியப் பைங்கிளியைக் கண்டு அளவளாவ விரும்பினர் நெப்போலியன். ஆகவே, அவர் உடனடியாகக் கிளம்பினர் கேம்பெயின் அரண் மனையை விட்டு. வழியில் வந்துகொண்டிருந்த ஆஸ்திரிய நாட்டு அலங்கார ஊர்வலத்தைக் கண்டவுடன் தம் வண்டியிலிருந்து இறங்கி மணமகள் தங்கியிருந்த வண்டிக்குள் தாவிக்குதித்தார் போனபார்ட். அங்கு பளிங்குச் சிலைபோல் வீற்றிருந்த பைங்கிளி யாம் மரியலூயிசாவைக் கண்டு பூரித்தார். அவளது பேரழகில் கட்டுண்ட நெப்போலியன் அவளைக் கட்டித்தழுவி வரவேற்றார். இதுவரை போனபார்ட்டை நேரில் கண்டு களிக்காத ஆஸ்திரிய இளவரசியும் அவரது அழகிய தோற்றத்தையும் அன்பையும் கண்டு உள்ளம் பூரித்தாள். நாற்பது வயதினை எட்டிய நெப்போலியன் இளமை முறுக்குடன் விளங்கினர். அப்போது அவரது முகம் எவ்விதச் சுருக்கங்களுமின்றி வனப்புடனும் வசீகரத்துடனும் காணப்பட்டது. அவர் இருபத்தைந்து வயது இளைஞனைப்போன்று துடிப்புடன் காணப்பட்டார். அவரது இளமைத் தோற்றம் இளவரசியை மிகவும் கவர்ந்தது. போனபார்ட் இளவரசிக் கருகே அமர்ந்திருந்து அவளது பேரழகையும், பெருந்தன்மை யையும், அறிவையும், ஆற்றலையும் கண்டு ரசித்தவண்ணம் கேம் பெயின் வந்தடைந்தார். திருமணக் குழுவினர் ஒளிமயமான கேம்பெயின் அரண்மனையில் மூன்று நாள் தங்கினர். அடுத்து, அவர்கள் அழகுமிக்க செயின்ட் கிளௌட் (St. Cloud) அரண் மனையை வந்தடைந்தனர். அங்கு ஏப்ரல் திங்கள் முதல் நாள் போனபார்ட் — மரியலூயிசா திருமணம் சிறப்பாக நடந்தேறியது. அடுத்த நாள் அவர்களிருவரும் பாரிசுக்கு ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர். ஃபிரெஞ்சுப் பேரரசின் பெருமான்களனைவரும் அவ்வூர்வலத்தில் அணிவகுத்து வந்தனர். நூற்றுக்கு மேற்பட்ட அலங்கார வண்டிகளும் அணிவகுத்து வந்து ஊர்வலத்தைச் சிறப் பித்தன. பாரிஸ் நகர் முழுதும் மக்கள் வெள்ளம்; மக்களின் ஆர்வமிக்க மகிழ்ச்சி ஆரவாரத்துக்கிடையே புது மணத் தம்பதி கள் புன்னகை பூத்தவாறு டுயிலெரிஸ் அரண்மனை புகுந்தனர். ஆடம்பரத்தாலும் அழகிய வேலைப்பாடுகளாலும், அலங்காரத் தாலும், ஒளிமயமாகத் திகழ்ந்த அரண்மனை புது மணத் தம்பதி களை ஏற்று மேலும் பொலிவுடன் விளங்கியது. நகர் முழுதும் திருமண விழா சிறப்பாக எதிரொலித்தது. இன்னிசைகள்

நகரெங்கும் பரவி ஒலித்தன ; மணியோசைகளும் பீரங்கி முழக்கங்களும் திருமண நிகழ்ச்சியைத் தெருவெல்லாம் பரப்பின. பாரிஸ் மக்கள் ஆனந்தக் கூத்தாடினர். போனபார்ட் தமது புதிய மனைவியுடன் பேரின்ப வாழ்வினைத் தொடங்கினார். தமது திருமண நாளன்று போனபார்ட் ஒவ்வொரு பெண்ணுக்கும் எழுநூறு ஃபிராங்குகள் சீதனமாகக் கொடுத்து ஆறாயிரம் குமரிப் பெண்களை ஆற்றல் மிக்க படைவீரர்களுக்கு மணமுடித்து வைத்தார்.

ஆஸ்திரிய இளவரசியை மணந்ததின் மூலம் ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்டி விடலாம் என்று எண்ணியிருந்தார் போனபார்ட். ஆனால், அவரது எண்ணம் ஈடேறவில்லை; அவரது நம்பிக்கை நாசமாயிற்று. ஐரோப்பாவில் மீண்டும் போருக்கான சூழ்நிலைகள் தோன்றின. இங்கிலாந்து வழக்கம்போல் தனது வலிமைமிக்க கடற்படையின் துணைகொண்டு ஃபிரான்சை வாய்ப்புக் கிட்டிய போதெல்லாம் தாக்கத் தவறவில்லை. மேலும், போனபார்ட்டின் கண்டத்திட்டமும் (Continental System) பிசுபிசுத்தது. இங்கிலாந்துச் சரக்குகளை ஐரோப்பிய நாடுகள் பல வாங்க முன்வந்தன. போனபார்ட்டின் உடன்பிறப்பான லூயி போனபார்ட் ஆலந்து நாட்டு மன்னர்; கண்டத்திட்டத்தை ஏற்று நடத்த வேண்டிய அவரே அதனை மீறினார். ஆங்கிலச் சரக்குகளுக்குத் தமது நாட்டில் தடைவிதிக்கவில்லை. இங்கிலாந்து நாட்டுச் சரக்குகள் எண்ணிறந்த அளவு ஆலந்தில் இறக்குமதி செய்யப்பட்டு அங்கிருந்து பிற நாடுகளுக்கும் எடுத்துச் செல்லப் பட்டன. தமது உடன்பிறப்பே தம்முடைய உத்தரவை மதியாது ஆங்கிலச் சரக்குகளை ஆலந்தில் இறக்குமதி செய்ததை அறிந்த பேரரசர் பெரிதும் வருந்தினார். உடனே, கீழ்க்கண்ட மடலினை அவருக்கு அனுப்பினார் : 'அருமை உடன்பிறப்பே! ஆலந்து நாட்டு மக்களின் அரிய வீரத்தைக் கண்டு பாராட்டி அவர்களுக்குச் சுதந்திரம் அளித்தேன் ; அவர்களுக்கேற்ற சிறந்த சட்ட திட்டங்களடங்கிய அரசியலமைப்பையும் உருவாக்கித் தந்தேன் ; ஆற்றல் மிக்க அந் நாட்டிற்கு உன்னை அரசனாகவும் ஆக்கினேன். என்னுடன் பிறந்து, வளர்ந்து, பயின்ற நீ ஃபிரெஞ்சுப் பேரரசின்மீதும் பற்றும் பாசமும் கொண்டு அதன் நலன் காக்கப் பாடுபடுவாய் என்று நான் நம்பியிருந்தேன். இருநாடுகளும் செய்துகொண்ட உடன்பாட்டின்படி ஆலந்துநாடு எனது ஆணைகளை ஏற்று நடாத்த வேண்டும் என்பதை நீ மறந்து விட்டாயா? எவனொருவன் ஃபிரான்சின்மீது நட்பும் நல்லெண்ணமும் கொள்ளாது அதனைப் புறக்கணிக்கின்றானோ அவன் என்னையும் புறக்கணித்தவனே. நம்மையெல்லாம் பெற்றெடுத்த ஃபிரான்சின்மீது நாட்டுப்பற்றுடன் நீ நடந்து கொண்டால் நான் உன்னை எனது உடன்பிறப்பு

என்று ஏற்று உரிய மதிப்பினைக் கொடுப்பேன். ஃபிரான்சைப் புறக்கணிக்கும் பணியில் தொடர்ந்து நீ நடைபோட்டால் நம்முடைய உறவுச்சங்கிலி அறுந்துபோகும் என்பதை நினைவில் கொள்வாயாக.'

போனபார்ட்டின் மடலினைக்கண்ட லூயி போனபார்ட் மனமொடிந்தார். உடனடியாக மணிமுடியைக் கழற்றி வைத்துவிட்டு ஆலந்தை விட்டு வெளியேறினர். அரச பதவியைத் துறந்ததற்கு அவர் உடல் நலக் குறைவு, குடும்பக் கவலை ஆகியவற்றைக் காரணம் காட்டினர். மன்னர் மாளிகையைவிட்டு மறைந்த பின் அவரது மனைவியாகிய ஆர்டன்ஸ் தன் குழந்தைகளுடன் பாரிஸ் வந்தடைந்தாள். நெப்போலியன் அவர்களை வரவேற்று ஆறுதல் கூறித் தமது ஆதரவில் வைத்துக்கொண்டார். லூயி போனபார்ட்டின் நடத்தையைக் கண்டு அவர் மிகவும் கவலை கொண்டார். இருப்பினும், அவரது குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டார்.

*1811*ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 19ஆம் நாள் மாலை பேரரசி மரிய லூயிசா மகப்பேறு வேதனையால் துடித்தாள். உடனே மருத்துவர்கள் வரவழைக்கப்பட்டனர். பேரரசரும் அருகிலிருந்து அவளுக்கு ஆதரவு கூறி வந்தார். இருப்பினும், குழந்தை பிறப்பதில் காலதாமதம் ஏற்பட்டது. குழந்தை பிறப்பது கடினம் என்றும், தாயோ அல்லது குழந்தையோ உயிர்விட நேரிடுமென்றும் மருத்துவர்கள் பேரரசரிடம் கூறினர். உடனே, போனபார்ட் மிகவும் வருந்தி, குழந்தை இறந்தாலும் பரவாயில்லை. 'தாயைக் காப்பாற்றுங்கள்' என்று வேண்டிக்கொண்டார். அன்றியும், வேதனை தாங்காது அலறித்துடித்துக்கொண்டிருந்த பேரரசிக்கருகே பன்னிரண்டு மணிநேரம் அமர்ந்திருந்து அவளுக்கு ஆறுதலும் தேறுதலும் கூறிக்கொண்டிருந்தார். மகப்பேறு மருத்துவ நிபுணரான டூபாய்ஸ் (Dubois) 'இத்தகைய மிகக் கடினமான மகப்பேறு வேதனையை நான் கண்டதில்லை' என்று கூறி நடுங்கினர். அவரது அச்சத்தையும் நடுக்கத்தையும் கண்ட பேரரசர் அவரைத் தனியே அழைத்து 'மருத்துவ வல்லுநரே! தாங்கள் பேரரசியாருக்கு மருத்துவம் பார்க்கின்றோம் என்று கருதாது ஒரு சாதாரண ஏழைப்பெண்ணொருத்திக்கு மருத்துவம் பார்ப்பதாக எண்ணி முழுத்துணிவுடன் பணியாற்றுக' என்று கூறினர். அவரது உரை கேட்ட மருத்துவரும் மனத்திடங்கொண்டு மகப்பேறு பணியினைத் தொடர்ந்தார். அடுத்தநாள் காலை 6 மணியளவில் அழகிய ஆண் மகவினைப் பெற்றெடுத்தாள் பேரரசி. தாயும் சேயும் எவ்விதக் கோளாறுமின்றி காப்பாற்றப்பட்டனர்.

ஃபிரெஞ்சுப் பேரரசர் போனபார்ட்டுக்குப் பெண் குழந்தை பிறந்தால், அதனை அறிவிக்கும் வகையில் இருபத்தொரு குண்டுகள் முழங்கவேண்டுமென்றும், ஆண்குழந்தை என்ருல் நூறு குண்டுகள் முழங்கவேண்டுமென்றும் ஏற்கெனவே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஃபிரெஞ்சுப் பெருநகர மக்கள் செவிகளையெல்லாம் கூராக்கி வீடுகளில் கதவுகளைத் திறந்துவைத்துக் காத்திருந்தனர். பேரரசருக்குகந்த வாரிசாக ஆண்குழந்தை பிறக்கவேண்டுமென்ற ஏக்கமும் ஆவலும் அவர்களது முகங்களில் பளிச்சிட்டன. அவர்களது நம்பிக்கை வீணுகாதவாறு 1811ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 20ஆம் நாள் அதிகாலை ஆறுமணிக்கு பாரிஸ் பெருநகரம் அதிரும் வகையில் பீரங்கிகள் முழங்கின. பாரிஸ் நகரமக்கள் மிக்க ஆவலுடன் அவற்றை எண்ணிக் கணக்கிடத் தொடங்கினர். முழக்கங்கள் இருபத்தொன்று முடிந்தது. இருபத்திரண்டாவது முழக்கத்தை மக்கள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். இருபத்திரண்டாவது பீரங்கியை முழக்கியவர்கள் சிறிது தாமதித்து மக்களின் ஆவலைத் தூண்டினர். அப்போது மக்கள் பெரிதும் குழம்பினர். இருபத்திரண்டும் இனிது முழங்கியது. மக்கள் பெற்ற மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. பீரங்கி முழக்கங்கள் நூறு வரை தொடர்ந்து சென்று மக்களின் உள்ளங்களையெல்லாம் குளிரவைத்தன. ஃபிரெஞ்சுப் பெருநாட்டிற்கு 'மன்னன்' கிடைத்து விட்டான் என்ற மகிழ்ச்சிவெள்ளத்தில் மக்கள் மிதந்து சென்றனர். மகிழ்ச்சி ஆரவாரத்துடன் தங்களது மாமன்னரின் மகனுக்கு வரவேற்பும் வாழ்த்தும் கூறிநின்றனர். பேரரசர் போனபார்ட்டும் பேரரசி லூயிசாவும் பெற்ற மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. பாரிஸ் பெருநகரில் உதித்துவிட்டான் ஃபிரான்சின் வருங்காலப் பேரரசன் என்ற செய்தி ஐரோப்பா முழுதும் மின்னல் வேகத்தில் பரவியது. ஃபிரெஞ்சுப் பேரரசின் பெருமகிழ்ச்சியில் பிறநாடுகளும் பங்குகொண்டன. ஃபிரான்சு பெற்ற இன்பத்தை ஐரோப்பிய நட்பு நாடுகளனைத்தும் பெற்றன. ஆஸ்திரியா பெற்ற இன்பம் அளவிடற்கரியது.

பாரிஸ் நகரில் வருங்காலப் பகலவன் உதித்த நேரத்தில் ஜோசபைன் நாவார் நகரில் இருந்தார். தனது முன்னுள் கணவருக்குரிய வாரிசு பிறந்த செய்தி அன்றுமாலை அவரது செவிகளில் தேனெனப்பாய்ந்தது. ஜோசபைன் தானே அம் மகவைப் பெற்றெடுத்ததாகக் கருதி பேரின்பம் கொண்டாள். அன்று நடு இரவு தனது முன்னுள் கணவன்பெற்ற செல்வத்தை வாழ்த்தி அடியில் கண்ட மடல் ஒன்றினை அனுப்பினுள்: 'பேரன்புமிக்க பேரரசரே! ஃபிரெஞ்சுப் பேரரசின் ஒவ்வொரு மூலைமுடுக்கிலிருந்தும் வாழ்த்துகள் இந் நேரம் வந்து குவிந்துகொண்டிருக்கும்.

அவைகளுக்கிடையே, எனது இதயங்கனிந்த நல்வாழ்த்துகளையும் ஏற்றுக்கொள்வீர்கள் என நம்புகிறேன். தங்களது அரசவாழ் வினைக் கவ்வியிருந்த களங்கம் நீங்கியது. உங்களது வாழ்வின் குறையை நீக்கி ஒளி ஏற்றிவைத்த பெரும்பேற்றினைப் பெற்ற பேரரசியை நீங்கள் முதலில் கவனிக்கக் கடமைப்பட்டுள்ளீர்கள் என்பதை நானறிவேன். இருப்பினும், என்னையும் மறவாதிருக்க வேண்டுகின்றேன். செல்வ மகனைத் தூக்கி அணைத்து உச்சிமோந்து, முத்தமாரி பொழிந்து வாழ்த்துகள் பல நல்கி மகிழ்ந்தபின் தங் களது அடிமையாகிய எனக்கும் ஒருமடல் வரைந்தனுப்பும்படி விழைகின்றேன். பேரரசே! உங்களது இன்பமே எனக்குப் பேரின் பம். உங்களுக்கு உரிய வாரிசு கிடைத்தவுடன் நீங்கள் பெற்ற மகிழ்ச்சியைவிடப் பன்மடங்கு அதிகமான மகிழ்ச்சியை நான் பெற்றுள்ளேன். பெற்றெடுத்த அரசி பெற்ற மகிழ்ச்சியைவிட பெருமகிழ்ச்சியை நான் பெற்றேன். நான் செய்த தியாகத்தின் பெரும் பயனை நான் இன்று பெற்றுப் பூரிப்படைகின்றேன். நான் செய்த தியாகம் என்னைத் துன்பத்திலாழ்த்தினும், ஃபிரெஞ் சுப் பெருமக்கள் அனைவரையும் அது இன்பத்தில் ஆழ்த்தியது என்பதறிந்து நான் பெருமையும் பூரிப்பும் அடைகின்றேன். மரிய லூயிசாவின் நலத்தையறிய விழைகின்றேன். ஒரு முறை குழந்தையை நேரில் கண்டு என் வாழ்த்துகளை வழங்க அனு மதிக்கும்படி வேண்டுகின்றேன்.'

இம் மடலினை நெப்போலியனுக்கு அனுப்பிய சிறிது நேரத்தில் பணியாள் ஒருவன் மடல் ஒன்றுடன் ஜோசபைன் முன் நின்றான். அம் மடலினைப் பெற்றவுடன் கண்களில் நீர் மல்க அவள் தனது தனியறைக்குச் சென்று படித்துப் பார்த்தாள் வரி விடாது. அவளது கண்களிலிருந்து கிளம்பிய நீர் அம் மடலினை நனைத்தது. அம் மடலின் முடிவில், 'இப்போது பிறந்துள்ள குழந்தையும் என தருமை ஈஜினுமே எனக்கும் ஃபிரெஞ்சுப் பெருநாட்டிற்கும் பேரின்பத்தை வழங்கக்கூடியவர்கள்' என்று போனபார்ட் குறிப் பிட்டிருந்தார். தனியறையில் அரைமணி நேரத்திற்கு மேலாக அம் மடலுடன் விளையாடிய ஜோசபைன் வெளியே வந்து அம் மடலினைத் தாங்கிவந்த வேலைக்காரனுக்குத் தக்க பரிசுகள் வழங்கி, பதில் மடலுடன் அனுப்பி வைத்தாள். அடுத்து, தனது தோழி களைக் கூட்டிவைத்து அம் மடலின் முடிவுரையை மட்டும் படித்துக் காட்டிப் பெருமகிழ்ச்சி கொண்டாள் பேரரசி.

ஜோசபைன் அனுப்பிய மடலினைக் கண்டு நெப்போலியன் அளவிலா ஆனந்தங் கொண்டார். அவளது ஆசையை நிறை வேற்றும் வகையில் பாரிசுக்கருகிலுள்ள அரண்மனைக்கு ஜோச பைனை அழைத்து வந்து தமது ஆருயிர்க் குழந்தையைக் காட்டினார்.

குழந்தையைக் கையிலேந்திய ஜோசபைன் தான் பெற்ற குழந்தையே என்றெண்ணி அளவிலா மகிழ்ச்சிபெற்ருர். அதனை வாரியணைத்து, உச்சிமோந்து, முத்தமிட்டு, தனது உளங்கனிந்த நல்வாழ்த்துகளை வழங்கினுர். அடுத்து, நாவார் சென்றவுடன் கீழ்க்கண்ட அரிய மடலினை அனுப்பி வைத்தார் : ‘பேரன்பு மிக்க பேரரசே! உரோமாபுரி மன்னனைச் (King of Rome) சந்திக்க வேண்டுமென்ற ஆவலின் தூண்டுதலால் நான் அங்கு வரவில்லை ; ஆனுல், அவனது முகத்தோற்றத்தை ஆராய்ந்து அவனது குரலைக் கேட்டு மகிழவே நான் அங்கு வந்தேன். அவன் உங்களையே உரித்து வைத்தாற் போலுள்ளான். உங்களது முகத்தோற்றத்தையும், உங்களது குரலையும் அவன் பெற்றிருப்பதைக் கண்டு நான் பெரிதும் மகிழ்ந்தேன். வேருெருத்தியின் மகனிடத்தில் நான் எவ்வாறு அன்பு கொண்டு இன்புற இயலுமென்று எண்ணவேண்டாம். எனது பிள்ளைகளைத் தாங்கள் உள்ளன்புடன் பாராட்டி வளர்த்து பாதுகாத்ததை நான் என்றும் மறவேன். ஆகவே, தங்களுடைய அருமைச் செல்வத்தினிடத்தில் நான் அன்புடன் நடப்பது வியப்பன்று. ஃபிரெஞ்சுப் பேரரசின் குலக்கொழுந்தைத் தாங்கள் கையிலேந்தி என்னிடம் வந்தபோது நான் பெற்ற இன்பம், ஐயத்திற்கிடமின்றி, நான் என் வாழ்நாளில் பெற்ற பேரின்பமாகும். தங்களது மலர்ந்த முகமே எனது மகிழ்ச்சிக்கு வழிகாட்டும்’.

மரியலூயிசா நற்குணங்கள் பலவற்றை அணிகலனுகப் பெற்று விளங்கினுள். கற்புக்கரசியாகத் திகழ்ந்தாள் ; கணவனின் நிலையறிந்து நடக்கும் காரிகையாகப் பெயரும் புகழும் பெற்ருள். ஜோசபைன் மக்களிடம் அன்புடன் நடந்து அனைவரது பாராட்டுகளையும் பெற்ருள். ஆனுல், ஜோசபைன்மீது வெறுப்பும் பொருமையும் கொண்டாள். ஒரு முறை போனபார்ட் அவளை ஜோசபைனைக் காண அழைத்துச் செல்வதாக அறிவித்தபோது லூயிசா கதறி அழுதுவிட்டாள். ஜோசபைனைக் காண நெப்போலியன் செல்வதாக அறிவித்தால் உடனே லூயிசா ‘தாங்கள் அவளைக் காணச்செல்வதைத் தடுக்கவில்லை ; ஆனுல் அவளிடம் செல்வதை என்னிடம் சொல்லவேண்டாம்’ என்று கூறிக் குமுறுவாள். போனபார்ட் ஜோசபைனிடம் செல்வதைத் தடுப்பதற்கு அவள் பல சூழ்ச்சிகளையும் செய்யத் தவறியதில்லை. அவளைப் பொருட்படுத்தாது போனபார்ட் புறப்பட்டால் லூயிசா கண்ணீரைப் பெருக்கெடுத்து ஓடவிட்டுக் கதறியழுவாள். அவளது கண்ணீரும் விரைவில் நெப்போலியனது உள்ளத்தைக் கரைத்து, அவர் அடிக்கடி ஜோசபைனை நாடிச்செல்வதைத் தடுத்தது. லூயிசாமீது அளவற்ற அன்புகொண்டு இல்லறத்தை நல்லறமாக அவர் நடாத்

திஞர். ஒரு நாள், லூயிசா சமையலறையில் முட்டை ஊற்றப் பம் (Omelet) தயாரித்துக் கொண்டிருந்தாள். அதுபோழ்து, போனபார்ட் திடீரென்று அங்கு வந்தார். அவரைக் கண்ட லூயிசா திகைத்தாள். உடனே, அவர் 'இங்கு என்ன நடக்கிறது? ஏதோ வறுவல் மணம் வீசுகிறதே?' என்று வினவியவாறே அரசி யாரைச் சுற்றிவந்து தமது பார்வையைச் செலுத்திஞர். அங்கு வடைச்சட்டியில் வெண்ணெய் உருகுவதையும், வெள்ளித்தட்டி லுள்ள முட்டைகளையும், காரப்பொருட்களையும் கண்டு 'ஓ!




நெப்போலியனது வெற்றிகள்

முட்டை ஊற்றப்பம் செய்கின்ருயா? அதுபற்றி உனக்கு ஒன்றும் தெரியாது; நான் அதனை உனக்குச் செய்து காட்டுவேன்' என்று கூறிச் சமையல் வேலையிலிறங்கிஞர். லூயிசாவும் அவருக்குதவி யாக அருகிலிருந்து ஆவனசெய்தாள். முட்டை ஊற்றப்பத்திற்குத் தேவையான பொருட்களனைத்தும் விரைவில் தயாராயின. வடைச்சட்டியில் முட்டைகள் உடைத்து ஊற்றப்பட்டன. ஒரு பக்கம் நன்கு வெந்தபின் அதனைப் பக்குவமாகப் புரட்டிப்போடும் வேளை வந்தது. போனபார்ட் கம்பீரத்துடன் அதனைக் கரண்டி

யால் திருப்பிப் போட்டார் ; ஆனால், அது சட்டியில் விழவில்லை; தரையில் விழுந்துவிட்டது. 'நான் பெற்றிராத ஆற்றல் என்னிட மிருப்பதாக எண்ணி ஏமாந்தேன்' என்று கூறி சமையற்கலையில் நிகரற்று விளங்கியவள் அரசியாரே என்று ஒத்துக்கொண்டு சமையலறையை விட்டு வெளியேறினார் நெப்போலியன்.

அறிவும், ஆற்றலுமிக்க மாண்டேஸ்கியூ அம்மையார் (Madame Montesquieu) இளவரசனின் ஆசிரியையாக நியமிக்கப் பட்டார். அவர் நற்குணங்கள் பலவற்றின் பிறப்பிடம் ; ஆழ்ந்த அறிவும் தெளிந்த நோக்கும் கொண்டவர் ; பண்பின் சிகரம் ; அன்பின் சின்னம் ; நேர்மை, கடமை, நாணயம் ஆகியவற்றை அணிகலன்களாகப் பெற்றுத் திகழ்ந்தவர். அத்தகைய சீரிய அம்மையாரைத் தமது அருமைச் செல்வனின் ஆசிரியை ஆக் கியதில் நெப்போலியன் பெரிதும் மகிழ்ச்சியடைந்தார். அம்மை யார் தம் அருங்குணங்களையெல்லாம் அவன் முன்வைத்து அரிய முறையில் அவனுக்கு அறிவூட்டிவந்தார். டூயிலெரிஸ் அரண் மனையிலுள்ள கட்டிட அடித்தளத்தில் (Ground floor) இள வரசனின் இருப்பிடம் அமைக்கப்பட்டிருந்தது. அங்குதான் அவனுக்கு மாண்டேஸ்கியூ அம்மையார் பாடம் புகட்டிவந்தார். அவ்வறையிலுள்ள சன்னல்களின் வழியாக, நாள்தோறும் மக்கள் அங்கு கூடிநின்று, தங்களின் வருங்கால மன்னனைக் கண்டு களித்து வந்தனர். ஒருநாள் இளவரசன் ஆசிரியையின் ஆணைக்குக் கட்டுப் படாது வெகுண்டெழுந்தான்; ஆசிரியையின் சொற்கேளாது அடம் பிடித்தான். உடனே, ஆசிரியை அவ்வறையிலுள்ள சன்னல்களை யெல்லாம் மூடிவிட்டார். அறைமுழுதும் ஒரே இருட்டு. அதனைக் கண்ட இளவரசர் ஒன்றும் புரியாது 'மாம் கு யூ. இதெல்லாம் என்ன ?' என்று கேட்டான். 'மாம் கு யூ' என்று தான் அவன் அம்மையாரை அழைப்பான். 'உன்னுடைய கோபம் வெளியி லுள்ளவர்களுக்குத் தெரிந்துவிடக்கூடாது ; அவர்களுக்கெல்லாம் மன்னனாக வந்து அவர்களை வழி நடத்தவேண்டியவன் நீ ; தங்களு டைய மன்னன் கோபக்காரன், ஆசிரியைக்கு அடங்காதவன், அற்பன் என்ற எண்ணம் அவர்களது இதயங்களில் இடம் பெற்று விடக்கூடாது என்று கருதியே, நீ கோபங்கொண்டு கொதித்த நேரத்தில் அறையின் சன்னல்களை அடைத்தேன்' என்று கூறி இளவரசனின் இதயக்கதவுகளை திறந்தார். அதனைக் கேட்ட இளவரசன் தவறுக்கு வருந்தி ஆசிரியையிடம் மன்னிப்புக் கோரினான்.

ஃபிரெஞ்சுப் பேரரசுக்கான வாரிசு பிறந்தவுடன் நெப்போலி யன் தனி அரண்மனை ஒன்றினை அவனுக்காகக் கட்டிமுடிக்கத்

திட்டமிட்டார். செயின் (Seine) நதிக்கரை அரண்மனைக்கான சிறந்த இடமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. அங்குள்ள வீடுகளை யெல்லாம் விலைக்கு வாங்க அரசு முன்வந்தது. ஒரேஒரு வீட்டைத் தவிர மற்ற வீடுகளனைத்தும் தக்க விலைகொடுத்து வாங்கப்பட்டன. ஆனால், கூடை முடைகின்ற தொழிலாளியின் குடிசைமட்டும் விலை கொடுத்து வாங்க இயலாத அளவு இழுபறி நிலையிலிருந்தது. அன்றைய நிலையில், அக் குடிசையின் மதிப்பு ஆயிரத்து இரு நூற்றைம்பது ஃபிராங்குகள். ஆனால், அக் குடிசையின் அவசி யத்தை உணர்ந்த அரசினர் எப்படியும் கேட்டதைக் கொடுத்தே தீருவர் என்று கருதிய அக் குடிசைக்காரன் அதன் விலையாகப் பத்தாயிரம் ஃபிராங்குகள் கேட்டான். அதிகாரிகள் அதைப் பேர ரசரிடம் வெளியிட்டனர்; அவரும் நிலைமையை நன்குணர்ந்து கேட்டதைக் கொடுத்து இடத்தை வாங்கும்படி பணித்தார். அதிகாரிகளும் பத்தாயிரம் ஃபிராங்குகளுடன் அக் குடிசையை வாங்கச் சென்றனர். ஆனால், அக் குடிசைக்காரன் அதிக ஆசை கொண்டு இப்போது அதன் விலையை முப்பதாயிரமாக உயர்த்தி னான். அதிகாரிகளும் என்ன செய்வதென்று புரியாது தயக்கத் துடன் அதனைப் பேரரசரிடம் கூறினர். பேரரசர், அவன் கேட்ட விலைகொடுத்து வாங்கும்படி மீண்டும் பணித்தார். அதிகாரிகள் இப்போது முப்பதாயிரம் ஃபிராங்குகளுடன் அவனை அணுகினர். ஆனால், தனது இடத்திற்கு மதிப்பு அதிகம் என்ற எண்ணத்தில் பேராசை கொண்ட அக் குடிசைக்காரன் மீண்டும் அதன் விலையை ஐம்பதினாயிரமாக உயர்த்தினான். அதிகாரிகளும் எரிச்சல்கொண்டு மீண்டும் பேரரசரை அணுகி நிலைமையை விளக்கினர். பேராசை கொண்ட அக் குடிசைக்காரன்மீது கோபங்கொண்ட பேரரசர் அக் குடிசையை விலைகொடுத்து வாங்கவேண்டாமென்று தமது அதிகாரிகளுக்கு ஆணையிட்டார். சட்டத்தை மதிக்கின்ற நெப் போலியனின் அடையாளச் சின்னமாக அக் குடிசை அங்கே இருக் கட்டும் என்று கருதி அதனை விடுத்து மற்ற இடத்தில் அரண்மனை கட்டும் வேலை தொடங்கியது. அதனைக் கண்ட பேராசை மிக்க குடிசைக்காரன் பெரிதும் ஏமாற்றமடைந்தான். 'பேராசை பெரு நட்டம்' என்ற வாக்கு அவன்மட்டில் உண்மையாயிற்று. ஆனால் அரண்மனை முற்றிலும் கட்டி முடிக்கப்படுவதற்குள்ளாக பேரரசர் வீழ்ச்சியுற்ற காரணத்தால், போர்போன் அரசகுலத்தவர் அதனை இடித்துத் தகர்த்தனர்.

## உறுதுணைபுரிந்த நூல்கள்


1. இரத்தம் பொங்கிய இருபது ஆண்டுகள் — அறிஞர் அண்ணா.
2. நெப்போலியனின் வாழ்க்கை — ஜோசப் என். சி. ஆப்பட், 20 மு வெ.

3. நெப்போலியனது போராட்ட ஏற்பாடுகள் — டி. சேன்ட்லர்.

4. நெப்போலியன் போனபார்ட் — ஸ்லோன்.

5. நெப்போலியனின் வாழ்க்கை — ஜே. எச். ரோஸ்.

6. நெப்போலியன் — எச். ஏ. எல். ஃபிஷர்.

7. நெப்போலியனும் ஐரோப்பிய விழிப்புணர்ச்சியும் — எஃப். எம். எச். மார்கம்.

# 10. வீழ்ச்சி

நல்ல மரத்தில் புல்லுருவி பாய்ந்ததைப் போல, எழிலும் ஏற்றமும், சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்த ஃபிரெஞ்சுப் பேரரசில் கீறலை ஏற்படுத்தியது போனபார்ட்டின் ஸ்பானிய ஏற்பாடு. கீறல் விரிந்து படர்ந்து இறுதியில் பேரரசை நிலை குலையச் செய்தது. பதினாறு வயதுப் பருவப்பெண்ணின் கட்டுடலில் தோன்றிய வெண்புள்ளி விரைவில் அவளது பருவ மேனியெல்லாம் பரவி அவளது அழகையும், வாழ்வையும் அழித் தொழித்ததைப் போல, ஃபிரெஞ்சுப் பேரரசில் தோன்றிய ஸ்பானியச் சிக்கல் என்ற 'புள்ளி' படர்ந்து அதனைச் சீர்குலைத்தது. ஸ்பானிய அரசியலில் தலையிட்டு அதனை நெப்போலியன் தமது பிடியில் கொண்டுவந்ததைக் கண்ட ஸ்பானிய மக்கள் குமுறினர். உரிமை வேட்கையும், நாட்டுப் பற்றும் கொண்ட அவர்கள் ஃபிரெஞ்சு ஆதிபத்தியத்தை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த் தினர். அவர்களது கிளர்ச்சிகளை ஒடுக்கி அங்கு தமது நிலையை உறுதிப்படுத்த நெப்போலியன் பெருமுயற்சிகள் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. போரில் குதித்த ஸ்பானியர்களுக்கு உதவ இங்கிலாந்து முன்வந்தது. ஐரோப்பிய முடியரசுகள் சிலவும் நெப்போலியனது ஸ்பானியக் கொள்கையைப் பெரிதும் வன்மை யாகக் கண்டித்தன. ஸ்பானிய மன்னருக்கு ஏற்பட்ட கதி தங்களுக்கும் ஏற்படலாம் என்ற அச்சம் ஐரோப்பிய முடியரசு களிடையே பரவலாக நிலவியது. ஆகவே, ஐரோப்பிய முடி மன்னர்கள் ஃபிரான்சின் ஆதிக்கம் ஐரோப்பாவில் மேலும் தொடர்ந்து பரவுவதைத் தடுக்க முன்வந்தனர். அத்தகைய மன்னர்களின் ஆதரவையெல்லாம் ஒருமுகமாகத் திரட்டி நெப்போலியனை வீழ்த்த இங்கிலாந்து தன் செல்வாக்கு முழுவ தையும் பயன்படுத்தியது. ஃபிரான்சின் நட்பு நாடுகளான இரஷ்யா, ஆஸ்திரியா, பிரஷ்யா போன்றவற்றினைக்கூட அதற்கு எதிராகத் திருப்பும் பணியில் இங்கிலாந்து முழுக்கவனம் செலுத்தியது. அன்றியும் நெப்போலியனது அண்மைக் காலச்

செயல்களைக் கண்டித்து ஐரோப்பிய நாடுகள் அறிக்கைகள் விட்டன. அவர்மீது கடுமையான குற்றங்கள் பல சாட்டப் பட்டன. ஜாஃபா (Jaffa) சிறைக் கைதிகளைக் கொன்று குவித்தது; அங்குள்ள மருத்துவமனையில் சிகிச்சை பெற்ற நோயாளிகளை நஞ்சிட்டுக் கொன்றது; டியங்கியன் கோமகன் கொலை; ஸ்பானிய அரசியலில் தலையிட்டது; ஜோசபைன் திருமண விலக்கு போன்றவை அவர்மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு களில் சிலவாகும். இத்தகைய குற்றச்சாட்டுகளின் பட்டியலில் போனபார்ட்டின் இரஷ்யப் படையெடுப்பும் விரைவில் இடம் பெற்று ஃபிரான்சின் வீழ்ச்சியை விரைவுபடுத்தியது.

• இரஷ்யாவும் ஃபிரான்சும் நெருங்கிய உறவு கொண்டு ஐரோப்பிய அமைதிக்கு வித்திட்டன. பேரரசர் அலெக்சாண் டரும், பேரரசர் போனபார்ட்டும் உற்ற நண்பர்களாகத் திகழ்ந் தனர். ஐரோப்பிய அரசியல் தேரை இழுத்துச் செல்லும் இரண்டு இணைந்த குதிரைகளைப்போல அவர்கள் காட்சி தந்தனர். ஆனால், அவர்களது நட்பும் நீடித்து நிலைத்து நிற்க இயலாதவாறு அரசியல் சூழல்கள் ஐரோப்பாவில் தோன்றின. நெப்போலியன் ஆஸ்திரிய இளவரசியை மணந்து அப் பெருநாட்டுடன் அவர் கொண்ட புதிய உறவை இரஷ்யா வரவேற்காதது மட்டுமன்றி வன்மையாகக் கண்டிக்கவும் செய்தது. இரஷ்யா — ஃபிரான்சு நட்பு அணைக்கட்டில் ஓட்டை விழுந்து அது விரைவில் பெரும் உடைப்பாக உருவெடுத்தது. இரு பெருநாடுகளும் ஒன்றோ டொன்று மோதுவதற்கான சூழ்நிலைகளும் தோன்றின. நெப் போலியன் தமது நடவடிக்கைகளுக்கு ஆதரவு நல்காததை அறிந்த அலெக்சாண்டர் அவர்மீது வெறுப்பு கொள்ளத் தொடங் கினார். அவர்களது நட்பையும் நல்லெண்ணத்தையும் சீர் குலைக்கும் வகையில் ஸ்வீடன் நாட்டுச் சிக்கல் எழுந்தது. ஸ்வீடன் நாட்டில் நான்காம் கஸ்டாவஸ் (Gustavus IV) என்பவர் மன்னராக இருந்து ஆண்டுவந்தார். அவர் மக்கள் நலனில் நாட்டங் கொள்ளாது மதி மயங்கிய நிலையில் மனம் போனபோக்கில் சென்று மக்களைக் கொடுமைப்படுத்தினார். ஆகவே, ஸ்வீடன் மக்கள் கொதித்தெழுந்து அவரது கொடுங் கோலாட்சிக்கு முற்றுப் புள்ளி வைத்தனர். நான்காம் கஸ்டாவஸ் அரியணையிலிருந்து அகற்றப்பட்டார். ஆகவே, ஸ்வீடன் அரியணை காலியாக இருந்தது. அதில் புதிய மன்னர் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அமர்த்தும் பொறுப்பு அந் நாட்டு மக்களிடம் இருந்தது. புதிய மன்னரைத் தேர்ந்தெடுக்க முன் வந்த ஸ்வீடன் மக்கள் மூன்று முக்கிய நோக்கங்களைப் பெற்றி ருந்தனர். முதலாவதாக, இரஷ்யாவின் கெடுபிடி நிலையிலிருந்து

ஸ்வீடனைக் காப்பாற்றவேண்டும். இரண்டாவது, ஃபிரான்சின் நட்புறவைப் பெறவேண்டும். மூன்றாவது, மக்கள் உரிமை களனைத்தும் பெற்றுச் சிறந்து விளங்கவேண்டும். இத்தகைய மூன்று நோக்கங்களையும் நிறைவேற்றும் வகையில் ஃபிரெஞ்சுத் தளபதி பெர்னடட் (Bernadotte) என்பவரை ஸ்வீடன் மக்கள் தங்கள் மன்னராகத் தேர்ந்தெடுத்தனர். பெர்னடட் ஃபிரெஞ்சுத் தளபதிகளில் மிகவும் முக்கியமானவர்; நல்ல ஆற்றலுள்ளவர்; போர் நுணுக்கங்களையும் நன்கு அறிந்த சிறந்த தளபதி; பாண்டி கோர்வோ (Ponte - Corvo) இளவரசர். அன்றியும், அவர் ஜோசப் போனபார்ட்டின் மனைவியின் தங்கையான கிளாரி (Clary) என்பவளை மணந்து போனபார்ட் குடும்பத்தில் நெருங்கிய உறவு கொண்டு விளங்கினார். ஆகவே, அவரை ஸ்வீடன் மக்கள் தங்கள் நாட்டின் மன்னராகத் தேர்ந்தெடுத்தனர். அதன் மூலம் நெப்போலியன் பெரிதும் மகிழ்ந்து தங்களைப் பாராட்டுவார் என்றும் அவர்கள் நம்பினார்கள். ஆனால், பெர்னடட் மீது போனபார்ட் நம்பிக்கையும் நல்லெண்ணமும் கொண்டிருக்க வில்லை. அவரைப் பாலூட்டி வளர்க்கும் நச்சுப் பாம்பாகவே கருதினார். இருப்பினும், மன்னராக தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் தம்மிடம் வந்த பெர்னடட்டை நெப்போலியன் அன்புடன் வரவேற்று, ''நீங்கள் ஸ்வீடன் மக்களால் அந் நாட்டு மணி முடியை ஏற்றுக்கொள்ளும்படி அழைக்கப்பட்டுள்ளீர்கள் ; அவர் களது அழைப்பினை ஏற்றுத் தாங்கள் ஸ்வீடன் மன்னராவதை நான் பெரிதும் வரவேற்கின்றேன். உங்களுடைய பெரும் பேராற்றலே உங்களை ஸ்வீடன் மன்னராக உயர்த்தியுள்ளது. உங்களது நல்வாய்ப்பின் பயனைப் பெற்ற பதவிக்கு நான் இடையூறாக இருக்கமாட்டேன்'' என்று கூறி அவருக்குத் தமது ஆதரவை நல்கினார். அத்துடன் ஆட்சிக்கான அறிவுரைகள் பலவற்றையும் வழங்கினார். மேலும், மன்னருக்குரிய ஆடம்பரம், தகுதி ஆகியவை சிறிதுமின்றி எளிய நிலையிலிருந்த பெர்ன டட்டிற்கு இருபது இலட்சம் ஃபிராங்குகளை வழங்கி அவரை மதிப்புமிக்க மன்னராக ஸ்வீடனுக்கு அனுப்பிவைத்தார் நெப்போலியன். நெப்போலியனது நல்வாழ்த்துகளையும் பேராதரவினையும் பெற்று ஸ்வீடன் மன்னராகப் பெர்னடட் தேர்ந்தெடுக்கப்பட்டதை இரஷ்யா விரும்பவில்லை. ஸ்வீடன்மீது ஆதிக்கம் செலுத்த நாட்டம் கொண்ட இரஷ்யாவுக்கு அது பெரிய ஏமாற்றத்தை அளித்தது. அத்தகைய ஏமாற்றத்துக்குக் காரணமான ஃபிரான்சின்மீது இரஷ்யா கோபம் கொண்டது. மேலும், போலந்து நாட்டுச் சிக்கலும் இரு பெரும்நாடுகளுக் கிடையே கசப்பை வளர்த்தது. பிரிவினைக்குள்ளான போலந்தை மீண்டும் இணைத்து வலிமைமிக்க நாடாக்கக் கூடாது என்றும்,

பிரஷ்யாவின் பங்கான வார்சாவை மீண்டும் வலிமைமிக்க பகுதியாக்கக்கூடாது என்றும் இரஷ்யா நெப்போலியனைக் கேட்டுக்கொண்டது. ஆனால், நெப்போலியன் இரஷ்யாவின் வேண்டுகோளை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். ஆகவே, அலெக்சாண்டருக்கும் நெப்போலியனுக்குமிடையே நிலவிய நட்புறவு பாதிக்கப்பட்டது. அன்றியும் கான்ஸ்டாண்டி நோபிள், மால்டேவியா, வாலேச்சியா ஆகிய பகுதிகளின்மீது ஆதிக்கம் செலுத்த அலெக்சாண்டர் நாட்டங்கொண்டார். எப்படியேனும் அவைகளைப் பெற்று இரஷ்யாவின் புகழை நிலைநாட்ட வேண்டுமென்பது அவரது நெடு நாளைய விருப்பம். அப் பகுதிகளைக் கைப்பற்றும் பணியில் தமக்கு ஒத்துழைப்பு நல்கும்படி அவர் நெப்போலியனை வேண்டினர். ஆனால், அவைகளை இரஷ்யாவுக்கு உடமையாக்குவதின் மூலம், தாம் ஆஸ்திரியா, துருக்கி ஆகிய நாடுகளின் வெறுப்புக்குள்ளாக நேரிடுமென்று கருதினர் நெப்போலியன். ஆகவே, அலெக் சாண்டரின் வேண்டுகோளை ஏற்றுக்கொள்ள அவர் மறுத்து விட்டார். அதன் பின் இரஷ்யா, ஃபிரான்சு ஆகிய இரு நாடு களிடையே நிலவிய நட்புறவு வெகுவாகப் பாதிக்கப்பட்டது.

அலெக்சாண்டருக்கும் நெப்போலியனுக்குமிடையே நிலவிய நட்புறவில் கீறல் விழுந்ததைக் கண்ட இங்கிலாந்து மகிழ்ச்சி கொண்டது. இரஷ்யாவுக்கும் ஃபிரான்சுக்குமிடையே தோன்றிய கசப்புணர்வைப் பயன்படுத்தி இரஷ்யாவைத் தன்பக்கம் இழுக் கத் திட்டமிட்டது இங்கிலாந்து. ஆங்கிலத் தூதுவர்கள் பலர் அலெக்சாண்டரின் அவைக்கு விரைந்தனர். ஃபிரான்சுக்கெதி ராகப் பிறிதொரு கூட்டிணைவினை உருவாக்கும் பணியில் இங்கி லாந்து இரஷ்யாவைத் தன் வசப்படுத்த முயன்றது. இரஷ்யா வின் விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றும் பணியில் தீவிர ஒத்துழைப்பினை நல்குவதாகப் பிரிட்டன் உறுதி கூறியது. தனது இருப்பிலுள்ள தங்கக்கட்டிகளையெல்லாம் காட்டி இரஷ்யாவை மயக்கியது இங்கிலாந்து. இரஷ்யாவின் நலனுக்காகத் தனது படை, பொருள் அனைத்தையும் கொடுத்து உதவுவதாக இங்கி லாந்து உறுதி கூறியது. ஆகவே, இரஷ்யாவும், பிரிட்டனின் ஆசைவார்த்தைகளில் மனதைப் பறிகொடுத்தது. அரசியலமைப் புக் குகந்த இங்கிலாந்தும், வல்லாட்சி இரஷ்யாவும் இணைந்து மீண்டும் நெப்போலியனை வீழ்த்த முன்வந்தன. ஆனல், கடந்த முப்பதாண்டு காலமாக இடைவிடாது போரில் காலத்தை வீணக் கிய போனபார்ட் அமைதியை விரும்பினர். மீண்டும் போரில் குதித்துப் பல்லாயிரக்கணக்கான மக்களை மாய்க்க அவர் விரும்ப வில்லை. மாருக, பிரெஞ்சுப் பேரரசின் பல்வேறு ஆக்கப் பணி களில் தீவிர நாட்டம் செலுத்திப் பணியாற்றினர். இருப்பி

னும், இங்கிலாந்து, இரஷ்யா ஆகிய நாடுகள் இணைந்து மீண்டும் ஐரோப்பாவில் போர்ச்சூழ்நிலையை உருவாக்க முன்வந்ததைக் கண்டு அவர் வருந்தினார். இரஷ்யாவிடம் நிலைமையை விளக்கிப் போரைத் தவிர்க்கப் போனபார்ட் விரும்பினார். ஆகவே, அவர் தமது தூதர் ஒருவரை அலெக்சாண்டரிடம் அனுப்பினார். அவர் மூலமாகப் பல்வேறு உறுதிமொழிகளை அவர் அலெக்சாண்டர் முன் வைத்தார். மீண்டும் போலந்து நாட்டை உருவாக்கும் பொருட்டு, நேரிடையாகவோ, மறைமுகமாகவோ உதவுவதில்லை என்று நெப்போலியன் உறுதி கூறினார். ஆனால், ஆங்கிலேயரின் அரவணைப்பில் ஆணவத்துடனிருந்த அலெக்சாண்டர், நெப்போலியனது அமைதி ஏற்பாட்டை பலவீனத்தின் அறிகுறியென எடை போட்டார். சிவனின் கழுத்திலிருந்தபாம்பு, கருடனைப் பார்த்து 'நலமா'? என்று கேட்டதைப் போல, இங்கிலாந்தின் கழுத்தைச் சுற்றியிருந்த இரஷ்யப் பாம்பு இப்போது நெப்போலியனுக்கு நிபந்தனைகள் பலவற்றை விதித்தது. போலந்து நாட்டு மக்கள் விடுதலைப் போரினை மேற்கொண்டால் அதனை நசுக்குவதாக நெப்போலியன் உறுதி கூறவேண்டும்; வார்சாவின் ஒரு பகுதியை இரஷ்யாவுக்குக் கொடுத்துவிடவேண்டும்; ஜெர்மனியிலுள்ள ஃபிரெஞ்சுப் படைகளனைத்தையும் நெப்போலியன் இரைன் நதிக்கு அப்பால் திரும்ப அழைத்துக்கொள்ளவேண்டும். இந்த நிபந்தனைகள் மூன்றையும் இரஷ்யத் தூதர் கௌராகின் (Kourakin) நெப்போலியன் முன் வைத்து அவைகளை உடனடியாக ஏற்றுக் கொள்ளாவிட்டால் தாம் எட்டு நாளில் பாரிசை விட்டு வெளியேறுவதாகவும் கூறினார். அதனைக் கேட்ட நெப்போலியன் கடுங்கோபங்கொண்டார். இரஷ்யாவின் நிபந்தனைகளை ஏற்க மறுத்து அலெக்சாண்டரை அவரது தலைநகரிலேயே சந்திக்கத் தயாரானார்.

ஐரோப்பாவில் மீண்டும் போர் மேகங்கள் சூழ்ந்தன. போருக்கான பிரம்மாண்டமான ஏற்பாடுகள் இருதரப்பிலும் மேற்கொள்ளப்பட்டன. இங்கிலாந்தின் கடற்படைத் தாக்குதல், வடக்கேயிருந்து வரும் இரஷ்யாவின் நிலவழித் தாக்குதல், தெற்கிலிருந்து கிளம்பும் ஸ்பானிய, போர்ச்சுகீசியத் தாக்குதல்கள் ஆகியவற்றை முறியடித்து ஃபிரான்சின் பெருமையை நிலைநாட்டத் திட்டமிட்டார் நெப்போலியன். இத்தகைய பெரும்பணியில் தமக்கு நல்லாதரவு நல்கும்படி தமது நட்புநாடுகளுக்கெல்லாம் அழைப்பு விடுத்தார். பிரஷ்யா, ஆஸ்திரியா, இத்தாலி, பவேரியா, சாக்சனி, வெஸ்ட்பேலியா, மற்றும்பல சிறு நாடுகள் போனபார்ட்டின் அழைப்பினை ஏற்று அவரது தலைமையில் அணி திரண்டன. உடனடியாக ஐநூறாயிரம் வீரர்கள் திரண்டு நெப்போலியனது ஆணையை ஏற்று அணிவகுத்துச்

செல்லத் தயாராயினர். இரஷ்யப் பெரும்படையொன்று நெய்மென் (Neimen) நதிக்கரையில் முகாமிட்டிருந்தது. அப் படையைக் களத்தில் சந்திக்கத் திட்டமிட்டார் போனபார்ட். ஃபிரெஞ்சு அரசாங்க அலுவல்களைத் தக்கவாறு கவனிப்பதற்கான ஏற்பாடுகளனைத்தையும் குறைவின்றிச் செய்துவிட்டு நெப்போலியன் 1812ஆம் ஆண்டு மே திங்கள் 9ஆம் நாள் பேரரசி லூயிசாவுடன் பாரிஸ் நகர்விட்டு, டிரெஸ்டன் (Dresden) நகர் நோக்கி விரைந்தார். வழியெல்லாம் மக்கள் திரண்டிருந்து பேரரசருக்கும் பேரரசிக்கும் மகத்தான வரவேற்பளித்து மகிழ்ந்தனர். சாக்சனி தலைநகரான டிரெஸ்டனில் அவர்களை வரவேற்க அரச குலத்தவர் பலர் திரண்டிருந்தனர். ஆஸ்திரியப் பேரரசர், பேரரசியார், பிரஷ்யநாட்டு மன்னர், சாக்சனி, நேப்பில்ஸ், பவேரியா, உர்டெம்பர்க், வெஸ்ட்பேலியா ஆகிய நாடுகளின் மன்னர்கள் பேரரசர் போனபார்ட்டையும் பேரரசியார் லூயிசாவையும் சிறப்பாக வரவேற்றனர். பதினைந்து நாட்கள் அப் பெருநகரில் தங்கியிருந்து பேரரசர் போனபார்ட் போருக்கான ஆக்கப்பணிகளில் ஈடுபாடு கொண்டிருந்தார். ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வீரர்கள் விரைந்தனர் நெய்மென் நதி நோக்கி. குதிரைகளும், உணவுப்பொருட்களும், பிற படைக் கருவிகளும் அங்கு குவிந்தன. இதுவரை ஐரோப்பா கண்டிராத வகையில் போர்ப்பணிகள் சிறப்பாக மேற்கொள்ளப்பட்டன. அத்தனை ஏற்பாடுகளையும் பகைவர்கள் அஞ்சத் தக்க வகையில் செய்து முடித்துவிட்டு நெப்போலியன் மீண்டும் அமைதி காக்க ஆசைகொண்டு அலெக்சாண்டரிடம் தூதர் ஒருவரை அனுப்பினார். அமைதியில் நாட்டங்கொண்ட போனபார்ட்டின் தூதரை ஏறிட்டுப் பார்க்கவும் மறுத்துவிட்டார் அலெக்சாண்டர். அதனை அறிந்த நெப்போலியன் உடனே தம் படைகளுக்கு நெய்மென் ஆற்றைக் கடக்கும்படி ஆணையிட்டார். அவரது பெரும்படையும் விரைந்து வீரநடை போட்டுக் கிளம்பியது. மே திங்கள் 29ஆம் நாள் நெப்போலியன் லூயிசாவுடன் டிரெஸ்டன் நகர் விட்டுக்கிளம்பினார். பிராக் (Prague) நகரில் பேரரசியாரிடம் பிரியாவிடை பெற்று டாண்ட்சிக் (Dantzec) நகர் நோக்கி விரைந்தார் பேரரசர். அங்கு வந்தவுடன் ஏராளமான படைத்துறைப் பொருட்களைச் சேகரித்து வைத்தார். ஜுன் திங்கள் 11ஆம் நாள் அவர் டாண்ட்சிக் நகர் விட்டுக் கிளம்பி 12ஆம் நாள் கோனிக்ஸ்பர்க் (Konigsburg) வந்தடைந்தார். அங்கும் படைக்குத் தேவையான பெருமளவு உணவுப் பொருட்களைச் சேகரித்தார்.

போனபார்ட்டின் பெரும்படை இப்போது ஒவ்வொரு பகுதியிலிருந்தும் நெய்மென் நோக்கி விரைந்தது. அப் படையில்

நானூற்றிருபதாயிரம் வீரர்களிருந்தனர். அது பதின்மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஆனால், அதில் பேரரசரின் பாதுகாவல் படை (Imperial Guard) இடம் பெறவில்லை. தளபதிகள் டேவாஸ்ட் (Davoust), ஔடிநாட் (Oudinot), நே (Ney), இளவரசர் ஈஜின், போனிஸ்டௌஸ்கி (Ponistowski), கௌவியான் (Gouvion), இரெக்னியர் (Regnier), வெஸ்ட்பேலிய மன்னர் ஜெரோம் (Jerome), விக்டர், மக்டொனல்டு (Macdonald), ஆங்கெரியன் (Angerean), மூராட் (Murat) ஆஸ்திரிய இளவரசர் சுவார்ட்சன்பர்க் (Schwartzenberg) ஆகிய பதின்மூன்று பேரும் முறையே ஒவ்வொரு படைப்பிரிவிற்கும் தலைமை தாங்கிச் சென்றனர். ஆனல், பேரரசரின் பாதுகாவல் படையில் எழுபத்தைந்தாயிரம் வலிமைமிக்க வீரர்களிருந்தனர். அவர்கள் மூன்று பிரிவுகளாகப் பிரிந்து முன்னேறினர். முதல் பிரிவுக்குத் தளபதி இலெவெப்ரி (Lafebrre) யும், இரண்டாவது பிரிவுக்குத் தளபதி மார்டியரும் (Mortier), மூன்ருவது பிரிவுக்குத் தளபதி பெஸ்ஸெயிரியும் (Bessieres) தலைமை தாங்கி அணிவகுத்துச் சென்றனர். மொத்தத்தில் அரை மில்லியனுக்கு மேற்பட்ட வீரர்களைக் கொண்ட பெரும்படையில் எண்பதாயிரம் பேர் புகழ் பெற்ற குதிரைப்படை வீரர்கள். ஆறு பால அமைப்புக் கருவிகளும், ஒரு முற்றுகைத் தொடர் பரிவாரமும், ஆயிரக் கணக்கான சரக்கு வண்டிகளும், கணக்கற்ற எருதுகளும், ஆயிரத்து முந்நூற்றுத் தொண்ணூற்றிரண்டு பீரங்கிகளும், இருபதாயிரத்திற்கு மேற்பட்ட பல்வேறு வண்டிகளும், நூற்றெண்பத்தேழாயிரம் குதிரைகளும் அப் பெரும்படையில் இடம் பெற்றிருந்தன. அப் பெரும்படை பல பிரிவுகளாகப் பிரிந்து நெய்மென் ஆற்றைக் கடந்து செல்ல அனுமதிக்கப்பட்டது. படைப் பிரிவுகளனைத்தும் நெய்மென் நதிக்கப்பால் நூறு கல் தொலைவிலுள்ள வில்ன (Wilna) நகரில் சந்திப்பதற்கான ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. பேரரசரின் தலைமையில் இருநூருயிரம் வீரர்களிருந்தனர். 1812ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 23ஆம் நாள் அதிகாலை இரண்டு மணியளவில் நெய்மென் நதிக்கரை வந்தடைந்தார் போனபார்ட். ஆனல், அங்கு எதிரிகளின் எவ்வித நடமாட்டமும் தட்டுப்படவில்லை. போனபார்ட்டின் பெரும்படை முன்னேறி வருவதை அறிந்த அலெக்சாண்டர் தமது படை வீரர்களைப் பின்வாங்கிச் செல்லும்படி பணித்தார். அத்துடன் வழியிலுள்ள பாலங்கள், சரக்குக் கிடங்குகள், படைக் கலக் கொட்டில்கள் போன்ற அனைத்தையும் எதிரிகளுக்குப் பயன்படாத வகையில் அழித்தொழிக்கும்படியும் கட்டளையிட்டார் இரஷ்யப் பெருமன்னர். ஆகவே, இரஷ்யப் படை பின்வாங்கிச் சென்றது. இதற்கிடையில் போனபார்ட் தமது

வீரர்களுடன் நெய்மென் நதியை வெற்றிகரமாகக் கடந்து அக்கரை வந்து சேர்ந்தார். அடுத்து, தம் வீரர்களுடன் தொடர்ந்து பயணத்தை மேற்கொண்டு ஜுன் திங்கள் 27ஆம் நாள் மாலே வில்ஞ நகர் வந்தடைந்தார். போலந்துப் பிரிவினை மூலமாக இரஷ்யா பெற்ற பகுதிகளின் தலைநகர் வில்ஞ. அப் பெரு நகரைத் தமது படையின் தலைநகராக்கிக் கொண்டார் நெப்போலியன்.

வில்ஞ நகர் வந்த நெப்போலியனை உற்சாகத்துடன் வரவேற்றனர் போலந்து மக்கள். தங்களை விடுவிக்க வந்த வீரர் — வாழ்வளிக்கவந்த வள்ளல் — உரிமைகள் வழங்கவந்த உத்தமர் — இரஷ்ய ஆதிபத்தியத்திலிருந்து போலந்தைக் காக்கவந்த காவலர் என்றெல்லாம் போற்றிப் போனபார்ட்டைப் புகழ்ந்தனர் போலந்து மக்கள். மகிழ்ச்சி வெள்ளத்தில் இளைஞர்கள் ஒருவரையொருவர் கட்டித் தழுவினர்; முதியவர்கள் தங்களின் நாட்டுப்பற்றை வெளியிடும் வகையில் பழைய போலந்து உடைகளை அணிந்து பவனி வந்தனர். நெப்போலியனது இரஷ்யப் படையெடுப்பிற்குத் தங்களது காணிக்கையாக எண்பத்தைந்தாயிரம் வீரர்களைக் கொடுத்து உதவினர். போலந்து முழுவதையும் விடுவித்துத் தனி நாடாக்குவதின் மூலம் ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகிய நாடுகளின் எதிர்ப்பினைப் பெற நேரிடும் என்று கருதிய நெப்போலியன் இரஷ்யாவின் பிடியிலுள்ள போலந்துப் பகுதியை விடுவிக்க விரும்பினர். வில்ஞ நகரில் பதினெட்டு நாட்கள் தங்கி நெப்போலியன் இரஷ்யப் படையுடன் மோதுவதற்கான ஆக்கப் பணிகளில் தீவிரமாக ஈடுபட்டார். நெய்மென் நதியை விட்டகன்ற இரஷ்யப் படையினர் வில்ஞ நகர் வந்து, பின் டிரிஸா (Drissa) வந்தடைந்தனர். ஃபிரெஞ்சுப் படை அவர்களைத் தொடர்ந்து வரவே, இரஷ்யப் படை அங்கிருந்து பின்வாங்கி விட்டெப்ஸ்க் (Witepsk) நகர் வந்தடைந்தது. அங்கும் அவர்களைத் தொடர்ந்து ஃபிரெஞ்சுப் படையினர் வந்தனர். ஆனல், விட்டெப்ஸ்க் நகரையும் தீக்கிரையாக்கிவிட்டு இரஷ்யப்படை ஸ்மாலன்ஸ்க் கோட்டைக்கு வந்தனர். ஆனல், ஆகஸ்ட் திங்கள் 16ஆம் நாள் மாலே நெப்போலியன் தமது பெரும் படையுடன் அக் கோட்டையை அணுகினர். அக் கோட்டைக்குள்ளும் வெளியிலும் பல்லாயிரக் கணக்கான இரஷ்ய வீரர்கள் அணிவகுத்து நின்றனர். இரஷ்ய வீரர்களும் ஃபிரெஞ்சு வீரர்களும் நேருக்கு நேர்நின்று கைகலப்பதற்கான வாய்ப்பு கிட்டியதாகக் கருதி நெப்போலியன் மகிழ்ச்சியுற்றார். ஆனல், அன்றிரவோடிரவாக உணவுப் பொருட்களையும் போர்க் கருவிகளையும் திரட்டிக்கொண்டு அந் நகரைத்

தீக்கிரையாக்கிவிட்டு இரஷ்ய வீரர்கள் மாஸ்கோ நோக்கி ஓடி விட்டனர். அப் பெருநகர் கொழுந்துவிட்டெரிந்தது. எங்கும் புகை மயம் ; தரையில் புதைக்கப்பட்டிருந்த குண்டுகளும் மருந்து களும் வெடித்து அப் பெருநகரையே அதிரவைத்தன. வெசூவியஸ் எரிமலை வெடித்துக் கிளம்பியதால் நேப்பில்ஸ் மக்கள் பெற்ற துன்பத்தைவிடத் துயரமிக்கதாக இருந்தது ஸ்மாலன்ஸ்க் நகர் மக்கள் பெற்ற அவதி என்று போனபார்ட்டே வருந்திக் குறிப் பிட்டுள்ளார். கொழுந்துவிட்டெரியும் அக் கோட்டைக்குள்ளி ருந்து ஃபிரெஞ்சுப் படையினர் அதிசயமாக உயிர் தப்பினர். ஆனால், அங்கு தீயில் வெந்து குற்றுயிராய் கிடந்த மக்களுக்கு ஓடோடிச் சென்று சிகிச்சை அளித்தார் பாதிரியார் ஒருவர். அவரது அன்புப் பணியினைக் கண்ட போனபார்ட் அவரை அழைத்துப் பாராட்டினார். நெப்போலியனைப் பற்றித் தவறான எண்ணம் கொண்டிருந்த பாதிரியார் இப்போது பேரரசரின் பெருந்தன்மையைக் கண்டு மகிழ்ந்தார். அவர்மீது தாம் கொண்டிருந்த தகாத எண்ணங்களை மாற்றினார். அவர்மீது அன்பும் அளவு கடந்த மதிப்பும் கொண்டார் பாதிரியார். போனபார்ட்டின் அருங்குணங்களையெல்லாம் எளிதில் எடை போட்டறிந்த பாதிரியார் அவற்றையெல்லாம் தம் நண்பர் களிடத்தும் மக்களிடத்தும் எடுத்துக்கூறி மகிழ்ந்தார்.

பின்வாங்கி ஓடிய இரஷ்யப் படையினரை விரட்டிச் சென்று தாக்கும் பணியும் தொடர்ந்தது. சில இடங்களில் இரஷ்ய வீரர்களை இடைமறித்துத் தாக்கினர் ஃபிரெஞ்சு வீரர்கள். அத்த கைய தாக்குதல்களில் பல ஆயிரக்கணக்கான இரஷ்ய வீரர்கள் கொல்லப்பட்டனர். ஆனால், வெற்றிகள் பலவற்றிற்கிடையே ஃபிரெஞ்சு வீரர்கள் கடுமையான சேதத்திற்குள்ளாயினர். தாய கத்திலிருந்து வெகு தூரத்திலுள்ள நாட்டில் போதுமான உணவும், உடையுமின்றி படைவீரர்கள் வாடினர். கடுங்குளிர் அவர்களைப் பெரிதும் வாட்டியது. பஞ்சமும் பற்றாக்குறையும் ஃபிரெஞ்சு வீரர்களைப் பெரிதும் பாதித்தன. நோயாலும், போரில் பெற்ற காயங்களாலும் ஏராளமான ஃபிரெஞ்சு வீரர்கள் துன்பப்பட்ட னர். வில்னா நகரிலும் விட்டெப்ஸ்க் நகரிலும் நோய்வாய்ப் பட்ட ஃபிரெஞ்சு வீரர்கள் பலர் தங்கி சிகிச்சை பெற்றனர். நோயாளிகளைக் கவனிப்பதற்கான மருந்து வசதிகள் போதவில்லை. புண்களுக்குக் கட்டுப்போடுவதற்குக் கூட துணிகள் கிடைக்க வில்லை. பல ஆயிரம் வீரர்கள் பட்டினியால் வாடிச் செத்தனர். பலர் நோய் வாய்ப்பட்டு மடிந்தனர். இரஷ்யாவின் கடுங்குளிருக்குப் பல ஆயிரக்கணக்கான வீரர்களைப் பலிகொடுத்த பின்னும் போரி னைத் தொடர்ந்தார் போனபார்ட் தொடர்ந்து முன்னேறிச்

செல்லும்படி பணித்தார் தம் வீரர்களை. இன்னல்கள் அனைத்தையும் துச்சமெனக் கருதி, தங்களது பேரரசரின் பேச்சில் புதிய தெம்பினைப் பெற்று முன்னேறினர் ஃபிரெஞ்சு வீரர்கள். ஸ்மாலன்ஸ்க் நகரிலிருந்து ஐநூறு கல்தொலைவிலுள்ளது மாஸ்கோ. அங்கு சென்று முகாமிட்டுள்ள இரஷ்யப் படையைத் தாக்கும் பொருட்டு ஃபிரெஞ்சுப் படையினர் கடுங்குளிரையும் பொருட்படுத்தாது விரைந்து சென்றனர். 1812ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 4ஆம் நாள் மாலை ஃபிரெஞ்சுப் படை மாஸ்கோவிற்கருகிலுள்ள போரோடினோ (Borodino) என்ற சிற்றூரை வந்தடைந்தது. தலைநகரைத் தங்கள் தலைகளை விலையாகக் கொடுத்தேனும் காப்போம் என்ற உறுதியுடன் நூற்றிருபதாயிரம் இரஷ்ய வீரர்கள் தளபதி குடுசாஃப் (General Kutusoff) என்பவருடைய தலைமையில் அணிவகுத்து நின்றனர். அவர்களைக் கண்ட ஃபிரெஞ்சு வீரர்கள் குதூகலம் கொண்டனர் ; போர் கைமேல் உள்ளது என்று கருதி களிப்பெய்தினர். நூற்றிருபதாயிரம் ஃபிரெஞ்சு வீரர்கள் மூன்று பகுதிகளாகப் பிரிந்து பகைவர்மீது பாயத் தயாராயினர். வழக்கம்போல் போனபார்ட் மிக்க சுறுசுறுப்புடன் எதிரிகளின் படை இலக்குகளின்மீது நோட்டம் விட்டுத் தாக்குவதற்கான தக்க இலக்கைத் தேர்ந்தெடுத்தார். இந் நிலையில் தூதன் ஒருவன் அவர்முன் தோன்றித் துயரமான செய்தி ஒன்றினை அவர்முன் வைத்தான். அதாவது, ஸ்பெயின் நாட்டில் சலமேன்கா (Salamanca) என்ற இடத்தில் நடந்தபயங்கரச் சண்டையில் ஃபிரெஞ்சுப் படைகளை வீழ்த்தி ஆங்கிலத் தளபதி வெலிங்டன் மாட்ரிட் நகரைக் கைப்பற்றினார் என்ற செய்தியினைக் கேட்டுப் போனபார்ட் உள்ளம் குமுறினார். அத்துடன், துருக்கியும் இரஷ்யாவும் அண்மையில் உடன்பாடு செய்து கொண்ட காரணத்தால், டான்யூப் பகுதியில் நிறுத்திவைக்கப்பட்டிருந்த பெரும் இரஷ்யப் படையொன்று மாஸ்கோ நோக்கி விரைந்து வருகின்றது என்ற செய்தியும், ஸ்வீடன் நாட்டு மன்னர்—நன்றிகொன்ற பெர்னாடட், நெப்போலியனுக்கெதிராக இரஷ்யாவுடன் சேர்ந்துவிட்டார் என்ற செய்தியும் தொடர்ந்து வந்தன. இத்தகைய திடுக்கிடும் செய்திகளுக்கிடையே பேரரசி மரிய லூயிசாவிடமிருந்து ஒரு மடலும், மகனுடைய உருவப்படம் ஒன்றும் பேரரசரிடம் அன்று வந்து சேர்ந்தன. போருக்கான ஆயத்த நிலையிலிருந்த போனபார்ட் ஆவலுடன் மடலையும் படத்தையும் பிரித்துப் பார்த்து மகிழ்ந்தார். நெப்போலியனையே உரித்து வைத்தாற் போலிருந்த இளவரசன் ஒரு பந்துடன் விளையாடிக் கொண்டிருந்த நிலையில் உருமாக்கப்பட்டிருந்தான். அவ்வுருவப் படத்தினைத் தாங்கி முத்த மாரிகள் சொரிந்து மகிழ்ச்சிக் கடலில் மிதந்தார் பேரரசர். தாம் பெற்ற இன்பத்தைத் தமது படைத்துறை நண்பர்களும் பெற வேண்டுமென்று

கருதிய பேரரசர் தமது மகனின் உருவப் படத்தைக் கூடாரத்துக்கு வெளியே அனைவரும் பார்க்கும் வகையில் ஒரு அழகிய இருக்கையில் பொருந்திவைத்தார். பல இன்னல்களை ஏற்று உள்ளத்தில் துன்ப அலைகளைத் தேக்கி வைத்திருந்த வீரர்கள் அப் படத்தினைக் கண்டு மகிழ்ந்து ஆறுதல் பெற்றனர். அன்றியும் தங்களது பேரரசருடன் சேர்ந்து அவர்களும் புத்துணர்ச்சி பெற்றுப் போருக்குத் தயாராயினர்.

அடுத்த நாள் காலை ஐந்து மணிக்கு ஆவேசத்தாக்குதல் தொடங்கியது. இரஷ்ய வீரர்களும் ஃபிரெஞ்சு வீரர்களும் ஒருவரையொருவர் பயங்கரமாகத் தாக்கினர். குதிரைமீது அமர்ந்து தாக்குதலில் ஈடுபாடு கொண்டிருந்த தளபதி டேவௌஸ்ட் (Davoust) மீது ஒரு குண்டு பாய்ந்தது. அக் குண்டு அவரது குதிரையைத் துளைத்துச் சாகடித்தது. அன்றியும், டேவௌஸ்ட்டும் தலைகுப்புறத் தரையில் வீழ்ந்தார். அதனைக் கண்ட அவரது நண்பர்கள் அவர் இறந்துவிட்டார் என்று கருதி அச் செய்தியை நெப்போலியன்முன் வைத்தனர். அவரும் ஆற்றல் மிக்க தளபதி ஒருவரை இழந்தது குறித்துப் பெரிதும் வருந்தினர். ஆனால், தரையில் விழுந்திருந்த தளபதி டேவௌஸ்ட் திடீரென்று எழுந்து வேறொரு குதிரையில் ஏறி எதிரிகளைப் புதிய ஆற்றலுடன் தாக்கினர். அதனைக் கண்ட வீரர்கள் பெரிதும் மகிழ்ந்து டேவௌஸ்ட் சாகவில்லை என்ற செய்தியினை பேரரசர் முன் வைத்தனர். அதனைக் கேட்ட நெப்போலியன் பெரிதும் மகிழ்ந்தார். அன்றியும், போரோடினோப் (Borodino) போரில் தளபதி இராப் (Rapp) நான்கு குண்டுக் காயங்களைப் பெற்றார். இறுதியாக ஒரு குண்டு அவரது இடுப்பில் தாக்க அவர் இரத்த வெள்ளத்தில் சுருண்டு விழுந்தார். உடனே அவர் தூக்கிச் செல்லப்பட்டார் விடுதிக்கு. பல போர்களில் தளபதி இராப் பெற்ற காயங்களுடன் இது இருபத்தொன்றாகும். தளபதி இராப்பைப் பேரரசர் நேரில் கண்டு ஆறுதல் கூறினர். இப் போரில் பேரரசரின் தற்காவல் படை குதிக்கவில்லை. அப் படையிலுள்ள வலிமையும் ஆற்றலும் மிக்க இருபதாயிரம் வீரர்களும் தற்காப்புத் தேவைக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தனர். அவர்களைப் போரில் ஈடுபடுத்தாது போரோடினோக் களத்தில் வெற்றிபெற வேண்டுமென்று போனபார்ட் உறுதிகொண்டார். வெற்றி தோல்வியை நிர்ணயிக்க இயலாதவாறு சண்டை நீடித்தது. எங்கும் இரத்த வெள்ளம் ; இடிமுழக்கம் ; புகைமயம் ; அடிபட்டவர்களின் அழுகுரல் ; இறந்து கொண்டிருப்பவர்களின் கூக்குரல் ; பிணங்கள் பரந்து கிடந்த பரிதாப நிலை. இத்தகைய பயங்கர நிலையிலும் போர் விடாது தொடர்ந்தது. இருப்பினும் திடீரென்று பீரங்கி முழக்கங்கள் நின்றன ; வாளொலி

மறைந்தது ; குதிரைக்குளம்புகளின் பேரொலி நின்றது ; துப்பாக்கி வெடிகள் ஓய்ந்தன ; காயம்பட்டவர்களின் அழுகுரலேயும், விம்மலே யும் பெருமூச்சையும் தவிர வேறு பேரொலி அப் பரந்த வெளியில் எங்கும் கேட்கவில்லே. ஃபிரெஞ்சுப் படையினரின் பேய்த்தாக்குத லுக்கு ஈடுகொடுக்கவியலாத இரஷ்ய வீரர்கள் தோற்று ஓடினர். வழக்கம்போல் ஃபிரெஞ்சுப் படையினர் போரோடினேக் களத்தி லும் பெருவாகை சூடினர். போரோடினே வெற்றியால் ஃபிரெஞ்சு வீரர்கள் பெற்ற மகிழ்ச்சியை விட அக் களத்தில் ஏற்பட்ட பேரிழப் பால் பெற்ற துன்பமே மேலோங்கி நின்றது. பேரரசரும் வெற்றிக் களிப்பிணக் காட்டாது வேதனே கொண்டார். நாற்பத்திமூன்று ஃபிரெஞ்சுத் தளபதிகள் இப் போரில் மாண்டனர் ; முப்பதாயிரம் போர் வீரர்கள் பலியாயினர் ; எண்ணிறந்தோர் காயம்பட்டனர். ஆகவே, வெற்றிக்களிப்பைவிட ஃபிரெஞ்சு வீரர்களிடம் வேதனே யே அதிகமாயிற்று. இரஷ்ய வீரர்களில் ஐம்பதாயிரம் பேர் இறந் தனர். ஆக, போரோடினேக் களம் முழுதும் பிணக்காடாகிக் கோரமாகக் காணப்பட்டது.

போரோடினேக் களத்தில் படுதோல்வி அடைந்த இரஷ் யப் படையினர் மாஸ்கோ சென்று, மாநகரைக் காக்க அணி வகுத்து நின்றனர். அவர்களேத் தொடர்ந்து விரட்டிச் சென்ற ஃபிரெஞ்சுப் படையினர் செப்டம்பர் திங்கள் 14ஆம் நாள் மாஸ்கோ வந்தடைந்தனர். மாஸ்கோவில் தங்களுக்குத் தேவையான பொருட்களனேத்தும் கிடைக்குமென்று நம்பிய வீரர் கள் உற்சாகத்துடன் துள்ளிக் குதித்தனர். ஆனல், ஃபிரெ ஞ்சுப் பெரும்படை மாநகர் நோக்கி வருவதறிந்து இரஷ்ய வீரர்கள் மாஸ்கோ நகரைக் காலி செய்துவிட்டு ஓடினர். அங்குள்ள மக்களும் அப் பெருநகர் விட்டுச் சிதறி ஓடினர். ஃபிரெஞ்சு வீரர்களுக்குப் பயன்படாதவாறு முக்கிய பொருட் கள் அனேத்தும் தீயிட்டு நாசமாக்கப்பட்டன இரஷ்யர்களால். நகரின் பல்வேறு பகுதிகள் தீக்கிரையாயின. எவ்வித மோ தலுமின்றி மாஸ்கோ மாநகரம் ஃபிரெஞ்சுப் படை வசமா யிற்று. உடனே மோர்ட்டியர் (Mortier) அம் மாநகரின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். மாஸ்கோ நகருக்கு எவ்விதச் சேதமும் ஏற்படுத்தக் கூடாது என்று தம் படை வீரர்களுக்கு உத்தரவிட்டார் நெப்போலியன். அடுத்து, வரலாற்றுப் புகழ் மிக்க கிரெம்ளின் அரண்மனே (Palace of the Kremlin) யில் போனபார்ட் தங்கி தமது அலுவல்களேக் கவனித்தார். அப் பெருநகரிலுள்ள மாளிகைகளில் ஃபிரெஞ்சு வீரர்கள் தங்கி ஓய்வெடுத்தனர். அவர்களுக்குத் தேவையான தங்குமிடங் களும் உணவுப்பொருட்களும் ஓரளவு கிடைத்தன. இரஷ்யப்

பெண்கள் அவசரமாகத் தங்களின் வீடுகளைவிட்டு வெளியேறிய நேரத்தில் தங்களது விலையுயர்ந்த நகைகளையெல்லாம் ஆங்காங் கே விட்டுச் சென்றனர். மேசைகள்மீது வைக்கப்பட்டிருந்த பொருட்களெல்லாம் அப்படியே இருந்தன. ஆடம்பரம்மிக்க கிரெம்ளின் அரண்மனையில் நெப்போலியன் வீற்றிருந்தாலும், பாரிஸ் நகரிலிருந்து இரண்டாயிரத்து ஐநூறு கல் தொலைவுக்கு அப்பாலிருந்த அவரது உள்ளம் வேதனையால் விம்மியது. மாஸ்கோ படையெடுப்பால் ஏற்பட்ட விளைவுகளால் அவர் பெரி தும் வேதனையுற்றார். இருப்பினும் சுடுகாடு போல் காட்சி யளித்த மாஸ்கோ நகரில் ஃபிரெஞ்சு வீரர்கள் தங்கி நகருக்கு உயிரூட்டினர். மேலும், நகரை விட்டு ஓடிய தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த இருபதாயிரம் மக்கள் நகருக்குள் திரும்பி வந்து ஃபிரெஞ்சு வீரர்களுடன் வாழ்ந்தனர். இரஷ்யத் தள பதியால் விடுவிக்கப்பட்ட பத்தாயிரம் சிறைக் கைதிகள் நக ரைத் தீக்கிரையாக்கி ஃபிரெஞ்சு வீரர்களை மாய்க்கும் பணியில் இரகசியமாக ஈடுபட்டனர். போனபார்ட் அரண்மனைக்கடியில் ஏராளமான வெடிமருந்து வைக்கப்பட்டிருந்தது. நகரின் பல் வேறு பகுதிகளிலும் குண்டுகளும் வெடிமருந்தும் வைக்கப் பட்டிருந்தன. அவைகளையெல்லாம் அறியாதவகையில் ஃபிரெஞ்சு வீரர்கள் ஆங்காங்கே தங்கியிருந்தனர். 1812ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 16ஆம் நாள் நடுஇரவு நகரில் தீப்பற்றி யது. தீயணைக்கும் சாதனங்களையெல்லாம் இரஷ்யர்கள் ஏற் கெனவே அழித்துவிட்டபடியால் பற்றிய தீ பரவி பயங்கரமாக கொழுந்துவிட்டெரிந்தது. விரைவில் தீ நகரெங்கும் பரவி யது. கிரெம்ளின் அரண்மனையும் தீக்கிரையாகியது. பேரர சர் போனபார்ட்டும் அவரது தோழர்களும் பாதுகாப்பான இடத்திற்குச் சென்றனர். ஃபிரெஞ்சு வீரர்கள் தீயை அணைக்க முயன்றும் முடியவில்லை. மூன்று நாட்கள் இடைவிடாது எரிந்து தானாகவே அணைந்தது அக் கொடிய தீ. கிரெம்ளின் அரண்மனை யின் பெரும்பகுதி காப்பாற்றப்பட்டது. ஆகவே, மீண்டும் போனபார்ட் அங்கு வந்து தமது குழுவுடன் தங்கினார். தீக் கொடுமையால் நகருக்கேற்பட்ட சேதத்தைக் கண்டு நெப்போ லியன் உள்ளம் நொந்தார். அதற்குக் காரணமான கொடிய வர்கள் மனிதத் தன்மையற்ற காட்டுமிராண்டிகளைவிடக் கொ டியவர்களென்று அவர் குறிப்பிட்டுள்ளார். அருகிலிருந்த மருத்துவமனைக்குச் சென்று தீயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதல் கூறினார். ஆனால், அம் மருத்துவமனையிலிருந்த குழந் தைகளும் முதியவர்களும் தீக்கிரையாகாதவாறு ஃபிரெஞ்சு வீரர்களால் காப்பாற்றப்பட்டதை அறிந்து அவர் பெரிதும் மகிழ்ந்தார். தீக்கிரையான மாஸ்கோ நகர் பயங்கர நில

நடுக்கத்துக்குள்ளான நகர் போல காணப்பட்டது. இதற்கிடையில், போனபார்ட் அமைதியில் நாட்டங்கொண்டு மீண்டும் அலெக்சாண்டருடன் நட்புறவு கொள்ள முன்வந்தார். கிரெம்ளின் அரண்மனையிலிருந்து அருமை நண்பர் அலெக்சாண்டருக்கு அரிய மடல் ஒன்று தீட்டினூர். மாஸ்கோ மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வந்த இரஷ்ய அதிகாரி ஒருவரை அழைத்து, அவர் மூலம் அம் மடலைக் கொடுத்தனுப்பினூர் நெப்போலியன். இரஷ்யப் பெருமன்னரின் பதிலை எதிர்பார்த்துக் காத்திருந்தார் போனபார்ட் இருபது நாட்களாக. இருப்பினும் அலெக்சாண்டரிடமிருந்து எவ்வித பதிலும் வரவில்லை. ஆகவே, அக்டோபர் திங்கள் 4ஆம் நாள் தமது தூதர் இலாரிஸ்டனை (Lauriston) அமைதி உடன்பாடு குறித்துப் பேசும்படி ரஷ்யத் தளபதி குடுசாஃபின் இராணுவ முகாமிற்கு அனுப்பி வைத்தார். ஆனூல் இலாரிஸ்டன் இரஷ்யாவின் இராணுவ முகாமிற்குள் அனுமதிக்கப்படவில்லை. அவர் தாங்கி வந்த மடலை மாமன்னர் அலெக்சாண்டரிடம் சேர்ப்பதாகக்கூறி அதனை மட்டும் பெற்றுக்கொண்டனர் இரஷ்ய அதிகாரிகள். ஆகவே, அமைதி உடன்பாட்டுக்கான முயற்சி தடைப்பட்டது.

மாஸ்கோ மாநகரைக் கைப்பற்றிய நெப்போலியன் தமது படைவீரர்களுடன் நான்கு வாரங்கள் தங்கியிருந்தார். கொடிய குளிர்காலத்தின் அறிகுறியாக அக்டோபர் திங்களும் வந்தது. மரங்களிலுள்ள இலைகளெல்லாம் உதிர்ந்தன. வடக்கேயிருந்து வந்த வாடைக் காற்று ஃபிரெஞ்சு வீரர்களை வாட்டியது. இரஷ்யாவின் கடுங்குளிருக்குத் தன் வீரர்களைப் பலி கொடுக்க விரும்பாத போனபார்ட் குளிர் காலத்தை போலந்து நாட்டில் கழிக்கத் திட்டமிட்டார். ஆகவே, ஆயிரம் மைல்களுக்கப்பாலுள்ள போலந்து நோக்கித் தமது படைவீரர்களை அழைத்துச் செல்ல முன்வந்தார். இராணுவ அதிகாரிகளும், பிறரும் திரும்பிச் செல்வற்கு இசைந்தனர். ஆகவே, அக்டோபர் திங்கள் 18ஆம் நாள் போனபார்ட்டின் பெரும்படை மாஸ்கோ நகர்விட்டுக் கிளம்பியது. அக்டோபர் திங்கள் 23ஆம் நாள் மாலை நெப்போலியன் மாஸ்கோவிலிருந்து அறுபது கல் தொலைவிலுள்ள போரோவாக் (Borowak) வந்தடைந்தார். அங்கு அவர் அன்றிரவு நிம்மதியாக தூங்கினூர். அங்கிருந்து பன்னிரண்டு கல் தொலைவிலுள்ள ஒரு பரந்தவெளியில் முன்னூல் சென்று தளபதி ஈஜின் பதினெட்டாயிரம் வீரர்களுடன் தங்கியிருந்தார். அன்று காலை 4 மணி அளவில் அவர்கள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த நேரத்தில் ஐம்பதாயிரம் இரஷ்ய வீரர்கள் அவர்கள்மீது பாய்ந்து தாக்கினர். உடனே ஈஜின் எவ்வித தயக்கமுமின்றி தம் படையினரை அணிவகுத்து இரஷ்ய

வீரர்களின் தாக்குதலை முறியடித்தார். பல மணி நேரம் தாக்குதல் நீடித்தது. இறுதியில் இரஷ்ய வீரர்கள் அடி தாங்காது தலைதெறிக்க ஓடினர். செய்திகேட்ட நெப்போலி யன் அங்கு விரைந்தார். ஆனால், அங்கு போர் மழை பெய்து ஓய்ந்திருந்தது. ஒரு ஃபிரெஞ்சு வீரனுக்கு இரண்டு இரஷ்ய வீரர்கள் என்ற விகிதத்தில் அக் களத்தில் வீரர்கள் வீழ்ந்து பட்டனர். ஈஜினின் வீரத்தை நெப்போலியன் வெகுவாகப் பாராட்டினார்.

அக்டோபர் திங்கள் 26ஆம் நாள் ஃபிரெஞ்சுப் பெரும் படை திரும்புகால் பயணத்தைத் தொடங்கியது. 28ஆம் நாள் போராடினோ களத்தின் வழியாக சென்றது. 29ஆம் நாள் போனபார்ட் அங்குள்ள மருத்துவமனைக்குச் சென்று அங்கு சிகிச் சை பெற்றுவந்த ஃபிரெஞ்சு வீரர்களுக்கு ஆறுதல் கூறி அம் மருத்துவமனைக்குத் தேவையான வாகன வசதிகளையும் செய்து கொடுத்தார். அடுத்து, அவர் தமது வீரர்களுடன் புறப்பட்டு அக்டோபர் திங்கள் 31ஆம் நாள் வியாஸ்மா (Viasma) நகர் வந்தடைந்தார். அங்கு இரண்டு நாள் தங்கி ஃபிரெஞ்சுப் படையினர் ஓய்வெடுத்தனர். அங்கு பின்கோடி காவற்படை (Rear guard) யின் தளபதியாக தளபதி நே (Marshal Ney) நியமிக்கப்பட்டார். நவம்பர் திங்கள் 2ஆம் நாள் படை மீண்டும் நகர்ந்தது. ஆனால், பின்னால் வந்த ஃபிரெஞ்சுப் படையினை அறுபதாயிரம் இரஷ்ய வீரர்கள் திடீரென்று தாக் கினர். முப்பதாயிரம் வீரர்களடங்கிய ஃபிரெஞ்சுப் பின் கோடிப் படை, வீரத்துடன் ஏழு மணி நேரம் போராடி எதிரிகளை முறியடித்தது.

நவம்பர் திங்கள் ஐந்தாம் நாள் மிகக் கொடுமையான நாள். அன்றுடன் முந்நூறு மைல் தூரம் வந்துவிட்டனர் ஃபிரெஞ்சு வீரர்கள். ஆனால், அன்று அங்கு வீசிய பேய்க் காற்றும் பெரும் பனிப்புயலும் எண்ணிறந்த ஃபிரெஞ்சு வீரர்களை பலிகொண்டது. ஏராளமான குதிரைகள் குளிரில் வெடவெடத்துச் செத்தன. வெந்த புண்ணில் வேலினைப் பாய்ச்சுவது போல, கடுங்குளிரால் தாக்குண்ட ஃபிரெஞ்சு வீரர்களை இரஷ்ய நாட்டு காசக் வீரர் களும் சுற்றி வளைத்துத் தாக்கினர். இருப்பினும் பனிக்கட்டிகளின் பயங்கரத் தாக்குதல்களையும் பகைவர்களின் திடீர் தாக்குதல் களையும் தக்கவாறு தாங்கி தம் பொறுப்பிலுள்ள பின்கோடிப் படையை அழைத்துச் சென்றார் தளபதி நே. நவம்பர் திங்கள் 9ஆம் நாள் ஃபிரெஞ்சுப் படையுடன் போனபார்ட் ஸ்மாலன்ஸ்க் நகர் வந்தடைந்தார். அங்கு தம் வீரர்களுக்குத் தேவையான உணவும், உடையும், உறைவிடமும் கிடைக்குமென அவர்

நம்பினர். ஆனால், பஞ்சமும் பட்டினியும் அங்கு தலைவிரித் தாடின. பிராந்தி மட்டும் அங்கு பெருமளவில் கிடைத்தது. பசி மயக்கத்தில் ஃபிரெஞ்சு வீரர்கள் பிராந்தியை அளவுக்கு மேல் அருந்தி அதன் பயனாக பலர் மாண்டனர். அப்போது, அங்கு உணவுப் பொருட்களுடன் ஒரு வண்டி வந்தது. அதனை உடனே தளபதி நே தலைமையிலுள்ள படை வீரர்களுக்கு அனுப்பி வைத்தார் போனபார்ட். அந்த உணவுப் பொருட் களைப் பெற்றுப் புதிய உற்சாகத்துடன் போராடி காசக் வீரர்களை விரட்டியடித்தனர் நே தலைமையிலுள்ள வீரர்கள்.

ஸ்மாலன்ஸ்க் நகர் வந்தடைந்த பேரரசரிடம் தலைநகர் பற்றிய செய்திகளும் தெரிவிக்கப்பட்டன. இரஷ்யாவில் நெப் போலியனுக்கேற்பட்ட துன்ப நிகழ்ச்சிகளைத் துணையாகக் கொண்டு பாரிசில் அவருக்கெதிராகச் சதி ஒன்று உருவாயிற்று. அங்கு பேரரசரின் ஆட்சிக்கு முற்றுப் புள்ளி வைத்து தீவிரக் குடியரசாளர்களின் ஆட்சியை நிலைநாட்ட ஏற்பாடுகள் நடந்தன. அன்றியும், போனபார்ட் இரஷ்யப் போரில் இறந்துவிட்டார் என்னும் ஓர் அறிக்கையை மாலட் (Malet) என்னும் அதிகாரி தயாரித்துப் பாரிஸ் நகர் முழுதும் பரப்பினர். தாமே மன்னராகவேண்டுமென்ற பேராசையின் காரணமாக அவர் அத்தகைய புரளியைக் கிளப்பினர். ஆனல், மக்கள் அவரைப் பிடித்துச் சுட்டுக் கொன்றனர். தலைநகரின் இத்தகைய செய்தி களைக் கேட்டறிந்த நெப்போலியன் பெரிதும் குழம்பினர். தமக்குப் பின்னல் தமது பேரரசு உள்நாட்டுக் குழப்பங்களால் வீழ்ச்சியுறும் என்றறிந்து மிகவும் மனம் நொந்தார். நாட்டில் அமைதியை நிலை நாட்டுவதன் அவசியத்தை அவர் உணர்ந்தார். பாரிஸ் குழப்பங்களுக்கு முடிவு கட்டும் வகையில் உடனே பாரிஸ் செல்லத் தீர்மானித்தார். வீரர்களும் அவரது திட்டத்தை ஆதரித்து அவர் வழி செல்லத் தயாராயினர். நவம்பர் திங்கள் 14ஆம் நாள் மீண்டும் திரும்புகால் பயணம் தொடங்கியது. இப்போது அப் பெரும்படையில் நாற்பதாயிரம் பேர்களே வலிவுள்ள வீரர்கள். அவர்கள் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டு ஒவ்வொரு பிரிவும் தளபதிகள் மூராட், ஈஜின், டேவௌஸ்ட், நே ஆகியவர்களிடம் முறையே ஒப்படைக்கப் பட்டது. மூராட்டின் தலைமையிலுள்ள முதல் படைப்பகுதி யுடன் சென்றார் பேரரசர். தளபதி நே ஸ்மாலன்ஸ்க் நகரி லிருந்து படைவீரர்களை வெளியேற்றிய பின் பகைவர்களின் திடீர் தாக்குதல்களையெல்லாம் முறியடித்துச் சென்றார் பின்னேடிப் படைக்குத் தலைமை தாங்கி. இந் நிலையில் ஃபிரெஞ்சுப் படைகளை வழிமறித்துத் தாக்கும் பொருட்டு இரஷ்யத் தளபதி

குடுசாஃப் தொண்ணூறாயிரம் வீரர்களுடன் வேறு வழியாக விரைந்து வந்தார். விரைவில், இரஷ்யப் படையினர் மூராட்டின் தலைமையில் வந்த முதல் பிரிவினை வழிமறித்தனர். ஆனால், பேரரசரின் தற்காப்புப் படை அவர்களை முறியடித்து முன்னேறிச் சென்றது. ஃபிரெஞ்சுப் படையின் முதற்பிரிவைத் தடுத்து நிறுத்த முடியாத நிலையில் இரஷ்யப் படையினர் வெகு தூரம் பின்னால் வந்த ஈஜின் படைப் பிரிவை வழி மறித்துத் தாக்க முயன்றனர். ஈஜின் படையில் ஆயிரத்து நூறு பேர் முன்னால் சென்றுகொண்டிருந்தனர். இஷ்ரய வீரர்கள் இருபதாயிரம் பேர் முன்னால் வந்துகொண்டிருந்த ஈஜின் படைப் பிரிவைச் சேர்ந்த ஆயிரத்தைநூறு வீரர்களையும் தடுத்துச் சரணடையும்படி கட்டளையிட்டனர். ஆனால், அடிபணிய மறுத்த ஈஜின் படைப் பிரிவினர் பின்னோக்கிச் சென்று வேறு வழியில் செல்ல முயன்றனர். இரஷ்ய வீரர்கள் அவர்கள்மீது பாய்ந்து தாக்கினர். ஈஜினும் தமது வீரர்களை அணிவகுத்து எதிர் தாக்குதலிலிறங்கினார். அந்த மோதலில் பலத்த சேதம் ஏற்பட்டது. இப்போது, ஈஜின் படைப் பிரிவில் நான்காயிரம் வீரர்களே எஞ்சியிருந்தனர். அவர்களுடன் இரஷ்யப் படைகளைக் கடந்து செல்வது எளிதல்ல. அன்றிரவு எங்கும் அமைதி நிலவியது. இரஷ்யப் படையினர் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர். அப் படை முகாமில் காவற்காரர்கள் மட்டும் விழிப்புடனிருந்தனர். உடனே, ஈஜின் இரஷ்ய மொழி அறிந்த போலந்து வீரனொருவனை காவற்காரனிடம் அனுப்பினார். அவ் வீரனும் அக் காவற்காரனிடம் சென்று இரஷ்ய மொழியில் பேசிக் கொண்டிருந்த நேரத்தில் ஈஜின் தமது வீரர்களுடன் தப்பிச் சென்றுவிட்டார். அடுத்த நாள் காலை அவர் பேரரசரிடம் வந்தடைந்தார். ஆனால், தளபதிகள் டேவௌஸ்டும் நேயும் வந்து சேரவில்லை என்றறிந்த பேரரசர் ஆவலுடன் அவர்களை எதிர்நோக்கியிருந்தார்.

இதற்கிடையில், இரஷ்யப் பெரும்படை பேரரசரின் படையைச் சுற்றி வளைத்து வழி மறித்தது. பேரரசர் ஆறாயிரம் வீரர்களுடன் முன்னேற அடுத்தடுத்து ஃபிரெஞ்சு வீரர்கள் அணிவகுத்து முன்னேறினர். அன்று காலை முதல் மாலை இரண்டு மணி வரை பயங்கரத் தாக்குதல்கள் இடம்பெற்றன. இரு தரப்பிலும் ஏராளமான வீரர்கள் மாண்டனர். இந் நிலையில் தளபதி டேவௌஸ்ட் தம் வீரர்களுடன் வந்து சேர்ந்தார். அதனை அறிந்த பேரரசர் பெரிதும் மகிழ்ந்து புதிய தெம்புடன் போரில் குதித்தார். பறந்தோடினர் இரஷ்ய வீரர்கள். அடுத்து ஃபிரெஞ்சு வீரர்களை கொடிய பனியும்

தாக்கியது. ஃபிரெஞ்சு வீரர்கள் சொல்லொணுத் துயரத்தில் துவண்டனர். பல வீரர்கள் பனிக் கொடுமைக்குப் பலியாயினர். எஞ்சிய வீரர்களுடன் போனபார்ட் ஆர்கா (Orcha) நகர் வந்தடைந்தார். அங்கு வந்த ஃபிரெஞ்சுப் படையில் எஞ்சியோர் பன்னிரண்டாயிரம் வீரர்களே. அவர்களுக்கு முதல் முறையாக ஆர்கா நகரில் தேவையான வசதிகளனைத்தும் கிடைத்தன. உணவும், உடையும், நல்ல உறைவிடமும் பெற்று அவர்கள் அங்கு ஓய்வெடுத்தனர். தளபதி நேயைத் தவிர ஏனைய தளபதிகளனைவரும் ஆர்கா வந்து சேர்ந்தனர். நே வராதது குறித்து பேரரசர் பெரிதும் வருந்திக் குழம்பிக் கொண்டிருந்தார். ஆனுல், நேயும் பல இன்னல்களைத் தாங்கி நலமாக ஆர்கா வந்து சேர்ந்தார். அவரைக் கட்டித்தழுவி வரவேற்ருர் பேரரசர். அப்போது பேரரசரிடம் பன்னிரண்டாயிரம் வீரர்களே இருந்தனர். அவர்களுடன் ஆர்கா நகர்விட்டு போரிசாஃப் (Borisoff) என்ற நகர் நோக்கிப் புறப்படத் திட்டமிட்டார். ஆனுல், அந் நகரைத் தாக்கிப் பகைவர்கள் பிடித்துவிட்டனர் என்ற செய்தி அவரைத் திடுக்கிட வைத்தது. ஆகவே, போரிசாஃப் நகரைவிட்டு வேறு வழியில் செல்ல அவர் திட்டமிட்டார். நெய்மென் நதியை அடைவதற்கு அவர் இன்னும் எழுநூறு கல் தொலைவு பயணம் செய்யவேண்டும். வழியெல்லாம் பகைவர் படை திரண்டிருந்து ஃபிரெஞ்சுப் படைகளைத் தாக்கத் தயாராகவிருந்தனர். ஆகவே, அவர்களது தாக்குதலுக்குத் தப்பிச் செல்ல திட்டமிட்டார் பேரரசர். அன்று முழுதும் தேசப் படங்களை வைத்துக் கொண்டு தீவிரமாகச் சிந்தித்தார். இறுதியில், போரிசாஃப் நகருக்கருகிலுள்ள ஸ்டட்சியான்கா (Studzianca) என்ற சிற்றூர் வழியாக ஆற்றைக் கடந்து செல்லத் தீர்மானித்தார். அச் சிற்றூர் வழியாகச் செல்லும் பெரெசினு (Bereseina) நதி அங்கு தொள்ளாயிரம் அடி அகலமும் அறுநூறு அடி ஆழமும் கொண்டிருந்தது. அவ்விடத்தில் ஆற்றினைக் கடந்து படைகளை அழைத்துச் செல்ல பாலம் எதுவுமில்லை. பனிக்கட்டிகள் மிதந்து சென்று கண்டோரைக் கலங்கவைத்தன. ஆகவே, அவ்விடத்தில் ஆற்றைக் கடந்து செல்வதென்பது எளிதான செயலன்று. ஆபத்துமிக்கது. இருப்பினும் போனபார்ட் வேறு வழியின்றி இத்தகைய ஆபத்தான திட்டத்தை மேற்கொண்டார்.

படைவீரர்களுடன் பயணத்தை மேற்கொள்ளுவதற்கான ஏற்பாடுகளனைத்தையும் பேரரசரே முன்னின்று கவனித்தார். அடர்ந்த பைன் மரக்காடுகளிடையே ஃபிரெஞ்சு வீரர்கள் பதுங்கிப் பாய்ந்து சென்றனர். அவர்கள் போரிசாஃப் நகரை நெருங்கியதும் ஒரு

பெருங்கூட்டத்தின் பயங்கரக் கூக்குரல் அவர்களைத் திடுக்கிட வைத்தது. எதிரிகளின் குரலாக இருக்கலாமென அவர்கள் அஞ்சினார்கள். அதுபற்றி அறிந்துவர ஆட்கள் அனுப்பப்பட்டனர். அவர்களனைவரும் ஆச்சரியப்படும் வகையில் இனிய செய்தி அங்கு அவர்களுக்காகக் காத்திருந்தது. ஃபிரெஞ்சுத் தளபதிகள் விக்டர் (Victor). ஔடிநாட் (Oudinot) ஆகிய இருவரும் போரிசாஃப் நகரை மீண்டும் கைப்பற்றி போனபார்ட்டையும் அவரது வீரர்களையும் வரவேற்க ஆரவாரத்துடன் காத்திருந்தனர். அவர்களின் ஆரவார ஒலியே ஃபிரெஞ்சு வீரர்களுக்கு அச்சத்தை ஊட்டியது. போரிசாஃப் நகரை மீட்டிய தளபதிகளைக் கண்ட போனபார்ட் அளவிலா மகிழ்ச்சி கொண்டார். இப்போது, போனபார்ட்டின் பெரும்படையில் இருபத்தேழாயிரம் வீரர்களிருந்தனர். நெப்போலியன் போரிசாஃப் நகரில் இரண்டு நாள் தங்கி ஆற்றைக் கடக்கும் பணியில் ஈடுபாடு கொண்டார். பெரெசினு நதி மீது பாலம் ஒன்றினை அமைக்கும் பணியிலும் வீரர்கள் ஈடுபட்டனர். போனபார்ட் முன்நின்று ஆக்கவேலைகளைக் கவனித்து வந்தார். அத்தனை பணிகளும் எதிரிகள் அறியாவண்ணம் இரகசியமாகவே நடைபெற்றுவந்தன. மூன்று பக்கங்களிலும் நூற்றைம்பதாயிரம் இரஷ்யப் படையினர் சூழ்ந்து ஃபிரெஞ்சுப் படைகளைத் தாக்குவதற்கு எதிர்பார்த்திருந்தனர். எனவே, எதிர்நோக்கியுள்ள பேராபத்தைக் கருத்தில் கொண்டு தமது வீரர்களுக்கு எவ்வித சேதமுமின்றிப் பாதுகாப்புடன் அழைத்துச்செல்ல போனபார்ட் ஆவன செய்தார். ஆனுல், அவரது தளபதிகள், பேரரசர் மட்டும் இரகசியமாகத் தப்பி பிரஷ்யா செல்லவேண்டும் என்று முன் மொழிந்தனர். அத்தகைய கோழைத்தனமான செயலை நெப்போலியன் பெரிதும் கண்டித்து ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். ஆனுல், இரஷ்ய வீரர்களுக்குப் போக்குக்காட்டி ஏமாற்றி குறிப்பிட்ட இடத்தில் திட்டமிட்டபடி ஆற்றைக் கடந்தார். ஆனுல், ஏமாற்றமடைந்த இரஷ்ய வீரர்கள் மீண்டும் ஃபிரெஞ்சு வீரர்களின் இடத்திற்குத் திரும்பி வந்து தாக்குதலைத் தொடங்கினர். ஃபிரெஞ்சு வீரர்களில் பலர் ஆற்றைக் கடப்பதற்கு முன் தாக்கப்பட்டனர். பாலங்கள் பாரம் தாங்காது இடிந்து பல வீரர்கள் பனிக்கட்டிகளுக்கிடையே ஆற்றில் விழுந்து செத்தனர். இருப்பினும், இரஷ்யப் பொறியியல் வல்லுநர்கள் விடாது பாலத்தைச் செப்பனிட்டுப் படைகளைக் கடத்தினர். அன்று நடந்த கைகலப்பில் இருதரப்பிலும் எண்ணிறந்த வீரர்கள் பலியாயினர். ஆற்றில் விழுந்து செத்தவர்கள் தொகை மட்டும் பன்னிரண்டாயிரம்.

இரஷ்யப் படையினரின் தாக்குதலைத் தகர்த்து போனபார்ட் நவம்பர் திங்கள் 29ஆம் நாள் மீண்டும் தம் பயணத்தைத்

தொடர்ந்தார். பயங்கரப் பனிக்கிடையே பயணத்தை மேற் கொண்ட ஃபிரெஞ்சுப்படை டிசம்பர் திங்கள் 3ஆம் நாள் மோலோ டெக்ஸ்னே (Molodeczno) என்ற இடத்தை அடைந்தது. அங்கு படையினருக்குத் தேவையான பொருட்களனைத்தும் போதுமான அளவு கிடைத்தன. அங்கு படைகளும் புதுப்பிக்கப்பட்டன. படை களுக்குத் தேவையான குதிரைகளும் கிடைத்த காரணத்தால் குதிரைப்படை புதுப்பிக்கப்பட்டது. பீரங்கிப் படையும் செம்மை யாக்கப்பட்டு புதிய வலிவுடன் விளங்கியது. அங்கு பேரரசர் தங்கியிருந்த நேரத்தில் புதிய செய்திகளும் அவருக்குக் கிடைத்தன. இரஷ்யாவில் ஃபிரெஞ்சு வீரர்களுக் கேற்பட்ட நட்டத்தையும் அழிவையும் கணக்கிட்டு பிரஷ்ய மன்னர் ஃபிரெஞ்சுப் பேரரசுக் கெதிராகக் கிளம்பியுள்ளார். ஆஸ்திரிய மன்னர் ஃபிரான்சில் மீண்டும் பழைய மன்னராட்சியை உருவாக்கும் நப்பாசையால் போனபார்ட்டிற்கு எதிராகப் போர்க் கொடி உயர்த்தியுள்ளார். இவைகளையெல்லாம் அறிந்த நெப்போலியன் உடனே தமது ஆலோசனைக்குழுவைக் கூட்டினுர். அக் குழுவின் பரிந்துரைகளின் படி அவர் உடனடியாகப் பாரிஸ் செல்லத் திட்டமிட்டார். படை களுடன் விரைந்து அவர் டிசம்பர் திங்கள் 5ஆம் நாள் ஸ்மோர் கோனி (Smorgoni) என்ற இடத்தினை வந்தடைந்தார். அங்கு தமது தளபதிகளுடன் விருந்துண்டார். அன்று இரவே தமது படைகளைத் தக்க தளபதியிடம் ஒப்படைத்துவிட்டு, அவர்களிடம் பிரியாவிடை பெற்றுப் பாரிஸ் விரைந்தார் நெப்போலியன். வில்னு வழியாக விரைந்து சென்ற பேரரசர் டிசம்பர் திங்கள் 10ஆம் நாள் வார்சா வந்தடைந்தார். அங்குள்ள ஃபிரெஞ்சுத் தூதர் அவரை வரவேற்றுச் சிறப்பான விருந்தளித்தார். அடுத்து, எவ்வித ஓய்வுமின்றி நெப்போலியன் இரவு பகலாகப் பயணத்தைத் தொடர்ந்து டிசம்பர் திங்கள் 14ஆம் நாள் டிரெஸ்டன் (Dresden) நகர் வந்தடைந்தார். அங்கு சாக்சனி மன்னருடன் கலந்துரையாடி விட்டு நெப்போலியன் உடனே பாரிஸ் விரைந்தார். டிசம்பர் திங்கள் 18ஆம் நாள் நள்ளிரவு ; ஏக்கமும், இதய விம்மலும், சோகமும் நிறைந்த ஜூயிசா அப்போதுதான் படுக்கையறைக்குச் சென்றார். தமது கணவர் இன்னும் இரஷ்ய நாட்டில் போராடிக் கொண்டிருக்கிறார் என்பதே பேரரசியாரின் எண்ணம். திடீரென்று அரண்மனை வாயிலில் மனிதர்குரல் கேட்டது. அரண்மனையிலுள்ள வேலைக்காரப் பெண் ஒருத்தியின் குரல் கேட்டு அரசியார் திடுக் கிட்டு எழுந்து படுக்கையிலிருந்தவாறே எட்டிப் பார்த்தார். உடனே, அவரது அறைக்கதவு திறக்கப்பட்டது. உள்ளே மெல்லிய மயிராடையணிந்த ஒருவர் நுழைந்து பேரரசியாரைக்கட்டி அணைத் தார். ஆம் ; பேரரசர் நெப்போலியன்தான் அவர். பேரரசியார் இன்பவெள்ளத்தில் மிதந்தார்.

பேரரசர் நெப்போலியன் தலைநகர் வந்தடைந்த செய்தி நகரெங்கும் விரைவில் பரவியது. மகிழ்ச்சியும் துக்கமும் கலந்து மக்கள் காணப்பட்டனர். மாமன்னர் வருகை குறித்து மக்கள் மகிழ்ச்சி கொண்டனர். ஆனால் இரஷ்யாவில் படைக்கு ஏற்பட்ட பெரும் சேதத்தைக் கேட்டு மக்கள் துக்கமும் துயரமும் கொண்டனர். அடுத்த நாள் காலை 9 மணியளவில் பேரரசர் மக்களுக்கு பேட்டியளித்தார். தம் படைத்துறைப் பணிகளனைத்தையும் மக்களிடையே ஒன்றுவிடாது விளக்கினார். 'மாஸ்கோ நம்வசம் சிக்கியது. ஒவ்வொரு தடையையும் கடந்து நமது வீரர்கள் முன்னேறினர். ஆனால், கொடிய பனியின் கொடுமைக்கு நமது வீரர்கள் பலியாக வேண்டிய தாயிற்று. இரஷ்யர்கள் போரில் நம்மை வீழ்த்தவில்லை ; ஆனால் ; அந் நாட்டின் கொடிய பனியே நமது வீரர்களை மாய்த்தது' என்று நெப்போலியன் தமக்கு முன்னால் கூடியிருந்த கட்டுக் கடங்காத கூட்டத்தினரிடையே எடுத்துக் கூறினார். மக்களும் அவரது விளக்கம் கேட்டு மனநிறைவு பெற்றதுடன் தங்களது படை வீரர்களுக்கேற்பட்ட பேரழிவினைக் கேட்டுப் பெருந்துயரில் ஆழ்ந்தனர்.

பேரரசரைப் பிரிந்த ஃபிரெஞ்சுப் படை மேலும் பல இன்னல்களுக்குள்ளாகிப் பயணத்தைத் தொடர்ந்தது. வில்னு நகரைப் படையினர் நெருங்கிய நேரத்தில் கொடிய பனி அவர்களைக் குறிவைத்துத் தாக்கியது. எண்பதாயிரம் வீரர்களில் கிட்டத்தட்ட நாற்பதாயிரம் பேர் பனிக் கொடுமைக்குப் பலியாயினர். எஞ்சிய நாற்பதாயிரம் வீரர்கள் டிசம்பர் திங்கள் 12ஆம் நாள் நெய்மென் நதிக்கரை வந்தடைந்தனர். அடுத்த நாள் முப்பதாயிரம் பேர்களே பாலத்தின் வழியாக அக்கரை சேர்ந்தனர். ஆனால், அவர்களையும் வழிமறித்துத் தாக்கி வீழ்த்தினர் இரஷ்யர்கள். கடுமையான சேதத்திற்குள்ளாயினர் ஃபிரெஞ்சு வீரர்கள். பல தளபதிகள் கொல்லப்பட்டனர். எஞ்சிய வீரர்கள் சிலரே தாயகம் திரும்பினர். தளபதி நே தமது கடைசித் துப்பாக்கியையும் நெய்மென் நதியிலெறிந்து விட்டு ஜெர்மன் பகுதிக்குள் நுழைந்தார்.

நெப்போலியன் தலைநகர் வந்தபின் மீண்டும் தீவிரமாக அரசாங்கப் பணிகளில் ஈடுபட்டார். படையை மீண்டும் பலப்படுத்தும் பணியில் தனிக் கவனம் செலுத்தினார். நெப்போலியனது விளக்கங்களை ஏற்று மக்கள் அவருக்கு மகத்தான ஆதரவு நல்கினர். பேரரசின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஆதரவுச் செய்திகள் வந்து குவிந்த வண்ணமிருந்தன. ரோம், மிலான், ஃபிளாரன்ஸ், டூரின், ஏம்பர்க், ஆம்ஸ்டர்டாம் (Am-

sterdam), மேயன்ஸ் (Mayence) ஆகிய அரசுகள் தங்களின் முழு ஆதரவை வழக்கம் போல் பேரரசுக்கு அளித்தன. ஆனால், ஐரோப்பிய அரசுகள் பல அவருக்கெதிராகப் பகைவரணி யில் சேர்ந்தன. பிரஷ்ய மன்னர் ஃபிரெடெரிக் வில்லியம், நெப்போலியனால் தோற்கடிக்கப்பட்டு அவரிடம் சரணடைந்து, அவரது கருணையால் மீண்டும் பிரஷ்ய மன்னரானார் என்பதை ஏற்கெனவே பார்த்துள்ளோம். அவரும் போனபார்ட்டுடன் சேர்ந்து இரஷ்யப் படையெடுப்புக்கு ஆக்கமும் ஊக்கமும் ஊட் டினார். ஆனால், அவர் இப்போது இரஷ்யாவில் ஃபிரெஞ்சுக் காரர்களுக்கேற்பட்ட பேரிழப்பைக் கண்டு, ஃபிரெஞ்சுப் பிடி யிலிருந்து நழுவி இரஷ்யா—இங்கிலாந்து அணியில் சேர்ந்தார். அன்றியும் பெரும்படை ஒன்றினைத் திரட்டி ஃபிரான்சின்மீது படையெடுக்கத் தயாரானார். பேரரசரின் பேராதரவைப் பெற்று ஸ்வீடன் மன்னரான பெர்னடட்டும் இப்போது நெப்போலிய னுக்கெதிராக இரஷ்யர்களிடம் உறவு கொண்டார். நெப் போலியனைக் கொலை செய்வதற்கான சதியில் கலந்துகொண்ட குற்றத்திற்காக மரண தண்டனை விதிக்கப்பட்டு, பின் பேரர சரால் மன்னிக்கப்பட்டு, பணமும் பொருளும் பெற்று, அமெ ரிக்கா சென்றவரான மோரோ என்பவரும் பகைவர் பக்கம் சேர்ந்து நெப்போலியனை எதிர்க்கத் துணிந்தார். நெப்போ லியனால் பலமுறை தோற்கடிக்கப்பட்டவரும், அமைதி உடன் பாடுகள் பல செய்து கொண்டவரும், அவற்றை அடிக்கடி மீறியவரும், போனபார்ட்டால் பெருந்தன்மையுடன் மன்னிக்கப் பட்டவரும், போனபார்ட்டுக்கு தமது அருமை மகளை மண முடித்துக் கொடுத்தவரும், போனபார்ட்டின் இரஷ்யப் படை யெடுப்பில் ஆர்வத்துடன் இறங்கியவருமான ஆஸ்திரிய மாமன் னர் ஃபிரான்சிஸ் இப்போது இரஷ்ய—இங்கிலாந்து அணியில் இணைந்து ஃபிரான்சின் மீது பாய்ந்து தாக்க உறுதிபூண்டார். அருமை மகளின் கண்ணீரைத் துடைக்க வேண்டிய ஃபிரான் சிஸ் அவளது தாலியை பறிக்க முன்வந்தார். அன்றியும் போனபார்ட்டால் பெரிதும் மதிக்கப்பட்டவரும், அவரது நம்பிக் கைக்குரியவருமான தளபதி ஜோமினி என்பவரும் பகைவரணி யில் சேர்ந்தார். அவர் நெப்போலியனது தங்கை கரோலினு வின் கணவர். அவரது அடாத செயலையறிந்த போனபார்ட் 'பகைவர்களைப் பாய்ந்து தாக்குவதில் உனது கணவன் வல்லவன்; ஆனால், பகைவர்கள் மறைந்தபின் அவன் ஒரு பெண்ணைவிட பேடியாவான்; அவனிடம் நீதியின்பாற்பட்ட உறுதி கிஞ்சித்தும் இல்லை' என்று தமது தங்கைக்கு எழுதினார். நெப்போலிய னுக்கு எதிராகச் சென்ற அரசர்களையெல்லாம் தங்கள் பக்கம் இழுத்து அவர்களுக்குத் தேவையான பொருளுதவி செய்து

அவர்களை ஊக்குவித்தனர் ஆங்கிலேயர்கள். மேலும், ஸ்பெயின், போர்ச்சுகல் நாடுகளும் நெப்போலியனுக்கெதிராக எழுந்தன. வெஸ்ட்பேலியாவில் மக்கள் போனபார்ட்டிற்கெதிராக பகைவர் பக்கம் சேரும் பொருட்டுக் கிளர்ச்சி செய்தனர். அதனைக் கண்ட நெப்போலியனது தம்பியாகிய ஜெரோம் மணிமுடியைத் தூக்கியெறிந்து விட்டுக் கிளம்பினார். சாக்சனி மன்னரும், ஈஜினும் இறுதிவரை பேரரசரின் நம்பிக்கைக்குரியவர்களாகப் பணியாற்றினர். ஏனைய மன்னர்களனைவரும் 'அற்ற குளத்தில் அறுநீர் பறவை போல்' பறந்து சென்று பகைவரணியில் சேர்ந்தனர்.

1813ஆம் ஆண்டு மார்ச் திங்கள் முதல் நாள் பிரஷ்ய மன்னர் ஃபிரெடெரிக் வில்லியம் ஃபிரான்சின்மீது படையெடுப்பதற்கான அறிவிப்பை வெளியிட்டார். போர்ப்பிரகடனத்தைக் கேள்விப்பட்ட போனபார்ட் அதனை வரவேற்றார். 'பச்சைப் பாம்பை விட சீறிப்படமெடுத்துவரும் நல்லபாம்பு மேலானது' என்று அவர் கருதினார். மறைந்து தாக்கும் கோழையைவிட நேருக்கு நேர் மோதவரும் வீரன் உண்மையிலேயே மேலானவன் என்பது பேரரசரின் எண்ணம். 'ஐயத்திற்காளான நண்பனைவிட அறிவிக்கப்பட்ட பகைவன் மேலானவன்' என்று எண்ணி அவர் ஃபிரெடெரிக் வில்லியத்தின் சவாலை ஏற்றார். பிரஷ்ய மன்னனின் போரறிவிப்பினை அடுத்து அவரது நண்பர்கள் பிரஸ்லன்(Breslan) நகரில் கூடி, ஜெர்மானிய அரசர்களனைவரும் உடனடியாக நெப்போலியனுக்கெதிராக அணிதிரளவேண்டும் என்றும், அவ்வாறு செய்யாத மன்னனின் நாட்டைப் பறிமுதல் செய்ய வேண்டும் என்றும் முடிவெடுத்தனர். அதனை ஏற்றுக் கொள்ள மறுத்த சாக்சனி மன்னர்மீது அவர்கள் உடனடியாகச் சாடினர். சாக்சனிமீது படையெடுத்து அதனைப் பிடித்தனர். சாக்சனி மன்னர் டிரெஸ்டன் நகர் விட்டு ஓடினார். சாக்சனிக்குள் நுழைந்த பகைவர்கள் ஜெர்மானிய அரசர்களுக்கு ஆசைவார்த்தைகள் கூறி அவர்களையெல்லாம் நெப்போலியனுக்கெதிராகத் திருப்பும் பணியில் ஈடுபட்டனர். ஆங்கிலேயர்களும் நெப்போலியனுக்கெதிரான செயல்களில் தீவிரமாக ஈடுபட்டனர். அவர்மீது பயங்கரக் குற்றச்சாட்டுகளைச் சுமத்தி அவற்றை ஐரோப்பாவெங்கும் பரப்பினர்.

ஃபிரான்சைச் சுற்றிலும் பெரும்புயல் தோன்றுவதற்கான அறிகுறிகளைக் கண்ட நெப்போலியன், நாட்டை அழிவினின்றும் காக்கத் தேவையான பணிகளை விரைந்து மேற்கொண்டார். பாய்ந்து வரும் பகைவர்களைக் களத்தில் சந்திக்க உறுதி பூண்டார். ஃபிரெஞ்சு மக்களும் அட்டியின்றி ஆவன செய்தனர். உடனே,

மூந்நூறாயிரம் வீரர்கள் திரண்டனர். அவர்களில் பெரும்பகுதியினர் போர்ப் பயிற்சியற்ற இளைஞர்கள். இருப்பினும், அவர்களிடம் நாட்டுப் பற்று, மாமன்னர்மீது நம்பிக்கை ஆகிய நல்லாயுதங்கள் நிரம்பியிருந்தன. ஏப்ரல் திங்கள் 15ஆம் நாள் காலை 4 மணி அளவில் அரண்மனையில் அனைவரிடமும் விடை பெற்று படைமுகாம் நோக்கி விரைந்தார் போனபார்ட். ஏப்ரல் திங்கள் 25ஆம் நாள் எர்ஃபர்த் (Erfurth) நகரில் முகாமிட்டிருந்த தமது படை வீரர்களிடம் வந்தடைந்து அவர்களுடன் அளவளாவினார். அடுத்து, அவர்களை அழைத்துக்கொண்டு முன்னேறிச் சென்றார். ஆங்காங்கே நடந்த மோதல்களிலெல்லாம் பகைவர்களை வீழ்த்தி முன்னேறியது ஃபிரெஞ்சு இளைஞர் படை. தோற்றோடிய பகைவர்கள் பெருமளவில் திரண்டு லூட்சன் (Lutzen) என்ற இடத்தில் அணிவகுத்து நின்றனர். மே திங்கள் 2ஆம் நாள் அங்கு இருபடைகளும் பயங்கரமாக மோதின. எட்டு மணி நேரம் தாக்குதல்கள் தொடர்ந்தன. பயிற்சியற்ற ஃபிரெஞ்சுப் படையினர் போனபார்ட் ஊட்டிய உற்சாகத்தைத் துணையாகக் கொண்டு உறுதியுடன் போரிட்டனர். பகைவர் படைகள் பஞ்சாய்ப் பறந்தன. லூட்சன் வெற்றிச் செய்தி பாரிசுக்கு எட்டியது. ஃபிரெஞ்சு மக்கள் வெற்றிச் செய்தி கேட்டு பெரிதும் மகிழ்ந்தனர். போனபார்ட் தமது இளைஞர் படையினரைப் பெரிதும் பாராட்டினார்.

லூட்சன் போரில் இருபதாயிரம் வீரர்களை இழந்த எதிரிகள் பின் வாங்கிக் குழப்பத்தில் ஓடினர். மே திங்கள் 7ஆம் நாள் அவர்கள் சாக்சனித் தலைநகரான டிரஸ்டன் வழியாகச் சென்றனர். ஆனால், அங்கு தங்காது விரைவாக எல்ப் (Elbe) நதியைக் கடந்து சென்றுவிட்டனர். அவர்களைத் தொடர்ந்து வந்த ஃபிரெஞ்சுப் படையும் டிரஸ்டன் நகர் வந்தடைந்தது. அந் நகரில் ஃபிரெஞ்சு படையினருக்குச் சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. சாக்சனி மன்னரும் போனபார்ட்டும் ஒருவரையொருவர் கட்டித் தழுவி மகிழ்ந்தனர். மே திங்கள் 12ஆம் நாள் பேரரசர் போனபார்ட்டும், சாக்சனி மன்னரும் குதிரைகள் மீது அருகருகேயமர்ந்து டிரஸ்டன் வீதிகளில் வலம் வந்து அரண்மனையை அடைந்தனர். அப் பெருமாளிகையில் ஒருவாரம் தங்கி மீண்டும் அமைதி நாடி பகைவர்களிடம் தூதனுப்பினார் பேரரசர். ஆனால், பயனில்லை. இதற்கிடையில், இத்தாலியைக் காக்கும் பொருட்டு ஈஜினை அங்கு அனுப்பிவைத்தார். பின்பு, தம் படையுடன் பாட்சன் நகர் நோக்கிப் புறப்பட்டார். வழியில் பகைவர்களின் தாக்குதலுக்குள்ளாகி அழிந்துபட்ட சிற்றூர் ஒன்றினைக் கண்டு வேதனைப்பட்டார். அச் சிற்றூரைப்

புதுப்பிப்பதற்கு நூறுயிரம் ஃபிராங்குகள் வழங்கினுர். மே திங்கள் 21ஆம் நாள் ஃபிரெஞ்சுப் படை பாட்சன் வந்தடைந்தது. அங்கு பகைவரின் பெரும்படையொன்று அணிவகுத்து ஃபிரெஞ்சுப் படையைத் தாக்கக் காத்திருந்தது. அங்கு மீண்டும் பயங்கர மோதல் ஏற்பட்டது. ஃபிரெஞ்சுப் படையினர் வழக்கம் போல் முனைந்து தாக்கினர். பிரஷ்ய — இரஷ்ய இணைப்புப் படைகளும் விடாது தாக்கின. சண்டை பல மணி நேரம் நீடித்தது. ஆனுல், நெப்போலியன் பல நாள் தூக்கமின்றி படையை நடாத்தி வந்த களைப்பில் போர்க் களத்தில் ஒரு மூலையில் நன்கு அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார். அவரது தூக்கம் கலையாதவாறு ஃபிரெஞ்சுப் படையினர் பகைவர் படைகளைத் தாக்கி அழித்தனர். பதினைந்தாயிரம் வீரர்களை இழந்து பகைவர் படை பின்வாங்கி ஓடியது. அவர்களைத் தொடர்ந்து ஃபிரெஞ்சுப் படையும் சென்றது. விரைவில் ஃபிரெஞ்சுப் படை பிருன்ட்ஸ்லௌ (Bruntzlau) என்ற சிற்றூர் வந்தடைந்தது. அங்குதான் இரஷ்யத் தளபதி குடுசாஃப் சில வாரங்களுக்குமுன் நோய் வாய்ப்பட்டு இறந்தார். அவருக்கு அங்கு ஒரு நினைவுச் சின்னம் ஏற்படுத்துவதற்கான திட்டம் ஒன்றினையும் நெப்போலியன் வெளியிட்டார்.

ஃபிரெஞ்சுப் படைகள் வெற்றிமேல் வெற்றி பெற்று வருவதை அறிந்த பகைவர்கள் அமைதி உடன்பாடு குறித்து பேரரசரிடம் பேச முன்வந்தனர். அமைதியில் உண்மையான நாட்டம் கொண்ட நெப்போலியன் அதற்கு இசைந்தார். உடனே, இதுபற்றி இரஷ்ய மன்னர் அலெக்சாண்டரிடம் நேரடியாகப் பேச அவர் விரும்பினுர். ஆனுல், அதற்கு இரஷ்யர்கள் மறுத்துவிட்டனர். இருப்பினும் உடன்பாட்டிற்கான பேச்சுகளின் மூலம் காலத்தைக் கடத்தி படைகளை ஒன்று திரட்டி நெப்போலியன்மீது பாயத் திட்டமிட்டனர். ஆகவே, உடன்பாட்டுப் பேச்சுகள் முற்றுப்பெருத நிலையில் காலத்தைக் கடத்தினர் எதிரிகள். இறுதியில், ஆஸ்திரியாவும் இரஷ்யாவும் பிரஷ்யாவும் பிற சிறு நாடுகளும் நெப்போலியனைத் தாக்கி வீழ்த்துவதற்கான வலிவினைப் பெற்றபின் உடன்பாட்டுப் பேச்சுகளை முடிக்க முன் வந்தனர். ஆஸ்திரியா கடுமையான நிபந்தனைகளை உடன்பாட்டுக்கு விதித்தது. ஃபிரான்சையும் அதன் மக்களையும் இழிவுபடுத்துகின்ற உடன்பாட்டை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார் நெப்போலியன். பேச்சு முறிந்தது. திட்டமிட்டபடி ஆஸ்திரியா வெற்றிக்கான அறிகுறிகளைப் பெற்றவுடன் போரில் குதிக்க முன்வந்தது. 1813ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 10ஆம் நாள் இரவு ஆஸ்திரியா போர் அறிவிப்பினை

வெளியிட்டது. ஆஸ்திரியா — பிரஷ்யா — இரஷ்யா ஆகிய நாடுகளின் படைகள் திரண்டன. ஐநூறுயிரம் வீரர்கள் ஃபிரான்சின்மீது படையெடுத்தனர். அவர்களைக் களத்தில் சந்தித்து வீழ்த்தும் ஆற்றலைப்பெற்ற நெப்போலியனது படையில் அப்போது இருநூற்றறுபதாயிரம் வீரர்களே இருந்தனர். அவர்களனைவரும் போர்ப் பயிற்சியற்றவர்கள். தளபதிகளும் பெரும்பாலும் புதியவர்கள். ஆற்றல்மிக்க சிறந்த தளபதிகள், வீரர்கள் பலர் இரஷ்யப் போருக்குப் பலியாயினர். இருப்பினும் தமது பயிற்சியற்ற படை வீரர்களைக் கொண்டு பகைவர்களைக் களத்தில் சந்திக்கத் தயாரானுர் நெப்போலியன்.

1813ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 4ஆம் நாள் பேரரசர், பாட்சனுக்கருகில் தளபதி மெக்டொனுல்டின் படை முகாம் வந்தடைந்தார். அதற்கடுத்தாற்போல் அணிவகுத்து நின்றது பகைவர் படை ஒன்று புளுச்சர் தலைமையில். அதனைத் தாக்கி விரட்டியது ஃபிரெஞ்சுப் படை. இதற்கிடையில் மீண்டும் டிரஸ்டனுக்கு ஆபத்து என்ற செய்திகேட்டு அங்கு விரைந்தார் போனபார்ட். அடுத்தநாள் மாலை ஏழுமணியளவில் டிரஸ்டனுக்குப் பன்னிரண்டு கல் தொலைவிலுள்ள பிர்ன (Pirna) என்ற இடத்தில் நெப்போலியன் எதிரிகளின் படையை வழி மறித்தார். ஆனுல், நெப்போலியனைக் கண்ட பகைவர் படை அஞ்சிப் பின்வாங்கியது. அவர்களை இருபது கல் தொலைவு விரட்டிச் சென்றுர் பேரரசர் போனபார்ட். தளபதி புளுச்சர் வேருெரு வழியில் டிரஸ்டன் நோக்கிப் பெரும் படையுடன் வந்துகொண்டிருந்தார். அவரும் போனபார்ட்டின் படையைக்கண்டு அஞ்சி ஓடினுர் படையுடன். ஆனுல், ஆஸ்திரியப் பெரும்படையொன்று டாப்லிட்ஸ் என்ற இடத்தில் போனபார்ட்டிடம் வசமாகச் சிக்கியது. ஃபிரெஞ்சு வீரர்கள் அப் பெரும்படையினரைத் தாக்கிச் சிதறடித்தனர். பின்பு, நெப்போலியன் டிரஸ்டன் நகர் சென்றுர். அங்கு வந்தவுடன் பெர்னுடட் பெரும் படை ஒன்றுடன் எல்ப் நதியைக்கடந்து வருவதாகக் கேள்விப்பட்ட நெப்போலியன் அங்கு தம் படையுடன் விரைந்தார். அவர் வருவதை அறிந்த பெர்னுடட் ஓடி மறைந்தார். ஆகவே, ஒரு மாத காலமாக டிரஸ்டன் நகரைக் கைப்பற்ற எதிரிகள் மேற்கொண்ட முயற்சிகளையெல்லாம் முறியடித்து அம் மாநகரைக்காத்தார் நெப்போலியன். இந் நிலையில் பகைவரின் படை நாளுக்கு நாள் பல்கியது ; ஃபிரெஞ்சுப்படை தேய்ந்தது. ஐநூறுயிரம் பகைவர் படையினர் எல்ப் நதியைக் கடந்து அந் நதியின் இடது கரையில் அணிவகுத்து நின்றனர். நெப்போலியனது படை பின்வாங்கிச் செல்ல இயலாதவாறு அப் படைகள் சுற்றிவளைத்தன. நெப்போலியன் இப்போது வேறு வழியின்றி பகைவர்

படையினூடே பாய்ந்து எல்ப் நதிக்கரை வழியாக இருநூறு கல் தொலைவு சென்று பகைவரின் நகர்களைத் தாக்கவேண்டுமென்று திட்டமிட்டார். அதற்கேற்ப, அவரது படைகள் பெர்லின் நகர் மீது பாய்வதற்கான பயணத்தை மேற்கொள்ளத் தயாராயினர். இதற்கிடையில், எண்பதாயிரம் இரஷ்ய வீரர்கள் வந்துகொண் டிருக்கின்றனர் என்றும், நூறுயிரம் பகைவர் படையினர் மேயன்ஸ் நகர் வழியாக ஃபிரான்சின்மீது படையெடுத்து விரைந்துள்ளனர் என்றும், அரை மில்லியன் வீரர்கள் டிரஸ்டன் நகர் மீது பாய்ந்து தாக்க முனைந்துள்ளனர் என்றும் செய்திகள் நெப்போலியனுக் கெட்டின. உடனே போனபார்ட் மேலும் உதவியனுப்பும்படி பாரிசுக்குத் தகவலனுப்பினர். பேரரசி மரிய லூயிசா நேரிடை யாகச் சட்டமன்றத்திற்குச் சென்று அத் தகவலை வெளியிட்டார். உடனடியாக நூற்றெண்பதாயிரம் வீரர்கள் திரட்டப்பட்டு அனுப்பப்பட்டனர். பெர்லின்மீது படைமேற்கொண்டு செல்ல வேண்டும் என்ற போனபார்ட்டின் திட்டம் சிறந்தது என்பதை உலகமறியும். ஆனல், அவரது தளபதிகள் இப்போது அத் திட்டத் திற்கு ஆதரவுகாட்ட முன்வரவில்லை. மாருக, அவர்கள் லீப்சிக் (Leipsic) மீது படையெடுத்தலையே விரும்பினர். போனபார்ட்டின் ஆணைக்குத் தளபதிகள் மறுப்புத் தெரிவித்தது இதுவே முதல் தடவையாகும். தளபதிகளின் மறுப்புரையைக் கேட்ட நெப் போலியனது முகம் சுருங்கியது, விழிகள் சிவந்தன ; உள்ளம் குமுறியது. இருப்பினும், தமது கோபத்தை வெளிக்காட்டாது, அவர்களைப்பார்த்து, 'தோழர்களே ! பெர்லின்மீது படைமேற் கொண்டு செல்வதே சாலச்சிறந்ததாகும். ஆனல், இந் நிலையில், லீப்சிக்மீது படைமேற்கொண்டு செல்லுதல் ஆபத்தானதாகும். இருப்பினும் தங்களது கோரிக்கையினையும் கவனிப்பேன்' என்று கூறினர்.

அடுத்து, நெப்போலியன் தமது அறைக்குள் சென்று ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டார். அவரைப் பார்ப்பதற்கு யாரும் அனுமதிக்கப்படவில்லை. வெகு நேரமாகியும் பேரரசர் வெளி யே வரவில்லை. ஆகவே, அமைச்சர் கலேன் கோர்ட் (Caulain court) பெரிதும் கவலையுற்று, ஒரு துண்டுச் சீட்டில் 'பேரரசே ! நான் இங்கிருக்கின்றேன்; தங்களைக்காண வரலாமா ?' என பென்சி லில் எழுதி அனுப்பி அவரது அறைக் கதவுக்கருகில் நின்று கொண் டிருந்தார். அதனைக் கண்ணுற்ற போனபார்ட் உரத்த குரலில், 'கலேன்கோர்ட்,உள்ளே வாருங்கள்' என்று அழைத்தார். அமைச்ச ரும் அகமகிழ்ந்து உள்ளே சென்ருர். அங்கு நாட்டுப் படங்கள் பல மேசையின்மீது விரிக்கப்பட்டிருந்தன. பேரரசர் கவலை தோய்ந்த முகத்துடன் காணப்பட்டார். அவரது நிலையைக் கண்டு

வருந்திய கலேன்கோர்ட் 'பேரரசே! தளபதிகள் தங்களது ஆணையை மீறவேண்டுமென்ற எண்ணத்தில் அவர்களது கருத்துகளைக் கூறவில்லை. அவர்கள் என்றென்றும் தங்களது ஆணையை ஏற்று நடாத்த தயாராகவுள்ளனர். ஆகவே, அதுபற்றி கவலை கொள்ளற்க. அக் கவலை தங்களை மாய்த்துவிடும்' என்றெடுத்தியம்பினர். ஆனல், நெப்போலியன், 'அமைச்சரே தாங்கள் அறியாது பேசுகின்றீர்கள். படை வீரர்களின் பணிவின்மை நாட்டைப் படுகுழியில் தள்ளிவிடும். மன்னனின் முடிவுக்கு மாருகத் தளபதிகள் ஆலோசனையிலிறங்கினுல் அம் மன்னனது ஆட்சிக்கு அழிவு அன்றே தொடங்கி விட்டது என்பதுதான் பொருள். மறுத்துக்கூறி வாதித்தல் வாளேந்திய வீரர்களுக்கு அழகல்ல. தலைவனின் கட்டளைக்குக் கட்டுப்பட்டு நடத்தலே வீரர்களின் கடமை. நேரிடையான புரட்சியைக்கூட விரைவில் நசுக்கி விடலாம். ஆனல், படைத்துறையில் ஏற்படும் பணிவின்மை பயங்கர விளைவுகளை ஏற்படுத்தும். மன்னனுக்கும் தளபதிகளுக்குமிடையே நம்பிக்கையும் நல்லெண்ணமும் நிலவ வேண்டும். இன்று நாம் வாழ்வா? சாவா? என்ற மரணப் போராட்டத்திலிறங்கியுள்ளோம். இப்போது நமக்குத் தேவை துணிவும் தலைவனுக்குக் கட்டுப்பட்டு நடத்தலுமாகும். அவநம்பிக்கையும் தயக்கமும் பகைவர்களின் படையைவிட எளிதில் நம்மை அழித்தொழிக்க வல்லவை' என்று கலேன்கோர்ட்டைப் பார்த்துக் கூறினர். பின்பு, மீண்டும் சோபாவில் சாய்ந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினர்.

அடுத்த நாள் காலை அவரது உள்ளத்தில் மீண்டும் உணர்ச்சிப் போராட்டம் உருவானது. பெர்லினும், லீப்சிக்கும் அவரது உள்ளக்கண்களில் அடிக்கடி தோன்றி மறைந்தன. இடையிலே, பின்வாங்கிப் படைகளை அழைத்துச் செல்லும் எண்ணமும் தோன்றியது. ஆனல், அது படையினை அழித்தொழித்துவிடும் என்ற கருத்து அவரைத் தடுத்தது. இறுதியில், தளபதிகளின் விருப்பப்படி லீப்சிக் செல்லத் துணிந்தார். உடனே வீரர்களுக்கு அதற்கான ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. படையும் நகர்ந்தது. அக்டோபர் திங்கள் 15ஆம் நாள் மாலை அப் படை லீப்சிக் வந்தடைந்தது. வந்தவுடன் தாமதமின்றிக் கோட்டையை முற்றுகையிட்டனர் ஃபிரெஞ்சு வீரர்கள். அன்று மாலையே பகைவர் படையும் அங்கு வந்து சேர்ந்தது. அப் படையில் முந்நூற்றைம்பதாயிரம் வீரர்களிருந்தனர். ஒரு ஃபிரெஞ்சு வீரனுக்கு மூன்று பகைவர் படை வீரர்கள் என்ற விகிதத்தில் அங்கு படை வீரர்களிருந்தனர். அக்டோபர் திங்கள் 16ஆம் நாள் காலை

பயங்கரக் கைகலப்புத் தொடங்கியது அப் பெருநகரில். அன்று பகல் முழுதும் சண்டை இடைவிடாது தொடர்ந்தது. அன்று மட்டும் இருபதாயிரம் பகைவர் படைவீரர்கள் மாண்டனர். எண்ணிறந்த ஆஸ்திரிய வீரர்கள் சிறைப்பிடிக்கப்பட்டனர். அடுத்த நாளும் சண்டை தொடர்ந்தது. ஆஸ்திரிய—இரஷ்யப் படையினர் தோல்வியை நோக்கி விரைந்துகொண்டிருந்தனர். ஆனல், பெர்னடட் அறுபதாயிரம் வீரர்களுடன் அவர்களுக் குதவியாக அங்கு வந்து சேர்ந்தார். இருப்பினும், துணிந்து போனபார்ட் தம் வீரர்களைத் தாக்குதலில் ஈடுபடுத்தினர். ஆனல், எண்ணிக்கை அதிகமான பகைவர் படைகளுக்கு ஈடு கொடுத்துத் தாக்குதலைத் தொடர்ந்து நடாத்தப்போதுமான உதவிகள் ஃபிரெஞ்சு வீரர்களுக்குக் கிட்டவில்லை. இருப்பினும், மனம் தளராது மூன்றும் நாளும் போரில் இறங்கினர் போன பார்ட். ஒவ்வொரு வினடியும் பகைவர்படை எண்ணிக்கை வளர்ந்து கொண்டு சென்றது. ஃபிரெஞ்சு வீரர்களின் எண் ணிக்கை தேய்ந்து வந்தது. நெப்போலியன் பெரிதும் வருந்தி னர். அத்துடன் அப்போது கடுமையான வயிற்றுவலியும் சேர்ந்து அவரை வாட்டியது. இருப்பினும் விரைவில் நலம் பெற்றுப் போராட்ட ஏற்பாடுகளைத் தீவிரப்படுத்தினர். ஆனல் அப்போது போருக்குத் தேவையான வெடிகுண்டுகள் போது மானவை இல்லை என்ற செய்தியும் அவரை வாட்டியது. எனவே, வேறு வழியின்றி லீப்சிக் முற்றுகையைக் கைவிட்டுப்படையுடன் பின்வாங்கிச் செல்ல முடிவு செய்தார்.

லீப்சிக் நாற்பதாயிரம் மக்களைக் கொண்ட பெருநகரம். எல்ஸ்டர் நதிக்கரையில் அமைந்து எழிலும் ஏற்றமும் பெற்று விளங்கியது அம் மாநகரம். அங்குள்ள ஆற்றைக் கடப்பதற்கு ஒரே ஒரு பாலம் மட்டுமேயிருந்தது. அன்றிரவு ஃபிரெஞ்சுப் படையினர் அக் குறுகிய பாலத்தின் வழியாக ஆற்றைக் கடந்து சென்றனர். நெப்போலியன் ஆற்றைக் கடந்து செல் வதற்கான ஏற்பாடுகளை முன்னின்று செய்தார். விரைவில் படைமுழுதும் லீப்சிக் விட்டு வெளியேறி சாக்சனியிலுள்ள டிரஸ் டன் நகர் வந்தடைந்தது. அங்கு சாக்சனி மன்னர் ஃபிரெடெரிக் அகஸ்டஸ் (Frederic Augustus) நெப்போலியனைக் கட்டித் தழுவி 'இதுவே நமது இறுதிச் சந்திப்பு' என்று கண்களில் நீர் மல்கக் கூறினர். அவரிடம் பிரியாவிடை பெற்றுப் பேரரசர் எர்பர்த் நோக்கி விரைந்தார். அவர் சென்ற பின் டிரஸ்டன் பகைவர் வசம் சிக்கியது. எர்பர்த் நகரில் மூராட்டின் நன்றி கொன்ற செயலைக் கேட்டுப் பெரிதும் வேதனைப்பட்டார் போனபார்ட். அங்கு தம் படையிலிருந்த ஜெர்மானிய வீரர்களுக்கெல்லாம்

நிறையப் பொருள் கொடுத்துப் படையிலிருந்து விலக்கி அவர்களைத் தங்கள் நாடு செல்லும்படி பணித்தார். அங்கு இரண்டு நாள் தங்கிவிட்டு மீண்டும் திரும்புகால் பயணத்தைத் தொடர்ந்தார். அக்டோபர் திங்கள் முப்பதாம் நாள் அவர் தம் படையுடன் கேய்னு (Haynau) நகர் வந்தடைந்தார். அங்கு பவேரிய மன்னர் ஃபிரான்சிற் கெதிராக ஆஸ்திரியாவுடன் சேர்ந்து போருக்கான ஏற்பாடுகளைச் செய்து வந்தார். நெப்போலியனது திரும்புகால் பயணத்தைத் தடுத்து அவரது படையினரை வீழ்த்தும் பொருட்டு அங்கு ஆஸ்திரிய — பவேரிய வீரர்கள் அறுபதாயிரம் பேர் அணிவகுத்து நின்றனர். அங்கு நடந்த கைகலப்பில் பத்தாயிரத்திற்கு மேற்பட்ட ஆஸ்திரிய — பவேரிய படை வீரர்கள் மாண்டனர். அங்கு வெற்றி பெற்ற ஃபிரெஞ்சுப் படை மீண்டும் பயணத்தை மேற்கொண்டு ஃபிராங் ஃபோர்ட் (Frankfort) வழியாகச் சென்று நவம்பர் திங்கள் இரண்டாம் நாள் காலை மேயென்ஸ் நகர் வந்தடைந்தது. அங்கு நெப்போலியன் மூன்று நாள் தங்கி படைகளைப் புதுப்பித்துப் பாரிஸ் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தார். நவம்பர் திங்கள் நான்காம் நாள் இரவு எட்டு மணிக்கு மேயென்ஸ் விட்டுக் கிளம்பிய நெப்போலியன் அடுத்த நாள் மாலை ஐந்து மணிக்கு பாரிஸ் வந்தடைந்தார். அரண்மனையில் சோகமே உருவெடுத்து வந்ததைப்போல வாடிய நிலையிலிருந்தார் பேரரசியார். தமது தந்தையின் தகாத செயல் அவரை வேல் கொண்டு தாக்கியது. தமது வாழ்வைப் பறிக்குமளவிற்கு அவரது செயல் வளர்ந்துவிட்டதைக் கண்டு விம்மினார். போனபார்ட் அவரைக் கட்டித் தழுவியவாறே ஆறுதல் கூறினார். அடுத்துத் தமது அருமை மகனை எடுத்து வரச்சொல்லி, அவனைக் கையில் தாங்கி முத்தமாரி பொழிந்து மகிழ்ந்தார்.

வெற்றிபெற்ற பகைவர் படையினர் ஜெர்மனி முழுதும் தம் வசப்படுத்தினர். இரைன் நதிக் கூட்டிணைவு நாடுகளனைத்தும் அவர்கள் பிடியில் சிக்கின. டிரஸ்டன் நகரிலிருந்து வீரர்கள் சிறைக் கைதிகளாகி ஆஸ்திரியச் சிறைச்சாலைகளில் வாடினர். நவம்பர் திங்கள் 29ஆம் நாள் தளபதி இராப் (Rapp) டாண்ட்சிக் நகரில் பதினைந்தாயிரம் வீரர்களுடன் பசியால் வாடி, வேறு வழியின்றி, பகைவரிடம் சரணடைந்தார். நெப்போலியனது கோட்டைகள் ஒன்றன்பின் ஒன்றாக பகைவர் பிடியில் சிக்கின. இரஷ்யா, ஆஸ்திரியா, பிரஷ்யா, இங்கிலாந்து ஆகிய நாடுகளின் கூட்டுப் படைகள் அடுத்து ஃபிரான்சின்மீது படை மேற்கொண்டு சென்று நெப்போலியனது ஆட்சியை வீழ்த்த முற்பட்டன. மீண்டும் ஃபிரான்சில் போர்போன் அரசை

உருவாக்கும் பணியில் ஐரோப்பிய அரசுகள் தீவிர கவனம் செலுத்தின. பத்து இலட்சம் வீரர்களைக் கொண்ட பகைவர் படை ஃபிரான்சின் எல்லைகளில் குவிந்து அதன் மீது படையெடுத்து வரத் தயாராயின. குடியரசின் குரல்வளையை நெரித்துக் கொல்லும் நிலை பிறந்துவிட்டது. பேரரசின் பல்வேறு பகுதிகளிலுள்ள அரசுக் கட்சி ஆதரவாளர்களும் இழந்த சலுகைகளைப் பெறத் துடித்த மேட்டுக் குடியினரும் படையெடுத்து வரும் பகைவர் படைகளை வரவேற்று அவர்களுடன் சேர்ந்து போரிட முன்வந்தனர். போர்போன் அரசர்கள் காலத்தில் மக்களைச் சுரண்டி வாழ்ந்த பிரபுக்களும், சமயவாதிகளும் இப்போது பேரரசுக்கெதிராகப் பகைவருக்கு ஆதரவு நல்கினர்.

இத்தகைய இக்கட்டான நிலையில் போனபார்ட் நிலைமைகளைக் கூர்ந்து கவனித்தார். பேரரசின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் பயங்கரச் செய்திகள் வந்து பாரிஸ் நகரைக் கலக்கின. கட்டுக்கடங்கா வீரர்களைக் கொண்ட பகைவர் படை இரைன் நதியைக் கடந்து ஃபிரான்சு நோக்கி வந்துகொண்டிருந்தது. ஆங்கிலத் தளபதி வெலிங்டன் பெரும் படையுடன் ஃபிரான்சின் தென்பகுதியில் நுழைந்து விட்டார்; வடக்கே இரஷ்யர்கள் அணிதிரண்டு வந்துகொண்டிருந்தனர்; ஆஸ்திரிய, பிரஷ்ய, பவேரிய படைகள் ஒன்றுபட்டுக் கிழக்கிலிருந்து புறப்பட்டுவிட்டன. இவ்வாறு, மூன்று பக்கங்களிலும் பகைவரின் படைகள் சூழ்ந்து அலைகடலென ஆர்ப்பரித்து வருவதை அறிந்த நெப்போலியன் மீண்டும் களத்தில் எதிரிகளைச் சந்திக்கத் திட்டமிட்டார். 1813ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 20ஆம் நாள் பேரரசர் நெப்போலியன் செனட் மன்றத்தைக் கூட்டினார். அங்குள்ள உறுப்பினர்களைப் பார்த்து கீழ்க்கண்ட உருக்கமான உரையினை நிகழ்த்தினார்: ''பெரியோர்களே! நமது படை வெற்றிகள் பல பெற்றுள்ளதை நீங்கள் அறிவீர்கள். ஆனால், அண்மையில் படைவீரர்களிடையே ஏற்பட்ட பணிவின்மையும் கடமை தவறியமையும் படைத்துறைச் சாதனைகளை மங்கவைத்துவிட்டன. பெரும் ஆபத்து இப்போது நம்மை எதிர் நோக்கியுள்ளது. ஆகவே, அதுபற்றி அறிவித்து உங்களது ஆதரவைப் பெற விழைகின்றேன். எனது நாட்டமெல்லாம் எப்போதும் மக்களின் நலனைப்பற்றியதே ஆகும். மக்களை மாய்த்து என்னை வளப்படுத்திக்கொள்ள நான் என்றும் எண்ணியதில்லை; நான் பெற்ற பட்டமும் பதவியும் மக்களால், மக்கள் நலன் கருதி எனக்கு அளிக்கப்பட்டவை. நாடுகள் பலவற்றை வென்று அங்கெல்லாம் மக்களின் உரிமைகளையும் நலன்களையும் காக்கும் மன்னர்களையும் உருவாக்கனேன். அவர்களில் பலர் நன்றி கொன்ற நயவஞ்சகர்களாகி விட்டனர். மக்களின் நலத்தைக்

கருத்தில் கொண்டு நல்ல பல திட்டங்களைச் செயல்படுத்தினேன். மக்களை அமைதி வழியில் நடாத்திச் செல்ல அரும்பாடு பட்டேன். நாட்டின் நாடித்துடிப்பு நீங்கள் தான். நாட்டின் நலன்களைப் பலியிட்டு தங்களின் சொந்த நலன்களைப் பெருக்கிக் கொண்டார்கள் என்ற பழிக்கு ஆளாகாது நாட்டு நலனில் நாட்டங் கொண்டு உங்களிடையே நிலவும் கருத்து வேறுபாடுகளை ஒழித்து, நாட்டை எதிர் நோக்கியுள்ள ஆபத்தைத் தடுத்து நிறுத்த அட்டியின்றி முன்வரும்படி உங்களனைவரையும் அழைக்கின்றேன். இவ்வுரை கேட்ட உறுப்பினர்கள் பலர் உள்ளமுருகி உடனடியாகப் பேரரசருக்குப் பேராதரவு நல்க முன்வந்தனர். ஃபிரெஞ்சு மக்களும் தங்களது ஒருமித்த ஆதரவை அவருக்களிக்க தயாராயினர். ஆனல், ஜேகோபியர்களும் (Jacobins) அரசுக் கட்சி ஆதரவாளர்களும் பேரரசருக்கெதிராகத் திரண்டனர். சிறுபான்மையினரான அவர்களை ஒதுக்கிவிட்டு ஃபிரெஞ்சு மக்கள் தங்கள் நல்லாதரவை நல்கினர் பேரரசருக்கு. நெப்போலியன்மீது சாட்டப் பெற்ற குற்றச்சாட்டுகளை யெல்லாம் மக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அவரைத் தங்கள் வீட்டுச் செல்லப்பிள்ளையாகவே கருதி அவரைப் பாராட்டி பாதுகாக்க முன்வந்தனர். அவரைத் தங்களின் வழிகாட்டியாகவும், விடுதலை வித்தகராகவும் கொண்டு அவர் வழி நடக்கத் தொடங்கினர். பேரரசர் பெற்றிருந்த மக்கள் செல்வாக்கு மகத்தானது மட்டுமல்ல ; மாசற்றது. மக்களும் அவர்மீது மாருத நம்பிக்கை கொண்டிருந்தனர். அவர்களது உள்ளங்களை உருக்குலைக்கும் நிகழ்ச்சிகள் பல நடந்தன. ஃபிரான்சின் பெரும் படை—நல்ல பல தளபதிகளைக் கொண்ட ஒப்பற்ற படை இரஷ்யக் குளிருக்குப் பலியான சோக நிகழ்ச்சி ஃபிரெஞ்சு மக்களைப் பெரிதும் வாட்டியது. பிறிதொரு படை சாக்சனி களங்களில் பலியான பயங்கர நிகழ்ச்சி அவர்களது உள்ளங்களில் பசுமையாக இருந்தது. இன்னுமொரு பெரும்படையைத் திரட்டுவதால் ஏற்படும் சிக்கல்கள் அவர்களைப் பெரிதும் வாட்டின ; இராணுவச் செலவு பெருகியதால் ஏற்பட்ட வரிச்சுமையும் அவர்களைப் பாதித்தது. இருப்பினும், மக்கள்—உரிமைகள் பல பெற்று வாழ்ந்த ஃபிரெஞ்சு மக்கள்—உண்மையான நாட்டுப்பற்று கொண்ட மக்கள் — தங்களின் மேலான ஆதரவை நல்க தயக்கமின்றி முன்வந்தனர்.

பாய்ந்து வரும் எதிரிகளைத் தாக்கித் தடுத்து நிறுத்தும் பணியில் மக்களின் மகத்தான ஆதரவை நெப்போலியன் பெற்ற போதிலும், பகைவர்களுடன் அமைதி உடன்பாடு கண்டு போரினைத் தவிர்க்க விரும்பினர். ஆகவே, அமைச்சர் கலேன்கோர்ட்டை பகைவர் படை முகாமிற்கு அமைதி குறித்துப் பேசும்படி அனுப்பினர். அவரிடம் அமைதி உடன்பாட்டிற்கான மடலைக்கொடுத்த

நெப்போலியன், 'அமைச்சரே! நான் எப்போதும் அமைதியையே விரும்புகின்றேன். ஆனல், நாட்டை இழிவு படுத்துகின்ற நிபந்தனைகளுடன் கூடிய உடன்பாட்டை நான் இம்மியளவும் ஏற்றுக் கொள்ளமாட்டேன். அமைதி உடன்பாடு என்பது இருதரப்பினருக்கும் ஏற்றவாறு நேர்மையின் பாற்பட்டதாக இருக்கவேண்டும். அதனை விடுத்து, என்னையும் ஃபிரான்சையும் இழிவுக்குள்ளாக்கும் நிபந்தனைகளை வலிய நம்மீது திணிக்கும் எந்த உடன்பாடும் நம்மைச் சண்டைக்கு இழுக்கும் ஏற்பாடாகும். ஆகவே, அத்தகைய ஏற்பாட்டை ஏற்றுக்கொள்ளாது உண்மையிலேயே அமைதியில் நாட்டமும் நல்லெண்ணமும்கொண்ட உடன்பாட்டை உருவாக்க முயற்சிப்பீராக. அம் முயற்சியில் நீங்கள் வெற்றி பெற விழைகின்றேன். நான் எவ்வளவு ஆவலாக உள்ளேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆகவே, ஒவ்வொரு மணிநேரமும் விடாது செய்தியனுப்புங்கள்' என்று கூறி அவரை அனுப்பிவைத்தார். மாமன்னர் நெப்போலியனின் அமைதிக்கான மடலினைத் தாங்கி அமைச்சர் கலேன்கோர்ட் பகைவர் படை முகாம் சென்று அமைதிப் பேச்சுகளில் ஈடுபட்டார். பகைவர்களும் அமைதிக்கான வழிகளில் அக்கறைகொண்டவர் போல் நடந்தனர். தங்களது படைபலத்தைப் பெருக்கிக்கொள்ளவும், புதிய படைகளைத் திரட்டவும் கருதிக் காலங்கடத்தினர். அமைதிப் பேச்சுகளின் மூலமாக அவர்களது உள்ளக்கிடக்கையை விரைவில் உணர்ந்தார் கலேன்கோர்ட். உடனே அவர் பேரரசருக்குக் கீழ்க்கண்ட செய்தியை அனுப்பினர் : 'பேரரசே! இங்கிலாந்து, ஆஸ்திரியா, ஸ்வீடன் ஆகிய நாடுகளே நமது உண்மையான பகைவர்கள். நமது அழிவில் அவைகள் மாருத அக்கறை கொண்டுள்ளன. உங்களை எப்படியும் ஃபிரான்சின் அரியணையிலிருந்து அகற்றிவிட வேண்டுமென்று அந் நாட்டு மன்னர்கள் உறுதிகொண்டுள்ளனர். ஆகவே, அமைதிக்கான நிபந்தனைகள் நாளுக்குநாள் வேறுபடுகின்றன. நேற்று ஒரு நிபந்தனையை முன்வைத்தனர்; ஏற்றேன். ஆனல், இன்று ஒரு நிபந்தனை. நாளை எத்தனை வேறு நிபந்தனைகளோ ? நானறியேன். அவர்களுக்கு உண்மையிலேயே உடன்பாட்டில் ஆர்வமும் நம்பிக்கையும் இல்லை. அன்றியும், அமைதிக்கான பேச்சுகளைப் பேசிக்கொண்டே படைகளையும் பெருக்கி ஆக்கிரமிப்பு வேலைகளில் ஈடுபட்டுள்ளனர். ஃபிரான்சைச் சுற்றி வளைத்துத் தாக்கும் திட்டத்துடன் பேச்சுகளை நீடித்துக் காலங் கடத்துகின்றனர். ஃபிரான்சைச்சுற்றிலும் படைகளைக் குவித்து ஒரே நேரத்தில் பல்வேறு பகுதிகளிலும் தாக்குதலைத் தொடங்க வேண்டுமென்பதே அவர்களது திட்டம். அதற்கான ஆக்க வேலைகளில் அவர்கள் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர். எனவே, இனியும் நாம் தாமதித்தால் நமக்கு ஆபத்து நிச்சயம்.' இக்

கசப்பான செய்தியை கலேன்கோர்ட் பேரரசருக்கு அனுப்பிவிட்டு அவரும் பாரிஸ் வந்தடைந்தார்.

அமைதிக்கான முயற்சிகள் பயனற்றுப் போகவே, நெப் போலியன் பகைவர்களைச் சந்திப்பதற்கான போர்ப்பணிகளை விரைவு படுத்தினர். நாலாபக்கமும் சூழ்ந்துள்ள பகைவர் படை களைத் தனித்தனியே சந்தித்துத் தாக்குகின்ற பலம் இப்போது அவரிடமில்லை. ஐந்து இலட்சம் ஆற்றல் மறவர்களை அவர் இரஷ்யாவில் பறிகொடுத்தார். சாக்சனியில் மூன்று இலட்சம் வீரர்கள் பலியாயினர். ஸ்பானிய களங்களில் இரண்டரை இலட்சம் வீரர்கள் இறந்துபட்டனர். எனவே, இப்போது நெப் போலியன் பலவாறு முயன்று இரண்டரை இலட்சம் வீரர்களையே திரட்ட முடிந்தது. அவர்களைக்கொண்டு பத்து இலட்சத்திற்கு மேற்பட்ட பகைவர் படைகளுடன் மோதத் துணிந்தார்.

1814-ஆம் ஆண்டு ஜனவரித்திங்கள் 24ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை அரண்மனையில் அமைச்சர்களும் அதிகாரிகளும் அடங்கிய கூட்டத்தை போனபார்ட் கூட்டினர். அவரது ஆசைக்குரிய மகனும் அருமை மனைவியும் அவரருகே அமர்ந்திருந்தனர். மூன்று ஆண்டுகள் நிறைந்த அக் குழந்தை இராணுவ உடையில் அழகு டன் காட்சியளித்தது. அக் கூட்டத்தில் போனபார்ட் அடியிற் கண்ட, உரையை நிகழ்த்தினர்: 'பெரியோர்களே! இன்றிரவு நான் போருக்குப் புறப்படுகின்றேன். எனதருமை மனைவியை யும், ஆசை மகனையும் விட்டுச்செல்கின்றேன். அவர்களை உங்க ளது பாதுகாப்பில் விட்டுச்செல்லுகின்றேன் என்ற மனநிறைவு டன் கவலையின்றிச் செல்கின்றேன். எனது உயிரைவிட மேலான நாட்டையும் உங்கள் பொறுப்பில் விட்டுச்செல்கின்றேன். இங்கு அரசியல் பிளவுகளையகற்றி நாட்டைக் காக்கும் அரிய பணியில் ஈடுபடுவீர்களாக. கடமையுணர்வும் கட்டுப்பாடும் உங்களிடம் உயர்ந்து விளங்கட்டும். சட்டத்தையும், ஒழுங்கையும் காத்து தாயகத்தின் மேல் நீங்காத பற்றுக்கொண்டு நீங்கள் பணியாற்ற வேண்டும் என விழைகின்றேன்.' இவ்வுரை கேட்ட அனைவரும் தங்கள் கண்களைக் குளமாக்கினர். பேரரசியார் அக் கூட்டத்தில் பகர ஆளுநராக (Regent) உறுதிமொழி யெடுத்துக்கொண்டார். அடுத்த நாள் காலை மூன்று மணியளவில் தம்முடைய தனிப் பட்ட செய்திகளடங்கிய காகிதங்களையெல்லாம் தீயிட்டுக் கொளுத்திவிட்டு, மனைவியையும், மகனையும் கட்டித் தழுவி முத்தமிட்டு அவர்களிடம் பிரியா விடைபெற்று அரண்மனை விட்டகன்றர். மீண்டும் அவர்களைப் பார்த்து மகிழும் வாய்ப்பு அவரது வாழ்நாளில் அவருக்குக் கிட்டவில்லை.

இதற்கிடையில் பகைவர் படையினர் இரைன் நதியைத் தாண்டி ஃபிரான்சுக்குள் நுழைந்து எதிர்த்தவர்களையெல்லாம் கொன்று குவித்து முன்னேறி வந்தனர். பாரிசுக்குக் கிழக்கே தொலைவில் தளபதி புளூச்சர் (Blucher) படையைச் சேர்ந்த காசாக் வீரர்கள் வந்துகொண்டிருந்தனர். போனபார்ட் தம் படையுடன் விரைந்து சென்று அவர்களைத் தாக்கி முறியடித் தார். அடுத்து பிரைன் (Brienne) நகரில் தங்கியிருந்த புளூச்சரின் படையைத் தாக்க விரைந்தார். பிரஷ்ய வீரர்கள் அறுபதாயிரம் பேர் அங்கு அணிவகுத்து நின்றனர். இருபதாயிரம் வீரர் களுடன் சென்று அப் பெரும்படையைத் தாக்கிப் பெருஞ்சேதத் தை உண்டாக்கினர். அடுத்த நாள் — ஜனவரித்திங்கள் 30ஆம் நாள் புளூச்சர்படை பின் வாங்கிச் சென்று இளவரசர் சுவார்ட் பர்க் தலைமையில் வந்த ஆஸ்திரியப் படையுடன் இணைந்தது. இப்போது இரண்டு தளபதிகளும் நூற்றி ஐம்பதாயிரம் வீரர் களுடன் பிரைன் நகரிலிருந்து ஐந்து கல் தொலைவிலுள்ள உரோத் தியர் (Rothierre) என்ற இடத்தில் அணி வகுத்து நின்றனர். போனபார்ட் நாற்பதாயிரம் வீரர்களுடன் அங்கு சென்று தாக்கு தலைத் தொடங்கினர். அக் கடும்போர் நிகழ்ந்துகொண்டிருந்த வேளையில் பகைவரின் படையில் புதிய வீரர்கள் வந்து குவிந்து கொண்டேயிருந்தனர். அதனை அறிந்த போனபார்ட் டிராயிஸ் (Troyes) என்ற இடத்திற்குப் பின்வாங்கிச் சென்றார். மேலும், பாரிஸ் நோக்கிப் பகைவர் படைகள் தடையின்றிச் சென்று கொண்டிருந்தது பல்வேறு திசைகளிலிருந்தும். அதனையறிந்த போனபார்ட் திடுக்கிட்டார். தோல்விச் செய்திகள் அவரிடம் வந்த வண்ணமிருந்தன. ஆகவே, பாரிஸ் நகரைக் காக்கும் பொருட்டு பகைவர்களுடன் அமைதி உடன்பாடு காணும்படி அமைச்சர் கலேன்கோர்ட்டுக்குச் செய்தி அனுப்பினர் போன பார்ட். அமைச்சரும் அதற்கான நடவடிக்கைகளை மேற்கொண் டார். வல்லரசுகளும் அமைதிக்கான உடன்பாட்டிற்கு ஒப்புதல் தந்தனர். நெப்போலியன் பேரரசரான பின் பெற்ற இடங்களை யெல்லாம் ஃபிரான்சு விட்டுவிட வேண்டும் என்று முடிவெடுக் கப்பட்டது. அதாவது, போனபார்ட் மாமன்னராவதற்கு முன்பு ஃபிரான்சு எவ்வளவு இடங்களைப் பெற்றிருந்ததோ அவைகளை மட்டும் வைத்துக்கொண்டு எஞ்சிய இடங்களை வல்லரசுகளுக்குக் கொடுத்துவிடவேண்டும். இம் முடிவினைக் கேட்டறிந்த போன பார்ட் கொதித்தார், குமுறினர். ஆனல், அவரது நண்பர் களும் அதிகாரிகளும் அவரை அமைதிப்படுத்தி அதனை ஏற்றுக் கொள்ளவைத்தனர். 'இலட்சக் கணக்கான உயிர்களுக்கு உயி ராய் விளங்கும் உமது உயிரைக்காக்கும் வகையில் எவ் விலை கொடுத்தேனும் அமைதி உடன் பாட்டைப் பெற்றுக்கொள்க'

என்று ஜோசப் போனபார்ட் அவருக்கு எழுதி அனுப்பினர். அதனைக்கண்ட போனபார்ட் உடனே, உடன் பாட்டை ஏற்றுக் கையெழுத்திடும்படி கலென்கோர்ட்டுக்குத் தகவல் அனுப்பினர். ஆனால், போனபார்ட் இறங்கி வந்ததை அறிந்த பகைவர்கள் புதிய நிபந்தனை ஒன்றை அவர்முன் வைத்துத் தங்களைக் களங் கப்படுத்திக் கொண்டனர். அதாவது புரட்சிக்கு முன் ஃபிரான்சு எந்த நிலையிலிருந்ததோ அதே நிலை இப்போது அங்கு நிலவ வேண்டும். அதற்குப்பின் ஃபிரான்சு பெற்ற இடங்களனைத்தையும் அது விட்டுவிட வேண்டும். இந்த இழிவான நிபந்தனையைக் கேட்டறிந்த நெப்போலியன் அதற்கு உடன்பட மறுத்துவிட் டார். ஆகவே, பகைவர் படைகள் பாரிஸ் நோக்கி முன்னேறத் தொடங்கின.

தலைநகரை எப்படியாவது காப்பாற்றியே தீரவேண்டும் என்ற எண்ணத்தில் போனபார்ட் நாற்பதாயிரம் வீரர்களுடன் பின்வாங்கி நோஜன்ட் (Nogent) என்ற இடம் வந்தடைந் தார். அவரைத் தொடர்ந்து எழுபது கல் தொலைவுக்கப்பால் இருநூறுயிரம் ஆஸ்திரிய வீரர்கள் வந்து கொண்டிருந்தனர். சீன் நதிக்கு வடக்கே ஐம்பது கல் தொலைவில் மார்னே (Marne) பள்ளத்தாக்கு உள்ளது. சீன், மார்னே ஆகிய இரண்டு நதி களும் பாரிஸ் நகரில் இணைகின்றன. இப்போது எழுபத்தைந் தாயிரம் இரஷ்ய, பிரஷ்ய வீரர்களுடன் புளூச்சர், மார்னே பள்ளத்தாக்கு வழியாகப் பாரிஸ் நோக்கித் தடையின்றி வந்து கொண்டிருந்தார். வெலிங்டன் பெரும்படை ஒன்றுடன் தெற் கிலிருந்து பாரிஸ் நோக்கி வந்துகொண்டிருந்தார். பெர்னடட் டும் பெரும்படையுடன் விரைந்துகொண்டிருந்தார். ஆஸ்திரியப் பெரும்படை ஒன்று கிழக்கிலிருந்து பாரிசை நோக்கி வந்துகொண் டிருந்தது. மேலும், ஆங்கிலக் கப்பற் படையும் ஃபிரெஞ்சுத் துறைகளைத் தாக்கிக் கடுஞ் சேதத்திற்குள்ளாக்கி வந்தது. எனவே, நெப்போலியன் பெரிதும் இக்கட்டான நிலைக்குத் தள்ளப் பட்டிருந்தார். பேரரசரின் ஆலோசகர்கள் இப்போது நம் பிக்கை இழந்தனர். பகைவர்களின் நிபந்தனைகளை ஏற்று உடன்பாடு செய்து கொள்ளும்படி அவர்கள் போனபார்ட்டைக் கேட்டுக்கொண்டனர். ஆனால், அவர் அதற்கு உடன்பட மறுத்து, உறுதிகுலையாது உடனடியாகப் பாரிசைக் காப்பாற்றும் பணிகளைத் தொடர்ந்தார். நோஜன்ட் நகரில் பத்தாயிரம் வீரர்களை நிறுத்தி பாய்ந்து வரும் இருநூறுயிரம் ஆஸ்திரிய வீரர்களைத் தடுத்து நிறுத்தித் தாக்கும்படி பணித்துவிட்டு, எஞ்சிய முப்பதாயிரம் வீரர்களுடன் மார்னே பள்ளத்தாக்கு நோக்கி விரைந்தார். ஃபிப்ரவரித் திங்கள் பத்தாம் நாள்

அதிகாலை மார்னே பள்ளத்தாக்கில் இரஷ்யப் படையைத் தாக்கி முறியடித்தார். இந்த வெற்றி ஃபிரெஞ்சு வீரர்களுக்குப் புதிய உற்சாகத்தை ஊட்டியது. அடுத்தடுத்து அவர்கள் ஐந்து பெரிய வெற்றிகளைப் பெற்றனர். இருப்பினும், பகைவர்கள் பல திக்குகளிலிருந்தும் பாரிசை நெருங்கிக்கொண்டிருந்தனர். போனபார்ட் இரவு பகலாகப் பயணத்தை மேற்கொண்டு சீன் நதிக்கரை நோக்கிப் பின்னல் விரைந்தார். பாரிசுக்குத் தென் கிழக்கே அறுபது கல் தொலைவில் சீன் நதியும் யோன் நதியும் கலக்கின்ற இடத்திலுள்ளது அழகிய மாண்டிரே (Montereau) நகரம். அங்கு போனபார்ட் வந்தடைந்து நாற்பதாயிரம் வீரர்களுடன் எதிரிகளை எதிர்பார்த்துக் காத்திருந்தார். முந்நூறுயிரம் ஆஸ்திரிய வீரர்கள் அங்கு விரைந்துவந்து சேர்ந்தனர். அங்கு நடந்த பயங்கர மோதலில் ஆஸ்திரியப் பெரும் படை படுதோல்வி அடைந்து சிதறியோடியது. 'எனது இதயத்தை உருக்கிய சுமை குறைந்தது. எனது பேரரசின் தலைநகரைக் காப்பாற்றி விட்டேன்' என்று உற்சாகத்துடன் கூறினுர் போனபார்ட். இருப்பினும், அவரைச் சூழ்ந்துள்ள பகைவர் பலம் குறையவில்லை. ஒரு மில்லியன் வீரர்களைக் கொண்ட பகைவர் படையில் ஒரு நூறுயிரம் அல்லது இருநூறுயிரம் வீரர்களை வீழ்த்தி வெற்றிபெறுதல் வந்துகொண்டிருந்த ஆபத்தை ஒத்திவைக்குமே தவிர தவிர்த்து விடாது. இருப்பினும், உறுதியுடன் பகைவர்களைத் தாக்குவதில் தொடர்ந்து நடைபோட்டார் பேரரசர்.

இவ்வாறு, பகைவர்களுடன் போராடிக் கொண்டிருந்த நேரத்தில் தமது அன்பிற்குரிய ஜோசபைனை சந்திக்கும் வாய்ப்பினையும் ஒரு நாள் பெற்றுர் நெப்போலியன். ஜோசபைன் தங்கியிருந்த மால்மெய்சன் நகருக்கருகில் அவர் படையுடன் சென்ற நேரத்தில் போனபார்ட் படையை விட்டு விலகிச் சென்று ஜோசபைனைச் சந்தித்துப் பேசினுர். அச் சந்திப்பு மிகவும் காலத்தால் குறுகியது மட்டுமல்ல; அதுவே அவர்களது இறுதிச் சந்திப்புமாகும். நெப்போலியன் ஜோசபைன் மீது கொண்டிருந்த அன்பு கிஞ்சித்தும் குறையவில்லை. அதேபோன்று ஜோசபைனும் நெப்போலியனிடம் கொண்டிருந்த அன்பும் மங்காது ஒளிவிட்டுத் திகழ்ந்தது. பேரரசரின் நினைவிலேயே அவள் தனது உடலில் உயிரைத் தாங்கி சிறிது காலம் வாழ்ந்தாள். கணவனைப் பிரிந்து வாழ்ந்தாலும் ஜோசபைன் அவரது நினைவிலேயே காலத்தைக் கடத்தி வந்தாள். நெப்போலியன் ஜோசபைனைப் பார்த்துவிட்டுத் திரும்புகின்ற வேளையில், அவளது கரத்தைப் பிடித்து அவளையே உற்று நோக்கி 'அன்புக்

குரிய ஜோசபைன்! உலகில் என்னைவிட நல்வாய்ப்புகள் பல வற்றைப் பெற்றுத்திகழ்ந்தவர் எவருமிலர். ஆனால், என் தலைக்கு மேல் ஆபத்து புயல் போன்று உருவாகியுள்ள இவ் வேளை யில் இவ்வுலகில் எனது நம்பிக்கைக்குரியவர் உன்னைத்தவிர வேறு எவருமிலர்' என்று கூறி கண்களை குளமாக்கி அவளிடமி ருந்து விடைபெற்றுச் சென்றார். மால்மெய்சன் பகுதியில் நடந்த சண்டைகளில் காயம்பட்ட வீரர்களுக்கெல்லாம் மருத்துவ மனையில் சென்று சிகிச்சைகள் செய்து வந்தனர் ஃபிரெஞ்சுப் பெண்கள். அவர்களுடன் சேர்ந்து பேரரசியார் ஜோசபைனும் காயம்பட்ட வீரர்களுக்கு சிகிச்சை செய்து வந்தாள். ஆனால், அந் நகரிலும் பகைவர் படை நுழையவே, ஜோசபைன், தான் மேலும் தங்கியிருப்பது ஆபத்து எனக் கருதி நாவரே (Navarre) என்ற நகருக்குச் சென்றார்.

1814ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 25ஆம் நாள் பகைவர் படைகள் பெருமளவில் திரண்டு பாரிஸ் நோக்கி விரைந்தன. தலைநகருக்கு இருபது கல் தொலைவில் அவைகள் வந்துவிட்டன. அதனை அறிந்த நெப்போலியன் தலைநகரிலிருந்த தமது தம்பிக் குக் கீழ்க்கண்ட மடலை அனுப்பினார்: நான் விரைவில் பாரிஸ் வந்து சேர்வேன். பகைவர்கள் பாரிஸ் நகரைக் கைப்பற்றி னால் எனது மனைவியையும் அருமை மகனையும், அமைச்சர்களை யும், அதிகாரிகளையும், கருவூலத்தையும் லாயர் (Loire) நகருக்கு அனுப்பி விடுக. எனது மகனை விட்டுவிடாதே. அவன் பகை வர் கையில் சிக்குவதைவிட சீன் நதியில் விழுந்து செத்து மடிதலே நன்று'. அடுத்து நெப்போலியன் பாரிஸ் நோக்கி விரைந் தார். இரண்டு தினங்களில் பாரிசுக்கருகிலுள்ள ஃபவுண்டன் பிளே (Fountainebleau) என்னும் நகர் வந்தடைந்தார். அதற் குள், பகைவர் படைகள் பாரிசுக்குள் நுழைந்தன. ஆற்றல் மிக்க தளபதிகளான மார்ட்டியர், மார்மோண்ட் ஆகியோர் முனைந்து பகைவர்களைத் தாக்கியும் பயனில்லை. பகைவர் படை யினைத் தடுத்து நிறுத்தும் ஆற்றலை அவர்கள் இழந்துவிட்டனர். அவர்களுக்குப் போதுமான படைக்கருவிகள் கிடைக்கவில்லை. ஆகவே, வேறு வழியின்றி பின்வாங்கி ஓடினர். மார்மோண்ட் (Marmont) உடைந்த வாளுடன், அவரது தொப்பியும் உடை களும் கிழிந்த நிலையில், உடம்பு முழுவதும் புகைபடிந்திருக்க, ஒவ்வொரு அடி, அடியாக பகைவரின் முன்னேற்றத்தைத் தடுக் கும் பணியினை மேற்கொண்டார். நகருக்குள் பாய்ந்து வந்த ஐம்பத்தைந்தாயிரம் பகைவர் படையினை பதினாறாயிரம் வீரர் களை மட்டும் கொண்டு அவர் நகருக்கு வெளியே பன்னிரண்டு மணி நேரம் தடுத்து நிறுத்தினார். அப் போரில் பகைவர்

படையினர் பதினுன்காயிரம் வீரர்களைப் பலி கொடுத்தனர். பகைவர்கள் நகருக்குள் நுழைவதற்கான நிலை பிறந்தவுடனே பேரரசியும் அமைச்சர்களும் அவையினரும் அரண்மனைப் பெண்களும் பிளாய்ஸ் (Blois) என்ற இடத்திற்குத் தப்பி ஓடினர். அவர்கள் அரண்மனையை விட்டு புறப்படும் நேரத்தில் வீரத்தின் விளைநிலமாம் நெப்போலியனின் அருமை மகன் அரண்மனையை விட்டு வெளியேற மறுத்து, ‘இவர்கள் எனது தந்தையை ஏமாற்றுகின்றனர். நான் அரண்மனையை விட்டு அகலமாட்டேன்; அப்பா இங்கு இல்லாத நேரத்தில் இவ்வரண்மனைக்கு நானே தலைவன்’ என்று கூறினான். அவனது ஆசிரியை, மாண்டேஸ்கியூ அம்மையார் அவனை அமைதிப்படுத்தி அழைத்துச் சென்றார். ஆனால், அக் குழந்தையை மீண்டும் பார்க்கும் வாய்ப்பு போனபார்ட்டிற்குக் கிட்டவில்லை.

பாரிஸ் விழுந்துவிட்டது. பகைவர் படை அப் பெரு நகரின் வீதிகளில் பவனிவந்தது. நெப்போலியன் ஐம்பதினாயிரம் வீரர்களுடன் இப்போது ஃபவுண்டன்பிளே (Fountainebleau) வந்தடைந்தார். பாரிஸ் பகைவர் கையில் சிக்கியதைக் கேட்டு அவர் மயங்கி விழுந்தார். அப்போது பேரரசரைக் கண்டு நிலைமையை நேரில் விளக்கும் பொருட்டு அமைச்சர் கலைன்கோர்ட் அங்கு வந்து சேர்ந்தார். மயக்கம் தெளிந்த பின் நெப்போலியன் அருகிலிருந்த அமைச்சரை அழைத்து, ‘எனதருமை கலைன்கோர்ட் அவர்களே! மீண்டும் பாரிஸ் சென்று, மன்னர் அலெக்சாண்டரைக் கண்டு அமைதி உடன்பாட்டிற்கு ஆவன செய்யுங்கள். எப்படியாவது பாரிசைக் காப்பாற்றுங்கள். நான் இப்போது உங்களைத்தான் நம்பியிருக்கின்றேன்’ என்று கூறினார். அமைச்சரும் உடனடியாகப் பாரிஸ் நகர் நோக்கி விரைந்தார். ஆனால், அந் நகருக்குள் அவர் நுழையாதபடி பகை வீரர்களால் தடுத்து நிறுத்தப்பட்டார். அப்போது, அவ் வழியாகச் சென்ற இரஷ்ய அமைச்சர் கலைன் கோர்ட்டைக்கண்டு வண்டியினின்று இறங்கி அவரை உள்ளே அழைத்துச் சென்று அலெக்சாண்டரிடம் அறிமுகப்படுத்தினர். கலைன்கோர்ட்டின் அருங்குணங்களையெல்லாம் அறிந்திருந்த அலெக்சாண்டர் அவரை அன்புடன் வரவேற்று மகிழ்ந்தார். அமைச்சரும் அவரிடம் நெப்போலியனது நிலைமையை எடுத்துக் கூறி அவருக்குதவும்படி வேண்டினர். இரஷ்ய மன்னரும் தம்மால் இயன்ற உதவியைச் செய்வதாக வாக்களித்தார். அடுத்து, பாரிசில் வல்லரசர்கள் கூடி நெப்போலியன் ப்ற்றி முடிவெடுத்தனர். அதாவது, நெப்போலியன் தமது மகனுக்கு அரசுரிமையை விட்டு விட்டு ஃபிரான்சின் மணிமுடியைத் துறக்க வேண்டும் என்று முடிவெடுக்கப்பட்டது. அம் முடிவினை அமைச்சர் கலைன்கோர்ட்

மூலமாக அலெக்சாண்டர், நெப்போலியனுக்கு அனுப்பிவைத்தார். அம் முடிவினைக் கேட்ட நெப்போலியன் திடுக்கிட்டார். மக்களால் மாமன்னனுக்கப்பட்ட தம்மை விலக்குகின்ற அதிகாரம் மக்களுக்கே உரியது ; மமதை மிக்க வல்லரசுக்கில்லை என்று கருதிய நெப்போலியன் தம்மிடமுள்ள ஐம்பதினுயிரம் வீரர்களுடன் பாரிஸ் மீது படையெடுக்கத் துணிந்தார். அவரது வீரர்களும் அதற்கு இசைவு தந்தனர். ஆனல், பாரிசில் பகைவர்களின் படை பலத்தைக் கணக்கில் கொண்டு அவர்களது நிபந்தனையை ஏற்றுக்கொள்ள முடிவு செய்தார். அதன்படி 1814ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 4ஆம் நாள் முடிதுறப்பதற்கான ஒப்புதலைக் கீழ்க்கண்டவாறு எழுதி அமைச்சர் மூலம் அனுப்பிவைத்தார்: 'ஐரோப்பாவில் அமைதிக்குத் தடையாக நெப்போலியன் இருக்கின்ருன் என்ற கருத்து வல்லரசுகளிடையே நிலவுகின்றது. ஃபிரான்சின் நலத்தைக் கருத்தில் கொண்டு நான் எனது பதவியை மட்டுமல்ல உயிரையும் தியாகம் செய்யத் தயாராக உள்ளேன். வல்லரசுகளின் விருப்பப்படியே நான் ஃபிரான்சின் மணி முடியை எனது மகனுக்கு அளித்துவிட்டு இன்றுமுதல் நான் பேரரசர் பதவியிலிருந்து விலகிக் கொள்ளுகின்றேன்.'

ஆனல், பாரிசில் நிலைமைகள் மாறின. பாரிஸ் செனட் மன்றத்தின் தலைவனுன டேலிராண்ட் (Talleyrand) வல்லரசர்களின் பாராட்டைப் பெறும் பொருட்டு 'ஃபிரெஞ்சு அரியணையிலிருந்து நெப்போலியன் அகற்றப்பட்டார்' என்ற தீர்மானத்தை நிறைவேற்றினர். அதனை அடுத்துப் புதிய அரசாங்கம் ஒன்றை உருவாக்கி அதற்குத்தாமே தற்காலிகத்தலைவரானர். டேலிராண்ட் மேற்கொண்ட செயலை அறிந்த நெப்போலியன் தாம் மன்னராக உயர்வு பெற்றது செனட் மன்றத்தால் அல்ல, ஃபிரான்சின் மக்களால் என்று கருதி மன நிறைவுடனிருந்தார். அடுத்து, நெப்போலியனை அதிர்ச்சிக்குள்ளாக்கும் செயலும் பாரிஸ் நகரில் இடம் பெற்றது. நெப்போலியனது நம்பிக்கைக்குரியவரும், ஆற்றல் மறவருமான தளபதி மார்மோண்ட் (Marmont) இருபதினுயிரம் வீரர்களுடன் பகைவர் பக்கம் சேர்ந்து விட்டார். எனவே, இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் பாரிசில் வல்லரசுகளிடையே புதிய சிக்கலை உருவாக்கின. இதுவரை நெப்போலியனைக் கண்டு அஞ்சிய வல்லரசுகள் இப்போது அவரை நச்சுப்பல்லை இழந்த பாம்பாகக் கருதினர். ஆகவே, ஏற்கெனவே எடுக்கப்பட்ட முடிவினைத் தள்ளுபடி செய்துவிட்டுப் புதிய முடிவெடுக்க முன்வந்தனர் வல்லரசர்கள். கலைன் கோர்ட் மூலம் நெப்போலியன் கொடுத்தனுப்பிய சாசனமும் பயனற்றதாயிற்று. பாரிசில் பல நாடுகளைச் சேர்ந்த பிரதிநிதிகள் அடங்கிய கூட்டத்தில் நெப்போலியனைப்பற்றிப் புதிய முடிவும் எடுக்கப்பட்டது. அதன்படி, நெப்போலியன் எவ்வித நிபந்தனையு

மின்றி ஃபிரான்சின் மணிமுடியைத் துறத்தல் வேண்டும் ; அவரது மனைவிக்கோ மகனுக்கோ ஃபிரான்சின் அரசியலில் எவ்வித உரிமையும் இல்லை. இத்தகைய, இதயமற்றவர்களின் முடிவினையும் தாங்கி நெப்போலியனிடம் சென்றார் கலைன்கோர்ட். பாரிஸ் முடிவினை அறிந்த போனபார்ட் அலைகடலெனப் பொங்கி ஆர்ப்பரித்தார். உடனடியாக ஒரு இலட்சம் வீரர்களைத்திரட்டி பாரிசிலுள்ள பகைவர்மீது பாயத் துணிந்தார். மான மிழந்து வாழ்வதைவிட மரணமே மேலானது என்று கருதினார். வாளின் மூலம் தமது வலிமையை மீண்டும் நிலை நாட்டத்துடித்தார். உடனே தமது வீரர்களைப் பார்த்து, 'தோழர்களே ! நான் அனுப்பிய சாசனத்தைப் புறக்கணித்து எனது மனைவிக்கும் மகனுக்கும் ஃபிரான்சின் அரசுரிமையில் பங்கில்லை என்று கூறி அவர்களையும் நாடு கடத்தத் துணிந்து விட்டனர் வல்லரசர்கள். ஆகவே, நான் உங்களையெல்லாம் அழைத்துக் கொண்டு ஆல்ப்ஸ் மலையைக் கடந்து இத்தாலிக்கு செல்ல விழைகின்றேன். நாம் அங்கு சென்று புதிய அரசு ஒன்றினை அமைப்போம். ஃபிரான்சு நமது உதவியை நாடும் வரை நாம் அங்கு இன்புற்றிருப்போம். நீங்கள் என்னுடன் இத்தாலி வரஒப்புக் கொள்ளுகிறீர்களா?' என்று கேட்டார். ஆனால், ஃபிரெஞ்சு வீரர்கள் அவரது திட்டத்திற்கு ஆதரவளிக்க முன்வரவில்லை. ஆகவே, அவர் ஏப்ரல் திங்கள் 6ஆம் நாள் அடியிற் கண்ட பிறிதொரு சாசனத்தை எழுதி அமைச்சர் மூலம் அனுப்பி வைத்தார்: 'ஐரோப்பாவில் மீண்டும் அமைதியை நிலை நாட்டுவதற்குப் பெருந்தடையாக இருப்பவர் நெப்போலியன் என்று வல்லரசர்கள் கருதுகின்றனர். ஆனால், ஃபிரான்சின் நலத்தினையும் ஐரோப்பியப் பொதுஅமைதியையும் கருத்திற்கொண்டு நானும் எனது வாரிசுகளும் ஃபிரான்சின் அரியணையைத் துறக்கின்றோம். அன்றியும், ஃபிரான்சுக்காக நான் எனது உயிரையும் தியாகம் செய்யத் தயாராகவுள்ளேன்.'

போனபார்ட்டின் இரண்டாவது சாசனத்தைப் படித்துப் பார்த்த வல்லரசர்கள் அவர் மீது சிறிதளவு இரக்கம் கொண்டனர். அவரை ஃபிரான்சுக்கு வெகு தொலைவிலுள்ள ஒரு தீவிற்கு நாடுகடத்த விரும்பினர். செயின்ட் கெலினா (St. Helena), எல்பா, கார்சிகா ஆகிய தீவுகளின் பெயர்கள் அடிபட்டன. இறுதியில் தட்ப வெப்ப நிலையை முன்னிட்டு எல்பாவே தேர்ந்தெடுக்கப் பட்டது. அடுத்து, உடன்பாட்டிற்கான திட்டம் உருவாக்கப் பட்டது. ஏப்ரல் திங்கள் 11ஆம் நாள் வல்லரசர்களின் உடன்பாடு முழுவடிவம் பெற்று உலகுக்கு அறிவிக்கப்பட்டது. அதன்படி, பேரரசர் நெப்போலியனும், பேரரசி மரியலூயிசாவும் தங்கள் வாழ்நாள் முழுதும் பேரரசர், பேரரசி ஆகிய பட்டங்களை

வைத்துக்கொள்ளலாம். நெப்போலியனுடைய அன்னே, உடன் பிறந்தவர்கள், மருமக்கள் ஆகியோர் அரசகுலத்துக்கான இள வரசர், இளவரசி போன்ற பட்டங்களே வைத்துக்கொள்ளலாம். எல்பா தீவும் அதன் அரசுரிமையும் நெப்போலியனுக்கு முழு உடைமை ஆக்கப்பட்டது. ஃபிரான்சின் நிதியிலிருந்து ஆண்டொன் றுக்கு இரண்டு மில்லியனே ஐநூருயிரம் ஃபிராங்குகள் நெப்போ லியனுக்குக் கொடுக்கவேண்டும். பார்மா (Parma), பிளாசென் சியா (Placentia), குஸ்டாலா (Guastalla) ஆகிய பகுதிகளின் ஆட்சியும் உடைமையும் பேரரசியாருக்கு வழங்கப்பட்டன. அவர் அவைகளேத் தமக்குப்பின் தமது மகனுக்கு உடைமையாக்க வேண்டும். ஃபிரான்சின் நிதியிலிருந்து ஆண்டொன்றுக்கு முந்நூரு யிரம் ஃபிராங்குகள் நெப்போலியனது அன்னேக்கு வழங்கப்பட வேண்டும்; மன்னர் ஜோசப்பும் அவரது மனேவியும் ஆண்டொன் றுக்கு ஐநூருயிரம் ஃபிராங்குகள் பெறவேண்டும்; லூயி மன்ன ருக்கு இருநூருயிரமும், ஆர்டன்சுக்கும் அவளது மகனுக்கும் நானூருயிரமும் வழங்கப்பட வேண்டும். ஜெரோமும் அவரது மனேவியும் ஐநூருயிரம் ஃபிராங்குகள் பெறவேண்டும்; இளவரசி கள் எலிசாவும், பாலினும் தனித்தனியே முந்நூருயிரம் ஃபிராங்கு கள் பெறவேண்டும். பேரரசி ஜோசபைனுக்கு நெப்போலியன் வழங்கிய உதவித்தொகையான மூன்று மில்லியன் ஃபிராங்குகள் ஒரு மில்லியனுகக் குறைக்கப்பட்டது. பேரரசரின் குடும்பத்தைச் சார்ந்த இளவரசர்களும் இளவரசிகளும் தங்களுடைய தனிப் பட்ட சொத்துகளே வைத்துக்கொள்ளலாம். நெப்போலியனது தனிப்பட்ட சொத்துகள் அரசாங்கத்துக்குச் சேரவேண்டும். பேரரசரின் தனிக் காவல்படை, அவர் எல்பாவிற்குக் கப்பலேறும் வரை அவருக்குப் பாதுகாப்பாகச் செல்லவேண்டும். நெப்போ லியன் தமது தற்காப்புக்காக நானூறு வீரர்களேக் கொண்ட ஒரு சிறு படையை எல்பாவுக்கு அழைத்துச் செல்லவேண்டும்.

இவ்வுடன்பாட்டினேத் தாங்கி அன்று மாலே ஓடோடி வந்தார் அமைச்சர் கலேன்கோர்ட் நெப்போலியனிடம். அதனே போனபார்ட்டிடம் கொடுத்துக் கையெழுத்திடும்படி வேண்டினர். அவ்வுடன்பாட்டினே ஏற்றுத் தமது மானத்தை இழக்கத் துணி யாது போனபார்ட் அதில் கையெழுத்திட மறுத்துவிட்டார். இருப்பினும், நிலேமைகளேத் தெளிவாக எடுத்துக்கூறி அதனே ஏற்றுக் கொள்ளும்படி அமைச்சர் கேட்டுக்கொண்டார். அதற்கேற்ப நெப்போலியன் அடுத்த நாள் நன்கு சிந்தித்து முடிவு கூறுவதாகச் சொன்னர். அமைச்சரும் அவ்விடம் விட்டகன்ருர். அன்றிரவு தமது அறையில் மிகவும் குழம்பியநிலேயில் தவித்தார். அத் துடன் அவரை அன்று கடுமையான வயிற்று வலியும் தாக்கியது.

களைப்பு, கவலை, தூக்கமின்மை ஆகியவை ஒன்றுபட்டு அவரைப் பெரிதும் வாட்டின. வயிற்று வலியால் அவதிப்பட்ட போன பார்ட்டிற்கு உடனடியாகச் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தார் அமைச்சர். அவரது கரத்தைப் பிடித்துக்கொண்டு நெப்போலி யன் 'அருமை நண்பரே! நான் இறந்து கொண்டிருக்கின்றேன். எனது மனைவியையும் மகனையும் உங்களிடம் ஒப்படைத்துச் செல் கின்றேன். எனது தூயவாழ்வினை மறக்காது மற்றவருக்குக் கூறுங்கள். இனிமேல் நான் உயிர் வாழ்வது கூடாது' என்று கூறினார். அதனைக் கேட்ட அனைவரும் கண் கலங்கினர். ஆனால், அங்கிருந்த மருத்துவர் அவருக்கு நன்கு சிகிச்சை அளித்துத் தேநீர் போட்டுக் கொடுத்தார். போனபார்ட்டும் அதனை அருந்த, விரைவில் வயிற்று வலி நின்றது. பேரரசரும் அன்றிரவு அயர்ந்து தூங்கினார்.

அடுத்த நாள் காலை அமைச்சர் அவரைக் காணவந்தார். அப்போது, போனபார்ட் அவரைப்பார்த்து, 'அருமை கலேன் கோர்ட் அவர்களே! நான் இன்னும் சில காலம் உயிர் வாழ வேண்டியுள்ளது. என தருமை மகன் மன்னனாகப் பிறந்தான்; இன்று அவன் நாடற்ற அனாதை ஆனான். எனது மனைவியை இழந்தேன்; மற்ற நண்பர்களையெல்லாம் இழந்தேன். அவை பற்றியெல்லாம் நான் பெரிதும் கவலை கொள்ளவில்லை; ஆனால், நன்றி கொன்ற மனிதர்களை நினைக்கின்ற வேளையில் என் நெஞ்சம் வெடித்துவிடும் போலிருக்கிறது. அவர்களது நயவஞ்சகம் எனது வாழ்வில் வெறுப்பை உண்டாக்கி விட்டது. இனி நான் மரணத் தில் தான் அமைதியைக் காண்பேன். கடந்த இருபதாண்டு களாக நாட்டுக்காக நான்பட்ட பாடெல்லாம் வீணாயிற்று. இருப்பினும் இன்று நான் நலமாகவுள்ளேன்; உடன்பாட்டில் விரைவில் கையெழுத்திடுவேன்' என்று கூறினார். அடுத்து, அவரைப் பத்துமணியளவில் அழைத்து உடன்பாட்டில் கையெழுத் திட்டு உடனே அவரைப்பாரிசுக்கு அனுப்பி வைத்தார். வல்லரசு களும் அதனை ஏற்று அவரை எல்பாவிற்கு அனுப்பிவைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தனர். நெப்போலியனை எல்பாவிற்கு அனுப்புவதற்கான நாளும் குறிக்கப்பட்டது. 1814ஆம் ஆண்டு ஏப்ரல்திங்கள் 20ஆம் நாள் நடுப்பகல் பன்னிரண்டு மணிக்கு அவர் ஃபிரான்சை விட்டு வெளியேற வேண்டும்.

இதற்கிடையில், பிளாய்ஸ் நகரில் தங்கியிருந்த பேரரசியார் தம் மகனுடன் தினமும் அழுது புலம்பிக் கொண்டிருந்தார். அந் நகர் பாரிசிலிருந்து தென்கிழக்கே நூறுகல் தொலைவிலுள்ளது. போன பார்ட் தங்கியிருந்த ஃபவுண்டன் பிளேயிலிருந்து எழுபத்தைந்து கல் தொலைவிலுள்ளது அந் நகர். அங்கு கணவனைக்காண வேண்டு

மென்ற ஏக்கத்தில் கண்ணீர்க் குளத்தில் கவலையுடன் மிதந்து கொண்டிருந்தார் இருபத்திரண்டு வயதினையெட்டிய பேரரசியார். எவ்விதக் கவலையுமின்றி இதுவரை வளர்ந்தவர், வாழ்ந்தவர். இன்று அவருக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தாங்கிக்கொள்ளும் இதயவலிவை அவர் பெற்றிருக்கவில்லை. பேரரசர் போனபார்ட் முடிதுறந்தார், நாடிழந்தார் என்ற செய்திகளைக் கேட்டவுடன் அவர் அவைகளை நம்பவில்லை. ஆஸ்திரியப் பேரரசரான தமது தந்தை அத்தகைய இழிசெயலைச் செய்ய மாட்டார் என்பது அவரது எண்ணம். 'என்னுடைய தலையில் ஃபிரான்சின் மணி முடியை வைத்து என்னைப் பேரரசியாக்கிய நேரத்தில் என்னைப் பார்த்து மகிழ்ந்த எனது தந்தை 'நீ என்றென்றும் இந்த மணி முடியுடன் திகழ்வதை நான் என் கடமையாகக் கருதுவேன்' என்று திரும்பத் திரும்பக் கூறி என்று வாழ்த்தினரே ; அப்படிப் பட்டவரா எனது கணவரின் மணிமுடியைப் பறித்து அதன் மூலம் எனது மணிமுடியை மண்ணில் புதைப்பார்? நிச்சயம் எனது தந்தை அதற்கு உடன்படமாட்டார் என்று கூறினர். நெப் போலியன் பலமுறை மடல்கள் பேரரசியாருக்கு அனுப்பியும் அவைகளை அவர் பெற முடியவில்லை பகைவர் படைகளின் கண் காணிப்பால். ஆனுல், ஏப்ரல் திங்கள் 7ஆம் நாள் போனபார்ட், தளபதி கால் பாய்ஸ் (Gal bois) என்பவர் மூலம் லூயிசாவுக்கு மடல் ஒன்று அனுப்பினர். அவரும் அதனை எடுத்துச் சென்று பேரரசியாரிடம் சேர்த்தார். அதிலடங்கிய செய்திகளைக் கண்டு திடுக்கிட்டார். தமது தந்தையின் நயவஞ்சகச் செயலைக்கண்டு உள்ளம் வெதும்பினர். உடனே தளபதி கால் பாய்சைப் பார்த்து 'ஐயா, நான் எனது கணவனுடனிருத்தலையே பெரிதும் விரும்பு கின்றேன். இப்போது அவரிருக்கும் நிலையில் அவருக் கருகிலிருந்து அவருக்குப் பணிவிடை செய்வதையே நான் என் மேலான கட மையாகக் கருதுகின்றேன். அவர் எங்கிருந்தாலும் அவரருகே நானிருப்பேன் ; ஆகவே என்னையும் என தருமை மகனையும் இங் கிருந்து அழைத்துச் செல்வதற்கு ஆவன செய்யுங்கள்' என்று உள்ளம்திறந்து கூறினர். உடனே, இது பற்றி நெப்போலி யனுக்கும் மடல் வரைந்து அவர் மூலம் அனுப்பினர். பகைவர் படைகளின் நடமாட்டம் கடுமையாக விருப்பதால் பேரரசியை அழைத்துச் செல்வது ஆபத்தானது எனக் கருதிய கால் பாய்ஸ் அம் மடலுடன் போனபார்ட்டிடம் விரைந்தார். நெப்போலியன் தமது மனைவியின் மடலை ஆவலுடன் படித்து ஆறுதல் பெற்ருர். உடனே, அவர் ஆர்லியன்ஸ் நகருக்குப் புறப்பட்டு வரும்படி தனது மனைவிக்கு எழுதினர். ஆர்லியன்ஸ் நகர் பிளாய்சுக்கும் ஃபவுண்டன்பிளேயிக்குமிடையிலுள்ளது. பேரரசியும் எவ்வித இடையூறுமின்றி ஆர்லியன்ஸ் வந்து சேர்ந்தார். ஆனல், அவரது

பாதுகாப்புப் படைவழியில் பகைவர்களால் கைப்பற்றப்பட்டது. ஆர்லியன்ஸ் வந்தபின்பும் அவர் கணவரைக்காண இயலவில்லை. பல நாள் அங்கு தங்கி கண்ணீர் கொட்டிக் குமுறிக் கொண்டிருந் தார். கணவரிடம் செல்லத் துடித்துக்கொண்டிருந்தார். ஆனால், அவரது நிலையை அறிந்த அவரது தந்தை ஒரு சிறு படையை அனுப்பி அவரை வியென்னாவுக்கு அழைத்துச் செல்லும்படி ஆணை யிட்டார். அதன்படி வேறு வழியின்றி, மரியலூயிசா மகனுடன் வியென்னா சென்றார்.

ஏப்ரல் திங்கள் இருபதாம் நாள் நெருங்கி வந்துகொண் டிருந்தது. எல்பா பயணத்துக்கான ஏற்பாடுகளும் விரைந்து மேற்கொள்ளப்பட்டன. 19ஆம் நாள் அத்தனை ஏற்பாடுகளும் முடிந்தன. நண்பர்கள், அதிகாரிகள், படைத் தளபதிகள் போன்றோரிடம் விடைபெற்றுக்கொள்வதற்கான காலமும் நெருங்கி வந்துகொண்டிருந்தது. அமைச்சர் கலேன்கோர்ட் அவ ரைக் காண விரைந்து வந்தார். அவரைக் கண்ட போன பார்ட் அவரது கரங்களைப் பிடித்துக் கொண்டு 'எனது உயிரி னுமினிய நண்பரே! உம்மை விட்டுப் பிரிய நேர்ந்ததால் இப் போது நான் உள்ளமுடைந்து நிற்கின்றேன்' என்றார். 'நான் உங்களை விட்டுப் பிரிய மாட்டேன். நானும் உங்களுடன் எல் பா வருவேன்' என்று கண்களைக் குளமாக்கிக் கூறினார் அவர். 'நீங்கள் ஃபிரான்சை விட்டு வெளியேறக் கூடாது. இப் பெரு நாட்டிற்கு உங்களது பணி இன்னும் தேவை; என்னுடைய அருமை மகனையும், மனைவியையும், உறவினரையும், என் மீது மாறாத நம்பிக்கை கொண்டு பணியாற்றிய வேலைக்காரர்களை யும் நான் இல்லாத நேரத்தில் கவனித்துக் கொள்வது யார்? நம்முடன் இணைந்து நமது நலன்களுக்காக உயிரைப் பணயமாக வைத்துப் போரிட்ட போலந்து வீரர்களின் நலன்களையும் உரி மைகளையும் கவனித்துக் காப்பது யார்? கடந்த பதினாறு ஆண்டுகாலமாக ஃபிரெஞ்சு நாடு வெற்றிமேல் வெற்றி பெற்று என்னுடன் வீரநடை போட்டு வந்தது. ஆனால் இந்த ஓராண்டு கால நெருக்கடியில் ஃபிரான்சு மக்கள் தங்களது மகத்தான சாதனைகளனைத்தையும் மறந்து விட்டனர். பகைவர்களோ பயங் கரக் கொடுமைகளை எனக்கு இழைத்துள்ளனர். எனதருமை மகனையும் மனைவியையும் என்னை விட்டுப் பிரித்தனர். ஒரு பேரரசரின் மகனையும் மனைவியையும் பிரிக்கும்படி எந்தச் சட் டமும் கூறவில்லை. கருணையற்ற காட்டுமிராண்டிகள்கூடச் செய் யத் துணியாத செயலை ஐரோப்பிய வல்லரசுகள் செய்துள்ளன. வரலாற்றேடுகளை நான் களங்கப்படுத்தியதில்லை. அவற்றைக் கறை படிந்ததாக்க நான் என்றும் எண்ணியதில்லை. நான்

வெற்றிகள் பல பெற்ற காலத்தில் கூட பகைவர் பால் பரிவும் அன்பும் காட்டி வரலாற்றேடுகளுக்கு ஏற்றம் தந்துள்ளேன். ஆனுல், நான் வெற்றி வாய்ப்பை இழந்த நேரத்தில் எனது பகைவர்கள் என்னைக் கொடுமைக்குள்ளாக்கி, அடாதசெயல்கள் பலசெய்து வரலாற்று ஏடுகளில் மங்காத களங்கத்தை ஏற்படுத் தியுள்ளனர். உலக வரலாறு உள்ளளவும் நெப்போலியன் உயர்ந்த பண்பாளன் என்றுரைத்துக் கொண்டேயிருக்கும். எனவே, அமைச்சர் பெருமகனே! நீங்கள் என்னைப்பற்றி எவ் விதக் கவலையும் கொள்ளவேண்டாம். நான் விரைவில் எல்பா வின் மன்னனுவேன்' என்று அமைச்சரைப் பார்த்துக் கூறினுர் நெப்போலியன். 'பேரரசே! கவலை கொள்ளாதீர்கள். ஆஸ்தி ரியப் பெருமன்னரைச் சந்தித்து பேரரசியாரை உங்களிடம் அனுப்பிவைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வேன்; பேரரசி யாரும் தங்களுடன் வாழ்வதையே பெரிதும் விரும்புவர். உங் கள் இருவரையும் இணைத்துவைப்பதை நான் எனது தலையாய கடமையாகக் கொள்வேன்' என்று அமைச்சர் கூறி அவரைத் தேற்றினுர்'. நீங்கள் கூறியது முற்றிலும் சரியானதே. எனது மனைவி என்னை அவளுடைய உயிரைவிட மேலாக மதித்து அன்பு கொண்டுள்ளாள் என் மீது. ஆகவே, அவள் என்னுடன் வாழ் வதையே பெரிதும் விரும்புவாள். எனது மனைவியும் மகனும் என்னருகில் இருப்பின் நான் எல்பாவில் இன்புற்று வாழ்வேன்' என்ருர் நெப்போலியன். அடுத்து, போனபார்ட் அமைச்சரைக் கட்டிப்பிடித்து, 'அருமை நண்பரே! மீண்டும் ஒரு நாள் நாம் சந்திப்போம்' என்று கூறி விடைபெற்ருர்.

1814ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 20ஆம் நாள் காலை உதய சூரியன் தன் ஒளிக்கதிர்களைப்பரப்பி எழுந்துகொண்டிருந்தான். அப்போது, தமது அறையில் தனித்திருந்த போனபார்ட்டும் செங்கதிரவனிடம் போட்டிபோட்டு எழுந்தார். அன்று நடுப்பகல் அவர் வெளியேற வேண்டும் ஃபிரான்சை விட்டு. அரண்மனை வாயிலில் பேரரசரின் தனிக்காவல்படையினர் அணிவகுத்து நின்றனர் தங்களின் இறுதி வணக்கத்தைப் பேரரசருக்கு வழங்கும் பொருட்டு. பேரரசர் பிரிந்து செல்லுகின்ற காட்சியைக் காண அங்கு மக்கள் பெருமளவில் திரண்டிருந்தனர். வல்லரசர்களின் தூதர்கள், ஃபிரான்சின் தளபதிகள், உயர்தர அதிகாரிகள் போன்ருேர் அங்கு கண்களைக் குளமாக்கிக் கவலையுடன் வீற்றிருந் தனர். எங்கும் ஒரே அமைதி. தளபதி பெர்ட்ராண்ட் (Bertrand) பேரரசரின் வருகையை அறிவித்தார். நெப்போலியன் எவ்விதக் கவலையுமின்றி சிங்கம் போல் வந்து படியில் நின்று தமது பார்வை யை நாலாபக்கமும் செலுத்தினுர். அங்கு அணிவகுத்து நின்ற

வீரர்களின் கண்கள் கொட்டியநீர் அவர்களது கன்னங்களில் வழிந்தோடிக்கொண்டிருந்தன. அங்கு கூடியிருந்த அனைவரும் கவலை தோய்ந்த முகத்துடன் காணப்பட்டனர். கண்களில் நீர் மல்க அனைவரும் அவரையே பார்த்து நின்றனர். அங்கு பெரிதும் 'புதைகுழி' அமைதியே நிலவியது. நெப்போலியன், தமது முகத்தில் அன்பையும் பரிவையும் தேக்கி அவர்களைப் பார்த்தார். அப் பார்வை, தம்மிடம் நம்பிக்கை கொண்டு பணியாற்றிய அத்தனை பேருக்கும் நன்றி கூறுவதுபோல் அமைந்திருந்தது. பறைகள் முழங்கி அவருக்கு மரியாதை செலுத்தத் தொடங்கின. உடனே, போனபார்ட் சாடைகாட்டி பறையை நிறுத்தி தமது வெண்கலக் குரலில் உறுதியும் தெளிவும்மிக்க உரை ஒன்றினை நிகழ்த்தினார். அது பின் வருமாறு 'தளபதிகளே! அதிகாரிகளே! வீரர்களே! நான் உங்களிடம் விடைபெற்றுக்கொள்ளும் பொருட்டு இங்கு வந்துள்ளேன். கடந்த இருபத்தைந்தாண்டுகளாக என்னுடன் இணைந்து நின்று பெருமையும் பெரும் புகழும் நிறைந்த பாதையில் நீங்கள் சென்றதை நானறிவேன். புகழின் உச்சியிலிருந்த காலத்தில் நீங்கள் காட்டிய நம்பிக்கையினையும், உறுதியினையும் நிலைநாட்டுவதில் இந்தக் கடைசிக் காலத்திலும் நீங்கள் தவறவில்லை. ஐரோப்பிய வல்லரசுகள் ஒன்றுதிரண்டு நமக்கெதிராகப் போராடிக்கொண்டிருக்கின்றன. நாம் பல ஆண்டுகாலம் இங்கு உள்நாட்டுக் குழப்பத்தை உருவாக்கி அவர்களுக்கெதிராக செயல்படலாம். ஆனால், அது நமது மக்களுக்கு நன்மை பயக்காது. ஆகவே, நான் நமது நலன்களையெல்லாம் நாட்டு நலனுக்காக விட்டுக்கொடுத்துள்ளேன். எனதருமை நண்பர்களே! ஃபிரான்சு மக்கள் ஏற்றுக்கொண்ட அரசிடம் நம்பிக்கையுடனும் நல்லெண்ணத்துடனும் நடந்துகொள்ளுங்கள். ஃபிரான்சின் மகிழ்ச்சியே எனது மகிழ்ச்சி. என்னைப்பற்றி நீங்கள் எவ்விதக் கவலையும் கொள்ளவேண்டாம். உங்களது இன்பமே எனது இன்பம். நீங்கள் நலம் பல பெற்று இங்கு மகிழ்ச்சியுடன் வாழ்ந்தால் அதனைக் கேள்விப்பட்டு, நானும் அங்கு உங்கள் நினைவால் கவலையின்றி வாழ்வேன். உங்களது நலனைக் கருத்தில் கொண்டுதான் நான் தாயகத்தை விட்டுச்செல்ல முடிவுசெய்தேன். உங்கள் அனைவரையும் தனித்தனியே அழைத்துக் கட்டித்தழுவி உங்களிடமிருந்து பிரிந்து செல்ல விழைந்தேன். ஆனால், அதற்குக் காலம் இடந்தராத காரணத்தால், உங்களது தளபதியையும், உங்களது கழுகுக் கொடியையும் மார்புறத் தழுவி என் நன்றியைக் காட்டுவேன். எனதருமைக் குழந்தைகளே! உங்களிடமிருந்து விடைபெற்றுக்கொள்ளுகின்றேன்'.

மேற்கண்ட உரையை நிகழ்த்தி முடித்தபின் பலர் தேம்பித் தேம்பி அழுதனர். அனைவரும் கண்களில் நீர்மல்க, பேரரச

ரைப் பார்த்தவண்ணம் நின்றனர். போனபார்ட் கண்களில் நீர் தேங்கிப் பார்வையை மறைத்தும், தளபதி பெடிட் (Petit) என்ற பெருமகனை அழைத்து அவரை மார்புறத் தழுவினர். அப்போது மலை அசைந்தாலும் தாம் அசையாத உறுதிமிக்க தளபதி பெடிட் கதறி அழுத காட்சியைக்கண்டு அனைவரும் அழுது புலம்பினர். அடுத்து; ஃபிரெஞ்சுப் படையின் கழுகுக் கொடி போனபார்ட்டிடம் கொண்டுவரப்பட்டது. அதனைக் கையில் தாங்கி முத்தமிட்டு, மார்பில் அணைத்து, 'எனதருமைக் கழுகே! உன்னைத் தழுவிப் பிரிகின்ற இவ்விறுதிக் காட்சி என்னிடம் நம்பிக்கை கொண்டுள்ள ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் ஒளிவிளக்காகத் திகழட்டும்' என்று கூறிய நெப்போலியன், மீண்டும் மக்களைப் பார்த்து, 'போய் வருகிறேன்! போய் வருகிறேன்' என்று கூறி விடைபெற்றார். எங்கும் ஒரே கவலைக் குறி. மக்கள் வேதனையால் விம்மினர். துக்கமும் துயரமும் அவர்களைத் துவளவைத்தன. போனபார்ட் உடனே, அருகே தயாராக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த வண்டியிலேறி, தலை குனிந்து, கண்களைக் கரங்களால் மூடிக்கொள்ள, அக் கொடிய வண்டி ஃபிரான்சின் பெருமகனைத் தாங்கி, உருண்டோடியது. எட்டு நாள் இடைவிடாது பயணத்தை மேற்கொண்டு, எழு நூறு கல் தொலைவிலுள்ள ஃபிரிஜூஸ் (Frejus) என்ற துறை முகத்தை வந்தடைந்தது அந்த இதயமற்ற வண்டி. ஏப்ரல் திங்கள் 27ஆம் நாள் நெப்போலியன் அங்கு வந்தடைந்தார். அடுத்த நாள் மாலை, இருபத்தொரு குண்டுகள் முழங்க, போனபார்ட் கப்பலில் ஏறினர். கருணையற்ற அக் கப்பலும் நகர்ந்தது எல்பா நோக்கி.

இதற்கிடையில் போனபார்ட் ஃபிரான்சை விட்டு வெளியேறுவதற்கு முன் பேரரசியார் ஜோசபைனுக்கு மடல் ஒன்று அனுப்பினர். 'எனதருமை ஜோசபைன்! நான் கடந்த 8ஆம் தேதியன்று மடல் ஒன்று உனக்கு அனுப்பினேன். அது உனக்குக் கிடைக்கவில்லையெனக் கருதுகின்றேன். இம் மடலாவது உனக்குக் கிடைக்குமென நம்புகின்றேன். இப்போது எனது உடலும் உள்ளமும் பெருஞ்சுமையிலிருந்து விடுபட்டுள்ளன. என்னுடைய வீழ்ச்சி கொடுமை மிக்கது; எனினும் அதன் மூலம் நாட்டிற்கு நலன் பல கிட்டும் எனக்கருதி, உள்ள நிறைவு கொள்ளுகின்றேன். இனி, வாளை விடுத்து, பேனவின் மூலம் பெரும்பணியாற்ற விரும்புகின்றேன். எனது வரலாற்றை முழுமையாக எழுதி உலகத்தின்முன் படைப்பேன். என் இதயத்தில் என்றும் நின்று ஒளிவிடும் எழிலரசியே! உன்னை என்றும் மறவாத என்னை மறந்துவிடாதே, எனதருமை ஜோசபைன்! உன்னிடமிருந்து

விடைபெற்றுக் கொள்ளுகின்றேன். எல்பா சென்றதும் உனது பதிலை எதிர்பார்ப்பேன்.'

மடலின் வரிகளைப் படித்த ஜோசபைன் கதறி அழுதாள். தனது கணவருக்கு ஏற்பட்ட கதிபற்றிக் கலங்கினாள். அவர் அருகிலிருந்து அவருக்குப் பணிவிடைகள் செய்ய அவள் விரும்பினாள். இதுபற்றி உடனடியாக அனுமதி கோரி தனது முன்னாள் கணவருக்கு அவள் எழுதினாள். 'பேரரசே! உங்களுக்குக் ஏற்பட்ட எதிர்பாராத பெரும் வீழ்ச்சியினைக் கேட்டுப் பெரிதும் வருந்துகின்றேன். இருப்பினும், உங்கள் மீது நான் கொண்டுள்ள அன்பு கிஞ்சித்தும் குறையாது முன்னிலும் பன்மடங்காக வளர்ந்துள்ளது என்பதை பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன். இப்போது உங்கள் அருகிலிருந்து உங்களுக்கு ஆறுதலாக உரிய பணிகளைச் செய்துவர விரும்புகின்றேன். இத் தருணத்தில் உங்களுடனிருந்து உங்களை மகிழ்விக்க உறுதிகொண்டுள்ளேன். உங்களுடைய ஆணைக்காகக் காத்துள்ளேன். 'உடனே புறப்பட்டுவா' என்று ஒருவரி எழுதுங்கள். அவ்வன்பு மடலைப்பெற்ற அடுத்த வினாடியே எல்பா பயணமாவேன். இறுதிக் காலத்தில் உங்களுக்கு உற்ற துணையாக இருந்து உங்களது இன்ப துன்பத்தில் பங்கெடுத்துக் கொள்ளுகின்ற இனிய வாய்ப்பினை எனக்கு நல்கும்படி பணிவுடன் வேண்டுகின்றேன்'. இம் மடலினை வரைந்தனுப்பிய சில நாட்களில் ஜோசபைன், துன்பமும் துயரமும் வாட்ட, கவலை ஈட்டி போல் தாக்க தனது முன்னாள் கணவரை நினைந்து வருந்தி அதன் விளைவாக நோய் வாய்ப்பட்டாள். விரைவில் நோய்முற்றி அவளது உயிருக்கே உலைவைப்பதாயிற்று. சாவு நெருங்கிவிட்டதனை அறிந்த ஜோசபைன் தனது அருமை மக்கள் இருவரையும் அருகில் அழைத்து, அழுதுகொண்டிருந்த அவர்களைத் தேற்றி ஆறுதல் கூறினாள். அடுத்து, தனது இதயச் சிம்மாசனத்தில் என்றும் கொலுவீற்றிருந்த பேரரசர் நெப்போலியனின் உருவப்படத்தினை எடுத்து வரச்சொன்னாள். அருமை மகன் ஈஜின் அதனை அன்னையிடம் கொண்டுவந்து கொடுத்தான். அதனைத் தனது இருகரங்களிலும் தாங்கித் தனது நெஞ்சில் வைத்து அணைத்துக் கொண்டாள். சிறிது நேரம் சென்று அவளது அணைப்பில் திளைத்த அப் படத்தினைத் தன் கரங்களில் ஏந்தி அதனை உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது, அவளது வாய் 'எல்பா நெப்போலியன்' என்ற சொற்களை உதிர்த்துக்கொண்டேயிருந்தது. அவளது கரங்களிலிருந்து போனபார்ட்டின் படமும் நழுவியது; அவளது உதடுகளில் உரிமை நடனமாடிய 'எல்பா நெப்போலியன்' என்ற சொற்களும் நழுவின, நின்றன.

*1814*ஆம் ஆண்டு மே திங்கள் 29ஆம் நாள் போனபார்ட் எல்பா வந்தடைந்த நான்கு வார காலத்திற்குள், தனது நெஞ்சில் நிறைந்த நெப்போலியனது பெயரினைக் கூறிக்கொண்டே இயற்கை எய்தினாள் ஜோசபைன். வசந்த காலத்தின் வனப்பில் திளைத்த மால்மெய்சன் நகரம் இப்போது வாட்டத்தின் சின்னமாகத் திகழ்ந்தது. பேரரசியார் ஜோசபைனின் உடல் நான்கு நாட்கள் பொதுமக்களின் பார்வைக்காக வைக்கப்பட்டிருந்தது. மன்னர்கள், அரச குடும்பத்தினர், மேட்டுக்குடியினர், அரசாங்க அதிகாரிகள், பொதுமக்கள் ஆகியோர் அலைஅலையாகத் திரண்டு வந்து, தங்களின் கண்களைக் குளமாக்கி, இறுதி வணக்கம் செலுத்தினர். தங்களின் இதயங்களை வென்றவரின் இதயத்தை வென்ற எழிலரசியாம் ஜோசபைனுக்கு. இருபதினாயிரத்திற்கு மேற்பட்ட மக்கள் பேரரசியாரின் இறுதி ஊர்வலத்தில் பங்கெடுத்துக் கொண்டனர். மால் மெய்சனிலிருந்து இரண்டு கல் தொலைவிலுள்ள உருயல் (Ruel) என்ற இடத்தில் அமைந்துள்ள அழகிய வெண்சலவைக்கற்களாலான வீறூர்ந்த கல்லறைமாடம் (Mausoleum) ஒன்றில் பேரரசி இன்றும் நீங்காத் தூக்கத்தில் நிலை பெற்றுத் திகழ்கின்றாள். முடிசூட்டுவிழா உடையணிந்து மண்டியிட்டு நிற்கும் பேரரசியாரின் உருவத்தினையும், அதற்குக் கீழ், 'ஜோசபைனுக்கு—ஈஜினும் ஆர்டென்சும்' என்ற எளிய வரிகளையும் அந்த எழில் மாடம் தாங்கி இன்றும் பொலிவுடன் விளங்குகின்றது.

*1814*ஆம் ஆண்டு மே திங்கள் 3ஆம் நாள் போனபார்ட் தமது குழுவுடன் எல்பா வந்தடைந்தார். எல்பா, ஃபிரான்சின் கரையிலிருந்து இருநூறு கல் தொலைவிலுள்ள சிறு தீவு. பதினாறு கல் நீளமும் இரண்டு முதல் பன்னிரண்டு கல் வரை அகலமும் கொண்டது எல்பா. அங்கு பதிமூன்றாயிரம் மக்கள் வசித்தனர். போர்டோ ஃபெர்ரோஜா (Porto Ferroja) என்பது அதன் தலைநகர். அங்கு நெப்போலியன் வந்தடைந்ததும் எல்பா மக்கள் அவரை உற்சாகத்துடன் வரவேற்றனர். உழவர் பெருங்குடி மக்கள் அவர்முன் முழந்தாளிட்டு தங்கள் வரவேற்பை நல்கினர். மக்களின் நிலையையும், தீவின் பிற நிலைகளையும், விரைவில் கண்டறிந்தார் நெப்போலியன். அறியாமை இருளில் அடைபட்டுக் கிடந்த அம் மக்களை விடுவிக்கும் ஆக்கப்பணிகளை உடனே மேற்கொண்டார் போனபார்ட். பள்ளிகள் பல எழுந்தன; சாலைகள் பல உருப்பெற்றன; கால்வாய்கள் பல வெட்டப்பட்டன. தொழில்வளம் பெருகியது. உப்பளத் தொழில் உயர்ந்த நிலையினைப் பெற்றது. கொள்ளைக்காரர்களின் கொட்டம் ஒடுங்கியது. மக்கள் நலன் கருதிய

மகத்தான திட்டங்களை நிறைவேற்றிய நெப்போலியனை எல்பா மக்கள் ஏற்றிப்போற்றினர். எல்பா, போனபார்ட்டின் சீரிய திட்டங்களால் ஏற்றம் பெற்று விளங்கியதுடன் மக்களைக் கவர்ந்திழுக்கும் மகத்தான சுற்றுலா மைய மாகத் திகழ்ந்தது. நெப்போலியனது ஆற்றலால், அறிவால், ஆற்றிய சாதனைகளால் கவர்ந்திழுக்கப்பட்ட மக்கள் ஐரோப்பா வின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் அவரைக் காண அச் சிறு தீவுக்கு வரத்தொடங்கினர். நெப்போலியன் தங்கியிருந்த எல்பா அவரது ஆதரவாளர்களின் திருத்தலமாயிற்று. நாள் தோறும் ஆயிரக்கணக்கான மக்கள் அவரை கண்டுசெல்ல அலை அலையாக வந்த வண்ண்மிருந்தனர். எல்பா சென்று போன பார்ட்டைக் கண்டுவருவதை தங்கள் வாழ்நாளில் பெற்ற பெரும்பேருகக் கருதினர் பலர். தம்மைக் காணவரும் மக்களிடம் அன்பாகப் பேசி அவர்களது உள்ளங்களையெல்லாம் மேலும் வென்ருர் நெப்போலியன். ஐரோப்பாவின் சிறந்த தீவாக இப்போது எல்பா விளங்கியது. எல்பாவுக்கு நெப்போலியன் சென்றவுடன் அவரது அன்னையும் தங்கை பாலினும் அங்கு வந்து அவருடன் தங்கினர். ஆகவே, போனபார்ட் வழக்க மான சுறுசுறுப்புடன் எல்பாவைத் தமது சிறிய பேரரசாகக் கருதி அதன் வளர்ச்சிப் பணிகளில் கவனத்தைச் செலுத்திஞர்.

இதற்கிடையில், ஃபிரான்சில் குடியரசின் குரல்வளை நெரிக்கப் பட்டது ; மீண்டும் கொடிய மன்னர்களின் வேட்டைக் காடாக்கப் பட்டது அப் பெருநாடு. பதினெட்டாம் லூயி போர்போன் மன்னராட்சியை மீண்டும் நிலைநாட்டிஞர் ஃபிரான்சில், ஐரோப் பிய முடிமன்னர்களின் தயவால். பதினெட்டாம் லூயி அறுபது வயதினைத் தாண்டியவர் ; மக்களின் மன நிலையைப் புரிந்து கொள்ளும் ஆற்றலை இழந்தவர். அவரது தோற்றமும் உடையும் நடையும் மக்கள் எள்ளி நகையாடும்படி அமைந்திருந்தன. இறைச்சிக்காக விதையடித்து வளர்க்கப்படும் ஆண் பன்றி (hog) என்று அவரை ஃபிரெஞ்சு மக்கள் கேலியாக அழைத்தனர். பொது மக்களின் நம்பிக்கையினை இழக்கும் வகையில் பதினெட் டாம் லூயி மன்னரின் பணிகள் அமைந்தன. மக்கள் நலன் கருதிய செயல்களில் கவனம் செலுத்தாது அவர் எப்போதும் உண்பதும் உறங்குவதுமாகவே இருந்தார். நாட்டின் பாதுகாப்பையும் மக்களின் நலனையும் அவர் மதிக்கவேயில்லை. அவரது அரசியல் பணிகளனைத்தும் அவரது பதவியைக் காப்பாற்றிக்கொள்ளும் வகையில் அமைந்து மக்களின் வெறுப்புக்குள்ளாயின. பேரரசரின் தனிக்காவல் படையைக் கலைத்தார் லூயி. அதன் விளைவாகப் பலவீரர்கள் வேலை இழந்து தவித்தனர். மக்களின் உயிரினும்

மேலாக மதிக்கப்பட்ட மூவண்ணக் கொடியை ரத்து செய்து விட்டுப் பழைய போர்போன் கொடியைப் புகுத்தினுர். ஆகவே, மக்கள் குமுறினர். தங்களின் கொடியினைக் காக்க உரிமைப் போரில் இறங்கவும் முன்வந்தனர். அன்றியும், மக்கள் பெற்றிருந்த மாபெரும் ஆயுதமான 'ஓட்டுரிமையும்' பெருமளவில் பறிக்கப் பட்டது. போனபார்ட் காலத்தில் ஐந்து மில்லியன் வாக்காளர்கள் இருந்தனர். லூயி, மன்னனுனவுடன் வாக்காளர்களின் எண்ணிக் கை எண்ணூறுயிரமாகக் குறைக்கப்பட்டது. மக்களின் உரிமை களுக்கு உலைவைத்த 'தெய்வீக உரிமைக் கோட்பாடு' (Divine Right Theory) மீண்டும் உயிர் பெற்றது. 'நான் தெய்வீக உரிமை யால் மன்னனுனேன் ; மக்களின் விருப்பத்தாலல்ல' என்று அவர் வெளிப்படையாகவே கூறினுர். நட்பு நாடுகளுக்கு ஃபிரான்சின் பல பகுதிகளைக் கொடுத்த காரணத்தால் அதன் மக்கள் தொகை பெரிதும் பாதிக்கப்பட்டது. பதினைந்து மில்லியனே முந்நூற்றறு பதாயிரம் மக்களை ஃபிரான்சு அதன் மூலமாக இழந்தது. பன்னீ ராயிரம் பீரங்கிகளும், எண்ணிறந்த பிறவகைப் போர்க்கருவி களும் வல்லரசர்களுக்கு வழங்கப்பட்ட காரணத்தால் ஃபிரான்சின் படைபலம் குன்றியது. போர்வீரர்களின் எண்ணிக்கையும் எண்பதாயிரமாகக் குறைக்கப்பட்டது. ஆகவே, ஃபிரெஞ்சு மக்கள் லூயி மன்னன்மீது வெறுப்பு கொண்டனர் ; மீண்டும் நெப்போலியனை மன்னராக்க முடிவு செய்தனர். மக்களின் வெறுப் புக் குள்ளான லூயி மன்னன் மீண்டும் ஃபிரான்சில் பெரும்புரட்சி தோன்றுவதற்கான சூழ்நிலைகள் உருவானதைக்கண்டு கலங்கினுர். நெப்போலியன் அருகிலிருந்தால் புரட்சி மீண்டும் வெடிக்குமென்று வல்லரசர்களும் கருதினுர்கள். ஆகவே, எல்பாவிலிருந்து நெப் போலியனை வெளியேற்றி செயின்ட் கெலினுவுக்கு அனுப்பச் சதி செய்தனர் வல்லரசர்கள்.

இந் நிலையில், எல்பாவில் அதன் வளர்ச்சிக்காக அரும்பாடுபட்டு வந்த நெப்போலியனுக்குப் பணநெருக்கடி ஏற்பட்டது. அவர் கையிலிருந்த பணம் முழுதும் செலவாயிற்று. ஃபவுண்டன் பிளே உடன்பாட்டின்படி போனபார்ட்டுக்குச் சேரவேண்டிய பணத் தை லூயிமன்னன் அவருக்கு அனுப்பிவைக்கவில்லை. வல்லரசர் கள் இது பற்றி லூயிமன்னனைக் கண்டித்தும் பயனில்லை. பண நெருக்கடி ஏற்பட்ட போதிலும் நெப்போலியன் மனம் தளராது மகிழ்ச்சியுடனிருந்தார். எல்பாவில் இருந்தாலும் தாயகத்தி லிருந்து செய்திகள் அவருக்கு அடிக்கடி தெரிவிக்கப்பட்டன. செய்தித்தாட்கள் மூலம் அவர் ஃபிரெஞ்சுச் செய்திகளை அறிந்து வந்தார். போர்போன் ஆட்சியின் கொடுமை, மக்கள்படும் அவதி, மக்கள் அவ்வாட்சிமீது கொண்டுள்ள வெறுப்பு, ஃபிரான்சின்

சீர்குலைவு, செயின்ட் கெலினுவுக்குத் தம்மைக் கொண்டுசெல் வதற்காக வல்லரசர்கள் தீட்டிய சதித்திட்டம், ஃபிரெஞ்சு மக்கள் மீண்டும் தம் வரவை எதிர்பார்த்துக் காத்திருத்தல் போன்ற செய்திகள் எல்பாவிலுள்ள போனபார்ட்டிற்கு எட்டின. மேலும், 1815ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் முதல் வாரத்தில் நெப் போலியனது ஆதரவாளரும் நெருங்கிய நண்பருமான சேப் பௌலான் (Chaboulon) மாறுவேடத்தில் எல்பா வந்தடைந் தார். அவர் நெப்போலியனைச் சந்தித்து ஃபிரான்சின் பல்வேறு நிலைகளையும் அவர்முன் விளக்கிக் காட்டினார். ஃபிரான்சின் சீர் குலைவினையும், மக்களின் அவதியினையும் அவர் படம் பிடித்துக் காட்டினார். உடனே நெப்போலியன் பாரிஸ் திரும்பி நாட்டைப் பேராபத்தினின்றும் காப்பதே அவரது முதற்கடமையாகவேண்டு மென்று வற்புறுத்தினார். தமது உயிரினும் மேலான நாட்டிற் கும் நாட்டு மக்களுக்கும் ஏற்பட்ட இழிவினைப் போக்கும் பொருட்டு போனபார்ட் பாரிஸ் செல்லத் தீர்மானித்தார். தமது முடிவினை சேப்பௌலானிடமும் தெரிவித்தார். அவரும் மன நிறைவுடன் பாரிஸ் திரும்பி போனபார்ட்டின் கரத்தை வலுப்படுத்துவதற்கான பணிகளில் ஈடுபட்டார்.

ஃபிப்ரவரித் திங்கள் 26ஆம் நாள், வழக்கம்போல் சுறுசுறுப் புடன் காணப்பட்டார் நெப்போலியன். வந்த பார்வையாளர் களிடம் நீண்ட நேரம் உரையாடி மகிழ்ந்தார். அன்று அவரைக் காணவந்த இரண்டு ஆங்கிலேயரிடம் அவர் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார். இளவரசி பாலின் வந்த விருந்தினர்களை வரவேற்று அவர்களை மகிழ்வித்தார். அன்று மாலை போனபார்ட், தளபதிகள் பெர்ட்ராண்ட் (Bertrand) 'டிரௌயெட் (Drouet) ஆகிய இருவரையும் அழைத்து 'நாளை நாம் எல்பாவை விட்டு வீரர்கள் அனைவருடனும் வெளியேறவேண்டும். இன்றிரவு அதற்கான ஏற்பாடுகளை இரகசியமாகச் செய்யுங்கள் என்று பணித் தார். தளபதிகளிருவரும் அவரது ஆணையை ஏற்று அன்றிரவு முழுதும் கடற்பயணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்தனர். அடுத்த நாள் அதிகாலை ஆயிரம் பேர்களைத் தாங்கிய கப்பல் எல்பாவை விட்டுக் கிளம்பியது. எல்பா மறைந்த பின்னர் நெப்போலியன் 'நண்பர்களே! நாம் ஃபிரான்சுக்குச் சென்றுகொண்டிருக்கின் றோம்' என்றறிவித்தார். அதுவரை எங்கு செல்கின்றோம் என்று அறியாது தங்களின் வழிகாட்டியான போனபார்ட்டின் ஆணைக்கு அடிபணிந்து நடந்தனர் வீரர்கள். ஃபிரான்சுக்குச் செல்கின்றோம்' என்ற அறிவிப்பைக் கேட்டவுடன் வீரர்கள் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தனர். 'வாழ்க ஃபிரான்சு, 'வாழ்க பேரரசர்' என்ற முழக்கங்கள் அலையோசையுடன் போட்டி

போட்டு எழுந்தன. மகிழ்ச்சிக் கடலில் மிதந்து வந்த வீரர்கள் தங்களது உடைகளைச் சீராக்கினர்; ஆயுதங்களைத் துடைத்து ஆயத்தமாக வைத்தனர். அன்றிரவு எழுதத் தெரிந்தவர்களை யெல்லாம் அழைத்துத் தமது அறிவிப்புகளை எழுதும்படி, பேரரசர் பணித்தார்.

**ஃபிரெஞ்சு இராணுவ வீரர்களுக்கான பொது அறிவிப்பு :** 'அருமை வீரர்களே! நம்மைப் பகைவர் எவரும் வென்றுரில்லை. நம்மவர்களே நம்மை பகைவருக்குக் காட்டிக் கொடுத்தனர். அதன் பயனுகப் போர்போன் அரசு மீண்டும் ஃபிரான்சில் எழுந்தது. கண்ணீரையும் செந்நீரையும் கொட்டிக் கடந்த இருபத்தைந்தாண்டு காலமாக நாம் பெற்ற வெற்றியும், புகழும், பெருமையும் மங்கி, மறைந்து, மண்ணோடு மண்ணுகும் படி போர்போன் மன்னர்களை ஃபிரான்சின் அரியணையில் நீடிக்கவிடலாமா? நம்மீது அவதூறும், பழியும் சுமத்தி அகிலத்தின் கண்களில் நம்மை வெறுப்புக்குள்ளாக்கத் துடிக்கும் அவர்களது ஆட்சி இன்னும் ஃபிரான்சில் இருக்கலாமா? சிந்தித்துப் பாருங்கள் நாட்டுநலனில் நாட்டங்கொண்ட இராணுவ வீரர்களே! லூயி மன்னனின் ஆட்சியில் நீங்கள் படுகின்ற அல்லல், அவதி, துன்பம், துயரம், தொல்லை ஆகிய அனைத்தையும் அறிந்து வேதனைப்படுகின்றேன். அவற்றிலிருந்து உங்களையெல்லாம் விடுவித்து உங்களுக்கு மீண்டும் உரிமைகளடங்கிய வாழ்வினை அளிக்க உயிரையும் துச்சமெனக் கருதி, ஆபத்துமிக்க பயணத்தை மேற்கொண்டு உங்கள்முன் வந்துள்ளேன். நீங்கள் நல்கிய நல்லாதரவால் வெற்றிகள் பல பெற்றவனும், மக்களின் மகத்தான ஆதரவால் ஃபிரான்சின் மணிமுடியைத் தரித்தவனுமாகிய நெப்போலியன் மீண்டும் உங்களை நாடிவந்துள்ளான். ஆகவே, மீண்டும் உங்களது ஆதரவை அவனுக்கு அளிப்பீர்களாக.

'வீரத்தின் இலக்கணமாகத் திகழும் உங்களது உதவியால் இத்தாலி, எகிப்து, ஆஸ்திரியா, இரஷ்யா ஆகிய நாடுகளின் களங்களில் நான் மாபெரும் வெற்றிகளைப் பெற்றேன். அவ்வெற்றிகளுக்கு உரியவர்களான உங்களது பெயரும், புகழும், மானமும், மதிப்பும் மமதை மிக்க லூயி மன்னனுல் அழித்தொழிக்கப்பட்டன. அன்றியும் அவைகளையெல்லாம் நீங்கள் செய்த குற்றங்களாகக் கருதி உங்களை இன்றைய மன்னன் கொடுமைக்குள்ளாக்கியுள்ளான். ஆனுல், நாட்டைக் காட்டிக் கொடுத்த நயவஞ்சகர்கள் இன்று பட்டமும், பதவியும் பெற்றுப் பவனி வருகின்றனர். லூயிமன்னனின் கொடுமையினின்றும்

நமது தாயகத்தை மீட்டிடும் புனிதப் போரில் உங்களது பேரா தரவை உங்களது தலைவனுகிய நெப்போலியனுக்கு வழங்குவீர் களாக'.

'நெப்போலியன்'

**ஃபிரெஞ்சுப் பொதுமக்களுக்கான அறிவிப்பு:** ஃபிரெஞ்சுப் பெருங்குடி மக்களே! கேஸ்டிக்கிளியான் கோமகன் (Duke of Castiglione), இரகுசா கோமகன் (Duke of Raguse) ஆகிய இரண்டு தளபதிகளும் காட்டிக்கொடுத்தவர்களின் பட்டியலில் தங்களின் பெயர்களைப் பதிவு செய்து உலக வரலாற்றில் நீங்காக் கறையை ஏற்படுத்திவிட்டனர். அவர்களிடம் ஒப்படைக்கப்பட் டிருந்த ஃபிரெஞ்சு வீரர்கள் நாட்டுப் பற்றும், நாட்டு நலனில் நாட்டமும் கொண்டு, உறுதியுடன் போரிடும் உயர் பண்பினர். அவர்களது வீரத்தைச் சோரமாக்கும் வகையில் நயவஞ்சகத் தளபதிகளிருவரும் அவர்களைப் பகைவரிடம் அடிபணியச் செய் தனர். 'வெற்றி உறுதி' என நினைத்து உயிரைப் பணயமாக வைத்துப் போரிட்ட உன்னத வீரர்களை வஞ்சித்துப் பகைவர் பிடியில் சிக்கவைத்தனர் அத் தளபதிகள் இருவரும். அதன் பயனுக, நாம் நமது தாயகத்தை இழந்தோம். நாட்டின் நலனைக் கருதியே நான் எல்பா சென்றேன். லூயி மன்னனின் ஆட்சியில் நீங்கள் பட்டுக்கொண்டிருக்கின்ற அவதிகளையெல்லாம் நண்பர்கள் மூலம் அறிந்தேன். உங்களுடைய குறைகளையெல் லாம் போக்கி உங்களுடைய ஆசைகளை நிறைவேற்றும் வகையில் அபாய மிக்கப் பயணத்தை மேற்கொண்டு உங்கள்முன் வந்துள் ளேன். கடந்த இருபத்தைந்தாண்டு காலமாக உங்களின் முழு ஒப்புதலையும் ஆதரவையும் பெற்று நான் ஆற்றிய பணிகளை நீங்கள் நன்கு அறிவீர்கள். அவற்றையெல்லாம் பாழாக்கும் வகையில் அமைந்துள்ள போர்போன் அரசை இனியும் நீங்கள் அனுமதிக்கலாமா? உங்களது நலனில் நாட்டங்கொண்ட, உங் களது நம்பிக்கைக்குரிய, உங்களது உரிமைகளை மதித்துக் காக் கின்ற ஓர் அரசினை உருவாக்குவதே உங்களது முதற் கடமை யாகும். அத்தகைய அரசை மீண்டும் நம் தாயகத்தில் நிறுவும் பொருட்டே நான் இப்போது உங்கள் முன் வந்துள்ளேன். பதவி பறிபோன மன்னன் மீண்டும் பாரிஸ் வந்து பதவியி லுள்ள கொடியவனைத் தூரத்தியடித்தல் நமது தாயக வரலாற் றில் புதிதல்ல. ஆங்கிலேயரின் ஆதரவுடன் ஃபிரான்சின் அரியணை யில் அமர்ந்திருந்த ஆருவது ஹென்ரி (Henry VI)யை, பாரிஸ் திரும்பிய ஏழாம் சார்லஸ் மன்னர் அகற்றிவிட்டு ஃபிரான்சின் மணிமுடியைப் பெற்றுத் திகழ்ந்த நிகழ்ச்சியை உங்களுக்கு நினை வூட்ட விரும்புகின்றேன். மீண்டும் ஃபிரெஞ்சு அரியணையை அலங்

கரித்த மன்னர் ஏழாம் சார்லஸ் மக்கள் ஆர்வத்தால், அரிய வீரத்தால் 'நான் மீண்டும் மன்னரானேன்' என்று அறிவித்தார். அதேபோன்று, உங்களது உறுதிமிக்க ஆதரவாலும், நமது நம்பிக்கைக்குரிய வீரர்களின் நல்லாதரவாலும் நான் மீண்டும் லூயி மன்னனின் கொடுங்கோலாட்சிக்கு முடிவு கட்ட விழைகின்றேன். ஆகவே, நாட்டு நலனில் நாட்டங்கொண்ட நல்லோர்களே! உங்களது நல்லாதரவை எனக்கு நல்குவீராக.

'நெப்போலியன்'

இவ்வறிவிப்புகள் பல எழுதப்பட்டு ஃபிரான்சின் பல்வேறு பகுதிகளில் வழங்கப்பட்டன. 1815ஆம் ஆண்டு முதல் நாள் காலை ஐந்து மணியளவில் நெப்போலியனின் சிறுபடை கேன்னெஸ் (Cannes) என்ற இடத்துக்கருகில் ஃபிரெஞ்சுக்கரையை அடைந்தது. லூயி மன்னனின் படைக்காவலற்ற பகுதிகளின் வழியாகத் தமது படையை நடாத்தி கடற்கரையிலிருந்து நூற்றி நாற்பது கல் தொலைவிலுள்ள கேப் (Gap) என்னும் நகர் வந்தடைந்தார் நெப்போலியன் மார்ச் திங்கள் 5ஆம் நாள். அந் நகர் மக்கள் உற்சாகத்துடன் அவரை வரவேற்றனர். அங்கு தமது அறிவிப்புக்களை அச்சிட்டு ஃபிரான்சு முழுதும் அவைகளைப் பரப்புவதற்கான ஏற்பாடுகளை அவர் செய்து முடித்தார். அடுத்து, விடாது பயணத்தை மேற்கொண்டு மார்ச் திங்கள் 7ஆம் நாள் கிரிநோபில் (Grenoble) என்னும் நகர் வந்தடைந்தார் போனபார்ட். அங்கு லூயி மன்னனின் படைத்தளபதியாகப் பணியாற்றிய மார்ச்சண்ட் (Marchand) என்பவர் ஆறுயிரம் வீரர்களுடன் பேரரசரைத் தாக்குவதற்கு அணிவகுத்து நின்றார். அதனால் போனபார்ட் தமது படையினரை அமைதியாக இருக்கும்படி பணித்துவிட்டுத் தாம் மட்டும் பகைவர் படை முகாம் நோக்கிச் சென்றார். அங்கு துடிக்கும் துப்பாக்கிகளைத் தாங்கி நின்ற வீரர்களுக்கு முன்னால் தனியே, ஆயுதம் எதுவுமின்றி சாதாரண உடையில், சிரித்த முகத்துடன் நின்றார் பேரரசர். அவரைக் கண்ட போர்போன் தளபதி உடனே அவரைச் சுட்டு வீழ்த்தும்படித் தன் வீரர்களுக்கு ஆணையிட்டான். அவர்களும் சுடுவதற்குத் தயாராக துப்பாக்கிகளை ஏந்தி நின்றனர். அப்போது பேரரசர் அவர்களைப் பார்த்து 'தன்னுடைய பேரரசனைச் சுட்டுக்கொல்ல விரும்புகின்ற வீரனொருவன் உங்களிடையே இருப்பானேயாகில் அவன் அவ்வாறே செய்யட்டும். இதோ அவனுடைய பேரரசன். தாராளமாகச் சுடலாம்' என்று கூறித் தமது நெஞ்சைத்திறந்து காட்டி நின்றார். அதனைக் கேட்ட வீரர்களில் ஒருவன் சுடுவதற்கு ஆயத்தமான நிலையிலிருந்த தனது துப்பாக்கியைக் கீழேவைத்தான். உடனே, அவனைத் தொடர்ந்து வீரர்களனைவரும் தங்களது துப்பாக்கிகளைக் கீழே வைத்துவிட்டு 'வாழ்க பேரரசர்' என்று முழங்கினர். அந்த உருக்கமான காட்சி

யை அருகிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த உழவர் பெருங்குடி மக்களும் 'பேரரசர் வாழ்க' என்று முழங்கினர். தனது படை வீரர்கள் போனபார்ட்டிடம் சேர்ந்து கொண்டதையறிந்த போர் போன் தளபதி மார்ச்சண்ட் தப்பியோடி விட்டான். இரண்டு நாட்கள் கிரிநோபில் நகரில் தங்கினர். அச் சிறு நகரம் தனது பேரரசரை வரவேற்கும் வகையில் விழாக்கோலம் பூண்டு விளங்கியது. மக்களின் மகிழ்ச்சிகண்டு மாமன்னர் பூரித்தார். மார்ச் திங்கள் 9ஆம் நாள் மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தார் போனபார்ட் தம் படையுடன். வழியெல்லாம் அவருக்கு வீர வரவேற்பு அளிக்கப்பட்டது. மக்களின் உற்சாகம் கரை புரண்டு ஓடியது.

நெப்போலியன் மீண்டும் ஃபிரான்சுக்கு வந்துவிட்டார் என்பதை அறிந்த பதினெட்டாம் லூயி அஞ்சிக் கலங்கினர். போனபார்ட்டின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்துவதற்கான ஏற்பாடுகளை விரைவு படுத்தினர். பாரிசில் நெப்போலியனது ஆதரவாளர்கள் சிறைபிடிக்கப்பட்டனர். பாரிசிலிருந்து இருநூற்றைம்பது கல்தொலைவிலுள்ள லையன்ஸ் நகரை நெப்போலியன் நெருங்கி விட்டார் என்பதை அறிந்த லூயி ஆர்டாய்ஸ் பெருமகனை (Count of Artois) ஒரு படையுடன் அனுப்பி நகரைக்காக்கும்படி பணித்தார். அவர், போனபார்ட் அந் நகரினை நெருங்கிய சிறிது நேரத்திற்குமுன் லையன்ஸ் வந்தடைந்தார். ஆனால், நெப்போலியனது வருகை அறிந்த லையன்ஸ் நகர காவற்படை வீரர்கள் 'வாழ்க பேரரசர்' என்று முழங்கி அவர் பக்கம் சென்று விட்டனர். நகரைக் காக்க முயன்ற ஆர்டாய்சின் முயற்சி வீணாயிற்று. லையன்ஸ் நகர் போனபார்ட் வசமாயிற்று. நெப்போலியன் அங்கு நான்கு நாள் தங்கி நிர்வாகச் சீர்திருத்தங்களை மேற்கொண்டார். அப் பெருநகரம் அவருக்கு உற்சாக வரவேற்பளித்தது. மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தனர். லையன்ஸ் நகரம் நெப்போலியனுக்கு அளித்த மகத்தான வரவேற்பினைக் கேட்டறிந்த லூயி மன்னன் தளபதி நேயை (General Ney) அனுப்பி நெப்போலியனைத் தடுத்து நிறுத்தும்படி பணித்தார். தளபதி நே ஒரு பெரும்படையுடன் விரைந்தார். ஆனால் அவரது படையிலுள்ள வீரர்களனைவரும் 'வாழ்க பேரரசர்' என்று முழங்கித் தங்களது ஆதரவை நெப்போலியனுக்கு வழங்க முன்வந்தனர். போனபார்ட்டுக்குப் பெருகி வரும் ஆதரவைக் கண்டறிந்த தளபதி நே தம் படையுடன் அவரிடம் சேர்ந்துவிட்டதாக அறிக்கை விடுத்தார்.

மார்ச் திங்கள் 13ஆம் நாள் நெப்போலியன் வளர்ந்துவரும் ஆதரவுடன் லையன்ஸ் விட்டுப் புறப்பட்டார். ஆட்டன், ஏவ

லான் ஆகிய நகர்களைக் கடந்து, மக்களின் ஆரவாரத்துக்கிடையே, அவர் மார்ச் திங்கள் 17ஆம் நாள் ஆக்சர் (Auxerre) நகர் வந்தடைந்தார். அங்கும் மக்கள் அவருக்கு உற்சாகமான வரவேற்பளித்தனர். தளபதி நேயை அழைத்து அங்கு மார்புறத் தழுவி மகிழ்ந்தார் நெப்போலியன். மார்ச் திங்கள் 19ஆம் நாள் தமது பெரும்படையுடன் போனபார்ட் ஃபவுண்டன்பிளே நோக்கி விரைந்தார். வழியெல்லாம் மக்கள் திரண்டிருந்து தங்களின் மாமன்னருக்கு மகத்தான வரவேற்பளித்தனர். வழியெல்லாம் வாழ்த்துப் பாக்கள் முழங்கின. இதற்கிடையில் அரசுக்கட்சி ஆதரவாளர்கள் அவரை கொல்வதற்குப் பல சூழ்ச்சிகள் செய்தனர். ஆனல், ஃபிரெஞ்சு மக்கள் அவற்றையெல்லாம் முறியடித்து நெப்போலியனைப் பாதுகாத்தனர். போனபார்ட் ஃபவுண்டன்பிளே வந்தடைந்தவுடன் பதினெட்டாம் லூயி குடும்பத்துடன் பாரிஸ் நகர் விட்டகன்ருர். அவர் ஃபிரான்சின் வட எல்லையிலுள்ள லில்லி என்னுமிடத்திற்குச் சென்ருர். அவர் எவ்விதத் தீங்குமின்றிச் செல்வதற்கான ஏற்பாடுகளையும் போனபார்ட் மேற்கொண்டார்.

1815ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 20ஆம் நாள் ஃபவுண்டன்பிளே விட்டு பாரிஸ் விரைந்தார் நெப்போலியன். வழியெல்லாம் வீரவரவேற்புகள் ; மங்கையரின் வாழ்த்துப்பாக்கள் ; போர்வீரர்களின் 'வாழ்க பேரரசர்' என்ற முழக்கங்கள். அவற்றையெல்லாம் தாங்கி நெப்போலியன் எவ்வித எதிர்ப்புமின்றி அன்று மாலை 9 மணியளவில் பாரிஸ் பெரு நகரில் நுழைந்தார். பாரிஸ் மக்கள் இழந்த மாமணியை மீண்டும் பெற்ற அரவினைப்போல மகிழ்ச்சியில் திளைத்தனர். ஒரு தனி மனிதன், சிறு படையுடன் எழுநூறு கல் தொலைவினைக் கடந்து, எவ்வித எதிர்ப்புமின்றி மக்களின் ஆரவாரத்திற்கும் உற்சாகத்திற்குமிடையே, ஒரு சொட்டு இரத்தம் கூடச் சிந்தாது முன்னேறி, மீண்டும் பாரிஸ் மாநகரைப் பெற்ருர் என்ருல், போனபார்ட் மக்களிடையேயும், தமது வீரர்களிடத்தும் பெற்றிருந்த செல்வாக்கும் பெருமையும் தெற்றென விளங்கும்.

நெப்போலியன் டுயிலெரிஸ் அரண்மனைக்குள் நுழைந்தவுடன் இளவரசி ஆர்டென்சும் அவளது இரண்டு குழந்தைகளும் அவரை வரவேற்றனர். அடுத்து ஈஜினும் அங்கு வந்து சேர்ந்தார். அவர்களுடன் சிறிது நேரம் அளவளாவிவிட்டு நெப்போலியன் தமது வழக்கமான நிர்வாகப்பணிகளில் ஈடுபட்டார். அடுத்த நாள் காலை 9 மணிக்கெல்லாம் அரண்மனைத் தோட்டமெல்லாம் மக்கள் வெள்ளம் ; அவர்கள் முன் தோன்றி போனபார்ட் அவர்களது உள்ளங்களைக் குளிரவைத்தார். அன்று நடுப்பகல் பன்னி

ரண்டு மணியளவில் அவர் இராணுவ அணிவகுப்பைப் பார்வை யிட்டார். அடுத்து ஃபிரெஞ்சு சட்டமன்றத்தினர் கூடி, மக்களின் ஒப்புதலைப் பெற்று, நெப்போலியனை மீண்டும் பேரரசராக்கினர்.

மணிமுடியை மீண்டும் பெற்ற மக்கள் மன்னர் போனபார்ட் வழக்கமான சுறுசுறுப்புடன் அரசாங்கப்பணிகளில் ஆர்வம் காட்டி னார். நாட்டின் வளர்ச்சிப்பணிகளனைத்தும் அவரது நேரடி மேற் பார்வையில் வீறுநடை போடத்தொடங்கின. சட்ட மன்றங் களும், நீதிமன்றங்களும், மக்கள் தொடர்பு மன்றங்களும் புதுப் பிக்கப்பட்டு புதிய பொலிவுடன் திகழ்ந்தன. கல்வி நிலையங்கள் தொழிற் கூடங்கள், கலைக் கழகங்கள் போன்றவை புத்துணர்ச்சி யும் புதிய வேகமும் பெற்றுச் செயலாற்றின. ஒவ்வொரு துறை யிலும் தேக்கநிலை உடைபட்டு ஆக்க நிலை பிறந்தது. மறுமலர்ச்சி எங்கும் தோன்றி மக்கள் மனமகிழ்ச்சியுடன் பணியாற்றினர். உருவிய வாளுடனும், துடிக்கும் துப்பாக்கியுடனும் போர்க்களங் களில் பீரங்கி முழக்கங்களுக்கிடையே பொழுதைக் கழித்த நேரத்தி லும் போனபார்ட் குடியரசின் வளர்ச்சிக்கான பொதுப் பணிகளில் நாட்டம் செலுத்தத் தவறவில்லை. குடியரசின் குன்றிய நிலையறிந்து வேதனைகொண்ட நெப்போலியன் மீண்டும் அதனை வலிமை மிக்கதாக்க உறுதிகொண்டு உழைத்தார். படைத்துறையி லும் புதிய வேகத்துடன் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. நாட் டுப் பற்று மிக்க ஃபிரெஞ்சு இளைஞர்கள் திரளாகப் படையில் சேர்ந்து பயிற்சிபெற்றனர். வாக்காளர்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கப்பட்டது. தமது பதவிக்கான வாக்கெடுப்பையும் அவர் வெற்றிகரமாக நடாத்தினார். இலட்சக்கணக்கான வாக்குகள் அதிகமாகப் பெற்றுத் தமது பதவிக்கான ஒப்புதலை மக்களிட மிருந்து அவர் பெற்றார். மக்களின் மகத்தான ஆதரவுடன் போனபார்ட் குடியரசின் பேரரசராகத் திகழ்ந்தார்.

அனாதைப் பெண்களுக்கான பள்ளி ஒன்று ஈகோயென் (Ecouen) என்ற இடத்தில் அவரால் உருவாக்கப்பட்டு நன்கு நடைபெற்று வந்தது. மீண்டும் மன்னரான பின் அப் பள்ளியைக் காண நெப்போலியன் சென்றார். அங்குள்ள சிறுமிகள் அவரைச் சூழ்ந்துகொண்டு ஆரவாரத்துடன் அவரை வரவேற்றனர். அங் குள்ள உணவறைக்குச் சென்று ஒரு கரண்டியை எடுத்து உண வைச் சுவைத்துப் பார்த்தார் பேரரசர். அவரது கைப்பட்ட அக்கரண்டி அச் சிறுமிகளால் தூய்மையானதாகக் கருதப்பட்டது. அவர் சென்றபின் அக் கரண்டியை உடைத்துத் தாயத்துகளாக்கி அவர்கள் கைகளில் அணிந்து கொண்டனர். அன்றியும் அங்கு ஒரு பெண், தனது விரலிலிருந்த மோதிரத்தைக் கழற்றி நெப் போலியனது விரலில் அணிவித்துத் தனது அன்பினைக் காட்டி

மகிழ்ந்தாள். போனபார்ட் தமது புன்முறுவலை அவளுக்குப் பரிசாக வழங்கினர். அக் காட்சியைக் கண்ட அத்தனை பெண்களும் தங்களது மோதிரங்களை அவருக்கு அணிவித்து மகிழ்ந்தனர். அப்போது பேரரசர் அவர்களைப் பார்த்து, எனதருமைச் செல்வங்களே! எனது மணிமுடியை அலங்கரித்துநிற்கும் அரியகற்களைவிட உங்களது மோதிரங்கள் உயர்ந்தவை. இன்று நான் பெற்ற இன்பம் நான் என் வாழ்நாளில் பெற்ற பேறுகும் என்று கூறித் தமது அன்பினை வெளிப்படுத்தினர்.

இந் நிலையில் நெப்போலியனை வீழ்த்திய ஐரோப்பிய நட்பு நாடுகள் (Allies) ஆஸ்திரிய பெருநகராம் வியன்னுவில் கூடி, வென்ற இடங்களைக் கூறு போடுவதில் மும்முரமாயிருந்தன. ஐரோப்பிய அரசியல் சிக்கல்கள் குறித்து பல மாதங்களாக அங்கு கூடி அவர்கள் விவாதித்து வந்தனர். எவ்வித முடிவு மின்றி வியன்னு மாநாடு நீடித்துக் கொண்டிருந்தது. நூறுயிரம் பேர் அப் பெருநகரில் கூடி அம் மாநாட்டைச் சிறப்பித்தனர். நட்பு நாடுகளின் போர்வீரர்கள் எண்பதாயிரம் பேர் ஒய்யார உடையணிந்து அம் மாநாட்டின் உற்ற அரணுக விளங்கினர். எழுநூறு பிரதிநிதிகள் மாநாட்டின் நடவடிக்கைகளில் பங்கு கொண்டனர். விருந்து, நாடகம், நாட்டியம், இன்னிசை போன்ற நிகழ்ச்சிகளில் அப் பெருநகரம் மூழ்கி ஆடம்பரத்தின் உச்சக் கட்டத்தை அடைந்தது. அவைகளுக்கான செலவுகளனைத்தையும் ஆஸ்திரியப் பெருமன்னர் ஏற்றுக் கொண்டார். வியன்னு மாநாட்டின் விருந்துக்கு மட்டும் நாளொன்றுக்கு நூற்றிருபத்தைந்தாயிரம் ஃபிராங்குகள் செலவிடப்பட்டன. அத்தகைய ஆடம்பரம் மிக்க மாநாட்டில் கூடியிருந்த நட்புநாடுகளின் பிரதிநிதிகள் வென்ற நாடுகளைப் பங்கு போட்டுக் கொள்வதில் ஒத்த கருத்துக் கொள்ளாது ஒருவரோ டொருவர் மோதிக்கொண்டிருந்தனர். போலந்து, சாக்சனி, இத்தாலி ஆகிய நாடுகளைப் பற்றிய பிரச்னைகள் சிக்கலுக்குள்ளாகி மாநாட்டுப் பிரதிநிதிகளிடையே மன வருத்தத்தையும், கசப்புணர்ச்சியையும் உருவாக்கின. அந் நிலையில் போனபார்ட் எல்பாவை விட்டகன்று ஃபிரான்சை அடைந்து பாரிஸ் நோக்கி விரைந்துள்ளார் என்ற செய்தி வியன்னு மாநாட்டை எட்டியது. அமைச்சர் டெலிராண்ட் (Talleyrand) அப்போது முடி அலங்காரத்தில் ஈடுபட்டிருந்தார்; இரண்டு முடி ஒப்பனையாளர்கள் அவரது முடியை அழகுபடுத்தி அலங்கரித்துக் கொண்டிருந்தனர். நெப்போலியன் பாரிஸ் நோக்கிச் சென்று கொண்டிருக்கிறர் என்ற செய்தியைக் கேட்டவுடனே டெலிராண்ட் அலங்காரத்தை நிறுத்திவிட்டு அச்சத்தால் நடுங்கினர். அங்கிருந்த பிரதிநிதிகளனைவரும் திடுக்கிட்டு திக்குமுக்காடி

னர் ; அச்சம் அவர்களை வாட்டியது ; அடுத்து என்ன நடக்குமோ என்ற ஏக்கம் அவர்களிடம் காணப்பட்டது. ஒவ்வொரு முகத்திலும் ஆச்சரியமும் துக்கமும் கலந்து காணப்பட்டன. மாநாடு முழுதும் குழப்பத்திலாழ்ந்தது. 1815ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 5ஆம் நாள் அச் செய்தி அவர்களை எட்டியது. அடுத்த ஐந்து நாட்கள் அங்கு குழப்பம் நீடித்தது. ஆனல் மாநாட்டுப் பிரதிநிதிகள் விரைவில் தெளிவுபெற்றுத் தங்கள் வேறுபாடுகளை விட்டொழித்து நெப்போலியனை மீண்டும் வீழ்த்துவதற்கான உடன்பாடு ஒன்றினைச் செய்துகொண்டனர். மார்ச் திங்கள் 13 ஆம் நாள் நட்பு நாடுகள் கீழ்க்கண்ட கூட்டறிக்கையை வெளியிட்டன : 'எல்பாத் தீவினின்றும் வெளியேறி ஃபிரான்சின் அமைதியைக் குலைத்து ஐரோப்பிய அரசியலில் குழப்பத்தை உருவாக்கும் வகையில் பாரிஸ் வந்துள்ள போனபார்ட் எங்களுடன் செய்துகொண்ட உடன்பாட்டை மீறியவரானர். அவருடன் இனி நாங்கள் எவ்வித உடன்பாடும் செய்து கொள்ள வியலாது. ஐரோப்பாவில் அமைதியை உருக்குலைத்து மக்களிடையே குழப்பத்தையும் கலவரத்தையும் உருவாக்க வந்துள்ள நெப்போலியன் மக்களின் நிரந்தரப்பகைவராவார். மக்களின் பகைவரான அவரைப் பழிவாங்குவதே எங்களது கடன் .' இவ்வறிவிப்பினைத் தொடர்ந்து நட்பு நாடுகள் நெப்போலியனுக்கு எதிரான இரகசிய உடன்பாடு ஒன்றையும் செய்துகொண்டன. அதன்படி, போனபார்ட்டை வீழ்த்தும்வரையில் உருவிய வாளினை உறையில் போடுவதில்லை என்ற உறுதிமொழியினை நட்பு நாடுகள் ஒவ்வொன்றும் எடுத்துக் கொண்டன. அவ்வுடன்பாட்டில் ஆஸ்திரியா, ஸ்பெயின், ஃபிரான்சு, இங்கிலாந்து, போர்ச்சுக்கல், இரஷ்யா, பிரஷ்யா, ஸ்வீடன் ஆகிய நாடுகளின் பிரதிநிதிகள் கையெழுத்திட்டனர். மக்களின் உரிமைகளுக்காகப் போராடிய போனபார்ட்டை ஒழிக்கும் பணியில் ஐரோப்பிய நட்பு நாடுகள் முனைந்து நின்றன. படைகள் திரண்டன. தளபதி சுவார்ட்சன்பர்க் (Schwartzenberg) தலைமையில் மூன்று லட்சத்து ஐம்பதினுயிரம் ஆஸ்திரிய வீரர்கள் அணிவகுத்து நின்றனர். ஆங்கிலத் தளபதி வெலிங்டன் தலைமையிலும், பிரஷ்யத் தளபதி புளுச்சர் தலைமையிலும் இரண்டு இலட்சத்து ஐம்பதினுயிரம் வீரர்கள் திரண்டனர். இரஷ்யமன்னர் அலெக்சாண்டர் இரண்டு இலட்சம் வீரர்களுடன் அணிவகுத்து நின்முர். வலிமை மிக்க ஆங்கில கடற்படையும் அப் பெரும் கூட்டுப்படைகளுக்கு ஆதரவாக நின்றது. அன்றியும் சிறு நாடுகள் பலவும் படை கொடுத்துதவின. இங்கிலாந்து பாராளுமன்றமும் நெப்போலியனை வீழ்த்துவதற்குப் பெரும்நிதியை ஒதுக்கியது.

இவ்வாறு, நட்பு நாடுகள் போர்ப்பரணி பாடிக்கொண்டிருந்த நேரத்தில் போனபார்ட் போரினைத் தவிர்க்கும் பொருட்டு அமைதிக்கான ஆக்கப்பணிகளில் ஈடுபட்டார். ஆனால், அவருடைய அமைதி காண்பதற்கான ஆர்வத்தை அச்சத்தின் விளைவு எனக்கருதிய நட்பு நாடுகள் அவரை அலட்சியப்படுத்தின. ஆகவே, அவரது அமைதிக்கான பணிகள் பயனற்றுப் போயின. இருப்பினும், ஆஸ்திரியத் தூதர் மூலமாகத் தமது மனைவி மரியலூயிசாவுக்கு மடல் ஒன்று அனுப்பினார் நெப்போலியன். ஆனால், அம் மடலை லூயிசாவிடம் கொடுக்காமல் பேரரசர் ஃபிரான்சிசிடம் சேர்த்தார் அத் தூதர். அதனைப் படித்த பேரரசர் அதனைத் தம் மகளிடம் சேர்ப்பிக்கவில்லை. தம்முடைய மகனையும் மனைவியையும் மீண்டும் நெப்போலியன் அழைத்துச் சென்று தமது பாதுகாப்பில் வைத்துக்கொள்வார் என்று ஆஸ்திரியப் பேரரசர் அஞ்சினார். ஆகவே, அவர் நெப்போலியனைப் பற்றிய தவறுதலான செய்திகளை லூயிசா முன் வைத்தார். பல நாடுகளைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான அழகிகள் போனபார்ட்டின் அந்தப்புரத்தை அலங்கரிக்கின்றனர்; அவர்கள் ஊட்டும் இன்பத்தில் அவர் மனைவியையும் மகனையும் மறந்துவிட்டார் என்ற கட்டுக்கதையும் லூயிசா முன் வைக்கப்பட்டது. இந் நிலையில், நெப்போலியன் நட்புநாடுகளுடன் அமைதி உடன்பாடு செய்துகொண்டு போரினைத் தவிர்க்கும் பணியில் தளராது ஈடுபட்டார். ஆனால், ஐரோப்பிய வல்லரசுகள் அவரது முயற்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தன. அமைதிக்கான வழிகள் நாலா பக்கமும் அடைபட்டிருப்பதை அறிந்த நெப்போலியன் வேறு வழியின்றி மீண்டும் போருக்கான ஏற்பாடுகளைச் செய்ய முன் வந்தார். வல்லரசு நட்பு நாடுகளின் கூட்டறிக்கை போனபார்ட்டின் கோபத்தை மேலும் தூண்டியது. உடனே, அவர் கீழ்க்கண்ட மறுப்பறிக்கையை மக்கள் முன் வைத்தார்:

(1) ‘பேரரசியார் மரியலூயிசாவையும் அவரது அருமை மகனையும் எல்பாவுக்குச் செல்லவிடாது பகைவர்கள் தடுத்தனர். அதன் மூலம் கணவனிடமிருந்து மனைவியையும், தந்தையிடமிருந்து மகனையும் பிரித்த கொடிய குற்றத்தை அவர்கள் புரிந்துள்ளனர். கணவன் துன்பப்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் அவனருகிலிருந்து அவனைத்தேற்றுவதற்குத் துடித்த மனைவியினை அவனிடம் செல்லவிடாது தடுத்துக் குடும்ப பாசத்தையே குலைத்த கொடியவர்கள் வல்லரசு நட்பு நாட்டினர்’.

(2) ‘நெப்போலியனையும் அவரது குடும்பத்தினரையும் காப்பதற்கான உறுதி அளிக்கப்பட்டும் அதனைக் காற்றில் பறக்க

விட்டு, அவரது குடும்பத்தினரையும், உறவினர்களையும் கொலை செய்வதற்கான சூழ்ச்சிகள் பலவற்றைப் பகைவர்கள் செய்தனர்'.

(3) 'உடன்பாட்டில் குறிக்கப்பட்டுள்ள இடங்கள் இது வரை மரியலூயிசாவுக்கும் வழங்கப்படவில்லை'.

(4) 'இளவரசன் ஈஜினுக்காக உடன்பாட்டில் ஒதுக்கப்பட்டுள்ள இடம் இதுவரை அவருக்களிக்கப்படவில்லை'.

(5) 'பேரரசரின் படைவீரர்களுக்கான சம்பளம், உதவித் தொகை ஆகியவற்றைக் கொடுத்தபின் அப் படை கலைக்கப்பட வேண்டும் என்று உடன்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், அப் படைவீரர்களுக்கு எவ்விதப்பணமும் வழங்கப்படாமல் படை கலைக்கப்பட்டுள்ளது'.

(6) 'உடன்பாட்டின்படி எனக்குச் சேர வேண்டிய பணமும் இதுவரை எனக்கு வழங்கப்படவில்லை'.

(7) 'பேரரசரின் குடும்பத்தினருடைய சொத்துக்களைப் பாது காப்பதற்கான உறுதி, உடன்பாட்டில் அளிக்கப்பட்டிருந்தும், அது இதுவரை நிறைவேற்றப்படவில்லை'.

(8) 'உடன்பாட்டின்படி எல்பா நெப்போலியனின் முழு உரிமை பெற்ற சொத்தாக்கப்பட்டிருந்தது. ஆனால், இப்போது வியன்னாவில் கூடியுள்ள வல்லரசுகள் போனபார்ட்டை எல்பா வினின்றும் வெளியேற்றி வெகு தொலைவுக்கப்பாலுள்ள செயின்ட் கெலினாவுக்கு அவரைக் கொண்டு செல்ல முடிவு செய்துள்ள னர். இவ்வாறு வல்லரசு நட்பு நாடுகள் பலவழிகளிலும் ஃபவுண்டன் பிளோ உடன்பாட்டு விதிகளைப் புறக்கணித்துள்ள னர். மனப்பூர்வமாகச் செய்யப்பட்ட அவ்வுடன்பாட்டை சீர் குலைத்து நெப்போலியனது உரிமைகளையும் உடைமைகளையும் பறித்து அவரது உயிருக்கே உலைவைக்கத் துணிந்த வல்லரசர் களின் பிடியிலிருந்து தம்மையும் தமது நாட்டையும் காக்கும் பொருட்டே நெப்போலியன் எல்பாவிலிருந்து வெளியேறி ஃபிரான்சு வரவேண்டியதாயிற்று'.

மேற்கண்ட அறிவிப்பு மக்கள் மத்தியில் சீரான வரவேற் பினைப் பெற்றது. மக்களின் பேராதரவு நெப்போலியனுக்கு மேலும் பெருகியது. வல்லரசர்களின் வம்புப்போக்கினைப் பொது மக்கள் புரிந்துகொள்ள அது பெரிதும் உதவியது. ஆனால், போன பார்ட்டின் அறிக்கையை நட்பு நாடுகள் வழக்கமான மமதையுடன்

புறக்கணித்தன. போர் மேகங்கள் மீண்டும் ஐரோப்பாவில் சூழ்ந்து நின்றன. போனபார்ட் ஒவ்வொரு மணித்துளியையும் வீணாக்காது போருக்கான ஏற்பாடுகளைத் தீவிரமாகக் கவனித்தார். விரைவில் இரண்டு இலட்சத்தெண்பதாயிரம் வீரர்கள் அடங்கிய படை ஒன்று அமைக்கப்பட்டது. அவர்களில் நூற்றிருபதாயிரம் வீரர்களை மட்டும் அழைத்துச் சென்று ஃபிரான்சின் எல்லைகளை நோக்கி விரைந்து வரும் பகைவர் படைகளை முறியடிக்க அவர் முற்பட்டார். ஆஸ்திரியத் தளபதி சுவார்ட்சன்பார்க் தலைமையில் பெரும்படை ஒன்று இரைன் நதியின் மேல்பாகத்தின் வழியாக வந்துகொண்டிருந்தது. வெலிங்டனும் புளூச்சரும் ஒரு இலட்சத்திற்கு மேற்பட்ட வீரர்களடங்கிய பெரும்படையுடன் பெல்ஜியம் வழியாக ஃபிரான்சின் எல்லை நோக்கி வந்துகொண்டிருந்தனர். இரண்டு இலட்சம் வீரர்களைக் கொண்ட இரஷ்யப் படை ஜெர்மனி வழியாக ஃபிரான்சின் எல்லைகளை நோக்கி விரைந்துகொண்டிருந்தது. ஆல்ப்ஸ் மலையின் அடிவாரத்தின் வழியாக அறுபதாயிரம் வீரர்களடங்கிய படையொன்று ஆஸ்திரியர்களின் தலைமையில் ஃபிரான்சின்மீது பாய்ந்து தாக்க வந்துகொண்டிருந்தது. சுவிட்சர்லாந்திடமிருந்தும் வல்லரசு நட்பு நாடுகள் முப்பதாயிரம் வீரர்களைப் பெற்று போனபார்ட்டிற்கு எதிராக அவர்களை திருப்பிவிட்டனர். இங்கிலாந்தின் நிகரற்ற கடற்படையும் நட்பு நாடுகளின் வலிமையைப் பெருக்கியது. இவ்வாறு, ஃபிரான்சின் நான்கு பக்கங்களிலும் பகைவர் படைகள் சூழ்ந்துள்ள நெருக்கடியான கட்டத்தில் போனபார்ட்முன் இரண்டு திட்டங்கள் வைக்கப்பட்டன. முதலாவதாக, ஃபிரான்சின் படைகளை பாரிஸ் பெருநகரைச் சுற்றி நிறுத்திவைத்து, பாய்ந்து வரும் பகைவர்களை பாரிஸ்வரை வர அனுமதித்து, முதலில் வந்த படையினரைத் தாக்கி வீழ்த்துவது. இரண்டாவது, ஃபிரான்சின் எல்லைகளை நோக்கி விரைந்து வந்து கொண்டிருக்கும் பகைவர் படைகளை, எல்லைகளுக்கு அருகிலேயே தனித் தனியே சந்தித்து முறியடிப்பது. இவ்விரண்டு திட்டங்களும் மிகவும் ஆபத்து நிறைந்தவை. இருப்பினும், நெப்போலியன் இரண்டாவது வழியைப் பின்பற்ற முடிவெடுத்தார். அதன்படி, பகைவர்கள் அறியாவண்ணம் படைமேற்கொண்டு சென்று பெல்ஜியத்தின் வழியாக வந்துகொண்டிருந்த வெலிங்டன்—புளூச்சர் கூட்டுப் படையின்மீது திடீரென்று பாய்ந்து தாக்க அவர் முடிவெடுத்தார்.

1815ஆம் ஆண்டு ஜூன்திங்கள் 11ஆம் நாள் இரவு முழுவதும் அமைச்சர்களுக்கான ஆணைகளும் அதிகாரிகளுக்கான உத்தரவுகளும் அனுப்புவதில் நெப்போலியன் ஈடுபட்டிருந்தார். அன்றிரவு அமைச்சரவையைக் கூட்டி அவர்களுக்கு அறிவுரைகள் வழங்

கினர். தாயகத்தை எதிர்நோக்கியுள்ள ஆபத்தைக் கருத்திற் கொண்டு, ஒற்றுமையாகப் பணியாற்றும்படி அவர்களைக் கேட்டுக் கொண்டார். அடுத்த நாள் அதிகாலை பேரரசர் அமைச்சர் கலைன் கோர்ட்டிடம் பிரியாவிடை பெற்றுப் படைமுகாமை நோக்கி விரைந்தார். 13ஆம் நாள் காலை பாரிசிலிருந்து நூற்றைம்பது கல் தொலைவிலுள்ள ஏவிஸ்னெஸ் (Avesnes) என்ற நகர் வந்தடைந் தார். அங்கு தமது படைவீரர்களனைவரையும் ஒன்று சேர்த்தார். அங்கிருந்து வடக்கே ஐம்பது கல் தொலைவில் பகைவர் படைகள் இரண்டு இணையும் நிலையிலிருந்தன. அதாவது, ஆங்கிலத் தளபதி வெலிங்டன் நூறாயிரம் வீரர்களுடன் பிரசெல்ஸ் (Brusels) நகரில் முகாமிட்டிருந்தார். அங்கிருந்து சில கல் தொலைவில் புளுச்சர் தலைமையில் பிரஷ்யப் பெரும் படை வந்துகொண்டிருந்தது. இவ் விரண்டு படைகளும் இணைவதற்குமுன் இரண்டையும் தனித்தனி யே சந்தித்து வீழ்த்தத் திட்டமிட்டார் நெப்போலியன். உடனே ஏவிஸ்னெஸ் நகரிலுள்ள தமது படையைப் பல பிரிவுகளாகப் பிரித்து, பல வழிகளில் அனுப்பி, குறிப்பிட்ட நேரத்தில் அங் கிருந்து முப்பது கல் தொலைவிலுள்ள சார்லராய் (Charleroi) என்ற இடத்தில் ஒன்று சேரும்படி அவர் அனுப்பிவைத்தார். தளபதி பேர்மாண்ட் ஒரு படைப்பிரிவுடன் ஒரு குறிப்பிட்ட வழியில் சென்றார். பிறிதொரு வழியில் தளபதி நே தமது வீரர்களுடன் அணிவகுத்துச் சென்றார். இன்னொரு வழியில் பேரரசர் தமது வீரர்களுடன் பயணத்தை மேற்கொண்டு ஜூன் திங்கள் 14ஆம் நாள் மாலை சார்லராய் வந்தடைந்தார். திட்டமிட்டபடி ஃபிரெஞ்சுப் படைப் பிரிவுகளும் அங்கு வந்து சேர்ந்தன. அங்கு பத்தாயிரம் பிரஷ்ய வீரர்கள் அணிவகுத்து நின்றனர். அடுத்த நாள் காலை ஃபிரெஞ்சு வீரர்கள் ஆட்டுக்கிடையில் ஓநாய்கள் புகுந்ததைப் போல, பாய்ந்து தாக்கினர் பிரஷ்யப் படையினரை. இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட வீரர்களை இழந்தபின் பிரஷ்யப் படை பின்வாங்கி ஓடியது. சார்லராய் நகர் ஃபிரெஞ்சுப் படை வசமாயிற்று. அங்கிருந்து பத்துக்கல் தொலைவிலுள்ளது குவாட்ரி பிராஸ் (Quartre Bras) என்ற சிற்றூர். அது பிரசெல்ஸ் நகருக்குச் செல்லும் முக்கிய வழித்தடங்களில் ஒன்றாக அமைந்துள்ளது. அதனைக் கைப்பற்றி அதன் வழியாகச் சென்று பகைவர் படைகள் இணைவதைத் தடுக்க முற்பட்டார் போனபார்ட். உடனே, தளபதி நே தலைமையில் நாற்பதாயிரம் வீரர்களை அனுப்பி குவாட்ரி பிராசைக் கைப்பற்றும்படி அவர் கட்டளையிட்டார். தளபதி நேயும் தமது வீரர்களுடன் அங்கு விரைந்தார். ஜூன் திங்கள் 16ஆம் நாள் காலை குவாட்ரிபிராஸ் ஃபிரெஞ்சுப் படை வசமாயிற்று என்ற செய்தியினைக் கேட்ட நெப்போலியன் அறு பதினாயிரம் வீரர்களுடன் லிக்னி (Ligny) என்ற இடம் நோக்கிப்

படையுடன் புறப்பட்டார். நாமூர் என்ற இடத்திற்கும் குவாட்ரி பிராசுக்குமிடையில் அமைந்திருந்தது லிக்னி. நாமூரில் புளுச்சரின் பெரும்படை முகாமிட்டிருந்த செய்தி நெப்போலியனுக் கெட்டியது. ஆகவே, அவர் லிக்னி வழியாக நாமூர் செல்லத் திட்டமிட்டுக் கிளம்பினர் தம் படையுடன். அவர் லிக்னி வந்தடைந்தவுடன் தற்செயலாகப் பிரஷ்யப் பெரும்படையைச் சந்தித்தார். தேடிச் சென்ற எதிரி வழியில் சிக்கியதை அறிந்த ஃபிரெஞ்சு வீரர்கள் குதூகலத்துடன் அப் பெரும்படைமீது பாய்ந்து தாக்கினர். அம் மோதலில் பத்தாயிரம் பிரஷ்ய வீரர்கள் சிறை பிடிக்கப்பட்டனர்; இருபதாயிரம் வீரர்கள் இரத்த வெள்ளத்தில் மிதந்தனர்; எஞ்சியோர் உயிர்தப்பி ஓடினர். லிக்னி வெளியில் மகத்தான வெற்றியைப் பெற்றூர் பேரரசர். பின்வாங்கி ஓடிய புளுச்சரின் படையைத் துரத்திச்சென்று தாக்கும்படி தளபதி கிரௌக்கி (Marshal Grouchy) தலைமையில் அவர் முப்பதாயிரம் வீரர்களை அனுப்பினர். பின்பு தமது வீரர்களுடன் அவர் குவாட்ரி பிராஸ் வந்தடைந்தார். அங்கிருந்த தளபதி நே வசமுள்ள வீரர்களையும் சேர்த்துத் தமது படையுடன் போனபார்ட் பிரசெல்ஸ் நகர்நோக்கி முன்னேறினர்.

இந் நிலையில், பெல்ஜிய நாட்டுப் பெரு நகராம் பிரசெல்சில் ஆங்கிலத் தளபதி வெலிங்டன், ரிச்மாண்ட் கோமாட்டி (Dutchess of Richmond) யுடன் நடனம் ஆடிக்கொண்டிருந்தார். அதுபோழ்து, போனபார்ட் பெரும்படையுடன் அப் பெருநகர் நோக்கி வந்துகொண்டிருந்த செய்தி அவருக்கு எட்டியது. உடனே, தமது படைவீரர்களுடன் போனபார்ட்டை வழி மறித்துத் தாக்கக் கிளம்பினர். வெலிங்டன் இரண்டு படைகளும் பிரசெல்ஸ் நகரிலிருந்து ஒன்பது கல் தொலைவிலுள்ள வாட்டர்லூ (Waterloo) என்ற இடத்தில் நேருக்கு நேர் சந்தித்து நின்றன. தளபதி வெலிங்டனது தலைமையில் அங்கு தொண்ணூற்றைந்தாயிரம் வீரர்கள் அணிவகுத்து நின்றனர். பேரரசரின் படையில் இப்போது எழுபத்தைந்தாயிரம் வீரர்களே இருந்தனர். 1815ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 18ஆம் நாள் வாட்டர்லூ பகுதி முழுதும் கனத்தமழை பெய்து சேறும் சகதியுமாகக் காணப்பட்டது. அன்று காலை 11 மணி யளவில் இரு பெரும்படைகளும் பயங்கர மோதலில் இறங்கின. பீரங்கிக் குண்டுகள் எண்ணிறந்த வீரர்களின் உயிரைக் குடித்து ஓங்கார முழக்க மிட்டன. துப்பாக்கிக் குண்டுகள் பல்லாயிரக் கணக்கான வீரர்களின் மார்புகளைத் துளைத்துச் சென்று மயங்கி விழுந்தன. குதிரைகளின் குளம்படிக்குக் கோரப் பலியானோர் பலர். வாட்கள் வளையாது, வரையாது, மோதி வீரர்களின் செங்குருதியைத் தாங்கி சிவந்து காணப்பட்டன. செம்மண்

நிலத்தில் பெய்த மழைபோல செந்நீர் பெருக்கெடுத் தோடியது வாட்டர்லூ வெளிகளில். பிணங்கள் பரந்து கிடந்தன அப் பெருவெளி முழுதும். 'வெற்றி மங்கை, நூறு முறை ஏமாந்தாள் ஆளைத்தேடி' அன்று அப் பெருங்களத்தில். ஆயினும் அன்று மாலை ஆங்கிலப் பெரும்படை அஞ்சி நடுங்கிப் பின்வாங்கிப் பின்வாங்கி ஓடத்தொடங்கியது. வெற்றி மங்கை கையில் மாலையுடன் போன பார்ட்டின் கழுத்தருகே களிப்புடன் சென்றுள். ஆனுல், அவ்




படம்—5 வாட்டர்லூ போர்க்களம்.

வெற்றிமாலையைத் தட்டிப் பறிக்கும் வகையில் பிரஷ்யப் பெரும் படை அங்கு வந்து சேர்ந்தது. பிரஷ்யத் தளபதி பூலோ (Bulou) முப்பதாயிரம் வீரர்களுடனும் அங்கு வந்து சேர்ந்தார். புதிதாக வந்த அறுபதாயிரம் வீரர்களுடன் தோல்விமுகம் நோக்கி விரைந்து கொண்டிருந்த வெலிங்டன் படையின் எண்ணிக்கை நூற்றைம் பதாயிரமாக உயர்ந்தது. வெற்றியின் விளிம்பில் நின்றுகொண் டிருந்த போனபார்ட்டின் படையில் இப்போது ஐம்பதாயிரம்

வீரர்களே இருந்தனர். இந்த இக்கட்டான நிலையில் தாக்குதல் மேலும் புதிய வேகத்தில் தொடர்ந்தது. பின்வாங்கி ஓடிய ஆங்கில வீரர்கள் புதிய தெம்புடனும் உற்சாகத்துடனும் ஃபிரெஞ்சு வீரர்களைத் தாக்கினர். இதற்கிடையில், முப்பதாயிரம் வீரர்களுடன் பிரஷ்யப் படையினரை விரட்டிச் சென்ற தளபதி கிரௌக்கி வந்து சேராததை அறிந்த போனபார்ட் தமது புகழ்பெற்ற பேரரசுக் காவற்படை (Imperial Guard) யினையும் களத்தில் இறக்கினர். இதுவரை ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த அப் பெரும் படைக்குத் தாமே தலைமை தாங்கிச் சென்று களத்தில் குதிக்க முடிவெடுத்தார் பேரரசர்.

பேரரசுக் காவற்படையும் களத்தில் குதிக்கத் தயாராயிற்று. போனபார்ட் குதிரை மீதமர்ந்து அப் படைக்குத் தலைமை தாங்கிக் களம் நோக்கிக் கிளம்ப ஆயத்தமானர். அப்போது அவரது தளபதிகளில் ஒருவர், குதிரைமீதமர்ந்திருந்த போனபார்ட்டின் கையிலிருந்த கடிவாளத்தைத் தமது கரத்திலே பிடித்துக்கொண்டு, 'பேரரசே! ஃபிரான்சு நாட்டின் உயிர்நாடி நீங்கள் என்பதை மறந்துவிட்டீர்களா? உங்களது உயிருக்கு ஆபத்து ஏற்படின் ஃபிரெஞ்சுக் குடியரசைக் காத்தல் இயலாது, என்று கண்களில் நீர்மல்கக் கூறினர். அவரது கூற்றின் உட்பொருளையுணர்ந்த நெப்போலியன் தளபதி நேயிடம் தலைமைப் பொறுப்பினை ஒப்படைத்து விட்டு வழக்கம்போல் போர்வீரர்களை உற்சாகப்படுத்தும் பணியில் ஈடுபட்டார். தளபதி நே தலைமையில் ஃபிரெஞ்சு வீரர்கள் உற்சாகத்துடன் தாக்குதலில் இறங்கினர். ஒரு ஃபிரெஞ்சு வீரனுக்கு மூன்று பகைவர் வீரர்கள் என்ற விகிதத்தில் எதிரிகளின் எண்ணிக்கை இருந்தது. உயிரைத் துச்சமென எண்ணி உறுதியுடன் போரிட்டனர் ஃபிரெஞ்சு வீரர்கள். இருப்பினும், பகைவர்களின் கை ஓங்கியது. வெற்றி மங்கை வெலிங்டனை மார்புறத் தழுவினள். ஃபிரெஞ்சுப் பெரும் படை பெருஞ்சேதத்திற்குள்ளாயிற்று. நாற்பதாயிரத்திற்கு மேற்பட்ட வீரர்கள் வாட்டர்லூ களத்தில் பிணமாயினர். செத்துக்கொண்டிருந்த வீரர்களின் துயரஒலி அப் பெருங்களத்தின் பல்வேறு பகுதிகளிலும் பட்டு எதிரொலித்தது.

வாட்டர்லூ களத்தில் படுதோல்விக்குள்ளான நெப்போலியன் பெரும் வேதனை அடைந்தார். தோல்விக்கணை அவரைப் பெரிதும் வாட்டியது. அந் நிலையிலும் தோல்வியால் துவண்டு விடாத நெப்போலியன் பாரிஸ் நோக்கி விரைந்தார். 19ஆம் நாள் காலை ஒரு மணி அளவில் அவர் குவாட்ரி பிராஸ் வந்தடைந்தார். அங்கு சிறிது நேரம் தங்கி, பின்வாங்கி வரும் தமது படைவீரர்களுக்கான ஆணைகளைப் பிறப்பித்துவிட்டு மீண்டும் தமது பயணத்தைத் தொடர்ந்தார். சார்லராய், லியான் ஆகிய நகர்களின் வழியாகப் பயணத்தை மேற்கொண்டு போனபார்ட்

உள்ளம் வெதும்பிய நிலையில் ஜூன் திங்கள் இருபத்தொன்றும் நாள் அதிகாலை பாரிஸ் வந்தடைந்தார். வெளிறிய முகத்துடன், வெதும்பிய உள்ளத்துடன், வேதனைச் சுமையுடன், அரண்மனைக் குள் அடியெடுத்துவைத்தார் நெப்போலியன். அது போழ்து, அவரது அருமை நண்பர், அமைச்சர் கலென் கோர்ட் அவரை வரவேற்றார். அடுத்து தமது அறைக்குச்சென்று சிறிது நேரம் ஓய்வெடுத்தார் போனபார்ட்.

வாட்டர்லூ களத்தில் நெப்போலியன் பெற்றதோல்வி பாரிஸ் முழுதும் காட்டுத்தீபோல் பரவியது. பாரிஸ் மக்கள் பெருங்குழப் பத்திற்குள்ளாயினர். பகைவர் படைகள் நாலாபக்கமும் சூழ்ந்து வருவது அறிந்து மேலும் குழம்பியது பாரிஸ் மாநகரம். இந் நிலையில் ஃபிரான்ஸையும் அதன் இதயமாம் பாரிஸ் நகரையும் எவ்விலை கொடுத்தேனும் காக்க உறுதிகொண்டார் நெப்போலி யன். உடனே சட்ட மன்றங்கள் இரண்டையும் ஒருங்கே கூட்டி வாட்டர்லூ களத்தில் ஃபிரான்சுக்கு ஏற்பட்ட தோல்வி பற்றிய விளக்கத்தை அளித்தார். அன்றியும் ஃபிரான்சை எதிர்நோக்கி யுள்ள பேராபத்தை கருத்திற்கொண்டு ஃபிரெஞ்சு மக்கள் அனை வரும் போருக்குத் தயாராகும் படியும் வேண்டுகோள் விடுத் தார். ‘இன்னும் எட்டு நாட்களில் வெலிங்டன்—புளுச்சர் இணைப் புப் படை பாரிஸ் நகரைச் சூழ்ந்துவிடும்’ என்ற கசப்பான செய்தியும் சட்ட மன்றத்தின் முன் வைக்கப்பட்டது. ஆகவே, நாட்டைப் பகைவரின் பிடியிலிருந்து காக்கும் பொருட்டு அதிகா ரங்களனைத்தும் பேரரசர் நெப்போலியனுக்கே வழங்கப்பட வேண் டும்; நாட்டின் நெருக்கடிநிலை தீரும் வரை போனபார்ட் அதி காரங்களனைத்தும் பெற்ற வல்லரசராக ஆக்கப் படவேண்டும் என்ற தீர்மானமும் மன்றத்தின் முன் வைக்கப்பட்டது. ஆனால், வாட்டர்லூ தோல்வியைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்ட பேரரசரின் அரசியல் எதிரிகள் அத் தீர்மானத்தை வன்மை யாகக் கண்டித்தனர். மேலும், ஐரோப்பிய வல்லரசர்கள் நெப் போலியனுக்கு எதிராகப் போர்மேற்கொண்டுள்ளனரே அன்றி ஃபிரான்சுக்கு எதிராக அல்ல; ஆகவே, நெப்போலியன் அரச பதவியைத் துறந்தால் பகைவர்களும் ஃபிரான்சின் மீது பாய் வதை நிறுத்திக் கொள்வர் என்ற கருத்தினையும் பல உறுப் பினர்கள் வற்புறுத்தினர். ஆகவே, ஃபிரெஞ்சுச் சட்ட மன்றம் நாட்டைப் பகைவர்களிடமிருந்து காப்பாற்றும் வகையில் போன பார்ட்டை அரசபதவியிலிருந்து விலக்கித் தீர்மானம் நிறைவேற்றி யது. உடனே, நெப்போலியனும் மன்றத்தை விட்டு வெளி யேறிப் பதவி விலக உள்ள நிறைவுடன் முன் வந்தார். ‘ஃபிரெஞ் சுப் பெருங்குடி மக்களே! நான் நமது தாயகத்தைக் காக்கும்

பொருட்டு உங்களின் மேலான ஆதரவுடன் பகைவர்களை எதிர்த்துப் போரிட்டேன். வெற்றி மங்கை நமது தாயகத்தைச் சுற்றிச் சுற்றி வந்த போதிலும் நஞ்சு எண்ணங்கொண்ட கயவர்களால் நாம் வெற்றி வாய்ப்பினை இழந்தோம். நான் அரச பதவியைத் துறப்பதின்மூலம் ஃபிரான்சின் சுதந்திரம் பாதுகாக்கப்படும் என்ருல் நான் அத்தகைய தியாகத்தை எனது தாயகத்திற்காகச் செய்வதில் பெருமையும் பூரிப்பும் கொள்ளுகின்றேன். எனது அரசியல் வாழ்வு இன்றுடன் நிறைவு பெறுகின்றது. எனதருமை மகன் 'இரண்டாம் நெப்போலியன்' என்ற பெயரில் எனக்குப் பின் இப் பெருநாட்டை ஆள்வானுக. இன்றைய அமைச்சர்கள் கூடி தற்காலிக அரசை அமைத்துக் கொள்ளட்டும். ஆட்சிக் கயிற்றினைத் தானே தனது கரத்தில் பிடிக்கும் வரையில் காப்பாளராட்சியாக அது விளங்கட்டும். நாட்டின் சுதந்திரத்தையும், நலனையும் கருத்திற்கொண்டு அனைவரும் ஒன்றுபட்டுச் செயல்பட விழைகின்றேன்'—1815ஆம் ஆண்டு ஜுன் திங்கள் 22ஆம் நாள் எலிசி (Elysee) அரண்மனையிலிருந்து மேற்கண்ட பதவி துறக்கும் சாசனத்தை எழுதியனுப்பினர் போனபார்ட்.

ஃபிரெஞ்சுப் பெருங்குடி மக்களின் இதயங்களை வென்ற மாமன்னன் அரச பதவியினைத் துறந்த செய்தி பாரிஸ் முழுதும் பரவியது. அதனைக்கேட்ட மக்கள் குமுறினர். 'வாழ்க பேரரசர் நெப்போலியன்' என்ற முழக்கங்களுடன் மக்கள் அவரது அரண்மனை நோக்கி விரைந்தனர். பேரரசர் பதவி துறப்பதற்குக் காரணமானவர்களைப் பழிவாங்கவும் அவர்கள் முற்பட்டனர். போனபார்ட் உடனடியாக பதவி விலகல் சாசனத்தைத் திரும்பப் பெற்று நாட்டைக் காக்க வேண்டும் என்று அவர்கள் அவரை வற்புறுத்தினர். மக்கள் தம்மீது கொண்டிருந்த பற்றும் பாசமும் கண்டு நெப்போலியன் உள்ளம் பூரித்தார். இருப்பினும், அவர்களது அன்புக் கட்டளையை ஏற்றுக் கொண்டு நாட்டைக் காக்கும் பணியில் தொடர்ந்து ஈடுபட அவர் விரும்பவில்லை. சட்ட மன்றங்களின் நடவடிக்கைகள் மக்களின் வேண்டுகோளுக்குத் தடையாக இருந்தன. ஆகவே, பாரிஸ் வீதிகளில் கரைபுரண்டோடும் மக்களின் அன்பு வெள்ளத்தில் சிக்காது ஜுன் திங்கள் 25ஆம் நாள் மாலை, நெப்போலியன் மாறு வேடம் தாங்கி, அரண்மனையை விட்டகன்று மால்மெய்சன் நகர் சென்றடைந்தார். அங்கு இளவரசி ஆர்ட்டன்ஸ் (Queen Hortense) அவரை வரவேற்ருர். அங்கு அவர் தங்கியிருந்த நேரத்தில் அவரது சிந்தனை சிறகடித்துப் பறந்தது சென்ற காலத்தை நோக்கி. மால்மெய்சன் நகரிலுள்ள அழகிய அரண்மனையில் அவரும் ஜோசபைனும் கழித்த இன்பநாட்கள் அவரது மனக்கண் முன் வட்டமிட்டன. பேரரசி

ஜோசபைன் உருவம் அடிக்கடி அவர்முன் தோன்றி அவரைத் திணறடித்தது. 'ஜோசபைன்', 'ஜோசபைன்' என்று புலம்பத் தொடங்கினுர் போனபார்ட். அவளது அகால சாவுக்குத் தாமே காரணமென எண்ணி வெம்பினுர்.

இந் நிலையில் ஃபிரான்சில் ஃபௌச்சி (Fouche) என்பவன் தலைமையில் தற்காலிக அரசாங்கம் அமைக்கப்பட்டது. ஃபௌச்சி நயவஞ்சகன்; நாட்டை மாற்ருனுக்கு அடகுவைக்கத் துணிந்த கயவன்; ஏசுவைக் காட்டிக் கொடுத்த சூடாசைப் போல, கட்டபொம்மனைக் காட்டிக் கொடுத்த எட்டயப்பனைப் போல, அக் கொடியவன் போனபார்ட்டைப் பகைவர்களிடம் சிக்கவைத்து, 'காட்டிக் கொடுத்த கயவர்களின் பட்டியலை' விரிவுபடுத்தியவன். ஃபிரெஞ்சுப் பெருநாட்டின் வரலாற்றில் களங்கத்தை ஏற்படுத்திய காதகன். அவன் ஆட்சிப் பொறுப் பினை ஏற்றவுடனேயே ஃபிரெஞ்சு மக்களின் உரிமைகளுக்கு உலை வைக்க முற்பட்டான். ஆங்கிலத் தளபதி வெலிங்டனுடனும் பிரஷ்யத் தளபதி புளுச்சருடனும் தொடர்பு கொண்டு ஃபிரான் சை மீண்டும் போர்போன் அரசகுலத்தவருக்கு அடகு வைக்கத் திட்டமிட்டான். ஆனுல், நெப்போலியனை மீண்டும் மன்னனுக் கும் வகையில் மக்கள் திரண்டெழுவதைக் கண்ட ஃபௌச்சி அவரை விரைவில் ஃபிரான்சை விட்டு வெளியேற்ற முடிவுசெய் தான். மக்கள் செல்வாக்கும், ஆதரவும் போனபார்ட்டிற்கு நாள்தொறும் பெருகி வருவதை அறிந்த அவன் அஞ்சினுன்; தனது பதவி பறிபோய்விடும் எனப் பதறினுன். ஆகவே, சட்ட மன்றத்தைக் கூட்டி, நாட்டின் நலன் கருதி நெப்போலியன் உடனடியாக ஃபிரான்சைவிட்டு வெளியேற வேண்டும் என்ற தீர்மானத்தையும் அவன் நிறைவேற்றினுன். ஃபிரெஞ்சுச் சட்ட மன்றத்தின் முடிவினை ஏற்று நெப்போலியன் ஃபிரான்சைவிட்டு அமெரிக்கா செல்லத் திட்டமிட்டார். அதற்கான ஏற்பாடு களும் உடனடியாக மேற்கொள்ளப்பட்டன. 1815ஆம் ஆண்டு, ஜூன் திங்கள் 29ஆம் நாள் போனபார்ட் மால்மெய்சனிலுள்ள அனைவரிடமும் பிரியா விடைபெற்று அமெரிக்கப் பயணத்தை மேற்கொண்டார். அவருடன் அவரது இன்ப துன்பத்தில் பங் கெடுத்துக் கொள்ளத் துடித்த தளபதி பெக்கர் (Becker), பெர்ட் ரண்ட் (Bertrand), சேவரி (Savary) கோமகன்கள் போன்ருேர் தங்கள் குடும்பத்துடன் சென்றனர். ஆண்கள், பெண்கள், குழந் தைகள் உட்பட அக் குழுவில் ஐம்பத்தொரு பேர் இருந்தனர். அவர்களைத் தாங்கிய வண்டிகள் ரோசித் துறைமுகம் நோக்கி விரைந்தன. ரோசித் துறைமுகம் பாரிசிலிருந்து முந்நூறு கல் தொலைவில் உள்ளது. வழியில் நெப்போலியனைக் கொல்லுவதற்

கான சதித்திட்டத்தையும் நிறைவேற்றத் துடித்தான் ஃபௌச்சி. அதனை அறிந்த போனபார்ட்டும் அவரது குழுவினரும் தக்க பாதுகாப்பு ஏற்பாடுகளுடன் பயணத்தை மேற்கொண்டனர். அன்றிரவு பத்து மணியளவில் அவர்கள் மால்மெய்சனிலிருந்து முப்பது கல் தொலைவிலுள்ள ரேம்போலெட் (Rambauillet) என்ற இடம் வந்தடைந்தனர். அங்கு அன்றிரவு தங்கி ஓய்வெடுத்துக்கொண்டு அடுத்த நாள் காலை மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தனர். ஜூன் திங்கள் முப்பதாம் நாள் நடுப்பகல் சேட்டிடன் (Chateaudun) என்ற ஊர் வந்தடைந்தனர். அவர்கள் அங்கு வந்து சேர்வதற்கு முன், 'நெப்போலியன் படுகொலை செய்யப்பட்டார்' என்ற வதந்தி அவ்வூரை எட்டிவிட்டது. ஆகவே, அவ்வூர் மக்கள் கண்களில் நீர் மல்க ஆவலுடன் அங்கு வந்த வண்டிகளை உற்று நோக்கினர். அங்கு நெப்போலியன் நலத்துடன் வீற்றிருப்பதைக் கண்ட மக்கள் ஆனந்தக் கண்ணீர் வடித்து அவருக்கு வாழ்த்துக் கூறினர். போனபார்ட்டும் அவரது குழுவினரும் மீண்டும் பயணத்தை மேற்கொண்டு ஜூலைத் திங்கள் மூன்றும் நாள் ரோசித் துறைமுகம் வந்தடைந்தனர். ரோசி நகர மக்கள் அலை கடலெனத் திரண்டு போனபார்ட்டை வரவேற்று மகிழ்ந்தனர். அப் பெருநகரில் ஐந்து நாட்கள் தங்கி போனபார்ட்டும் அவரது குழுவினரும் ஓய்வெடுத்தனர். தாமும் தமது குழுவினரும் வழியில் எவ்வித ஆபத்துமின்றி கடற்பயணத்தை மேற்கொண்டு அமெரிக்கா செல்லுவதற்கான பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்து கொடுக்கும்படி ஆங்கிலத் தளபதி வெலிங்டனிடம் வேண்டினர். ஆனால், அது தமது அதிகாரத்திற் கப்பாற்பட்டதெனக் கூறி வெலிங்டன் மறுத்துவிட்டார். ஆகவே, வேறு வழியின்றி போனபார்ட்டும் அவரது குழுவினரும் இரண்டு சிறிய கப்பல்களிலேறி அமெரிக்கா செல்ல முடிவுசெய்தனர். ஜூலைத்திங்கள் 8ஆம் நாள் மாலை நான்கு மணியளவில் போனபார்ட் ரோசி நகர மக்களிடம் விடைபெற்றுக்கொண்டு கடற்பயணத்தைத் தொடங்கினர். 'சாலி' (Saale) 'மெடூசா' (Medusa) என்ற இரண்டு சிறிய கப்பல்கள் நெப்போலியனையும் அவரது குழுவினரையும் தாங்கி அலை கடலில் அசைந்தாடிச் சென்றன. ஆனால், அவர்களை எந்தவகையிலும் செல்லவிடாது ஆங்கிலக் கப்பல்கள் சூழ்ந்துகொண்டன. ஆகவே, ஜூலைத் திங்கள் பத்தாம் நாள் போனபார்ட் ஐக்ஸ் தீவில் (Isle of Aix) வந்திறங்கினர். அத் தீவினர் அவரை அன்புடன் வரவேற்று அவருக்கு நல்வாழ்த்துகள் கூறினர். மேலும், நெப்போலியன் கடற்பயணத்தைத் தொடர்ந்து செல்லாத வகையில் ஆங்கிலக் கப்பல்கள் ஆங்காங்கே தடுப்புச் சுவர்போல் நின்றன. அதனைக் கண்ட நெப்போலியன் திடுக்கிட்டார். கயவன் ஃபௌச்சியின் சூழ்ச்சியை அவர் இப்போது உணர்ந்து பெரிதும் வருந்தினர்.

ஆங்கிலேயரின் கடலடைப்பைக் கண்ட அவரது நண்பர்கள் கலங்கினர். ஆகவே, நெப்போலியன் மாறு வேடத்தில் ஆங்கிலேயர் அறியா வண்ணம் அமெரிக்கா செல்லும்படி அவரது நண்பர்கள் அவரை வேண்டினர். ஆனல், மாறுவேடந்தாங்கி மறைந்து செல்வது மாவீரனுக்கழகல்ல என்று கருதிய போனபார்ட் நண்பர்களின் வேண்டுகோளைப் புறக்கணித்தார். ஆகவே, பெல்லரோபன் (Bellerophon) என்ற ஆங்கிலக் கப்பலின் தளபதியான மெயிட்லேண்ட் (Maitland) என்பவனுடைய ஆதரவுடன் போனபார்ட் இங்கிலாந்து செல்ல முடிவு செய்தார். அதற்கேற்ற வகையில் அவர் நான்காம் ஜார்ஜ் மன்னருக்குக் கீழ்க்கண்ட மடலினை அனுப்பினர்: 'மாட்சிமை தங்கிய மன்னர் அவர்களுக்கு, ஃபிரான்சில் ஏற்பட்ட உட்பூசல், ஐரோப்பிய பகை நாடுகளின் தாக்குதல் ஆகியவற்றின் பலனுக நான் எனது அரச வாழ்வைத் துறந்து தெமிஸ்டோகிளீஸ் என்பவரைப் போன்று ஆங்கில மக்களில் ஒருவனுக வாழ விரும்பி இங்கிலாந்து வருகின்றேன். ஆங்கில நாட்டுச் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு அவற்றின் அரவணைப்பில் வாழ நான் விழைகின்றேன். எனது பகைவர்களில் மிகவும் அதிகாரம் மிக்கவரும், நிலையான ஆட்சியைப் பெற்றவரும், மிகுந்த பெருந்தன்மையுடையவருமான ஆங்கில அரசர் என்னை ஏற்றுக் கொள்ளவேண்டுகின்றேன்.'

1815ஆம் ஆண்டு ஜுலைத்திங்கள் 15ஆம் நாள் போனபார்ட் 'அருமைத் தளபதியே! ஆங்கிலச் சட்டத்தின் ஆதரவில் இங்கிலாந்தில் வாழும் பொருட்டே நான் உங்களது கப்பலில் ஏறுகின்றேன்' என்று மெயிட்லேண்டிடம் கூறி 'பெல்லரோபன்' என்ற கப்பலில் ஏறினர். கப்பல் தலைவன் மெயிட்லேண்ட் பேரரசருக்குரிய மரியாதைகள் அனைத்தையும் முறைப்படி வழங்கி அவரை வரவேற்றான். அதனைக் கண்டு போனபார்ட் பெரிதும் மகிழ்ந்தார். 'பெல்லரோபன்' ஜுலைத்திங்கள் 26ஆம் நாள் நடுப்பகல் பிளைமௌத் (Plymouth) துறைமுகம் வந்தடைந்தது. அத் துறைமுகத்தைக் காவல் காத்துவந்தவன் கீத் (Keith) என்பவன் ஆவான். நெப்போலியன் சிறைப்படுத்தப்பட்டுள்ளார்—என்ற மடலினை, மெயிட்லேண்டுக்கு அனுப்பிவைத்தான். அதனைக் கண்ட மெயிட்லேண்ட் திடுக்கிட்டான். துக்கம் அவனது தொண்டையை அடைத்தது. அத் துயரச்செய்தியை அவன் பேரரசரின் முன் வைத்துக் கலங்கி நின்றான். தாம் சிறைப்பட்டிருப்பதையும் தம்மைச் சுற்றிலும் ஆங்கிலப் போர்க்கப்பல்கள் அணிவகுத்து நிற்பதையும், கீத்தின் அனுமதியின்றித் தமது கப்பலுக்கு எவரும் வரஇயலாது என்பதையும் அறிந்த நெப்போலியன் உள்ளம் வெதும்பினர். இதற்கிடையில், ஆங்கிலப் பாராளுமன்றத்தில் காரசாரமான

வாதங்கள் இடம்பெற்றன. அவரைச் சுட்டுக் கொல்வதா? அல்லது செயின்ட் கெலினு என்ற தீவுக்கு அழைத்துச் செல்வதா? என்ற கருத்துகளும் அங்கு வாதிக்கப்பட்டன. அவற்றையெல்லாம் செய்தித்தாட்களின்மூலம் அறிந்த நெப்போலியன் பெரிதும் வேதனைக்குள்ளானுர். ஆங்கிலேயர்கள் போனபார்ட்டைக் காண அலைஅலையாக வந்துகொண்டிருந்தனர். ஆனுல், நெப்போலியனிடம் அவர்களை நெருங்கவிடாமல் கீத் தடுத்து வந்தான். மேலும், போனபார்ட் தப்பிச் சென்று விடாதபடி இரண்டு ஆங்கிலப் போர்க்கப்பல்கள் கடலில் காவல் புரிந்து நின்றன. அவற்றையெல்லாம் கண்ட நெப்போலியன் எவ்விதக் கருத்தும் தெரிவிக்காது ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார்.

இந் நிலையில், இங்கிலாந்துப் பாராளுமன்றம் கீழ்க்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியது: 'எங்கள் தாயகத்தையும், எங்களது நட்பு நாடுகளையும் காத்தல் எங்களது தலையாய கடமையாகும். ஐரோப்பாவின் அமைதி மீண்டும் கெடாத வகையில் நெப்போலியனைச் சிறைப்படுத்தியுள்ளோம். செயின்ட் கெலினுவின் தட்ப வெட்பநிலை ஆரோக்கியமானது; பாதுகாப்பிற்கு ஏற்றநிலையிலுள்ளது; ஆகவே, நெப்போலியன் அத் தீவில் வசிக்கவேண்டும். அவருடன் அங்கு ஒரு மருத்துவரும், மூன்று அதிகாரிகளும், பன்னிரண்டு பணியாட்களும் வசிக்க அனுமதிக்கப்படுவர். இதுவரை 'பேரரசர்' என்றழைக்கப்பட்டுவந்த நெப்போலியன் இனிமேல் சாமான்ய படைத்தளபதி என்றே அழைக்கப்படுவார். அவரது குடும்பத்தினர் அவருடன் அங்கு வசிக்க முன்வந்தால் அவர்களும் சிறைப்பட்டவர்களாகவே கருதப்படுவர்.'

இங்கிலாந்தின் வெளி நாட்டுத் துறைத் துணை அமைச்சர் சர் ஹென்றி ஃபான்பரி (Sir Henry Fanbury) அத் தீர்மானத்தை நெப்போலியனிடம் எடுத்துச் சென்று படித்துக்காட்டினுர். அதனைக் கேட்ட நெப்போலியன் குமுறினுர்; கொதித்தெழுந்தார்; கண்கள் கோவைப்பழமெனச் சிவந்தன. கோபத்தால் உடனே அருகிலிருந்த ஆங்கில நாட்டு அமைச்சரை நோக்கிக் கம்பீரத்துடன் 'நான் இங்கிலாந்தின் விருந்தினனுக இங்கு வருகை தந்தேனேயன்றி, சிறைக் கைதியாக அல்ல. ஆங்கிலச் சட்டத்தின் ஆதரவைப் பெற்று வாழ இங்கு அடைக்கலம் தேடிவந்தேன். ஆனுல், இங்கிலாந்து அரசாங்கம் என்னிடம் மனிதத் தன்மையுடனும் அறநெறியுடனும் நடந்து கொள்ளவில்லை. தங்கள் நாட்டின் மீது மங்காத கறையை ஏற்படுத்திவிட்டனர் அரசாங்கத்தார். பிரிட்டனின் பெருமையைக் குலைத்துவிட்டனர் அக் கொடியவர்கள். செயின்ட் கெலினுவில் என்னை வாழ்நாள் முழுதும் சிறை

வைத்தல் கொடுமையிலும் கொடுமையாகும். காட்டு மிராண்டி கள் கூடச் செய்யத்துணியாத நாகரிகமற்ற செயலைச் செய்தனர் ஆங்கில ஆட்சியாளர். அவர்கள் இவ்வளவு கொடுமையாக என்னை நடாத்துவார்களென நான் கனவிலும் கருதவில்லை. செயின்ட் கெலிஞவில் என்னைச் சிறைவைப்பதைக் காட்டிலும் என்னைச் சுட்டுக் கொன்று விடுவது எனக்கு பெருமை தருவதாகும். ஆங்கிலேயர் எனக்கு இழைத்த கொடுமையினை வரலாற்றேடுகள் தாங்கி அவர்களை வசைபாடி நிற்கும்' என்று கூறினர் போன பார்ட். அவரது வீர முழக்கத்தைக் கேட்ட அமைச்சர் மறு மொழி கூருது அவ்விடத்தை விட்டகன்றூர். அடுத்து, நெப்போலி யன் தமது மறுப்பறிக்கை ஒன்றினைத் தயாரித்து ஆங்கில அரசாங் கத்திற்கு அனுப்பிவைத்தார். அவ்வறிக்கை பின்வருமாறு :—

'என்னுடைய உயிரினும் மேலான சுதந்திரத்தையும், உரி மைகளையும் பறித்து என்னை கொடுமைக்குள்ளாக்கிய கொடிய ஆங்கில அரசை உலகம் என்றும் மன்னிக்காது. 'பெல்லரோபன்' என்ற ஆங்கில கப்பலுக்கு நான் ஒரு சுதந்திர மனிதனுக வந் தேன் ; ஆங்கிலேயரின் சிறைக்கைதியாக நான் இங்கு வரவில்லை. ஆனுல், ஆங்கிலேயரின் விருந்தினனுகவே நான் இங்கு வந்தேன். என்னையும் எனது குழுவினரையும் வரவேற்று இங்கிலாந்துக்கு அழைத்து வருமாறு ஆங்கில ஆட்சியாளர் ஆணை பிறப்பித்ததாக 'பெல்லரோபன்' கப்பல் தலைவனுன மெயிட்லேண்ட் கூறியதை நம்பி நான் இங்கு வந்தேன். ஆங்கிலச் சட்டத்தின் நேர்மை யில் நம்பிக்கைகொண்டு அதனிடம் அடைக்கலம் புகுந்தேன். 'பெல்லரோபன்' கப்பலில் ஏறியவுடனே நான் ஆங்கிலேயரின் விருந்தினன் ஆனேன். ஆனுல், என்னை ஏமாற்றித் தங்கள் வலை, யில் சிக்கவைக்கும் நச்சு எண்ணத்தில் ஆங்கில அரசினர் அக் கப்பல் தலைவனுக்கு ஆணை பிறப்பித்திருப்பின் ஆங்கிலேயரின் பெருமையும், புகழும், கீர்த்தியும் இன்றூேடு அழிந்துபட்டன. அத்தகைய ஆணையை ஆங்கில அரசு அக் கப்பல் தலைவனுக்கு அனுப்பவில்லை யெனின், ஆங்கிலேயர் என்னை அவர்களின் விருந் தினனுகக் கருதுவதே நீதி, நேர்மை, நாணயம் ஆகியவற்றின் பாற்பட்டதாகும். ஆனுல், அடைக்கலம் புகுந்த என்னை அநியாய மாகச் சிறைப்படுத்தி செயின்ட் கெலிஞவுக்கு ஆயுள்கைதியாக அனுப்பிவைப்பது அவர்களது நாணயத்தை, சட்டத்தின் நேர்மை யை, நீதியைச் சாகடிக்கும் செயலாகும். உலக வரலாற்று ஏடு களே ! கடந்த இருபதாண்டு காலமாக ஆங்கிலேயருடன் போரிட் டேன் : வாய்ப்புக் கேடாக, வெற்றி வாய்ப்பினை இழந்தேன். இருப்பினும், இங்கிலாந்திடம் நான் கொண்டிருந்த பகைமையை விட்டொழித்து அதன் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு அங்கு

அடைக்கலம் புகுந்து வாழ விழைந்து வந்தேன். ஆங்கில அரசி டத்தும், அதன் நேர்மையான சட்டத்திடத்தும் நான் கொண் டிருந்த நம்பிக்கையையும், நல்லெண்ணத்தையும் வெளிப்படுத்தும் நல்வாய்ப்பாக அதனைக் கருதினேன். ஆனால், ஆங்கில அரசோ அடைக்கலம் புகுந்த என்னை அழித்தொழித்து விட்டது. ஆகவே, ஆங்கில அரசு நீதியைக் கொன்றது ; நேர்மையைக் குழிதோண்டிப் புதைத்தது ; உலக நியதியை அடித்து நொறுக்கியது. வர லாற்று ஏடுகளே ! நீங்கள் உள்ளளவும் ஆங்கிலேயரின் அடாத செயலை அகிலத்தின் முன்வைத்து நிற்பீர்களாக.'

நெப்போலியன் மீது ஆங்கில அரசு மேற்கொண்ட நடவடிக் கையை நேர்மையில் நாட்டங்கொண்ட ஆங்கிலேயர் அனைவரும் வன்மையாகக் கண்டித்தனர். ஆங்கில மக்கள் அலை அலையாகச் சென்று கண்டனக் கணைகளை வீசினர். நெப்போலியனை எப்படி யாவது காப்பாற்றவேண்டுமென்று முனைந்து பாடுபட்டனர். ஆங்கிலச் செய்தித்தாட்கள் சிலவும் அவருக்காக வாதாடின ; ஆங்கில அரசாங்கத்தினை வன்மையாகக் கண்டித்துத் தலையங்கங் கள் தீட்டின ; உடனடியாக போனபார்ட்டை விடுவித்து இங்கி லாந்தின் குடிமகனுக்கும்படி அரசை அவைகள் வற்புறுத்தின. அவரது நலனில் நாட்டங்கொண்ட ஆங்கிலேயர் நெப்போலியனை விடுவிப்பதற்காகப் பல சூழ்ச்சிகளும் மேற்கொண்டனர். சில ஆங்கிலேயர் நெப்போலியன்மீது நீதிமன்றத்தில் ஒரு வழக்குத் தொடர்ந்தனர். அவ் வழக்கில் விசாரணைக்காக நெப்போலியன் கொண்டுவரப்பட்டால், அவரைக் கடத்திச் சென்று காப்பாற்ற அவர்கள் திட்டமிட்டிருந்தனர். ஆனால், நீதிமன்றத்திற்கு நெப் போலியனை அழைத்து வருவதற்கான ஆணையை அவரிடம் கொடுக்க விடாதபடி கீத் என்பவன் தடுத்துவிட்டான். நாள் தோறும் நெப்போலியனைக் காண ஆங்கில மக்கள் திரண்டு வந் தனர். மக்கள் ஆதரவு நெப்போலியனுக்குப் பெருகிவருவதை அறிந்த ஆங்கில அரசு அவரை விரைவில் செயின்ட் ஹெலினா விற்கு கொண்டு செல்லும்படி ஆணை பிறப்பித்தது, ஆகவே, நெப்போலியனது பொருட்கள் அனைத்தும் உடனடியாகச் சோதிக் கப்பட்டன. உணவுப்பொருட்கள், பண்ட பாத்திரங்கள், நகை கள் போன்றவை வெளி நாட்டுத்துறை அமைச்சரிடம் ஒப்படைக் கப்பட்டன. நெப்போலியனின் போர்வாட்கள் பறிமுதல் செய் யப்பட்டன. அடுத்து நெப்போலியனும் அவரது குழுவினரும் 'நார்த்தம்பர்லேண்ட்' என்ற கப்பலுக்கு மாற்றப்பட்டனர். அது போழ்து, நெப்போலியன் மெய்ட்லேண்ட் என்பவனை அழைத்து, 'அருமை நண்பரே ! 'பெல்லரோபன்' என்ற கப்பலில் நானும் எனது நண்பர்களும் தங்கியிருந்த காலத்தில்

தாங்களும் தங்களது உதவியாளர்களும் எங்களிடத்தில் காட்டிய அன்பிற்கும், பரிவிற்கும் நான் என்றென்றும் தங்களுக்குக் கடமைப்பட்டுள்ளேன். ஆங்கில மக்கள் என்னிடம் காட்டிய அன்பினை நான் எனது இதயத்தில் என்றும் பசுமைக் காட்சியாகப் பதியவைத்துள்ளேன். நான் எதிர்பார்த்ததைவிட பன்மடங்கு அதிகமான உற்சாகத்துடனும், ஆர்வத்துடனும் அவர்கள் என்னை வரவேற்றனர். ஒரு நாட்டின் அரசாங்கத்தைக்கொண்டு அந் நாட்டு மக்களின் குணநலன்களை எடை போடுவது தவறு என்பதை இப்போது நான் அறிந்துகொண்டேன். உங்களுக்கு எனது நன்றியையும் வணக்கத்தையும் உரித்தாக்குகின்றேன். உங்களது கப்பலிலுள்ள அனைவருக்கும் எனது நன்றி கலந்த வணக்கத்தை தெரிவிக்க வேண்டுகின்றேன்' என்று கூறினர். அவ்வுரை கேட்ட மெயிட்லேண்ட் அவருக்குத் தன் கண்ணீரை காணிக்கையாக்கி பிரியாவிடை கொடுத்தான்.

மான்தொலன் (Montholon), அவரது மனைவி, பெர்ட்ரண்ட், அவரது மனைவி - மக்கள், கவர்கார்டு, லாஸ்கேசஸ் (Lascases), மருத்துவர் ஓ' மியாரா (O' Meara) ஆகியோர் நெப்போலியனுடன் செயின்ட் கெலினு செல்ல அனுமதிக்கப்பட்டனர். அனுமதிக்கப்படாத எஞ்சியோர் தங்களின் தலைவனைப் பிரிய நேர்ந்ததை எண்ணி அழுது புலம்பினர். நெப்போலியனும் தமது கண்களில் நீரினைத் தேக்கி அவர்களது கண்களைத் துடைத்து தேறுதலும் ஆறுதலும் கூறி அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பினர். 1815ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் ஒன்பதாம் நாள் 'நார்தம்பர்லேண்ட்' என்ற கப்பல் நெப்போலியனையும் அவரது நண்பர்களையும் தாங்கி செயின்ட் கெலினு நோக்கி நகர்ந்தது. கப்பலில் நின்றவாறே ஃபிரான்சின் கடற்கரையைக் கண்ணுற்ற போனபார்ட் 'ஃபிரான்சு' 'ஃபிரான்சு' என்று உரக்கக்கூவி அழைத்தார். சிறிது நேரம் அப் பெரு நாட்டை உற்று நோக்கியபின், 'எண்ணிறந்த வீரர்களை ஈன்றெடுத்த எனது அருமைத் தாயகமே! வணக்கம். செல்லுகின்றேன்! செல்லுகின்றேன்! உன்னிடம் பிரியாவிடை பெற்றுச் செல்லுகின்றேன்' என்று கதறினர். அதனைக் கண்ட அனைவரும் கதறிப் புலம்பினர். சுதந்திரத்தில் நாட்டங் கொண்ட கோடானு கோடி மக்களின் இதய சிம்மாசனத்தில் கொலு வீற்றிருந்த நெப்போலியனை, 'நார்த்தம்பர்லேண்ட்' என்ற கப்பல் கொள்ளைகொண்டு அலைகடலில் அசைந்தாடிச் சென்றது.

## வீழ்ச்சிக்குக் காரணங்கள்

நெப்போலியனைப் போல ஐரோப்பா முழுவதும் தன் முதலாதிக்கத்தை நிலைநாட்டிய முடியுடை மன்னர், வரலாற்றில் எவரும் இலர். அவர் தமது வலிமைமிக்க வாளாலும் (Sword), நயமிக்க அரசியல் செயலாண்மைத் திறத்தாலும் (Diplomacy), ஆற்றல்மிக்க அரசியல் மேதகைப் பண்பாலும் (Statesmanship) அத்தகைய தனிமுதன்மையையும் தன்னிகரற்ற உச்சநிலையையும் பெற்றுத் திகழ்ந்தார். ஆனால், அவரது ஆதிக்கக்கோட்டை முற்றுப் பெறாதது மட்டுமல்ல; இங்குமங்கும் கீறல்களும் ஓட்டைகளும் உடையதாகவும் இருந்தது. பல்வேறு ஆற்றல் கூறுகள் ஒன்றுபட்டுப் பணியாற்றி அவரது ஆதிக்கக் கோட்டையின் வீழ்ச்சிக்கு வழிவகுத்தன. அவரது விரிந்தகன்ற பேரரசினையும் அதனைச் சார்ந்த ஆட்சிப் பகுதிகளையும் உருவாக்கிய ஆக்கக் கூறுகளில் (factors) பல அப் பேரரசின் தளர்வுக்கும் (weakness), நிலையின்மைக்கும் (instability) காரணமாக அமைந்து இறுதியில் அதன் வீழ்ச்சிக்கும் வித்திட்டன. அவரது பேரரசின் வலுக்குறைவுக்கும், உறுதியின்மைக்கும் வழிவகுத்து அதன் வீழ்ச்சியினை விரைவுபடுத்திய காரணக்கூறுகள் சிலவற்றை ஈண்டு ஆய்வோம் :

(1) முதலாவதாக, நெப்போலியனது பேரரசின் கவர்ச்சிமிக்க அமைப்பு உறுதியற்ற அடித்தளத்தின் மீது கட்டப்பட்டிருந்தது. அது பெரும்பாலும் போனபார்ட்டின் தனிச்சிறப்புத் திறமையால் உருவாக்கப்பட்டிருந்த காரணத்தால் அதன் வாழ்வு முழுக்க முழுக்க அவரையே சார்ந்திருந்தது. மேலும், அப் பேரரசு பெருமளவில் படைவலியாலும், படைத்துறை வெற்றிகளாலும் ஆக்கப்பட்டிருந்தது. ஆகவே, பேரரசரிடம் பற்றும் நம்பிக்கையும் கொண்ட பொதுப் பிணைப்பு (Common bond) அங்கு இடம் பெற்றிருக்கவில்லை. பேரரசின் பல்வேறு பகுதிகள் கட்டிறுக்கமற்று, உறுதியற்று இணைக்கப்பட்டிருந்தன. ஆகவே, அதனை உருவாக்கிய நெப்போலியனது மறைவிற்குப் பின் அது நீடித்து நிலைத்திருக்கவில்லை. பேரரசின் பல்வேறு பகுதிகள் நெப்போலியன்மீது கொண்டிருந்த பற்றும் பணிவும் பலத்தால் ஏற்பட்டனவேயன்றி உள்ளன்பால் உருவானவை அல்ல. புதிதாக இணைக்கப்படுகின்ற ஒவ்வொரு பகுதியும் எதிரிகளின் எண்ணிக்கையைப் பெருக்கியதே தவிர பேரரசின் ஒற்றுமைக்கும் வலிமைக்கும் வழிவகுக்கவில்லை. அன்றியும், பேரரசிலிருந்து விடுவிப்பதற்கான தக்க வேளையை அவை எதிர்பார்த்துக் காத்திருந்தன. ஏற்ற வேளை வந்தவுடன் அவை பேரரசை எதிர்த்துப்

போரிட்டு விடுதலை பெறத்தவறவில்லை. ஸ்பெயினும் ஆஸ்திரியப் பகுதிகளும் இதற்குச் சான்றுகளாக அமைந்துள்ளன. மேலும், நெப்போலியனின் ஆற்றல் அவரது வாழ்நாள் முழுவதும் ஒரே சீராக அமைந்திருக்கவில்லை. களைப்பும், சோர்வும், அயர்வும், அசதியும் அவரது ஆக்கப்பணிகளை நாளடைவில் பெரிதும் பாதித்தன. நெப்போலியனது முழுச் சோர்வே (Exhaustion) அவரது வீழ்ச்சிக்குக் காரணம் என்று அவரது வாழ்க்கை வரலாற்று ஆசிரியரான (Biographer) டாக்டர் ஸ்லோன் (Dr. Sloane) குறிப்பிட்டுள்ளார். ஆனல், பேராசிரியர் ஹாலன் ரோஸ் (Professor Hollan Rose) போன்றவர்கள் இக் கருத்தினை ஏற்றுக்கொள்ளவில்லை. வாட்டர்லூ போருக்கு முன்பும் பின்பும் நெப்போலியனது ஆற்றல் ஒரே சீராகவே இருந்தது ; அவரிடம் களைப்போ சோர்வோ இடம்பெற்றிருக்கவில்லை என்பது அவர்களது கருத்தாகும். இருப்பினும், நெப்போலியனின் ஒவ்வொரு புதிய வெற்றியும் அவரது ஆதிக்க ஆசையுடன் செருக்கினையும், இறுமாப்பினையும் சேர்த்தே வளர்த்தது. ஆகவே, அவர் ஃபிரான்சின் அரசியல் அரங்கில் தம்மை மிஞ்சி எவரும் வளராத வகையில் அவர்களை நசுக்கினுர். அதன் பயனுக, அவர் பேரரசின் செயல்கள் அனைத்தையும் தாமே முன்னின்று கவனிக்க இயலாத நிலையில் அவரது பேரரசு வீழ்ச்சியை நோக்கி விரைந்து சென்றது.

(2) ஃபிரெஞ்சுப் பேரரசில் அடங்கிய பல்வேறு நாடுகளில் எழுந்த தேசிய உணர்வும், நாட்டுப்பற்றும் பேரரசின் வீழ்ச்சிக்கு வழிவகுத்தன. நெப்போலியன் வென்ற நாடுகள் அனைத்தும் ஆரம்பத்தில் அவரை ஏற்றிப் போற்றின; உரிமை (Liberty), ஒப்புணர்ச்சி (Equality), உடன்பிறந்தார் உணர்ச்சி (Fraternity) ஆகிய இலட்சியங்களின் காவலன் போனபார்ட் என்று அவர் போற்றிப் புகழப்பட்டார். கொடுங்கோலாட்சியிலிருந்து மக்களை விடுவிக்க வந்த விடுதலைச்சிற்பி என்று மக்கள் அவரை மனதாரப் போற்றி அவர் காட்டிய வழியில் நடக்க முற்பட்டனர். இத்தாலி, ஆலந்து (Holland), ஜெர்மனி ஆகிய நாடுகள் அவரைத் தங்களின் வழிகாட்டியாகக் கொண்டு வீறுநடைபோட்டன. தெய்வீக உரிமைக் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்த மன்னராட்சி மாய்ந்தது ; மக்களாட்சி மலர்ந்தது என்று அவைகள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்து சென்றன. ஆனல், அந் நாடுகளில் நெப்போலியனது ஆட்சி நிலை நாட்டப்பட்டவுடன் நிலைமைகள் மாறத் தொடங்கின. 'புதிய மொந்தையில் பழைய கள்' என்ற நிலை அங்கு பிறந்தது. மமதை மிக்க மன்னராட்சியில் மக்கள் பட்ட துன்பம், துயரம், இன்னல், இடுக்கண் புதிய ஃபிரெஞ்சு ஆட்சியிலும்

தொடர்ந்தன ; மக்களின் வாட்டம் புதிய வடிவம் பெற்றது ; வேதனை வேகமாக வளர்ந்தது. 'விடுதலை' விழலுக்கு இறைத்த நீராயிற்று ; 'சமத்துவம்' சமாதி நோக்கி விரைந்தது ; 'சகோதரத்துவம்' சாகடிக்கப்பட்டது. புரட்சிக் கருத்துகள் பலவற்றை நெப்போலியன் புதைகுழிக்கு அனுப்பியதை அறிந்த மக்கள் விம்மினர், வெதும்பினர், வேதனை கொண்டனர், வெகுண்டெழுந்தனர் நெப்போலியனுக்கெதிராக. நெப்போலியனது படைகளும் அந் நாடுகளில் கொடுமையின் சின்னங்களாகக் கோலோச்சின. தேசிய உணர்வு, விடுதலை எண்ணம், நாட்டுப்பற்று ஆகியவற்றை நசுக்கும் பணிகளில் அவரது படையினர் பகிரங்கமாக ஈடுபட்டனர். ஃபிரெஞ்சுப் படைகளின் கெடுபிடியும், அடக்குமுறையும் ஸ்பெயின், ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகிய நாடுகளை ஃபிரான்சுக்கெதிராகப் போரிடத் தூண்டின. அறிஞர் டிரெவெல்யன் (Trevelyan) கூறுவதைப்போல, நெப்போலியனது சீர்திருத்தங்களின் பயன்களையும் விஞ்சுகின்ற வகையில் ஸ்பெயின், ஜெர்மனி ஆகிய நாடுகளில் ஃபிரெஞ்சு ஆட்சிக்கெதிராக நாட்டுப்பற்றும், விடுதலை வேட்கையும், தேசிய உணர்வும் தலைதூக்கின. உண்மையிலேயே, அந் நாடுகள் ஃபிரெஞ்சு ஆதிக்கக் கோட்டையைத்தகர்த்தெறியும் பீரங்கிகளாகச் செயல்பட்டன. அந் நாடுகளின் தாக்குதல்களைத் தாங்கி, பேரரசின் வீழ்ச்சியைத் தடுத்து நிறுத்தும் ஆற்றலை நெப்போலியன் பெருமளவு இழந்துவிட்டார்.

(3) நெப்போலியனது படைத்துறைப் பண்பு இணைப்புக் கொள்கையும் (Policy of Militarism) அவரது வீழ்ச்சி நெருப்புக்கு விறகாகப் பயன்பட்டது. ஆரம்பத்தில் போனபார்ட்டின் படை புரட்சிக் கருத்துகளைப் பரப்பும் புனிதப்பணியினைக் கடமையாகக் கொண்டிருந்தது. உரிமை, ஒப்புணர்ச்சி, உடன் பிறந்தார் உணர்ச்சி ஆகிய கருத்துகள் ஒவ்வொரு போர் வீரனின் நெஞ்சிலும் நின்றுநிலவின. அவற்றை வீரர்கள் தங்கள் இதயங்களிலே தாங்கி வென்ற நாடுகளிலெல்லாம் அவற்றைப் பரப்புவதைத் தங்களின் தலையாய கடனாகக் கொண்டிருந்தனர். ஆகவே, அவர்கள் நானிலம் போற்றும் சாதனைகள் பல புரிந்தனர். ஆனால், நாளடைவில் அவர்கள் கொடுங்கோலாட்சியின் தூதர்களாக மாறினர். மக்களை மடமைப்பிடியிலிருந்து விடுவிக்க வந்த அவர்கள் படிப்படியாக மக்களின் உரிமைகளை நசுக்கும் பணியில் ஈடுபாடு கொண்டனர். பொதுநலத்தின் அரணாகத் திகழ்ந்த போனபார்ட்டின் படை நாளடைவில் சுயநலத்தின் பிறப்பிடமாக, அடக்குமுறையின் கூடாரமாக, மக்களை மாய்க்கும் கொலைக் கூடமாக மாறியது. வென்ற நாடுகளிலெல்லாம் மக்களைக் கவர்ந்திழுக்கும் தனிச்சிறப்பாற்றலைப் பெற்றிருந்த ஃபிரெஞ்சுப் படை,

படிப்படியாக மக்களின் வெறுப்புக்குள்ளாகி அவர்களது மேலான ஆதரவை இழந்தது. போர் வெறி கொண்ட ஃபிரெஞ்சுப் படையினர் புதிய வெற்றிகளைத் தேடி அலைந்தனரேதவிர, பெற்ற வெற்றிகளைப் பேணிக்காக்க அவர்கள் முற்படவில்லை. அவர்களிடம் குடிகொண்டிருந்த போர் ஆர்வமும், நாட்டுப்பற்றும், உறுதியும், ஒழுங்கும், கட்டுப்பாடும் நாளடைவில் குறைந்தன. மேலும், தீபகற்பப் போரும், இரஷ்யப் படையெடுப்பும் நெப்போலியனது படையில் இருந்த ஆற்றல் மறவர்களை யெல்லாம் அழித்தொழித்தன. நெப்போலியனது போர் மனப்பாங்கு பல்லாயிரக்கணக்கான வீரர்களைப் பலிகொண்டதுடன் நாட்டின் கருவூலத்தையும் பெரிதும் பாதித்தது. ஃபிரெஞ்சுப் படையில் நாளடைவில் போலந்து, இத்தாலிய, ஜெர்மானிய, ஸ்பானிய, டச்சு வீரர்களும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். ஆகவே, நாட்டுப் பற்றும், உறுதியும், போராற்றலும் ஒருங்கே பெற்றுத்திகழ்ந்த ஃபிரெஞ்சுப் பெரும் படை அவற்றை யெல்லாம் இழந்ததுடன் தனது தனித்தன்மையையும் இழந்தது. அதன் விளைவாகப் பேரரசின் வீழ்ச்சி தவிர்க்க முடியாததாயிற்று.

(4) நெப்போலியனது கண்டத்திட்டமும் (Continental System) அவரது வீழ்ச்சிக்குரிய சிறப்புக் காரணங்களில் ஒன்றாக அமைந்துள்ளது. கண்டத்திட்டத்தின் நேர்மையான (Logical) விளைவே நெப்போலியனின் அழிவு என்று குறிப்பிட்டுள்ளார் ஃபிஷர் (Fisher). நெப்போலியன் தமது ஆற்றல் முழுவதையும் கண்டத் திட்டத்தை முழுமையாக்குவதற்காகவே செலவிட்டார்; இருப்பினும் பயனில்லை. அதனைத் தீவிரப்படுத்தியதன் விளைவாக ஐரோப்பிய வணிகம் நிலைகுலைந்தது. தேயிலை, காபி, துணிவகைகள், சர்க்கரை போன்ற மக்களின் அன்றாடத் தேவைக்கான பொருட்களின் விலை வேகமாக ஏறியது. அப் பொருட்களின் விலையேற்றம் ஐரோப்பாவின் அமைதியைப் பெரிதும் குலைத்தது. ஆனால், இங்கிலாந்தின் வணிகம் இத் திட்டத்தால் பெருமளவு பாதிக்கப்படவில்லை. பிற ஐரோப்பிய நாட்டு மக்கள் அகப்பொருள்களின் விலையேற்றத்தாலும், அப் பொருட்கள் போதுமான அளவு கிடைக்காததாலும் அவதிப் பட்ட நேரத்தில் ஆங்கில மக்கள் அவையனைத்தையும் பெற்று அமைதியுடன் வாழ்ந்தனர். ஆங்கில வணிகம் கிஞ்சித்தும் பாதிக்கப்படாததுடன், இங்கிலாந்துப் பொருட்கள் பிற ஐரோப்பிய நாடுகளில் கள்ளச்சந்தையில் பெருமளவு விற்பனையாயின. அன்றியும், ஃபிரான்சின் தனி முதலாதிக்கத்தை ஐரோப்பாவில் நிலைநாட்டுவதற்காக, தங்களின் வணிகத்தையும், தொழில் வளர்ச்சியையும் பலி கொடுக்க பிற ஐரோப்பிய நாடுகள் விரும்ப

வில்லை. விலையேற்றமும், அகப்பொருட்களின் பற்றாக்குறையும் ஃபிரெஞ்சுப் பெருநாட்டில் பெரும் பரபரப்பை உருவாக்கியது. ஸ்பெயின், போர்ச்சுக்கல் ஆகிய நாடுகளில் கண்டத்திட்டத்தை நெப்போலியன் கண்டிப்பாக அமுல்படுத்த முற்பட்டதின் பயனாக தீபகற்பப் போர் மூண்டது. அப் போர் நெப்போலியனையும் அவரது பேரரசையும் நிலைகுலையச்செய்தது. ஆலந்து நாட்டினையாண்ட அவரது உடன்பிறந்த சகோதரர் லூயி கூட அத் திட்டத்தை அங்கு செயல்படுத்த மறுத்துவிட்டார். ஜெர்மனியும் கண்டத்திட்டத்தின் விளைவாக நெப்போலியனுக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தியது. இரஷ்யாவும் அத் திட்டத்தைத் தீவிரமாகச் செயல்படுத்த முன் வரவில்லை. ஆகவே, இரஷ்யாவுடன் போர்தொடுக்கும் ஆபத்தான நிலைக்கு நெப்போலியன் ஆளானார். அவரது இரஷ்யப் படையெடுப்பின் பயனாக ஃபிரெஞ்சுப் பெரும்படை கடுஞ்சேதத்துக்குள்ளாகியது. அன்றியும், இரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய நாடுகள் ஒன்றுபட்டு இங்கிலாந்தின் துணையுடன் நெப்போலியனை வீழ்த்தும் வாய்ப்பினை அப் படையெடுப்பு உருவாக்கிக் கொடுத்தது. ஆகவே, கண்டத்திட்டமே நெப்போலியனதுவீழ்ச்சியை விரைவு படுத்தியது.

(5) போனபார்ட் போப் ஏழாவது பயசை (Pope Pius VII) பெருங் கொடுமைக்கும் அவமதிப்பிற்கும் ஆளாக்கினார். ஆங்கிலக் கப்பல்கள் போப்பின் ஆதிக்கத்திலுள்ள துறைமுகங்களில் நுழைவதற்கு அனுமதித்தல் கூடாது என்று போனபார்ட் போப்பைக் கேட்டுக்கொண்டார். ஆனால், போப் ஏழாவது பயஸ் அதனை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். உடனே, போனபார்ட் போப்பின் ஆதிக்கத்திலுள்ள நாடுகளின்மீது தமது தாக்குதலைத் தொடங்கினார். 1809ஆம் ஆண்டு அவர் ரோம் நகரைக் கைப்பற்றி போப் நாடுகளைத் தமது பேரரசுடன் இணைத்துக் கொண்டதுடன் போப்பையும் சிறைப்படுத்தினார். ஆகவே, கத்தோலிக்கர்கள் நெப்போலியனுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தனர். போனபார்ட் போப்பிடம் நடந்துகொண்ட தகாத முறையும் அவரது வீழ்ச்சிக்குரிய பங்கினைச் செலுத்தத் தவறவில்லை.

(6) நெப்போலியனது தீபகற்பப் போரும் அவரது வீழ்ச்சிக்கு வித்திட்ட மிகச்சக்தி வாய்ந்த காரணங்களில் ஒன்றாகும். நெப்போலியன்து கவனக்குறைவால் ஏற்பட்ட பெருந்தவறுகளில் அதுவும் ஒன்றாக அமைந்தது. ஸ்பானிய அரசரை நீக்கிவிட்டுத் தமது சகோதரர் ஜோசப் போனபார்ட்டை ஸ்பானிய அரியணையில் அமர்த்தியது நாட்டுப்பற்றுமிக்க ஸ்பானி

யர்களை நெப்போலியனுக்கு எதிராகக் கிளர்ந்தெழச் செய்தது. தேசிய உணர்வால் உந்தப்பட்ட ஸ்பானியர்களின் விடுதலைப் போர் நெப்போலியனின் வீழ்ச்சியை விரைவுபடுத்தியது. ஸ்பெயின் நாட்டில் தோன்றிய தேசிய உணர்வும், நாட்டுப்பற்றும் விரைவில் ஜெர்மனி, ஆஸ்திரியா ஆகிய நாடுகளுக்கும் பரவியதால், அந்த நாடுகளிலும் ஃபிரெஞ்சு ஆட்சிக்கெதிராக மக்கள் கிளர்ந்தெழுந்து நெப்போலியனைத் திணறடித்தனர். ஆகவே, ஃபிரெஞ்சு ஆதிக்கக் கோட்டை சரியத்தொடங்கியது. ஸ்பெயினிலும் போர்ச்சுக்கல் நாட்டிலும் மேற்கொண்ட போர்களின் விளைவாக நெப்போலியன் தமது சிறந்த தளபதிகளையும் தீரமிக்க வீரர்களில் எண்ணிறந்தோரையும் பலி கொடுத்தார். போனபார்ட்டின் ஸ்பானிய ஏற்பாடு அவரது அழிவுப்படலத்தின் முதல் கட்டமாகும். ஸ்பானியத் தேசிய எழுச்சியைத் தமது அரசியல் சூழ்ச்சித்திறநயத்தாலோ (Diplomacy) அல்லது இலஞ்சத்தாலோ தடுத்து நிறுத்த அவரால் இயலவில்லை. அவரது ஸ்பானிய ஏற்பாடு ஃபிரெஞ்சுப் பேரரசில் ஏற்பட்ட பெரும் சீழ்ப்புண்ணாகும் (Ulcer). அப் புண் விரைவில் பேரரசு முழுவதும் பரவி அதனை அடியோடு மாய்த்தது.

(7) நெப்போலியனது விடாப்பிடியும், வளையாத போக்கும், விட்டுக்கொடுக்காத மனப்பாங்கும், சமரச உடன்பாட்டிற்கு இணங்காத தன்மையும் அவரது அழிவிற்கு அச்சாரமாக அமைந்தன. தாம் தோல்வியுற்ற நேரத்திலும் பகைவர்களுடன் பொதுவான சமரச உடன்பாட்டிற்கு அவர் முன்வரவில்லை. இரைன் நாடுகளின் இணைவு (Confederation of the Rhine) ஒரு தவறான கணிப்பு; கண்டத்திட்டம் ஒரு பொருந்தாக் கற்பனை; இழந்த புகழொளியை மீண்டும் பெற இயலாத சோகை நிரம்பியது தமது பெரும்பேரரசு — என்பனவற்றை நெப்போலியன் உள்ளூர உணர்ந்திருந்தார். ஆனால், தமது தவறுகளை வெளிப்படையாக ஒப்புக்கொண்டு பேரரசைப் பேணிக் காக்க அவர் தவறிவிட்டார். தம் வலிவினையும் பகைவர் வலிவினையும் எடை போட்டறிந்து அதற்கேற்றவாறு தம்மைப் பலப்படுத்திக்கொள்ள அவர் முன்வரவில்லை. ஃபிரெஞ்சுப் பேரரசு நிலைகுலைந்த நேரத்திலும் எதிரிகளிடம் உடன்பாடு கண்டு ஃபிரெஞ்சு மணிமுடியைக் காக்க அவர் நாட்டம் செலுத்தவில்லை. சமரசத் திட்டங்களுக்கு உட்படாத நிலையும், அவரது வளையாத போக்கும் அவரது பேரரசுடன் அவரையும் சேர்த்து அழிவு நோக்கி அழைத்துச் சென்றன. தொடர்ந்து வரும் தோல்விப்படலத்தை நினைவிற்கொண்டு எதிரிகளுடன் அமைதி உடன்பாடு செய்து கொள்ள நெப்போலியன் முன்வந்திருப்

பாரேயானுல் அவர் ஃபிரெஞ்சு அரியணையிலிருந்து நிச்சயம் இறக்கப்பட்டிருக்கமாட்டார்.

(8) பிரிட்டனின் வலிமையும் நெப்போலியனின் வீழ்ச்சிக்குரிய முக்கிய காரணங்களில் ஒன்ருகும். நெப்போலியனை வீழ்த்திய பெருமை பெரும்பாலும் பிரிட்டனையே சாரும். ஃபிரெஞ்சுப் பேரரசுக்கு எதிராக ஐரோப்பிய நாடுகளுடன் உடன்பாடுகள் செய்துகொண்டு, நெப்போலியனது தாக்குதல்களுக்கெல்லாம் ஈடு கொடுத்து அவரை வீழ்த்தும் வலிவினை இயல்பாகவே பிரிட்டன் பெற்றிருந்தது. ஃபிரான்சுக்கு எதிரான நாடுகளையெல்லாம் ஒரே அணியில் திரட்டி அவைகளுக்குப் பணமும், படைக்கருவிகளும் கொடுத்து அவைகளைக் கொண்டே ஃபிரெஞ்சுப் பேரரசை வீழ்த்தியது பிரிட்டன். இங்கிலாந்தின் கடலாதிக்கம் நெப்போலியனின் இனிய நம்பிக்கைகளை யெல்லாம் நாசமாக்கியது. அதன் ஆற்றல் மிக்க கடற்படை ஃபிரெஞ்சுப் பெரும்படையை ஆங்காங்கே தாக்கித் திணறடித்தது. தீரமும் திறமையும் மிக்க ஆங்கிலக் கடற்படைத் தளபதிகளான நெல்சன் (Nelson), சிட்னி ஸ்மித் (Sidney Smithe) போன்றவர்கள் ஃபிரெஞ்சுக் கடற்படையைத் தாக்கி நாசமாக்கி, ஆங்கிலக் கடலாதிக்கத்தை அகிலத்தில் நிலை நாட்டினர். நெப்போலியனது படையெடுப்பைத் தடுத்து நிறுத்தி இங்கிலாந்தைக் காத்த பெருமையும் ஆங்கிலக் கடற்படையினையே சாரும். தீபகற்பப் போரில் ஆங்கிலக் கடற்படையினர் ஆற்றிய தீரச்செயல் ஸ்பானிய மண்ணிலிருந்து ஃபிரெஞ்சுக்காரர்களை விரட்டியடித்தது. மேலும், வெகு தொலைவிலுள்ள நட்பு நாடுகளுடன் தொடர்பு கொள்ளவும், அங்கு படைவீரர்களை எடுத்துச் செல்லவும், ஃபிரெஞ்சுப் படையினரை ஆங்காங்கே தாக்கவும் ஆங்கிலக் கடற்படை பெரிதும் பயன்பட்டது. அப் பணிகளை வலிமைமிக்க ஆங்கிலக் கடற்படை தொடர்ந்து சீராக ஆற்றி வந்த காரணத்தால் நெப்போலியனது தோல்வி தவிர்க்க முடியாததாயிற்று. மேலும், படைவலிவுடன் பிரிட்டன் சீரான பொருள் வலிவினையும் பெற்றிருந்தது. அங்கு ஏற்பட்ட தொழிற்புரட்சி பிரிட்டனை உலகத்தின் செல்வமிக்க நாடாக மாற்றியது. அண்டிய நாடுகளை யெல்லாம் ஆதரித்துக் காக்கும் ஆற்றலை இங்கிலாந்து பெற்றிருந்தது. ஆகவே, இங்கிலாந்தின் பணவலிவும் படைவலிவும் நெப்போலியனை வீழ்த்துவதற்கு உறுதுணை புரிந்தன.

(9) போனபார்ட்டின் உற்ருரும் உறவினரும் அவரது வீழ்ச்சிக்குரிய பங்கினைச் செலுத்தத் தவறவில்லை. நெப்போலியன் தமது உறவினர்களிடம் அன்பும் பரிவும் கொண்டு அவர்களது உயர்வுக்கு வழி வகுத்தார். ஆனுல், அவர்களில் பலர் நன்றி கொன்ற நயவஞ்சகர்களாக மாறினர். இத்தாலியிலும், ஜெர்

மனியிலும் ஃபிரெஞ்சு ஆதிக்கம் வீழ்ச்சியுறக் காரணமாயினர் கரோலினும், ஜெரோமும். ஆலந்தை ஆண்ட அவரது உடன் பிறப்பாம் லூயி அவரது ஆணையை ஏற்று நடக்கத்தவறி விட்டார். தம்முடைய உடன் பிறப்புகள் அனைவரையும் ஆற்றல் மிக்க கழுகுகளாக மாற்றியமைக்க நெப்போலியன் விருப்பங் கொண்டு அவர்களை ஊக்குவித்தார்; அவர்களோ சாதாரணக் கோழிகளாகவே இருந்தனர். நாட்டு நலனில் நாட்டம் சிறிது மின்றி அந்தப்புரத்தில் அழகிகளுடன் கொஞ்சி மகிழ்வதிலேயே அவர்கள் தங்கள் காலத்தை வீணாக்கினர். அவர்களது செயல்கள் நெப்போலியனைப் பெரிதும் வேதனைக்குள்ளாக்கின. 'எனது உறவினர்களுக்கு நான் செய்த நன்மையை விட அதிக அளவு தீமையை அவர்கள் எனக்கு அளித்துள்ளனர்' என்று நெப்போலியன் வருந்திக் கூறியுள்ளார்.

(10) ஃபிரெஞ்சுப் படைத்துறையிலும் பொருளாதாரத்துறையிலும் ஏற்பட்ட ஈடு செய்ய இயலாத சரிவுகளும் நெப்போலியனது தோல்விக்கும் வீழ்ச்சிக்கும் தூண்டுகோலாக அமைந்தன. ஒழுங்கு, கட்டுப்பாடு, உறுதி, வலிமை ஆகியவை படையில் படிப்படியாகக் குன்றத்தொடங்கின. படையில் ஏற்பட்ட கடுமையான சேதம் நாட்டின் மனித ஆற்றலை (Man power) வெகுவாகப் பாதித்ததுடன் நாட்டின் தொழில் வளத்தையும் சீர்குலைத்தது. தீபகற்பப் போரும் இரஷ்யப் போரும் ஃபிரெஞ்சுப் பெரும் படையின் தீரமிக்க வீரர்களில் பலரைப் பலிகொண்டன. இலட்சக்கணக்கில் வீரர்கள் உயிர் இழந்தனர்; ஆற்றல் மிக்க தளபதிகள் பலர் மாண்டொழிந்தனர். புதிதாகப் படைக்கு ஆள் கிடைக்காத அளவுக்கு மோசமான நிலை ஃபிரான்சில் உருவாகியது. பயிற்சி பெற்ற பல்லாயிரக்கணக்கான வீரர்களை இரஷ்யாவின் கடுங்குளிர் கொள்ளைகொண்ட காரணத்தால் பயிற்சியற்ற பையன்களையெல்லாம் படையில் சேர்க்கும் இக்கட்டான நிலை பிறந்தது ஃபிரான்சில். அவர்களைக்கொண்டு அலை அலையாகத் திரண்டு, நாலா பக்கமும் சூழ்ந்துவரும் பகைவர்களைத் தாக்குவது இப்போது நெப்போலியனுக்கு இயலாததாயிற்று. அன்றியும், ஃபிரான்சில் ஏற்பட்ட நெருக்கடி நிலையால் விலைகள் விறுவிறு என ஏறின; பாதுகாப்புக்கான பலமுனைவரிகளும் மக்களை வாட்டின; ஓயாது தொடர்ந்த சண்டைகளால் நாட்டின் கருவூலம் காலியானதுடன், ஃபிரான்சில் பெரும் பொருளாதாரச் சீர்குலைவும் ஏற்பட்டது. தொழில் வளம் குன்றியது; ஒவ்வொரு துறையிலும் தேக்க நிலை பிறந்தது; ஆக்க வேலைகள் தடைப்பட்டன. போர் நிதியும் போதிய அளவு திரட்ட இயலவில்லை. மக்களும் தொடர்ந்து நிதி கொடுக்கும் சக்தியை இழந்தனர். போரினை நிறுத்திப் புது

வாழ்வு பெற அவர்கள் விரும்பினர். பேரரசின் பல்வேறு பகுதி களிலும் போனபார்ட்டின் போர் ஏற்பாடுகளுக்குத் தொடர்ந்து ஆதரவளிக்க மக்கள் முன்வரவில்லை. மக்களின் ஆதரவினைப் பெருமளவு இழந்த நெப்போலியன் தோல்வியைத் தொட்டணைக்க வேண்டியதாயிற்று.

இறுதியாக, நெப்போலியனது அரச வாழ்வும், அவரது அலங்காரமான அவையின் ஆடம்பர போக்கும், ஜோச பைனின் திருமண விலக்கும், ஆஸ்திரிய நாட்டு இளவரசியை நெப்போலியன் மணம் முடித்துக்கொண்டதும், புரட்சியில் பூத்துக் குலுங்கிய உரிமை, ஒப்புணர்ச்சி, உடன்பிறந்தார் உணர்ச்சி ஆகிய மலர்களைப் புறக்கணித்து அவற்றில் நாட்டங்கொண்ட மக்களின் நல்லாதரவை நெப்போலியன் இழந்தமையும் அவரது வீழ்ச்சிக்குக் காரணங்களாயின.

கிராண்டும் டெம்பர்லியும் (Grant and Temperley) குறிப் பிடுவதைப்போல, 1807ஆம் ஆண்டு நெப்போலியனது வல் லரசின் உச்சக்கட்டத்தைக் குறிக்கின்றது. அதுபோழ்து, அவர் தொட்ட பணி ஒவ்வொன்றும் துலங்கியது. பாய்ந்து வந்த பகைவர்களனைவரும் வீழ்ந்துபட்டனர். தமது விருப்பம் போல் ஐரோப்பாவை அவர் மாற்றியமைத்தார். நெப்போ லியனை எதிர்க்கும் துணிவினை அப்போது எந்த வல்லரசும் பெற்றிருக்கவில்லை. அன்றியும், இரஷ்யப் பேரரசர் அலெக் சாண்டர் அவரது நெருங்கிய நண்பராகத் திகழ்ந்தார். ஃபிரெஞ்சுப் புரட்சியும் இப்பொழுது பழங்கதை ஆகிவிட்டது. ஐரோப்பாவில் நெப்போலியனது ஆதிக்கம் பெருமளவு நிலை நாட்டப்பட்டது. நெப்போலியனது உற்றாரும் உறவினரும் அவருடன் சேர்ந்தே உயர்நிலை பெற்றுத்திகழ்ந்தனர். அவரும் அவரது குடும்பத்தினரும் செல்வங்கள் அனைத்தையும் குறை வின்றிப் பெற்று இசைபட வாழ்ந்தனர். 1807ஆம் ஆண்டில் நெப்போலியன் இறந்திருப்பாரேயானால் அவரது வாழ்க்கைப் போக்கு (Career) ஐரோப்பியப் படைத்துறை வரலாற்றில் மட்டுமின்றி உலக வரலாற்றிலும் வியக்கத்தக்க ஒளிமயமான இடத்தினைப் பெற்றுத் திகழ்ந்திருக்கும். 1807ஆம் ஆண்டு நெப்போலியனது வாழ்வின் ‘ நுனிக்கொம்பர் ’ ஆகும்.

“ நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும் ” (குறள்)

## உறுதுணை புரிந்த நூல்கள்


1. நெப்போலியன் காலம் முதற்கொண்ட ஐரோப்பா — தாம்சன்
2. நெப்போலியன் — எச். ஏ. எல். ஃபிஷர்.
3. நெப்போலியன் - ஆதரவாக : எதிராக — பி. ஹெயில்
4. நெப்போலியனும் போப்பும் — ஈ. ஈ. ஒய். ஹேல்ஸ்
5. நெப்போலியனது எண்ணம் — ஹெரால்டு ஜே. சி.
6. நெப்போலியனும் ஐரோப்பிய விழிப்புணர்ச்சியும் — எஃப். எம். எச். மார்கம்
7. நெப்போலியனின் வாழ்க்கை — ஜே. எச். ரோஸ்
8. நெப்போலியன் போனபார்ட் — ஸ்லோன்
9. நெப்போலியன் போனபார்ட் - அவரது எழுச்சியும் வீழ்ச்சியும் — ஜே. எம். தாம்சன்
10. நெப்போலியனது வாழ்க்கை — ஜோசப் எல். சி. ஆப்பட்.

# 11. மங்காப் புகழ்

ஐரோப்பாவிலிருந்து ஆறுயிரம் கல் தொலேவிலும், ஆஃபிரிக் காவிலிருந்து ஆயிரத்திருநூறு கல் தொலேவிலும் உள்ளது செயின்ட் கெலினு என்ற தீவு. பத்துக் கல் நீளமும் ஆறு கல் அகலமும் கொண்ட அத் தீவில் ஐநூறு வெள்ளேயர்களும், முந்நூறு நீக்ரோ அடிமைகளும் வசித்துவந்தனர். அங்கு வசித்துவந்த வெள்ளே யர்களில் இருநூறு பேர் போர்வீரர்கள். மக்களின் நோயற்ற வாழ்க்கைக்கு ஏற்ற தட்பவெட்பநிலே அங்கு நிலவவில்லே. வயிற் றுக்கடுப்பும், ஈரல் நோயும் அத் தீவில் நிரந்தரமானவை. ஆகவே, மோன்தோலன் குறிப்பிடுவதைப்போல, அத் தீவிலுள்ள எவனும் ஐம்பது வயதினேத்தாண்டி உயிர்வாழ்ந்ததில்லே. 1815 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 15ஆம் நாள் மாலே 'நார்த் தம்பர் லேண்ட்' அத் தீவின் துறைமுகம் வந்தடைந்தது. நெப் போலியனும் அவரது நண்பர்களும் கப்பல் தலேவனிடமும் பிற அதிகாரிகளிடமும் நன்றிகூறி விடைபெற்றுக்கொண்டு செயின்ட் கெலினு வந்தடைந்தனர். ஜேம்ஸ்டவுன் (Jamestown) என்பது அத் தீவிலுள்ள ஒரு சிற்றூர். அங்குள்ள வசதியற்ற ஒரு சிறு வீடு நெப்போலியனுக்காக ஒதுக்கப்பட்டிருந்தது. அன்றிரவு போனபார்ட் அச் சிறு வீட்டில் தங்கினுர். அவ் வீட்டைச் சுற்றிலும் துப்பாக்கிவீரர்கள் காவல்காத்துநின்றனர். ஐரோப் பிய வல்லரசுகளேயெல்லாம் கலக்கத்தில் ஆழ்த்திய மாவீரனேக் காண அத் தீவின் மக்களெல்லாம் அங்கு திரண்டுவந்து அவரைக் கண்டனர்.

அக்டோபர் திங்கள் பதினேழாம் நாள் காலே நெப்போலி யன், தளபதி பெர்ட்ரண்ட், காக்பர்ன் (Cockburn) ஆகியோர் உடன்வர குதிரை மீதேறி அச் சிறுதீவைச் சுற்றிப்பார்க்கச் சென்றுர். அது போழ்து ஜேம்ஸ்டவுனிற்குச் சிறிது தொலே வில் தனித்திருந்த வீடொன்றைக் கண்டார். அவ் வீட்டில் பால்கோம்பி (Balcombe) என்பவர் வசித்துவந்தார். அவரை நெப்போலியன் அணுகி அவ் வீட்டிலுள்ள ஒரு அறையில் தாம் தங்குவதற்கு அனுமதி கொடுக்கும்படி வேண்டினுர். பால்கோம்பி

மிக்க மகிழ்ச்சியுடன் போனபார்ட்டைத் தம் இல்லத்தில் வசிக்க அனுமதித்தார். அன்று முதல் அவர் அங்கு தங்கி ஓரளவு ஆறுதல் பெற்றுவந்தார். பால்கோம்பியின் மக்களுடன் அளவளாவியும் விளையாடியும் நெப்போலியன் உற்சாகமாகக் காலத்தைக் கழித்தார். அன்றியும், படிப்பதிலும் தாம் சந்தித்த களங்கள்பற்றி நண்பர்களுடன் உரையாடுவதிலும், எழுதுவதிலும் அவர் இன்பத்தை வரவழைத்துக்கொண்டார். இருப்பினும், அவர் தப்பிச் செல்லாதபடி பலத்த காவல் போடப்பட்டிருந்தது. போர்வீரர்கள் கையில் துப்பாக்கியுடன் அவரைக் கண்காணித்து வந்தனர். அன்றியும், நெப்போலியன் ஓரிடத்தில் இரண்டுமணி நேரத்திற்கு மேல் தங்கக்கூடாதென்றும், ஒரு குறிப்பிட்ட எல்லையைக் கடந்து செல்லக்கூடாதென்றும், அத் தீவிலுள்ள அடிமைகளிடம் பேசக் கூடாதென்றும் தடைகள் விதிக்கப்பட்டன. எதையும் தாங்கும் இதயத்தைப் பெற்ற பேரரசர் அக் கொடிய நிபந்தனைகளையெல்லாம் தாங்கி அச் சிறு தீவில் வாழ்ந்து வந்தார்.

மாதங்கள் இரண்டு உருண்டோடின. டிசம்பர் திங்கள் பத்தாம் நாள் பேரரசர், இலாங்வுட் (Longwood) விடுதிக்கு மாற்றப்பட்டார். ஆயிரத்தைநூறு அடி உயரமுள்ள பாறை மீதிருந்த குடிசை ஒன்று செப்பனிடப்பட்டு நெப்போலியன் தங்குவதற்கான விடுதியாக்கப்பட்டது. அங்கு பேரரசருடன் அவரது நண்பர்களும் சென்றனர். அவர்கள் அவ் விடுதியைச் சுற்றிலும் கூடாரங்கள் அமைத்துக்கொண்டு குடும்பத்துடன் வாழ்ந்தனர். இப்போது, பேரரசர், தளபதி பெர்ட்ரண்ட் (General Bertrand), அவரது மனைவி, அவர்களது மூன்று குழந்தைகள், லாஸ்கேசஸ் (Las Cases), அவரது மகன், மோன்தோலன் (Mon Tholon), அவரது துணைவி, அவர்களது இரண்டு குழந்தைகள், தளபதி கோர்கேண்ட் (Gourgand), மருத்துவர் ஓ' மியாரா (Dr. O' Meara) ஆகியோர் அப் பகுதியில் வசித்துவந்தனர். அன்றியும், எட்டுப்பணியாட்களும் மூன்று குதிரைக்காரர்களும் இருந்தனர்.

இந் நிலையில், சர் கட்சன் லோவ் (Sir Haudson Laoue) என்பவர் செயின்ட் கெலினாவின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். அவர் அத் தீவுக்கு வந்து பதவி ஏற்றவுடன் போனபார்ட்டைக் காணச் சென்றார். இருவரும் சிறிது நேரம் உரையாடினர். லோவின் தோற்றம், பேச்சு ஆகியவை அவர்கள் இருவருக்குமிடையே நெருங்கிய நட்புறவை வளர்க்கப் பயன்படவில்லை. லோவின் நடவடிக்கைகள் நாளடைவில் அவர்களிடையே தீராத பகைமையை உருவாக்கிவிட்டன. 1816ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 16ஆம் நாள் அவர்களது சந்திப்பு இலாங்வுட் விடுதியில் நடைபெற்

றது. லோவ் அவ்விடம் விட்டகன்றபின், அவனைப்பற்றி எளிதில் எடைபோட்டறிந்தார் நெப்போலியன். 'லோவ் சூழ்ச்சிக்காரன்; அவனது முகம் அவன் மிகவும் கொடியவன் என்பதைக் காட்டு கின்றது' என்று அவர் கருதினர். அடுத்த நாள், ஆளுநர், நெப்போலியனைப் பற்றிய ஒரு முக்கியமான அறிவிப்பை வெளி யிட்டார். அதாவது, நெப்போலியனுடன் வசித்துவரும் நண் பர்களில் எவராவது ஐரோப்பா திரும்ப விரும்பினல் அவர்களது விருப்பம் நிறைவேற்றி வைக்கப்படும். அன்றி, இங்கேயே தங்கவிரும்புகின்றவர்கள் நெப்போலியனுக்கு விதிக்கப்பட்டுள்ள தடைகளனைத்திற்கும் கட்டுப்பட்டு நடப்பதாக உறுதிமொழி எழுதிக்கொடுக்கவேண்டும் என்று ஆளுநர் அறிவித்தார். அவ் வறிவிப்பைக் கேட்ட பேரரசரின் நண்பர்களில் தளபதி பெர்ட் ரண்டைத் தவிர, ஏனையோரனைவரும் எவ்விதத் தயக்கமுமின்றி உறுதிமொழி உடனே எழுதிக்கொடுத்தனர். ஆனல், பெர்ட்ரண்ட் மட்டும் தயங்கினர். அப்போது, பேரரசர் 'எனது கெழுதகை நண்பர் தளபதி பெர்ட்ரண்ட் இப்படித்தான் தயங்குவார்; ஆனல், வேளைவரும்போது அவர் நிச்சயம் என்னைவிட்டு பிரிந்து செல்லமாட்டார்' என்று கருத்தறிவித்தார். ஆளுநர் லோவ் அடுத்தடுத்து மேற்கொண்ட நடவடிக்கைகள் அவருக்கும் பேரர சருக்குமிடையே மேலும் கசப்புணர்ச்சியைப் பெருக்கின. நெப் போலியனை அவரது நண்பர்களும் பிறரும் 'பேரரசர்' என்று அழைக்கக்கூடாதென்றும் சாதாரணத் 'தளபதி' என்றே அழைக்க வேண்டுமென்றும் லோவ் அறிவித்தார். இதுபோன்று பல மாறு தல்களை ஆளுநர் அடிக்கடி செய்துவந்தார். அவற்றையெல்லாம் தாங்கிச் சகித்து வாழ்ந்த நெப்போலியனும் அவரது நண்பர் களும் ஆளுநர் லோவ்மீது இயல்பாக எரிச்சலும் கோபமும் கொண்டனர்.

இதற்கிடையில், ஒருநாள் 'பேரரசர் நெப்போலியனது இறுதி ஆட்சி' என்ற நூல் ஆளுநர் லோவிடம் வந்துசேர்ந்தது. அதனை எழுதியவர் ஒரு ஆங்கில ஆசிரியர். அவர் அதனை லோவிற்கு அனுப்பி நெப்போலியனிடம் அதனைச் சேர்ப்பிக்கும்படி வேண்டி னர். அந் நூலின் பின்புறத்தில் 'பேரரசர் நெப்போலியனுக்கு' என்று எழுதப்பட்டிருந்தது. அதனைக் கண்ணுற்ற ஆளுநர் கடும் கோபங்கொண்டு அதனை நெப்போலியனிடம் சேர்ப்பிக்க மறுத்து விட்டார். அதனை அறிந்த பேரரசர் பெரிதும் வருந்தினர். உடனே, தமது பெயரைக்கூட மாற்றிக் கொள்ள முன்வந்த பேரரசர் அதற்கான அனுமதி கொடுக்கும்படி லோவை வேண்டி னர். ஆனல், அதற்கும் அனுமதி தர மறுத்துவிட்டார் ஆளுநர். இது குறித்து பேரரசர் கருத்தறிவிக்கின்ற நேரத்தில் 'ஆங்கில அரசினர் விடாப்பிடியாக என்னைத் 'தளபதி நெப்போலியன்'

என்று அழைத்துவருகின்றனர். 'தளபதி' என்று நான் அழைக்கப் படுவதில் எனக்கு எவ்வித இழுக்கும் ஏற்பட்டுவிட்டதாக நான் கருதவில்லை. ஆனால், ஆங்கில ஆட்சியாளர் என்னை அவ்வாறு அழைப்பதுதான் வேடிக்கையாகவும் வேதனையாகவும் உள்ளது. 'ஃபிரெஞ்சுப் பெருநாட்டின் பேரரசன்' என்று நானோ எனது நண்பர்களோ சொல்லிக் கொள்ளவில்லை. மாறாக, 'பேரரசர் நெப்போலியன்' என்று தானே நாங்கள் குறிப்பிடுகின்றோம். ஆகவே, ஆங்கில ஆட்சியாளர் அதனை மறுத்தல் நீதியின் பாற் பட்டதாகாது. ஆங்கில நாட்டு மாமன்னர்களான இரண்டாம் ஜேம்ஸ், சார்லஸ் ஆகியோர் தங்களின் அரசுரிமை பறிபோன பின்பும் 'பேரரசர்' என்றே அழைக்கப்பட்டனர். ஆனால், என்னை மட்டும் 'தளபதி' என்றழைப்பது எப்படி நீதியும் நேர்மையும் மிக்கதாகும்' என்று குறிப்பிட்டுள்ளார்.

1816ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் மூன்றாம் நாள் ஆளுநர் லோவ் நெப்போலியன் பற்றிய புதிய அறிவிப்பு ஒன்றினையும் வெளியிட்டார். அதன்படி, நெப்போலியன் தமது செலவைக் குறைத்துக்கொள்ளவேண்டும். அதாவது, திங்கள் ஒன்றுக்கு இருபத்தைந்தாயிரம் ஃபிராங்குகளுக்குமேல் அவர் செலவு செய்யக் கூடாது. அதனைத் தாண்டிச் செய்யப்படும் செலவுத் தொகையை நெப்போலியனே ஏற்றுக்கொள்ளவேண்டும். அதனைக் கேட்ட வுடன் நெப்போலியன் கொதித்தெழுந்தார். அவரும் ஆளுநரும் அதுபற்றிக் கடுமையாக வாதித்தனர். இறுதியில், இலண்டன் அல்லது பாரிஸ் நகரிலுள்ள வங்கி ஒன்றுக்குத் தாம் முத்திரை மடல்களை (Sealed letters) அனுப்பவும், அங்கிருந்து அவைகளைப் பெற்றுக்கொள்ளவும் அனுமதி வழங்கினால் தமக்காகும் செலவு கள் அனைத்தையும் தாமே ஏற்றுக்கொள்வதாக நெப்போலியன் தெரிவித்தார். அத்தகைய முத்திரைமடல்கள் அனைத்தும் பணம் பற்றியதாகவே இருக்குமென்றும் அவர் உறுதி கூறினார். ஆனால், ஆளுநர் லோவ் அதற்கு அனுமதி வழங்க மறுத்ததுடன் உடனடி யாகச் செலவு குறைக்கப்படவேண்டும் என்று கூறிச் சென்றார். போனபார்ட்டும் வேறுவழியின்றி செலவைக் குறைத்து சிக்கன நடவடிக்கைகளை மேற்கொண்டார். ஆறு வேலைக்காரர்களை விலக்கினார் ; உணவும் உடையும் குறைக்கப்பட்டன. இருப்பி னும், திங்கள் ஒன்றுக்கு ஏழாயிரத்தைநூறு ஃபிராங்குகள் செல வாயின. ஐயாயிரம் ஃபிராங்குகளே ஆட்சியாளரால் அனுமதிக் கப்பட்டன. ஆகவே, இரண்டாயிரத்தைநூறு ஃபிராங்குகள் அதிகப்படி செலவாயிற்று. அதிகப்படியான அச் செலவைச் சரிக் கட்டும் வகையில் நெப்போலியன் தம்மிடமுள்ள தங்கத்தட்டுகளை யெல்லாம் விற்க முற்பட்டார். மூன்று திங்களுக்குள்ளாக அவரிட

மிருந்த தங்கத்தட்டுகள் அனைத்தும் விற்கப்பட்டன. உண்ணு வதற்குக் கூடத் தங்கத்தட்டு இல்லாத நிலையில் பேரரசர் பீங்கான் தட்டில் உணவுண்டார். அவர் உள்ளம் வாடியது. அதனைத் தொடர்ந்து அவரது உடலும் சோர்ந்தது. வெளியே சென்று உலாவுவதையும் குதிரைச் சவாரி செய்வதையும் அவர் நிறுத்தி விட்டார். லோவின் கட்டுப்பாடுகளும், காவலும் நாள்தோறும் வளர்ந்து அவரை மேலும் வேதனைக்குள்ளாக்கின.

நெப்போலியனுக்கும் அவரது நண்பர்களுக்கும் மேலும் மேலும் தடைகளையும், காவல் கட்டுகளையும் தீவிரப்படுத்துவதைத் தமது கடமையாகக் கொண்டார் ஆளுநர். ஒருநாள் 'போனபார்ட் நெப்போலியனைப் போன்று நிபந்தனைகளனைத்திற்கும் கட்டுப்பட்டு நாங்களும் நடக்கின்றோம்' என்று எழுதப்பட்ட பத்திரத்தில் கையெழுத்திடுமாறு பேரரசரின் நண்பர்களை ஆளுநர் வற்புறுத்தினர். ஆனால், பேரரசரின் நண்பர்கள் அப் பத்திரத் திலுள்ள போனபார்ட் என்ற சொல்லை நீக்கிவிட்டு 'பேரரசர்' என்ற சொல்லைப்போட்டு, அதில் தங்களது கையொப்பங்களை யுமிட்டு அனுப்பிவைத்தனர். அதனைக்கண்ட ஆளுநர் லோவ் பெரிதும் கோபங்கொண்டார். உடனே அவர்களனைவரையும் நன்னம்பிக்கை முனை (Cape of Good Hope)க்குப் போகும்படி கட்டளையிட்டார். ஆனால், நெப்போலியனது நண்பர்கள் தங்களது பேரரசரை விட்டுப்பிரிந்து செல்ல மனமில்லாது, லோவ் விரும்பியபடியே பத்திரத்தில் கையெழுத்திட்டு அனுப் பினர். இந் நிகழ்ச்சிபற்றி நெப்போலியன் கருத்தறிவிக்கும் போது 'எனதினிய நண்பர்கள் என்னைவிட்டுப் பிரிந்துசெல்ல முடியாத நிலையில் அப் பத்திரத்தில் கையெழுத்திட்டனர். அவர்கள் என்மேல் கொண்டுள்ள அன்பு பெரிதும் பாராட்டத் தக்கது. நான் ஆங்கில ஆட்சியாளர்களால் எந்த அளவிற்குத் தாழ்த்தப்படுகின்றேனே அந்த அளவுக்கு எனது நண்பர்களால் உயர்த்தப்படுகின்றேன். நான் அரசனுக இருந்த நேரத்தில் கூட அவர்கள் என்னை இவ்வளவு அன்புடன் நடாத்தியதில்லை' என்று குறிப்பிட்டுள்ளார். நெப்போலியனும் அவரது நண்பர் களும் செயின்ட் கெலினுவில் படும் அவதிகளை அகிலத்தின் கண்களின்முன் வைக்கும்பொருட்டு லாஸ்கேசஸ் ஆங்கிலநாட்டு அம்மையார் கிளேவரிங் (Lady Claverring) என்பவருக்கு மடல் ஒன்று எழுதி அனுப்பினுர். அதனை அறிந்த ஆளுநர் லோவ் அவரைச் சிறைப்படுத்தினுர். தமது உற்ற நண்பர் லாஸ்கேசஸ் சிறைப்பட்டதை அறிந்த பேரரசர் உள்ளம் வெதும்பினுர். அவருக்குக் கீழ்க்கண்ட மடல் ஒன்றை வரைந்து அவர் மன ஆறுதல் பெற்ருர் :

'எனதருமை லாஸ்கேசஸ்! தாங்கள் சிறையில் படுகின்ற அவதியை நான் எண்ணி இங்கு வேதனைப்படுகின்றேன். கடந்த பதினைந்து நாட்களாக எவ்விதத் தொடர்பும் கொள்ள இயலாதவாறு என்னிடமிருந்து பிரிக்கப்பட்டுள்ளீர்கள். நீங்கள் இலண்டனிலுள்ள உங்கள் நண்பருக்கு எழுதிய மடல் நேர்மையானது; நீதியின்பாற்பட்டது. அதில் அரசாங்கத்திற்கு எதிரான சதிகள் இடம் பெற்றிருக்கவில்லை. இருப்பினும், அதனைப் பெருங்குற்றமாகக் கருதியுள்ளனர் ஆட்சியினர். தங்களுடைய காகிதங்களுடன் எனது முக்கிய குறிப்பேடுகள் சிலவற்றையும் எடுத்துச் சென்றுவிட்டனர். உங்களைக் காவல்காரர்கள் அழைத்துச் செல்வதைச் சன்னல்வழியாகப் பார்த்துப் பதறிப்போனேன். உங்களுடைய உதவி எனக்குப் பெரிதும் பயனுள்ளதாக இருந்தது. உங்களால்தான் ஆங்கிலத்தை நன்கு எழுதவும், பேசவும் புரிந்துகொள்ளவும் முடியும். நான் நோய்வாய்ப்பட்டிருந்த நேரத்தில் தாங்கள் எனதருகிலிருந்து எனக்காற்றிய அரும்பணிகளை நான் என் உயிருள்ளவரை மறவேன். விரைவில் இத் தீவைவிட்டு வெளியேற்றி உங்களை வேறுநாடுகளுக்கு ஆட்சியாளர் அனுப்புவர் எனக் கருதுகின்றேன். தாங்கள் இத் தீவை விட்டுச் செல்வதற்குமுன் என்னை வந்து ஒரு முறை பார்ப்பதற்குக்கூட அவர்கள் உங்களை அனுமதிக்கமாட்டார்கள் என்பதை நானறிவேன். இருப்பினும், தாங்கள் இத் தீவை விட்டு வெளியேற்றப்பட்டு நல்ல நாடுகளுக்கு அனுப்பப்படுவது பற்றி அறிந்து ஆறுதல் அடைகின்றேன். தாங்கள் இங்கிலாந்து அல்லது ஃபிரான்சுக்கு செல்ல நேரின், இங்கு எனக்காகத் தாங்கள் பட்டவேதனைகளை மறந்து நம்மிருவருக்குமிடையே நிலவிய நட்பினையும் அன்பினையும் மறவாதிருக்க விழைகின்றேன். தாங்கள் ஐரோப்பாவில் எனதருமை மனைவியையும் மகனையும் சந்திக்க நேர்ந்தால் அவர்களிடம் எனது நிலையை எடுத்துக் கூறுங்கள். கடந்த இரண்டாண்டு காலமாக அவர்களைப் பற்றிய செய்திகள் எனக்குக் கிடைத்தில. ஐரோப்பாவிலுள்ள நமது நண்பர்கள் அனைவருக்கும் எனது நன்றி கலந்த வணக்கத்தை நவிலுங்கள். இங்கு ஆளுநர் லோவ் என்னைப் பலவகையிலும் கொடுமைப் படுத்துகின்றான். நான் இங்கு பட்டுக்கொண்டிருக்கின்ற துன்பங்களுக்கு விரைவில் முடிவு ஏற்படும் எனக் கருதுகின்றேன். உங்களுக்கு நான் எனது நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். நீங்கள் நீடித்த மகிழ்ச்சியுடனிருக்க விழைகின்றேன்'.

இலாங்வுட்,
டிசம்பர் 11. 1816

தங்களன்புள்ள,
நெப்போலியன்

1816ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 30ஆம் நாள் லாஸ் கேசஸ், செயின்ட் கெலினவிலிருந்து வெளியேற்றப்பட்டார். அவர் கடைசியாக ஒரு முறை தமது இதயத்தை வென்ற பேரரசரைக் காணத் துடித்தார். ஆனல், இரக்கமற்ற அரக்கனை ஆளுநர் லோவ் அனுமதி மறுத்தான். ஆகவே, நெஞ்சில் பேரரசரின் உருவத்தை நிலையாகப் பதித்து கண்களில் நீர் பெருக, இதயத்தில் ஏக்கம் கிளம்பிய நிலையில் அவர் அத் தீவை விட்டுக் கிளம்பினர். அவர் சென்றுவிட்ட செய்தி நெப்போலியனை எட்டியது. உடனே, அவர் வேதனையின் விளிம்பில் நின்று கலங்கினர். வெளியில் வராது அறைக்குள்ளேயே முடங்கிக் கிடந்து புலம்பினர்.

இந் நிலையில், ஒரு நாள் ஜெர்மனி நாட்டுச் செடிகொடிச் சித்தர் (Botanist) ஒருவர் அத் தீவிற்கு வருகைதந்தார். பேரரசர் நெப்போலியனின் மனைவியையும் மகனையும் கண்டுபேசி வந்தவர் அத் தாவர இயல் வல்லுநர் என்பதனை அறிந்த நெப்போலியன் மிக்க ஆவலுடன் அவரைக் கண்டு பேச விரும்பினர். அதற்கான அனுமதி வழங்கும்படி ஆளுநரை வேண்டினர். ஆனல், அனுமதி மறுக்கப்பட்டது. அதுபற்றி மருத்துவர் 'ஓ' மியாராவிடம் கருத்தறிவிக்கையில் போனபார்ட், 'ஆருயிர் மனைவியையும் அருமை மகனையும் பிரிந்து ஆயுள்கைதியாக நான் இங்கு அவதிப்பட்டுக்கொண்டிருக்கின்றேன். ஆயினும், அண்மையில் அவர்களைக் கண்டு பேசி இங்கு வந்துள்ள ஒருவரிடம் நான் சிறிது நேரம் பேசுவதற்கும் எனக்கு அனுமதி அளிக்கப்படவில்லை. கொலைவெறி மிக்க காட்டுமிராண்டிகள் கூட இத்தகைய கொடுமையைச் செய்யத் துணியமாட்டார்கள். அவர்களையும் மிஞ்சிவிட்டார் ஆளுநர் லோவ். மரணதண்டனை விதிக்கப்பட்டவர்கள்கூட தண்டனை நிறைவு பெறுவதற்கு முன்பு தங்கள் மனைவி மக்களைக் கண்டு மனநிம்மதியுடன் சாக அனுமதிக்கப்படுகின்றனர். மனிதர்களைக் கொன்றுதின்னும் இதயமற்ற அரக்கர்கள்கூட இரையாகக் கிடைத்த மனிதர்களைக் கொல்லுவதற்கு முன் அவர்களுடன் இனிமையாகப் பேசி, இறுதியாசைகளை நிறைவேற்றியபின் அவர்களைச் சாகடித்துச் சாப்பிடுகின்றனர். ஆனல், ஆங்கிலேயரின் பிரதிநிதியான ஆளுநர் லோவின் செயல் அறநெறிக்கு அப்பாற்பட்டது ; கொடுமையும் கொடூரமும் நிறைந்தது ; அவரது நெஞ்சில் ஈரமில்லை ; இதயம் இரும்பைவிடக் கடினமானது என்று உள்ளம் நொந்து கூறினர்.

நாளடைவில், இலாங்வுட் விடுதி மனித வாழ்க்கைக்குரிய தகுதியை இழந்தது. எலிகளின் ஏற்றமிகு இருப்பிடமாக அது மாறியது. எலிகளின் தொல்லை அதிகரித்தது. அதன் விளைவாக நெப்போலியன் இரவில் தூக்கமின்றித் தவித்தார். ஓட்டைக்

கூரைகளின் வழியாக மழைநீர் வந்து நெப்போலியனே வாட்டியது. இரவு நேரங்களில் அவர் அதன் விளைவாக அடிக்கடி படுக்கையை இடமாற்றம் செய்யவேண்டியதாயிற்று. தூக்கமின்மையால் நோய்கள் பல அவரை நாடிவந்தன. விலாவலி, வயிற்றுவலி, கால்வீக்கம் ஆகியவை நெப்போலியனின் நெருங்கிய உறவினர்களாயின. இந்நிலையில் நெப்போலியனுக்கு ஆறுதல் கூறி ஆதரவுடனிருந்த மருத்துவர் ஓ' மியராவும் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையில் தள்ளப்பட்டார். போனபார்ட்டிற்குத் தேவையான இரகசிய செய்திகளையெல்லாம் அவர் சேகரித்து வருவதாக மருத்துவர்மீது குற்றம் சாட்டப்பட்டது. ஆனல், மருத்துவரைச் சிறையில் தள்ளியதை எதிர்த்து மக்கள் கிளர்ந்தெழுந்தனர். ஆகவே, அவர் விரைவில் விடுதலை செய்யப்பட்டார். ஆனல், சில நாள் கழிந்தபின் மருத்துவர் ஓ'மியரா அத் தீவினைவிட்டு வெளியேறும்படி ஆணை பிறப்பிக்கப்பட்டது. மருத்துவர் மிக்க வேதனையுடன் நெப்போலியனிடம் நடந்ததை விளக்கி விடை கேட்டுநின்ருர். அவரது வாடிய முகத்தையும், தேம்பிய நிலையினையும் கண்ட நெப்போலியன் 'அருமை மருத்துவர் அவர்களே! நீங்களுமா என்னை விட்டுப் பிரிந்து செல்லப்போகிறீர்கள்? நீங்கள் எனக்கு உற்ற துணையாக உதவிகள் பல புரிந்தீர்கள். உங்களைப் பிரிந்தபின் நான் நெடுநாள் உயிருடன் இருக்கமாட்டேன். ஆனல், விரைவில் எனக்கேற்படும் சாவு உங்களது தாய் நாடான இங்கிலாந்தின் மீது தீராத பழியினைச் சுமத்தும். நீங்கள் ஐரோப்பா சென்று எனது குடும்பத்தினரைக் கண்டு அவர்களிடம் எனது அன்பை வெளிப்படுத்துங்கள்; எனதருமைத் தாயைக் காணநேரின் அவருக்கு என் வணக்கத்தைக் கூறுங்கள்; எனதருமைத் தங்கை பாலினைக் கண்டால் அவளுக்கு என் வாழ்த்துகளை நல்குங்கள். எனது உயிரினு மினிய மகனைக் கண்டால், என்னுடைய சார்பில் அவனைக் கட்டித்தழுவி உற்சாகப் படுத்துங்கள். அவன் ஃபிரெஞ்சுப் பெருநாட்டின் இளவரசனுகப் பிறந்தான் என்பதை அவனுக்கு நினைவுபடுத்துங்கள். அவனுக்கு எத்தகைய கல்வி புகட்டப்படுகின்றது என்பது பற்றிய செய்திகளை எனக்குத் தெரியப்படுத்துங்கள். நாமிருவரும் இனிச் சந்திக்கப் போவதில்லை; மகிழ்ச்சியுடன் சென்றுவாருங்கள். வணக்கம்' எனக்கூறி கண்களில் நீரினைத் தேக்கி வெடிக்கும் நிலையிலுள்ள இதயத்தில் வேதனையைத் தாங்கி விடைகொடுத்து அனுப்பினர்.

மருத்துவர் ஓ'மியரா ஐரோப்பா சென்றபின் பேரரசரின் உடல் நிலை கவலைக்கிடமாயிற்று. நோயின் கடுமையால் அவர் சில வேளைகளில் பெரிதும் துன்பப்பட்டார். படுக்கையைவிட்டு எழுந்திருக்கக் கூட இயலாதவாறு அவரது உடல் இளைத்துவிட்டது. அவரது

நிலையறிந்த ஆங்கில ஆட்சியாளர் அவருக்கு சிகிச்சை அளிக்கும் வகையில் ஆண்டோமார்க்கி (Antommarchi) என்ற ஃபிரெஞ்சு மருத்துவர் ஒருவரை செயின்ட் கெலினுவுக்கு அனுப்பி வைத்தனர். கெலினு வந்தடைந்த ஃபிரெஞ்சு மருத்துவர் நெப்போலியனது உடல் நிலைகண்டு பெரிதும் வருந்தினர். அவருக்குத் தேவையான சிகிச்சைகள் அனைத்தும் உடனடியாக மேற்கொள்ளப்பட்டன. இருப்பினும், அவரது உடல் இளைத்துக் கொண்டே வந்தது. ஆகவே, மருத்துவர் ஆண்டோமார்க்கி மண்வெட்டியைக் கையிலெடுத்துத் தோட்டவேலை செய்யும்படி போனபார்ட்டைக் கேட்டுக்கொண்டார். நெப்போலியனும் அவரது ஆலோசனைப்படி தோட்டவேலையில் ஈடுபட்டார். முதல் நாள் மருத்துவரும் அவருக்கருகிலிருந்து தோட்டவேலையில் ஈடுபட்ட நெப்போலியனைப் பாராட்டி ஊக்குவித்தார். அன்று உடலில் வலுவற்ற காரணத்தால் சிறிது நேரம் வேலை செய்த பின் களைப்பின் மிகுதியால் ஓய்வெடுத்தார். அடுத்தடுத்துத் தோட்டவேலையில் இறங்கி ஆர்வத்துடன் செய்தார். அதன் பயனாக அவரது உடலும் தேறியது; உள்ளத்தில் மகிழ்ச்சியும் பிறந்தது; தோட்டவேலையில் பற்றும் உண்டாயிற்று. விரைவில் வீட்டைச் சுற்றி நிழல்தரும் மரங்களை நட்டார். பட்டாணி, அவரை போன்ற பயிர் வகைகளும் அங்கு பயிரிடப்பட்டன. விதை முளைத்து பயிராக வளர்வதைக்கண்ட நெப்போலியன் உள்ளம் பூரித்தார். தமது உற்ற தோழர்களாக அவைகளைக் கண்காணித்து வந்தார். செடி கொடிகளை வளர்ப்பதில் நாட்டங்கொண்ட போனபார்ட் விரைவில் மீன்வளர்ப்பிலும் ஈடுபட்டார். தமது தோட்டத்தில் பெரிய நீர்த்தொட்டி ஒன்றினை அமைத்து அதில் தண்ணீரை நிரப்பி மீன்களை வளர்த்து வந்தார். அத் தொட்டியில் நீந்திவரும் மீன்களுடன் அளவளாவி மகிழ்ந்தார்.

இதற்கிடையில், ஒருநாள் நூல்கள் நிறைந்த பெட்டிகள் பல வந்திறங்கின. அவற்றை ஆர்வத்துடன் உடைத்தார் நெப்போலியன். அதுபோழ்து, நூல்களுக்கிடையே வைக்கப்பட்டிருந்த படம் ஒன்று அங்கு காணப்பட்டது. அதனை எடுத்து உற்றுப்பார்த்தார் பேரரசர். அது தமது மகனின் உருவப்படம் என்பதனை அறிந்து பெரிதும் உவகைகொண்டார்; அப் படத்தினை மார்புறத் தழுவினர்; முத்தமாரி பொழிந்தார். பின்பு அப் படத்தினை மரியலூயிசாவின் படத்தருகே மாட்டிவைத்தார். அன்றியும், அப் படங்களின் இருபுறங்களிலும் ஜோசபைனின் உருவப்படங்களையும் மாட்டிவைத்து மகிழ்ச்சியில் மிதந்தார். அப் படங்களைக் கண்களைப்போன்று காத்துக் களிப்பெய்தினர்.

அடுத்தொருநாள், போனபார்ட் தமது குதிரை மீதேறி டெட்வுட் (Deadwood) பகுதிப்பக்கம் சென்ருர். அங்குள்ள குன்றின் மீதேறி தமது தொலைநோக்காடியால் அப் பகுதியை ஆய்ந்து பார்த்து விட்டு அதிவேகமாகக் குதிரையில் திரும்பி வந்தார். அதனைக் கண்ட ஆளுநர் லோவ் அச்சத்தால் கலங்கினர். அடுத்து என்ன நடக்குமோ என்று ஏங்கினர். மீண்டும் நெப்போலியன் தப்பிச் செல்ல முயற்சிகளை மேற்கொண்டுள்ளார் என்று கருதி காவலைப் பலப்படுத்தினர். நெப்போலியனை அடிக்கடி கண்காணித்து வந் தார். இருப்பினும், லோவின் முகம் கவலையால் கருத்தது. அதனைக் கண்ட போனபார்ட் ஒரு சூழ்ச்சி செய்தார். தமது உடையினையும் தொப்பியினையும் அணிந்து தமது தொலைநோக் காடியுடன் குதிரையிலேறி விரைவாக டெட்வுட் பகுதி நோக் கிச் செல்லும்படி தனது நெருங்கிய நண்பரான விக்மாலி (Vigmoli) என்பவரைக் கேட்டுக்கொண்டார். அவரும் போன பார்ட்டின் விருப்பப்படியே குதிரைமீது அமர்ந்து விரைந்து சென் ருர். காவலர் உடனே செய்தி அனுப்பினர் ஆளுநர் லோவுக்கு. அவர் உடனடியாகத் தம் காவற் படையுடன் அங்கு விரைந் தார். டெட்வுட் பகுதி சென்று திரும்பிய வேளையில் அவரைப் பிடித்து உற்றுநோக்கினர். அவர் போனபார்ட் அல்ல ; அவரது உடையில் இருந்த விக்மாலி என்பது அறிந்து வெட்கித் தலை குனிந்து நின்ருர். அதனைக் கண்ட போனபார்ட் 'பாவம் ஆளுநர் லோவ் ; அவனைப் பெரிதும் ஏமாற்றி விட்டேன்' என்று கூறி உடல் குலுங்கச் சிரித்தார்.

1820ஆம் ஆண்டு, ஜுலைத் திங்கள், 26ஆம் நாள் மாலை தமது அறையிலுள்ள சோபாவில் போனபார்ட் சாய்ந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார். அதுபோழ்து, அவருக்கு உரோ மாபுரியிலுள்ள தமது அன்னையின் நினைவு தோன்றி அவரைப் பெரிதும் வாட்டியது. இளமைப் பருவத்தில் அன்னையின் அர வணைப்பில், அன்பில், பரிவில், பற்றில் தாம் திளைத்திருந்ததை யெல்லாம் எண்ணிக் கதறினர். 'அம்மா', 'அம்மா' என்று பல முறை உரத்த குரலில் கூவினர். அடுத்து, முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு ஆழ்ந்த துக்கத்தில் மூழ்கினர். அடுத்த சில நாட் களில் மீண்டும் சோர்வும், களைப்பும், கவலையும் நீங்கிக் கலகலப் பாகக் காணப்பட்டார். ஜுலைத் திங்கள் இருபத்தேழாம் நாள் மாலை அவர் தம் இருப்பிடம் திரும்பிக்கொண்டிருந்த போழ்து அவரது இனிய நண்பர் பெர்ட்ரண்டின் மகள் ஆர்ட்டன்ஸ் (Hortense) என்ற அழகிய சிறுமியை அணைத்துத் தூக்கிக் கொஞ் சினர். தம்மிடமிருந்த இரண்டு நேர்த்தியான பவளக் காதணி களை அவளுக்கு அணிவித்து அழகு பார்க்க விரும்பினர். உடனே,

மருத்துவர் ஆண்டோமார்க்கியும் வரவழைக்கப்பட்டார். அருகி லுள்ள ஓக் மரத்தடியில் அமர்ந்து அச் சிறுமியின் காதுகளில் துளைபோட்டு அக் காதணிகளை மாட்டும் வேலை தொடர்ந்தது. அதனை அருகிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தான் பெர்ட்ரண்டின் மகன் ஆர்தர் என்ற சிறுவன். தனது தங்கையைக் கொடுமைப் படுத்துகிறார்கள் அக் கொடியவர்கள் என்று கருதி, அச் சிறுவன் அவர்களைத் தாக்கும் பொருட்டுக் கையை ஓங்கியபடி சென்றான். அதனைக் கண்ட நெப்போலியன், 'அடே! சிறு போக்கிரிப்பயலே! அமைதியாயிரு; இல்லையேல் உனது காதுகளிலும் துளைபோட்டு விடுவோம்' என்று கூறிஅவனைத் தடுத்தார். அடுத்து, அச் சிறு மியின் காதுகளில் பவள அணிகளை மாட்டி அனுப்பிவிட்டு, அச் சிறுவனை அழைத்து அவனது துணிச்சலையும், வீரத்தையும் பாராட் டினார் பேரரசர்.

அடுத்த சில நாட்களில் போனபார்ட் மீண்டும் நோய்வாய்ப் பட்டார். கடுமையான வயிற்றுவலி அவரை வாட்டியது. அவர் பட்ட வேதனை கொஞ்சநஞ்சமல்ல. படுக்கையை விட்டு எழுவ தற்குரிய வலிவினையும் இழந்து அவர் தவித்தார். மருத்துவர் ஆண்டோமார்க்கியும் அவர் அருகிலிருந்து சிகிச்சை அளித்து வந்தார். அதுபோழ்து, போனபார்ட் மருத்துவரைப் பார்த்து, 'அருமை நண்பரே! படுக்கையைவிட்டு எழுந்திருக்க என்னால் இயலவில்லை. இப் படுக்கையே எனக்கு அறுதல் தருவதாகவுள் ளது. உலகத்திலுள்ள மணி மகுடங்களையெல்லாம் எனக்களிக்க முன்வந்தாலும் உற்ற துணையாகவுள்ள இப் படுக்கையை விட்டுப் பிரிந்து செல்லமாட்டேன். என் வாழ்வில் நான் பெற்ற தலை கீழ் மாற்றங்களை எண்ணிப்பார்க்கும் வேளையில் என் இதயம் வேதனையால் விம்முகின்றது. அன்று தளராத ஊக்கத்துடனும், உள்ள உறுதியுடனும் அயராது உழைத்த நான் இன்று கண் களைத் திறந்துபார்க்கும் ஆற்றலை இழந்து அவதிக்குள்ளானேன். அன்று களங்கள் பலவற்றைக் கண்டேன்; வெற்றிகள் பலவற் றைப்பெற்றேன்; மணிமுடிகள் பலவற்றைச் சூடிநின்றேன்; ஃபிரெஞ்சு மக்களின் நலத்தைக் கருதி அல்லும் பகலும் அய ராது உழைக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தேன்; ஆனால், இன்றோ ஆற்றல் அனைத்தையும் இழந்து அசைவற்ற பிணம்போலானேன்; எனது வலிவும் உறுதியும், ஆற்றலும், துணிவும் மறைந்தொழிந்து கொண்டன' என்று வேதனையின் விளிம்பில் நின்று புலம்பினார். இந் நிலையில் அவரது தங்கை எலிசா இறந்த செய்தியும் அவரது வெந்த உள்ளத்தில் வேல்கொண்டு தாக்கியது. நீண்ட நேரம் படுக்கையில் அமர்ந்தபடி, நிலத்தையும், மருத்துவரையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தார். பின்பு மருத்துவரைப்

பார்த்து 'ஐயா, எனதருமைத் தங்கை இறந்துவிட்டாள். இனி அவளைத் தொடர்ந்து நானும் செல்லவிருக்கின்றேன். என்னைக் காப்பாற்ற எத்தகைய சிகிச்சை அளித்தாலும் நான் இனி பிழைக்கமாட்டேன். நான் உள்ளம் நொந்து, உருக்குலைந்து உறுதியற்ற நிலையில் செத்துக்கொண்டிருக்கின்ற இந் நேரத்தி லும் ஐரோப்பா என்னைக்கண்டு அஞ்சுகின்றது' என்று கூறினர்.

1821ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 2ஆம் நாள் இங்கிலாந்து அரசினர் வசதியான வீடு ஒன்றினைக்கட்டி முடித்து போன பார்ட்டை அங்கு குடியேறும்படி கேட்டுக்கொண்டனர். எலித் தொல்லைமிக்க இலாங்வுட் இல்லத்திலிருந்து உடனடியாக நெப் போலியன் புதுவீட்டிற்குச் செல்லவேண்டுமென்று ஆளுநரின் தனி மருத்துவர் ஆர்நாட் (Arnott) வற்புறுத்தினர். ஏப்ரல் திங்கள் ஆறும் நாள், அவரது நிலை மேலும் மோசமாயிற்று. போனபார்ட் முகச்சவரம் (Shaving) செய்து இருபது நாட்களுக்கு மேலாயின, தாடியும் மீசையுமாகக் காணப்பட்டார் அவர். ஆகவே, அவரது மருத்துவர் அவரைச் சவரம் செய்து கொள்ளும்படி வேண்டினர். சிரைப்பவர் ஒருவரை அழைத்து அவருக்குச் சவரம் செய்யும்படி கேட்டுக்கொண்டார் மருத்துவர். ஆனல், நெப்போலியன் சவரம் செய்துகொள்ள மறுத்துவிட்டார். ஆனல், டாக்டரும் விடாது அவரைச் சவரம் செய்துகொள்ளும்படி வற்புறுத்தினர். போன பார்ட்டும் இறுதியில் அதற்கு ஒத்துக்கொண்டார். உடனே, ஆண்டோமார்க்கி சவரத்தொழிலாளி (Barber) ஒருவரை அழைத்து வரும்படி ஆள் அனுப்பினர். அதனைக்கண்ட நெப்போலியன் மருத்துவரைப் பார்த்து 'ஐயா, நான் எப்போதும் நானகவே முகச் சவரம் செய்துகொள்வேன்; இதுவரை நான் எவரையும் என் முகத்தில் கைவைக்கும்படி அனுமதித்ததில்லை. இப்போது நானக வே முகச்சவரம் செய்துகொள்ளும் வலிவினைப் பெற்றிருக்கவில்லை. ஆகவே, மருத்துவர் என்ற முறையில் நீங்கள் வேண்டுமானல் என் முகத்தைத் தொட்டு மழித்துவிடுங்கள்' என்று கூறினர். அதனைக் கேட்ட ஆண்டோமார்க்கி திடுக்கிட்டு, தான் சவரத்தொழிலில் பழக்கமில்லாதவன் என்று கூறி அத் தொழிலில் பயிற்சி பெற்ற ஒருவரை நெப்போலியனுக்குச் சவரம் செய்ய ஏவினர். ஆனல், போனபார்ட் அதற்கு இசைந்து சவரம் செய்ய மறுத்துவிட்டார். இருப்பினும், அடுத்தநாள் அவர் சிறிது நலம் பெற்று உற்சாகத் துடன் காணப்பட்டார். ஆகவே, அவர் படுக்கையை விட்டெ ழுந்து, தாமாகவே முகச்சவரம் செய்துகொண்டு நேர்த்தியாக உடை அணிந்து சாய்வு நாற்காலியில் அமர்ந்து செய்தித்தாட் களைப் புரட்டத் தொடங்கினர்.

இருப்பினும், அவரது உடல் நிலை, நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டேயிருந்தது. சாவு நெருங்கி வந்துகொண்டிருக்கின்றது என்பதை அறிந்த நெப்போலியன் 1821ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பதினைந்தாம் நாள் தமது வாழ்விறுதி விருப்ப ஆவணத்தை (Will) எழுதிமுடித்தார். அது பின்வருமாறு :—

(1) 'கடந்த ஐம்பதாண்டுகளுக்கு முன் உரோமானியத் திருத்தூதர்களுக்குரிய சமயத்தில் (Apostolical Roman Religion) பிறந்த நான் இன்று அச் சமயத்தைச் சார்ந்த ஒருவனாகவே இறக்கின்றேன்.'

(2) 'நான் பெரிதும் அன்பு பாராட்டிய ஃபிரெஞ்சு மக்களிடையே, சீன் (Siene) நதிக்கரையில் எனது உடல் புதைக்கப்படல் வேண்டும்.'

(3) 'எனதருமை மனைவி மரியலூயிசாவிடம் நான் என்றும் மாறாத அன்பு கொண்டுள்ளேன். நான் இறக்கும் வரை அவளை என் இதயத்தில் ஏற்றிவைத்து அன்புடன் போற்றிக்கொண்டிருக்கின்றேன். இளமைப் பருவத்திலிருக்கின்ற எனதருமை மகனை எதிரிகளின் வஞ்சக வலையில் விழுந்து விடாதபடி காக்குமாறு அவளை விரும்பி வேண்டிக்கேட்டுக்கொள்ளுகின்றேன்.

(4) 'தான் ஒரு ஃபிரெஞ்சு இளவரசனாகப் பிறந்தவன் என்பதை எனது மகன் என்றென்றும் நினைவிற் கொள்ளவேண்டும் என்றும், ஐரோப்பிய தேசிய நாடுகளின் சுதந்திரத்தைப் பறித்த வல்லரசுக்கொடியவர்களின் பிடியில் அவன் சிக்காதிருக்க வேண்டும் என்றும் நான் எனதருமை மகனுக்குப் பரிந்துரை செய்கின்றேன். அவன் ஃபிரான்சு நாட்டிற்கெதிராகப் போர் மேற்கொள்ளவோ, ஃபிரான்சை அலைக்கழிக்கின்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளவோ கூடாது. 'ஆற்றுகின்ற ஒவ்வொரு பணியும் ஃபிரெஞ்சு மக்களுக்காகவே' என்ற எனது பொன்மொழியை கடைப்பிடிக்கும்படி அவனை வேண்டுகின்றேன்.

(5) 'உயிரிழந்த எனது உற்ற தோழர்களின் மனைவியருக்கும் உயிருடனிருக்கும் எனதருமை நண்பர்களுக்கும் திரண்ட பொருள் கொடுத்துக் காக்கும்படி வேண்டுகின்றேன்.'

ஏப்ரல் திங்கள் பதினேழாம் நாள் மாலை மூன்று மணியளவில் மோன்தோலன் பெருமகனை (Count Montholon) அழைத்து வரும்படி கூறினார் போனபார்ட். அன்று அவர் மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டார். அவர் முகத்தில் களை தட்டியது ; அவரது

கண்கள் ஒளி வீசித் திகழ்ந்தன. மோன்தோலன் பெருமகனும் வந்துசேர்ந்தார். உடனே, போனபார்ட் உள்ளச்சுமை குறைந்த நிலையில் உற்சாகத்துடன் தமதருமை மகனுக்கான சில அறவுரைகளையும் அறிவுரைகளையும் கூறினர். அதனை போனபார்ட் சொல்லச்சொல்ல மோன்தோலன் பெருமகன் எழுதி முடித்தார். அதன் சாரம் பின்வருமாறு :—

'எனது மரணத்திற்குக் காரணமானவர்களைப் பழிவாங்கும் எண்ணத்தை என் மகன் கொள்ளக்கூடாது. எனது சாவின்மூலம் அவன் பயன்பெறவேண்டும். நான் என்ன செய்தேன் என்பதை அவன் எப்போதும் நினைவிற் கொள்ளவேண்டும். என்னைப் போலவே அவன் என்றென்றும் ஒவ்வொரு அணுஅணுவாக உண்மையான ஃபிரெஞ்சுக்காரனகத் திகழவேண்டும். அமைதி வழியில் ஆட்சி நடாத்த அவன் முயற்சியினை மேற்கொள்ள வேண்டும். அவசியமின்றி என்மீதுள்ள அன்பின் காரணமாக, என்னைப் பின்பற்றிப் போரினை மேற்கொண்டால், அவன் என்னைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றிய பழிக்கு ஆளாவான். ஃபிரெஞ்சுப் புரட்சி நசுக்கப்படவிருந்த வேளையில் நான் அதனைத் தடுத்துக் காத்தேன். அதனை அழிவிலிருந்து மீட்டேன் ; புரட்சிக் கருத்துகள் பூபாகம் முழுதும் ஒளிவிட்டுத் திகழும்படி செய்தேன். புதிய கருத்துகளை ஃபிரான்சிலும், ஐரோப்பாவிலும் தூவியுள்ளேன். அவைகள் சீர்கெட்டுப் போகக்கூடாது. நான் விதைத்த விதைகள் ஃபிரான்சில் முளைவிட்டு, பயிராகி, செடியாகி, மரமாகி, பூத்து, காய்த்து, கனிதரும் வகையில் அவற்றைப் பேணிப் பாதுகாக்க வேண்டும். ஃபிரான்சின் பல்துறை வளப்பத்தினையும் விரிவுபடுத்தி அதன் மூலம் அவன் சிறந்த பேரரசனக விளங்கவேண்டும்.

இப்போது ஃபிரான்சின் ஆட்சிப் பொறுப்பிலுள்ள போர்போன் அரச குலத்தவர் எனது சாவுக்குப்பின் ஃபிரான்சில் தொடர்ந்து ஆட்சிபுரியும் ஆற்றலை இழப்பர். நான் இறந்தபின் இங்கிலாந்து உட்பட, ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளில் என் சார்பாகக் கிளர்ச்சிகள் தோன்றும். இங்கிலாந்து எனக்கு இழைத்த கொடுமைக்கு ஈடுசெய்யும் வகையில் இங்கிலாந்து மக்கள் எனது மகன் ஃபிரான்சுக்குத் திரும்பி வருவதற்கான ஏற்பாடுகளை மேற்கொள்வர். இங்கிலாந்துடன் நட்புறவு கொண்டு அதன் வணிக நலன்களுக்கு ஆதரவாக என் மகன் நடந்து கொள்ளவேண்டும். வியன்னுவிலுள்ள எனது மகனின் நிலை வருந்தத்தக்கதாகும். ஆஸ்திரியா அவனுக்கு நிபந்தனையற்ற உரிமை வழங்குமா ? அந்நியர் செல்வாக்கைப் பயன்படுத்தி என் மகன் ஃபிரான்சின் அரியணையில் அமர்தல் விரும்பத்தக்கதல்ல. ஆட்சியில் அமரவேண்டுமென்ற ஆசையை நிறைவேற்றுவதை அவன்

நோக்கமாகக் கொள்ளக்கூடாது ; ஆனுல், அரச வழித்தோன்றல் களின் அங்கீகரிக்கப்பட்ட உரிமை எனக் கொள்ளவேண்டும். எனது குடும்பத்தினரை நன்கு போற்றிப் பாதுகாக்கவேண்டும். என தருமை தாயார் பழைமையில் ஊறிப்போனவள் ; ஜோசப், ஈஜின் ஆகியோர் எனது மகனுக்கு நல்லாலோசனைகள் வழங்கக்கூடும். ஆர்ட்டன்சும், கரோலினும் பண்புமிக்க பாவையர். அவன் தனது தாயகத்தைத் துறந்து வாழும் நிலையில் நீடித்தால் எனது மருமக்களில் ஒருத்தியை மணமுடித்துக் கொள்ளவேண்டும். ஃபிரான்சு அவனைத் திருப்பி அழைத்துக்கொள்ளுமேயானுல் அவன் இரஷ்ய நாட்டு இளவரசியை மணமுடித்துக்கொள்ள வேண்டும். அவன் செய்துகொள்ளுகின்ற மண உறவின் மூல மாக ஃபிரான்சின் செல்வாக்கு வெளிநாடுகளில் சிறந்து விளங்க வேண்டும் ; ஆனுல், அந்நிய நாட்டுச் செல்வாக்கு ஃபிரான்சில் இடம்பெற்றுவிடாதபடி பார்த்துக்கொள்ளவேண்டும்.

ஃபிரான்சில் என் மகன் அஞ்சத்தக்க வகையிலுள்ளது ஆர்லி யன்ஸ் கோமகனின் கட்சி. அது நீண்ட நாட்களாக ஃபிரான் சில் வேரூன்றியுள்ளது. ஃபிரான்சிலுள்ள கட்சிகளனைத்தையும் இழிவாகக் கருதி ஒதுக்கிவிட்டு மக்களைச் சார்ந்து அவர்களது ஆதரவைப் பெற முன்வரவேண்டும். நாட்டைக் காட்டிக்கொ டுத்த கயவர்களைத் தவிர ஏனையோரின் முந்தைய நடவடிக்கை களையெல்லாம் மறந்து அவர்களது தகுதி, திறமை, ஆற்றல், பணி ஆகியவைகளுக்கு மதிப்பளித்து அவர்களை நாட்டு நலனுக் குப் பயன் படுத்த முன்வரவேண்டும்.

செல்வாக்கில்லாத, அரசியல் கட்சிகளின், தலைவர்களைக் கொண்டுள்ள நாடு ஃபிரான்சு. அவர்களை நம்பி ஆதரவு தேட முயல்வது மணல் வீடுகட்டுவது போலாகும். மக்களின் மாருத அன்பினையும் ஆதரவையும் பெற்றே அங்கு மகத்தான சாதனை களைச் செய்திடல் இயலும். ஃபிரான்சில் எத்தகைய அரசியல மைப்பு நடைமுறையில் இருப்பினும் போர்போன் மன்னர்கள், பிரபுக்கள், மடாதிபதிகள் ஆகியோரின் ஆதரவையே நாடித் திரிவர். ஆனுல், நான் ஆட்சி புரிந்த நேரத்தில் சாமான்ய மக்களின் ஆதரவையே நாடிப்பெற்றேன். மக்கள் அனைவரின் நலன்களையும் காத்துநிற்கும் ஒரு முன்மாதிரி அரசாங்கத்தை நான் உருவாக்கியிருந்தேன். பிரபுக்கள், சமயவாதிகள், பெருங் குடியினர், வணிகக்கோமான்கள் ஆகியோரின் ஆதரவினைப் பெற்று அவர்களது நலனுக்காக நான் ஆட்சியை அமைத்திருக்க வில்லை ; மாருக மக்கள் அனைவருடைய அன்பையும் ஆதரவை யும் பெற்று அவர்களின் நலனுக்காகவே ஆட்சியை அமைத்துக் கொண்டேன். நான் விரும்பியதற்கு அதிகமாகவே ஃபிரெஞ்சு

மக்கள் எனக்கு அதிகாரங்களை அளித்திருந்தனர். ஆனால், இன்றைய நிலையில் அவசியமான அதிகாரங்கள் மட்டுமே மன்னனிடம் இருக்கவேண்டும். உரிமைகளுக்கான ஆர்வமும் ஆசையும் மக்களிடம் உருவாவதை அவன் முன் கூட்டியே அறியவேண்டும். நெருக்கடி இல்லாத காலங்களில் சட்ட மன்றங்களின் துணை கொண்டு நாட்டை ஆளுவது எளிது. சட்ட மன்றங்களில் பெரும்பான்மை உறுப்பினர்களின் ஆதரவு மட்டும் இருந்தால் போதும். சிக்கலான பிரச்சனைகளைக்கூட எளிதில் தீர்த்து விடலாம். ஆனால், சட்ட மன்ற பெரும்பான்மை என்ற பெயரில் நாட்டின் ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் சீர்குலைத்தல் கூடாது.

‘ஃபிரெஞ்சுச் சட்ட மன்றத்தில் நாவன்மை படைத்த அறிஞர்கள் பலர் உள்ளனர். அவர்கள் வாதத்திறமையில் வல்லுநர்கள்; அடுக்கடுக்காக சொற்களைப் போட்டு அடுத்தவர் வியக்கும் வண்ணம் பேசும் ஆற்றல் மிக்கவர்கள் அவர்கள்; சொற்களைத் தேடி அவர்கள் அலைவதில்லை; சொற்கள் அவர்களைத் தேடிவரும். அத்தகைய சொல்லாற்றல் மிக்கவர்களைச் சொல்லாற்றல் மூலம் தோற்கடிக்க முனைதல் கூடாது. அவர்களிடம் நயமாகவும், இலாவகமாகவும் பேசி, நடைமுறைச் சிக்கல்களைத் தெளிவு படுத்தி அவர்களை வசப்படுத்த முன்வரவேண்டும். நடைமுறை நிலைகளை நன்குணர்ந்து நாட்டின் சிக்கல்களை எளிதில் தீர்க்கும் வலிவினைப் பெற்றவர்களும் அங்குளர். அவர்களது ஆதரவினையும் பெற அவன் முன்வரவேண்டும். மக்கள் நலனைப் பற்றிய ஒவ்வொரு பிரச்சினையினையும் தட்டாது கேட்டு காய்தல் உவத்தலின்றி அது பற்றி ஆய்ந்து முடிவெடுத்தல் வேண்டும். ஃபிரெஞ்சு மக்கள் உரிமை வேட்கையில் ஊறிப்போனவர்கள்; தங்களின் தனித்தன்மைகளைத் தரணியெல்லாம் பரப்பித் தன்னிகரற்று வாழ்வதில் தணியாத நாட்டம் கொண்டவர்கள். அவர்களது அத்தகைய கருத்துகளுக்கு மதிப்புக்கொடுத்து அவர்களது எண்ணங்கள் ஈடேற என் மகன் பணிபுரிதல் வேண்டும். ஒரு அரசாங்கத்தின் சட்டமும் அது மேற்கொள்ளுகின்ற ஒவ்வொரு நடவடிக்கையும் அனைவருக்கும் பொதுவானதாக, அனைவரையும் கட்டுப்படுத்தக் கூடியனவாக இருத்தல் வேண்டும். விருதுகளும், பட்டங்களும் தகுதியுள்ளவர்களுக்கே வழங்கப்படல் வேண்டும். முன்னிசைவின்றி தன் பொறுப்பில் அச்சிட்டு வெளியிடுவதற்கான உரிமை (Liberty of the press)யினைப் பத்திரிகைகளுக்கு வழங்க என் மகன் முன்வரவேண்டும். இன்றைய அரசியல் உலகில் அது மிகமிகத் தேவையான ஒன்றாகும். உரிமை பெற்ற பத்திரிகைகளின் ஆதரவை அரசாங்கம் பெற்றுவிட்டால் அதன் சாதனைகள் அகிலமெலாம் பரவிப் பீடுநடை போடும்.

'புதிய கருத்துகளின் ஊற்ருக என் மகன் உயர்ந்து விளங்க வேண்டும் ; பகுத்தறிவுப் பாசறையாக அவனது அரசு திகழவேண்டும் ; கருத்துக்கும் காலத்திற்கும் ஒவ்வாத மூடப்பழக்க வழக்கங்களை முறியடிக்கவேண்டும். ஏற்றத்தாழ்வு அகன்று எல்லோரும் இன்புற்றிருக்க அவனது ஆற்றல் பயன்படவேண்டும். மடமை மாய்ந்து ஃபிரெஞ்சுப் பெருநாட்டில் புதுமை பூத்துக் குலுங்க அவனது பணி அயராது தொடரவேண்டும். மக்களை ஆட்டு மந்தைகளாகக் கருதி அவர்களை விலங்கிடக் கருதும் கயவர்களே எனது மகனின் முதல்தரப் பகைவர்கள். அவர்களது பிடியிலிருந்து மக்களை விடுவித்து அவர்களை மீண்டும் மாக்களாக்க முடியாதபடி பார்த்துக்கொள்ளல் வேண்டும். அன்றியும், ஐரோப்பிய முடிமன்னர்களையெல்லாம் ஒழித்துக்கட்டும் போரில் அவன் தன்னை ஈடுபடுத்திக்கொள்ளல் கூடாது. அத்தகைய போர் ஐரோப்பாவில் ஏற்பட்டால் இரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடும் ; விஞ்ஞானப் புதுமைகள் விழலுக்கு இரைத்த நீராகும் ; அறிவுச் சுடர் அணைந்து எங்கும் இருள் சூழும். ஆகவே, அதற்கு இடம் கொடாது, முடியரசுகளுக்கும் குடியரசுகளுக்கு மிடையே பாலமாக என் மகன் திகழவேண்டும். ஐரோப்பாவின் அமைதி அவனது நெஞ்சில் நின்று நிலவவேண்டும். எனது அன்புக் கட்டளைகளை ஏற்று அல்லும் பகலும் அயராது உழைத்த எனது தோழர்களைக் காத்தல் எனது மகனின் தலையாய கடனுகும். எனது போர் வீரர்களில் பலர் இன்று வறுமையில் வாடக்கூடும் ; அவர்களையெல்லாம் வாழவைக்க என் மகன் முன்வரவேண்டும். குற்றவாளிகளின் எண்ணிக்கையை ஒவ்வொரு ஆண்டு இறுதியிலும் கணக்கிட்டுப் பார்த்தல் வேண்டும். அவர்களது எண்ணிக்கை அதிகரிப்பின் நாட்டில் நல்லாட்சி நடைபெறவில்லை என்பது பொருள். மாருக, அவர்களின் எண்ணிக்கை குறைந்தால் அங்கு நீதியும் நேர்மையும், நல்லாட்சியும் நடைபோடுகின்றன என்று பொருள்படும்.

'எனது மகன் ஃபிரான்சுக்குத் திரும்பிவரும் வாய்ப்பினைப் பெற்ருல், அங்கு எனது ஆதரவாளர்களின் மகத்தான ஆதரவை அவன் பெறுவான். அவர்களது துணைகொண்டு ஃபிரான்சின் பெருமையினை நிலைநாட்ட அவன் முற்பட வேண்டும். பேரரசின் நிர்வாகம் பற்றிச் சட்ட மன்றங்களில் நான் அப்போதைக்கப் போது தெரிவித்துள்ள நல்ல கருத்துகளையெல்லாம் தொகுத்து வைத்தல் வேண்டும் ; நாட்டின் நல்வாழ்வினைப் பெருக்கும் வகையில் நான் அவ்வப்போது எனது அமைச்சர்களிடம் கூறிய அறிவிப்புகளை யெல்லாம் தொகுத்து வைத்தல் வேண்டும் ; ஃபிரெஞ்சுப் பெருநாட்டின் வளப்பத்தைப் பெருக்கும் பொருட்டு ஒவ்வொரு

துறையிலும் நான் மேற்கொண்ட நடவடிக்கைகள் அனைத்தையும் பட்டியல் போட்டுப் பாதுகாக்கவேண்டும்; இத்தாலியிலும் ஃபிரான்சிலும் நான் நிறுவிய நினைவுச்சின்னங்களின் பட்டியலும் மக்கள் முன் வைக்கப்படல் வேண்டும்—இவைகளே எனது மகனும் எனது ஆதரவாளர்களும் எனக்கு எடுக்கும் மிகச்சிறந்த நினைவுச் சின்னங்களாகும்.

'வரலாறு மட்டுமே உண்மையான தத்துவம். அதனை அடிக்கடி கசடறக் கற்று அதன் வழி நிற்றலே எனது மகன் எனக்காற்றும் உதவியாகும். உலகப் பெருந்தளபதிகளின் போர் முறைகளை நன்கு படித்து அவைபற்றி ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும். அதுவே விஞ்ஞான ரீதியில் போர்க்களங்களைப்பற்றி அறியப் பெரிதும் உதவும். உலகப் பெருந்தளபதிகளின் வரலாறு அவனை ஆற்றல்மிகு போர்வல்லுநன் ஆக்கும். நாட்டுமக்களின் நலனில் மாருத நாட்டங் கொண்டு சொந்தவாழ்வில் எடுத்துக்காட்டான தூய்மையினை மேற்கொண்டு, 'இவன் தந்தை என்னோற்றான் கொல்' என்று உலகம் உவகை கொள்ளுமாறு என் மகன் நல்லாட்சி நடாத்திட நான் விழைகின்றேன்.'

மேற்கண்ட அறிவுரைகளைத் தம் மகனுக்காக வழங்கியபின் போனபார்ட் மகிழ்ச்சியும் உற்சாகமும் நிறைந்து காணப்பட்டார். ஏப்ரல் திங்கள், 19ஆம் நாள் அவர் சுறுசுறுப்புடன் நண்பர்களுடன் உரையாடினார். படைத்துறைத் தளபதிகள் பலரைப் பற்றிய மதிப்பீடுகளையெல்லாம் நண்பர்கள்முன் வைத்து மனமகிழ்ந்திருந் தார். அடுத்த நாளும் அவர் பெரிதும் கலகலப்பாக நண்பர்களு டன் உரையாடிக்கொண்டிருந்தார். அதனைக்கண்ட அவரது நண்பர்கள், பேரரசர் நிரந்தரமாகக் குணம்பெற்று விட்டார்; இனி அவருக்கு எவ்வித ஆபத்தும் இல்லை — எனக் கருதி களிப்பெய் தினர். ஆனால், போனபார்ட் அவர்களைப் பார்த்து 'எனதினிய நண்பர்களே! என்னைப்பற்றிய உங்கள் கணிப்பு தவருனதாகும். நான் இன்று நலமாகவே உள்ளேன்; ஆனால், சாவு என்னை நோக்கி விரைந்து வந்துகொண்டிருப்பதை நான் உணருகின்றேன். ஆகவே, நான் விரைவில் இறப்பினை இனிது வரவேற்று இன்புறுவேன் என்பது உறுதி. நான் இறந்தபின் நீங்களெல்லாம் தாயகம் செல்ல அனுமதிக்கப்படுவீர். தாயகம் செல்வதின்மூலம் நீங்கள் மன நிறைவு கொள்ளக் கூடும். அங்கு நீங்கள் உங்களது நண்பர் களையும், உறவினர்களையும் கண்டு உரையாடி மகிழ்வீர்கள். அதைப்போல நானும் சாவுலகம் சென்று எனதினிய நண்பர் களைக் காண்பேன். கிளிபெர், (Kleber), தேசாய் (Desaix), பெஸ் ஸியரெஸ் (Bessieres), டூராக் (Duroc), நே (Ney), மூராட் (Murat), மேசன்ஞ (Masena), பெர்தியர் (Berthier) போன்ற ஆற்றல்

மறவர்கள் அனைவரும் என்னுடன் இருந்த காலத்தில் ஆற்றிய பணிகளையெல்லாம் என்னிடம் கூறி என்னை மகிழ்விப்பர் ; நான் என் வாழ்வின் இறுதிகாலத்தில் பட்ட அவதிகளையெல்லாம் அவர் கள்முன் வைப்பேன். அவர்கள் மீண்டும் என்னை பார்ப்பதின் மூலம் அவர்களிடையே மறுபடியும் உற்சாகமும் உன்னதப் பெரு மையும் பெருக்கெடுத்தோடும். நாங்கள் சந்தித்த களங்களைப் பற்றிய பெருமைகளையெல்லாம் அங்குள்ள மாபெரும் தளபதி களான சிபியாஸ் (Scipios), கனிபால் (Hannibal), சீசர் (Caesar), ஃபிரெடெரிக் (Frederick) ஆகியோர்முன் படைத்து மகிழ்வோம். அங்குள்ளோர் எங்களைக்கண்டு அச்சமும் திகிலும் கொள்ளும் வகையில் படைத்துறைத் தளபதிகளான நாங்களனைவரும் ஒன்று பட்டு உரையாடி உள்ளம் பூரிப்போம்' என்று கூறி அனைவரையும் திகைப்பில் ஆழ்த்தினர்.

இந் நிலையில் மருத்துவர் ஆர்நாட் (Dr. Arnott) அங்கு வந்தடைந்தார். அவரைப் பேரரசர் அன்புடன் வரவேற்றார். அடுத்து அவரைப்பார்த்து 'மருத்துவர் அவர்களே ! எனது முடிவு நெருங்கிக்கொண்டிருக்கிறது. நான் விரைவில் எனதுடலை நில மென்னும் நங்கைக்குக் காணிக்கையாக்கவிருக்கின்றேன். பெர்ட் ரண்ட் ! (Bertrand) அருகே வந்து நான் கூறுவது அனைத்தையும் மொழிபெயர்த்து மருத்துவரிடம் கூறுங்கள். ஒரு சொல்லைக்கூட விட்டுவிடாது அப்படியே கூறுங்கள். ஆங்கில மக்களின் ஆதரவை நாடி நான் இங்கிலாந்து வந்தேன். ஆங்கில ஆட்சியாளரிடம் என்னைப் பெருந்தன்மையுடன் பாதுகாக்கும்படி வேண்டினேன். ஆனல், அவர்களோ நீதியின் குரல்வளையினை நெரித்து என்னை சிறைக்கைதி ஆக்கினர். ஆனல், நான் இரஷ்யாவிற்குச் சென்றி ருந்தால் மன்னர் அலெக்சாண்டர் என்னிடம் பரிவுகாட்டி என்னை நன்கு காத்திருப்பார். ஆஸ்திரிய நாட்டிற்கு நான் சென்று அடைக்கலம் புகுந்திருந்தால் பேரரசர் ஃபிரான்சிஸ் எனக் குரிய மதிப்பும், மரியாதையும் கொடுத்து என்னை வாழ்வித் திருப்பார். பிரஷ்ய நாட்டிற்கு நான் சென்றிருந்தால் கூட அந் நாட்டு மன்னர் என்னை அன்புடன் ஏற்று ஆதரித்திருப்பார். ஆனல், ஆங்கில அமைச்சர்களோ இக் கொடிய பாறைத்தீவில் என்னைக் குடியேற்றி என்னைக் கொலை செய்துள்ளனர். இங்கு குடியே றிய ஐரோப்பியர்களெல்லாம் மூன்றாண்டுகளுக்குள்ளாகவே உயிர் துறந்துள்ளனர் என்பதை அறிந்த நான் வேதனைப்படுகின்றேன். நான் இங்கு வந்தபின் ஆங்கில அரசினர் என்னை எவ்வாறு நடாத்தி னர்? எனக்கு இங்கு இழைத்த கொடுமைகளுக்கும் இழிவுகளுக் கும் ஈடு இவ்வுலக வரலாற்றில் எங்கு தேடினும் கிடையாது. எனது குடும்பத்திலுள்ளவர்களுக்கு எளிய முறையில் எழுதப்

பட்ட மடல்கள்கூட பறிமுதல் செய்யப்பட்டன. எனது குடும் பத்தினர் எனக்கனுப்பிய மடல்கள், பொருள்களனைத்தும் என்னைச் சேராதபடி பறிக்கப்பட்டன. என்னுடைய மனைவியையும், மகனை யும் என்னைவிட்டு நிரந்தரமாகப் பிரித்தனர். கடந்த ஆறு ஆண்டு காலமாக என்னைக் கடுங்காவலில் வைத்து என்னைத் துன்பப்படுத்தினர். என்னை விரைவில் சாகடிக்கவேண்டும் என்ற தீய நோக்குடன் சுகாதாரமற்ற இக் கொடிய தீவில் என்னைச் சிறைவைத்துள்ளனர். என்னைப் படிப்படியாகக் கொல்லும் பணி யைக் கொடிய கொலைகாரன் ஹட்சன் லோவ் (Hudson Lowe) என்பவனிடம் ஒப்படைத்துள்ளனர் ஆங்கில ஆட்சியினர். என துரிமைகளும் உடமைகளும் பறிக்கப்பட்டு, எனதருமைத் தாய கத்திலிருந்து வெகுதொலைவில் இக் கொடிய பாறையில், நான் செத்துக்கொண்டிருக்கின்றேன். பயங்கரமும் கொடுமையும் மிக்க இச் சாவுக்கு இன்றைய இங்கிலாந்தின் ஆட்சியாளர்களே பொறுப்பாவர்' என்றுரைத்தார் நெப்போலியன்.

1821ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 28ஆம் நாள் அவரது உடல் நிலை மீண்டும் கவலை தருவதாயிற்று. அவர் தமதருமை நண்பர்களை அருகில் அழைத்து 'நான் வெகு விரைவில் இயற்கை எய்திவிடுவேன். நான் இறந்தபின் நீங்கள் எனது உடலைப் பிளக்க வேண்டும். ஆனால், எந்த ஆங்கில மருத்துவனும் எனது உடலைத்தொடுவதற்கு அனுமதித்தல் கூடாது. அவசியம் ஏற் படின் மருத்துவர் ஆர்நாட் (Dr. Arnott) என்பவரை மட்டும் பயன்படுத்திக்கொள்ளுங்கள். எனது இதயத்தை அறுத்தெடுத்து அதனைப் பழச்சாற்றில் (Wine) பதப்படுத்தி எனதருமை மனைவி மரியலூயிசாவிடம் சேர்த்துவிடுங்கள். நான் இறுதிவரை அவளை என் இதயத்தில் ஏற்றிவைத்துப் போற்றிவந்தேன் என்பதை அவளிடம் எடுத்துக் கூறுங்கள். நீங்கள் இங்கு கண்ட அனைத் தையும் அவளிடம் கூறுங்கள். எனது வயிற்றை நன்கு ஆய்ந்து அது பற்றிய அறிக்கையினை எனது மகனிடம் சேர்ப்பித்து விடுங் கள். என்னுடைய உடலுறுப்புகளில் வயிறே எனக்கு அடிக்கடி தொல்லை கொடுத்தது. அதுவே மிகவும் நோய்வாய்ப்பட்ட உறுப்பாகும். எனது தந்தையும் வயிற்று நோயால் வதைபட் டுள்ளார். எனது மகனும் வயிற்று நோயால் துன்புறுதல் கூடாது. ஆகவே, எனது வயிற்றினைப்பற்றிய குறிப்புகளையும், அதில் அடங்கியுள்ள நோயினையும், அதன் காரணங்களையும் என் அருமை மகனுக்கு எடுத்துக் கூறி அவனை வயிற்று நோய் கவ்வாதவாறு பார்த்துக்கொள்ளுங்கள். நான் இறந்தபின் நீங்கள் உரோமா புரி செல்வீர்களேயானால் எனதருமைத் தாயைக் கண்டு அவரிடம் இங்கு நான் பட்ட துன்பங்களை எடுத்துக் கூறுங்கள்' என்று ஆணையிட்டார் பேரரசர்,

அடுத்த நாள், அவர் கடுமையான வயிற்று வலியால் அவதிப் பட்டார். நிறையத் தண்ணீர் குடித்தார். அதன் பயனுக வயிற்றுவலி சிறிது தணிந்தது. உடனே, அருகிலுள்ளவர்களைப் பார்த்து 'நான் பிழைத்துக்கொண்டால் இந் நீரூற்றருகே என் நினைவாக ஒரு மாளிகை எழுப்புவேன். நான் இறந்தபின் எனது உடல் ஃபிரான்சு நாடு எடுத்துச் செல்லப்பட அனுமதி மறுக்கப் பட்டால், நான் பிறந்த அசேசியாவில் எனது உடல் புதைக்கப் படவேண்டும். அதுவும் மறுக்கப்பட்டால் இந்த நீரூற்றருகே எனது உடலைப் புதைத்து விடுங்கள்' என்று கூறினுர்.

மே திங்கள் இரண்டாம் நாள் இரவு முழுதும் நோயின் கடுமையால் போனபார்ட் பிதற்றிக்கொண்டிருந்தார். அவரது வாயிலிருந்து 'ஃபிரான்சு, மகன், படை' ஆகிய சொற்கள் அரை குறையாக வந்துகொண்டிருந்தன. இலாங்வுட் இல்லத்தில் அனை வரும் கூடி அங்கிருந்து அவரைக் கவனித்து வந்தனர். அன்றி ரவு முழுதும் அவரது நண்பர்கள் கண்விழித்து அவருக்கருகே கண் கலங்கிநின்றனர். அடுத்த நாள் காலை நோயின் கடுமையிலி ருந்து சிறிது விடுபட்ட பேரரசர் அங்கு கூடியிருந்த நண்பர்களைக் கண்டு ஓரளவு ஆறுதல் அடைந்தார். தம்மிடத்தில் அவர்கள் கொண்டிருந்த மாருத அன்பினையும், பற்றினையும் கண்டு அவர் களைப் பாராட்டினுர். அவர்கள் அனைவருக்கும் திரண்ட பொருள் கொடுத்து உதவும்படி தமது வாழ்விறுதி விருப்ப ஆவண (will) த்தில் எழுதினுர். மீண்டும் மருத்துவரை அழைத்து தமது வயிற்று வலிக்குக் காரணமானவைகளை அறிந்து தமது மகனிடம் மறவாது எடுத்துக் கூறும்படி கேட்டுக்கொண்டார்.

மே திங்கள் நான்காம் நாள் இரவு கடும் இருட்டாக இருந் தது. மேகங்கள் வானத்தில் கருத்துத் திரண்டன; பேய்க்காற் றும் பெருமழையும் அத் தீவைச் சின்னுபின்னப்படுத்தின. நெப் போலியனுல் அன்புடன் வளர்க்கப்பட்டு, ஓங்கி உயர்ந்து நின்ற மரங்கள் அனைத்தும் அடியோடு சாய்ந்தன. ஆனுல், பேரரசர் நெப்போலியனே நினைவற்று மரணப்படுக்கையில் புரண்டுகொண் டிருந்தார். இலாங்வுட்டிலுள்ள குழந்தைகளெல்லாம் பேரர சரைக் கடைசியாகக் காணும் பொருட்டு அவரது அறைக்குள் நுழைந்தனர். மரணத்துடன் போராடிக்கொண்டிருந்த நெப் போலியனது கரங்களைப் பற்றிக்கொண்டு கண்களைக் குளமாக் கிக் கதறியழுதனர். அடுத்து, அவரது கரங்களைத் தாங்கி முத்த மிட்டனர். அக் காட்சியைக் கண்ணுற்ற அனைவரும் கண்கலங்கி நின்றனர். பெர்ட்ரண்டின் மகன் நெப்போலியனது நிலையைக் கண்டு மயங்கி விழுந்தான். பேரரசரின் நெருங்கிய வேலைக் காரர்களில் ஒருவன் அவருக்காகத் தன்னுயிரைக் கொடுக்க முன்

வந்தான். இந் நிலையிலும் பேரரசர் தம் வாயிலிருந்து, 'ஃபிரான்சு' —'படை'—'படைத் தளபதி'—'ஜோசபைன்'—ஆகிய சொற்களை உதிர்த்துக்கொண்டேயிருந்தார்.

1821ஆம் ஆண்டு, மே திங்கள், ஐந்தாம் நாள், காலை பேரரசர் மீண்டும் நினைவுபெற்றுப் படுக்கையில் சாய்ந்தபடியிருந்தார். அவரது கண்கள் ஆழ்ந்த சிந்தனையில் அவர் மூழ்கியிருப்பதை அறிவித்தன. அவர் எவ்வித வலியுமின்றி நலமாக இருப்பதாகவே காணப்பட்டார். அன்றலர்ந்த தாமரைபோல் அவரது முகம் காணப்பட்டது. அன்று மாலை ஆறுமணிவரை அவர் அமைதியாக இருந்தார். அன்றைய எழில் ஞாயிறு மேற்கில் சிறிது சிறிதாக மூழ்கிக்கொண்டிருக்க, உலகத்தின் உரிமை காக்கவந்த உதயசூரியனும் நெப்போலியனது உயிர் அவரது உடலைவிட்டுக் கொஞ்சங்கொஞ்சமாக நகர்ந்துகொண்டிருந்தது. 'ஃபிரான்சு'—'படை'—'ஜோசபைன்' என்ற சொற்களைச் சொல்லிக்கொண்டே பேரரசர் நெப்போலியன் இயற்கையெய்தினர்.

பேரரசர் போனபார்ட் இயற்கையெய்திய செய்தி விரைவில் அத் தீவு முழுதும் பரவியது. அத் தீவிலுள்ள மக்களனைவரும் இலாங்வுட் இல்லத்திற்குச் சாரைசாரையாகச் சென்று தங்களின் கண்ணீரை அம் மாவீரனுக்குக் காணிக்கையாக்கினர். இதற்கிடையில், பேரரசர் விரும்பியபடி அவரது உடல் சாவுக்குப்பின் நன்கு ஆய்வுசெய்யப்பட்டது. மருத்துவர் ஆண்டோமார்க்கி ஆய்வினைத் திறம்பட நடாத்தினர். அவருக்கு உதவியாக ஐந்து ஆங்கில மருத்துவர்களும், மூன்று ஆங்கில இராணுவ அதிகாரிகளும், மூன்று ஃபிரெஞ்சுக்காரர்களும் அங்கிருந்தனர். ஆண்டோமார்க்கி பேரரசரின் ஈரலைத் தனியாக அறுத்தெடுத்து வைத்தார். வயிற்று நோய்க்குக் காரணமான குடற்புண்ணை (ulcer) கண்டறிந்து அதனை அங்குள்ளவர்களுக்கு அவர் விளக்கிக் காட்டினர். கெலினுவின் தட்ப வெப்ப நிலை அக் குடற்புண்ணை எவ்வாறு வளர்த்து பேரரசரின் சாவை விரைவுபடுத்தியது என்பதையும் அவர் விளக்கினர். அடுத்து, பேரரசரின் உடல் அவர் வழக்கமாக அணியும் உடைகளால் அலங்கரிக்கப்பட்டது. அவர் மாரெங்கோக் களத்தில் அணிந்திருந்த ஆடைகள் அவரது பாதங்களின்மீது விரிக்கப்பட்டிருந்தன. இவ்வாறு, அலங்கரிக்கப்பட்ட பேரரசரின் உடல் பொதுமக்களின் பார்வைக்காக இலாங்வுட் இல்லத்தில் இரண்டு நாட்கள் வைக்கப்பட்டிருந்தது. மக்கள் அலையலையாக வந்து பேரரசருக்குத் தங்களின் இறுதி வணக்கத்தைச் செலுத்தினர். ஆளுநர் லோவும் இலாங்வுட் சென்று பேரரசருக்கு இறுதி வணக்கம் செலுத்தினர். 'நெப்போலியன் இங்கிலாந்துக்கும் எனக்கும் பெரும் பகைவராக இருந்தார். இருப்பினும், அவரை

மன்னிக்கின்றேன் ' என்று கூறினர். ஆனல், வேங்கை வேதாந்தம் பேசியதுபோல இருந்தது அவரது கூற்று.

பேரரசரின் உடலை அவர் விருப்பப்படி ஃபிரான்சு நாட்டுக்கு எடுத்துச்செல்ல அவரது நண்பர்கள் ஆளுநரிடம் அனுமதி கோரினர். ஆனல். அனுமதி மறுக்கப்பட்டது. பேரரசரின் இதயத்தையும் குடலையும் மட்டும் ஃபிரான்சுக்கு எடுத்துச்செல்ல அனுமதி வேண்டினர் அனைவரும். ஆனல், ஆளுநர் லோவ் அதற்கும் இணங்கவில்லை. பேரரசரின் உடலை அவர் பிறந்த கார்சிகாவுக்கு எடுத்துச் செல்லவும் அனுமதி மறுக்கப்பட்டது. ஆகவே, வேறுவழியின்றி பேரரசரின் உடலை அவர் விரும்பியபடி கெலினவிலுள்ள நீரூற்று அருகே அடக்கம்செய்ய முடிவுசெய்யப்பட்டது. 1821ஆம் நாள் மே திங்கள் எட்டாம் நாள் செயின்ட் கெலின முழுதும் அமைதி நிலவியது. அத் தீவிலுள்ள மக்களனைவரும் இலாங்வுட் இல்லம் சென்று பேரரசரின் இறுதி ஊர்வலத்தில் பங்கெடுத்துக்கொண்டனர். அன்று நடுப்பகல் பன்னிரண்டரை மணி அளவில் பேரரசரின் இறுதி ஊர்வலம் தொடங்கியது. அவரது உடலைத் தாங்கிய வண்டியை நான்கு குதிரைகள் இழுத்துச்சென்றன. ஆளுநரும் இதர அதிகாரிகளும் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். பேரரசரின் நண்பர்கள் துக்கத்துடன், கண்களில் நீர்வழிய அவ்வூர்வலத்தில் நடந்துசென்றனர். இலாங்வுட் இல்லத்திலிருந்து கல்லறைவரை வழிநெடுகிலும் இடப்பக்கத்தில் இரண்டாயிரத்தைநூறு ஆங்கில இராணுவ வீரர்கள் வரிசையாக நின்று பேரரசர் நெப்போலியனுக்கு இறுதிவணக்கம் செலுத்தினர். ஊர்வலம் வீரர்களைக் கடந்து சென்றபின் அவர்களும் அதில் கலந்துகொண்டனர். இன்னிசை துன்ப இசையாக விட்டுவிட்டு ஒலித்தது. ஊர்வலம் இறுதியில் கல்லறையை அடைந்தது. பேரரசரின் உடல் வைக்கப்பட்டிருந்த பெட்டியை எறிகுண்டு வீரர்கள் தோளில் சுமந்துசென்று கல்லறைக்கருகே வைத்தனர். பேரரசரை அடக்கம் செய்வதற்கான ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன. பீரங்கிகள் முழங்கின. பெட்டி கல்லறைக்குள் வைக்கப்பட்டது. அதனை மூடுவதற்கான கல்லில் '1769ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 15ஆம் நாள் அசேசியாவில் பிறந்த நெப்போலியன், 1821ஆம் ஆண்டு மே திங்கள் 5ஆம் நாள் செயின்ட் கெலினவில் இயற்கையெய்தினர்'— என்ற வரிகள் பொறிக்கப்பட்டிருந்தன. ஆனல், அத்தகைய கல்லைக்கொண்டு கல்லறையை மூடக்கூடாதென்று ஆளுநர் தடுத்துவிட்டார். இருப்பினும், 'தளபதி நெப்போலியன்' என்று மட்டும் குறிக்கப்பட்டுள்ள ஒரு கல்லினைக் கொண்டு கல்லறையை மூட அனுமதி வழங்கினர். ஆனல், எவ்விதக் குறிப்பும் பொறிக்கப்படாத வெறுங்கல்லினல் கல்லறை மூடப்பட்டது.

மே திங்கள் இருபத்தேழாம் நாள் நெப்போலியனது நண்பர்கள் ஐரோப்பிய பயணத்தை மேற்கொண்டனர். கெலினவை விட்டகலுமுன் அவர்களனைவரும் குடும்பத்துடன் கல்லறைக்குச் சென்று மலர்வளையங்களை வைத்து வணக்கம் செலுத்தினர். அவர்களது கண்களெல்லாம் குளமாயின ; நா பேசும் ஆற்றலை இழந்தது ; கண்கள் பார்வையை இழந்தன ; கால்கள் தள்ளாடின ; துக்கம் அவர்கள் தொண்டையை அடைத்தது. இந் நிலையில் அவர்கள் அக் கல்லறையை விட்டகன்று ஆங்கிலக் கப்பலொன்றில் ஐரோப்பா நோக்கிச் சென்றனர். ஆனல், அவர்களில் ஒருவரான செர்ஜென்ட் கியூபெர்ட் (Sergeant Hubert) என்பவர் மட்டும் பேரரசரை விட்டுவர மனமின்றி அங்கேயே தங்கிவிட்டார். நாள் தோறும் அவரது கல்லறைக்குச் சென்று பேரரசருக்குத் தம் கண்ணீரைக் காணிக்கையாக்கி அக் கற்பாறையைக் காத்துவந்தார். பத்தொன்பது ஆண்டுகட்குப்பின் பேரரசரின் உடல் ஃபிரான்சுக்கு கொண்டுவரப்பட்டபோது அவரும் ஃபிரான்சுக்கு வந்தார்.

பேரரசர் நெப்போலியன் இறந்தபின்பும் அவரது வரலாறு வளர்ந்துகொண்டே சென்றது. அவரது புகழ் பூபாகம் முழுதும் பட்டொளி வீசிப்பறந்தது. அவரது கொள்கைகள் அரசியல் உலகில் மீண்டும் வீறுநடை போடத்தொடங்கின. அவரது புகழ் அன்றுடன் மங்கி மறைந்தொழிந்துவிடவில்லை. மாருக, அகிலத்தின் மூலைமுடுக்கெல்லாம் பரவிநின்றது. அவர் இயற்கையெய்திய ஒன்பதாண்டுகளுக்குப்பின் ஃபிரான்சில் அவரது ஆசைக்கனவுகள் நிறைவேறத் தொடங்கின. 1830ஆம் ஆண்டு ஜுலைத் திங்கள் ஃபிரெஞ்சு மக்கள் நெப்போலியனுக்கு ஆதரவாகப் புரட்சியில் இறங்கினர். போர்போன் அரசு மீண்டும் ஃபிரான்சில் மாய்ந்தது ; நெப்போலியனது சட்டதிட்டங்கள் அங்கு மீண்டும் மலர்ந்தன. மக்களின் ஆதிக்கம் அங்கு மீண்டும் நிலைநாட்டப்பட்டது. ஆர்லியன்ஸ் கோமகன், லூயி பிலிப் (Louis Philippe) ஃபிரெஞ்சு நாட்டின் மணிமுடியைப் பெற்ருர். மக்களின் மனநிலையைத் தெரிந்து மாமன்னன் நெப்போலியனது திட்டங்களுக்கு உயிர்கொடுக்க முன்வந்தார். இந் நிலையில் 1832ஆம் ஆண்டு ஜுலைத் திங்கள் 29ஆம் நாள் பேரரசர் நெப்போலியனின் மகன் தமது இருபத்தொன்ரும் வயதில் இயற்கையெய்தினர். அவரது இறப்புடன் நெப்போலியனது நேரடி வாரிசும் அழிந்தொழிந்துவிட்டது.

மாமன்னன் நெப்போலியனது புகழ் மங்காதிருக்கும் வகையில் ஃபிரெஞ்சு மக்கள் நடவடிக்கைகளை மேற்கொண்டனர். போர்போன் அரசர்களால் அகற்றப்பட்ட பேரரசரின் உருவச்

சிலேயினை மீண்டும் அங்கு வைக்க மக்கள் அரசை வேண்டினர். அதன்படி 1833ஆம் ஆண்டு ஜூன் திங்கள் முதல் நாள் பேரரசரின் உருவச்சிலை மீண்டும் மக்களின் மகிழ்ச்சி ஆரவாரத்துக்கிடையே அரண்மனைக்கு முன்பாகத் திறந்துவைக்கப்பட்டது. அச் சிலை திறப்பு விழாவினை பாரிஸ் பெருநகரமே திரண்டு வந்து சிறப்பித்தது. வெண்டோம் (Vendome) என்ற இடத்தில் அச் சிலை புதிய பொலிவுடன் நின்று நிலவுகின்றது. 1834ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் முதல் நாள் இன்வேலிடெஸ் (Invalides) என்ற இடத்தில் பேரரசர் நெப்போலியனின் பிறிதொரு சிலேயும் நிறுவப்பட்டது. அன்றியும், அவரது உருவப்படங்கள் சட்ட மன்றங்களிலும், நீதிமன்றங்களிலும் வைத்து போற்றப்பட்டன. அவரது பிறந்த தினங்களும் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டன; அவரது இறந்த தினம் துக்க நாளாகக் கருதப்பட்டது. பேரரசர் நெப்போலியனது உடலை செயின்ட் கெலினுவிலிருந்து அவரது விருப்பப்படி ஃபிரான்சுக்குக் கொண்டுவந்து சீன் நதிக்கரையில் அடக்கம் செய்வதற்கான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. 1840ஆம் ஆண்டு மே திங்கள் ஐந்தாம் நாள் பேரரசர் நெப்போலியனது உடலை கெலினுவிலிருந்து ஃபிரான்சுக்கு கொண்டு வருவதற்கு அனுமதி அளிக்கும்படி இங்கிலாந்து அரசினை ஃபிரெஞ்சு அரசாங்கம் வேண்டியது. ஃபிரெஞ்சு முதலமைச்சர் தையர்ஸ் (Thiers) அத்தகைய அனுமதி பெறுவதற்கான ஆக்க வேலைகளில் முனைந்துநின்ருர். அதன் பயனுக, ஆங்கில அரசும் அட்டியின்றி அனுமதி வழங்க முன்வந்தது. அன்றியும், ஆங்கில அரசு 'பேரரசர் நெப்போலியன்' என்ற பட்டத்தையும் அங்கீகரித்தது. இத்தகைய பெருந்தன்மையான செயல்களுக்கு வித்திட்டவர் ஆங்கிலப் பிரதமர் பாமர்ஸ்டன் (Palmerston). அதன் பயனுக, இங்கிலாந்துமீது படிந்திருந்த கறை மறைந்தது. இரு நாடுகளுக்குமிடையே நல்லுறவும் நட்பும் வளரத் தொடங்கின.

ஃபிரெஞ்சு இளவரசர் சாயின்வில் (Joinville) இரண்டு கப்பல்களுடன் கெலினு நோக்கி விரைந்தார். பேரரசரின் நெருங்கிய நண்பர்களும் அவருடன் கெலினுவில் இருந்தவர்களுமான தளபதி பெர்ட்ரண்ட், லாஸ்கேசஸ் பெருமகன், தளபதி கௌர்கண்ட் ஆகியோரும் இளவரசருடன் சென்றனர். பேரரசரின் உடலை வைத்துக்கொண்டுவருவதற்கான பெரும்பேழை ஒன்று கருங்காலி மரத்தால் செய்யப்பட்டது. அது பழங்காலக் கற்சவப் பெட்டிபோன்ற வடிவத்தில் அமைந்திருந்தது. அழகுமிக்க அப் பிணப்பேழையின் முகப்பில் 'நெப்போலியன்' என்ற சொல் தங்க எழுத்துகளால் பொறிக்கப்பட்டிருந்தது. கண்ணைக் கவரும் அப் பேழையின்மீது அழகிய வெல்வட்துணி விரிக்கப்பட்டிருந்

தது. அதன்மீது தங்கத்தாலான தேனீக்கள் பரவலாகப் பொறிக்கப்பட்டிருந்தன. அதன் ஓரங்களில் கீரி மயிராலான பட்டு (Ermine)த் துணியால் கரை அமைக்கப்பட்டிருந்தது. அப் பெருந் துணியின் ஒவ்வொரு மூலையிலும் பேரரசின் மணிமுடியைத் தாங்கிச்செல்லும் தங்கத்தாலான கழுகுகள் இடம் பெற்றுக் கவர்ச்சியுடன் விளங்கின. இத்தகைய அழகுமிக்க பேழையுடன் சென்ற இளவரசரும் அவரது குழுவினரும் 1840ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 8ஆம் நாள் செயின்ட் கெலினு வந்தடைந்தனர். அங்கு அவர்களுக்குச் சிறப்பான வரவேற்பளிக்கப்பட்டது. அக்டோபர் திங்கள் 15ஆம் நாள் நள்ளிரவு ஃபிரெஞ்சு இளவரசரும், கெலினு ஆளுநரும் பிறரும் பேரரசரின் கல்லறைக்குச் சென்றனர். கல்லறையைத் தோண்டும் வேலை தொடங்கியது. இடைவிடாது ஒன்பது மணி நேரம் தோண்டும் வேலையில் ஈடு பட்டனர் ஆங்கிலப் பொறியியல் வல்லுநர்கள். பேரரசரின் உடலைத் தாங்கியிருந்த பேழை வெளியே கொண்டுவரப்பட்டது. அருகில் அமைக்கப்பட்டிருந்த அழகிய பந்தலில் அப் பேழை வைக்கப்பட்டது. அடுத்து, அப் பேழையை மிகவும் கவனமாக அவர்கள் திறந்தனர். அதனுள் வைக்கப்பட்டிருந்த அழகிய வெண்துகிலைத் தூக்கிப் பார்த்தனர் அவர்கள். அங்கு பேரரசர் நெப்போலியன் அயர்ந்து உறங்கிக்கொண்டிருப்பதுபோல் காணப் பட்டார். அவரது இராணுவ உடைமட்டும் கொஞ்சம் சிதைவுண்டிருந்தது. அவரது முகம் பத்தொன்பது ஆண்டுகளுக்குப் பின்னும் பழுதின்றி பளபளப்பாக இருந்தது. பளிங்குபோல் ஒளிவீசி பேரரசரின் முகம் பாங்குடன் காணப்பட்டது. அதனைக் கண்ட அனைவரும் வியந்தனர். இரண்டு மணித்துளிக்குள் பாரிசிலிருந்து கொண்டுவரப்பட்ட பேழையில் பேரரசரின் உடல் வைக்கப்பட்டது. அடுத்து, அப் பேழை துறைமுகம்நோக்கி எடுத்துச்செல்லப்பட்டது ஊர்வலமாக. அன்று இடியும் மின்னலும் காற்றும் மழையும் அத் தீவை கலக்கத்தில் ஆழ்த்தின. அவற்றையெல்லாம் பொருட்படுத்தாது கெலினு மக்கள் அனைவரும் கருப்பு உடை தரித்து வெறுந்தலையுடன் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். ஆளுநரும் அதிகாரிகளும் இராணுவ வீரர்களும் அப் பெரும் ஊர்வலத்தில் கலந்துகொண்டு தங்களின் இறுதி வணக்கத்தைச் செலுத்தினர். கொடிகள் அனைத்தும் அரைக் கம்பத்தில் பறந்தன. ஊர்வலம் துறைமுகத்தை அடைந்தது. செயின்ட் கெலினுவின் ஆளுநர் பேரரசர் நெப்போலியனது உடலைத் தாங்கிய பேழையை உரிய மரியாதையுடன் ஃபிரெஞ்சு இளவரசரிடம் ஒப்படைத்தார். உடனே, அப் பேழை ஃபிரெஞ்சு தேசியக் கொடியால் மூடப்பட்டது. பேரரசர் உயிருடனிருந்த நேரத்தில் அவர் பெற்ற மரியாதைகள் அனைத்தும் இப்போது

அவருக்கு வழங்கப்பட்டன. இராணுவ மரியாதைகளும், பீரங்கி முழக்கங்களும் சிறப்பாக இடம்பெற்றன.

அக்டோபர் திங்கள் 18ஆம் நாள் பேரரசரின் உடலைத் தாங்கிய பேழை ஃபிரெஞ்சுக் கப்பலில் ஏற்றப்பட்டது. இளவரசரும் அவரது குழுவினரும் செயின்ட் கெலின மக்களிடம் விடைபெற்றுக் கடற்பயணத்தை மேற்கொண்டனர். டிசம்பர் திங்கள் இரண்டாம் நாள் ஃபிரெஞ்சுக் கப்பல்கள் இரண்டும் ஃபிரான்சிலுள்ள செர்போர்க் (Cherbourgh) துறைமுகத்தை வந்தடைந்தன. அன்று ஆஸ்டர்லிட்ச் வெற்றியின் ஆண்டுவிழா. அங்கிருந்த ஆஸ்டர் லிட்ச், ஃபிரீட்லேண்ட் (Freedland), டில்சிட் (Tilsit)ஆகிய போர்க் கப்பல்கள் பேரரசரின் உடலைத் தாங்கிவந்த கப்பல்களைச் சூழ்ந்து வரவேற்றன. ஒவ்வொரு கப்பலில் இருந்தும் இருபத்தொரு குண்டுகள் முழங்கி மாவீரன் நெப்போலியனது உடலுக்கு மரியாதை செலுத்தின. பின்பு, அப் பேழை நன்கு அலங்கரிக்கப்பட்ட 'நார்மண்டி' என்ற நீராவிக் கப்பலுக்கு மாற்றப்பட்டது. நானில மக்களின் நலன்காத்த நாயகனின் உடலைத் தாங்கி 'நார்மண்டி' டிசம்பர் திங்கள் 9ஆம் நாள் சீன் நதிவழியாகச் சென்றது. பேழையைச் சுற்றிலும் அகல்விளக்குகள் வரையாது ஒளி சிந்திக்கொண்டிருந்தன. பேழையின் தலைப்பகுதியில் பேரரசரின் மணிமுடி அலங்கரித்து மெத்தையின்மீது வைக்கப்பட்டிருந்தது. அதனை அழகிய வெல்வட் துணியால் மூடியிருந்தனர். ஆயுதம் தாங்கிய காவலர்களும் ஆங்காங்கே நிறுத்தப்பட்டிருந்தனர். அதிகாரிகள் பலர் அப் பேழையினருகே வாடிய முகத்துடன் கூடியிருந்தனர். ஃபிரெஞ்சு இளவரசர் பேழையின் கால் பக்கத்தில் தனிமையாக நின்றுவந்தார். 'நார்மண்டி' சீன் வழியாக அசைந்தாடிவந்து கேவ்ரி (Havre) நகர் வந்தடைந்தது. அந் நகரம் முழுதும் நதிக் கரைக்குக் திரண்டுவந்து மறைந்த மாவீரனுக்கு இறுதிவணக்கம் செலுத்தியது. அங்கிருந்து நூறு கல் தொலைவிலுள்ளது பாரிஸ். அங்கிருந்து 'பாரிசியன்' (Parisian) என்ற சிறு கப்பல் சீன் நதி வழியே முன்னால் செல்ல அதனைத் தொடர்ந்து பேரரசரின் பேழையைத் தாங்கிய கப்பல் சென்றது. சீன் நதிக்கரைகளிலெல்லாம் மக்கள் வெள்ளம்; அவர்கள் கண்ணீர் வடித்துக் கதறி அழுத வண்ணம் இருந்தனர். ஃபிரெஞ்சுப் பெருநாடு முழுதும் துக்கத்தில் ஆழ்ந்தது. எங்கும் துயர ஒலிகள் எழுந்தன. துப்பாக்கி வேட்டுகள் பேழையின் வருகையை அறிவித்த வண்ணம் இருந்தன.

1840ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 14ஆம் நாள் மாலை 4 மணி அளவில் பாரிசிலிருந்து நான்கு மைல் தொலைவிலுள்ள கூர்பிவாய் (Courbevoie) என்ற சிற்றூரை வந்தடைந்தது பேரரசரின் பேழையைத் தாங்கிய கலம். பாரிஸ் மக்கள் அச் சிற்றூரில் திரண்டிருந்

தனர் தங்களின் மனங்கவர்ந்த மன்னனுக்கு இறுதிவணக்கம் செலுத்த. அச் சிற்றூரில் பேரரசரின் பேழை உரிய மரியாதையுடன் கரைக்குக் கொண்டுவரப்பட்டது. பேரரசர் நெப்போலியனை எதிர்கொண்டழைக்கும் விதத்தில் பேரரசி ஜோசபைனின் முழுஉருவப் பெருஞ்சிலை ஒன்று அச் சிற்றூரில் நிறுவப்பட்டிருந்தது. நெப்போலியனது புகழ்பெற்ற பேரரசுக் காவற்படையிலிருந்த முப்பத்திரண்டு வீரர்கள் அப் பேழையைத் தோளில் சுமந்துசெல்ல, அவர்களுக்குமுன் இளவரசர் நடந்துசெல்ல, ஃபிரெஞ்சு மன்னர் லூயி பிலிப் தமது அதிகாரிகள் புடைசூழச் சென்று அம் மாவீரனின் பேழையை வரவேற்றார். 'ஐயா, பேரரசர் நெப்போலியனது உடலை நான் உங்களிடம் ஒப்படைக்கின்றேன்' என்று இளவரசர் கூறினார். 'ஃபிரெஞ்சுப் பெருநாட்டின் சார்பில் நான் அதனைப் பெற்றுக்கொள்கின்றேன்' என்று கூறிப் பேழையைப் பெற்றார் மன்னர் பிலிப். அடுத்து, அவர் அருகிலிருந்த நெப்போலியனது வாளை எடுத்து தளபதி பெர்ட்ரண்டிடம் கொடுத்து 'தளபதியாரே! பேரரசரின் புகழ்பெற்ற இவ் வாளினை இப் பேழையின்மீது வைக்கும்படி நான் உங்களை வேண்டுகின்றேன்.' என்று மன்னர் கூறினார். பின்பு, பேழையைப் புதைப்பதற்கான விழா நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பேரரசரின் புதைவிழாவில் ஃபிரெஞ்சுப் பெருநாடே திரண்டுவந்து கலந்துகொண்டது. மன்னர் பிலிப், அரசியார், இளவரசர்கள், இளவரசிகள் போன்ற அரசகுலத்தவர்களும் அமைச்சர்களும் தளபதிகளும் சமயத்துறையினரும் அதிகாரிகளும் பொதுமக்களும் அவ் விழாவில் கலந்துகொண்டனர். 1840 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் பதினைந்தாம் நாள் பேரரசர் நெப்போலியன் விரும்பியபடியே அவரது உடல் சீன் நதிக்கரையில் சிறப்பான மரியாதைகளுடன் புதைக்கப்பட்டது. அவரது கல்லறையைச்சுற்றிலும் மனங்கவரும் மாளிகை ஒன்றும் எழுப்பப்பட்டுள்ளது. ஆண்டுதோறும் இந்த நாள் ஃபிரெஞ்சு மக்களால் பெரிதும் போற்றிக் கொண்டாடப்படுகின்றது.

அன்று அரசியலில் அறத்தினைத்தேடி அலைந்தவன், அது கிட்டாது போகவே அதிகாரத்தை ஆட்கொண்டவன் இன்று சீன் நதிக்கரையில் துயில்கின்றான். அன்று வாள்முனையிலே வையத்தின் நாடிகளை அளந்தவன் இன்று மீளாத்துயிலில் கனவுநிலை கொண்டுவிட்டான். எண்பது கல் தொலைவினை ஐந்துமணி நேரத்தில் புரவியில் கடப்பான்; எத்தனை நாள் வேண்டுமாயினும் பசி நோக்காது கண்துஞ்சாது, கடமையே உயிரெனக்கொண்டு, காற்றென இயங்கித் தொண்டாற்றுவான்; உற்றநோய் நோக்காது உலகுயிர்கட்கு உறுகண் செய்யாத காவலன்; செயின்ட் கெலினாவின் சிறைச்சுவர்

களால் தன் சிந்தனைகளைத் தடுக்கவியலாச் சிந்தனையாளன் ; உலகில் அறத்தையும் அன்பையும் நிலைநாட்டவே களம் பல கண்டு வெற்றிப்பண் பாடிய வீரன் இன்று அழகிய சீன் ஆற்றங்கரையி னிலே அமைதிகொண்டுவிட்டான்.

இளைய மனைவியரின் எழில்மிகு தோளை முயங்கினான் ; சோலை களின் மலர்களைச் சூடியும், சூட்டியும் மகிழ்ந்தான் ; குளிர்மணம் கமழும் நறுஞ்சாந்தினைப் பூசினான் ; பகைத்தோரை அழித்தான் ; நண்பர்களைப் பாராட்டி மகிழ்ந்தான் ; வலியவரென வந்தார்க்கு வழிபாடு செய்தறியான் ; மெலியாரென நின்றார்க்கு இழிவு செய் தறியான் ; பிறரிடம் தனக்கென ஒன்று கேட்டு இரந்து நின்றறி யான் ; சூழ்ந்துநின்று தன்பால் இரந்தோர்க்கு இல்லையெனச் சொல்லி அறியான் ; அரசரின் அவைக்களத்தில் தனது உயர்ந்த புகழை வெளிப்படுத்தினான் ; தன்மீது பாய்ந்துவந்த பெரும் படையை அணையென நின்று தடுத்து நிறுத்தினான் ; புறங்கொடுத் தோடிய படைகளைப் பின்தொடராது பிழைக்கவிட்டான் ; விரைந்தோடும் குதிரையைத் தன் மனத்தினும் விரைவாகச் செலுத்தினான் ; இனிய மதுவை குடங்குடமாக எல்லோர்க்கும் கொடுத்து மகிழ்ந்தான் ; பாணர் உவப்பப் பசி தீர்த்தான் ; நெஞ்சுக்கும் நீதிக்கும் புறம்பான சொற்களை எந்நாளும் நீக்கினான்; நாட்டிற்குச் செய்ய வேண்டியதனைத்தும் செய்தான். அம் மாவீரன், இன்று, மங்காப்புகழுடன், தன்னைத் தொட்டுத் திரும்பும் சீன் நதியின் ஒவ்வொரு அலையிலும், 'ஃபிரான்சு—ஆர்மி—ஜோச பைன்'— என்ற மூன்றின் தத்துவத்தையும் உலகிற்கே பரப்பிய வண்ணம் எதையும் தாங்கும் இதயங் கொண்டோன் அமைதி கொண்டிருக்கின்றான்.

தொடியுடைய தோண் மணந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
தண்கமழுஞ் சாந்து நீவினன்
செற்றோரை வழிதபுத்தனன்
நட்டோரை யுயர்பு கூறினன்
வலியரென வழி மொழியலன்
மெலியரென மீக் கூறலன்
பிறரைத் தானிரப் பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடையவையத் தோங்குபுகழ் தோன்றினன்

வருபடை யெதிர் தாங்கினன்
பெயர்படை புறங் கண்டனன்
கடும்பரிய மாக் கடவினன்
நெடுந்தெருவிற் றேர் வழங்கினன்
ஓங்கியல களிறூர்ந்தனன்
தீஞ்செறி தசும்பு தொலைச்சினன்
பாணுவப்பப் பசி தீர்த்தனன்
மயக்குடைய மொழி விடுத்தனன், ஆங்குச்
செய்ப வெல்லாஞ் செய்தன னாகலின்
இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகவிப் புகழ்வெய் யோன்றலையே !

பேரெயில் முறுவலார்.
**புறம் - 239.**

## உறுதுணை புரிந்த நூல்கள்


1. நெப்போலியனது எண்ணம் — ஜே. சி. ஹெரால்ட்.
2. கார்சிகன் — ஜான்ஸ்டன், ஆர். எம்.
3. நெப்போலியன் — இலட்விக்
4. நெப்போலியனும் ஐரோப்பிய விழிப்புணர்ச்சியும் — எஃப். எம். எச். மார்கம்
5. நெப்போலியன் போனபார்ட் — ஸ்லோன் (Sloane)
6. நெப்போலியனின் வாழ்க்கை — ஜே. எச். ரோஸ்
7. நெப்போலியன் — ஃபோர்னியர்
8. ஐரோப்பிய வரலாறு — ஃபிஷர்
9. இரத்தம் பொங்கிய இருபது ஆண்டுகள் — அறிஞர் அண்ணு
10. நெப்போலியனது வாழ்க்கை — ஜோசப். எஸ். சி. ஆப்பட்

# 12. ஆளுமை (Personality)

உலகை உருவாக்கிய உத்தமர்களின் படைவரிசையில் முன்னணியில் நிற்பவர் நெப்போலியன். அவர் செயற்கரிய செய்த பெரியார். உலக வரலாற்று ஏடுகளில் ஒளிமயமான இடத்தினைப் பெற்றுத்திகழ்பவர். 'வரலாறு என்பது மனிதனின் சாதனைப் பட்டியல்' என்றார் ஓர் அறிஞர். அது சாதனைப்பட்டியல் மட்டுமல்ல வேதனைப்பட்டியலும் கூட. சாதனைகளையும் வேதனைகளையும் தன்னகத்தே கொண்டது நெப்போலியனின் வரலாறு. நெப்போலியன் குடிப்பெருமையோ, குலப்பெருமையோ இல்லாதவர்; சாமான்யர்; பிற்படுத்தப்பட்ட பிளபியன் (Plebian). இருப்பினும், அயராத உழைப்பால் அகிலத்தின் வரலாற்றில் அழியாத இடத்தைப் பெற்றுள்ளார். அவராற்றிய சாதனைகள் அவனியால் போற்றப்படுபவை; அவற்றிற்காக அவர் பட்ட வேதனைகளைக் கண்டு உலகம் விம்முகின்றது. உலகம் மெச்சும் சாதனைகளை உருவாக்கும் ஆற்றலை அவர் இயல்பாகவே பெற்றிருந்தார் என்று கூறுவதைவிட அதனை அவர் படிப்படியாக வளர்த்துக்கொண்டார் என்று கூறுவதே பொருத்தமுடையதாகும். அத்தகைய ஆற்றலை உருவாக்குவதற்கான அருங்குணங்கள் பலவற்றின் மொத்த உருவமாக அவர் விளங்கினார். கவர்ச்சிமிக்க, இனிமையான, பழக்கவழக்க நடைமுறைகள் அவரிடம் குடிகொண்டிருந்தன. சொற்போரில் அவரை மிஞ்சுவார் எவருமிலர். கேட்போரைக் கவர்ந்திழுக்கும் தன்மையது அவரது சொல்லாற்றல். உரையாடலின்போது சொற்களைத் தேடி அவர் அலைவதில்லை; சொற்கள் அவரைத் தேடி ஓடிவரும். அவரது சொல்லை வெல்லும் ஆற்றல் பிறர் சொல்லுக்கு இல்லை. நகைச்சுவை ததும்பப் பேசுவதிலும் அவர் வல்லவர். அவர் நாவன்மை படைத்த பேச்சாளர் மட்டுமல்ல; சிறந்த எழுத்தாளருங் கூட. ஃபிஷர் (Fisher) கூறுவதைப்போல, நெப்போலியன் இதழாசிரியர்களின் ஏந்தல்; போர்த்துறை நிபுணர்களின் தந்தை.

நெப்போலியன் தமது நண்பர்களிடத்திலும் கூட்டாளிகளிடத்திலும் உற்றார் உறவினர்களிடத்திலும் பற்றுடனும் பரிவுடனும் நடந்தார். அவர்களுக்குத் தேவையான சலுகைகள் அனைத்தையும் தந்து அவர்களது உயர்வுக்கு அவர் வழிவகுத்தார். இலேன்னெஸ் (Lannes), நே, (Ney), மார்மோண்ட் (Marmouent), மூராட் (Murat), ஜூனுட் (Junot) போன்ற நண்பர்களையெல்லாம் தம்முடைய அன்பாலும் பாசத்தாலும் கவர்ந்தார் போனபார்ட். இலேன்னெஸ், டூராக் (Duroc) ஆகிய நண்பர்கள் இறந்தபோழ்து நெப்போலியன் துக்க மிகுதியால் கதறி அழுதுள்ளார். நெப்போலியன் கல்நெஞ்சு உடையவரல்லர்; இதயத்தில் ஈரமிக்கவர். தாம் வளர்ந்ததுடன் தமது உற்றார்களையும் உற்ற நண்பர்களையும் உயர்நிலைக்கு உடன் அழைத்துச் சென்றார் நெப்போலியன். அவரது தமையன் ஜோசப் முதலில் நேப்பில்ஸ் (Naples) மன்னராகவும் பின்பு ஸ்பெயின் மன்னராகவும் ஆக்கப்பட்டார்; லூயி, ஆலந்து நாட்டு மன்னராக நியமிக்கப்பட்டார். ஜெரோம், வெஸ்ட்பேலியா (Westphalia)வின் மன்னராக்கப்பட்டார். ஏற்றம் பல பெற்றுத் திகழ அவர்களுக்கு நெப்போலியன் ஏணியாகப் பயன்பட்டார். ஆனால், அவர்களோ நெப்போலியனிடம் குறைபட்டு முணுமுணுத்தனர். அவர்களது செய் நன்றி கொன்ற போக்கினைக் கண்ட போனபார்ட், தாம் மூதாதையரின் சொத்துகளை வீணாக்கிவிட்டதாக வருந்திக் குறிப்பிட்டுள்ளார்.

போனபார்ட் வியக்கத்தக்க நினைவாற்றலைப் பெற்றிருந்தார். அதனைக்கொண்டே அவர் தமது போர்த்திட்டங்களையெல்லாம் செம்மையாகத்தீட்டி சிறப்பான வெற்றிகள் பலவற்றை ஈட்டினார். அவரது போர்க்களக் குறி பெரும்பாலும் தவறியதில்லை; களத்தில் வெற்றிக் கனியைப் பறிப்பதற்குமுன் தமது ஏற்றமிகு எண்ணத்தில் அதனை முன்கூட்டியே பெற்றுவிடுவார். நினைவாற்றலுடன் நிலையான கூரிய அறிவாற்றலும் அவரிடம் குடிகொண்டிருந்தது. செருகு அறைகள் கொண்ட படிவச் சட்டத்தைப்போல (Chest of drawers) நெப்போலியனது மூளை பல்வேறு செயல்கள் அடங்கிய அறைகளை உடையதாக விளங்கியது. ஓர் அறை பணியாற்றத் தொடங்கினால் பிற அறைகள் தாமாகவே மூடிக்கொள்ளும். அவைகள் ஒன்றோடொன்று மோதிக் கலக்காதவாறு சீராக அமைந்து பணியாற்றின. அவைகள் அவருக்கு எந்த வகையிலும் இடையூறாக இருக்கவில்லை; அவற்றால் அவருக்குத் தொல்லையோ, சோர்வோ, களைப்போ ஏற்படவில்லை: தூக்கம் வரும் நேரத்தில் நெப்போலியன் அவைகள் அனைத்தையும் மூடிவிட்டு நிம்மதியாகத் தூங்கச் செல்வார். இத்தகைய வளமான மூளையைக் கொண்டே நெப்போலியன் சாதனைகள் பல புரிந்து பயிற்சித் திறமிக்க மேதையாகவும் உலகம் போற்றும் ஆற்றல் மறவராகவும் திகழ்ந்தார்.

புரட்சிக் கனிகளையெல்லாம் ஒன்ருகத் திரட்டி பூபாக முழுதும் அவை பயன்படும்படி செய்வதை நெப்போலியன் தமது புனிதப் பணியாகக் கொண்டார். ஃபிரெஞ்சுப் புரட்சியாலான வீரகாவியத்தை மூடிவிட்டு, புரட்சியின் வரலாற்றைத் தொடங்குவதற்காகத் தாம் வந்துள்ளதாகப் போனபார்ட்டே குறிப்பிட்டுள்ளார். தேசிய உணர்வினை ஐரோப்பாவில் சீராட்டி வளர்ப்பதைத் தமது முக்கிய நோக்கமாக அவர் கொண்டிருந்தார். 'முப்பது மில்லியனுக்குமேல் ஃபிரெஞ்சுக்காரர்களும், பதினைந்து மில்லியன் இத்தாலியர்களும், முப்பது மில்லியன் ஜெர்மானியர்களும் ஐரோப்பாவில் உள்ளனர் ; அவர்களையெல்லாம் ஒன்ருக்கி, ஒரு தனிக்கூருன தேசிய இனமாக மாற்ற நான் விழைகின்றேன் என்று நெப்போலியன் கூறியுள்ளார். மேலும், அயர்லாந்தை இங்கிலாந்திடமிருந்து பிரித்து அதனைத் தனிக்குடியரசாக்கவும் அவர் எண்ணினர். ஆங்கிலப் பாராளுமன்றத்தின் மேலவையான பிரபுக்கள் மன்றத்தை (House of Lords) போனபார்ட் விரும்பவில்லை ; ஆங்கிலப் பாராளுமன்றத்தின் கீழவையான பொதுமக்கள் மன்றத்தை (House of commons)ச் சீர்திருத்தி அமைக்கவும் அவர் நாட்டம் கொண்டார். வடக்கிலிருந்து வரும் காட்டுமிராண்டிகளின் தாக்குதலிலிருந்து போலந்தைக் காக்கும் பொருட்டு அதனை வலிமை மிக்க கொத்தளமாக மாற்றியமைக்கவும் அவர் விரும்பினர். இங்கிலாந்துடன் அவர் பெரும்பாலும் நட்புறவை வளர்க்கவே விழைந்தார். இங்கிலாந்தின்மீது படைமேற்கொண்டு சென்று அதனை வென்றிருப்பாரேயாளுல் அங்கு அவர் மக்களின் இதயங்களையும் வென்று மக்களாட்சியை மலரவைத்திருப்பார். 'ஐரோப்பாவிற்கு என்னே வாய்ப்புக் கேடு ! இரு பெரு அரசுகளும் (இங்கிலாந்தும் ஃபிரான்சும்) இணைந்து முற்போக்குக் கருத்துகளைப் பரப்பவும், மக்கள் விடுதலைக்காகவும் போரிட்டிருக்கலாம் என்று பிற்காலத்தில் போனபார்ட் வருந்திக் கூறியுள்ளார். எனவே, நெப்போலியன் இங்கிலாந்துடன் நல்லுறவையும் நட்பையும் நிலைநாட்ட விரும்பினர் என்பது வெளிப்படை. மேலும், இங்கிலாந்தின் துணைகொண்டு ஐரோப்பாவை முற்போக்குக் கருத்துகளின் கூடாரமாக்க முற்பட்டார் நெப்போலியன். அன்றியும், கிழக்கத்திய கொடுங்கோன்மை, வல்லாட்சி ஆகிய அரசியல் தொத்துநோய்களிலிருந்து ஐரோப்பாவைக் காப்பாற்றவும் அவர் நாட்டம் கொண்டார். ஆளுல், வாட்டர்லுக் களம் அவரது அரிய திட்டங்கள் அனைத்தையும் சிதறடித்துவிட்டது. பிலிப்பிக் களம் (Battle of Philippi) உரோமானிய முற்போக்குத் திட்டங்களையெல்லாம் முறியடித்ததைப்போல, வாட்டர்லுக் களம் ஐரோப்பிய முற்போக்குத் திட்டங்களையெல்லாம் சாகடித்தது. மக்களுக்கும் மன்னருக்கும் சமத்துவம் விரும்பிகளுக்கும் சலுகை

பெற்றோருக்கும்முற்போக்காளர்களுக்கும்பிற்போக்காளர்களுக்கும் இடையே நடந்த மோதலாக வாட்டர்லுப் போர் கருதப்பட்டது. அப் போரில், ஐரோப்பாவின் சிறந்த குருதியெல்லாம் பெரு மளவில் கொட்டி வீணுக்கப்பட்டது.

நெப்போலியன் திறமைமிக்க தளபதி மட்டுமல்ல, தீரமிக்க வெற்றிவீரரும் ஆவார். ஆங்கிலத் தளபதி வெலிங்டன் (Wellington) கூறுவதைப்போல, போர்க்களத்தில் நெப்போலியனது தோற்றம் நாற்பதாயிரம் வீரர்களின் தோற்றத்தைப் போன்ற ஆற்றலுடையது. அதாவது, நெப்போலியன் போர்க்களத்திற்கு வருகைதந்து வீரர்களிடையே தோன்றுவது நாற்பதாயிரம் வீரர் கள் களத்திற்கு வருகைதந்ததைப் போன்றதாகும். அன்றியும், போர்க்களத்தில் போனபார்ட்டைக் காணும் ஃபிரெஞ்சு வீரர்கள் புதிய எழுச்சியும் ஆற்றலும் உற்சாகமும் பெற்றுப் போரிட்ட னர். இதுவரை ஃபிரான்சில் தோன்றிய தளபதிகள் அனைவ ரையும் விட அவர் மிகச்சிறந்த தளபதியாக விளங்கினர். இன்றைய நவீனப் போர்க்கருவிகளும் வசதிகளும் அன்று நெப் போலியன் பெற்றிருந்திருப்பாரேயானல் அவர் ஐரோப்பாவை மட்டுமின்றி அகிலம் முழுவதையும் வென்றிருப்பார். படை வலிமையினை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தது அவரது பேரரசு. நாட்டின் வளமனைத்தும் படைபலத்தைப் பெருக்கவே பயன்படுத்தப்பட்டது. [கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றின் மொத்த உருவமான ஃபிரெஞ்சுப் படை ஆற்றல் மறவர்களின் செயலகமாகத் திகழ்ந்தது. அதன் எழுச்சிமிக்க தளபதியான நெப்போலியன் வீரர்களுக்கெல்லாம் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார் ; வீரனுக்கு வீரனய், தளபதிக்கு தளபதியாய் அவர் விளங்கினர். போர்நுணுக்கங்கள் அனைத் தையும் தம்மகத்தே கொண்ட 'பயிற்சி நூலாக' அவர் காணப் பட்டார். அயர்வு, களைப்பு, சோர்வு போன்றவை அவரை அணுகியதில்லை ; வெற்றியில் அவர் மயங்கியதில்லை ; தோல்வி யால் அவர் துவண்டு விடவில்லை. உழைப்பின் பயனை அவர் நன்குணர்ந்தார் ; அயராது உழைக்கும் ஆற்றலை அவர் வளர்த் துக்கொண்டார். நாள் ஒன்றுக்குப் பதினெட்டு மணி நேரம் விடாது உழைக்கும் ஆற்றலை அவர் பெற்றிருந்தார். மேலும், தமது வீரர்கள், அதிகாரிகள், தளபதிகள் ஆகியோரிடமிருந்தும் அதிக அளவு வேலை வாங்கினர் ; அவர்களை நாட்டின் நலம் கருதிக் கடுமையாக உழைக்கச் செய்தார். 1814ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட டிரெஸ்டன் போர் ஏற்பாட்டிற்கு (Dresden Campaign)ப்பின் நெப்போலியன் தொண்ணூறு கல் தொலை வினை மூன்று நாட்களில் கடந்து சென்றுள்ளார்.] [வாட்டர்லுப்

போர் ஏற்பாட்டின்போழ்து, நான்கு நாட்களில் 37 மணிநேரம் நெப்போலியன் குதிரை மீது அமர்ந்தபடியே பணிகளை மேற் கொண்டுள்ளார் ; அதுபோழ்து, 96 மணி நேரத்தில் அவர் 20 மணி நேரமே ஓய்வெடுத்துள்ளார். கண் துஞ்சாது, பசி நோக்காது, கொண்ட பணியில் விழிப்புடன் செயலாற்றுவதில் அவர் வல்லவர். போர்க்களத்தில் பகைவர் படையின் பல மற்ற இலக்குகளைக் கண்டறிந்து சீறிப்பாய்ந்து தாக்கி வீழ்த்து வதில் அவர் திறமைமிக்கவர். 'கொக் கொக்க கூம்பும் பருவத்து, மற்றதன் குத்தொக்க சீர்த்த இடத்து' — என்ற குறளின் இலக்கணமாக அமைந்திருந்தது அவரது போர்க்களத் தாக்கு தல். விரைவாக படைமேற்கொண்டு செல்வதிலும், கால மறிந்து, இடமறிந்து, பகைவர்களைத் தாக்கி வீழ்த்துவதிலும், பெற்ற வெற்றியைப் பேணிக்காப்பதிலும் அவர் தீவிரம் காட்டி ஞர். வெற்றிக்கான ஒவ்வொரு வாய்ப்பினையும் பயன்படுத்திக் கொள்ள அவர் தவறியதில்லை. 'இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து, அதனை அவன்கண் விடல்' என்ற குறளுக்கொப்ப தக்கவர்களைத் தெரிந்தெடுத்துப் படைத்துறைத் தளபதிகளாக நியமித்தார். தகுதியும் திறமையும் கொண்ட வீரர்கள் விருதுகளும் பதவி உயர்வுகளும் பெற்றுச் சிறப்பெய் தினர். தோல்வியுற்ற பகைவீரர்களிடம் அன்பும் பரிவும் காட்டி அவர்களது உள்ளங்களையெல்லாம் கவர்ந்தார் நெப்போலியன். களங்கள் பலவற்றை வென்ற நெப்போலியன் வீரர்களின் இதயங் களையெல்லாம் வென்று அவர்களின் இதயச்சிம்மாசனத்தில் கொலு வீற்றிருந்தார். போனபார்ட் பயிற்சி பெற்ற வீரர் ; வலிமை மிக்க படைத்துறை அமைப்பாளர் ; படை நுணுக்கங் களை நன்கறிந்த தளபதி ; களம் பல வென்ற வீரர் ; பெற்ற வெற்றிகளைப் பேணிக்காத்த தீரர். அவரது, படை வீரர் படை ; வெற்றிப் படை ; தீரர் படை ; தியாகப் படை. ஆனால், நெப் போலியனது போரார்வமும் வெற்றிமேல் கொண்ட ஆசையும் அவரது வெற்றிகளனைத்தையும் விரைவில் சிதறடித்து விட்டன ; அவரது படைத்துறைச் சாதனைகள் அனைத்தும் பயனற்றுப் போயின.

நெப்போலியனது வெற்றிகள் நிலையற்றவையெனில், அவரது படைத்துறை சாராத பொதுத்துறைப் பணிகள் கருங்கல்லால் கட்டப்பட்டவை. ஃபிரான்சில் நெப்போலியன் ஆட்சிப்பொறுப் பினை ஏற்றவுடன் நாட்டின் 'காயங்களை ஆற்றவும்' நிருவாகம், தொழில் போன்ற துறைகளில் மறுமலர்ச்சி காணவும், ஒவ்வொரு துறையிலும் மலிந்திருந்த ஒழுக்கக்கேடுகளை மாயக்கவும், சமு தாய, பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைப் போக்கவும் அவர் முற்

பட்டார். புரட்சியின் நல்ல கருத்துகளையெல்லாம் நாட்டின் நலனுக்காக அவர் பயன்படுத்தினர். சாமான்ய மக்களைப் பெரிதும் பாதித்த மேட்டுக் குடியினரின் தனிச்சலுகைகள் அனைத்தும் ஒழிக்கப்பட்டன. பேச்சுரிமை, எழுத்துரிமை ஆகியவற்றை நாட்டின் நலன்கருதிக் கட்டுப்படுத்தினர். நாட்டின் நலனில் நாட்டங்கொண்டு, போனபார்ட்டின் திட்டத்தை ஏற்றுப் பணியாற்ற முன்வந்த சமயவாதிகள், கிராண்டியர் (Girondins), அரசுக் கட்சி ஆதரவாளர்கள் (Royalists), புரட்சியின்போது நாட்டைவிட்டுக் கிளம்பியவர் போன்ற பல்வேறு வகையினரும் பதவிகள் பெற்றுத் திகழ வாய்ப்பளிக்கப்பட்டது.

நெப்போலியன் அதிகாரங்கள் அனைத்தின் மையமாகத் திகழ்ந்தார். தமது அதிகாரத்தை நிலைநாட்டும்பொருட்டு அவர் ஒவ்வொரு துறையிலும் தாமே முன்னின்று செயலாற்றினர். குடியரசின் ஆட்சிமன்ற உறுப்பினர்களையும் பேரரசின் பல்வேறு பகுதிகளுக்கான ஆளுநர்களையும் இளவரசர்களையும் தாமே நியமித்து அவர்களையெல்லாம் நெப்போலியன் தமது பிடியில் வைத்துக்கொண்டார். அதிகாரம் அவரது ஆசைக்கிழத்தி. அரசாங்கத்தின் பணிகள் அனைத்தையும் இணைத்துச் செயல்படுத்தும்பொருட்டு மத்திய செயலகம் ஒன்றினை அவர் உருவாக்கினர். வட்ட அதிகாரிகள் அனைவரும் அவராலே நியமிக்கப்பட்டனர். அதிகாரிகள் அனைவரும் அவருக்குப் பணிந்து நடந்தனர். ஒவ்வொரு நகரத்திலும் மேயர் (Mayor) என்ற அதிகாரியும், ஒவ்வொரு மாநிலத்திலும் பிரிஃபெக்ட் (Prefect) என்ற அதிகாரியும் நியமிக்கப்பட்டு அவர்களுக்குச் சிறப்பான அதிகாரங்கள் பலவும் வழங்கப்பட்டன. அன்று நெப்போலியன் ஏற்படுத்திய தல ஆட்சிமுறை இன்றைய ஃபிரெஞ்சுத் தல ஆட்சிமுறையின் அடிப்படையாக விளங்குகின்றது.

ஃபிரான்சின் நிதிநிலையைச் சீராக்கப் போனபார்ட் மேற்கொண்ட நடவடிக்கைகள் அவரது நிர்வாகத்திறமைக்குச் சான்றாக அமைந்துள்ளன. வரிவசூலில் மலிந்திருந்த ஊழல்கள் ஒழிக்கப்பட்டன ; ஊழலுக்குக் காரணமான அதிகாரிகள் கடுந்தண்டனைக்குள்ளாயினர். வரிவசூலுக்கான செலவுகளும் குறைக்கப்பட்டன. மக்களின் கொடுக்கும் சக்தியை அறிந்து புதுவரிகள் விதிக்கப்பட்டன ; விதிக்கப்பட்டவரிகளும் மக்களால் தாங்கக்கூடிய வகையிலேயே இருந்தன. வருமானவரி விதிக்கப்படவில்லை. சில பொருட்களின் விற்பனையை அரசாங்கமே ஏற்றுக்கொண்டு நிதியைப் பெருக்கியது. சீரழிந்த காகித நாணயம் ஒழிக்கப்பட்டது. 1800ஆம் ஆண்டு நெப்போலியன் ஃபிரான்சின் வங்கியை (Bank of France) உருவாக்கி

ஞர். அது இன்றும் அவரது புகழின் சின்னமாக நின்றுநிலவு கின்றது. அதனைத் திறமையுடன் இயக்கக், கவர்னர் ஒருவரும் நியமிக்கப்பட்டார். அவ் வங்கியின் கிளைகளும் மூன்று நகர்களில் நிறுவப்பட்டன. தொழில்துறை வளர்ச்சிக்கான ஆலோசனைக் குழுக்கள் பல ஆங்காங்கே அமைக்கப்பட்டன. காப்புவரிகளும் புதுப்பிக்கப்பட்டன.தொழில்களைப்பெருக்கும்பொருட்டு தொழில் வல்லுநர்களைக் கொண்ட கழகம் ஒன்றும் அமைக்கப்பட்டது; அக் கழகம் ஆராய்ச்சிகள், சோதனைகள் நடாத்தியும், அவற்றின் பயன்களை மக்களிடம் எடுத்துக்கூறியும், தொழிலாளர்களுக்குக் கடன் தொகைகள் வழங்கியும், திறமைமிக்க தொழிலாளர்களுக்கு பரிசுகளும் பட்டங்களும் வழங்கியும் தொழில்துறையில் ஆர்வத் தையும் ஏற்றத்தையும் ஏற்படுத்தியது. தொழிற்கல்விக்கூடங்கள் பலவும் அமைக்கப்பட்டன. பொருட்காட்சிகளும் ஆங்காங்கே அடிக்கடி இடம்பெற்றன. கிழங்கிலிருந்து சர்க்கரை தயாரிக்கும் தொழிலும், சிகோரி தயாரிக்கும் தொழிலும் தொடங்கப் பெற்றன. பருத்தித் தொழிலும் புதிய இயந்திரங்களின் பயனால் புதிய வேகத்தைப் பெற்றுச் சிறப்பெய்தியது. தொழிற்கூடங் களில் ஆற்றலையும் உற்பத்தியையும் பெருக்கும்பொருட்டும், தொழிலாளர் நலன்களைக் காக்கும்வகையிலும் தொழிற்சட்டங் களும் ஏற்படுத்தப்பட்டன. வணிகமும் வளர்ந்தோங்கியது. வணிகக் கழகங்கள் பல அமைக்கப்பட்டன; அவற்றின் சீரிய பணிகளால் உள்நாட்டு, வெளிநாட்டு வணிகங்கள் வளர்ந்தன. வணிகத்தை விரிவாக்கும்வகையில் சாலைகள் பல புதுப்பிக்கப் பட்டன; புதிய சாலைகள் பல போடப்பட்டன; பாலங்கள் பல கட்டப்பட்டன; கால்வாய்கள் வெட்டப்பட்டன; துறைமுகங் கள் விரிவாக்கப்பட்டன. மெட்ரிக் அளவுமுறை தொடர்ந்து பின் பற்றப்பட்டது. மக்களுக்குத் தேவையான உணவுப்பொருட்கள் குறைவின்றிக்கிடைக்க ஆவன செய்யப்பட்டன. உணவுப்பொருட் களை விற்கும் அங்காடிகளும் தானியக் களஞ்சியங்களும்காவற்படை யின் மேற்பார்வையில் வைக்கப்பட்டன. மாற்றிப் பயிர் செய்யும் முறை (Crop rotation) சீராக்கப்பட்டு உணவுப்பொருள் உற்பத்தி பெருகியது. சாயம் தயாரிப்பதற்குத் தேவையான செடிகளும் பெருமளவில் ஃபிரான்சில் பயிரிடப்பட்டன. ஃபிரெஞ்சுப் படை களை வைத்துக்காக்கும் பொறுப்பினை தோற்ற நாடுகள் ஏற்றுக் கொண்டதால் படைத்துறைச் செலவும் குறைந்தது. நெப்போலி யன் மேற்கொண்ட இத்தகைய நடவடிக்கைகளின் மூலமாக ஃபிரான்சின் நிதி பெருகியது; வணிகம் வளர்ந்தது; உழவுத் தொழில் உன்னத நிலையினைப் பெற்றது; தொழில் துறை ஏற்றமும் எழிலும் பெற்றது; உற்பத்தி பெருகியது; நாட்டின் பொருளா தாரம் சீர்பெற்றுத் திகழ்ந்தது.

நாட்டின் கல்வித் துறையிலும் நெப்போலியன் தனிக்கவனம் செலுத்தினர். கல்வித்துறை திருத்தியமைக்கப்பட்டு விரிவுபடுத் தப்பட்டது. கல்லூரிகளும் பள்ளிகளும் நாடு முழுதும் பெருமள வில் திறக்கப்பட்டன. 1802ஆம் ஆண்டு நெப்போலியன் ஃபிரெஞ் சுக் கல்விநிலையங்களை, ஆரம்பப்பள்ளிகள், உயர்நிலைப்பள்ளிகள், இலைசீ (Lycees) எனப்படும் அரசாங்கப்பள்ளிகள், விஞ்ஞானம், தொழில் ஆகியவற்றைக் கற்றுத்தரும் சிறப்புப்பள்ளிகள் என நான்கு வகைகளாகப் பிரித்துத் திறம்படச் செயல்படுத்தினர். 1808ஆம் ஆண்டு நெப்போலியன் பேரரசுப் பல்கலைக் கழகம் (Imperial University) ஒன்றினையும் நிறுவினர். நாட்டிலுள்ள பிற கல்விநிலையங்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் அதற்கு வழங்கப் பட்டது. அப் பல்கலைக்கழகம் இன்றும் நெப்போலியனது கூர் மதியின் சின்னமாக நின்று அறிவொளி வீசிக்கொண்டிருக்கின்றது. விஞ்ஞான, தொழில்நுட்ப, உடற்பயிற்சிக் கல்வி பெரிதும் போற் றப்பட்டது. அறநெறி, அரசியல் பாடங்கள் புறக்கணிக்கப்பட் டன. அரும்பொருட்காட்சி மனைகள் பல ஆங்காங்கே நிறுவப் பட்டன. இத்தாலியிலிருந்து கொண்டுவரப்பட்ட காட்சிப் பொருட்களைக்கொண்டு அவற்றை நெப்போலியன் சீராக்கினர். பாரிஸ் பெருநகரமும் பலவாறு அழகுபடுத்தப்பட்டுப் பொலிவு டன் விளங்கியது. கலைகள் பலவும் பேணிக் காக்கப்பட்டன; ஆனல், நாடக அரங்குகள் பெரிதும் கட்டுப்படுத்தப்பட்டன.

புரட்சியின் விளைவாகச் சீர்குலைந்துபோன ஆட்சியின் தரத் தை மீண்டும் நிலை நாட்டும் பொருட்டு நெப்போலியன் 1802 ஆம் ஆண்டு சிறப்புப் படித்தரம் அல்லது நன்மதிப்பு அணி (Legion of Honour) என்ற அமைப்பினை உருவாக்கினர். சிறப் பாகப் பணியாற்றும் அதிகாரிகளுக்கு விருதுகளும் பட்டங்களும் வழங்கி அவர்களை ஊக்குவித்தல்வேண்டும் என்பதே அந்த அமைப்பின் நோக்கமாகும். அது பல படிநிலைகளைக் கொண் டிருந்தது. தகுதியும் திறமையும் மிக்க ஃபிரெஞ்சு அதிகாரிகள் பலர் இதன்மூலம் சிறப்பிக்கப்பட்டனர். ஆனல், நாளடைவில் திறமையற்றவர்களும் அதில் நுழைந்து அதன் பெருமையைக் குலைத்தனர்.

நெப்போலியன் பிறப்பால் உரோமன் கத்தோலிக்கக் கிறிஸ் தவர்; அவர் கிறிஸ்தவராகவே இறந்தார் என்பதை அவரது வாழ்விறுதி விருப்ப ஆவணம் (Will) அறிவிக்கின்றது. ஆனல், அவர் தமது வாழ்நாள் முழுதும் எம் மதத்தையும் சாராத பகுத்தறிவாளராகவே வாழ்ந்தார். இறைவன்மீது நம்பிக்கை யோ சமய நம்பிக்கையோ அவரிடம் இடம்பெற்றிருந்ததாகத் தெரியவில்லை. ' சாக்ரட்டீசையும் (Socrates), பிளேட்டோ

(Plato) வையும் பழிக்கின்ற ஒரு சமயத்தை நான் எவ்வாறு ஏற்றுக்கொள்ள இயலும்?' என்று நெப்போலியனே கூறியுள்ளார். அன்றியும், 'நான் எந்தச் சமயத்தையும் சாராதவன் என்பதில் நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகின்றேன்; அது எனக்குப் பெரும் ஆறுதலை அளிக்கின்றது; சமயச்சார்பான கற்பனை அச்சங்கள் என்னை ஆட்டிப்படைக்கவில்லை; வருங் காலத்தைப்பற்றிய பயமும் என்னை வாட்டவில்லை' என்று தாம் இறப்பதற்கு ஒரு திங்களுக்கு முன்னதாக நெப்போலியன் தமது நண்பர் பெர்ட்ரண்ட் (Bertrand) என்பவரிடம் கூறியுள்ளார். ஆகவே, நெப்போலியன் கடவுள், சமய மறுப்புக் கொள்கை கொண்ட பகுத்தறிவாளர் என்பது வெளிப்படை. ஆனால், சமயம் மக்கள்மீது கொண்டிருந்த பிடிப்பின் வலிவினை அவர் நன்குணர்ந்திருந்தார். ஆகவே, அதனைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள அவர் முன்வந்தார். தமது அரசியலா திக்கத்துக்குச் சமயத்தைத் தக்கவாறு பயன்படுத்திக்கொள்ள அவர் தவறவில்லை. மதம் மக்களிடத்தில் பெற்றிருந்த செல் வாக்கை மனதில் கொண்டே நெப்போலியன், 'சமய அமைப்பு இல்லாத அரசு திசைகாட்டி இல்லாத கப்பலைப் போன்றது' என்று கூறியுள்ளார். இறைவனிடத்திலோ, ஏசுவிடத்திலோ, கிறிஸ்தவ சமயத்திலோ அவருக்கு நம்பிக்கை கிடையாது; இருப் பினும், மதம் மக்களிடம் கொண்டிருந்த பிடிப்பில் அவர் நம் பிக்கை கொண்டிருந்தார். அதனைச் சீராக்கி நாட்டு நலனுக்கும் தமது அதிகார நலனுக்கும் பயன்படுத்திக்கொள்ள விரும்பினார் நெப்போலியன். 'எகிப்து நாட்டில் நான் ஒரு முகமதியன், ஃபிரான்சில் நான் ஒரு கத்தோலிக்கன்' என்ற நெப்போலியனது கூற்று மேற்கண்ட கருத்தினை வலியுறுத்துகின்றது. 1802ஆம் ஆண்டு நெப்போலியன் போப்புடன் செய்துகொண்ட ஒற்றுமைப் பத்திரமும் (Concordat) சமயத்தைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ளச் செய்யப்பட்ட ஏற்பாடேயாகும். அதன்படி, கத்தோ லிக்க சமயம் ஃபிரான்சின் அரசுச் சமயமாக அறிவிக்கப்பட்டது. திருச்சபை விதிகள் (Canon law) மீண்டும் நிலைநாட்டப்பட்டன. சமயத்துறை உயர்நிலை ஊழியர்கள் அனைவரும் நெப்போலியனால் நியமிக்கப்பட்டனர்; கட்டுப்படுத்தப்பட்டனர்; அரசாங்க ஊதிய மும் பெற்றனர். போப்பின் ஆணைகள் ஃபிரெஞ்சுச் சமயத்தைக் கட்டுப்படுத்தா என்றும் அறிவிக்கப்பட்டது. ஃபிரான்சில் கத்தோ லிக்க சமயம் அரசின் கட்டுப்பாட்டிற்குள் வந்ததுடன் அரசாங் கத்தின் ஒரு துறையாகவும் செயல்பட்டது. நெப்போலியனது சமய ஏற்பாடு கத்தோலிக்கர்களின் அன்பினையும் ஆதரவினையும் அவருக்கு வழங்கியது. ஆனால், அவரது சமய ஏற்பாடு நாளடை வில் போப்புக்கும் அவருக்குமிடையே பூசலை வளர்த்தது. இறுதி

# நெப்போலியனின் மரபுவழிப் பட்டியல்



யில், 1809ஆம் ஆண்டு போப் சிறைபிடிக்கப்பட்டார். அதன் விளைவாக, நெப்போலியன் சமயத்தின் பகைவராகக் கருதப்பட்டார்; கத்தோலிக்கர்களின் ஆதரவையும் அவர் இழக்க நேர்ந்தது. அவரது பகைவர்களும் அதனைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு நெப்போலியனை வீழ்த்தினர்.

நெப்போலியனது அரசியல் வல்லமையின் (Statesmanship) சிறந்த நினைவுச்சின்னமாகத் திகழ்கின்றது அவரது சட்டத் தொகுதி. தமது புகழுக்குக் காரணம் தமது சிவில் சட்டத்தொகுதியேயன்றி தாம்பெற்ற போர்க்கள வெற்றிகளல்ல என்று நெப்போலியனே பிற்காலத்தில் குறிப்பிட்டுள்ளார். அவரது அரிய பணியின் பயனாக ஃபிரான்சு நாட்டுச்சட்டம் தெளிவான, நேர்மையான, சுருக்கமான, எளிய, முறையான வடிவத்தைப் பெற்றது. பழைய ஆட்சியில் ஏற்படுத்தப்பட்ட சட்டங்களும், புரட்சியின்போழ்து உருவாக்கப்பட்ட சட்டங்களும் தெளிவற்றும் நிலையற்றும் குழப்பம் நிறைந்தும் காணப்பட்டன. நெப்போலியனது புதிய சட்டத்தொகுதி பழைய சட்டங்களில் காணப்பட்ட குறைகளைக் களைந்து குழப்பத்தை நீக்கியது. நீதித்துறையில் நிலவிய ஒழுக்கக்கேடுகள் ஒழிந்தன. ஒவ்வொரு ஃபிரெஞ்சுக் குடிமகனும் தனக்குரிய சட்டப்படியான உரிமைகளை அறியவும், சட்டத்தின் பயனை முழுஅளவில் பெறவும் நெப்போலியனது சட்டத்தொகுதி வழிவகுத்தது.

நெப்போலியனது சட்ட ஏற்பாடு சிவில் சட்டத்தொகுதி (Civil code), கிரிமினல் வழக்கு முறைச் சட்டத்தொகுதி (The Code of Criminal Procedure), தண்டனைச் சட்டத்தொகுதி (Penal code), வணிகச் சட்டத்தொகுதி (Commercial code) போன்றவற்றை உள்ளடக்கியதாகும். 1800ஆம் ஆண்டு சட்ட வல்லுநர்களும் வழக்கறிஞர்களும் அடங்கிய குழு ஒன்றினை நெப்போலியன் அமைத்துப் பல்வேறு சட்டத்தொகுதிகளையும் உருவாக்கும் பணியை அதனிடம் ஒப்படைத்தார். அக் குழுவின் கூட்டங்களில் நெப்போலியனும் கலந்துகொண்டு ஆலோசனைகள் பல வழங்கினார். மக்களின் உரிமைகள், கடமைகள், திருமணம், திருமண விலக்கு, வாரிசுரிமை போன்றவற்றைப்பற்றிய சட்டங்கள் சிவில் சட்டத்தொகுதியில் இடம்பெற்றன. சமத்துவம், சமயச் சகிப்புத்தன்மை, சமமான சொத்துரிமை போன்ற புரட்சிக் கருத்துகளும் இச் சட்டத்தொகுதியில் சேர்க்கப்பட்டன. தந்தைக்கு மனைவி, மக்கள்மீது அளவற்ற அதிகாரம் வழங்கப்பெற்றது. குடும்பத்தின் சொத்து அக் குடும்பத்திலுள்ள மக்கள் அனைவருக்கும் பகிர்ந்து அளிக்கப்பட புதிய சட்டம் வழிசெய்தது.

நடைமுறை வழக்காறுகளும், உரோமானியச் சட்டக் கருத்துகளும் இதில் இடம்பெற்றன. பண்பும் பயனுமிக்க ஒரு நாகரிக சமுதாயத்தை உருவாக்குவதற்கான உறுதியான வழிவகைகளைப் புதிய சட்டத்தொகுதி வகுத்தளித்தது. ஜூரிமுறை, பகிரங்க விசாரணை, வழக்கறிஞர் கொண்டு வாதிடல் போன்றவற்றை உள்ளடக்கிக் கிரிமினல் வழக்குமுறைச் சட்டத்தொகுதி சிறப்படைந்தது. ஜூரிகளை நியமிக்கும் அதிகாரம் பிரிஃபெக்டுகளுக்கு அளிக்கப்பட்டது. தூக்குத்தண்டனை, நாடுகடத்தல், சொத்துகளைப் பறிமுதல் செய்தல் போன்ற கடுமையான தண்டனைகள் தண்டனைச் சட்டத்தொகுதியில் அடங்கின. வணிகச் சட்டத்தொகுதி பொது வணிகத்தைப்பற்றிய சட்டதிட்டங்களையும், கடல் வணிகத்தைப்பற்றிய சட்டங்களையும் உள்ளடக்கியிருந்தது.

1804ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்த நெப்போலியனது சட்டத்தொகுதி இன்றளவும் ஃபிரான்சில் நடைமுறையில் உள்ளது. அது முற்றிலும் பொது அறிவையும், அனுபவத்தையும் அடிப்படையாகக்கொண்டு அமைந்ததேதவிர, அரசியல், சமய தப்பெண்ணத்தின் அடிப்படையில் அமைந்ததல்ல. குடும்ப வாழ்வின் பயன் உறுதிப்படுத்தப்பட்டது ; குடும்பத் தலைவரான தந்தையின் அதிகாரம் நிலைநாட்டப்பட்டது ; தனிப்பட்டோர் சொத்துரிமையும் காக்கப்பட்டது ; பெண்கள் ஆண்களுக்கு அடங்கி நடக்கவும் சட்டம் வழிசெய்தது. அன்றியும், புரட்சிக் கருத்துகள் பல சட்டவடிவம் பெற்றுத் திகழ்ந்தன. சமத்துவம், சமயச் சகிப்புத்தன்மை, பகிரங்க விசாரணை, ஜூரி முறைத்தீர்ப்பு போன்றவை சட்டத்தில் இடம் பெற்றுத் திகழ்ந்தன. இத்தாலி, ஜெர்மனி ஆகிய நாடுகளில் நெப்போலியனது சட்டத்தொகுதி சிறப்பான வரவேற்பினைப் பெற்றது. ஐரோப்பிய நாடுகள் பலவற்றில் இன்று நடைமுறையிலுள்ள சட்டங்கள் நெப்போலியனது சட்டத்தொகுதியை ஆதாரமாகக் கொண்டு அமைக்கப்பட்டவையே ஆகும். ஜஸ்டினியன் (Justinian) காலத்திற்குப்பின் எழுந்த சட்டங்கள் அனைத்திலும் சிறப்பானதும், பகுத்தறிவுக்கு ஏற்றதும், முரண்பாடு இல்லாததும், நடைமுறைக்கு ஏற்ற பொருத்தமுடையதும் ஆகும் நெப்போலியனது சட்டத்தொகுதி என்று வியந்து பாராட்டியுள்ளார் பேராசிரியர் ஹாலன் ரோஸ் (Prof. Hollan Rose). மனித சமுதாயத்தில் முதன் முறையாகப் பாமரரும் படிப்பற்றவரும் அறிந்து பயன்கொள்ளத்தக்கவகையில் அமைந்திருந்தது அச் சட்டத்தொகுதி. நெப்போலியன் தமது வழக்கமான சிந்தனைத்தெளிவு, கூரிய பார்வை ஆகிய முத்திரைகளை அதில் பதித்துள்ளார். நெப்போலியனது சட்டத்தொகுதி அவரது சாதனைகளின் சிகரமாக இன்றும் நின்று நிலவுகின்றது.

'நான் பெற்ற நாற்பது போர்க்கள வெற்றிகளிலோ அல்லது ஐரோப்பிய முடிமன்னர்கள் பலரைப் பணியவைத்ததிலோ எனது புகழ் அடங்கியிருக்கவில்லை ; வாட்டர்லூத் தோல்வி அவற்றை யெல்லாம் மாய்த்துவிட்டது. ஆனால், எனது சட்டத்தொகுப்பும், அரசு அலுவல்பற்றிய எனது குறிப்பேடுகளும், அமைச்சர்களுடன் அவ்வப்போது நான் கொண்டிருந்த கடிதத் தொடர்புகளும் என்றும் சாகாதவை........... எளிமையின் வடிவான எனது சட்டத்தொகுதி பிற சிவில் சட்டத்தொகுதிகளைவிட அதிக அளவு பலன்தரத்தக்கது ; நான் உருவாக்கிய பள்ளிகளும், அவற்றில் நான் புகுத்திய போதனை முறைகளும் ஒரு புதிய தலைமுறையை உருவாக்கிக் கொண்டிருக்கின்றன ; எனது ஆட்சிக்காலத்தில் ஃபிரான்சில் குற்றம் குறைந்துள்ளது ; ஆனால், அதே காலத்தில் இங்கிலாந்தில் குற்றம் பெருகியுள்ளது. ஐரோப்பா முழுதும் ஒரே சீரான அமைப்பு முறையினையும், ஒரு ஐரோப்பியச் சட்டத் தொகுதியினையும்,ஒரு ஐரோப்பிய நீதிமன்றத்தினையும் நிலைநாட்டி, ஐரோப்பியர் அனைவரையும், ஒரே மக்களாக்க நான் பெரிதும் விரும்பினேன்' என்று போனபார்ட் தமது சாதனைகளைத் தொகுத்துக் கூறியுள்ளார்.

போனபார்ட்டின் சாதனைகள் ஃபிரெஞ்சுப் பூபாகத்தில் மட்டுமின்றி, ஐரோப்பாக் கண்டத்தில் மட்டுமின்றி, அகிலமெல்லாம் அரிய விளைவுகளை உருவாக்கியுள்ளது. ஐரோப்பாவில் அவர் அடிக்கடி நடாத்திக்காட்டிய படையணிவகுப்புகளும் அவரால் மாற்றியமைக்கப்பட்ட அரசியல் எல்லைகளும் அறிமுகப்படுத்தப்பட்ட புதிய கொள்கைகளும் ஆக்கப்பட்ட புதிய அரசுகளும் மக்ளிடையே உருவாக்கப்பட்ட தேசிய எழுச்சியும் நாட்டுப்பற்றும் சீரிய பலன்கள் பலவற்றின் பிறப்பிடமாகத் திகழ்கின்றன. தேசிய நாடுகள் பலவற்றை இணைத்து ஐரோப்பாவைத் திருத்தி அமைத்தது அவரது அரிய பணிகளில் ஒன்றாகும். சிதறிக்கிடந்த ஜெர்மனி சீரான இணைப்பினைப் பெற்று வலிவுடனும் பொலிவுடனும் திகழ்வதற்கான வாய்ப்பினைப் பெற்றது. 1803ஆம் ஆண்டு 360 சிறு நாடுகளாகப் பிரிந்து பிளவுபட்டிருந்த ஜெர்மனியை நெப்போலியன் 39 நாடுகளைக் கொண்ட கூட்டிணைவாக மாற்றி அமைத்தார். ஜெர்மானியக் கூட்டரசு மன்றத்தில் (Diet) புராட்டஸ்டண்டுகளின் (Protestant) பெரும்பான்மையும் நிலைநாட்டப்பட்டது. 1806ஆம் ஆண்டு புனித உரோமானியப் பேரரசு (Holy Roman Empire) ஒழிக்கப்பட்டது ; அதற்குப் பதிலாக ஜெர்மானிய நாடுகளின் இணைவு (Confederation)ஒன்று உருவாக்கப்பட்டது. ஜெர்மானிய அமைப்பு முறையில் ஆஸ்திரியாவை நீக்கியது ஜெர்மானிய ஐக்கியத்தின் முக்கிய படிகளில் ஒன்றாக

அமைந்தது. ஆகவே, ஜெர்மனியை இணைத்து ஒன்றுபடுத்தும் பணியில் நெப்போலியன் பிஸ்மார்க்கின் (Bismarck) முன்னோடியாக விளங்கினார். 'மக்கள் நலன் கருதிய, சட்ட வரம்பிற்கு உட்பட்ட மன்னனாகப் பணியாற்றுக ; ஜெர்மானிய மக்கள் அறிந்திராத உரிமை, சமத்துவம், நன்னலம் ஆகியவற்றை உமது மக்கள் ஓரளவு அனுபவித்தல் மிகவும் அவசியமானதாகும். பிரஷ்யாவுக்கு எதிரான ஆற்றல்மிக்க தடையாக அது அமையும். அனுபவ அறிவும் மக்களுரிமைகள் அடங்கியதுமான இயக்கத்தின் நலன்களையெல்லாம் சுவைத்த மக்கள் பிரஷ்ய வல்லாட்சியை நாடார்' என்று புதிய வெஸ்ட்பேலியா (West Phalia) மன்னருக்கு அறிவுரை கூறியுள்ளார் நெப்போலியன்.

ஜெர்மனியைப்போல இத்தாலிய ஐக்கியத்திற்கும் (Unification of Italy) நெப்போலியனே முன்னோடியாவார். இத்தாலியில் ஆதிக்கம் செலுத்திய அந்நிய அரசமரபுகள் (Dynasties), போப்பின் ஆட்சி (Papacy), வட்டாரக் குறுகிய மனப்போக்கு ஆகிய மூன்றும் இத்தாலிய ஒருமைப்பாட்டின் தடைகளாக அமைந்திருந்தன. அவைகளையெல்லாம் தகர்த்தெறிந்து இத்தாலியில் ஐக்கியத்தை நிலைநாட்ட வழிவகுத்தார் நெப்போலியன். அவர் பெற்ற வெற்றிகளால் இத்தாலியின் பெரும்பகுதி அவரது ஆதிக்கத்தின் கீழ் வந்தது. இத்தாலிய நாடுகளின் எல்லைகளை அவர் விருப்பம் போல் மாற்றி அமைத்தார். பீட்மாண்ட் (Piedmont), பார்மா (Parma), ஜெனோவா (Genoa), உரோம் நகரம் (Rome), அதைச் சுற்றியுள்ள பகுதிகள், சேவாய் (Savoy), டஸ்கனி (Tuscany), ஆகிய பகுதிகளை ஃபிரான்சுடன் இணைத்து அங்கு தமது நேரடி ஆட்சியை நெப்போலியன் ஏற்படுத்தினார். இலம்பார்டி (Lombardy), மொடினா (Modena), வெனிஸ் (Venice), நடு இத்தாலியில் போப்புக்குச் சொந்தமான இடங்கள் ஆகியவற்றை இணைத்து அதற்கு நெப்போலியன் 'இத்தாலி அரசு' என்று பெயரிட்டார். அதனைத் தமது பிரதிநிதியைக்கொண்டு அவர் ஆண்டார். தென் இத்தாலியைத் தனியரசாக்கி அதற்குத் தமது தமையன் ஜோசப் போனபார்ட்டை அவர் அரசராக்கினார். ஃபிஷர் (Fisher) கூறுவதைப் போல, ஆல்ப்ஸ் மலையிலிருந்து மெசென்னா கடற்கால் வரை ஃபிரெஞ்சுச் சட்டத்தொகுதியினை வழக்கறிஞர்கள் செயல்படுத்திவந்தனர்; பொறியியல் வல்லுநர்கள் சாலைகளையும் பாலங்களையும் அமைத்துவந்தனர் ; வருவாய்த்துறையினர் வரிவிதிப்புக்குரிய நிலவுடைமையின் அளவுகளை ஆய்வுசெய்துவந்தனர் ; நிருவாகத் துறையினர் மடத்தின் சொத்துகளை மக்களுக்குப் பயன்படும்படி செய்துவந்தனர் ; நகரங்கள் ஒளிமயமாக்கப்பட்டன ; படைக்கு ஆட்கள் கட்டாயமாகச் சேர்க்கப்பட்டனர்.

ஜெர்மனி, இத்தாலி ஆகிய நாடுகளைப்போன்று சுவிட்சர் லாந்து, போலந்து ஆகிய நாடுகளிலும் தேசிய உணர்வும் அரசியல் ஒற்றுமைக்கான அறிகுறிகளும் தோன்றின. கிரேக்க நாட்டில் எழுந்த தேசிய உணர்வு கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் பிரச்சனையை (Eastern Question) உருவாக்கியது. ஃபிரெஞ்சுப் புரட்சிக்கு முன்பு தேசிய நாடுகள் ஐரோப்பாவில் சிறப்பான இடத்தினைப் பெற்றிருக்கவில்லை. மன்னர்கள் நிலவுலகின் மகேசன்களாகக் கருதப்பட்டனர். அவர்களது செயல்களை மக்கள் ஆண்டவன் செயல்கள் என எண்ணி அடிபணிந்தனர். ஆனால், புரட்சிக்குப்பின் நிலைமைகள் மாறின. புரட்சிக் கருத்துகள் மக்களை ஒரே அணியில் திரட்டின; நெப்போலியன் அக் கருத்துகளின் செயல்வீரராகத் திகழ்ந்தார். தேசிய உணர்வு ஐரோப்பாமுழுதும் சுடர்விட்டு எரியத் தொடங்கியது. அந்த உணர்வு எகிப்து, துருக்கி ஆகிய பகுதிகளில் புதிய எழுச்சியையும் விழிப்புணர்ச்சியையும் உருவாக்கியது. தேசியக் கனல் விரைவில் ஆசியா முழுதும் பரவியது. ஆசியாவை விடுவித்து அங்குள்ள நாடுகளிலெல்லாம் மக்களரசுகளை நிலைநாட்டவேண்டும் என்ற ஆவல் நெப்போலியனது நெஞ்சில் ஆழமாகப் பதிந்திருந்தது. இத்தாலியை வென்ற போனபார்ட் தமது வெற்றிப்பார்வையை கான்ஸ்டாண்டி நோபில் (Constantinople) மீதும் கெய்ரோ (Cairo) மீதும் செலுத்தத் தவறவில்லை. நடுநிலக்கடலில் ஃபிரான்சின் ஆதிக்கத்தை நிலைநாட்ட அவர் நாட்டம் கொண்டிருந்தார். எகிப்து நாட்டை வென்று அங்கு புரட்சிக் கருத்துகளைப் பொதுவுடைமை ஆக்கினார். தாம் வென்ற நாடுகளின் மக்களைத் தமது அறிவார்ந்த பணிகளால் கவர்ந்தார். அவர்களது சமய, சமுதாயப் பழக்க வழக்கங்களுக்கு அவர் மதிப்பளித்தார். எகிப்து நாட்டை எழிலும் ஏற்றமும் பொலிவும் வலிவுமிக்க நாடாக்க அவர் மேற்கொண்ட நடவடிக்கைகள் அறிஞர் பலராலும் பாராட்டப்பட்டுள்ளன. எகிப்தில் நெப்போலியன் புகுத்திய ஃபிரெஞ்சு நீதிமுறை, விஞ்ஞான, தொழில்நுட்பக் கல்வி ஆகியவற்றை வரலாற்று அறிஞர் அப்துல் ரகுமான் வியந்து பாராட்டியுள்ளார். எகிப்தில் ஒரு வீட்டை உடைத்து அங்குள்ளோரைக் கொடுமைக்குள்ளாக்கிய குற்றத்திற்காக ஃபிரெஞ்சு வீரர்கள் சிலருக்கு மரண தண்டனை விதித்த நெப்போலியனது நீதி வழுவாச் செயலையும், தளபதி கிளிபெரின் (Kleber) படுகொலைக்குக் காரணமானவர்கள்மீது தொடுத்த வழக்கின் நேரிய போக்கினையும் சீரிய விசாரணை முறையினையும் அவ்வறிஞர் ஏற்றிப் போற்றியுள்ளார். கெய்ரோவைப் பிடித்த பின்பு நெப்போலியன் மேற்கொண்ட முதல் நடவடிக்கை அங்குள்ள மக்களுக்குக் காட்டிய விஞ்ஞானப் பொருட்காட்சியாகும். விஞ்ஞானக் கருத்துகளைப் பரப்பும் தூதராக நெப்போலி

யன் விளங்கினர். அவர் புதிய விழிப்புணர்ச்சியைத் தோற்றுவித்தார்; அவ் விழிப்புணர்ச்சி ஸ்பெயின் நாட்டிலிருந்து எகிப்து வரை சுடர்விட்டு எரிந்தது. நெப்போலியன் தனி மனிதரல்ல; அவர் ஒரு தாபனம் (அமைப்பு). ஃபிரெஞ்சுப் புரட்சியும் நெப்போலியனும் உலகத்தின் அறிவுக்கண்களைத் திறந்த பகுத்தறிவு இயக்கங்களாகும்.

ஐரோப்பாவின் கொடுங்கோலன் (Tyrant) நெப்போலியன் என்று திறனாய்வாளர்களில் சிலர் குறிப்பிட்டுள்ளனர். ஃபிரான்சின் இயல்பான எல்லைகளைக்கொண்டு அவர் மனநிறைவு கொள்ளவில்லை; ஐரோப்பா முழுவதையும் தமது ஆதிக்கத்துக்குட்படுத்தி அங்கு வல்லாட்சி நடாத்திட அவர் விழைந்தார்; ஐரோப்பிய நாடுகள் அனைத்தையும் இங்கிலாந்துக்கெதிராக இணைக்கும் பொருட்டு அவரால் உருவாக்கப்பட்டதே கண்டத் திட்டம்; அவரது அதிகாரமும் ஆணவமும் ஐரோப்பாவுடன் நின்றுவிடவில்லை; ஆசியாவிற்குள்ளும் நுழைந்தன; அலெக்சாண்டர், சார்லமேன் ஆகியோரின் அடிச்சுவடுகளை அவர் பின்பற்றினர் என்பவை அவர்கள் தங்கள் கருத்தினை நிலைநாட்டக் காட்டும் ஆதாரங்களாகும். ஆனல், அவர்களது கருத்து முற்றிலும் உண்மையானதல்ல. ஐரோப்பா முழுவதையும் நெப்போலியன் தமது ஆதிக்கத்தின்கீழ் கொண்டுவரவிரும்பினர் என்பது உண்மை. ஆனல், ஐரோப்பிய நாடுகள் அனைத்தையும் பிற்போக்காளர்களின் பிடியிலிருந்து விடுவித்து மக்கள் நலன் கருதிய சட்டபூர்வமான ஆட்சியை அங்கு நிலைநாட்டி, அவற்றையெல்லாம் புரட்சிக் கருத்துகளின் பூங்காவாக மாற்றியமைக்க நெப்போலியன் முற்பட்டார் என்பதும் முற்றிலும் உண்மையாகும். தாம் வென்ற நாடுகளில் அவர் உருவாக்கிய அரசுகள் அவரது முற்போக்குக் கருத்துகளின் பயிற்சிக்கூடங்களாக அமைந்துள்ளன. சமத்துவம், சகோதரத்துவம், சமயச் சகிப்புத் தன்மை, விஞ்ஞானக்கல்வி, பகுத்தறிவு போன்றவை அங்கெல்லாம் பீடுநடைபோட்டன. அத்தகைய நல்ல கருத்துகளையெல்லாம் நானிலமெங்கும் எடுத்துச்செல்லும் தூதராக அவர் செயல்பட்டார். அவற்றைப் பரப்புவதற்குரிய கருவியாக அவர் போரினைக் கையாண்டார். அவரது போர்முறை உடனடியாக முழுப்பயனை அளிக்கவில்லை. இருப்பினும், அவரது தூய்மையான நோக்கத்தை அகிலம் அறிந்தது. மக்கள் நலனில் மாருத நாட்டங்கொண்டு, உரிமை, ஒப்புணர்ச்சி, உடன் பிறந்தார் உணர்ச்சி ஆகிய உன்னதக் கருத்துகளை உலகெல்லாம் பரப்ப முற்பட்ட போனபார்ட்டைக் 'கொடுங்கோலன்' என்று கூறுவது பொருத்தமுடையதன்று.

கிராண்டும் டெம்பர்லியும் (Grant and Temperley) கூறுவதைப்போல, வியத்தகு மூளை வலிவினையும் பண்பாற்றலையும் பெற்றிருந்தார் நெப்போலியன். எந்த நாட்டிலும் எந்தச் சூழ்நிலையிலும் தமக்கென தன்னிகரற்ற இடத்தினைப் பெற்றுத் திகழும் ஆற்றல் அவரிடம் ஐயத்திற்கிடமின்றி குடிகொண்டிருந்தது. கடுமையாக உழைக்கும் ஆற்றல், அமைப்பாண்மைத் திறன், விரைந்த நுழைபுலம் (Rapid insight), துணிவு, பொறுப்பினை உணர்ந்து ஏற்றுக் கொள்ளும் ஆர்வம், உருவாக்கிய திட்டத்தைச் செயல்படுத்துவதில் உறுதி போன்ற ஒரு நல்ல வீரனுக்குரிய அருந்திறன் அனைத்தும் அவரிடம் ஒட்டுமொத்தமாகக் காணப்பட்டன. குழப்பமும் கொந்தளிப்பும் நிலைத்திருந்த ஃபிரான்சில் அமைதியையும் ஒழுங்கினையும் சட்டத்தையும் நிலைநாட்டிய பெருமை அவரைச் சாரும். உரோமாபுரியில் ஏற்பட்ட புரட்சிக்கும் குழப்பத்திற்கும் பின்பு ஜூலியஸ் சீசர் உரோமானியப் பேரரசை உருவாக்கியதைப் போல, பியூரிட்டானியர் புரட்சி (Puritan Revolution) க்குப்பின் இங்கிலாந்தில் ஆலிவர் கிராம்வெல் (Oliver Cromwell) தமது தன்னாட்சியை அமைத்ததைப் போல, ரோஜாப்பூச் சண்டைகளுக்குப் பின் (Wars of the Roses) டியூடர் வல்லாட்சி (Tudor Despotism) இங்கிலாந்தில் உதித்ததைப் போல, நூறாண்டுப் போரின் (Hundred years war) குழப்பங்களுக்குப்பின் ஏழாவது சார்லசும் (Charles VII), பதினொன்றாம் லூயியும் (Louis XI) ஃபிரான்சில் நிலையான ஆட்சியை நிறுவியதைப் போல, முப்பதாண்டுப் போருக்குப்பின் ஜெர்மனியில் முழுமையான தனி ஒருவராட்சி மலர்ந்ததைப்போல, ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப்பின் நெப்போலியன் தமது பேரரசை உருவாக்கினார். ஆனால், அவரது பேரரசு அவரது காலத்திலேயே உருக்குலைந்து போயிற்று. அலெக்சாண்டரைப்பற்றி நெப்போலியன் வியந்து பாராட்டிக் கூறுகின்ற நேரத்தில் அவர் தமது தோல்வியை ஒப்புக்கொள்ளுகின்றார். 'நான் அலெக்சாண்டரிடம் விரும்புவது அவர் மேற்கொண்ட போர் ஏற்பாடுகளை அல்ல; அவை நமக்குப் புரியாதவை; ஆனால், அவர் கடைப்பிடித்த அரசியல் முறைகளேயேயாகும். தமது முப்பத்தி மூன்றாவது வயதில் அவர் நன்கு நிலைநாட்டப்பட்ட பேரரசு ஒன்றினைத் தமது தளபதிகளிடம் விட்டுச் சென்றார்; அதனை அவர்கள் பங்கிட்டுக் கொண்டனர். தாம் வென்ற நாட்டுமக்களின் இதயங்களை வெல்லுகின்ற கலையிலும் அவர் அரிய ஆற்றலைப் பெற்றிருந்தார்.' பேராசிரியர் ஹாலன் ரோஸ் கூறுவதைப்போல, மிகச்சிறந்த பேரரசரும் அமைப்பாளருமான நெப்போலியன், தாம் ஆட்சிப்பொறுப்புக்கு வருவதற்கு முன்பிருந்ததைவிட அதிக அளவு ஃபிரான்சின் வலிமை

யைக் குறைத்து, பகைவர்களின் வலிமையைப் பெருக்கி விட்டார்.

டாக்டர் ஸ்லோன் (Dr. Sloane) குறிப்பிடுவதைப்போல, நெப்போலியன் தமது காலத்தின் உருமாதிரியான (Typical) ஒரு மனிதராக விளங்கினுர்; உரிமை பெற்ற நகரத்தின் உரிமைக் குடிமகனின் உருமாதிரியாக (Typical burgher)த் திகழ்ந்தார்; அமைதிக் காலத்தில் அவர் ஓர் உருமாதிரியான வல்லரசர்; அரசியலில் அவர் ஓர் உருமாதிரியான கருத்தியல் கோட்பாட்டாளர் (Typical idealist); பகுத்தறிவாளர்; களைப்பையும் சோர்வையும் வென்ற ஆற்றல் மறவர். ஆகவே, அவர் சிறப்புகள் பலவற்றைப் பெற்றுத் திகழ்ந்தார். ஆயினும், அவரது பேரரசு காலமென்னும் நீரோடையில் தோன்றிய பகட்டான நீர்க்குமிழியைப் போன்றது. தமது காலத்திய நாகரிகத்தைக் கிரேக்க மயமாக்கி அகிலத்தைக் கிறிஸ்தவ சமயத்திற்கு ஆயத்தமாக்கினுர் அலெக்சாண்டர். பண்பற்ற காட்டுமிராண்டிகளின் கூடாரமான ஐரோப்பாவைப் பண்படுத்தி தேசியம், சமயச் சார்பற்ற கருத்துகள் ஆகியவற்றை அங்கு தூவி அதனை நாகரிகத்தின் கோட்டையாக அவர் மாற்றியமைத்தார். நெப்போலியனும் ஐரோப்பாவில் நீடித்திருந்த பரம்பொருட் கொள்கையினை அடிப்படையாகக் கொண்ட ஆட்சியமைப்பு முறையை வேரோடும் வேரடி மண்ணோடும் சாய்த்தார்; ஐரோப்பாவெங்கும் தனி மனித உரிமைகள் போன்ற நவீனக் கருத்துகளைப் பரப்பினுர்; அழுகி நாற்றமெடுத்த புனித உரோமானியப் பேரரசை (Holy Roman Empire) ஒழித்துக்கட்டினுர். நீண்ட நெடுங்காலமாகப் புறக்கணிக்கப்பட்ட தேசிய இனம், தந்தையர் நாடு ஆகிய கருத்துகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து அவற்றை செயல்படுத்தினுர். அன்றியும், அமெரிக்காவின் விடுதலைக்கும் அவர் மறைமுகமாக வழிவகுத்தார். லூசியாஞ (Louisiana) வை நெப்போலியன் விற்றதின்மூலம் அமெரிக்கரிடையே தேசிய உணர்வை வளர்த்தார். லூசியாஞவில் தோன்றிய தேசிய உணர்வும், உரிமை வேட்கையும் விரைவில் அமெரிக்கா முழுதும் பரவி அமெரிக்க விடுதலைக்கு வித்திட்டன.

'வழக்கமீறிய (Extraordinary) நல்லன, தீயனவற்றின் சீரிய கலவை (Mixture) நெப்போலியன்' என்றுர் ஜவஹர்லால் நேரு. துணிவு, ஆண்மை, தன்னம்பிக்கை, கற்பனைத்திறன், வியத்தகு ஆற்றல், விரிந்த பொதுநலன் ஆகியவற்றின் மொத்த உருவமாக நெப்போலியன் விளங்கினுர். அவர் ஒரு சிறந்த தளபதி; போர்க்கலை முதல்வர் (Master of the art of war); அலெக்சாண்டர், செங்கிஸ்கான் போன்ற உலகப் பெருவீரர்களுடன் ஒப்பிடக்கூடிய

தகுதி படைத்தவர். ஆனல், சுயநலமும் அதிகார வெறியும் ஆணவச் செருக்கும் உடையவர். 'அதிகாரமே எனது ஆசைக் கிழத்தி ; அவளைப் பிறர் தொடவோ என்னுடன் சேர்ந்து பிறர் அவளை அனுபவிக்கவோ நான் ஒருபோதும் அனுமதியேன்' என்று நெப்போலியன் கூறியுள்ளார். அத்தகைய ஆசையே அவரது அழிவிற்கு அடிப்படையாக அமைந்தது. நேரு கூறுவதைப்போல, வியத்தகு ஆற்றல் கொண்ட சிறந்த மனிதர்களைப் பற்றிய மதிப்பீடு உண்மையிலேயே கடினமான செயலாகும் ; நெப்போலியனைப் பற்றி மதிப்பிடுவதும் எளிதல்ல. இருப்பினும், அவர் செயற்கரிய செய்த பெரியார்; ஏழை நடுத்தர மக்களின் இதயங்களை வென்றவர் ; பணக்காரர்கள், பாமர மக்களைச் சுரண்டி வாழ்ந்தவர், சமயத்தைக் காட்டித் தங்களது வாழ்வை வளமாக்கிக்கொண்டவர் போன்றவர்களுக்கு அவர் 'குலைநடுக்கத்தை' உருவாக்கியவர். அக்பரது கண்ணோட்டத்தைப்போல நெப்போலியனது கண்ணோட்டமும் (glance) காந்தத்தைப்போன்று கவர்ந்திழுக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தது. 'நான் பல களங்களை, கருவிகளைக் கொண்டல்ல, கண்களாலேயே வென்றுள்ளேன்' என்று நெப்போலியன் குறிப்பிட்டுள்ளார். அவரது பார்வை அத்தகைய ஆற்றலைப் பெற்றிருந்தது. தமது சொந்த வாழ்வில் நெப்போலியன் எளிமையைக் கையாண்டார். 'அளவுக்கு மிஞ்சி உணவு உட்கொள்ளுபவன் நோய்வாய்ப்படுகின்றான் ; அளவுக்குக் குறைவாக உண்பவனை நோய் நாடுவதில்லை' என்பது அவரது கருத்து. உணவு உட்கொள்ளுவதில் நெப்போலியன் அதிகமான ஆர்வம் காட்டவில்லை. படாடோபமான முறையிலே, பத்துப்பன்னிரண்டு வகைகள் கொண்ட விருந்து உண்டிடுவதிலே அவர் விருப்பம் கொள்ளவில்லை. பேரரசரான பின்பு ஏற்பாடு செய்யப்பட்ட ஆடம்பர விருந்திலேகூட அவர் மனம் ஈடுபட்டதில்லை. அதனை அவர் காலக்கேடு என்று கருதினர். பானங்கள் பருகுவதிலும் அவருக்கு நாட்டம் அதிகமில்லை. போதைதரும் பழச்சாறு பருகும்போதுகூட, அவைக்காகவும் உடல் வலிவுக்காகவும்தான் அருந்த வேண்டுமே தவிர, உருண்டு புரளவோ, உளறுமொழி பேசவோ அல்ல என்ற எண்ணத்தில், அதில் நிரம்பத் தண்ணீர் கலந்து குடிப்பார்.

பேரறிஞர் பெருந்தகை அண்ணு கூறுவதைப் போல, 'நெப்போலியன் ஒரு பிறவித்தளபதி ........... பட்டாடைகளாலான கூடாரத்தில் ஓய்வாகச் சாய்ந்து கொண்டு, களியாட்டத்துக்கிடையே கட்டளை பிறப்பித்துக்கொண்டுள்ள படைத்தலைவன் அல்லன் நெப்போலியன் ; குடும்பப் பெருமை காரணமாகவோ கொலுமண்டபத்துத் தயவாலோ படைத்தளபதியானவன் அல்லவே அவன். ஓயாத உழைப்பினுல், மங்காத வீரத்தால், செய

லாற்றும் திறத்தால் முன்னணி நிற்பவன்'. 'களத்திலே பெறக் கூடிய சில வெற்றிகளை இழக்கக்கூட நான் சம்மதிப்பேன் ; ஆனல், காலம் வீணுக்கப்படுவதை, இழக்கப்படுவதை மட்டும் நான் விரும்பவேமாட்டேன்' என்று நெப்போலியன் அடிக்கடி கூறுவ துண்டு. குதிரை மீதேறி களத்திலே காற்றெனச் சுற்றிச்சுற்றிப் பணியாற்றுவார் ; வேலை கடினமானது ஆகஆக அவரது சுறு சுறுப்பும் வளரும் ; களத்தில் ஆபத்து அதிகரிக்க அதிகரிக்க நெப்போலியனது வீர உணர்ச்சி கொழுந்துவிட்டு எரியும். பசி, தூக்கம் மறந்து அவர் பம்பரமாகச் சுற்றிப் பணியாற்றுவார். குதிரைமீது அமர்ந்தபடியே ஓரிடத்தில் சில மணித்துளிகள் கண் களை மூடிக்கொள்வார்—தூக்கம். உடனே விழித்துக்கொள்வார் ; புதுவேகம் பிறக்கும் ; புலியெனப் பாய்ந்து தாக்குவார் பகைவர் படையினரை. செயலாற்றுவதற்கான வேகம் அளவிட முடியாத படி அவரிடம் குடிகொண்டிருந்தது. ஆனல், 'சில தளபதிகளைப் போல பார்க்கவே பயங்கரமாகத் தோற்றமளிக்கும் பேருருக் கொண்டவரல்ல நெப்போலியன். நாலடி, பத்து அங்குல உயரம் ; ஐந்தடிக்கும் குறைவான உயரமுள்ள அவர் குதிரைமீது அமர்ந்திருக்கும்போது மட்டுமே கம்பீரமாகத் தோன்றுவார்'. (அறிஞர் அண்ணு). நேர்த்தியான உடற்கட்டு; களைப்பு, சலிப்பு, அயர்வு, சோர்வு அவரைத் தீண்டுவதில்லை. நினைத்தபோது தூங்கவும் விரும்பியவுடனே விழித்துக்கொள்ளவும் அவரால் இயலும். அவரது உடலும் உள்ளமும் ஒரே சீரான உறுதியைப் பெற்றிருந்தன. ஒரே நாளில் நூறு கல் தொலைவு தொடர்ந்து பயணம் மேற்கொள்ளல் அவருக்கு மிகவும் எளிதான செய லாகும்.

நெப்போலியன் தமது படையில் ஒரு தனித்தன்மையை உருவாக்கினர். வாலிப முறுக்கினர், போர்த்திறன் மிக்கவர்கள் அவரது படையின் தளபதிகளாக்கப்பட்டிருந்தனர். நரைத்த தலையினர், நாற்பதாண்டு போர்க்கள அனுபவம் பெற்றவர்கள் மட்டுமே படைத்தலைமை ஏற்கவேண்டும் என்ற பழைய முறையை அவர் மாற்றிவிட்டார். அவரே முப்பது ஆண்டினர். அன்றியும் அவரது படை நாட்டுப்பற்றுமிக்க எழுச்சிப்படை ; வெகு பாடு பட்டுக் கண்டெடுத்த குடியரசு முறையின் பகைவர்களை அழித் திடப் போரிடும் இலட்சியப்படை. இருப்பினும், குடியாட்சி முறை யில் நெப்போலியன் அதிக ஆர்வம் காட்டவில்லை. திறமையாளர் அரசு நடாத்த வேண்டும் என்பதே அவரது கொள்கை. ஆனல், குடியரசின் பகைவர்களைச் சாடுகின்ருேம் என்று படையினர் இலட்சியம் கொள்வதால் வீரம் கொப்பளிக்கின்றது அவர்களிடம் என்ற உண்மையை அறிந்த நெப்போலியன் அந்த உணர்ச்சியைப்

படையில் வளர்த்தார். அந்த உணர்ச்சியுடன், வெற்றி பெற றுத்தரவல்ல தளபதியால் நடத்திச்செல்லப்படுகின்றோம் என்ற உற்சாகமும், வெற்றி உறுதி என்ற நம்பிக்கையும் கலந்து ஃபிரெஞ் சுப் படை பிறர் பீதி கொள்ளத்தக்க துணிவுடன் போரிட்டு வெற்றி பெற்றது.

## ஃபிரெஞ்சுப் புரட்சியின் குழந்தை நெப்போலியன் :

ஃபிரெஞ்சுப் புரட்சியின் மகன், புரட்சியின் வாரிசு—என் றெல்லாம் பொதுவாக நெப்போலியன் அழைக்கப்படுகின்றார். அவரே தம்மை 'புரட்சியின் குழந்தை' என்று குறிப்பிட்டுள்ளார். ஃபிரெஞ்சுப் புரட்சியே நெப்போலியனது உயர்வுக்கு வழி வகுத் தது. ஃபிரான்சில் ஏற்பட்ட பெரும்புரட்சி அந் நாட்டின் பழைய அரசியலமைப்புகளையெல்லாம் ஒழித்துவிட்டு அங்கு இராணுவ வல்லாட்சியை உருவாக்கியது. அதன் விளைவாக படைத்துறை யில் நன்கு பயிற்சி பெற்றிருந்த நெப்போலியன் ஃபிரான்சின் அரசியல் அரங்கில் சிறப்பானதொரு இடத்தினைப் பெறுவதற் கான வாய்ப்பினைப் பெற்றார். புரட்சி இலக்கியம் அவரது துடிப் பான இளம் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. உரிமை (Liberty), ஒப்புணர்ச்சி (Equality), உடன் பிறந்தார் உணர்ச்சி (Fraterity), போன்ற புரட்சிக் கருத்துகள் அவரது உள்ளத்தில் உறுதியான இடத்தைப் பிடித்தன. அவற்றையெல்லாம் மக்களின் உள்ளங் களிலும் பதியவைக்கும் பணியினை அவர் மேற்கொண்டார். குலப்பெருமையோ, குடிப்பெருமையோ இல்லாத சாமான்ய நெப்போலியன் ஃபிரெஞ்சுப் புரட்சியின் பயனாக ஃபிரெஞ்சுப் பேரரசின் மாமன்னரானார். மக்கள் நலன் கருதி, மக்க ளால் மாமன்னராக்கப்பட்ட நெப்போலியன், புரட்சிக் கருத்துகளை பூபாகம் முழுதும் பரப்பும் செயல்வீரரானார். புரட்சியால் புதிய வாழ்வினைப் பெற்றுத் திகழ்ந்தார் போனபார்ட்; புரட்சிக் கருத்துகளும் அவரால் புதிய வலிவும் பொலிவும் பெற்றுப் பீடு நடைபோட்டன ஐரோப்பிய அரசியலரங்கில். தம்மைச் சீராட்டி, பாராட்டி வளர்த்த புரட்சித்தாயைப் பேணிக்காக்கும் நன்றிமற வா நல்மகனாக விளங்கினார் நெப்போலியன். புரட்சித்தாயும் தன் தலைமகனின் அரும்பணி கண்டு ஆனந்தக்கண்ணீர் வடித்தாள்.

பேராசிரியர் ஹேயிஸ் (Professor Hayes) கூறுவதைப்போல, 1799க்கும் 1808க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் நெப்போலியன் ஃபிரான்சிலும் ஐரோப்பாவிலும் ஃபிரெஞ்சுப் புரட்சியின் குழந் தையாகவே காணப்பட்டார். அமைதிக்காலத்தில் அவர் மேற் கொண்ட அரும்பணிகள் அவர் 'புரட்சியின் குழந்தை' என்பதின்

அடிப்படைச் சான்றுகளாக அமைந்துள்ளன. சொத்து, சட்டம், சமயம், கல்வி, நிருவாகம், நிதி ஆகிய துறைகளில் அவர் மேற்கொண்ட சீர்திருத்தங்கள் நெப்போலியன் ஃபிரெஞ்சுப் புரட்சியின் நேர்த்தியான மகன் என்பதை உறுதிப்படுத்துகின்றன. அவரது ஆட்சியில் மக்களின் உரிமைகள் ஓரளவு பறிக்கப்பட்டிருப்பினும் மக்களிடையே ஒப்புணர்ச்சி பெருமளவு வளர்ந்தது. புரட்சியில் பூத்த ஒப்புணர்ச்சி என்ற கருத்துக்கு செயல்முறை வடிவம் தந்து சிறப்பித்தார் நெப்போலியன். ஏட்டளவில் இருந்த ஒப்புணர்ச்சி நாட்டின் ஒவ்வொரு துறையிலும் நடமாடிக் களித்தது. ஒப்புணர்ச்சிக்கு உயிர்கொடுக்கும் வகையில் தகுதியும் திறமையும் ஆட்சியில் உரிய மதிப்பினைப் பெற்றுத்திகழ்ந்தன. போனபார்ட்டின் ஆட்சியில் தகுதியும் திறமையும் நேர்மையும் நாணயமும் மிக்கவர்களே பதவிகள் பெற்றனர்; பிறவிப்பதவிகளும், தனிச்சலுகைகளும் அடியோடு ஒழிக்கப்பட்டன. தகுதி, திறமை, உழைப்பில் நம்பிக்கை, கடமை உணர்வு உள்ளவர்கள் நெப்போலியனது ஆட்சியில் உரிய பதவி உயர்வுகளும் விருதுகளும் பட்டங்களும் பெற்றுச் சிறப்படைந்தனர். குடிசையில் பிறந்த வீரர்கள் பலர் நெப்போலியனது படையில் அயராது உழைத்ததின் பயனைக் குவலயம் மெச்சும் படைத்துறைத் தளபதிகளாகப் பதவி உயர்வு பெற்றுப் பேரரசரின் பாராட்டுக்குரியவராயினர். மேட்டுக்குடியினரே படைத்துறையின் மேலான பதவிகளுக்கு உரியவர்கள், அரச குலத்தவரே ஆட்சியின் உயர்பதவிகளுக்கு அருகதை உள்ளவர்கள் என்ற நிலை அடியோடு ஒழிந்தது போனபார்ட்டின் ஆட்சியில். அரும்பணியாற்றும் ஆற்றல் மறவர்கள் அனைவரும் அவரது ஆட்சியில் பதவிஉயர்வுகள் பல பெற்றனர். போனபார்ட்டின் புகழ் பெற்ற தளபதிகளில் ஒருவரான மேசெனா (Massena) தேறல் மனையாளர் (Saloon keeper) ஒருவரின் மகனாவார். நெப்போலியனது நெஞ்சில் நிறைந்த தளபதிகளில் ஒருவரான மூராட் (Murat) டின் தந்தையோ ஒரு நாட்டுப்புற வழிப்போக்கர் தங்கல்மனை உரிமையாளர். மேலும், புரட்சியின் பயனாகப் பெற்ற, விலைமதிக்க முடியாத, 'சட்டத்தின்முன் அனைவரும் சமம்' என்ற சொத்து ஃபிரான்சில் பொதுவுடைமை ஆக்கப்பட்டது. சட்டத்தின்முன் அனைவரும் சமம்; சட்டத்தின் பயனை ஃபிரெஞ்சு மக்கள் அனைவரும் ஒரே சீராகப் பெற்று மகிழ்ந்தனர்.

ஜனநாயகம், தேசியப்படை, நாட்டின் ஒருமுகமான படையெழுச்சி ஆகியவற்றின் மூலமாக நெப்போலியன் ஃபிரெஞ்சு மக்களிடையே உடன்பிறந்தார் உணர்ச்சியின் பொருளைப் பெருக்கினார். தெய்வீக உரிமைக் கோட்பாட்டில் ஊறிப்போன ஐரோப்பிய முடிமன்னர்களிடையே, புரட்சியின் கருத்துகளைக் காட்டி அச்சத்

தையும் பீதியையும் கலக்கத்தையும் குழப்பத்தையும் உருவாக்கினார் போனபார்ட். ஐரோப்பிய நாடுகள் பலவற்றில் பழைய அரசியல், சமுதாய அமைப்புகள் அடியோடு சாயத் தொடங்கின ; மக்களின் உரிமைகளையும் நலன்களையும் காக்கும் புதிய அரசுகள் பல மலர்ந்தன. ஐரோப்பிய முடிமன்னர்களில் பெரும்பாலானோர் புரட்சிக் கருத்துகளின் பகைவர்கள் ; புரட்சியை நசுக்கிப் பிற்போக்குக் கருத்துகளுக்குப் புதிய வேகத்தை உருவாக்க அவர்கள் உழைத்தனர். அவர்கள் அனைவரும் ஓரணியில் திரண்டு புரட்சிக் கருத்துகளை எதிர்த்துப் போராடும் அளவுக்கு அக் கருத்துகள் ஐரோப்பாவில் மக்களிடையே செல்வாக்குப் பெற்று விளங்கின.

புரட்சிக் கருத்துகளைப் புறக்கணித்ததுடன் அவற்றைத் தலை கீழாகவும் மாற்றிவிட்டார் நெப்போலியன் என்று வரலாற்று அறிஞர்கள் சிலர் வாதிடுகின்றனர். நெப்போலியன் புரட்சியின் மகன் ; ஆனால், ஈன்றெடுத்த தாயைக் கொன்று தீர்த்த கொடியவன் — என்பது அவர்களது கருத்து. ‘நெப்போலியன் புரட்சியின் குழந்தை தான் ; ஆனால், எந்தப் புரட்சியால் அவர் உயர்நிலை பெற்றாரோ அந்தப் புரட்சியின் நோக்கங்களையும் கொள்கைகளையும் அவர் பல வழிகளில் தலைகீழாக மாற்றிவிட்டார். அவரது சட்டத் தொகுதி இவ் வகையில் குறிப்பிடத்தக்க உண்மையாக அமைந்துள்ளது. நில மானிய முறையின் எஞ்சிய பகுதிகளையும், அரசின்மீது சமயம் கொண்டிருந்த பிடிப்பினையும் ஃபிரெஞ்சுப் புரட்சி அடித்துச்சென்றதுடனல்லாது, ஃபிரெஞ்சு வழக்கறிஞர்கள் போற்றிவளர்த்த மரபுகளையும் அது தாக்கித் தகர்த்தது. அனைத்துக்கும் மேலாக அது ஒப்புணர்ச்சியை நிலைநாட்டக் கடுமுயற்சியினை மேற்கொண்டது. வழியுரிமையாகப் பெறுகின்ற பெற்றோரின் சொத்து பிள்ளைகள் அனைவருக்கும் சமமாகப் பகிர்ந்து அளிக்கப் படவேண்டும் என்று அது வற்புறுத்தியது. விருப்ப ஆவண வழிக்கொடைகளை (Testamentary bequest) அது மிகக் கண்டிப்பாகக் கட்டுப்படுத்தியது ; திருமண விலக்கை நடைமுறைப் படுத்தியதன்மூலம் அது கத்தோலிக்கரின் சமய உணர்ச்சியைப் புண்படுத்தியது ; பிறப்புகள், இறப்புகள், திருமணங்கள் பற்றி எழுகின்ற கடுஞ்சிக்கல்கள்மீது கிறிஸ்தவத் திருச்சபை கொண்டிருந்த கட்டுப்பாட்டை அது விலக்கியது. ஆனால், நெப்போலியன் தமது புதிய மனநிலையில் அவற்றில் பெரும்பகுதியை ஒப்புக் கொள்ளவில்லை. திருச்சபையுடன் அவர் நட்புறவு கொண்டார். அதிகாரத்துக்கு அவர் பெருமதிப்பளித்தார். ஒப்புணர்ச்சியிடம் (சமத்துவம்) அவர் பற்றார்வம் கொண்டிருக்கவில்லை.

ஆகவே, அவர் புரட்சிச் சட்டங்களை ஒரு சுருக்கமான, நேர்மையான வடிவத்தில் அறிமுகப்படுத்தவில்லை; முக்கிய நிலைகளில் அவற்றை மாற்றியமைக்க அவர் நாட்டங்கொண்டார்.' (கிராண்டும் டெம்பர்லியும்).

ஃபிரான்சின் பேரரசராக நெப்போலியன் முடிசூடிக்கொண்ட ஓராண்டுக்குள்ளாகவே தெய்வீக உரிமைக் கோட்பாடு ஃபிரெஞ்சுப் பேரரசில் மீண்டும் பீடுநடைபோடத்தொடங்கியது. மன்னனின் அடிவருடிகளான கிறிஸ்தவ சமயக் குருக்கள் ஃபிரெஞ்சு இளைஞர்களின் ஆசான்களாயினர். 'பேரரசர் ஆண்டவனின் அரசியல் தூதர்; பூவுலகில் அவர் ஆண்டவனின் அதிகாரம்; நிலவுலகில் அவர் இறைவனின் சாயல்; பேரரசருக்கு அளிக்கப்படும் சிறப்பு ஆண்டவனுக்கு அளிக்கப்படும் சிறப்பாகும்' என்பதே ஃபிரான்சின் புதிய பாடம். ஏற்றமிகு எழிலின் சிகரமாகத் திகழும் டூயிலெரிஸ் அரண்மனையில் பேரரசர் நெப்போலியன் பெருமிதத்துடன் வாழ்ந்தார்; போர்போன் அரச குலத்தவரின் அவையினையும் மிஞ்சுமளவு நெப்போலியனது அவை ஆடம்பரத்தின் சின்னமாகத் திகழ்ந்தது. அவர் பேரரசரான் இரண்டாண்டு காலத்துக்குள்ளாக ஃபிரான்சு ஒரு பேரரசுக்குரிய முழு வடிவினைப் பெற்றது. புரட்சிக் கருத்துகளாலும், ஃபிரெஞ்சுப் புரட்சிப் படைகளாலும் அமைக்கப்பெற்ற அண்டையக் குடியரசுகள் மூன்றும் முடியரசுகளாக மாற்றப்பட்டு ஃபிரெஞ்சுப் பேரரசின் மாநிலங்களாயின. ஃபிரெஞ்சுப் புரட்சி நல்கிய அரசியல் விடுதலை இப்போது ஏட்டளவில் மட்டுமே இடம் பெற்றிருந்தது. 'எனது வழியில் அது குறுக்கிட்டதால் அதனை அப்புறப்படுத்தி பாதுகாப்பாக வைத்துள்ளேன்' என்று நெப்போலியனே கூறியுள்ளார்.

நெப்போலியனது ஆட்சி ஃபிரெஞ்சுப் பேரரசில் நிலை நாட்டப்பட்டவுடன் புரட்சிக் கருத்துகள் பலவற்றை அவர் புறக்கணித்து ஒதுக்கிவைத்தார். அவரது ஆட்சி பெரும்பாலும் பதினெட்டாம் நூற்றூண்டின் வல்லாட்சியை ஒத்திருந்தது. அவர் உரிமையைப் புறக்கணித்துத் திறமைக்கு மதிப்பளித்தார். பேராசிரியர் மையர்ஸ் (Professor Myers) குறிப்பிடுவதைப் போல, பதினெட்டாம் நூற்றூண்டின் நற்செயலாற்றும் நாட்டமுள்ள வல்லரசர்களின் வாரிசாக நெப்போலியன் வரலாற்றில் இடம் பெற்றுள்ளார். பத்தொன்பதாம் நூற்றூண்டின் சிறப்புமிக்க வரலாற்று அறிஞரான பேராசிரியர் ஃபியஃப் (Professor Fyffe) கூறுகின்றூர்: 'நெப்போலியன் புரட்சியின் குழந்தை அல்ல; தன்னுரிமையற்ற காலத்திலாண்ட வல்லாட்சிச் சட்ட அமைப்பாளர்களில் அவரே இறுதியானவர், மிகச் சிறந்தவர்.'

இருப்பினும், நெப்போலியன் தம்மைப் புரட்சியின் குழந்தையாக நிலைநாட்டிக்கொண்டுள்ளார். பழைய அரசியல் முறையினைச் சிதைத்து, புதிய படைவல்லாட்சியினை ஃபிரெஞ்சுப் புரட்சி புகுத்தியதின் விளைவாக ஃபிரெஞ்சு அரசியலில் ஏற்றம் பெறும் வாய்ப்பினை நெப்போலியன் பெற்றார். வழக்கம் மீறிய ஒரு நெருக்கடி நிலையினை ஃபிரெஞ்சுப் புரட்சி உருவாக்காதிருந்திருந்தால், நெப்போலியன் தமது வல்லாட்சியை ஃபிரான்சில் நிலைநாட்டியிருக்க இயலாது. 1804ஆம் ஆண்டு மக்களின் ஒப்புதலைப் பெற்ற பேரரசராக நெப்போலியன் உயர்ந்தார். தமது சட்டத்தொகுதியின் மூலமாகப் புரட்சிக் கருத்துகளுக்கும் கொள்கைகளுக்கும் ஐரோப்பாவில் நெப்போலியன் செயல்வடிவம் கொடுத்தார். புரட்சியில் பூத்த ஒப்புணர்ச்சிக்கு அவர் மேலும் மெருகேற்றினார். தகுதி, திறமை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டே அரசாங்கப் பதவிகளுக்கும் படைத்துறைப் பதவிகளுக்கும் ஆட்கள் தேர்வுசெய்யப்பட்டனர். நெப்போலியன் உருவாக்கிய நன்மதிப்பணி (Legion of Honour) அதற்கு மேலும் வலிவூட்டியது. புரட்சியின் செல்வாக்கு பூவுலகில் சிறந்து, நின்று நிலவ அவர் வழிவகை கண்டார். ஃபிளென்லி (Flenley) கூறுவதைப் போல, நெப்போலியன் ஃபிரெஞ்சுப் புரட்சியின் குழந்தையும் வாரிசும் ஆவார்; அவர் மக்களுரிமையை முழுதும் மாய்த்த போதிலும், மக்களிடையே ஒப்புணர்ச்சியை வளர்த்தார். அதனைத் தாம் ஃபிரான்சுக்கு அளித்த சட்டத்தில் ஏற்றிப் போற்றினார். 'நான் ஃபிரான்சின் அரசியல் குழப்பத்தால் ஏற்பட்ட பெரும் பிளவினை மூடினேன்; புரட்சியைக் கழுவித் தூய்மைப் படுத்தினேன்' என்று நெப்போலியனே கூறியுள்ளார்.

பேராசிரியர் மார்கம் (Professor Markham) குறிப்பிடுவதைப் போல, கான்சலாக இருந்து நெப்போலியன் மேற்கொண்ட சீர்திருத்தங்களைக் கூர்ந்து நோக்கினால் நமக்கு இரண்டு தெளிவான கருத்துகள் புலப்படுகின்றன. முதலாவதாக, புரட்சியின் தொடர்ச்சியாக அவரது பணிகள் தென்படுகின்றன. இரண்டாவதாக, போர்போன் முடியரசு மீண்டும் ஃபிரான்சுக்குத் திரும்பி வந்துவிட்ட நிலையும் நமக்குத் தெரிகின்றது. ஒப்புணர்ச்சி, சட்டத்திற்குட்பட்ட நிர்வாகத்தின் தனி முழுமை, திறமைக்கு மதிப்பளித்தல் ஆகியவற்றில் புரட்சியின் தொடர்ச்சி காணப்படுகின்றது. ஆகவே, இக் கருத்தில் நெப்போலியன் ஃபிரெஞ்சுப் புரட்சியின் சார்பாளராகக் காணப்படுகின்றார். ஃபிரெஞ்சு நடுத்தர வகுப்பினரின் குறிக்கோளான அரசியல் விடுதலையைவிட புரட்சியின் சமுதாய நிருவாக இலட்சியங்களையே நெப்போலியனும் ஃபிரெஞ்சுத் தொழிலாளர்களும், உழவர்களும் முக்கியமான

வைகளாகக் கருதினர். 1789ஆம் ஆண்டு ஏற்பட்ட ஃபிரெஞ்சுப் புரட்சி ஒரு தனிப் புரட்சியல்ல ; சமுதாய, நிருவாக, அரசியல் துறைகளில் தோன்றிய மூன்று உடன்நிகழ்வான புரட்சிகள் ஆகும். 1800ஆம் ஆண்டு ஃபிரெஞ்சு மக்கள் அரசியல் புரட்சியினைக் கைவிட்டு பிற இரண்டினையும் வலுப்படுத்த முற்பட்டனர். அன்றியும், நெப்போலியன் புரட்சியை முடியரசுக்கு முரண்பட்டதாகக் கருதவில்லை. ஃபிரெஞ்சு நடுத்தர வகுப்பினரின் போலித்தன்மை, பதினாறும் லூயிமன்னரின் நொய்மை (feebleness) ஆகியவற்றாலேயே ஃபிரான்சில் மன்னராட்சி மாய்ந்தது என்பது நெப்போலியனது கருத்தாகும். பழைய ஆட்சியில் நிலைத்திருந்த நல்ல நிருவாக அமைப்புகளையெல்லாம் அவர் வெகுவாகப் போற்றினார். போர்போன் ஆட்சியில் சிறந்து விளங்கிய சீரிய அமைப்புகளையும், புரட்சியால் ஏற்பட்ட புதிய மாறுதல்களையும் இணைத்து ஃபிரான்சில் நான்காவது அரச மரபினை உருவாக்க நெப்போலியன் நாட்டம் கொண்டார்.

இறுதியாக,நெப்போலியனே கூறுவதைப்போல, 'ஐரோப்பிய முடிமன்னர்கள் புரட்சியையும் என்னையும் அழித்தொழிக்க முற்படுகின்றனர்...........நான்தான் ஃபிரெஞ்சுப் புரட்சி ; நான் அதனைத் தற்காத்துக்கொள்ளவேண்டும்' எனவே, நெப்போலியன் ஃபிரெஞ்சுப் புரட்சியின் நேரடி வாரிசு என்பது வெளிப்படை.

**முடிவுரை :** நெப்போலியன் ஒரு எரி நட்சத்திரம் போன்றவர். எரி நட்சத்திரம் வளர வளர ஒளி அதிகமாகும், வேறெந்த ஒளியையும் மிஞ்சும் அளவு. ஆனால், ஒளிமிகுந்திட மிகுந்திட தன்னைத்தானே அது எரித்துக்கொண்டுவிடும். எவ்வளவு அதிகமாக ஒளி காணப்படுகின்றதோ அவ்வளவு அதிகமாக நெருப்புப் பிடித்துக்கொண்டது என்று பொருள் ; எவ்வளவு வேகமாக ஒளிவளருகின்றதோ அவ்வளவு வேகமாகப் பற்றி எரிந்துகொண்டு போகின்றது என்று பொருள். இறுதி ? கருகிப்போய்விடுகின்றது எரிநட்சத்திரம். நெப்போலியனுடைய வரலாறும் இதுதான்.

'இருபது ஆண்டுகள் இரத்தம் பொங்கிற்று இணையில்லா இந்த வீரன் நடாத்திய போர்களினால். பலன் என்ன கண்டான்? தாயும் இல்லை; மனைவி மகனும் இல்லை; தத்தளித்தான் கெலினா தீவில்! நாடு கண்ட பலனாவது உண்டா? இல்லை! பூத்த புரட்சி பொசுங்கிக் கிடந்தது. போரிட்டதாலே நாட்டு வளம் பொருளியல் பாழானது.எல்லைகளை அழித்தான் போரிட்டுப் போரிட்டு ; ஆனால், இயற்கையான எல்லைக்கோடு மீண்டும்

அமைந்துவிட்டது. மண்டிலங்களை அடிமை கொண்டான்; ஆனால், அவை மண்டியிட்டனவேயன்றி மடிந்து போய்விடவில்லை; சமயம் கிடைத்ததும் சரிந்தது, சீரமைப்புப் பெற்றது; சாய்ந்தது நிமிர்ந்தது. நாட்டுப்பற்று, இனப்பற்று, தேசிய உணர்ச்சி இவைகளை அழித்தொழிக்க படைகளால் இயலாது, பயங்கரச் சண்டைகளால் இயலாது. பார் மெச்சும் போர்த் திறன் கொண்ட நெப்போலியன் போன்றவர்கள், இருபதாண்டுகள் இரத்தம் பொங்கிடும் போர் நடாத்தினாலும் இயற்கை நீதியை அழித்திட முடியாது என்பது விளக்கப்படுகிறது.' (அறிஞர் அண்ணா)

உலக நாடுகளிடையே உறவு இருக்கலாம்—இருக்கவேண்டும். ஆனால், ஒன்றுக்கு மற்றொன்று அடிமை என்ற நிலை இருத்தல் ஆகாது. அந்த நிலையை எவர் எப்படிப் புகுத்தினாலும், வெற்றி கிட்டாது என்பதனை நெப்போலியன் இருபதாண்டுகள் இரத்தம் பொங்கிட நடாத்திய போர்கள் காட்டுகின்றன.

அகிலத்து அரசுகள் பல அளவிலே, வளத்திலே, வரலாற்றுச் சிறப்பிலே வெவ்வேறு அளவினவாக இருக்கலாம்—இருக்கின்றன. ஆனால், அவைகளை வலிவுமிக்க ஒரு நாடோ வல்லமைமிக்க ஒரு நெப்போலியனோ, தாக்கித்தழுவி, ஒரு விரிந்த பேரரசு காண விரும்பினால், அது சில காலம் வெற்றியாகத் தெரியும்; இறுதியில் தேசியமும் இயற்கை எல்லையுமே வெற்றி பெறும் என்பதும் நெப்போலியனது வரலாறு காட்டும் பாடமாகும்.

கொடுப்பன கொடுத்து, கொள்வன கொண்டு, கூட்டுப் பணியாற்றி மனிதகுலம் ஏற்றம் காண நாடுகள் பல நாட்டங் கொள்ளவேண்டுமேயன்றி, 'ஓரரசு, பேரரசு, வல்லரசு, என் அரசு' என்ற எண்ணத்தில் நாடுகள் ஒன்றோடொன்று போரிடல் இரத்தம் பொங்கிடத்தான் வழிகாட்டுமேயன்றி பயனும் சுவையும் நிறைந்த பலனைத் தராது. நெப்போலியனைப்போல் ஆற்றல் மறவனை அகிலம் கண்டதுமில்லை; அவன் நடாத்திய இருபதாண்டுப் போரில் பொங்கிய அளவு இரத்தம் எங்கும் எப்போதும் பொங்கியதுமில்லை; அவனுடைய வீரம் பயனற்றுப் போனது போல வேறெதுவும் இல்லை.

பேரறிஞர் அண்ணா அவர்கள் கூறுவதைப்போல, 'மாவீரன் நெப்போலியன் நடாத்திக் காட்டிய வாழ்க்கை மனித குலத்துக்குக் காலம் காட்டும் ஒரு பயங்கர எச்சரிக்கை. நடமாடும் எரிமலையாக இருந்துவந்தான் நெப்போலியன். தீவிலே பிறந்தான், தீவிலே இறந்தான்; இடையிலே திக்கெட்டும்

புகழ் முழக்கினுன்—ஆனுல், அந்த முழக்கம், நாடு பலவற்றிலே இரத்தம் பொங்கவும், எலும்புக்கூடுகள் நிரம்பிடவும்தான் பயன் பட்டது.'

'வாழ்த்த முடியவில்லை, வசைபாட மனம் இடம் கொடுக்க வில்லை, நீர் துளிர்க்கும் கண்களுடன், அவன் கல்லறைமுன் வியப்புடன் நிற்கத் தோன்றுகின்றது.'

'அவன் கல்லறை புகுந்தான் ; ஆனுல், அவன் கொண்டிருந்த 'ஓரரசு, பேரரசு 'வல்லரசு, என் அரசு' எனும் விபரீத எண்ணம் கல்லறைக்கு அனுப்பப்படவில்லை ; அனுப்பிவிடவேண்டும் என்று பாடம் புகட்டத்தான் அந்த மாவீரனின் கல்லறை காட்சிப்பொருளாகி நிற்கிறது.'

### உறுதுணை புரிந்த நூல்கள்

1. நெப்போலியனின் ஆளுமை — ஜே. எச். ரோஸ்.
2. நெப்போலியன் — எமில் லட்விக்.
3. நெப்போலியன் காலம் முதற் கொண்ட ஐரோப்பா — தாம்சன்.
4. நெப்போலியன் — ஃபோர்னியர்.
5. நெப்போலியனும் போப்பும் — ஈ. ஈ. ஒய். ஹேலஸ்.
6. நெப்போலியனது எண்ணம் — ஜே. சி. ஹெரால்டு.
7. நெப்போலியனும் ஐரோப்பிய விழிப்புணர்ச்சியும் — எஃப். எம். எச். மார்கம்.
8. நெப்போலியனின் வாழ்க்கை — ஜே. எச். ரோஸ்.
9. நெப்போலியன் — சீலி.
10. நெப்போலியன் போனபார்ட் — டாக்டர் ஸ்லோன்.
11. நெப்போலியன் போனபார்ட்: அவரது எழுச்சியும் வீழ்ச்சியும் — ஜே. எம். தாம்சன்.
12. நெப்போலியனின் இறுதி ஆண்டுகள் — காரன் கோர்டு.
13. இன்றைய ஐரோப்பிய வரலாறு — ஃபிஃப் (Fyffe).
14. கண்டத்திட்டம் — ஒரு பொருளாதார விளக்கம் — ஹெக்செர் ஈ. எஃப்.
15. இரத்தம் பொங்கிய இருபது ஆண்டுகள் —அறிஞர் அண்ணு.
16. நெப்போலியனின் வாழ்க்கை — ஆப்பட்.

# கலைச் சொற்கள்

ஆங்கிலம் — தமிழ்

---

## A

Academy — கல்விக்கழகம்
Accession — அரசெய்தல்
Aggression — வலியத்தாக்குதல்
Allies — நேச நாடுகள்
Amendment — திருத்தம்
Ammunition — போர்த்தளவாடங்கள்
Amusement — களியாட்டம்
Annals — வரலாறு
Approximate — ஏறத்தாழ
Archbishop — தலைமை மதகுரு
Army Council — போர்வினைக்குழு
Architecture — கட்டடக்கலை
Armament — போர்க்கருவிகளின் தொகுதி
Arms and ammunitions — போர்த்தளவாடங்கள்
Articles — சட்டப்பகுதி
Artillery — பீரங்கிப்படை
Artisan — செயலாளி
Assembly — சபை
Authority — ஆணை, அதிகாரம்
Avalanches — சறுக்குப் பனிப்பாறை

## B

Background — நிலைக்களம், பின்னணி
Badge — சின்னம்
Balance of Power — வல்லமைச் சமநிலை
Bank — வங்கி

Banishment — நாடுகடத்தல்
Barricades — தடுப்பரண்கள்
Bishop — மேற்றிராணியார்
Bloody — கொடூர
Bonafide — நம்பிக்கையான
Bounties — கொடைகள்
Brigadier — படைபகுதித்தலைவன்

## C

Canon law — திருச்சபை விதிகள்
Capital punishment — தூக்குத் தண்டனை
Cardinal — கார்டினல்
Catholicism — கத்தோலிக்க சமயம்
Cavalry — குதிரைப்படை
Church — கிறித்தவக் கோயில்
Church and State — சமயத்துறையும் அரசும்
Christendom — கிறித்தவ உலகம்
Chronology — காலவியல்
Clergy — கிறித்தவ சமயக் குருக்கள்
Climate — தட்பவெட்ப நிலை
Consul — கான்சல்
Constitutional — சட்டவரம்பிற்குட்பட்ட
Confederation — நாடுகளின் இணைவு
Code — சட்டத் தொகுதி
Code Napoleon — நெப்போலியனின் சட்டத் தொகுப்பு
Colonial Expansion — குடியேற்ற நாட்டுப் பெருக்கம்
Colony — குடியேற்ற நாடு
Commander-in-chief — தலைமைத் தளபதி ; படை முதல்வர்
Communication — செய்திப் போக்கு வரவு
Concordat — ஒற்றுமைப்பத்திரம்
Controversy — கருத்து வேறுபாடு
Continental system — ஐரோப்பியப் பொருளாதாரத் திட்டம் ; கண்டத்திட்டம்
Corruption — ஊழல், கைக்கூலி வாங்கல் போன்றவை
Culture — பண்பாடு
Customs duty — சுங்கவரி

## D

Data — விவரங்கள்
Defacto — உண்மையில், நடைமுறையில்
Dejure — சட்டப்படி
Decrees — ஆணைகள், கட்டளைகள்
Democracy — மக்களாட்சி
Despotism — வல்லாட்சி
Divine Right — தெய்வீக உரிமை
Dissolution — (சபை) கலைத்தல்
Duma — டூமா என்னும் இரஷ்யச் சட்ட சபை.
Duke — கோமகன்
Dynasty — அரச மரபு

## E

Earl — எர்ல் கோமான்
Earldom — எர்ல் கோமான் ஆட்சிப்பகுதி.
Ecclesiastical — சமயம் சார்ந்த
Edict — ஆணை, கட்டளை
Electors — தேர்வாளர்
Emancipation — விடுதலை
Emigres — வெளியேறியோர்
Epoch — வரலாற்றுக் கட்டம்
Equality — சமத்துவம், ஒப்புணர்ச்சி
Era — காலம்
Exile — நாடுகடத்தல்
Excommunication — சமயவிலக்கு
Exclusive right — தனி உரிமை
Exploitation — சுரண்டல்
Empire — பேரரசு
Ethics — அறிவியல்
Exchequer — கருவூலம், கருவூலத்துறை

## F

Factors — கூறுகள்
Feudal System — நிலமானிய முறை
Federation — கூட்டரசு
Free trade — தடையிலா வாணிகம்
French Revolution — ஃபிரெஞ்சுப் புரட்சி

French reign of terror — ஃபிரெஞ்சுப் பயங்கர ஆட்சி
Forced labour — கட்டாய உடலீடுபாட்டுவேலை.
Forerunner — முன்னோடி
Fraternity — சகோதரத்துவம் ; உடன் பிறப் புணர்ச்சி
First Consul — தலைமைக் கான்சல்
Founder — நிலை நாட்டியவர்

## G

Gabelle — ஃபிரெஞ்சு நாட்டுப் பழைய உப்பு வரி
Garrison — காவற்படை
Girondians — கிராண்டியர்
Genesis — தொடக்கம்
Gun boat — சிறு பீரங்கிப்படகு

## H

Hereditary claim — பரம்பரை உரிமை
Historian — வரலாற்றறிஞன்
Historicity — வரலாற்றுண்மை
Holy Roman Empire — புனித உரோமப் பேரரசு
Home Policy — உள் நாட்டுக் கொள்கை
Huguenots — ஃபிரெஞ்சுப் புராட்டஸ்டாண்டுகள்

## I

Ideal — குறிக்கோள்
Invasion — படையெடுப்பு
Indemnity — நட்டஈடு
Institution — நிறுவனங்கள்
Isolation — தனிப்படுத்தல்
Irrigation — நீர்ப்பாசனம்
Imperialism — பேரரசுக் கோட்பாடு
Individual liberty — தனியாள் உரிமை
Inquiry — ஆய்வு, விசாரணை

## J

Jacobites — ஜேகோபியர்
Jacobitism — ஜேகோபியக் கொள்கை
Jesuits — ஏசு சங்கத்தார்
Judge — நீதிபதி

## K

Kingdom — அரசு
Knights — மாவீரர்கள்

## L

Land lord — நிலக்கிழார்
Law and order — சட்டமும் அமைதியும்
Legacy — உயிலுடைமை
Legion of honour — நன்மதிப்பு அணி
Lieutenant — படைத் தலைவர்
Liberty, equality and fraternity — உரிமை, ஒப்புணர்ச்சி, உடன் பிறந்தார் உணர்ச்சி
Lords Spiritual — சமயப் பிரபுக்கள்
Lords Temporal — லௌகிகப் பிரபுக்கள்
Lycees — இலைசீ என்னும் ஃபிரெஞ்சு அரசாங்கப் பள்ளிகள்

## M

Manorial System — பண்ணைமுறை
Maritime Supremacy — கடல் ஆதிக்கம்
Mercenary army — கூலிப்படை
Metropolitan — தலைநகரைச் சார்ந்த
Monastery — மடம்
Monopoly — தனி உரிமை
Monarchy — முடியரசு
Movement — இயக்கம்
Mobocracy — பாமரர் ஆட்சி

## N

Naval battle — நாவாய்ப் போர்
Navigation — நீர்வழிச் செலவு
Nationalism — தேசியம்
Nation — தேசம்
Nationalities — தேசிய இனங்கள்
National Assembly — தேசிய சபை
National State — தேசிய அரசு
Negotiation — உடன்படிக்கை ஏற்பாடுகள்
Nurses — செவிலியர்
Nunnery — கன்னி மாடம்

## O

Oath — உறுதிமொழி, சூளுரை
Office — பதவி, அலுவலகம்
Opposition, The — எதிர்க்கட்சி
Organisation — அமைப்பு
Ordinance — தனி ஆணை ; அவசரச்சட்டம்
Oversea trade — கடல் கடந்த வணிகம்

## P

Papacy — போப்பின் ஆட்சி
Papal Bull — போப்பின் ஆணை
Papal emissary — போப்பின் தனிமுறைத் தூதர்
Parish — மதகுரு ஆள்கை வட்டாரம்
Peninsular war — தீபகற்பப்போர்
Protestantism — புராட்டஸ்டாண்டு சமயம்
Plutocracy — செல்வர் ஆட்சி
Privileged classes — சிறப்புரிமை உடைய வகுப்பினர்
Proceedings — நடவடிக்கைகள்
Prussian Guard, The — பிரஷ்ய காவற் படை
Penal law — தண்டனைச் சட்டம்
Pitched battle — நிலைப்போர்
Proclamation — பேரறிக்கை
Protector — காப்பாளர்
Practical question — நடைமுறைச் சிக்கல்

## Q

Quadruple Alliance — நால்வர் உடன்பாடு

## R

Radicalism — தீவிரவாதம்
Representative — ஆட்பேர்
Regime — ஆட்சி முறை
Reign of terror — பயங்கர ஆட்சி
Republic — குடியரசு
Republicanism — குடியரசுக் கொள்கை
Resources — வள ஆதாரங்கள்
Reinforcement — படைவலிப் பெருக்கு
Revolutionaries — புரட்சியாளர்
Revolutionary Tribunal — புரட்சி நீதிமன்றம்

Right to property — சொத்துரிமை
Royalist — அரசனை ஆதரிப்போர்
Rule of law — சட்ட நீதி

## S

Senate — செனட்
Seperation of powers — அதிகாரப்பிரிவினை
Serfs — அடிமை ஊழியர்
Soverignty — இறைமை அதிகாரம்
State General — ஃபிரெஞ்சுப் பேராயம்
Spiritual peers — சமய நிலையப் பிரபுக்கள்
Strategic — படைத்துறை சூழ்ச்சித்திறம் வாய்ந்த
Statesmanship — அரசியல் வல்லமை
Synod — திருக்கூட்டம்

## T

Tenure — பதவிக்காலம்
Theatres of war — போர்க்களங்கள்
Tithe — வருமானத்தில் பத்தில் ஒருபங்கு
Treason — அரசத்துரோகம்
Trench — அகழி
Truce — தற்காலிக உடன்பாடு
Turning point — திருப்பம்

## U

Unconditional surrender — நிபந்தனையற்ற சரணாகதி
Untenable — செல்லத்தகாத
Unskilled — திறனில்லாத
Ultimatum — இறுதி எச்சரிக்கை
Usage — பழக்கவழக்கம்

## V

Vassal — கீழான்
Villein — உட்குடி
Volunteer — தொண்டர்

## W

War of Independence — [illegible] போர்
Worship of reason — [illegible] வழிபாடு
Writ — [illegible]
Will — [illegible] ஆவணம்



Yeoman — சிறு நிலக்கிழார்

## Z

Zenith — உச்சம், உச்சநிலை

